தமிழ்ப்புலவர்

# வரலாற்றுக் களஞ்சியம்

(Biographical Dictionary of Tamil Men of Letters)

பகுதி II (க - ச)

ஆசிரியர்கள்

டாக்டர் வெ. பழநியப்பன்

உ. பழநி எம். ஏ., பி. ஓ. எல்.,



அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

1984.

# முன்னுரை

தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியத்தின் இரண்டாம் தொகுதியான இவ்வெளியீடு அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையின் சாதனைகளுள் குறிப்பிடத்தக்க-தொன்றாகும். 'களஞ்சியம்' என்ற பெயரில் பல்வேறு பொருள்கள் தொகுக்கப்பெற்று வருகின்றன. மேலை நாடு-களில் பெரிதும் வளர்ந்து வரும் இக்கலை இப்பொழுது நம் தேசத்திலும் தமிழ்நாட்டிலும் வேகமாக வளர்ந்து வருகிறது. தேசிய மொழிகளில் முதன்முதலில் கலைக்களஞ்சியம் வெளியிட்ட பெருமை தமிழ்நாட்டைச் சேர்ந்ததே! அவ் வகையில் தமிழகத்தில் வாழ்ந்த ஆயிரக்கணக்கான புலவர்-களின் வரலாறுகளில் சில புலவர்களின் வாழ்க்கையை மட்டும் பல்வேறு பதிப்பகத்தார்களும், நிறுவனங்களும் கதைபோலவும் வரலாற்றினைப் போலவும் வெளியிட்டுள்ளனர். ஆராய்ச்சி-களைச் செம்மையாகவும், செம்பதிப்பாகவும் கொண்டு வருவதில் அக்கறை கொண்ட அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையினர் தமிழகத்தில் வாழ்ந்த புலவர்-களில் 1970க்கு முன் வாழ்ந்த புலவர்களின் வரலாற்றினை ஆறாயிரமாகக் கணக்கிட்டு அவர்தம் வரலாறுகளை வாழ்ந்த நூற்றாண்டு, வேறு பெயர்கள், தந்தை, தாய், எழுதிய நூல் என்ற பாகுபாட்டில் வகுத்துக் கொண்டு தொகுத்து வந்தனர். அவ்வகையில் முகிழ்த்ததே இந்த இரண்டாவது வரலாற்றுக் களஞ்சியம். பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் தமிழ்த் துறையின் தலைமைப் பொறுப்பேற்ற காலை இப்பணிக்குப் புத்துயிர் அளிக்கப் பெற்று இதன் முதற்றொகுதி (அ முதல் ஔ) 1974ஆம் ஆண்டில் அச்சிட்டு வெளியிடப் பெற்றது. இத் தொகுதியில் 1058 புலவர் பெருமக்களின் வரலாறுகள் முறைப்படுத்தித் தரப்பெற்றுள்ளன. தமிழ்ப்புலவர் வரலாறு-களைத் தொகுத்து அகர வரிசைப்படுத்தி வெளியிடும் தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் (Biographical Dictionary of Tamil Men of letters) திட்டம் பல்கலைக்கழக மானியக் குழுவின் நிதி உதவியுடன் 1962-ல் தொடங்கப்பெற்றது. வரலாற்றுக்குரிய புலவர்கள் பற்றியக் குறிப்புகளைச் சேர்ப்பதிலும் முறைப்படுத்துவதிலும் ஏற்பட்ட பல்வேறு

சிக்கல்களால் தொடக்கத்தில் இப்பணி மெதுவாகவே நடை-பெற்றாலும் தொகுதிகள் முடிந்து வெளிவரும் பொழுது நிறைவினைத் தருகிறது.

இப்பொழுது வெளிவரும் (இவ்விரண்டாம் தொகுதி க-ச ஈன்ற எழுத்து வரிசைகளுக்குரியன. இவ்வரிசைகளில் அமைந்த 1857 புலவர் பெருமக்களின் வரலாறுகள் இத் தொகுதியில் இடம் பெறுகின்றன) இத்தொகுதிகளைத் தொடர்ந்து மூன்று, நான்காம் தொகுதிகள் வெளிவந்தால் தமிழிற்குத் தொண்டு செய்த புலவர்களின் வரலாற்றுச் சுருக்கத்தையும் அவர்தம் இலக்கியப் படைப்புக்களையும் தெளிய, அறிய இயலும்.

குடத்திலிட்ட விளக்குப்போல அடக்கத்துடன் தொண்டாற்றிய தமிழ்ப் பெருமக்கள் ஆயிரம் ஆயிரம் பேர் உள்ளனர். இவர்களின் தமிழ்ப்பணியினையும் நாட்டு மக்கள் நன்கு அறிந்து போற்ற இது போன்ற வரலாற்றுக் களஞ்சியங்கள் பெருந்துணை புரியுமென்பதில் ஐயமில்லை.

சங்கப் புலவர்கள், காப்பியப் புலவர்கள், பதினெண் கீழ்க்கணக்கியாத்த புலவர்கள், பிரபந்தம் பாடிய புலவர்கள் என்ற இத்தகைய புலவர்களின் பெயர்களையும் அவர்தம் சிறப்புக்களையுமே அறிந்து வந்த சிலர் தமிழிற்குத் தொண்டு செய்த புலவர்களின் பேரெண்ணிக்கையை இந்நூற்களில் பார்க்கும்பொழுதும், படிக்கும்பொழுதும் வியந்தும் மலைத்தும் போவார்கள். 'தமிழிற்குத் தொண்டு செய்வோர் சாவதில்லை' என்ற வாசகத்தை மெய்மைப்படுத்திக் காட்டி வெளிவரும் இவ்வரலாற்றுக் களஞ்சியத்தினை வெளிக் கொணர்ந்த தமிழ்த்துறையினரைப் பாராட்டி மகிழ்கிறேன். தொடர்ந்து, விரைந்து எஞ்சிய மூவாயிரம் புலவர்களின் வரலாறுகளையும் கொண்டுவர முயற்சி மேற்கொள்ளக் கேட்டுக்கொள்கிறேன்.

தமிழ்கூறு நல்லுலகம் இத்தொண்டினை வரவேற்றுப் போற்றுமாக.

அண்ணாமலைநகர்,
20—6—1984.

சை. வே. சிட்டிபாபு,
துணைவேந்தர்.
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

# பதிப்புரை

ஈராயிரம் ஆண்டுத் தமிழ்ப் புலவர்களின் வரலாற்றை ஓரிடத்தில் தொகுத்தும் வகுத்தும் பார்க்கும் வரலாறும், படிக்கும் வரலாறும் சுவையானதும் பயனுடையதும் ஆகும். தமிழ் வரலாற்றில் தேக்கமாகவும், ஏக்கமாகவும் இருந்த புலவர் வரலாறுகளை நுணுகி ஆய்ந்து வெளியிட்டிருப்பது தமிழ் மொழி வரலாற்றில் என்றும் நிலைக்கத்தக்கதும் நினைக்கத் தக்கதும் ஆகும். பல்கலைக்கழக மானியக்குழு நிதியுதவி அளிக்க முன் வந்ததால் பிறந்ததே இத்தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியமாகும்.

தமிழ்த்துறை ஆசிரியப் பெருமக்கள் அனைவரும் தம் கடின உழைப்பால் 1058 அரும்பெரும் புலவர்களின் வரலாறு-களை (அ-ஔ) எழுதிட அது முதல் தொகுதியாக வெளி வந்துள்ளது. இரண்டாம் தொகுதியில் 1857 அருந்தமிழ்ப் புலவர்களின் (க-சௌ) வரலாறுகள் எழுதப்பட்டுள்ளன. இது வரை இவ்விரு தொகுதிகளிலும் தமிழ் நலமும் வளமும் பேணிய 2915 அரும்பெரும் புலவர்களின் வரலாறுகள் தமிழ் கூறும் நல்லுலகம் ஒருசேர அறியத் தரப்பட்டுள்ளன. 1970-ஆம் ஆண்டிற்கு முன் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளைத் தொகுக்க வேண்டும் என்ற அடிப்படைக் குறிக்கோளுடன் தொடங்கப்பட்ட இத்திட்டத்தில், எஞ்சிய தொகுதிகளில் ஏறத்தாழ 3000 புலவர்கள் வரலாறு எழுதப்படவிருக்கிறது.

இப்புலவர் வரலாற்றுக் களஞ்சியத்தின் சிறப்பு என்ன என்று எண்ணுவது இயற்கையே. தமிழ்த்தொண்டு செய்ததால் காலம் கடந்து வாழும் புலவரேறுகளின் பாடுபுகழ் மிக்க வரலாறுகள் ஓரிடத்தில் பதிவு செய்யப்பட்டு விட்டன. மேலும் புலவர்கள் என்றால் சங்ககாலப் புலவர்கள், காப்பியப் புலவர்கள், சிற்றிலக்கியப் புலவர்கள் என்றே எண்ணிவந்த பலருக்கு இத்தொகுதியைக் கற்றுணரும்போது எண்ணில் அடங்காப் புலவர்கள் தமிழ்த்தொண்டுகளைப் பயன் கருதாது செய்துள்ளனர் என்ற செய்தி மலைக்கத்தக்கது மட்டுமல்ல நாமும்உழைக்க வேண்டும், தமிழுக்குப் பெருமை சேர்க்க

வேண்டும் என்ற வேட்கையை மனத்தில் தோன்றவழி செய்யும் என்பதில்ஐயமில்லை. ஒரு நூல் எழுதியிருந்தாலும், ஓராயிரம் பாட்டுக்கள் எழுதியிருந்தாலும் ஒரு நூலுக்குச் சிறப்புப்பாயிரம் மட்டும் எழுதியிருந்தாலும் அவர்கள் புலவர்களாகப் போற்றப்பட்டு இக்களஞ்சியத்தில் இடம் பெறுகின்றனர்.

நாட்டிற்காகவும் இனத்திற்காகவும் தொண்டுகள் செய்த அரசியல்வாதிகள் என்று நாம் கருதக்கூடிய சத்யமூர்த்தி, ஆர். கே. சண்முகம் செட்டியார், டி. ஏ. சொக்கலிங்கம், வ. உ. சி. ஆகியோர் நற்றமிழ்த் தொண்டாற்றியுள்ளனர் என்ற செய்தியினை இக்களஞ்சியத்தைப் படிக்கும்போது உணர்வர். அதுபோல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத்தலைவர்களாகவும், தமிழாசிரியர்களாகவும் பணி ஆற்றிய டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார், டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார், கோ. சுப்பிரமணியப்பிள்ளை, சதாசிவப் பண்டாரத்தார், சுந்தரேச வாண்டையார், சர்க்கரைப் புலவர், கா. சுப்பிரமணியப்பிள்ளை ஆகியோர்களின் வரலாறுகள் இத்தொகுதியில் இடம் பெற்றிருத்தல் சிறப்பானதாகும்.

நாடக ஆசிரியர்களான பம்மல் சம்பந்த முதலியார், சூரிய நாராயண சாஸ்திரி, பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, ஆர். வி. கன்னையா நாயுடு முதலிய பெரியார்களின் வரலாறுகளும் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. புகழ் பூத்த டி. கே. சி., கால்டுவெல், சுப்பிரமணிய பாரதியார், அரசன் சண்முகனார், சேக்கிழார், கம்பர், குலசேகர ஆழ்வார், குமரகுருபரர், கல்கி முதலியோர்களின் வரலாறுகள் மட்டுமின்றி, புதைபொருளெனக் கிடந்த புலவர்களான கம்பளிச்சட்டை முனிநாயனார் (ப. 64) கயாதரர் (ப 67) கரபாத்திர அடிகள் (ப.69) கவி அப்பரச உடையார் (ப.91) கவிதாரத்தினம் (ப 94) கவிராச கலைவாணி (ப. 94) கவுஸ்கான் சாயபு (ப 98) கனகரத்தின உபாத்தியாயர் (ப. 111) காக்கையர் (ப. 113) காங்கிச் சாமிகள் (ப. 113) காசாமுகைதீன் (ப. 114) காபில் முகமது அல் காகிரி (ப. 122) காமினி (ப. 123) காமு செட்டியார் (ப. 124) கார்த்வெயிட்டி (ப. 125) காளைஅசன் அலிப்புலவர் (ப. 142) கிரிஸ்மஸ் ஜே. ஐ. (ப. 143) முதலியோர்களின் தமிழ்த் தொண்டுகள் பற்றியும் இக்களஞ்சியத்தில் எழுதப்பட்டுள்ளன. இவர்கள் தம் பெயர்கள் படிப்போர்க்கும் பயில்வார்க்கும் புதுமையேயாம்.

தமிழுக்கு நற்றொண்டு ஆற்றிய யாழ்ப்பாணத்துப் புலவர்கள் பலர் தமிழ் இலக்கிய வரலாற்றில் இடம் பெருமல் இருப்பது உண்மையான குறைபாடேயாகும். அக்குறைபாட்டினை இக்களஞ்சியம் நீக்கும் பெற்றியுடைத்தாயிருத்தல் குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு பல்வேறு சிறப்புக்களைப் பெற்ற இக் களஞ்சியத்தை ஊன்றிப் படிப்போர்க்குத் தமிழுக்குத் தொண்டு செய்வோர் வாழ்வர் என்ற உண்மை உணர்த்தப்படுகிறது.

தமிழ் மொழிக்கு ஆக்கமான இத்தமிழ்ப் பணியாம் களஞ்சியப்பணி தொடர்ந்து நடைபெறுவதற்குத் தோன்ருத் துணையாக இருந்ததுடன் ஊக்கமும் தந்தருளிய அமரர் இணை வேந்தர் டாக்டர் ராஜா சர். முத்தையவேள் அவர்களை இவ் வேளையில் நினைக்காமல் இருக்க முடியாது. அவர்தம் தமிழ்ச் சிந்தனையால்தான் பல்கலைக்கழகம் ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரோடியுள்ளது. அரசர் தமிழ்த்துறையை ஆலின் ஆணிவேராகக் கருதினுர்கள். புலவர்கள் போற்றும் புரவலராக அவர்தம் வாழ்வும் வரலாறும் அமைந்தது இப்புலவர் வரலாற்றுக் களஞ்சியத்தில் உள்ள எண்ணற்ற புலவர்கள் அவரால் பேணப் பட்டவர்கள். அவர்தம் அரிய கருத்துக்கள், எண்ணங்கள், தீர்க்கதரிசனம் இத்தகைய நூல்கள் உருவாவதற்குப் பெரிதும் உதவியதை இந்நேரத்தில் நன்றியுடன் நினைத்துப் பார்க்கின்ருேம். அப்பெருவள்ளல் அடிச்சுவட்டில் நடந்து வரும் எம் இன்றைய இணைவேந்தர் டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி அவர்கள் தமிழ்க் காவலராக விளங்கி வருவதும் தமிழன்னை செய்த தவப்பயனே எனலாம். வெற்றியினையே கண்டு வரும் அத்தமிழ்ப் புரவலரின் கண்ணேட்டத்தால் தமிழ்த்துறை பீடுநடை போட்டுப் பெருமித வரலாறு பெற இருக்கிறது.

எண்ணங்களையும் திட்டங்களையும் செயல் வடிவாக்குவதில் நிர்வாக விற்பன்னராக விளங்குபவரும், நாவரசருமான பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்கள் தமிழ்த்துறையின் அனைத்து ஆக்கப்பணிகளுக்கும் அருளாளராக விளங்கி வருகிருர்கள். இந்நூல் விரைவில் வெளிவரக் காரணமாக அவர்கள் இருந்தார்கள் என்பது வெள்ளிடை மலையாளுலும் தொடர்ந்து எஞ்சிய தொகுதிகளும் விரைந்து

முடிக்கப் பெற வேண்டும் என்று கேட்டுக் கொண்டதும் துறை-யினரைத் துரிதப்படுத்தியதும் தமிழ் மொழிக்கும், துறைக்கும் வாய்த்த நற்பேறேயாகும். அவர்தம் அரியகருத்துக்கள் தமிழ்த் துறையை மீண்டும் ஒரு பொற்காலத்துக்கு அழைத்துச் செல்லும் என்பதில் எமக்கு நம்பிக்கையுள்ளது.

களஞ்சியப் பணியைக் கண்போல் கருதி, கருத்துடன் எழுதிமுடித்த தமிழ்த்துறை ஆசிரியர்கள் டாக்டர் வெ. பழநியப்பன் அவர்களும் திரு உ. பழநி அவர்களும் பெரிதும் பாராட்டுக்குரியவர்கள். இக்களஞ்சியம் தமிழ் மக்களுக்கு நல்லமுதாக இருக்கும். வனப்புடன் அச்சிட்ட கிராஸ்வேடு அச்சகமும் வாழ்த்திற்குரியதாகிறது.

டாக்டர். ஆறு. அழகப்பன்,
தமிழ்த்துறைத் தலைவர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

அண்ணாமலைநகர்,
23—6—84.

***கங்காதரதேவர்***, பா (20-நூ)

**ஊர்:** பாண்டேச்சுரம்

**தந்தை:** வேங்கடசாமித் தேவர். இவரும் இவரது தந்தையாரும் ஆயுர்வேத மருத்துவமுறையில் பயிற்சி பெற்றவர்கள்.

**நூல்:** திருக்குறள் முதற்பாவின் பரிமேலழகர் உரைவிளக்கம், விவேக விளக்கம். முதல் நூல் பரிமேலழகர் முதற்குறளுக்கு எழுதிய உரையை விளக்குவதாகும்.

1059

***கங்காதரநாவலர்***, கி. உ. ப. (20-நூ)

**சி. பெ:** நாவலர்.

**வே. பெ:** சிவஞானப் பரதேசியார், சிவப்பிரகாசதேசிக அடிகள்.

**வாழ்விடம்:** சென்னை இராயப்பேட்டை.

இவர் இலக்கண இலக்கியங்களையும் வேதாந்த சித்தாந்த நூல்களையும் நன்கு கற்றார்; வேதாந்த சித்தாந்த சமரச நிலையை மேற்கொண்டிருந்தார்.

**நூல்:** சிவஞானத்தானம், சிவாமிர்தபூஷணம், சிவஞானப்பூரணம், சிவசாதன நவபோதினி.

இவற்றுள் முதலில் குறிப்பிட்டுள்ள மூன்று நூல்களும் செய்யுட்களால் ஆகியவை. நான்காவது உரை நடையில் அமைந்ததாகும். சிவாமிர்த பூஷணத்துள்செய விநாயகர் துதி, அருள்வேண்டும் தேசிகமாலை, சிவப்பிரகாச சோடச மாலை முதலியவை அடங்கியுள்ளன. சிவஞானப்பூரணம் என்னும் நூலில் துவாதசமணி, சேவிதானுசார தெய்வீகமாலை, பஞ்ச குணிதமாணிக்கமாலை, துதிப்பதிகம், அருள்வேண்டல், நவமணிமாலை, நமஸ்கார மாலை முதலியன அடங்கியுள்ளன. சிவசாதன நவபோதினி என்னும் உரைநடை நூலில் திருநீறு, சிவகண்மணி, ஐந்தெழுத்து, சைவ சமயம் ஆகியவற்றின் பெருமைகள் விரிவாகக் கூறப்பெற்றுள்ளன.

1060

***கங்காதரம்***, (19-நூ)

**நூல்:** அருட்பா மஞ்சரி, குமரேசர் மாலை (1883)

**குமரேசர் மாலை:** இது குமரேசனை விளித்துக் குறை வேண்டும் நிலையில் கண்ணி முறையில் அமைந்துள்ளது. இந்நூலில் சிவத்தியான கீர்த்தனம், துயரப்பத்து, நிவர்த்திப் பத்து முதலிய பகுதிகள் உள்ளன. நூறு செய்யுட்கள் உள்ளன.

1061

## கங்காதரம் பிள்ளை ( 19-நூ )

**நூல்:** இலண்டன் பாரீஸ் நகரங்களின் விநோத சரித்திரம்

1062

## கங்குல் வெள்ளத்தார் (சங்க காலம்)

இயற்பெயர் தெரியவில்லை. தம் பாடலில் வரும் 'கங்குல் வெள்ளம்' என்னும் சொற்றொடரால் பெயர் பெற்றவர் (கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே')

**நூல்:** குறுந்தொகை 387

1063

## கங்கை முத்துப்பிள்ளை (19-நூ)

**நூல்:** நடதாதி வாத்திய ரஞ்சனம்.

1064

## கச்சபாலய ஐயர் (19-நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்

**நூல்:** திருவேட்டீசர் மீது பதிற்றுப்பத்தந்தாதி.

இது சென்னையிலுள்ள திருவேட்டீசர் மீது பாடப்பெற்றது.

1065

## கச்சபாலயதேவர் (19-நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்

**நூல்:** பழநிவெண்பாமாலை. வீரநாராயணர் விசயம் என்னும் நூலுக்குப் பொழிப்புரையும் விரிவுரையும். வீரநாராயணர் விசயம், திருச்செய்ஞலூர் ஞானப்பிரகாசவள்ளலாரால் எழுதப்பட்டது.

1066

## கச்சபேசுவரதேசிகர் (19-நூ)

**நூல்:** வள்ளலார் சாத்திரம் என்னும் நூலிற்குச் சிறப்புப் பாயிரம் வள்ளலார் சாத்திரம் அருணகிரி சாமிகளால் வெளியிடப்பட்டு உள்ளது.

1067

## கச்சி கச்சாலை தேசிகர் (18-நூ)

**நூல்:** காஞ்சிப்புராணம்.

இந்நூல், சிவஞானமுனிவர், கச்சியப்ப முனிவர் ஆகிய இருவரும் இயற்றிய காஞ்சிப்புராணத்தினும் வேறுனது.

1068

## கச்சிஞானப்பிரகாசர்

**பார்க்க:** ஞானப்பிரகாசர், கச்சி.

1069

## கச்சிப்பேட்டு இளந்தச்சனுர் (சங்ககாலம்)

**ஊர்:** காஞ்சி ர த்தைச் சார்ந்த கச்சிப்பேடு. கம்மாளர்.

**நூல்** நற்றிணை 266

1070

## கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனுர் (சங்ககாலம்)

**வே பெ.** காஞ்சிக் கொற்றனுர்.

**ஊர்:** கச்சிப்பேடு.

நன்னுகையார், இளந்தச்சனுர், பெருந்தச்சனுர் முதலிய புலவர்களும் இவ்வூரினைச் சேர்ந்தவர்களே. காஞ்சிபுரத்தை சார்ந்தது இக்கச்சிப்பேடு.

**நூல்:** குறுந்தொகை 213, 216.

1071

## கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனுர் (சங்ககாலம்)

**ஊர்:** காஞ்சிபுரத்தைச் சார்ந்த கச்சிப்பேடு; கம்மாளர்.

கச்சிப்பேடு இளந்தச்சனுர் என்றெரு புலவர் விளங்கினமையின் இவர் அவரின் முதியோர் என்பது தோன்றப் பெருந்தச்சனுர் எனப்பட்டார். இவர் குறிஞ்சித்திணையைப் பாடும் வன்மை யுடையவர்.

**நூல்:** நற்றிணை 144, 213.

1072

## கச்சியப்ப சிவாச்சாரியார் (12-நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்.

**தந்தை:** காளத்தியப்ப சிவாச்சாரியார்; சைவ அந்தணர்.

இவருடைய தந்தையார் காஞ்சிபுரம் குமரக்கோட்டத்தில் அர்ச்சகராக இருந்தவர். கச்சியப்பர் முருகப் பெருமானிடத்தில் மாறாத அன்புடையவராக இருந்தார். இவர் தமிழ் வடமொழி ஆகிய இரு மொழிகளிலும் வல்லவராக இருந்தார்.

இவர் முருகப் பெருமானே 'திகடசக்கர' என்று அடி எடுத்துக் கொடுக்கக் கந்தப்புராணம் பாடினர் என்று கூறுவர். கந்தப் புராணத்தை அரங்கேற்றும் பொழுது 'திகடசக்கரச் செம்முகம்' என்னும் பிள்ளையார் வணக்கச் செய்யுளைப் படித்தபொழுது' திகழ் தசக்கரம் என்ற சொற்கள் திகடசக்கரம் என்று புணர்தற்கு விதியாண்டுளது என்று வினு எழுப்பினர். அப்பொழுது கச்சியப்ப சிவாச்சாரியார் மறுமொழி கூற இயலாமல் இது முருகனுடைய அருளால் பாடப்பட்டது என்றனர். ஆயினும் அவையோர் விதி கூற வேண்டுமென்றனர் ஆதலின் அன்று அரங்கேற்றம் நிகழவில்லை. கச்சியப்பர் கவலைகொண்டு முருகனிடம் முறையிட்டுக் கொள்ளவே, முருகன் புலவர் உருவில் வந்து, வீரசோழியம் என்னும் இலக்கண நூலில் சந்திப்படலத்தில் 18-ஆம் நூற்பா இதற்கு விதி அமைக்கின்றது என்று கூறிச் சென்ருர். பின்னர் யாவரும் அந்நூலை ஏற்றுக்கொள்ள இனிதே அரங்கேறியது.

**நூல்:** கந்தப்புராணம்.

இது கம்பராமாயணம் போலப் பெருங்காப்பியம். வடமொழியில் காந்தப்புராணத்தில் சங்கர சங்கிதையில் சிவரகசிய காண்டத்து வரும் சம்பவ காண்டம் முதலிய ஆறு. காண்டங்களையும் மொழிபெயர்த்துச் செய்யப்பெற்றது. இந்நூல் உற்பத்தி, அசுர, மகேந்திர, யுத்த, தேவ, தட்சகாண்டங்கள் என்னும் ஆறு காண்டங்களையும் 10346 விருத்தப் பாக்களையும் கொண்டது. முருகனுடைய பிறப்பு பரிபாடலினின்றும் சில வேறுபாடுகளுடன் இங்குச் சொல்லப் பெற்றுள்ளது. உயிர்கள் விதிவழியினுல் தவறி ஆணவம், கன்மம் மாயை என்னும் மும்மலங்களின் வயப்பட்டுத் துன்புறும்போது இறைவனை நினைந்து அன்பால் வழிபாடு செய்ய, இறைவன் திருவருள் கைகூட அதன் துணைகொண்டு மும்மலங்களை நீக்கி அழியாத இன்ப முத்தி பெறலாம் என்பதே கந்தப்புராணக் கதையின் உட் பொருள். இது '[illegible]' என்னும் பெயர் பெற்றது

இந்நூலில் சைவாகமக் கருத்துக்களும் சித்தாந்தக் கருத்துக்களும் வேத உபநிடதங்களின் கருத்துக்களும் நன்கு விளக்கப் பெற்றுள்ளன. இந்நூல் சங்க இலக்கியக் கருத்துக் களும் தொடர்களும் பயின்று வர உவமைகள் மலிந்து காணப் பெறுவது; மடக்கு, சிலேடை முதலிய அணிகள் நிரம்பப் பெற்றது. எல்லாவகையான காப்பிய நயங்களும் சிறந்து விளங்கப்பெறுவது. இந்நூலின் முதல் ஆறு காண்டங்களை இவர் ஒரு நாளைக்கு நூறு செய்யுட்கள் வீதம் பாடினுரென்பர்.

1073

## கச்சியப்ப முனிவர் (18-நூ)

**ஊர்:** திருத்தணிகை; சைவவேளாளர்.

இவர் சிவஞானமுனிவருடைய தலைமாணுக்கர். இவர் விரைந்து கவிபாடும் ஆற்றலுடையவர். இவர் கந்தப்புராணம் பாடிய கச்சியப்பரின் வேருனவர்.

**நூல்:** கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டு விடுதூது. கச்சி ஆனந்தருத்திரேசர் பதிற்றுப் பத்தந்தாதி, காஞ்சிப்புராணம் இரண்டாங்காண்டம், சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், திருத்தணிகைப்பதிற்றுப்பத்தந்தாதி, திருத்தணிகைப்புராணம், திருவானைக்காப் புராணம், திருத்தணிகையாற்றுப்படை, பஞ்சாட்சரவந்தாதி, பூவாளூர்ப்புராணம், பேரூர்ப்புராணம் விநாயகர்புராணம்.

கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டு விடுதூது; காஞ்சியிலுள்ள ஆனந்தருத்திரேசர் மீது காதல் கொண்டாளொருத்தி வண்டினைத்தூது விடுவதாக அமைந்தது; 506 கண்ணிகளை யுடையது.

காஞ்சிப்புராணம் - இரண்டாங்காண்டம். இந்நூலின் முதற காண்டம் சிவஞான முனிவரால் பாடப்பெற்றது. சிவஞான முனிவர் கட்டளையின்படி இரண்டாங் காண்டத்தைக் கச்சியப்ப முனிவர் பாடி முடித்தார்.

திருத்தணிகைப் புராணம் (1883). இது தணிகைத் தலத்தின் பழஞ்சிறப்புக்களைக் கூறுவது. 19 படலங்களையும் 3161 செய்யுட்களையும் கொண்டது; சொல்நயம், பொருட் செறிவு, சந்த இனிமை கொண்டது

திருவானைக்காப்புராணம் (1870) இந்நூல் 25 பகுதிகளும் 21 படலங்களும் 1555 செய்யுட்களுமுடையது.
பூவாளூர்ப்புராணம் (1885) இந்நூல் பாயிரம் உட்பட 18 சருக்கங்களையும் 1885 செய்யுட்களையும் உடையது; பூவாளூரின் பழம் பெருமையினைத் தெரிவிப்பது.

பேரூர்ப்புராணம் (1885) இது கொங்குநாட்டிலுள்ளதும் மேலைச்சிதம்பரம் என்றழைக்கப் பெறுவதுமான பேரூரின் பெமையைக் கூறுவது. 37 படலங்களையும் 2220 செய்யுட்களையும் கொண்டது.

1074

**கச்சியப்பர்** (17-நூ)

சி. பெ: கந்தப்புராணக் கச்சியப்பர்.

ஊர்: காஞ்சிபுரம்.

இவர் அந்தகக் கவி வீரராகவமுதலியாரின் ஆசிரியர், கந்தப் புரராணச் சொற்பொழிவு செய்வதில் வல்லவராக விளங்கியமையால் 'கந்தப்புராணக் கச்சியப்பர்' என்று அழைக்கப்பட்டார். இவருடைய மாணவர் அந்தகக் கவி வீரராகவ முதலியார். கச்சியப்பர் இவரைப் புகழ்ந்து செய்யுள் ஒன்று இயற்றி யுள்ளார்.

1075

**கச்சிராயன்** ( ? )

இவர் திருமுதுகுன்றத்துக்கோயிலுக்கு மடைப்பள்ளி கட்டி உதவிய, அரசநாராயண ஏழிசை மோகனை கச்சிராயன் வழிவந்தவராகக் கருதப்படுகிறுர். இவர் காலத்தில் வாழ்ந்த கண்டியதேவன் என்பானும் ஒரு புலவன் ஆவன். கண்டிய தேவன் ஒரு சமயம் விருதுகளுடன் போர்க்கோலம் பூண்டுவரக் கண்ட கச்சிராயன், கீழ்க்கண்ட பாட்டைப் பாடியதாகத் தெரிய வருகிறது.

குப்பாய மிட்டுக் குறுக்கே கவசமிட்டுக்
கைப்பாச மிட்டுவருங் கண்டியதே வாவுனது
தொப்பாரத் தின்கீழ் மயிர்.

1076

## கடம்பனூர்ச் சாண்டிலியன் (சங்க காலம்).

**ஊர்:** கடம்பனூர்.

வடநாட்டுத் துறவிகளின் பெயர்களான கௌதமர், கௌசிகர் (பாலைக்கௌதமர் - பெருங்கௌசிகன்) என்பதுபோல (சாண்டிலியன் என்னும் பெயரும் வழங்கியிருக்கலாம் என்றும் கூறுப. எனவே இவர் கடம்பனூர்ச் சாண்டிலியன் என அழைக்கப் பெற்றார் என்ப.

**நூல்:** குறுந்தொகை-307.

1077

## கடலூர்ப் பல்கண்ணனார் (சங்க காலம்)

**ஊர்:** கடலூர்.

**நூல்:** நற்றிணை. 380

1078

## கட்வுள்மாமுனிவர் (19-நூ)

இவர் காஞ்சிப்புராணம் - இரண்டாங் காண்டம் பாடிய கச்சியப்ப முனிவருக்கு நண்பர். ஒருமுறை இவர் வயிற்று வலியினால் வருந்தியபோது கச்சியப்பர் இவரைப் பார்த்துத் திருவாதவூரடிகள் வரலாற்றினை ஒரு புராணமாகப் பாடினால் வயிற்றுவலி நீங்கும் என்று சொன்னார். இவரும் அவ்வாறே திருவாரூர்ப் புராணத்தைப் பாடி முடிக்க இவருக்கு வயிற்றுவலி நீங்கிற்று என்பர்.

**நூல்:** திருவாதவூரர் புராணம்.

இந்நூல் 544 செய்யுட்களைக் கொண்டது, இந்நூலின் ஆறுவது சருக்கத்தைச் சைமன் காசிச் செட்டி என்பவர் கி. பி. 1861ஆம் ஆண்டு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். இப்புராணத்திற்குக் குமாரதேவர் என்பார் உரை எழுதியுள்ளார்.

1079

## கடிகைமுத்துப் புலவர் (17-நூ)

**ஊர்:** எட்டயபுரம்: கம்மாளர்.

கடிகை என்பது இவருடைய குடிப்பெயர் என்பர். கடிகை என்ற சொல் அரசர்க்கு மங்கலக் கவி பாடுவோர், நாழிகைக்

கவி கூறுவோர் என்ற பொருள்களில் வழங்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. ஆதலின் இவர் கடிகைமுத்துப்புலவர் என்று அழைக்கப்பட்டார்.

இவர் எட்டயபுரம் சமத்தானத்தில் அவைப்புலவராக இருந்தார்; இசைத்துறையிலும் வல்லவர். இவரை ஆதரித்த அரசன் வேங்கடேசுவர எட்டயபூபதி. இவர் இறக்குந் தறுவாயில் இவருடைய பிள்ளைகள் இவருடைய பிரிவுக்கு வருந்தி அழ அப்போது 'எட்டப்பனிருக்கும்போது ஓரப்பனுக்கு அழாதீர்' என்று சிலேடைப் பொருள் படும்படி கூறினார். இங்ஙனம் சிலேடைப் பொருள் தோன்ற உரையாடுவதில் வல்லவராயிருந்தார்,

சமுத்திரவிலாசம், காமரசமஞ்சரி, மதன வித்தாரமாலை திருக்குவிசயம், சிந்து, திருப்புடைமருதூர் அந்தாதி தனிப் பாடல்கள் பல.

சமுத்திரவிலாசம்: இந்நூல் எட்டப்ப பூபதி மேல் பாடப் பெற்றது; 100 செய்யுட்கள் கொண்டது; அகப்பொருள் பற்றியது; மடக்கு, சிலேடை முதலியன நிறைந்ததாய்க் கழிக் கரைப் புலம்பல் என்னும் அகப்பொருள் துறை ஒன்றினையே உடையது.

காமரசமஞ்சரி: இந்நூலும் எட்டப்ப பூபதி மேல் பாடப் பெற்றதே.

திருக்குவிசயம்: இந்நூல் சிவகிரிப் பெருநிலக்கிழார் வரகுண ராமன் வன்னியரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது; 325 செய்யுட்களையுடையது.

மதனவித்தாரமாலை: இந்நூலின் பாட்டுடைத் தலைவர் ஊற்று மலைப் பெருநிலக்கிழார் மருதப்பத்தேவர்.

சிந்து: இந்நூல் இசை தொடர்பாக ஏழு பருவப்பெண்களையும் குறித்துப் பாடப்பெற்றது.

1080

**கடியலூர் உருத்திரங்கண்ணனார்** (சங்ககாலம்)

**ஊர்:** கடியலூர்.

**தந்தை:** உருத்திரனார்; அந்தணர்

1081

இவர் வைணவ சமயத்தில் பற்றுடையவர்; தொண்டைமான் இளந்திரையனாலும், சோழன் கரிகாற் பெருவளத்தானாலும் ஆதரிக்கப் பெற்றவர். உருத்திரங்கண்ணனார் என்பது உருத்திரனாருக்கு மகனாகிய கண்ணனார் என விரியும்.

நூல்: அகநானூறு 167. குறுந்தொகை 352. பட்டினப்பாலை, பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை: இது பத்துப்பாட்டில் ஒன்பதாவது பாட்டு; 301 அடிகளையுடையது. வேற்று நாட்டிற்குச் செல்லத் தொடங்கிய தலைவன் தனது நெஞ்சை நோக்கித் தலைவியைப் பிரிந்துவாரேன் என்று செலவழுங்கிக் கூறியதாகக் காவிரிப்பூம்பட்டினத்தையும், சோழன் கரிகாற் பெருவளத்தானது வீரத்தையும், அவனது செங்கோலையும் சிறப்பித்துக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது. இதில் சோழநாடும் காவிரி ஆறும் மிகச் சிறப்பித்துக் கூறப் பெற்றுள்ளன. இப்பாட்டுக்காகக் கரிகாற் பெருவளத்தான் கடியலூர் உருத்திரங்கண்ணனாருக்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசளித்தான்.

பெரும்பாணாற்றுப்படை: இது பத்துப்பாட்டில் நான்காவது பாட்டு; 500 அடிகளையுடையது: தொண்டைமான் இளந்திரையன் மேற் பாடப்பெற்றது. இளந்திரையனென்பவன் காஞ்சிநகரத்திலிருந்த ஓர் அரசன். இப்பாட்டு அவனதுநாட்டிலுள்ள ஐந்திணை வளத்தையும் அவற்றில் வாழ்பவருடைய தொழில், ஊண், ஒப்புரவு முதலியவற்றையும் அவனுடைய வள்ளன்மையையும் கூறும். இதில் காஞ்சி நகரத்துள்ள திருவெஃகா என்னும் திருப்பதி கூறப்பட்டுள்ளது. 1081

## கடியை நன்னியார் (10 நூ ?)

இவர் பழைய இலக்கண நூலாசிரியர்களுள் ஒருவர்.
கைக்கிளை மருட்பாவாகி வருங்கா, லாசிரியம் வருவதாயின் மேவா, முச்சீரெருத்திற்றாகி முடியடி, யெச்சீரானு மோகாரத்திறுமே' இது கடியை நன்னியார் செய்த கைக்கிளைச் சூத்திரம். 1082

## கடுந்தொடைக் காவினார் (சங்ககாலம்)

காமரத்தில் பெரும் பாரமான பண்டங்களைத் தொகுத்துக் கட்டித் தோளிற் சுமந்து செல்லும் வழக்கமுடையவராக இவர்

இருந்தமையால் இவ்வாறு வழங்கப்பெற்றிருக்கலாம் என்பர் திரு ரா. இராகவையங்கார்.

டாக்டர் மொ. அ. துரை அரங்கசாமி அவர்கள் குறுந்தொகை 69ஆம் பாடலைப் பாடிய கடுந்தோட் கரவீரனும் இவரும் ஒருவராக இருக்கலாம் என்று கூறுவர்.

**நூல்:** அகநானூறு 109ஆம் பாட்டு. 1083

## கடுந்தோட் கரவீரன் (சங்ககாலம்)

**ஊர்:** சோழநாட்டில் திருவாரூருக்கு அருகிலுள்ள கரவீரம். இவ்வூர், இப்பொழுது கரையபுரம் என மருவி வழங்குகின்றது. பொன்னிறப் பூக்களைத் தரும் மரத்திற்குப் பொன்னலரி அல்லது கரவீரம் என்று பெயருண்டு. எனவே, பொன்னலரி மாலை அணிந்தவர் கரவீரனர் எனப்பட்டார் என்று கூறுப. இன்றும், கரவீரக் கோயிலில் தல விருச்சமரம் பொன்னலரியேயாகும்.

இப்புலவரின் பெயரை, ரா. இராகவையங்கார் அவர்கள், கடுந்தோட் காவீரன் என்று கொண்டு, அதற்குத் தோளின் கடுமையால் எத்தகைய காவையும் ஏந்த வல்ல வீரன் என்று பொருள் கூறுவர்.

**நூல்:** குறுந்தொகை 69ஆம் பாட்டு. 1084

## கடுவளிச் சித்தர் ( ? )

**ஊர்:** கடுவளி.

இவர் கடுவளி என்னும் ஊரில் உள்ள சிவன்கோவிலில் சமாதியில் ஆழ்ந்திருந்தார். அவ்வூருக்கு வந்த சோழன் இவரை உலக வாழ்க்கையில் ஈடுபடுத்த எண்ணினன். தாசி ஒருத்தி இவரை உலக வாழ்க்கையில் ஈடுபடுத்த முன்வந்தாள். அவள் இவருக்குச் சருகைப்போன்ற உணவைப் பக்குவம் செய்து கொடுத்துத் தண்ணீர்த் தாகம் ஏற்படச் செய்து, தன் வீட்டிற்கு அழைத்துவந்து நல்ல உணவுகளைச் சாப்பிடச் செய்து சிற்றின்பத்தில் ஈடுபடுமாறு செய்தாள். ஒருநாள் சோழன் அவ்வூருக்கு வந்தபோது ஓர் அவை கூட்டி அத்

தாசியை நடனமாடச் செய்தான். நடனத்தின்போது கீழே விழுந்த சதங்கையைச் சித்தர் எடுத்து அவள் காலில் அணிவித்தார். அதுகண்டு அரசன் முதலாயினோர் சிரித்தனர். அப்பொழுது சித்தர் 'அல்லும் பகலும் அறிவுடன் துஞ்சினால் கல்லும் பிளந்து கடுவளியாகுமே' எனப் பாடச் சிவலிங்கம் இரண்டாகப் பிளந்தது. சோழன் அஞ்சி அச்சித்தரை வேண்ட அவர் 'எட்டிரண்டும் அறிவா லறிந்த பின் எட்டிரண்டும் சிவலிங்கமதாகுமே' என்று பாடப் பிளந்த லிங்கம் ஒன்றாகச் சேர்ந்து கொண்டது. இவர் பதினெண் சித்தர்களில் ஒருவர்.

நூல்: சித்தர் பாடல்களில் 'கடுவளிச்சித்தர் என்ற பெயரில் வந்துள்ள பாடல்கள். 1085

## கடுவன் இள மள்ளனார் (சங்ககாலம்)

நூல்: நற்றிணை: 150ஆம் பாட்டு. 1086

## கடுவன் இளவெயினனார் (சங்ககாலம்)

நூல்: பரிபாடல் 3, 4, 5.

3, 4ஆம் பாடல்கள் திருமாலைப் பற்றியன. இவர் திருமாலைத் துதித்திருக்கும் பகுதிகளும் அவருடைய அவதாரச் செயல்கள், அவர் வேதத்தால் பாராட்டப்படும் வகை, யோகிகளால் தியானிக்கப்படும் முறை, ஆல், கடம்பு ஆற்றிடைக்குறை, குன்றம் இவற்றில் அவர் வெவ்வேறு பெயரோடு எழுந்தருளியிருத்தல், கருடனது பெருமை, தத்துவத்தின் தோற்ற ஒடுக்கங்கள் முதலியவற்றை விதந்து கூறும் பகுதிகளும் மிக்க இனிமை பயப்பன.

5ஆம் பாடல் முருகவேளைப் பற்றியது. முருகக் கடவுளுடைய திருவவதார வரலாறு. அவதரித்த அன்றே இந்திரன் முதலிய தேவர்களை வென்று அவர்கள் அளித்த மயில் கோழி முதலிய வற்றைப் பெற்றமை, வேற்படையால் கிரௌஞ்சத்தை உடைத்து வழியுண்டாக்கினமை. பிணிமுகம் என்னும் யானையை ஊர்ந்து சென்று கடலில் சூர்மாவைத் தடிந்தமை ஆகியவை கூறப்பெற்றுள்ளன. எமக்கு வேண்டுவன பொருளும் போகமுமல்ல, அருளும் அன்பும் அறனுமே' என்று

வேண்டிக் கொண்டிருத்தல் இவருடைய பேரன்பைத் தெரிவிக்கின்றது. 1087

## கடுவன் மள்ளனார் (சங்ககாலம்)

**நூல்:** அகநானூறு 70, 256, 354; குறுந்தொகை 82. 1088

## கடுவெளிச் சித்தர் ( )

பார்க்க: கடுவளிச் சித்தர். 1089

## கடைப்பிள்ளை ( ? )

**நூல்:** கடைப்பிள்ளை அமிர்தயோகம் 125. 1090

## கண்டராதித்தர் (10-நூ)

**வே. பெ:** சிவஞானகண்டராதித்தர், மேற்கு எழுந்தருளியதேவர்

**ஊர்:** உறையூரும் தஞ்சையும்.

**தந்தை:** பராந்தகசோழன்.

இவர் உறையூரிலும், தஞ்சையிலும் இருந்து அரசாண்டவர்; சிவபெருமானிடத்தில் மாருத அன்பு கொண்டவர். இவர் சிவபெருமான் எழுந்தருளியுள்ள பல ஊர்களுக்குச் செல்லுங்கால் ஒவ்வொரு ஊரிலுள்ள பெருமானுக்கும் ஒவ்வொரு பதிகம் பாடிவந்தனரென்றும், அவைகளில் தில்லைக்குரிய ஒரு பதிகம் தவிர மற்றவையெல்லாம் அழிந்துபோய் விட்டனவென்றுஞ் சொல்லப் பெறுகின்றது.

**நூல்:** திருவிசைப்பா. 1091

## கண்டியதேவன் ( ? )

திருச்சிற்றேமம் என்று வழங்கப்பெறும் திருச்சிற்றம்பலத்தின் தலைவனாகிய நீலகங்கன் இப்புலவரை ஆதரித்ததாகத் தெரிகிறது. இவர் ஒருமுறை அப்புரவலனிடமிருந்து பரிசு பெற்றுச் சென்றபோது, கச்சிராயன் இவரை இகழ்ந்தானாக, தான் கொண்டு சென்ற பரிசுகளையெல்லாம் கச்சிராயனுக்குக் கொடுக்கமுற்பட்டார். இதனை அறிந்த நீலகங்கன் தானே

முன்வந்து பெரும் பொருள் வழங்கினன். அங்ஙனம் நீலகங்கன் வந்தபொழுது இப்புலவர் 'அலைவளைத்த திருப்பாற் கடல்' என்று தொடங்கும் ஒரு செய்யுளைப் பாடியுள்ளார்.

1092

**கண்ணகனர்** (சங்ககாலம்)

இவர் இயற்பெயர் நாகன். கண்ணனுடைய மகனாதலின் கண்ணகனர் என்றுஞ் சொல்லப்படுவர் கண்ணகனர் என்பது பிழைபட்ட வடிவமாகக் கருதப்படுகிறது. பரிபாடல் 21ஆம் செய்யுளுக்கு இசை வகுத்தவர் இவரே. இவர் கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையார் முதலானோர் காலத்தவர்.

நூல்: நற்றிணை 79. புறநானூறு 218. 1093

**கண்ணகாரன் கொற்றனர்** (சங்ககாலம்)

நூல்: நற்றிணை 143ஆம் பாட்டு. 1094

**கண்ணங் கொற்றனர்** (சங்ககாலம்)

இவர் இயற்பெயர் கொற்றனர்; இது கண்ணன் என்னும் தந்தை பெயரோடு சேர்ந்து கண்ணங் கொற்றனர் என்றுயிற்று. இவர் குறிஞ்சியைப் புனைந்து பாடியுள்ளார்.

நூல்: நற்றிணை 156ஆம் பாட்டு. 1095

**கண்ணகுமது மகுதூ முகம்மது** ( 19-நூ )

நூல்: பெரிய கசகல்லன்பியா.

இந்நூல் இருபதுக்கு மேற்பட்ட நபிமார்களின் வரலாறுகளை உரைநடையில் எளிய நடையில் கூறுகிறது. மூன்று பகுதிகளாக வெளிவந்துள்ளது. 1096

**கண்ணங்கூத்தனர்** (4-நூ)

ஊர்: மதுரை

தந்தை: கண்ணனர்

இவருடைய தந்தையின் பெயர் கண்ணனாராதலின் தந்தை-யின் பெயரும் இவர் பெயருடன் சேர்ந்து கண்ணங்கூத்தனார் என வழங்குவதாயிற்று

நூல்: கார் நாற்பது.

இது பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும். இந் நூல் 40 வெண்பாக்களையுடையது. கார் காலத்தின் சிறப்புக்கள் இந்நூலில் விரிவாகக் கூறப்பட்டிருப்பதால் இந்நூல் கார் நாற்பது எனப் பெயர்பெற்றது. முல்லைத்திணைக்குரிய அகவொழுக்கம் இந்நூல் முழுதும் கூறப்பட்டுள்ளது. நூலின் முதற் செய்யுளில் திருமாலும் 19–ஆம் செய்யுளில் பலராமனும் கூறப்பட்டுள்ளபடியால் இவரை வைணவ சமயத்தினர் என்று கருதுகின்றனர். இந்நூலின் சிவபெருமானுக்குரிய கார்த்திகைத் திங்களில் நடைபெறும் கார்த்திகை விழாவும் அந்நாளில் நாடெங்கும் மக்கள் விளக்கேற்றி வைக்கின்ற செய்தியும் கூறப்பெற்றுள்ளன. 1097

## கண்ணபிரான்பிள்ளை (19-நூ)

நூல்: ஏரெழுபதுமுகவுரை கண்டனம் (1888)

இது கம்பரது வரலாறு பற்றிய ஆராய்ச்சி நூலாகும். கம்பர் சைவரா? வைணவரா? என்பது குறித்து இந்நூலில் ஆராயப் பட்டுள்ளது. 52 பக்கங்களுடையது. 1098

## கண்ணபிரான் முதலியார் (20-நூ)

இவர் இராமாநந்த சாமிகள், நிச்சல என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டிச் சிறப்புப் பாயிரம் அளித்த புலவர்களுள் ஒருவர் ஆவர். 1099

## கண்ணம்புல்லனார் (சங்ககாலம்)

ஊர்: கருவூர். கருவூர்க் கண்ணம்புல்லனார் என்பவர் இவரே. கண்ணன் தந்தை பெயர்; புல்லன் இயற்பெயர். நெய்தற்றிணையும் பாலைத்திணையும் பாடியுள்ளார்.

நூல்: அகநானூறு 63. நற்றிணை 159. 1100

## கண்ணன் சேந்தனார் (4-நூ)

தந்தை: சாத்தந்தையார்

நூல்: திணைமொழி ஐம்பது

இந்நூல் அகப்பொருள் பற்றியது. குறிஞ்சி முதலாகிய ஐந்து திணைகளுக்கும் ஒவ்வொன்றிற்கும் 10 வெண்பாக்களாக 50 வெண்பாக்களைக் கொண்டது. இவற்றுள் 46 இன்னிசை வெண்பாக்களாகவும் 4 நேரிசை வெண்பாக்களாகவும் உள்ளன. 1101

## கண்ணனார் (சங்ககாலம்)

சங்க காலத்தில் கண்ணன் என்ற பெயருடைய 34 புலவர்கள் இருந்தனர் என்று அறிகிறோம். இன்றுபோல அன்றும் கண்ணன் என்ற பெயர் பெரு வழக்குடையதாக இருந்ததை அறியலாம்.

குறுந்தொகை 107ஆம் பாடலைப் பாடிய மதுரைக் கண்ணனாரும் இவரும் ஒருவராக இருக்கலாம் என்ப. 1102

நூல்: குறுந்தொகை 244-ஆம் பாட்டு.

## கண்ணுச்சாமிச் செட்டியார் (19-நூ)

ஊர்: தஞ்சாவூரை அடுத்துள்ள கருந்தட்டாங்குடி.

நூல்: தஞ்சைத் தலபுராண உரைநடைக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம். 1103

## கண்ணுச்சாமிப்பிள்ளை, சி. (19-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள அம்மாப்பேட்டை. இலக்கணத்தில் இவருக்கு இருந்த புலமை காரணமாக, இவர் இலக்கணப் புலவர் என்று அழைக்கப்பெற்றார்.

நூல். தஞ்சைத் தல புராண உரை நடைக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம். 1104

## கண்ணுச்சாமி முதலியார் (19-நூ)

ஊர்: திருமயிலை

நூல்: த. செய்யப்ப முதலியார் என்பவர் இயற்றிய மும்மணிமாலை என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம். 1105

## கண்ணுச்சாமி முதலியார், சி. (19-நூ)

**நூல்:** வேளாங்கண்ணி அர்ச். ஆரோக்கிய மாதாவின் பேரில் பாவினங்கள். இந்நூலில் மாதாவைக் குறித்த புலம்பல், தோத்திரம், பஞ்சரத்தினம் முதலியவை அடங்கியுள்ளன; எட்டுப் பக்கங்களையுடையது. 1106

## கண்ணுடைச் சம்பந்த மூர்த்தி தேசிகர்

**நூல்:** நியதிப் பயன். 1107

## கண்ணுடைய வள்ளல் (15-நூ)

**ஊர்:** சீர்காழி, சைவ சமயம்.

**நூல்:** ஒழிவிலொடுக்கம், கச்சிமாலை, மாயப்பிரலாபம், அதிகாரப் பிள்ளை அட்டவணை, அத்துவைதக் கலிவெண்பா, அதிரகசியம், குருமரபு சிந்தனை, ஞானசாரம், ஞானவிளக்கம் சிந்தாந்த தரிசனம், சிவஞானப்பிரகாசம், சுருதி சர்வவிளக்கம், திருமுகப் பாசுரம், உபதேசமாலை, தேவார உரை, தத்துவவிளக்கம், சதாசிவரூபம், திருநெறிவிளக்கம்.

ஒழிவிலொடுக்கம்; இந்நூல் 253 வெண்பாக்களை உடையது. இந்நூலுக்குத் திருப்போரூர்சிதம்பர சாமிகள் உரை எழுதியுள்ளார். தத்துவவிளக்கம்: இந்நூல் 51 கலித்துறைகளையுடையது; சைவசித்தாந்த உண்மைகளைக் கூறுவது.

சதாசிவரூபம்: இந்நூல் சைவ ஆகமங்களில் கூறப்பெற்றுள்ள பஞ்ச சாதாக்கிய விவரங்களை எடுத்துரைக்கின்றது.

திருநெறிவிளக்கம்: இந்நூல் சைவசித்தாந்த உண்மைகளைக் கூறுகின்றது. 1108

## கணக்காயன் தத்தனார் (சங்ககாலம்)

வே. பெ. தத்தனார்

சங்க காலத்தில் பல புலவர்களுக்குத் தத்தனார் என்னும் பெயர் இயற்பெயராக இருந்திருக்கிறது. புலவர்கள் தொழிலுக்கேற்பவும் குணத்திற்கேற்பவும் அழைக்கப்

பெற்றனர். இப்புலவர் ஆசிரியத் தொழில் உடையவராதலால், கணக்காயன் தத்தனர் என்று அழைக்கப் பெற்ருர் என்ப.

**நூல்:** குறுந்தொகை 304ஆம் பாட்டு. 1109

## கணபதி ஆச்சாரி (20-நூ)

**ஊர்:** கோட்டாறு

**நூல்:** சங்கரநாராயண பாரதியார் இயற்றிய 'கன்னியாகுமரி பகவதி அம்மன் பதிகம்' என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம். 1110

## கணபதி ஐயர், பா (18-நூ)

**ஊர்:** ஈழநாட்டு வட்டுக்கோட்டை.

**தந்தை:** பாலகிருட்டிண ஐயர்.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1709-1784.

இவர் வைரவர் அருளால் பாடும் ஆற்றலைப் பெற்ருர், சண்முக ஐயர் என்பவரால் தொடங்கப்பெற்று முற்றுப் பெருதிருந்த சுந்தரி நாடகம் என்னும் நூலினை 'வாளபிமன்யு' நாடகம் என்று பெயர் மாற்றிப் பாடி முடித்தார்.

**நூல்:** வண்ணை வைத்திலிங்கக் குறவஞ்சி, மலையகந்தினி நாடகம், அலங்காரரூப நாடகம், அதிரூபாவதி நாடகம், பத்திரகாளியம்மை பதிகம், பத்திரகாளியம்மை ஊசல், விநாயகர் மாலை, ஏகமத சங்கற்ப நிராகரணம்.

பத்திரகாளியம்மை பதிகமும் ஊஞ்சலும் வட்டுநகர் பிட்டி வயல் பத்திரகாளியம்மையைப் பற்றியது.

விநாயகர்மாலை: இது பருத்தித் துறைச் சித்திவிநாயகர் மேல் பாடப் பெற்றது. பல பாவிகற்பங்களைக் கொண்ட 100 செய்யுட்களால் ஆகியது. 1111

## கணபதிக் கவிராயர் (19-நூ)

**ஊர்:** சேற்றூர்.

**நூல்:** மருதவிலாசப் பிரபந்தம்.

இந்நூல் உடுமலைப்பேட்டைக் கோட்டத்தில் குருவப்ப நாயக்கனூரில் பெருஞ்செல்வராக இருந்த குருசாமி நாயுடு என்பவர் மீது பாடப்பெற்றது. 1112

### கணபதி சாத்திரிகள் (20-நூ)

**நூல்:** மகாபாரதம் சாந்தி பருவம் (1916).

இந்நூல் இரண்டு பகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளது. 1113

### கணபதி சுப்பிரமணிய ஐயர், செ. ரா. (20-நூ)

**ஊர்:** பிச்சாண்டார் பாளையம்.

இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டிதப் பட்டம் பெற்றவர். ஈரோடு உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்துள்ளார்.

**நூல்:** கந்தர்வெண்பா அந்தாதி. கந்தன் தோத்திரக் கீர்த்தனை, கந்தன் காவடிச் சிந்து, கந்தர் ஆனந்தக் களிப்பு, அறநெறிக் கதைகள், அறநெறிக்கும், அறநெறிவியாசங்கள், அறநெறி வெண்பா. 1114

### கணபதி தாசர் (18-நூ)

**ஊர்:** நாகப்பட்டினம்.

**நூல்:** நெஞ்சறிவிளக்கம்.

இந்நூலில் 100 செய்யுட்கள் உள்ளன. ஒவ்வொரு செய்யுளிலும் சிவபெருமான் நாகைநாதர் என்று குறிப்பிடப் படுகிறார். 1115

### கணபதிநாயகர் (20-நூ)

**நூல்:** செயராம சாமிகள் என்பவர் இயற்றிய அநுபவாநந்த தீபிகை முதல் திருமுறை, இரண்டாந்திருமுறை ஆகிய நூல்களின் உரையைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம். 1116

## கணபதி நாயுடு (19-நூ)

நூல்: வழிநடைச் சிந்து (1897).

இந்நூல் வடக்குக் காரிசேரி என்னும் ஊரிலிருந்து திருச்செந்தூர் வரை நடந்து சென்றது பற்றிய பாட்டாகும். ஒரு தலைவன் தன் துணைவியுடன் திருச்செந்தூர் நாடிவரும் பயணத்தில் பாடியதாக அமைகின்றது. இருபத்தேழு செய்யுட்களைக் கொண்டது. 1117

## கணபதிப் பிள்ளை, வ. (19-நூ)

நூல்: திருக்கலியாணபுராணம் சுப்பிரமணியக் கடவுள் பதிகம் மாணிக்கவாசக சுவாமிகள் புராண வசன , பில்ஹணீயம்.

திருக்கலியாணபுராணம் சுப்பிரமணியக் கடவுள் பதிகம்: இந்நூல் விநாயகபுரத்தில் எழுந்தருளியிருக்கும் பிள்ளையாரின் பெருமையைப் பேசுவது; 11 செய்யுட்களைக் கொண்டது.

மாணிக்கவாசக சுவாமிகள் புராண வசனம்: மாணிக்க-வாசகர் வரலாற்றினைக் கூறுவது; ஆறு சருக்கங்களை உடையது.

பில்ஹணீயம் (1875) இது வடமொழியில் பில்ஹணரால் இயற்றப்பட்ட நூலின் மொழி பெயர்ப்பாகும். உரைநடையில் எழுதப்பெற்றிருப்பினும் இடையிடையே சில கவிதைகளையும் கொண்டுள்ளது நீதி நூல் அறிவுரைகளை இவ்வாசிரியர் தாமாகச் சேர்த்துள்ளார். 1118

## கணபதிப் பிள்ளை, வ ஞா (19-நூ)

நூல்: சகல தரும நீதி வாக்கியச் சுருக்கம் ஆகிய தந்தை சொன் மந்திரம் (1891). இந்நூல் வாழ்க்கையில் பின்பற்றி ஒழுக வேண்டும் நீதிக் கருத்துக்களை உரைநடையால் கூறுகிறது. 1119

## கணபதிப்புலவர் (19-நூ)

வே. பெ: கணபதிப்பிள்ளை.

ஊர்: யாழ்ப்பாணத்தில் உள்ள புலோலி.

**தந்தை:** வல்லிபுரநாதப்பிள்ளை.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1845-1895.

இவர் சிவசம்புப் புலவரிடம் கல்வி கற்றார்; வடமொழி, தென்மொழி ஆங்கிலம் ஆகியமும்மொழிகளில் வல்லவர். மொழி நூல் ஆசிரியராகிய மாகறல் கார்த்திகேய முதலியார், சதுர் வேதவை யாகரண ஸ்ரீநிவாசாசாரிய சுவாமிகள் ஆகியோர் இவருடைய மாணவர்கள் ஆவர்.

**நூல்:** பில்கணீயம் (தமிழாக்கம்), வேதாரணியேசுரர் ஊஞ்சற் பதிகம், இரகுவமிச சுருக்கம், இந்திரசேனை நாடகம், மார்க்கண்டேயபுராணம், தருக்கசாத்திர வினாவிடை, பதப் பிரயோக விவரணம் வடமொழி ஆலாசிய மான்மியத்திலிருந்து வாதபுரேசர் (மாணிக்கவாசகர்) மொழிபெயர்ப்பு. 1120

## *கணபதியாப்பிள்ளை*, (20-நூ)

**ஊர்:** தஞ்சாவூர்.

**நூல்:** அரங்கசாமி ஐயங்கார் என்பவர் இயற்றிய திருவரத்துறைப் புராணத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம். 1121

## *கணபதியாப்பிள்ளை மு. ப.* (20-நூ)

**ஊர்:** சிவகங்கை.

**நூல்.** கலியாணசுந்தரம் பிள்ளை என்பவர் இயற்றிய 'காதல்' என்னும் நூலைப் பாராட்டிச் சாற்றுக்கவி. 1122

## *கணிகண்ணன்* (7-நூ)

**ஊர்:** திருவெஃகா.

இவர் திருமழிசை ஆழ்வாருக்கு அடித்தொண்டராயிருந்து வந்தார். முதியவள் ஒருத்தி ஆழ்வாருக்குப் பலவகைப்பணி-விடைகள் செய்துவந்தாள். அம் முதியவள் வேண்டிக் கொண்டபடி ஆழ்வார் அவளுக்கு இளமையும் அழகும் நல்கினார். இதனை அறிந்த பல்லவ அரசன் ஆழ்வாருடைய அருளைப் பெற விரும்பிக் கணிகண்ணனை ஆழ்வாரை அரண்மனைக்கு அழைத்து வரும்படி வேண்டினான். ஆழ்வார்

அரண்மனைக்கு வாரார் எனவே தன்மீது ஒரு பாடலாவது பாடும்படி கணிகண்ணனை வேண்டிக் கொண்டான். கணி-கண்ணன் பாட மறுக்கவே சினங்கொண்டு நாட்டைவிட்டு அகலுமாறு ஆணையிட்டான். கணிகண்ணன் இதனை ஆழ்வாருக்குத் தெரிவித்ததும் ஆழ்வார் 'கணிகண்ணன் போகின்ருன்' என்ற பாடலைப்பாடிப் பெருமாளினை அவருடைய 'பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள்' என்று சொன்ருர். பெருமாளும் திருவெஃகாவிலிருந்து ஆழ்வர்ருடன் பின்சென்ருர். இதனையறிந்த அரசன் தன் தவற்றினை உணர்ந்து வருந்தி மன்னிக்கும்படி வேண்டினன். ஆழ்வாரும் அரசனை மன்னித்து தான் முன்பு பாடிய பாடலைச் சிறிது மாற்றிக் 'கணிகண்ணன் போக்கொழிந்தான்' என்று தொடங்கும் வெண்பாவினைப் பாடினர். பெருமாளும் ஆழ்வார் பின் திருவெஃகாவிற்கு வந்தார்.

**நூல்:** 'ஆடவர்கள் எவ்வாறகன்ருெழிவார்' எனத் தொடங்கும் வெண்பா. **1123**

## *கணிமேதாவியார்* (5-நூ)

**சமயம்:** சமணம்.

இவர் சோதிடத்தில் வல்லவராக இருந்தமையால் கணி-மேதாவியார் என்னும் பெயர் பெற்ருர்.

இவருடைய ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனர் ஆவர். கி. பி. 470ல் வச்சிரநந்தி என்னும் சமணரால் நிறுவப் பட்ட தமிழ்ச் சங்கத்தில் இவ்வாசிரியர் பயின்றிருக்க வேண்டும்.

**நூல்:** ஏலாதி; திணைமாலை நூற்றைம்பது.

**ஏலாதி:** இந்நூல் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. ஏலம் ஒரு பங்கும், இலவங்கம் இரட்டைப் பங்கும், நாககேசரம் மூன்று பங்கும், மிளகு நான்கு பங்கும், திப்பிலி ஐந்து பங்கும் சுக்கு ஆறு பங்குமாகச் சேர்த்துச் செய்யப்பட்ட ஏலாதிச் சூரணம் மக்களுடைய உடல் நோயைப் போக்கி வலிமை தருவதுபோல இந்நூலில் ஒவ்வொரு பாட்டிலும் சொல்லப்பட்ட ஆறு

கருத்துக்களும் அறியாமையைப் போக்கி மெய்யுணர்வாகிய வலிமையைத் தருகின்றன. ஆகையால் இந்நூலுக்கு இப் பெயர் ஏற்பட்டது.

**திணைமாலை நூற்றைம்பது:** இது 153 வெண்பாக்களையுடையது; அகப்பொருள் பற்றியது. குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் ஆகிய திணைகளுக்கு முறையே 31, 31, 30, 31, 30 பாடல்கள் வீதம் அமைந்துள்ளது. இந்நூலில் நான்காவது செய்யுளில் 'கோடாப் புகழ் மாறன் கடல் அணையான்' என்ற அடி காணப்படுகிறது. இதில் இவ்வாசிரியர் தன்னை ஆதரித்த பாண்டியனைக் குறிப்பிடுகிறார் என்றும், அப்பாண்டியன் களப்பிரர்கள் ஆளுகைக்கு உட்பட்ட குறுநில மன்னனாதல் வேண்டுமென்றும் கருதுகின்றனர். இந்நூலில் மாயோன், பலராமன் முதலிய தெய்வங்கள் பேசப்பெறுகின்றன. மன்மதனுடைய மலரம்புகள் ஐந்தும் சொல்லப்பெறுகின்றன.
1124

## *கணியன் பூங்குன்றனார்* (சங்ககாலம்)

**வே. பெ:** கணிபுன்குன்றனார்.

**ஊர்:** பூங்குன்றம்.

இவர் தொழிலாலும் இடத்தாலும் பெயர் பெற்றவர். இவர் வாழ்ந்த ஊர் இந்நாளில் இராமநாதபுரம் மாவட்டத்தில் மகிபாலன்பட்டி என்றழைக்கப்படுகிறது. அவ்வூரிலுள்ள பூங்குன்றநாதர் கோயிலில் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டில் 'பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றம்' என அவ்வூர் குறிக்கப் பெற்றுள்ளது.

**நூல்:** புறநானூறு 192. நற்றிணை 226. 1125

## *கணேச சாத்திரியார்* (20-நூ)

**ஊர்:** கருவூர்.

**நூல்:** கா. ஆறுமுகநாயகர் என்பவர் இயற்றிய 'வருண தருப்பணம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.
1126

**கணேச பண்டிதர்** (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்திலுள்ள வண்ணார்பண்ணை.

**வாழ்ந்தகாலம்:** கி. பி. 1843-1881.

இவர் வடமொழிப் பயிற்சியும் உடையவர்; குன்றக் குடியிலுள்ள திருவண்ணாமலை ஆதீனப் புலவராக விளங்கினார்.

**நூல்:** இளையாற்றங்குடிப் புராணம் (1895).

இந்நூல் தனவணிகப் பெருமக்களின் வேண்டுகோளுக்கு இணங்க வடமொழியிலுள்ள, சிரமாப நோதனபுரமான்மியம், என்னும் நூலிலிருந்து தமிழில் மொழிபெயர்த்துச் செய்யப் பட்டது. 1090 செய்யுட்களைக் கொண்டது. இதில் 15 அத்தியாயங்கள் உள்ளன. இது தனவணிகப் பெருமக்களுக் குரிய ஒன்பது நகரக்கோயிலுள் ஒன்றாகிய இளையாற்றங் குடியின் சிறப்பினைக் கூறுவது. இவ்வூர் இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூருக்கு அருகிலுள்ளது. 1127

**கணேசபண்டிதர், வ ஞா.** (20-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்திலுள்ள வல்வை.

இவர் மருத்துவ நூலிலும், சோதிட நூலிலும் பயிற்சி உடையவர்.

**நூல்:** நன்னெறித் தாலாட்டு.

இது திருக்குறளின் அதிகாரச் சாரமாக அமைந்துள்ளது. 1128

**கணேசபிள்ளை, டி எஸ்.** (20-நூ)

**வே.பெ:** கணேச கவிச் சிங்கம்

**ஊர்:** கேரள மாநிலம் திருவாங்கூர்.

**மறைவு:** கி. பி. 1916.

இவர் திருவாங்கூரில் கல்வெட்டு ஆராய்ச்சியாளராகப் பணிபுரிந்தார். இவர் உடல்நலம் குன்றி இருந்த காலை ஒரு நாள் இரவு கனவு ஒன்று கண்டு, 'ஒளியே என் உள்ளின் உயிரே

ஓரேழின் உயர் பேரருள் பெய் முகிலே' என்று வாய்விட்டுப் பாடினூர். பெற்றோர்கள் இவரைத் துயில் எழுப்பி என்ன என்று கேட்க, இவர் கனவில் தாம் ஒரு குழந்தையாக மாறி இறைவியிடம் தம்மைக் காப்பாற்றுமாறு முறையிட்டதாகவும் அப்போது எழுந்ததே இத்தொடர் என்றும் கூறினூர். இத்தகைய தேவி வழிபாட்டினுல்தான் தமக்கு ஏற்பட்ட நீங்காத உடல் நோய் நீங்கியதால் இத்தொடர்களையே தலைப்பாகக் கொண்டு பஞ்சரத்தினம் என்னும் பெயருடைய ஐமணிப்பனுவல் ஒன்றினை இயற்றினூர்.

நூல்: ஐம்மணிப் பனுவல், தமிழ் தோற்று தேற்றம். இரண்டாவது நூல் இலக்கண நூல். இந்நூலின் ஒரு பகுதியை இவர் எழுதி முடித்தார். மறுபகுதியை எழுதி முடிக்க இயலவில்லை. இந் நிலையில் இவர் 1916ஆம் ஆண்டில் காலமானூர். 1129

## கணேச மூர்த்தியார் (19-நூ)

ஊர்: வெளியம்பாக்கம்.

இவர் வ. நாராயணதேசிகர் என்பவரிடம் வேதாந்த நூல்களைக் கற்றூர்.

நூல்: சற்குருஸ்தவம். 1130

## கணேசையர், ச. (20-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த புன்னாலைக் கட்டுவன்.

வாழ்ந்தகாலம்: கி. பி. 1878-1958.

நூல்: ஈழநாட்டுத் தமிழ்ப்புலவர் சரிதம், இரகுவம்சம் என்னும் நூலுக்கு உரை.

ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் சரிதம்: இந்நூலில் இலங்கையைச் சேர்ந்த 101 அறிஞர் பெருமக்களின் வரலாறுகள் தரப்பட்டுள்ளன. 1131

## கத்தூரி ரங்கையர் (20-நூ)

நூல்: மகாபாரத வினூவிடை (1907) 1132

## கதக் கண்ணனூர் (சங்ககாலம்)

**வே. பெ:** கந்தக்கண்ணன்.

டாக்டர் உ. வே. சா. அவர்களின் குறுந்தொகைப் பதிப்பில் கந்தக்கண்ணன் என்று குறிக்கப்படுகின்றார் கந்தக்கண்ணன் என்ற பெயர்தான் பிற்காலத்தில் ஏடு பெயர்த்து எழுதும் பொழுது, நகர ஒற்று விடுபடக் கதக்கண்ணனூர் என்று காலப் போக்கில் அழைக்கப்பெற்றிருக்கலாம்.

குறுந்தொகை 88-ஆம் பாடலைப் பாடிய **கதக்கண்ணனூரும்** இவரும் ஒருவராக இருக்கலாம் என்ப.

**நூல்:** குறுந்தொகை 94ஆம் பாட்டு. 1133

## கதப்பிள்ளையார் (சங்ககாலம்)

**நூல்:** குறுந்தொகை 64, 265, 380.
நற்றிணை. 135, புறநானூறு 380. 1134

## கதிர்வேல் கவிராசபண்டிதர் (19-நூ)

**நூல்:** மாபாரதக் கீர்த்தனை.

இந்நூல், முத்திராச கவிராயர், சுப்பராய முதலியார் என்று இருவருடன் சேர்ந்து இயற்றப்பட்டது 1135

## கதிர்வேல் கவிராசபண்டிதர் தி. (19-நூ)

**ஊர்:** தரங்கம்பாடி.

அட்டாவதானம் செய்யும் பயிற்சியுடைய இவர், சென்னை நகரில் தங்கிச் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தார். இவர் செய்யுள் இயற்றுவதில் மிகுந்த திறமையுடையவர். திருத்தணிகை விசாகப்பெருமாளையர், அட்டாவதானம் சுப்பையர், தருமபுர ஆதீனம் சோமசுந்தரக்கவிராயர் ஆகியோர் இவர் காலத்திலிருந்த புலவர் பெருமக்களாவர்.

**நூல்:** திருவிளையாடற்புராண இசைப்பாடலுக்குச் சாற்றுக்கவி, குடிகேடர்மாலை, பஞ்சரத்தினம், சரமகவி, சில செய்யுட்கள்.

பஞ்சரத்தினம், சரமகவி: இவ்விரண்டும் மலைப்பெருமாள் சாமி என்ற மெய்ஞ்ஞானச் செல்வர்மீது பாடப்பெற்றவை.

சில செய்யுட்கள்: இவை தம்மை ஆதரித்த சுப்புப்பிள்ளை என்ற செல்வர் மீது பாடப்பெற்றவை. 1136

## கதிர்வேல் கவிராயர்–1 (19-நூ)

**ஊர்:** இராயபுரம்.

**நூல்:** மும்மணிமாலை என்னும் நூலுக்குச் சிறப்புப் பாயிரம்.

மும்மணிமாலை என்னும் நூல் த செய்யப்ப முதலியாரால் இயற்றப்பெற்றது. 1137

## கதிர்வேல் கவிராயர்–2 (19-நூ)

**ஊர்;** சார்வாய்.

**நூல்:** சே. சுந்தரமுதலியார் இயற்றிய நூல்களைப்பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம். 1138

## கதிர்வேல் கவிராயர், அ. (19-நூ)

**நூல்:** விவேகவிர்த்தி விலாசம், சிவபராக்ர ம். 1139

## கதிர்வேல் நாடார், க.சா. (20-நூ)

**ஊர்:** சென்னை. இவர் நகைச்சுவை நிறைந்த கதைகள் கட்டுரைகள் பாடல்கள் எழுதுவதில் வல்லவராக விளங்கினர். மகாவிகடதூதன் என்னும் பத்திரிகைக்குத் துணை ஆசிரியராக இருந்தார். பின்னர் அப்பத்திரிகையிலிருந்து விலகிச் சென்னை இராயபுரத்தில் விசயவிகடன்' என்னும் இதழைத் தொடங்கி நடத்தினர்.

**நூல்:** கருப்புகழ். அகடவிகடமஞ்சரி, பகையதம் அல்லது படுதோஷி விலாசம், விளங்காபுரம் விகடக் கோர்ட்டு விசாரணை, விகடவிசய பூடணம்.

கருப்புகழ்: இது அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழ் பாடல்கள் சிலவற்றை நகைச்சுவை பட மாற்றி அமைக்கப்பட்டதாகும். 1140

**கதிர்வேல் பிள்ளை, வை.** (20-நூ)

**ஊர்:** தஞ்சைமாவட்டத்தைச் சேர்ந்த திருமுல்லைவாயில்.

**நூல்:** சிங்கப்பூர் முருகர் இரட்டைமணிமாலை, சிவபெருமான் நவமணிமாலை. 1141

**கதிர்வேல் புலவர்** (19-நூ)

**வாழ்விடம்:** சாருவாய், ஆத்தனூர்ப்பட்டி. வேளாண் மரபினர்.

இவர் முருகனிடத்தில் மிகுந்த பக்தி உடையவர். செல்வர்களைப் பாடிப் பரிசு பெறுவதைத் தமது தொழிலாகக் கொண்டு இருந்தார்; வசைபாடுவதில் வல்லவராக விளங்கினார்.

இவர் இஸ்மாயில்ராவுத்தர் தம்மைமதித்துப்பரிசு கொடுக்காததால் அவர்மீது வசை பாடத் தொடங்கியதாகவும், அவர் வசைக்குப் பயந்து நன்கொடை வழங்கியதாகவும் கூறுவர். 1142

**கதிர்வேல் முதலியார் தி. அ.** (19-நூ)

**நூல்.** திருவேட்டீஸ்வரர் பதிகம் (1893).

இது பதின்மூன்று செய்யுட்களைக் கொண்டது. திருவேட்டீசுவரரைக் குறித்த புகழ் மாலையாகும். 1143

**கதிர்வேலுப் பிள்ளை** (19-நூ)

**நூல்:** வார்டு கிளைவ் சரித்திரம். 1144

**கதிரித்தம்பியாபிள்ளை க.** (19-நூ)

**ஊர்;** யாழ்ப்பாணம்.

**தந்தை:** கந்தப்பிள்ளை.

**நூல்:** கதிரையாண்டவன் பதிகம். 1145

**கதிரேசச்செட்டியார் மு** (20-நூ)

**ஊர்:** இராமநாதபுரம் மாவட்டம், மகிபாலன்பட்டி;

**தந்தை:** முத்துக்கருப்பன் செட்டியார் **தாய்:** சிகப்பி ஆச்சி;

**வாழ்ந்தகாலம்:** 16—9—1881 – 24—10—1953

இவர் சோழவந்தானூர் மகாவித்துவான் அரசஞ் சண்முகனாரிடம் சிறந்த இலக்கியங்களையும் இலக்கண நூல்களையும் கற்றுத் தேர்ந்தார். வடமொழியினையுங் கற்று அம்மொழிச் சிறப்பினையும் அறிய வேண்டுமென்று எண்ணிய கதிரேசனார், வடமொழிப்புலமை மிக்காராய் விளங்கிய தருவை நாராயண சாத்திரியாரிடம் வடமொழியிலுள்ள காவியங்கள், நாடகங்கள், இலக்கியங்கள், இலக்கணங்கள் முதலியவைகளையும் நன்கு பயின்று தேறினார்.

தென்மொழியையும், வடமொழியையும் கற்றுத் தெளிந்த கதிரேசனார், சைவ சமயப் பெருநூல்களாகிய சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலியவைகளைச் சமய அறிவில் சிறந்து விளங்கிய காரைக்குடி சொக்கலிங்கச் செட்டியார் அவர்களிடம் பயின்று தெளிந்தார்.

பொதுநலத் தொண்டில் தனவைசியச் செல்வர்களின் எண்ணத்தைத் திருப்ப எண்ணி மேலைச் சிவபுரி என்னும் ஊரில் திரு வ. பழ. சா. பழநியப்பச் செட்டியார் அவர்களின் உதவி கொண்டு சன்மார்க்க சபையினை நிறுவினார். அச்சபை கணேசர் செந்தமிழ்க் கல்லூரி என்னும் தமிழ்க் கல்லூரி ஒன்றை நடத்தி வருகின்றது. சன்மார்க்க சபையின் ஆண்டு விழாக்கள் தமிழ் நாட்டில் தலை சிறந்து விளங்கிய புலவர் பெருமக்களின் தலைமையின் கீழ் நடைபெற்றன. ஓர் ஆண்டுவிழாவில் முது பெரும்புலவர் உ. வே. சாமிநாதையர் தலைமையில் கதிரேசனாரின் அறிவுத் திறனையும் தமிழ்த் தொண்டினையும் புகழ்ந்து 'பண்டிதமணி' என்னும் சிறப்புப் பட்டத்தை அவருக்கு வழங்கினர். அது முதல் இவர் 'பண்டிதமணி' என்றே அழைக்கப் பெற்றார்.

பண்டிதமணியவர்கள் 1912ஆம் ஆண்டில் மீனாட்சி ஆச்சியைத் திருமணஞ்செய்துகொண்டார். இவர் சொல்லாற்றலில் சிறந்து விளங்கினார். இவருடைய சொற்பொழிவுகள் கேட்டார்ப் பிணிக்குந்தகையவாய் விளங்கின. தமிழ்நாடு

எங்கனும் உள்ள தமிழ்ப் பெருங்கழகங்கள் இவரை அழைத்து இவருடைய தலைமையிலே தம் ஆண்டுவிழாக்களை நடத்தின. கரந்தைத் தமிழ்ச் சங்கத்திலும் பெரும் பங்கு கொண்டு அதன் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவினார்.

செட்டிநாட்டரசர் பெருங்கொடை வள்ளல் அண்ணாமலைச் செட்டியார், பண்டிதமணியவர்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் தொண்டு புரியுமாறு கேட்டுக் கொண்டார். அண்ணாமலையரசர் விருப்பத்திற்கிணங்கி 1934ஆம் ஆண்டு முதல் 1937ஆம் ஆண்டு வரையிலும் தமிழ் விரிவுரையாளராகவும் பின்னர்த் தமிழ்ப் பேராசிரியராகவும் அமர்ந்து தொண்டு புரிந்தார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் பாடக்குழுவிலும் தேர்வுக் குழுவிலும் உறுப்பினராகவும் தலைவராகவும் அமர்ந்திருந்தார். இராமேச்சுரம் வடமொழிக் கல்லூரியிலும் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் உறுப்பினராக விளங்கினார் சென்னைப் பல்கலைக் கழகத்திலும் திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்திலும் பாடக்குழுவிலும் தேர்வுக்குழுவிலும் உறுப்பினராகவும் தலைவராகவும் இருந்தார் எண்ணற்ற கழகங்களிலும் பேரவைகளிலும் தலைவராக இருந்து தொண்டாற்றினார். குறுந்தொகை மாநாடு இவருடைய தலைமையிலேயே நடைபெற்றது.

பண்டிதமணியின் தொண்டுகளை அறிந்த அரசியலார் இவருக்குப் பட்டம் அளித்துச் சிறப்பிக்க வேண்டும் என்று எண்ணி, 1941ஆம் ஆண்டு மன்னர் பிறந்த நாட் கொண்டாட்டம் நிகழ்ந்தபோது, 'மகாமகோபாத்தியாயர்' என்னும் பட்டத்தினை வழங்கினர்.

பண்டிதமணியவர்கள் ஓய்வு பெற்று நூலாராய்ச்சித் துறையில் இறங்கிய பின், திருவாசகத்திற்கு உரை எழுதும் பணியை மேற்கொண்டார். திருச்சதகம் நூறு பாட்டிற்கும் ஒரு விரிவுரையை எழுதிக் 'கதிர்மணி விளக்கம்' என்றுப் பெயர் கொடுத்து வெளிப்படுத்தினார். பிறகு நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை இரண்டு பகுதிகளுக்கும் உரை எழுதி வெளிப்படுத்தினார்.

பண்டிதமணியவர்கள் தம் எழுபத்துமூன்றும் வயதில் இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

**நூல்:** சுந்தர விநாயகர் பதிகம், வீரவிநாயகர் மாலை, பதிற்றுப் பத்தந்தாதி, மண்ணியற்சிறுதேர், சுக்கிரநீதி, சுலோசனை, உதயணசரிதம், பிரதாபருத்திரீயம், மாலதி மாதவம், உரை நடைக் கோவை, திருவாசகம், திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை உரை, கௌடல்ய மொழி பெயர்ப்பு.

சுந்தரவிநாயகர் பதிகம், வீரவிநாயகர்மாலை, பதிற்றுப் பத்தந்தாதி; இவை பண்டிதமணியவர்கள் இளமைப் பருவத்திலியற்றிய சிறிய செய்யுள் நூல்களாகும்.

மண்ணியற்சிறுதேர்: இது மிருச்சகடிகம் என்னும் வடமொழி நாடகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு நூலாகும். இந்நூல் இடையிடையே செய்யுள் விரவப்பெற்ற உரைநடை நூலாக வடமொழியில் உள்ளது. அதுபோன்றே மொழிபெயர்ப்பு நூலும் இயற்றப் பெற்று உள்ளது. வடமொழியில் தெளிவு குன்றிக் கிடக்கும் சில இடங்களில், இத்தமிழ் நூல் தெளிவு மலிந்து காணப்படுகிறது என்று வடமொழி அறிஞர்கள் பாராட்டியுள்ளனர்.

சுக்கிரநீதி: பொருளைப் பற்றித் தனித்துக் கூறும் நூல்கள் தமிழில் அருமையாக உள்ளன. இக்குறையைப் போக்கப் பண்டிதமணியவர்கள் மொழிபெயர்த்த நூல் இதுவாகும். சுக்கிரன் (வெள்ளி) இயற்றிய ஔசநசம் என்னும் நூலின் பிழிவாகிய சுக்கிரநீதியைத் தமிழ்ப்படுத்தியுள்ளார். திருக்குறளாராய்ச்சிக்குச் சுக்கிரநீதியை உணர்தல் பேருதவி-யாக இருக்கும். சுக்கிரநீதி பெரும்பாலும் அரசியலைப் பற்றியும், ஓரளவு வருணாச்சிரமத்தைப் பற்றியும் கூறுகின்றது. செம்மையான அரசு எவ்வாறு இயங்கவேண்டும் என்பதை வரையறுத்துச் செல்கின்றது இந்நூல்.

சுலோசனை: இது வடமொழி நாடகத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு.

உதயணசரிதம்: இது உதயணசரிதம் என்னும் வடமொழி நூலின் மொழிபெயர்ப்பு. தமிழில் கொங்குவேள் செய்த பெருங்கதை வரலாற்றைத் தெரிவிப்பது.

பிரதாபருத்திரீயம்: இது ஒரு அணியியல். பாட்டுடைத் தலைவன் தலைவி, எதிர்த்தலைவன், எதிர்த்தலைவி இவர்களின் இயல்பு-களையும், காவியம், நாடகம், பிரகரணம் இவற்றின் இலக்கணங்களையும், சுவை மெய்ப்பாட்டிலக்கணங்களையும், ஓரங்கல் நாட்டு அரசனாகிய பிரதாபருத்திரனைத் தலைவனாகக் கொண்டுவித்யாநாதனால் இயற்றப்பெற்ற இலக்கண நூல். இது பண்டிதமணியவர்களால் தமிழில் பெயர்க்கப் பெற்று உள்ளது. ஆனால் அச்சேறவில்லை.

மாலதிமாதவம்: இது பவபூதி வடமொழியிற் செய்த பத்து அங்கங்கள் கொண்ட பிரகரண நாடக நூல். இது தமிழில் பண்டிதமணியவர்களால் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது ஆனால் அச்சேறவில்லை.

உரைநடைக்கோவை: இந்நூல் பத்திரிகை வாயிலாக வெளியிட்ட கட்டுரைகளின் தொகுப்பு. இத்தொகுப்பு இரண்டு பகுதிகளாகவெளியிடப் பெற்றுள்ளது. முதற்பகுதி சமயச் சார்பான கட்டுரைகள். இரண்டாம் பகுதி இலக்கியச் சார்பான கட்டுரைகள்.

கௌடலிய மொழிபெயர்ப்பு: வடமொழியிலே சாணக்கியர் என்னும் பேராசிரியரால் இயற்றப்பெற்ற கௌடலியம் என்னும் பொருள் நூலின் தமிழாக்கம். கௌடலியம் என்னும் பொருள் நூல் பண்டைக் காலப் பரத கண்டத்தின் கண் நிகழ்ந்த அரசியல் வாழ்க்கை முதற்கொண்டு எளியோர் வாழ்க்கை இறுதியாகவுள்ள மக்களது வாழ்வியல்புகளையும், நாட்டு நிகழ்ச்சிகளையும், தன்மை நவிற்சியாக, உள்ளன உள்ளவாறே கூறும் ஒரு சிறந்த நூலாகும். இந்நூலினை மிக விழிப்புடன் ஒரு தவறும் நேராதபடி பண்டிதமணியவர்கள் தமிழாக்கஞ் செய்துள்ளார்கள். 1146

## கதிரைவேல்பிள்ளை (19-நூ)

**ஊர்:** திருக்கோவைமலையிலுள்ள தம்பலகாமம்.

**நூல்:** கோணேசர் பதிகம். 1147

**கதிரைவேல்பிள்ளை, கு. (20-நூ)**

வே பெ: உவைமன் கதிரைவேற்பிள்ளை

ஊர்: யாழ்ப்பாணத்திலுள்ள உடுப்பிட்டி.

தந்தை: குமாரசாமி முதலியார்; வேளாளமரபினர்

வாழ்ந்தகாலம்: கி. பி. 1829-1904.

இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் தேர்ச்சி பெற்றவர்; வழக்கறிஞராகத் தம் பணியினைத் தொடங்கினர். கி. பி. 1863இல் இலங்கைத் தேசாபிமானி என்னும் கிழமை இதழைத் தொடங்கி நடத்திவந்தார். அரசாங்கம் இவரைக் கி. பி. 1872இல் ஊர் காவல்துறை நீதிபதியாக நியமித்தது பின்ன யாழ்ப்பாணத்தின் உயர்நீதி மன்ற நீதிபதியாகவும் பணிபுரிந்தார்.

நூல்: கதிரைவேற்பிள்ளைத் தமிழ் அகராதி, தர்க்கபரிபாஷை.

கதிரைவேற்பிள்ளைத் தமிழ் அகராதி: சுன்னாகம் அ. குமாரசாமிப்புலவர். உடுப்பிட்டி ஆறுமுகம்பிள்ளை ஆகியோர் துணையுடன் கதிரைவேற்பிள்ளை இவ்வகராதி வேலையைத் தொடங்கினர். இவர் காலத்தில் இவ்வகராதி தகரவர்க்கம் வரையிலுமே முடிந்திருந்தது எஞ்சிய பகுதியை இவர் மகன் கௌரவ க. பாலசிங்கம் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் துணை கொண்டு முடித்து வெளியிடும்படி செய்தார்.

தர்க்கபரிபாஷை: இந்நூல் கதிரைவேல் பிள்ளையால் செப்பஞ் செய்து வெளிடப் பெற்றது. 1148

**கதிரைவேல்பிள்ளை, நா. (20-நூ)**

ஊர்: யாழ்ப்பாணத்திலுள்ள புலோலியூர்.

தந்தை: நாகப்பிள்ளை.

வாழ்ந்தகாலம்: கி பி. 1844-1907.

இவர் சென்னையிலிருந்த தி. க. கனகசுந்தரம் பிள்ளையிடம் தமிழ் பயின்றார். வடமொழியிலும் பயிற்சி உடையவர்.

இவர் வேப்பேரி உயர்நிலைப்பள்ளி ஒன்றிலும், மைலாப்பூர் செயின்ட் தோம் உயர்நிலைப்பள்ளியிலும் தமிழாசிரியராகப்

பணியாற்றினார். இவருடைய மாணவர்களுள் குறிப்பிடத் தக்கவர் திரு வி. கலியாணசுந்தர முதலியாராவர்.

வேதாந்த நூற்கொள்கைகளைக் கண்டித்துப் பல சொற்பொழிவுகள் செய்தபடியால் 'மாயாவாத தும்சகோளரி' என்னும் பட்டத்தைப் பெற்றார். இவர் ஆரணி சமத்தானத்தின் புலவராக விளங்கியபோது 'அத்துவித சித்தாந்த மகோத் தாரணர்' என்னும் பட்டத்தைப் பெற்றார். ஆறுமுக-நாவலருக்கும் வள்ளலார் இராமலிங்க அடிகளுக்கும் திருவருட்பா-மருட்பா வழக்கு நடந்தபோது இவர் மருட்பா மறுப்பு என்னும் நூலினை எழுதினார்.

நூல்: கூர்மபுராண விரிவுரை, பழநித்தலபுராண விரிவுரை, சைவசந்திரிகை, சைவசித்தாந்தச்சுருக்கம், சிவாலய மகோற்சவ விளக்கம், சுப்பிரமணியபராக்கிரமம், கருவூர் மான்மியம், புத்தமத கண்டனம், மருட்பாமறுப்பு, தமிழ்ப் பேரகராதி, யாழ்ப்பாண அகராதி, ஏகாதசிப்புராணம், நைடதவுரை. 1149

### கந்தசாமி அடிகள் (19-நூ)

ஊர்: கோயம்புத்தூரை அடுத்த கணபதியூர்.

தந்தை: வேங்கடரமணக் கவுண்டர்; தாய்: குட்டியம்மையார். கங்காகுலம் என்னும் கவுண்டர் குலம். சிரவணபுரம் கௌமார மடாலயத்தை நிறுவிய இராமாநந்த அடிகள் என்னும் பெரியார் இவர் தந்தையாருடன் பிறந்தவர். பிறப்பு: 1892.

ஆங்கிலப் பால பாடத்துடன் இவரது பள்ளிக் கல்வி முடிந்தது; பெற்றோரும் காலமாயினர். எனினும் இவர் திருக்குறள், திருத்தொண்டர் புராணம், தேவாரம் முதலிய நூல்களைக் கற்று அவைகளில் சிறந்த புலமை பெற்றார். இந் நிலையில் இராமாநந்த அடிகளிடம் அடிக்கடி சென்று பழகும் நிலை ஏற்பட்டதால், இவரது உள்ளம் துறவு நிலையை மேற் கொண்டது. இராமாநந்த அடிகள் இவருக்கு ஆறெழுத்தரு மறையை அருளினார். அதுமுதல் இவர் தவவாழ்க்கையை மேற்கொண்டார். இவருக்குத் துறவுக் கோலத்தை அருளிய

இராமாநந்த அடிகள், தமக்குப்பின் தமது கௌமார மடாலயத்தைப்பாதுகாக்கும் தலைமைப்பதவியையும் அளித்தார்.

இதன் பின்னர் இவர் மலையாள மொழிப் பயிற்சியும், வட மொழிப் பயிற்சியும் பெற்றூர். மலையாள மொழியில் இருந்த 'பக்தமாலா' என்னும் நூலைத் தமிழில் மொழிபெயர்த்துப் 'பக்த மான்மியம்' என்னும் பெயருடன் பாடி முடித்தார்.

இவர் நூல் இயற்றும் பணியோடு, அன்பர்களுக்கு நல்லுரை வழங்குவதையும், கல்வி கற்பிப்பதையும் மேற்கொண்டு இருந்தார். செய்யுள்இயற்றும் ஆற்றல்பெற்ற இவர் பதினைன்காயிரத்திற்கும் மேற்பட்ட செய்யுட்களை இயற்றி உள்ளார்.

**நூல்:** 'பக்தமான்மியம், சங்கராச்சாரியார் வைபவம். பேரூர்க் கலம்பகம், பேரூர்க்கோவை, காரமடைத்தலபுராணம், அன்னியூர்த் தலபுராணம், கௌசைத் தலபுராணம், பேரூர் பச்சை நாயகி பிள்ளைத் தமிழ். பேரூர் சாந்தலிங்கர் பிள்ளைத் தமிழ், இராமாநந்தர் பிள்ளைத்தமிழ், சிரவை முருகன் பிள்ளைத் தமிழ், பத்திராசலம் இராமர் பிள்ளைத் தமிழ், குருந்தமலை முருகன் பிள்ளைத் தமிழ், திருவஞ்சைக் களம் பிரபந்தங்கள், பழநிமலைப் பிரபந்தங்கள், அவிநாசிப் பிரபந்தத் திரட்டு, மருதமலைப் பிரபந்தத் திரட்டு, இரத்திஞசலப் பிரபந்தம், வண்ணத்திரட்டு, திருப்புகழ்த் திரட்டு, முருகன் ஏகபாத அந்தாதி, விநாயகர் யமக அந்தாதி. 1150

## கந்தசாமி உபாத்தியாயர், ந. (19-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள குறிச்சி.

**தந்தை:** அட்டாவதானி நயினர்ப்பிள்ளை.

இவர் தன் தந்தையாரிடமே கல்வி கற்றுப் புலமை பெற்றூர். பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துப் பலருக்கும் கல்வி கற்பிக்கும் பணியை மேற்கொண்டார். விட்டிலாபுரத் தலபுராணம் பாடிய இளையபெருமாள் பிள்ளை இவரிடம் கல்வி கற்றவர் ஆவர்.

**நூல்:** விட்டிலாபுரத் தலபுராணத்தைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம். 1151

## கந்தசாமி ஐயர் (20-நூ)

**தந்தை.** திருத்தணிகைச் சரவணப்பெருமாள் ஐயர்.

**நூல்:** நைடதஉரை; இவ்வுரையினை இவரும் இவரது தந்தையாரும் எழுதியுள்ளனர். 1152

## கந்தசாமி ஐயர் ச. (20-நூ)

**ஊர்:** சோழ நாட்டில் வேதாரணியம் என்று இந்நாளில் வழங்கும் திருமறைக் காட்டிற்கு மூன்று கல் தொலைவில் உள்ள தேத்தாகுடி.

**தந்தை:** சரவணமுத்து ஐயர்;

**வாழ்ந்த காலம்:** 19-ஆம் நூற்றுண்டின் இறுதி 20-ஆம் நூற்றுண்டின் முற்பகுதி.

**மறைவு:** 1945.

**நூல்:** மதனபிடேகம், நாகம்மாள் வைத்தியநாத சர்மாவின் பெயரை அமைத்து நடுவெழுத்தலங்காரப் பாடல், தோத்திரத் திரட்டு, தனிப்பாடல்கள்.

மதனபிடேகம்: ராமகூளப்ப நாய்க்கன் காதல் என்னும் விறலிவிடு தூதுக் கதையைத் தழுவி எழுதப்பட்ட புனைகதை. நாகம்மாள் ஒரு புதினம். தோத்திரத்திரட்டு, என்னும் நூல் திருமுறைக் காட்டிற்கு மேற்கே ஏழு கல் தொலைவில் உள்ள பஞ்சநதிக் குளம் ஊரில் கோயில் கொண்டுள்ள மாரியம்மன் மீது இயற்றப்பெற்றது. 1153

## கந்தசாமிக் கவிஞர்

**நூல்:** திருவாப்பனூர் மான்மியம். இந்நூல் திருவாப்புடையார் கோயில் என வழங்கப்படும் திருவாப்பனூர் தலத்தின் சிறப்பை உரைப்பது. 14 சருக்கங்களைக் கொண்டது. 1154

## கந்தசாமிக் கவிராசர், க. தி. (19-நூ)

**ஊர்:** தொண்டைநாட்டில் உள்ள கொரைஞ்ஞர்.

திருமயிலை ஆ அண்ணுசாமிக் கவிராசர் என்பவரிடம் கல்வி கற்றவர். சித்திரகவி இயற்றுவதில் வல்லவர் ஆகையால், இவர் சித்திரகவி கந்தசாமிக் கவிராசர் என்றும் அழைக்கப் பெற்ருர்.

**நூல்:** திருவொற்றியூர் வெண்பா 100 வெண்பாக்கள். 1155

## கந்தசாமிக் கவிராயர்–1 (19-நூ)

**நூல்:** மகோபகார விளக்கம் (1898). இந்நூல் 22 செய்யுட்களைக் கொண்டது; ஞானசித்த முனிவன் நடத்தும் புவனும்பிகையின் பன்னிரண்டாம் யாகம் நிறைவேறும் பொருட்டு, முன் நின்று பொருளுதவிய மலையாண்டிசாமி வள்ளலின் உதவிச் சிறப்பைக் குறித்துப் பாடப்பெற்றது. 1156

## கந்தசாமிக் கவிராயர்-2 (20-நூ)

**நூல்:** சொக்கேசர் மாலை (1901). 1157

## கந்தசாமிக் கவிராயர்–3 (20-நூ)

**ஊர்:** உடுமலைப் பேட்டை.

**நூல்:** கம்பராமாயணம் ஆரணிய காண்ட உரை, அரசன் சண்முகனர் இயற்றிய 'மாலை மாற்று மாலை' என்னும் நூலுக்கு உரை, அரிமழத்தலபுராணம். 1158

## கந்தசாமிக் கவிராயர்-4 (19-நூ)

**ஊர்:** கொங்குநாட்டில் உள்ள வடவழி.

இவர், ஒரு கண் பார்வையில்லாமல் இருந்தார். இவர் காலத்தில் வாழ்ந்த இராசகோபாலப் புலவர் என்பாரை இகழ்ந்தமையால் அப்புலவர் இவருக்கு மற்ருெரு கண்ணும் தெரியாமல் போகும்படி சாபமிட்டார் என்றும், அதனுல் இவருக்கு மற்ருெரு கண்பார்வையும் இல்லாமல் போய் விட்டது என்றும், பின்னர்க் கந்தசாமிக் கவிராயர் தன் பிழையினை உணர்ந்து, இராசகோபாலப் புலவரின் வாழ்க்கை வரலாற்றுச் செய்திகளை அமைத்து 'ஓர் அதிசய நாடகம்' என்னும் நாடக நூலைப் பாடி, அப்புலவரைக் கண்டார். புலவர்

மனமிரங்கிக் கவிராயரை மன்னித்து இவருக்குத் திரும்பவும் பார்வை கிடைக்குமாறு செய்தார் என்பர்.

நூல்: ஓர் அதிசய நாடகம். 1159

## கந்தசாமிக் கவிராயர்-5 (19-நூ)

இவர் திருவாவடுதுறை ஆதீனப் புலவராக இருந்தார்.

நூல்: கச்சிரங்கப்ப உடையார் கோவை. இந்நூல், உடையார் பாளையம் பெருநிலக்கிழார் கச்சிரங்கப்ப உடையார்மீது பாடப் பெற்றது. இந்நூலைப்பாடிச் சிறப்பித்தமைக்காக, நிலக்கிழார் பத்துக்காணி நிலத்தைப் புலவருக்குப் பரிசாக அளித்தார். 1160

## கந்தசாமிக் கவிராயர்-6 (20-நூ)

இவர் கொங்குநாட்டுப் புலவர்.

நூல்: வேதநாயகியம்மன் பிள்ளைத் தமிழ். 1161

## கந்தசாமிக் கவிராயர் சி. (20-நூ)

ஊர்: தாராபுரத்திற்கு அருகில் உள்ள வீராட்சி மங்கலம்.

தந்தை: சின்னக் கறுப்பண்ணக் கவிராயர்.

நூல்: வேளாளர் புராணம். 1162

## கந்தசாமிக் கவிராயர் மு.ரா. (20-நூ)

ஊர்: சேற்றூருக்கு அண்மையிலுள்ள முகவூர்.

தந்தை: மு. இராமசாமிக் கவிராயர்.

வாழ்ந்தகாலம்: கி. பி. 1869-1918.

இவர் தமையன்மார்கள் அருணாசலக் கவிராயர், சுப்பிரமணியக் கவிராயர் ஆகியோர் ஆவர். இவர் இளமையில் தம் தந்தையாரிடமும், பின்னர்த் திருவாவடுதுறை ஆதீனத்து நமச்சிவாயத் தம்பிரானிடத்திலும் கல்வி கற்றார். உடுமலைப் பேட்டை மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளியில் பத்து ஆண்டுகள் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றினார். பின்னர்

மதுரையில் விவேகபானு என்னும் அச்சகத்தை நிறுவி விவேக பானு என்னும் இதழை வெளியிட்டார். மேலும் பல நூல்கள் அவ் அச்சகத்தின் மூலம் வெளியிடப்பட்டதாகத் தெரிகிறது. இவர் காலத்தில் சிறந்த வள்ளலாக விளங்கிய முறையூர் பழ. சி. சண்முகம் செட்டியார் இவரை ஆதரித்தார். அவருடைய வேண்டுகோளுக்கு ஏற்ப இவர் 'தனிச் செய்யுட் சிந்தாமணி' என்னும் நூலைத் தொகுத்தார். அந்நூல் 3815 செய்யுட்களைக் கொண்டது. இவற்றுள் 3036 செய்யுட்-கள் இவர் காலத்திற்கு முன்பு வாழ்ந்த 159 புலவர்களால் பாடப் பெற்றவை. எஞ்சிய 779 பாடல்கள் இவர் காலத்தில் வாழ்ந்த 23 புலவர்களால் பாடப்பெற்றவை. இப்பாடல்களை இவர் முதல் தொகுதியாக வெளியிட்டுள்ளார். மேலும் பல புலவர்களுடைய பாடல்களையெல்லாம் தொகுத்து இரண்டாம் தொகுதியாக வெளியிட இருந்தார். ஆனால் அது வெளிவரவில்லை இவர் செட்டிநாட்டில் பல ஊர்களுக்குச்-சென்று, சொற்பொழிவுகள் செய்து வந்தார்.

நூல்: வியாசத்திரட்டு, தனிச்செய்யுட்சிந்தாமணி (இரண்டு பாகம்), திருப்பேரூர்த் திரிபந்தாதி, பவாநி வேதநாயகியம்மை பிள்ளைத் தமிழ், கருணையாண்டவர் துதிமஞ்சரி, குமணசரித்திரம், அரிமழத்தலபுராணம், கம்பராமாயண ஆரணிய காண்டவுரை. 1163

## கந்தசாமிக் குருக்களய்யா (19-நூ)

ஊர்: அத்தான நல்லூர்.

நூல்: அ. சங்கரநாராயணபிள்ளை என்பவர் இயற்றிய 'திருத் தொண்டர் ஆநந்தக் களிப்பு' என்னும் இசை நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம். 1164

## கந்தசாமிச் சாமிகள் (19-நூ)

இவர் கொங்கு நாட்டில் உள்ள சிரவணன்பட்டி மடத்தைச் சேர்ந்தவர்.

நூல்: கௌசைப் புராணம். 1165

### கந்தசாமி தேசிகர் (19-நூ)

சி. பெ. சித்தாந்தரத்னுகரம்.

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் மாயூரம் கூறைநாடு.

இவர் இலக்கண இலக்கியப் பயிற்சியிலும், சைவசித்தாந்தப் பயிற்சியிலும் சிறந்து விளங்கினுர். தியாகராச தேசிகர் என்பவர் இவருடைய மகனுர் ஆவார்.

நூல்: பெற்ருன் சாம்பான் சரித்திரக் கீர்த்தனம். 1166

### கந்தசாமிப்பிள்ளை, 1 (19-நூ)

ஊர்: சேலம்.

நூல்: திருநெய்த்தான இளங்கோவையம்மன் பதிகம் (1888). இந்நூல் 10 செய்யுட்களைக் கொண்டது; நாமக்கல் காங்கேயம்பிள்ளை என்பவரால் அச்சிடப்பெற்றுள்ளது. 1167

### கந்தசாமிப்பிள்ளை, 2 (19-நூ)

ஊர்: திரிசிரபுரம்.

நூல்: நளச்சக்கரவர்த்தி கதை (1874).

இந்நூல் நளனது வரலாற்றினைக் கூறுவதாகும். இந்நூலினைச் சரவணபுரம் சண்முக முதலியார் பார்வையிட்டுப் பதிப்பித்துள்ளார். 16 அத்தியாயங்களைக் கொண்டது. இந்நூல் உரையில் அமைந்தது. 1168

### கந்தசாமிப்பிள்ளை, 3 (20-நூ)

ஊர்: பாலைக்காடு.

நூல்: பாலசுப்பிரமணியக் கவிராயர் என்பவர் செய்த பழநித்தல புராணத்தின் வசன நடை. 1169

### கந்தசாமிப்பிள்ளை ஆ. (19-நூ)

ஊர்: மதுரை.

நூல்: அல்லி அரசாணி நாடகம். 1170

**கந்தசாமிப்பிள்ளை இ.** (19-நூ)

**ஊர்:** மதுரை.

இவருடைய ஆசிரியர் சிவானந்தசாமி.

**நூல்:** பிள்ளையார், முருகன், திருமால் முதலிய கடவுளர்கள் மீது பாடிய இசைப்பாடல்கள், முருகன் மீது சடாட்சரக் கண்ணி.

1171

**கந்தசாமிப்பிள்ளை கு.** (20-நூ)

**ஊர்:** தொண்டைநாட்டில் அத்தி.

**தந்தை:** குப்பையபிள்ளை. **தாய்:** பூங்களியம்மாள்.

**வாழ்ந்தகாலம்:** கி. பி. 1750 - 1920.

இவர் காஞ்சிபுரம் பிரிவு பெருநகரில், சூரியநாராயணப் பிள்ளை என்பவருடைய மகள், கமலம்மாள் என்பவரை மணந்து அவ்வூரிலேயே கணக்கராகத் தொழில் புரிந்தார். தம் இளமைப் பருவத்தில் தந்தையாரிடமே தமிழ் நூல்களைக் கற்றார். திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயம் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகளிடம் சில நூல்களைப் படித்தார். பெருநகர் சுப்பராய முதலியார், துரைப்பாடிப் புலவர் தெய்வசிகாமணிப் பிள்ளை முதலியோரிடம் தமிழ் ஆய்வில் ஈடுபட்டுப் புலமை பெற்றார். நூலியற்றும் திறமும் பெற்றார். சிறந்த பக்தியாளராக விளங்கிய இவர், பெருநகரிலுள்ள ஒவ்வொரு இறைவன் மீதும் ஒவ்வொரு பஞ்சரத்தினம் பாடியுள்ளார்.

**நூல்:** முருகர் சித்திர வெண்பாமாலை, காஞ்சி அத்திகிரி அந்தாதி, கேதாரவிரதம், பிரமநகர் சங்கரவிநாயகர் பஞ்சரத்தினம், பிரமநகர் சண்முகசுவாமி பஞ்சரத்தினம், பிரமநகர் பிரமகூடீஸ்வரர் பதிகம், பிரமநகர் பட்டுவதனம்பாள் பதிகம், பிரமநகர் நடேச பஞ்சரத்தினம், பிரமநகர் களரொளி மாரியம்மன் பதிகம்.

1172

**கந்தசாமிப்பிள்ளை ச. மு.** (20-நூ)

**நூல்:** அருட்பிரகாசவள்ளலார் திவ்ய பதார்ச்சனைக் கீர்த்தனை.

1173

**கந்தசாமிப் பிள்ளை தூ. ந., (19-நூ)**

**ஊர்:** விருதுப்பட்டி,

இவர் சந்தப் பாடல்கள் பாடுவதில் வல்லவர்.

**நூல்:** திருச்செந்தூர் முருகக் கடவுள் பேரில்தோத்திரப் பாமாலை (1889.) இந்நூல் மு. ரா. அருணசலக் கவிராயர் என்பவரால் அச்சிடப்பெற்றது. 4 4 4 செய்யுட்களைக் கொண்டது; திருச்செந்தூர் முருகன் துதியான பல பதிகங்கள் இந்நூலில் உள்ளன; ஒரு சில குறிக்கோள்களை வேண்டிப் பாடிய பாடல்களும் உள்ளன. 1174

**கந்தசாமிப் பிள்ளை ந. (20-நூ)**

**நூல்:** புகழ்பெறந்தாதி (1896.)

இந்நூல் வசவலிங்க பௌராணிகரால் பதிப்பிக்கப்பட்டது. 1175

**கந்தசாமிப்பிள்ளை மு. (19-நூ)**

**ஊர்:** திண்டுக்கல். இவர் 'ஞானரத்தினகரம்' என்னும் ஓர் அச்சகத்தின் மூலம் நூல்கள் பல வெளியிட்டுள்ளார்.

**நூல்:** திருவாடுதுறை அம்பலவாண தேசிகருக்கு முப்பத்தொரு பாடல் சேர் விண்ணப்பம். 1176

**கந்தசாமிப்பிள்ளை, வெ. ரா. (20-நூ)**

**ஊர்:** உடுமலைப்பேட்டை.

**நூல்:** கர்ணாமிருதம் 1177

**கந்தசாமிப் புலவர் 1. (19-நூ)**

**நூல்:** சோமசுந்தரப்பெருமான்மீது அந்தாதி. ஆர்க்காடு முத்துக் கிருட்டிண முதலியார் என்பவரது மகன் சுப்பராய முதலியார் என்பவர் விரும்பியபடி, முத்துக்கிருட்டிணபுரத்தில் எழுந்தருளி-யுள்ள சோமசுந்தரப்பெருமான்மீது பாடப்பெற்றதுஇந்நூல். 1178

## கந்தசாமிப் புலவர்-2. (19-நூ)

**நூல்:** தரு நூல், மிருதிசந்திரிகை, விவகாரசங்கிரதம். 1179

## கந்தசாமிப்புலவர்-3 (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் சங்கரநயினர் கோயிற் பிரிவை சேர்ந்த செவற்குளம்.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1849-1922.

இவர் தோன்றிய குடும்பம் வழிமுறை வழிமுறையாகப் புலவர்கள் நிறைந்த குடும்பம். எட்டயபுரம் எட்டப்ப மன்னரது அவைக்களப் புவவராக இருந்த, முத்துவீரப்பக் கவிராயர் என்பவர் இவரது தந்தையார் என்றும், பாட்டனர் என்றும் கூறுவர்.

கந்தசாமிப்புலவர் இளமையிலேயே கல்வி நலம் வாய்க்கப் பெற்றார். இளமைப்பருவத்தில் சுப்பிராய் பாகவதர் என்பவரிடம் இசைப்பயிற்சி பெற்றார். இவர் சரிவலம் வந்த நல்லூரில் வாழ்ந்த கணிகையர் குலப் பெண்ணை பொன்னம்மாள் என்பவருக்கு இசை கற்பித்தபோது, சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியாரின் தொடர்பு ஏற்பட்டது. அவ் அண்ணாமலை ரெட்டியார் இவரது இசை இனிமையில் ஈடுபட்டு, புகழ்ச்சிப் பாடல் ஒன்று பாடியுள்ளார்.

இவர் முருகக் கடவுளிடம் நீங்காத அன்புடையவர்; அடிக்கடி கழுகுமலை போன்ற இடங்களுக்குச் சென்றுவரும் போது, இசைப்பாடல்கள் பாடி முருகனை வணங்கி வருவார். இவர் ஊற்றுமலை சமத்தானத்தில் அவைக்களப் புலவராகவும் விளங்கினார். ஊற்றுமலையில் இவர் தங்கியிருந்த காலத்தில் வீரகேரளம் புதூர் நவநீத கிருட்டிணன் மீது தூதுக் கண்ணி என்னும் நூல் ஒன்று இயற்றியுள்ளார். மேலும் ஊற்றுமலை மன்னர்மீது சொல் நயம், பொருள்நயம் மிக்க தனிப்பாடல்கள் பலவும் பாடியுள்ளார். இவர் இசை வகுத்த முறையிலேயே அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச் சிந்து இயற்றப்பட்டது என்பர்.

ஊற்றுமலே மன்னர் இறந்தபோது இவர் பாடிய இரங்கற் பாக்கள் உள்ளம் உருக்குவனவாகும். ஊற்றுமலே மன்னர் இறந்த பிறகு இவர் வீரகேரளம் புதூரை விடுத்துத் தம்முடைய சொந்த ஊருக்கு வந்து சேர்ந்தார். சேற்றூர், சிவகிரி, தலேவனூர்கோட்டை, அளகாபுரி, கொல்லங்கொண்டான் முதலிய இடங்களில் வாழ்ந்திருந்த பெருநிலக்கிழார்களேப் பாடிப் பரிசு பெற்று வாழ்ந்தார். புளியங்குடி முத்துவீரக் கவிராயர் என்பவர் இயற்றிய சங்கரநயினுர் கோயில் புராணத்திற்குச் சிறப்புக் கவிகள் அளித்துள்ளார்.

இசைத்தமிழிலும், இயற்றமிழிலும் புலமை மிக்க இவர், கடவுளர் மீது பாடிய 13 கீர்த்தனங்களும், தம்மை ஆதரித்த வள்ளல்கள் மீது பாடிய சுரகிருதிகள் நான்கும் 1945ஆம் ஆண்டில் அச்சாகி வெளிவந்துள்ளன.

**நூல்:** தூதுக் கண்ணி, தனிப்பாடல்கள். 1180

## கந்தசாமிப் புலவர்-4 (18-நூ)

**ஊர்:** இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள திருப்பூவணம்,

கீழக்கரையிலிருந்த வள்ளல் சீதக்காதியினுல் ஆதரிக்கப் பெற்ற இவர், திரிபு, மடக்கு,முதலியன பாடுவதில் வல்லவர்.

**நூல்:** திருப்பூவண உலா; திருப்பூவணப் புராணம், திருவாப்பனூர்ப் புராணம் என்பன, புஷ்பவனநாதர் வண்ணம், திருப்பூவணத் தல வகுப்பு, கீர்த்திவகுப்பு, மூர்த்திவகுப்பு முதலியவற்றையும் இவர் இயற்றினர் என்பர்.

திருப்பூவண புராணம் 1437 செய்யுட்களேக் கொண்டது; 7 சருக்கங்களும் அவைகளுடன் 20 பகுதிகளும் உள்ளன. இப் புராணம் இவரால் பாடப்பட்டதன்று என்றும் சிலர் கூறுவர்

திருவாப்பனூர் புராணம், மதுரையை அடுத்த ஆப்பனூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானேப் பற்றியது. 18 சருக்கங்களேயும் 515 விருத்தப்பாக்களேயும் உடையது,

'திருப்பூவண உலா' 469 கண்ணிகளால் ஆகியது. இவ் உலாவில் சிவகங்கையை ஆண்ட முத்துவடுகநாத துரை, திருக்கண்ணி இராசேந்திரன் ஆகியோர்களுடைய திருப் பணிகள் பாராட்டப் பெற்றுள்ளன. 1181

## கந்தசாமிப்புலவர்- 5 (18-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் உள்ள முத்தாலக்குறிச்சி. ஈழுவர் குலம்

இவர் இளமைப் பருவத்திலேயே நன்கு கல்வி கற்றார். பெரியார் ஒருவரிடம் திருமுருகனுடைய ஆறெழுத்து மறையைப் பெற்றார். தம் வாழ்க்கையை நடத்தத் தம் இனத்தாரில் செல்வராக விளங்கிய ஒருவர் வீட்டில் நெசவுத் தொழிலே மேற் கொண்டார். பின்னர் அச் செல்வரின் புதல்வியின் அழகில் மயக்கம் கொண்டு செய்யுள் ஒன்று பாடியதாகவும், இதனை அறிந்த அச்செல்வர் கோபமடைந்து, அவரைத் தம்இல்லத்திலிருந்து வெளியேற்றியதாகவும், அதன் பின்னர் இவரது சிறப்பை அறிந்து தன் மகளையே திருமணம் செய்து கொடுத்ததாகவும் கூறுவர். இவருடைய வசைப்பாடல்களுக்கு அஞ்சிச் செல்வர்கள் சிறப்புச் செய்ததாகவும் கூறுவர்.

**நூல்:** *சீதக்காதி* நொண்டி நாடகம், *திருச்செந்தூர்* நொண்டி நாடகம். இந்நூல்களுள் *சீதக்காதி* நொண்டி நாடகம், *சீதக்காதி* வள்ளலின் வள்ளன்மையைப் புகழ்ந்து கூறுவது. *திருச்செந்தூர்* நொண்டி நாடகம் *திருச்செந்தூர்* முருகக்கடவுள் மீது இயற்றப்பெற்றது,

திருப்புகலூர் அக்னீசுரர் எச்சரிக்கை. பதினறு கலே வண்ண விருத்தம் என்னும் நூல்களும் இவரால் பாடப்பெற்றன என்று கருதுவர். 1182

## கந்தசாமிப் புலவர்-6 (19-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் உள்ள பெருநாழி

**நூல்:** இராமலிங்கம்பிள்ளை என்பவர் இயற்றிய 'கந்தபுராண வண்ணம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம். 1183

### கந்தசாமிப் புலவர் சு (20-நூ)

**ஊர்:** கோட்டையூர்

**நூல்:** புளியங்குடி என்னும் ஊரினைச் சேர்ந்த க. அருணசல ஆச்சாரி என்பவர் இயற்றிய முருகப் பெருமான் மீதான வண்ணமஞ்சரி முதலான நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம். 1184

### கந்தசாமிப் புலவர் தி. (20-நூ)

இவர் ஊற்று மலை சமத்தானப்புலவர்களில் ஒருவர்.

**நூல்:** வடபழநிவண்ணமஞ்சரி. இந்நூல் திருமழிசை ஏகாம்பர முதலியார் வேண்டிக்கொள்ள வடபழநி முருகன்மீது பாடப்பெற்றது. 30 வண்ணப் பாடல்களைக் கொண்டது. 1185

### கந்தசாமி முதலியார் 1 (20-நூ )

**நூல்:** திருப்போரூர்க் கிள்ளை விடு தூது. 1186

### கந்தசாமி முதலியார் 2 (19-நூ)

**ஊர்:** களத்தூர்

**நூல்:** ஸ்ரீராமர் சீதா தேவி வனவாசம் (1871). இந்நூல் செய்யுள் நடையில் 173 பக்கங்களில் அமைந்தது. முன்ஞேர் இயற்றிய இராமாயண வசன காவியத்தை, அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும் பொருட்டு, நகைச்சுவையுடன் பெண்பாலருக்கும் பயன்படும்படி அம்மானையாக இயற்றப்பெற்றது. இந்நூலினை அ. வீராசாமி நாயுடு என்பவர் அச்சிட்டுள்ளார். 1187

### கந்தசாமி முதலியார்-3 (20-நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்

**நூல்:** காஞ்சிபுரம் ஆறுமுகநாயகர் என்பவர் இயற்றிய 'வருண தருப்பணம்' என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்பு பாயிரம். 1188

## கந்தசாமி முதலியார்-4 (20-நூ)

**ஊர்:** கோயம்புத்தூர்

இவர் கோயம்புத்தூரில் வழக்கறிஞராக இருந்தவர்

**நூல்:** கோயம்புத்தூர் கோட்டைச் சண்முக நாதர் பதிகம், கோயம்புத்தூர் வெள்ளைவிநாயகர் பதிகம், திருநாவுக்கரசு நாயனார் வெண்பாமாலை, நந்தியெம்பெருமான் தோத்திரம், பழநிமலை நாதர் உயிர்வருக்கமாலை, பேரூர் மும்மணிக்கோவை.

கோயமுத்தூர் - கோட்டைச் சண்முக நாதர் பதிகம் (1881). 11 செய்யுட்களைக் கொண்டது. கோயம்புத்தூரினை அடுத்த கோட்டையில் எழுந்தருளியிருக்கும் சண்முகநாதனைப் புகழ்ந்து பாடுவது.

கோயம்புத்தூர் வெள்ளைவிநாயகர் பதிகம் 10 செய்யுட்களைக் கொண்டது விநாயகரைக் குறித்த பதிகப் பாமாலையாகும். இந் நூலுடன் பழநிமலைநாதர் உயிர்வருக்கமாலை, நந்தியெம்பெருமான் தோத்திரம் ஆகிய நூற்களும் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

திருநாவுக்கரசு நாயனார் வெண்பாமாலை (1882) 32 செய்யுட்களை உடையது; திருநாவுக்கரசு நாயனாரைக் குறித்த வழிபாட்டுப் பாடல்களைக் கொண்டது

நந்தியெம்பெருமான் தோத்திரம் (1884). 10 செய்யுட்களைக் கொண்டது. இந்நூலில் உள்ள பாக்கள் நந்தியெம்பெருமானைக் குறித்துப் பாடப்பெற்றவை.

பேரூர்மும்மணிக் கோவை; 30 செய்யுட்களைக் கொண்டது. வெண்பா, கலித்துறை, அகவல் ஆகிய மூன்று பாக்களும் கொத்துக் கொத்தாக மாறி மாறி வர, பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. மேலைச்சிதம்பரம் என்னும் திருப்பேரூரில் எழுந்தருளியுள்ள பெருமானைப்பற்றிய துதிப் பாடல்கள் இவையாகும். 1189

## கந்தசாமி முதலியார்-5 (20-நூ)

**ஊர்:** மோரூர்.

வாழ்விடம்: சென்னை.

தந்தை: பொன்னம்பல முதலியார்; தாய் உண்ணுமலையம்மை.

வாழ்ந்தகாலம்: கி. பி. 1887 - 1945.

இவர் சென்னை தொண்டைமண்டலம் துளுவ வேளாளர் பள்ளியில் கல்வி பயின்றார். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் ஒரு பகுதியை முடித்து, சென்னை அரசாங்க கணக்குத் துறைத்தலைவர் அலுவலகத்தில் எழுத்தராகப் பணி-யாற்றினார். தனியாகப் படித்து பி. ஏ. தேர்வு பெற்றார் பூவை கலியாண சுந்தர முதலியார், திருமணம் செல்வ கேசவராய முதலியார் ஆகியோரிடம் கல்வி கற்றார். பேராசிரியர் தி. த. கனகசுந்தரம் பிள்ளையும இவரது தமிழறிவை வளர்த்தார். இராமலிங்கத்தம்பிரானிடம் காஞ்சிப்புராணத்தைப் பாடம் கேட்டார். 1918 ஆம் ஆண்டில் பச்சையப்பன் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணி ஆற்றினார் 1922 ஆம் ஆண்டு முதல் பல தவணைகளில் சென்னை உயர்நீதி மன்றத்தீர்ப்பு முறைக் கூட்டத்தினில் ஒருவராக இருந்தார். 1924 ஆம் ஆண்டில் இவருடைய மேற்பார்வையில் திருவருள் பதிப்பு ஒன்று வெளியாயிற்று. 1931 - 35 ஆம் ஆண்டுவரை சென்னை அரசாங்கக் கல்லூரிப்பாடப் புத்தகக் குழுவில் ஒருவராக அமர்ந்தார்.

நூல்: மோசூர் ஆவடிப்பிள்ளையார் புகழ்பத்து, கச்சிக்கலம்பகம் உரை, திருவாமாத்தூர்க் கலம்பகம்-உரை, புல்லிருக்குவேளூர் கலம்பகம்-உரை, திருவொற்றியூர்க் கலம்பகம்-உரை, ஏகாம்பரநாதர் உலா-உரை, சந்தானகுரவர் நான்மணி-மாலை உரை மகிழ்வார் கலம்பகம் உரை. 1190

கந்தசாமி முதலியார் ச. (20-நூ)

நூல்: காரியசித்தியின் இரகசியம் (1923.) 1191

கந்தசாமி முதலியார் சே. (20-நூ)

ஊர்: தொண்டை மண்டலத்தினைச் சேர்ந்த கைவண்டூர்.

தந்தை: அப்பாசாமி முதலியார்.

நூல்: திருப்பாச்சூர்ப் புராணம் (1905). இப் புராண நூல் 17 சருக்கங்களையும், 595₃ விருத்தப் பாக்களையும் கொண்டது. இந்நூல் அட்டாவதானம் பூவை, கலியாணசுந்தர முதலியாரால் பார்வையிடப்பெற்று வெளியிடப்பெற்றுள்ளது. 1192

## கந்தசாமி முதலியார் திரு. (19-நூ).

ஊர்: தொண்டை நாட்டில் உள்ள திருக்கழுக்குன்றம், வேளாளர்.

நூல்: ஞானானந்தச்சிந்து. 1193

## கந்தசாமி முதலியார், வா. (20-நூ)

நூல்: பாலிகாபோதினி (1894). இந்நூல் பெண்களின் ஏழு பருவ இயல்புகள் பற்றியும், கற்பொழுக்கம் பற்றியும் விரிவாகக் கூறுகிறது. பல நூல்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பாடல்கள் சில, இந்நூலில் எடுத்துக் காட்டாகத் தரப்பெற்றுள்ளன. உரைநடையில் அமைந்தது. 1194

## கந்தசாமி முதலியார், வை. (20-நூ)

ஊர்: தென்னாற்காடு மாவட்டம் வண்டிப்பாளையம்.

தந்தை: வைத்திலிங்க முதலியார்; தாய்: சுந்தராம்பாள்.

பிறப்பு: கி. பி. 1877.

இவர் 1895ம் ஆண்டில் மெட்ரிகுலேஷன் தேர்வில் வெற்றி பெற்றார், 1899-ஆம் ஆண்டில் சைதாப்பேட்டை போதனா முறைப்பாடசாலையில் பயின்று தேர்வு பெற்றார். ஞானியார் சுவாமிகளிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். ஞானியார் வாணிவிலாச சபையில் கந்தபுராணம், சிவஞான போதம் முதலிய நூல்களைப் பற்றிச் சொற்பொழிவு செய்து உள்ளார்: இராசமன்னார்குடி பிண்ட்லே கல்லூரியைச் சேர்ந்த தொடக்கப்பள்ளித் தலைமையாசிரியராகவும், செயிண்ட் சோசப் கல்லூரியில் இளைஞர்கட்கு ஆங்கில ஆசிரியராகவும், அதே கல்லூரியில் தமிழாசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் வத்திராயிருப்புக்கு அண்மையில் உள்ள பூமாபட்டி.

தந்தை: இராமசாமித்தேவர். தாய்:வேலம்மாள்; மறவர்குலப்.

கந்தசாமியார் இளமைக் காலத்தில் தந்தையை இழந்தார். உழவுத்தொழிலில் ஈடுபட்டார். வீட்டில் ஏற்பட்ட மனத் தாங்கல் காரணமாக 1903-ஆம் ஆண்டில் வீட்டை விட்டு வெளியேறிச் சோழவந்தானில் கின்னி மடத்திற்கு வந்து சுப்பு முதலியார் என்பவர் ஆதரவில் சிவப்பிரகாச அடிகள் என்பாரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். பின்னர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் சேர்ந்து 1907-ஆம் ஆண்டில் புகுமுக வகுப்பும், பாலபண்டித வகுப்பும் தேர்வு பெற்றார். அப்போது பாண்டித்துரைத் தேவரின் நட்பு ஏற்பட்டதால் மதுரைத் தமிழ்ச் சங்க ஆசிரியராகச் சில ஆண்டு கள் பணிபுரிந்தார் மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க்கல்லூரி யிலும் பல ஆண்டுகள் ஆசிரியராக இருந்தார். சோழவந் தான் மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளிகளிலும் தமிழாசிரிய ராகப் பணியாற்றினார்.

பின்னர், சிதம்பரம் மீனாட்சி கல்லூரியில் புலவர் வகுப் பிற்குப் பாடம் சொல்லும் வாய்ப்பினைப் பெற்றார். மீனாட்சி கல்லூரி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தோடு இணைக்கப் பட்டபோது, பல ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.

இவர் தொல்காப்பியத்தை நன்கு ஆராய்ச்சி செய்து கற்றறிந்தார். தொல்காப்பிய சேனாவரையர் உரை இவருடைய திருத்தத்தோடு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்டது. தணிகைப் புராணத்தினைப் படிப்பதில் மிகுந்த ஆர்வம் காட்டினார். இந்நூலுக்குப் பல ஆண்டுகள் முயன்று ஓர் உரையும் எழுதியுள்ளார்.

அண்ணாமலைப்பல்கலைக்கழகத்திலிருந்து 1942 டிசம்பர் திங் களில் ஓய்வுபெற்ற இவர், 1943-ஆம் ஆண்டு ஜனவரித்திங்கள் 6-ஆம் நாள் சோழவந்தானில் காலமானார்.

## கந்தப்ப அடிகள் (சரசுவதிபீடம்) (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம். இவர் இளமையிலேயே துறவற நிலையை மேற்கொண்டார்.

**நூல்:** கதிர்காமக் கலம்பகம் (1897). நூலாசிரியர் தமக்கு ஏற்பட்ட கொடிய நோயிலிருந்து விடுபட்டது தொடர்பாகப் பாடியது இந்நூல் என்பர். இந்நூல் அகம், புறம் முதலிய பல் பொருளும் பல் வகைப் பாவும் விரவிவரும் கலவைப் பிரபந்த மாகும். காப்புச் செய்யுட்கள் இரண்டு உள்பட 102 செய்யுட்களில் அமைந்தது. நா. கதிரைவேற்பிள்ளை அச்சிட்டுள்ளார்.

## கந்தப்ப ஞானதேசிகர் (19-நூ)

வே. பெ. ஈசானிய தேசிகர். திருவண்ணாமலையில் ஈசானிய திசையில் இவர் தங்கியிருந்தமையால் இவருக்கு இப்பெயர் வந்தது என்பர்.

**ஊர்:** வடஆர்க்காடு மாவட்டம் வேலூர்.

**தந்தை:** திருநீலகண்ட தேசிகர்; மறைவு கி. பி. 1829.

இவருக்கு இளமையிலேயே துறவறத்தில் விருப்பம் ஏற்பட்டது. தில்லையில் மௌனசாமியார் என்பவரைத் தம்முடைய ஞானகுருவாகக் கொண்டார். பின்னர்த் திருவாரூரில் இருந்த தட்சிணாமூர்த்தி அடிகள், சிக்கலில் இருந்த உகந்தலிங்க ஞானதேசிகர் ஆகியோர்களுடன் சிற்சிலகாலம் தங்கியிருந்தார். பின்னர்த் திருவண்ணாமலைக்கு அடுத்த வேட்டவலம் என்னும் ஊருக்கு அருகாமையில் உள்ள ஒரு குகையில் தவம் செய்தார். அப்பொழுது இவருக்குப் பால் முதலிய உணவு கொடுத்து உதவிய முத்துச்சாமி உடையாருக்கு, இங்ஙனம் உதவியதன் பயனாகப் புதையல் கிடைத்தது என்பர். பின்னர்த் திருவண்ணாமலை வந்து ஈசானிய திசையில் தவம் செய்தார். அக்காலத்தில் அம் மாவட்டத்தின் தலைவராக இருந்த ஐடன்துரை என்ற ஐரோப்பியருக்கு இருந்த காசநோய் இவருடைய அருளால் நீங்கிற்று என்பர் இவருடைய சமாதி ''ஈசானியமடம்'' என்னும் பெயரில் இன்றும் உள்ளது.

நூல்: அண்ணாமலையார் தோத்திரப்பாமாலை, ஞானக்கட்டளை, அண்ணாமலையார் வெண்பா, அண்ணாமலையந்தாதி, அண்ணாமலைக்கண்ணி, மௌனகுரு தேசிகர் சிகாமணிப்பதிகம், மௌனகுரு ஞானதேசிகர் பஞ்சரத்தினம்.

## கந்தப்பத்தேவர்

வே. பெ. கந்தாடையப்பத்தேவர். இவர் சரவண தேசிகரின் மாணவர்.

நூல்: கடாவிடை உபதேசம். இந்நூல் கையெழுத்துப் பிரதியாக உள்ளது. இந்நூலினைச் செய்தவர் கந்தப்பையர் எனச்சென்னை அரசாங்கக் கையெழுத்துப் பிரதி அகரவரிசையில் காணப் படுகின்றது.

## கந்தப்ப தேசிகர் (15-நூ)

நூல்: தணிகையுலா.

## கந்தப்பிள்ளை (19-நூ)

ஊர்: ஈழநாட்டில் வேலணை என்னும் ஊர்.

தந்தை: விந. சித்தம்பி, வேளாளர். பிறப்பு கி. பி. 1840

இவர் இணுவில் நடராச ஐயரிடம் சைவசமய நூற்களையும் ஆறுமுகநாவலரிடம் தமிழ் நூற்களையும் கற்றார். ஆறுமுக நாவலர் ஆணைப்படி தம்முடைய ஊரில் ஒரு தமிழ்ப் பள்ளியை நிறுவினார், தம்முடைய ஊரிலிருந்து சைவகுக்குமார்ந்த போதினி என்னும் திங்கள் இதழினை வெளியிட்டார் பல ஊர்களுக்கும் சென்று சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தார்.

நூல்: தத்துவப்பிரகாசம் - உரை, ''திருவூஞ்சல்'' இந்நூல்களுள் திருவூஞ்சல் என்னும் நூல் வேலணையில் உள்ள பிள்ளையார் மீது பாடப்பெற்றது.

**கந்தப்பிள்ளை, ப.** (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்தில் உள்ள நல்லூர்

**தந்தை:** பரமானந்தர். இவரது மகன் ஆறுமுக நாவலர். வாழ்ந்த காலம்: கி. பி. 1766 – 1842.

இவர் சண்முகச் சட்டாம்பியார் என்பவரிடத்திலும், கூழங்கைத் தம்பிரானிடத்திலும், தமிழ் நூற்களைக் கற்றார். இவருக்கு ஆங்கிலம், போர்த்துக்கீசியமொழி, டச்சுமொழி, ஆகியவற்றில் பயிற்சி உண்டு. இவர் 18 ஆண்டுகள் அரசாங்கத்தில் பணியாற்றினார். இவரால் இருபதிற்கு மேற்பட்ட நாடகங்கள் இயற்றப்பட்டன என்பர். இவரால் தொடங்கப் பெற்று முடிக்கப்பெறாது இருந்த ''இரத்தினவல்லி விலாசம்'' என்னும் நூலினை இவரது மகன் ஆறுமுக நாவலர் பாடி முடித்துள்ளார்.

**நூல்:** இராமவிலாசம், ஏரோது நாடகம், கண்டி நாடகம், சந்திரகாச நாடகம், நிக்கிலாங் நாடகம், இரத்தினவல்லி விலாசம், நல்லைநகர்க்குறவஞ்சி.

**கந்தப்புலவர்** (                    )

**பார்க்க:** அசன்அலிப்புலவர், சீருடையார்புரம்.

**கந்தப்பையர் 1** (18-நூ)

**ஊர்:** தொண்டை மண்டலத்திலுள்ள திருத்தணிகை. சங்கம குலம் வீரசைவர்.

**மக்கள்:** விசாகப்பெருமாள் ஐயர். சரவணப்பெருமாள் ஐயர். வாழ்ந்த காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.

இவர் திருத்தணிகைப்புராணம் பாடிய கச்சியப்பரின் மாணவர். முருகக் கடவுளிடத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். அவரை வழிபடுவதையும் அவர்மீது பாக்கள் இயற்றுவதையுமே தமது தொழிலாகக் கொண்டிருந்தார்.

**நூல்:** திருத்தணிகைப் பிள்ளைத் தமிழ், ஐங்கரமாலை, தயாநிதிமாலை, வேலாயுத சதகம், திருத்தணிகையந்தாதி, திருத்தணிகைக் கலம்பகம், மயிற்பத்து, வேற்பத்து, சீர்பாதப்பத்து, மலைப் பத்து, திருத்தணிகையுலா, இந்நூல்கள் அனைத்தும் ஒன்று படுத்தப்பட்டுத் திருத்தணிகை சந்நிதிமுறை என்னும் பெயருடன் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளன. இவற்றுடன் இவர் முருகன் தாலாட்டு, மாலைவெண்பா, சிலேடைவெண்பா, வெண்பாவந்தாதி, சிலேடையந்தாதி, திருத்தணிகைத் தலபுராணம், அபிடேகமாலை என்னும் நூல்களையும் இயற்றி யுள்ளார். திருத்தணிகாசலவனுபூதி என்னும் நூலும் இவரால் செய்யப்பட்டது என்றே கருதுகின்றனர். இவர் பழமலை யந்தாதி, திருச்செந்தில் நிரோட்டகயமக அந்தாதி முதலிய நூற்களுக்கு உரையும் எழுதியுள்ளார்.

## கந்தப்பையர் 2

**வே. பெ:** வெள்ளிகந்தப்பையர்.

**ஊர்:** தென்மாதை

**நூல்:** சாரங்கதரயட்ச கானம். இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் கையெழுத்துப் படியாக உள்ளது.

## கந்தரத்தனார் (சங்ககாலம்)

**ஊர்:** உரோடோகம்.

இவ்வூர்ப் பெயர் ஒரோடோகம் எனவும் ஒரோடக மெனவும் ஏடுகளில் பலபடியாகப் பிறழ்ந்து காணப்படுகிறது. இப்பொழுது இவ்வூர் ஓரகடமென்று திரிந்து வழங்குகிறது; காஞ்சீபுரம் கோட்டத்திலுள்ளது.

**நூல்:** அகநானூறு 23, 95, 191 குறுந்தொகை 155. நற்றிணை 116, 146, 238, 306.

## கந்தாடை மன்னப்பங்கார் (         )

**ஊர்:** வயலூர்

**நூல்:** தேசிகர் திருநூற்றந்தாதி. இந்நூல் துப்புள் பிள்ளை எனவும் வேதாந்த தேசிகர் எனவும் வழங்கிய வைணவப் பெரியார்மீது இயற்றப்பெற்றது. வெண்பா யாப்பில் அமைந்தது.

### *கந்தாடையண்ணன்* (15-நூ)

**வே. பெ:** கோயில் கந்தாடையண்ணன்.

இவர் மணவாள மாமுனிகளின் மாணக்கர்களுள் ஒருவர்.

**நூல்:** கண்ணி நுண் சிறுத்தாம்பு, பெரியதிருமுடியடைவு

கண்ணிநுண் சிறுத்தாம்பு, இந்நூல் மணவாள மாமுனிகள் மீது பாடப்பெற்றது. இது அந்தாதியாகப் 13 கட்டளைக் கலித்துறைகளைக்கொண்டது. அவர் பூமியில் அவதரித்துச் செய்த சமயத் தொண்டுகளைக் கூறி, அவர் தாளைப் பற்றிப் பிறப்பறுத்தேன என்று பாடுகிறார்.

**பெரியதிருமுடியடைவு:** இது ஓர் உரை நூல். பரமபதநாதன் தொடங்கி மணவாளமாமுனிவரையுள்ள ஆசாரிய பரம்பரையினரைப் பற்றிய வரலாற்றினைக் கூறுவது. இந்நூல் பல வரலாற்றுச் செய்திகளுக்கு ஆதாரமாக உள்ளது.

### *கந்தாடையாண்டான்* ( )

**நூல்:** மந்திர ரத்தினம்.

இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் கையெழுத்துப்படியாக உள்ளது.

### *கந்தியார்* (12-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டத்தில் திருக்குருகூருக்கு அண்மையில் உள்ள திருப்பேறை.

**காலம்:** பரிமேலழகர் நச்சினர்க்கினியர் ஆகிய உரையாசிரியர்களுக்கு முன்பிருந்தவர். கி. பி. 12-ஆம் நூற்றுண்டினர்.

இவர் பெண்பாற் புலவர், சமயம் வைணவம் என்பர். ஆனல் இவர் ஒரு ஜைனத் தவப்பெண் என்பது பெருந்தொகைக் குறிப்பால் காணப்படுகிறது. பரிபாடல் உரைச் சிறப்பு பாயிரத்தில் மிகைபடுபொருளை நகைபடு புன்சொலில் தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும் என்ற பகுதியாலும் கந்தியார் தெரிய வருகின்றார். பரிபாடல் ஜைனமத நூலல்லாமையால், பரிபாடலில் இடைச் செருகலாகச் செய்யுட்களைக் கலந்த கந்தியார் ஜைனத் தவப்பெண்ணாகிய கந்தியாராக இருக்க முடியாது. வேறு ஒருவராக இருக்க வேண்டும் என்ற ஐயம் ஏற்படுகிறது. இவர் பாடிய 445 செய்யுட்கள் சீவக சிந்தாமணியில் இடைச்செருகல்களாகச் சேர்ந்துள்ளன என்பர். பரிபாடலில் இவர் இடைச்செருகலகளாகச் சேர்த்த பாடல்கள் பரிபாடலுக்கு உரை எழுதும் முன்பு பரிமேலழகரால் நீக்கப் பட்டவை என்பர்:

## கந்தையாச்சாமி (                    )

சி. பெ. காசிவாசி. காசியில் வாழ்ந்திருந்தமையால் சிறப்புப் பெயர் பெற்றார். வடநாட்டில் காசியில் சில ஆண்டுகள் தங்கி வடமொழி கற்றவர்.

**நூல்:** காசியாத்திரா தீபம் (தமிழாக்கம்) இந்நூல் காசிக்குச் சென்று இறைவழிபாடு செய்பவர்கட்கு மிகவும் பயனுடையதாகும்.

## கந்தையாபிள்ளை, (20-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்தினைச் சேர்ந்த தென் கோவை, வாழ்ந்த காலம் கி. பி. 1880--1958.

**நூல்:** வித்தகம். இது புதுக்சேரியிலிருந்து வெளி வந்த இதழ்.

## கந்தையாபிள்ளை ச. (20-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம்.

**வாழ்ந்த காலம்:** 1880--1958.

தமிழ்ப்புலமை சான்றவர். புதுச்சேரியிலிருந்து வித்தகம் என்னும் இதழை நடத்தியவர்.

## கற்பற்கோவை ஆசிரியர் (கி. பி. 14 நூ)

இயற்பெயர் தெரியவில்லை. நூல் கருமாணிக்கன் கோவை எனப் பெறும் கப்பற்கோவை. இந்நூல் கருமாணிக்கன் என்ற தலைவன் மேல் பாடப்பட்டது. பாண்டி நாட்டுக் கல்வெட்டொன்று கரிய மாணிக்காழ்வான் என்றும், வீரபாண்டியக் காளிங்கராயன் என்றும் அவனைச் சிறப்பித்துக் கூறுகிறது. ஜடாவர்மன் வீரபாண்டியனின் படைத் தலைவனாகப் பணியாற்றிப் புகழ் பெற்றவன். காலிங்கராயன் என்பது அவன் குடும்பத்தார் அனைவர்க்கும் உரிய பெயராகலாம். அவன் கப்பலூர், துவரை முதலான ஊர்களைத் தம் உடைமையாகக் கொண்டு ஆண்டவன். யாதவராயன் என்ற குடிப்பெயரையும் தொண்டைமான் என்னும் சிறப்புப் பெயரையும் உடையவன்.

'கப்பற்கோவை' அச்சிட்டு வெளிவராத நூல்களுள் ஒன்று. இந்நூலிலிருந்து 10 பாட்டுக்கள் இலக்கண விளக்க உரையாசிரியரால் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளன.

## கலாபமூர்த்திப்பிள்ளை ( )

**நூல்:** சிவசுப்பிரமணியக் கடவுள் திருமுகவுலா, சித்திரக் கலிப்பஞ்சகம், கம்பைவழி நடைக்கும்மி.

## கபிலதேவ நாயனார்

இவர் சங்க காலத்தில் வாழ்ந்த கபிலர். இன்னா நாற்பதினை இயற்றிய கபிலர் ஆகியவர்களினின்றும் வேறுபட்டவர். இவர் பிள்ளையாரைப் பற்றி 'மூத்த நாயனார் திருவிரட்டைமணி மாலை என்ற பிரபந்தம் பாடியிருப்பதாலும், பிள்ளையார் வணக்கம் தமிழ் நாட்டிற்கு கி பி. 7 ஆம் நூற்றாண்டில் வந்தது என்று கருதப்பெறுவதனாலும், கி. பி. 7 ஆம் நூற்றாண்டிற்கு முன் வரை சமணர்களுக்குரிய குன்றாக இருந்த திருச்சிராப்பள்ளிக் குன்றைச் சிவபெருமானுக்குரிய இடமாக இவர் பாடியிருத்தலாலும் இவர் கி.பி.7 ஆம் நூற்றாண்டிற்குப் பின்பும் பதினோராந்

திருமுறையில் இவருடைய பிரபந்தங்கள் இடம் பெற்றிருப் பதனால் திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பி காலத்திற்கு முன்பும் வாழ்ந்தவராக இருக்க வேண்டும்.

இவர் பாடிய மூத்த நாயனார் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான் திருவந் தாதி ஆகிய பிரபந்தங்கள் பதினோராந்திருமுறையில் இடம் பெற்றிருக்கின்றன. மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை என்னும் நூல் பிள்ளையாரைப் பற்றியது. 20 செய்யுட்களைக் கொண்டது. வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் மாறி மாறி வரப்பாடப் பெற்றது. சிவபெருமான் திருவிரட்டை மணி மாலை, சிவபெருமான் திருவந்தாதி என்ற இரண்டு நூற்களும் சிவபெருமானைப் பற்றியவை. முன்னது வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் அமைய 37 செய்யுட்களையும் பின்னது அந்தாதித் தொடையாக 100 நேரிசை வெண்பாக்களையும் கொண்டது.

## கபிலர் 1 (                    )

இவர் சங்க காலத்தில் வாழ்ந்த கபிலரிலும் பதினோராந் திருமுறையில் சில பிரபந்தங்களைப் பாடிய கபிலரிலும் வேறுவர்

**வாழ்ந்த காலம்:** கி.பி. 4 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்றும் கி. பி. 8 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்றும் இருவேறு கருத்துக்கள் உள.

**சமயம்:** இவர் தமது நூலில் சிவபெருமான், பலராமன், மாயோன், முருகன் ஆகிய தெய்வங்கட்கு விளக்கம் சொல்லி யுள்ளார். முக்கட் பகவன் அடி தொழாதார்க்கின்னா என்று நூலிற் கூறியிருப்பதால் சைவராக இவர் இருக்கக்கூடுமென்று கருதுகின்றனர்.

**நூல்:** இன்னா நாற்பது. இது பதினென் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. இது 41 இன்னிசை வெண்பாக்களைக் கொண்டதாய் நீதிகளைக் கூறும் நூலாகும். இந்நூலில் நீதிகளேயல்லாமல் சிற்சில மக்களியற்கை முதலியனவும் கூறப்பெற்றுள்ளன. ஒவ்வொரு அடியிலும் செய்யத் தகாத வற்றைக் கூறி இதனைச் செய்வது இன்னா என்று கூறும் (எ.டு)

னைப் பெருக்குதல் முன்னின்று (ஒரே கருத்துப் பலவிடத்தில் வெவ்வேறு தொடர்களிற் கூறப்பெற்றுமிருக்கிறது.

## கபிலர் 2 ( )

இவர், சங்க காலத்தில் வாழ்ந்த கபிலர், இன்னா நாற்பதனை இயற்றிய கபிலர், பதினோராந் திருமுறையில் இடம் பெற்றுள்ள பிரபந்தங்களைச் செய்த கபிலர் ஆகியோரிலும் வேறுபட்டவராவர்.

பன்னிரு பாட்டியலில் சில நூற்பாக்கள் கபிலர் பெயரிற் காணப்பெறுகின்றன, இந்நூற்பாக்கள் இவரியற்றிய இலக்கண நூலிலிருந்து எடுக்கப் பெற்றன என்றும் அம்மூல நூல் கபிலர் என்ற இலக்கண நூலாக இருக்கலாமென்றும் கூறுவர்.

## கபிலர் 3 (சங்ககாலம்)

ஊர் பாண்டி நாட்டில் திருவாதவூர்.

இவர் பாரியின் உயிர்த் தோழராக இருந்தார். மூவேந்தர் பாரியின் பறம்பு மலையை முற்றுகை செய்து கைப்பற்றிய பின் அவனையும் வஞ்சித்துக் கொன்றனர். இவர் பாரியின் மகளிரை விச்சிக் கோவினிடம் அழைத்துச் சென்று மணக்க வேண்டினர். அவன் மறுக்கவே அவர் அவர்களை இருங்கோவேள்பால் அழைத்துச் சென்று அவனை மணந்து கொள்ளும்படி வேண்ட அவனும் மறுத்தான். அதனால் கபிலர் அம்மகளிரைப் பார்ப்பார் பால் அடைக்கலமாக விடுத்து உயிர் துறந்தார் என்று கூறப்படுகின்றது.

மலைநாட்டிலிருந்த சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் சென்றார். அவனுடைய புகழினை ஒரு பத்துப் பாட்டாற்பாடினர், கபிலரது செந்தமிழ்ப் பாட்டினைக் கேட்டு மகிழ்ந்து நூறாயிரம் பொற்காசும் நன்று எனப் பெயரிய குன்றின் மீதேறித் தன் கண்ணிற் கண்ட நாடெல்லாமும் கொடுத்தான். கபிலர் பெருமகிழ்வோடு அங்கே சின்னாளிருந்து செல்வக் கடுங்கோவிடம் விடை பெற்றுப் போந்து பார்ப்பனர் பாதுகாவலில் இருந்த பாரி மகளிரையும் உடன் கொண்டு திருக்கோவிலூரை அடைந்தார்.

தம் நண்பனாகிய திருமுடிக்காரியின் வழியில் வந்த எழிலும் இளமையும் வாய்ந்த ஏழையார்க்குப் பாரிமகளிரை மணஞ் செய்வித்தனர். பின்னாட் சென்ற பின்னர் பாரியின் பிரிவுத் துன்பத்தைப் பொறுத்திருக்கமாட்டாமல் பெண்ணையாற்றின் நடுவிலுள்ள மணற் பரப்பிலே வடக்கிருந்து மூலக் கனலை மூட்டி எழுப்பித் துறக்கம்புக்கனர். இ ரா ச ரா ச சோ ழ ன் காலத்ததும திருக்கோவலூர்க்கோயிலுள் அமைந்துள்ளது மாகிய 11 ஆம் நூற்றாண்டுக்கல்வெட்டொன்று இச்செய்தியை உறுதிப்படுததுகிறது

இவரது பாட்டியற்றும் வன்மையையும் வாய்மையையும் மனததூய்மையையும் சங்கத்துச் சான்றோர்களே ஒருங்கொப்ப புகழ்ந்து கூறியுள்ளார்கள்.

''உலகுடன் திரிதரும்பலர் நல்லிசை வாய்மொழிக் கபிலன்'' (அகம்-78) என நக்கீரனாரும் வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன் (புறம்-53) எனப் பொருந்தில் இளங்கீரனாரும், ''பொய்யாநாவிற்கபிலன்'' (புறம்-174) என மாறோக்கத்து நப்பசலையாரும் இவரைச் சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

இவரால் பாடப்பெற்றோர் பேகன், அகுதை, ஓரி, சேரமான், மாந்தரஞ்சேரலிரும்பொறை நள்ளி, மலையமான் திருமுடிக் காரி முதலியோர் ஆவர்.

நூல்: அகநானூறு 2, 12, 18, 42, 82, 118, 128, 158, 182 203, 218, 238, 248, 278, 292, 318, 332, 382.

ஐங்குறுநூறு: 201-300; கலித்தொகை. 37-65 குறுந்தொகை. 13, 18, 25, 38, 42, 87, 95, 100, 106, 115, 121, 142, 153, 187, 198, 208, 225, 241, 246, 249, 259, 264, 288, 291, 312, 355, 357, 361, 385: நற்றிணை. 1, 13, 32, 59, 65, 77, 217, 222, 225, 253. 267, 291, 309, 320, 336, 353. 359, 368, 373, 376, பதிற்றுப்பத்து ஏழாம்பத்து 61-70; பத்துப்பாட்டு-எட்டாவது குறிஞ்சிப்பாட்டு, புறநானூறு 8, 14, 105-124, 143, 200, 201, 202, 236, 237, 247.

## கம்பர் (10-நூ)

**ஊர்:** சோழநாட்டிலுள்ள திருவழுந்தூர்.

**தந்தை:** ஆதித்தன். உவச்சர் குலம்.

**வாழ்ந்த காலம்:** திரு. மு. இராகவையங்கார் அவர்களும் திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களும் கம்பர் வாழ்ந்த காலம் மூன்றாங் குலோத்துங்க சோழன் காலமெனக் கொண்டு 12ஆம் நூற்றாண்டென்கின்றனர். அவர்கள் தம் கருத்துக்கு ஆதாரமாக மருத்துமலைப் படலத்திற் காணப்படும். 'வன்னி நாட்டிய பொன்மௌலி' எனத் தொடங்கும் பாடலையும் 'ஆவின் கொடைச் சகரர் ஆயிரத்து நூறொழித்து' என்னும் பாடலையும் காட்டுகின்றனர். திரு. வை. சதாசிவப் பண்டாரத்தார் கம்பர் கி. பி. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கியவர் என்று கூறுகின்றார். தம் கருத்துக்கு ஆதாரமாக அவர் மலம் நீங்கு படலத்திலுள்ள 'புவி புகழ் சென்னிபேரமலன்' எனத் தொடங்கும் பாடலைக் காட்டி, இப்பாட்டிலுள்ள அமலன் என்பது கண்டராதித்த சோழர் மகனாகிய உத்தமசோழனைக் குறிக்குமென்பர். உத்தமசோழன் ஆட்சிக் காலம் கி. பி. 970-985. ஆதலின் கம்பர் உத்தமசோழன் காலத்தில் வாழ்ந்தவர் என்பர். நூற்றாண்டுத் தமிழிலக்கிய வரலாற்றாசிரியரான திரு. மு. அருணாசலம் அவர்கள் கம்பர் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு என்பர்.

கம்பர் என்பதற்குக் கூறுங்காரணங்களெல்லாம் கற்பனைச் செய்திகளே. கம்பர் என்பது காரணம் பற்றி இடப்பட்ட பெயரன்று; அவருக்கு வழங்கிய இயற்பெயரே.

இவர் இராமபத்தியில் எல்லையற்ற ஈடுபாடுள்ளவராக இருந்தபடியால் இராமாயணத்தை இயற்றினார். 'ஆசைபற்றி அறையலுற்றேன்' என்று இவர் கூறுகிறபடியால் இராமபத்தியே இவர் இராமாயணம் பாடியமைக்குக் காரணம் என்பது புலப்படும். இவர்தம் நூலுக்கு இராமாவதாரம் என்று பெயரிட்டார். திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலின் ஆதரவில் இருந்து கொண்டு பாடி முடித்தார்.

கம்பரை ஆதரித்தவர் திருவெண்ணெய் நல்லூரில் பெருங் கொடை வள்ளலாக விளங்கிய சடையப்ப வள்ளலாவர். சடையப்பவள்ளலின் பேரன்பும் பேராதரவுமே கம்பரைத் திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்று தங்குமாறு செய்தது. அங்கே தான் இராமாயணம் தொடங்கப் பெற்று நிறைவெய்தியதென்பது 'இராமாவதாரப் பேர்த்தொடை நிரம்பிய தோமறு மாக்கதை, சடையன் வெண்ணெய் நல்லூர்வயின் தந்ததே' என்னும் பாடலால் அறியலாம்.

தமிழ் மொழியிடத்து தமிழ் நாட்டிடத்து தலைசிறந்த பற்றுடையவர் கம்பர். அதனால் தமிழ் மொழியை என்று முள தென்றமிழ்' என்று போற்றுகின்றார். தமிழ் இலக்கிய மரபினைத் தழுவியே சரயூ நதியையும் கோதாவரியையும் வருணிக்கிறார்.

கம்பர் விருத்தமென்னும் பாவினத்தை ஆளுவதில் நிகரற்றவராக விளங்கினார். கம்பர் காவியத்திலுள்ள சந்த விருத்தங்கள் ஓசைநயம் உடையனவாகும்.

'கம்பராமாயணத்தில் கிடைக்கும் குறிப்புக்களால் கம்பர் கற்றிருந்த நூல்களின் பரப்பும், பெற்றிருந்த புலமையின் சிறப்பும் நன்கு விளங்கும். வள்ளுவரின் சொல்லையும் பொருளையும் பொன்னேபோல் போற்றிப் பாடியுள்ளார். சிந்தாமணியின் சொல்லோவியங்களும் வருணனைகளும் கம்பரது பெருங்காப்பியத்தில் அமைந்து அழகு செய்கின்றன.

நூல்: இராமாயணம், சடகோபரந்தாதி, ஏரெழுபது, சரசுவதியந்தாதி, திருக்கை வழக்கம்.

பெரும்பாலான இலக்கிய வரலாற்றாசிரியர்கள் சடகோபரந்தாதி, ஏரெழுபது, சரசுவதி யந்தாதி, திருக்கை வழக்கம் ஆகிய நான்கு நூல்களும் கம்பராமாயணம் பாடிய கம்பரே பாடியன என்பர் ஆனால் நூற்றாண்டுத் தமிழிலக்கிய வரலாற்றாசிரியரான திரு. மு. அருணாசலம் அவர்கள், தம் 12 ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் சடகோபரந்தாதி, ஏரெழுபது, சரசுவதி அந்தாதி ஆகிய மூன்று நூல்களும் 12 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பிறிதொரு கம்பரால் இயற்றப்பட்ட

தென்றும், திருக்கை வழக்கம் 17ஆம் நூற்றாண்டில் தோன்றிய நூலாயிருக்கலாமென்றும் எழுதியுள்ளார்.

இராமாயணம் : வான்மீகி இராமாயணத்தை முதல் நூலாகக் கொண்டு எழுந்த நூல் ஆயினும் ஒரு மொழி பெயர்ப்பு நூலாக தில்லாமல் தனியே தமிழிலெழுந்த நூல்போல் விளங்குகிறது. வான்மீகி இராமாயணத்தில் காணப்படாத சில செய்திகள் கம்பராமாயணத்தில் காணப்படுகின்றன. இரணியன் வதைப் படலம், மாயாசனகப் படலம் ஆகியவை இவற்றிற்கு எடுத்துக் காட்டுகளாகும்.

இராமாயணம் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லும் நூல் என்று வைணவ உலகம் போற்றும். இது சரணாகதி சாத்திரம் என்றும் சிறப்பித்துச்சொல்லப்படுகிறது.

திருவரங்கத்தில் இப்பெருங்காப்பியம் அரங்கேற்றப்பெற்ற தென்றும், அப்போது பல அற்புதங்கள் நிகழ்ந்தன வென்றுங் கூறுவர். கம்பராமாயணத்தின் பெருமை கடல் கடந்த நாடு களிலும் அறியப்பட்டுள்ளது. கீழை நாடுகளில் உள்ள இராமா யணச் சிற்பங்களும் நாட்டுப்புறக் கதைகளும் இராமாயணத் தைத் தழுவி எழுந்துள்ளன என்று ஆராய்ச்சியாளர் கூறுவர்.

இராமாயணம் ஆறு காண்டங்களையும் 118 படலங்களையும் 10368 செய்யுட்களையும் உடையது. மிகைப்பாடல்களாக 1293 செய்யுட்கள் காணப்படுகின்றன. கம்பராமாயணத்திற்குப் பின்னெழுந்த பெரு நூல்களிலெல்லாம் கம்பருடைய கருத் தும் சொல்லும் எடுத்தாளப்படுகின்றன. இருபதாம் நூற்றாண்டுப் பெருங்கவிஞருள் ஒருவராகிய பாரதியாரின் உள்ளத்தைக் கவர்ந்த நூல்களுள் கம்பராமாயணமும் ஒன்று. 'இம்பர் நாட்டுச் செல்வமும் உம்பர் நாட்டுச் செல்வமும் ஒருங் கெய்தி இருந்தாலும் கம்பநாடன் கவிதையைப் போல் கற்றோர்க்கிதயம் களியாதே' என்று புலவர் பெருமக்களால் பாராட்டியுரைக்கும் சிறப்பினையுடையது.

சடகோபரந்தாதி : இந்நூல் பாயிரமாக நான்கு பாடல் களும், அந்தாதிப் பாடல்கள் நூறும் இறுதியில் தனிப்பாடல்

ஒன்றுங் கொண்டது. மிகவும் சிறந்த இலக்கியச் சுவை பொருந்திய நூல்; சிறப்பான பத்திச் சுவையும் பொருந்தியது. இது ஆழ்வார் நூற்றந்தாதி எனவும் பெயர் பெறும். இந்நூல் இராமாநுச நூற்றந்தாதியை ஒத்துச் செய்யப்பட்டதென்பது படித்த மாத்திரத்தில் விளங்கும். சைவப்பெரியார் அருளிய தொடர்களை இந்நூலில் சில இடங்களில் காணலாம். இந்நூலாசிரியர் தம் சமயத்தை எவ்வளவுதான் சுவைபடப் பாடியபோதிலும் சமயக் காழ்ப்பைக் காட்டியுள்ளார்.

**ஏரெழுபது:**

உழவுத்தொழிலின் சிறப்பைக் கூறும் நூல். நூலில் பாயிரத்தில் 10 பாடல்களும் 69 கலிப்பாக்களும் சில விருத்தப் பாடல்களுமுள்ளன. நூலில் சோழ மண்டலம், சோழமன்னன், வேளான குடி, வேளாளர் ஆகியோர் சிறப்புச் சொல்லப்பட்டுள்ளன. காராளர் சிறப்பைச் சொல்லுகிறேன் என்று ஆசிரியர் பல இடங்களில் சொல்லுகிறார். நூலினுள் உழவு நாட்கோள்தொடங்கி உழவுக் கருவிகள், உழவச் செயல் முறைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாடலால் சிறப்பித்துச் சொலலப்படுகின்றன. நூல் முழுமையும் காவிரி நாட்டின் சிறப்பைக் கூறிச்செல்கின்றது.

**சரசுவதி அந்தாதி:** இந்நூல் முப்பது கட்டளைக் கலித்துறைகளை உடையது. 'ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் எனவும் 'படிக நிறமும் பவளச் செவ்வாயும்' எனவும் தொடங்கும் இருவெண்பாக்களையும் முதற்கண் உடையது. வடமொழித் தொடர்கள் பல இந்நூலிற் பயில்கின்றன. கமலாசனம், அருக் கோதயம் சந்திரோதயம், பாதாம்புயம், சுவேத சரோருகம் என்னும் தொடர்களைக் காண்க. கம்பர் வரலாற்றுக் கதைகள் இந்த நூலை இவர் கலைமகளின் அருள் வேண்டிப் பாடினார் என்று கூறும்.

திருக்கை வழக்கம் : இந்நூல் ஏரெழுபதுடன் சேர்த்துச் சொல்லப்பெறுகிறது. இந்நூல் 59 கண்ணிகள் கொண்ட நீண்ட கலிவெண்பாவை உடையது. வேளாளருடைய கையின் பெருமையைப் புகழ்ந்து கூறுவது. அறுபத்து மூன்று நாயன் மாருள் சாக்கியர், மூர்த்தி, இளையான்குடிமாறர், அரிவாட் டாய நாயனார், விறன்மிண்டர், அப்பர், ஏயர்கோன், கலிக் காமர் ஆகியோர் வரலாறுகளையும் பழையனூர் நீலி, சடையப்ப

வள்ளல், கம்பர், சேக்கிழார், ஒட்டக்கூத்தர் ஆகியோர் வரலாறுகளையும் குறிப்பிடுகிறது திருக்கை வழக்கம் என்பது சாசனத் தொடர்.

## கம்பர் வீட்டு வெள்ளாட்டி (          )

இவர் கம்பர் வீட்டில் பணிப்பெண்ணாக வேலை பார்த்து வந்தவரென்பர். ஒருநாள் கம்பரைக் காண்பதற்குச் சோமாசி என்ற புலவர் வந்தார். சாணிமிதித்து வராட்டித் தட்டிக் கொண்டிருந்த இவர் நீவிர் எவ்வூர் ? எங்கு வந்தீர்? என்று கேட்டார். வந்தவர் தாம் ஒரு புலவர் என்று கூறினர். அது கேட்ட இவ் அம்மையார், 'வட்டமதி போலிருக்கும்' என்று தொடங்கும்விடுகதைப் பாடலைச் சொல்லி அதனை விடுவித்த பின்னர் கம்பரைக் காணச் செல்லலாம் என்று கூறினர். சோமாசிப் புலவருக்கு விடை தெரியவில்லை.

## கம்பளிச்சட்டை முனிநாயனர் (          )

நூல்: 'பின்ஞானம் 100' 'முன்ஞானம் 100' இவ்விரண்டு நூல்களையும் ஒன்ருகச் சேர்த்து கோகுலபுரம் அருணசல முதலியார் என்பவர் கி. பி. 1882ஆம் ஆண்டில் அச்சிட்டுள்ளார்; ஒவ்வொன்றும் 101 செய்யுட்களைக்கொண்டது. உடல்நிலை, உயிர்நிலை பற்றி உரைப்பது.

## கமலநாத முதலியார் ஆ (19-நூ)

ஊர்: வடஆர்க்காடு மாவட்டம் ஆரணி;
தந்தை: ஆனைகட்டி இராமசாமி முதலியார்
தாய்: வள்ளியம்மையார்.

இவர் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், திருமயிலைச் சண்முகம்பிள்ளை, பாரிப்பாக்கம் முனியப்ப சுவாமிகள், ஆறுமுக நாவலர், தணிகாசல முதலியார் ஆகியோரிடம் இலக்கிய இலக்கண சமய வேதாந்த நூல்களைக் கற்ருர்.

இவர் தொடக்கத்தில் ஆரணி சாகிர்ராசசமத்தானப் புலவராக இருந்தார். பின்னர் பெங்களூர் தர்மரத்னகரன் இராவ்பகதூர்

ஆர்க்காடு நாராயணசாமி உயர்நிலைப்பள்ளியிலும், சென்னையில் சில உயர்நிலைப் பள்ளிகளிலும் தமிழாசிரியராகப் பணி புரிந்தார். 1930ஆம் ஆண்டில் வாலாஜா நகர சபை உயர்நிலைப்பள்ளியில் பணியாற்றி ஓய்வு பெற்ற பிறகு ஆனந்த போதினித் திங்கள் இதழின் ஆசிரியராகப்பணியாற்றினர். இறுதியில் க. நா. தமச்சிவாய முதலியாரிடம் எழுத்தாளராகப் பணியாற்றினர்.

இவர் வாலாஜாவில் தமிழ் வேதபாராயண சபை என்ற ஓர் அமைப்பினை நிறுவிச் சமயப்பணி புரிந்தார். சைவ சமய நெறியைப் பின்பற்றினாலும் பிற சமயத்தவரிடம் சிறிதும் பகைமை பாராட்டப் பண்புடையவராகத் திகழ்ந்தார்.

**நூல்**. இலக்கியச் செய்யுள் திரட்டு, பட்டினத்தார் பாடல் விளக்க உரை, தாயுமானர் பாடல் விளக்கவுரை; பிரமசகசம் என்பது இவரால் பதிப்பிக்கப்பட்ட நூல்.

## கமலமுனி (          )

இவர் பதினெண் சித்தர்களுள் ஒருவர் என்று கருதப் படுகின்றார்.

**நூல்**  பதினெண் சித்தர் ஞானக்கோவையில் அடங்கிய பாட்டு.

## கமலமூர்த்தி மௌனகுருசாமிகள் (          )

**நூல்**: சிவசக்தி பூஜை-36 (1900), ஞானசூஸ்திர திரட்டு (1883) தேவியந்திரமாலிகை, திருநாமசூத்திரம்.

சிவசக்தி பூஜை - 36. 36 செய்யுட்கள் அந்தாதியாக அமைந்துள்ளன. இந்நூல் சிவசக்தி வழிபாட்டைப் பற்றியது.

ஞானசூஸ்திரத் திரட்டு: இந்நூல் ஞானசூஸ்திரம் ஒன்று, ஞானசூஸ்திரம் மூன்று, ஞானசூஸ்திரம் ஐந்து, ஞானசூஸ்திரம் ஒன்பது, ஞானசூஸதிரம் பதினறு என்பன உள்ளன. 34 செய்யுட்கள் காணப்படுகின்றன.

## கமலை ஞானப்பிரகாசப் பட்டாரகர் ( )

நூல்: பூஜைத்திருவகவல். இந்நூல் சிவவழிபாடு செய்யும் முறை பற்றி கூறுகிறது.

## கமலை ஞானப்பிரகாசர் ( )

பார்க்க : ஞானப்பிரகாசர்.

## கமலைவெள்ளியம்பலவான முனிவர் ( )

நூல்: முதுமொழி மேல்வைப்பு.

## கமுதிநாட்டுப் புலவர் (18-நூ)

இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. ஏறக்குறைய இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு, சேது சமத்தானத்தைச் சேர்ந்த சேதுநாட்டில் வாழ்ந்தவர் என்று கருதப் படுகின்றார்.

இவர் மருதுபாண்டியரைக் காணவந்த வழியில் இவர் மனைவியின் தாலியைத் திருடர்கள் அறுத்துக்கொண்டு ஓடி விட்டனர். இது தொடர்பாக இவர் மருதுபாண்டியர் முன்னிலையில்,

"மருவிருக்கும் கூந்தல் மனையாள் கணவன்
அருகிருக்கத் தாலி அறுமா"

என்று தொடங்கும் வெண்பாவினைப் பாடி, இழந்த தாலிக்கு வேறு தாலி பெற்றார் என்பர்.

## கயத்தாற்றரசன் ( )

பார்க்க: திருவேங்கடநாத ஐயர்.

## கயத்தூர் கிழார் (சங்க காலம்)

ஊர்: சோழநாட்டில் உள்ள கயத்தூர் வேளாண் மரபினர்.

நூல்: குறுந்தொகை 354ஆம் பாட்டு.

### கயமனர் (சங்க காலம்)

இவர் பாலைத்திணையையும் உடன் போக்கையும், நற்றாய் புலம்பல், மனைமருட்சி, கண்டோரிரக்கம் முதலாய புலம்பல்களை யும் பலவாறாகச் சிறப்பித்துப் பாடவல்லவர். அகத்திலன்றிப் புறத்திலும் புலம்பற்றுறையாகிய முதுபாலையைப்பாடியுள்ளார் ஆகவே இவர் இருதிணையிலும் புலம்பல் பாடவல்லவராய் விளங்குகிறார் அன்னியும் திதியனும் பொருதலைக் கூறுதலால் இவர் அவ்விருவர் காலத்திற்கும் பிற்பட்டவராவர். கழங்குக் குறிபார்க்கும் நெறியை அழகாகக் கூறுகின்றார். இவர் உலக வழக்குமுற்றும் தெளிவாக அறிந்தவரென்பது இவர் பாடல் களால் அறியப்படுகின்றது.

நூல்: அகநானூறு 7, 17, 145, 189, 195, 219, 221, 259, 275, 321, 383, 397. குறுந்தொகை 9, 356, 378, 396. நற்றிணை 12, 198, 279, 293, 305, 324. புறநானூறு 254.

### கயாதரர் (15-நூ)

வே பெ. கயாகரர்.

வாழ்விடம் : இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள இராமேசுரம்.

தந்தை : சோமேசுரர் ; அந்தணர்.

வாழ்ந்த காலம் : கி. பி. 15-ஆம் நூற்றாண்டு.

நூல் : கயாதரம், இராமேசுரக்கோவை, அரும்பொருளந்தாதி

கயாதரம் என்னும் நூல், கயாகரம் என்றும் அழைக்கப்பெற்றது கெயாதரம் என்றும் இந்நூலைச்சில நூலாசிரியர்கள் குறிப்பிட்டனர். இந்நூல் ஒரு நிகண்டாகும்; கட்டளைக் கலித்துறையில் அமைந்தது; மகடூஉ முன்னிலையைக் கொண்டது. கற்பவர்கள் எளிதில் இந்-நிகண்டின் செய்யுட்களை நினைவில் வைத்துக் கொள்வதற்கு

எளிதாக நூல் முழுதும் அந்தாதித் தொடையில் உள்ளது. இந்நூல் 11 தொகுதிகளைக் கொண்டது. நூலமைப்பில் திவாகரத்தினைப் பின்பற்றிச் செல்கின்றது. அதனால் திவாகரம் என்ற நிகண்டினைத் திருத்தமுறப் பதிப்பிக்க இந்நிகண்டு பெரிதும் உதவுகின்றது. இராமேசுரக்கோவை என்னும் நூல் இராடுமீசுரக்கோவை என்றும் தவருக அழைக்கப்பெற்றது. இந்நூல் மறைந்துபோன நூல்களில் ஒன்று ஆகும்.

## கயிலாயச் சட்டைமுனி ( )

கயிலாயச் சட்டை முனி வாத நூல் ஆயிரம்.

## கயிலாயச் சித்தர் ( )

**நூல்:** திருமந்திரத்தில் சில பாடல்களுக்கு உரை.

## கர்னல் காலின் மக்கன்ஸி (19 - நூ)

**ஊர்:** ஸ்காட்லாந்து

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1753-1821.

இவர் கணக்கு நூற்களில் தேர்ச்சி பெற்றவர். இந்தியாவில் வாணிபத்திலும் அரசியலிலும் தொடர்பு கொண்டிருந்த கிழக்கு இந்தியக் கம்பெனியில் பொறியியல் வல்லுநராகப் பொறுப் பேற்று கி பி. 1782இல் இந்தியாவிற்கு வந்தார். சென்னையி லும் பின்னர் இலங்கை, சாவகத்தீவுகளிலும் பணியாற்றினர். கி.பி. 1818இல் சர்வேயர் ஜெனரலாகப்பதவி உயர்வு பெற்றுக் கல்கத்தாவிற்குச் சென்ருர். இவர் சென்னையில் இருந்தபோது கெல்லிங் துரையுடன் சேர்ந்து கி.பி. 1812இல் சென்னைக் கல்விச் சங்கத்தை திறுவினர்.

இவர் சென்னையில அலுவல் பார்த்தபொழுது வடக்கே, கிருஷ்ண ஆறுவரை பரவியிருந்த அக்காலச் சென்னை மாநிலம் முழுவதிலும் அலுவல் காரணமாகச் சுற்றுப்பயணம் செய்தார், அக்காலத்தில் இம்மாநிலத்தில் தமிழ், தெலுங்கு, கன்னடம்,

மலையாளம் ஆகிய மொழிகள் பேசிய பகுதிகள் அடங்கியிருந்தன. அதனால் இவர் அவ்வப்பொழுது பல ஊர்களுக்குச் சென்றபொழுது இம்மொழிகளில் ஆங்காங்குக் கிடைத்த ஏட்டு சுவடிகளையும் மராத்தி, அராபி, பாரசீகம், வடமொழி ஆகியவைகளில் எழுதப்பட்ட சுவடிகளையும் சேகரித்தார். இச்சுவடிகளைப் படியெடுத்தற்கும், கல்வெட்டுக்கள் சிலவற்றில் செய்திகளைப் படியெடுத்தற்கும் தன் கைப்பணத்தில் சிலரை அமர்த்தியிருந்தார். பின்னர் இவர் கல்கத்தாவிற்குச் சென்று இந்நூல்களுக்கெல்லாம் ஒரு பட்டியல் எடுக்கத் தொடங்கினர். ஆனால் அது முடிவடைவதற்கு முன்னர் இவர் காலமானர்.

அரசாங்கம் இச்சுவடிகளின் அருமையினை அறிந்து இவருடைய மனைவியாருக்கு 10000 பவுன் விலை கொடுத்து இவைகளை வாங்கி, கல்கத்தாவில் இருந்த ஆசிரிய சங்கத்தாரிடம் (Asiatic Association) ஒப்படைத்தது. கி.பி. 1828இல் சென்னையில் இருந்த கல்விச் சங்கத்திற்குத் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் உள்ள ஏட்டுச் சுவடிகள் மாத்திரம் கல்கத்தாவிலிருந்து கொண்டுவரப்பட்டுக் கொடுக்கப்பட்டது. இச்சுவடிகளை அச்சங்கத்தார் பயன்படுத்தாமையால் கி.பி. 1830இல் சுவடிகள் சென்னை இலக்கிய சங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டன. பின்னர் இச்சங்கத்தாரின் வேண்டுகோளுக்கு ஏற்ப இச்சுவடிகளும், வேறுபலர் தொகுத்த சுவடிகளும் மறுபடியும் சென்னைக் கல்விச் சங்கத்திற்கு மாற்றப்பட்டன. கி. பி. 1853இல் இச்சுவடிகளுக்கு வில்லியம் டெய்லர் என்பவரால் விளக்கமான பட்டியல் எழுதப்பெற்றது.

## கரபாத்திர அடிகள் (18-நூ)

இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. தம்முடைய கையையே உண்கலமாகக்கொண்டு இரந்து உண்டு வாழ்ந்து வந்ததால் கரபாத்திர அடிகள் என்று அழைக்கப்பட்டார். இவர் தாயுமான அடிகளாரிடம் அருளுரை பெற்று உடனுறைந்த மாணவர்களில் ஒருவர்.

**வாழ்ந்த காலம் :** தாயுமானவர் வாழ்ந்த காலமாகிய கி.பி. 18ஆம் நூற்றுண்டு.

நூல்: தாயுமானவர் வீடுபேறு அடைந்தபோதுபாடிய இரங்கற்பா.

**கரபாத்திரயோகீசுவரர் ( )**

இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை.

நூல்: வேதாந்த மனன சிந்தாமணி, இது வேதாந்த நூல்.

**கருங் குழலாதனார் (சங்க காலம்)**

வே. பெ: கருங்குளவாதனார்.

கருங்குளம் இவருடைய ஊராக இருக்கலாம் என்றும், இவருடைய இயற்பெயர் ஆதன் என்றும், எனவே ஊர்ப் பெயருடன் கருங்குளவாதனார் என்றும் அழைக்கப் பெற்றார் என்றும கூறுப. திருநெல்வேலி மாவட்டத்திலும் இராமநாத புரம் மாவட்டத்திலும் கருங்குளம் என்ற பெயரில் ஊர்கள் உண்டு.

திரு ஔவை சு. துரைசாமிப்பிள்ளையவர்கள், இப்புலவரைக் கருங்குழலாதனார் என்று அழைப்பது பொருந்தாது என்றும், இவருடைய இயற்பெயர் ஆதனார் என்றும், பாண்டிய நாட்டில் இப்போது கோட்டைக் கருங்குளமென வழங்கும் கருங்குளத்தைச் சேர்ந்தவர் என்றும், இவ்வூர் கரிகால் சோழனால் ஆதனார்க்குத் தரப்பட்ட ஊரென்றும், எனவே, இவர் கருங்குளவாதனார் என்று அழைக்கப் பெறுவதுதான் பொருந்தும் என்றும் கூறுவர்.

புலவர் ஆண்பாலாராக இருந்து ஆதன் என்ற பெயர் பெற்றிருப்பின் கருங்குழல் என்ற அடைமொழி அவரது கூந்தலைக் குறிக்க ஏற்பட்டிருக்காது என்று கருதலாம்.

நூல்: புறநானூறு 7,224.

**கருணாகர அடிகள் ( )**

வே. பெ: கருணாகர சாமிகள்

நூல்: உபநிடதம். இந்நூலுக்கு ஈசூர் சச்சிதாநந்த அடிகள் உரை எழுதியுள்ளார்.

இந்நூல் ஞானசாதனநிலை முதலியன பற்றி விளக்கி உரைப்பது. 32 செய்யுட்களைக் கொண்டது. இது ஒரு மொழி பெயர்ப்பு நூலாகும்.

## *கருணாகரக் கவிராயர் (        )*

வாழ்விடம்: தொண்டைநாடு.

நூல்: திருவோத்தூர்ப் புராணம். இந்நூல் திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற திருவோத்தூரின் சிறப்பைக் கூறும். இப்புராண நூல் 27 சருக்கங்களையும் 1016 செய்யுட்களையும் கொண்டது.

## *கருணாகரன்* (18-நூ)

தந்தை: திருவொற்றியூரினைச் சேர்ந்த தேப்பெருமாள்.

நூல்: வேதபுரித் தல புராணம்.

## *கருணேசர்* (18-நூ)

இவர் கச்சியப்ப முனிவரின் மாணவர்.

நூல்: தெய்வானைபுராணம்' இந்நூல் முருகப்பெருமானின் மனைவியாகிய தெய்வயானை அம்மையாரின் வரலாற்றினை உரைப்பது. இதில் 3 காண்டங்களும், 73 படலங்களும் 3242 விருத்தங்களும் உள்ளன. இந்நூல் அச்சிடப் பெற்றதாகத் தெரியவில்லை. நூலின் படியில் இடையில் சில ஓலைகள் கரணப்படவில்லை.

## *கருணைதாசர்* (19-நூ)

வே. பெ: கரும்புலவர்.

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் வாசுதேவநல்லூரைச் சேர்ந்த பனங்காட்டூர்.

இவர் திருத்தலப்பயணமாகக் கொங்குநாட்டிற்குச் சென்ற போது அவிநாசி என்னும் தலத்தில் பத்து ஆண்டுகளுக்கு மேல் தங்கியிருந்தார். அதுகாலை அத்தலத்தில் உள்ள பெருங் கருணையம்மனிடம் பேரன்பு கொண்டு வழிபட்டார். இவர் அவிநாசியில் தங்கியிருந்த போது தங்கமுத்துப் புலவர் என்பவர் இவரிடம் பல நூல்களைக் கற்றுத் தேர்ந்தார்.

**நூல் :** 'கருணாகரமாலை' 'இசைப்பாடல்கள்'.

## கருணைப்பிரகாசர் (17-நூ)

**ஊர் :** துறைமங்கலம்.

**தந்தை :** குமாரசாமி தேசிகர்.

இவருடன் பிறந்தோர் சிவப்பிரகாச சாமிகளும் வேலையரும் ஆவர். ஆதலின் இவர் கி. பி. 17ஆம் நூற்றுண்டினர்.

இவர் அண்ணாமலை ரெட்டியாரின் ஆதரவில் வெங்களூரில் வாழ்ந்திருந்தார். தம்முடைய 18ஆவது வயதில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

**நூல் :** இட்டலிங்க அகவல், சீகாளத்திப் புராணம் சீகாளத்திச் சருக்கம் வரை, இப்புராணத்தின் எஞ்சிய பகுதிகள் சிவப்பிர-காசராலும் வேலையராலும் பாடி முடிக்கப் பெற்றன.

## கருணையர் ( )

**வே. பெ.** கருணை ஐயர்.

**நூல்:** சிதம்பரநாதர் பதிகம்.

**இந்நூல்:** நடராஜப் பதிகம் போன்ற அமைப்புடையது. தில்லை நாதன் பெருமையை ஆசிரிய விருத்தங்களால் புகழ்ந்து கூறுவது. இந்நூலினைப் பொன்னம்பல முதலியார் என்பவர் கி. பி. 1874ஆம் ஆண்டிலும், சரவண பண்டிதர் என்பவர்

கி. பி. 1879-ஆம் ஆண்டிலும் பதிப்பித்துள்ளனர். முதல் பதிப்பில் பதினொரு ஆசிரிய விருத்தங்களும், வெண்பாவில் அமைந்த காப்புச் செய்யுள் ஒன்றும் அமைந்துள்ளன. இரண்டாவது பதிப்பில் பத்துச் செய்யுட்கள் உள்ளன.

## கருணையானந்த சாமி (          )

**நூல்:** குருநாதர் சதகம்,

## கருத்தமுத்துப்பிள்ளை ஆ. (19-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டத்தில் எட்டயபுரம்.

**தந்தை:** ஆண்டியப்பபிள்ளை.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1816-1895.

இவர் தமிழ்க் கல்வியும் சமயக் கல்வியும் நிரம்பப் பெற்றவர். இவருக்குப் பத்தொன்பதாவது வயதில் திருமணம் நடைபெற்றது. இருபத்தாறுவது வயதில் உடையவர் பூசையை மேற்கொண்டார். எட்டயபுரம் மன்னரிடம் கணக்கராகவும் தானாதிபதியாகவும் பணியாற்றினார். எத்துணை வேலைகளில் இருந்தாலும் சிவவழிபாட்டினை நாள்தோறும் முதன்மையாகக் கொண்டிருந்தார். கல்விச் செல்வமும் ஒருங்கே வாய்க்கப் பெற்றிருந்தார்.

**நூல்;** திருச்செந்தூர் முருகர் கலித்துறையந்தாதி, திருச்செந்தூர் முருகர் பதிற்றுப்பத்தந்தாதி, திருச்செந்தூர் முருகர் வெண்பாவந்தாதி, கழுகுமலைப் பள்ளு, வேளாளர் பள்ளு, வில்வவனப்புராணம், சிவகிரி குமரக்கடவுள் பிள்ளைத் தமிழ், சிவதத்துவசுதாநிதி (மொழிபெயர்ப்பு), திருபுவனப்புராணம், வில்வவனபுராணம்.

வேளாளர் பள்ளு என்பது வேளாளர்களுடைய மரபை விளக்கிக் கூறுவது. வில்வவனபுராணம் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள நயினார் கோவிலின் பெருமையைக் கூறுவது. மருதூர்புராணம் என்னும் வடமொழி நூலின் மொழி

பெயர்ப்பாகும். 1200 செய்யுட்களைக் கொண்டது. இந் நூலின் முடிந்தவுடன் இராமநாதபுரம் மன்னர் இவரை யானையில் ஏற்றி, நகர்வலம் செய்து பரிசுகள் வழங்கினர்.

திருபுவனபுராணம், தருமபுரம் பண்டாரசந்நதிகளின் வேண்டுகோளுக்கு ஏற்ப அவ்வூரைப்பற்றிய வடமொழிப் புராணத்தை மொழிபெயர்த்துப் பாடப்பெற்றதாகும். இந்நூல் 16 படலங்களையும், 800 செய்யுட்களையும் கொண்டது.

## கருப்பணப் பண்டாரம் (19-நூ)

**நூல்:** பாண்டிய நாட்டில் பொந்தம்புளி என்னும் ஊரில் வாழ்ந்த இராமலிங்கம் பிள்ளை என்பவர் இயற்றிய 'கந்தபுராண வண்ணம்' என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கருப்ப பிள்ளை ( )

**நூல்:** திருநெய்த்தானம் இளங்கோவையம்மன் பதிகம்.

## கருப்பையாப் பாவலர் (19-நூ)

**ஊர்:** மதுரை மாவட்டம் மேலூர்க் கோட்டத்தைச் சேர்ந்த கொட்டாம்பட்டி.

**தந்தை:** மருதக் கொத்தனர். யாதவர் குலத்தினர்.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1864 - 1907.

அறிஞர்கள் பலரிடம் தமிழ்க்கல்வி பயின்ற இவர், செய்யுள் பாடும் திறம்பெற்றுச் செல்வர்கள் மீது பல பாடல்கள் பாடினர்.

பல இடங்களுக்குச் சென்று, சமயத்திற்கு ஏற்றவாறு செய்யுட்கள் பாடுவதில் வல்லவராக விளங்கினார். அந்நாளில் முறையூரில் சிறந்த வள்ளலாக விளங்கிய சி. சண்முகம் செட்டியார் என்பவரைப் பாராட்டி பல செய்யுட்கள் இயற்றி உள்ளார். இவர் குன்றக்குடி முருகப்பெருமானையும்,

திருப்பரங்குன்றம் முருகப்பெருமானையும் போற்றி இரண்டு வெண்பாக்கள் பாடியுள்ளார். ஒருசமயம் இவர் சென்னைக்குச் சென்றிருந்தபோது திருமயிலையில் சிறந்த செல்வராக விளங்கிய செந்தில் வேலு முதலியார் என்பவரைப் பாராட்டும் வகையில் திருமயிலை. திருவான்மியூர். திருவல்லிக்கேணி. திருமுல்லை வாசல், திருவாலங்காடு, திருவொற்றியூர், காஞ்சிபுரம். திருவண்ணமலை, மதுரை, செந்தூர், புலியூர்ப்பாக்கம் என்ற பன்னிரண்டு ஊர்களின பெயர்கள் அமையுமாறு செய்யுள் ஒன்று இயற்றியுள்ளார். இதுபோல பலகாரங்களின் பெயர்களையும் அமைத்துச் செய்யுட்கள் பாடியுள்ளார்.

சென்னையில் சிறந்த புலவராக விளங்கிய க.வெ.திருவேங்கட நாயுடு என்பவரது சொற்பொழிவினைப் பாராட்டியும், சங்கந்தி என்ற ஊரில் வாழ்ந்த தமது நண்பரான அண்ணமலைச் செட்டியார் என்பவரை வாழ்த்தியும் செய்யுட்கள் இயற்றியுள்ளார்.

இவர் தமது நண்பரான சண்முகம் செட்டியார் என்பவரின் நோக்கப்படி தனிப்பாடல் திரட்டு இரண்டு பாகங்களையும் அவைகட்குப் பின் பாடப்பெற்ற பாடல்களையும் ஒன்ருகத் தொகுத்துத் தனி செய்யுட் சிந்தாமணி என்னும் பெயருடன் ஒரு நூலாக வெளியிட்டுள்ளார்.

**நூல்:** திருப்பரங்கிரிமாலை, அழகர் பதம், நவரத்தினம், திருப்போரூர் ஆண்டவர், திரிபந்தாதி, கட்டளைக்கலிப்பா, திருப்பல்லாண்டு, சிதம்பரசுவாமி கலாமாலை, வண்ணங்கள், திருக்கோட்டியூர்த் திரிபந்தாதி, திருச்செந்தில் திரிபந்தாதி. ஓரெழுத்தந்தாதி, திருக்கும்பைத் திரிபந்தாதி, இலக்குமியந்தாதி திருமெய்யம் ஓரெழுத்தந்தாதி, மருதூர் நாகநாதர் மாலை, திருமயிலைக் கற்பகாம்பிகை மாலை, நாமகள் இரட்டைமணிமாலை, திருஞான சம்பந்த மாலை, வடமுல்லைவாயில் மாசிலாமணிமாலை, பராசக்தி மாலை, திருக்கோட்டாற்றுக் கலம்பகம், விக்டோரியாராணி சரித்திரம், மயிலைச் செந்தில் வேல முதலியார், ஐந்திணைக்கோவை, பதிகங்கள், முறையூர் மீனுட்சி சுந்தரேசுரர் பிரபந்தத் திரட்டு.

## கருப்பையாப் புலவர் ( )

நூல்: திருக்கோட்டாற்றுக் கலம்பகம்.

## கரும்பிள்ளைப்பூதனார் (சங்ககாலம்)

நூல்: பரிபாடல் 10ஆம் பாடல்.

இப்பாடலிலுள்ள புதுநீர் விழாச் சிறப்பு மிக்க இன்பமளிப்பது. நீர் விளையாட்டின் முறையினை இப்பாடலால் அறியலாம. இதில் வந்துள்ள உவமைகள் யாவும் சிறந்தவை. வைகையின் பேருதவிக்குப் பாண்டியன் கொடையை உவமை கூறி இருத்தலின் அவனிடம் இவருக்கிருந்த அன்பு புலனாகின்றது.

## கருவூர்க் கண்ணம்பாளனார் (சங்ககாலம்)

வே. பெ: கள்ளம்பாளனார்; கண்ணன் பரணன்.

அகநானூற்றில் கருவூர்க் கண்ணப்பாளனார், கருவூர்க்கண்ணம் புல்லனார் என இருவர் பாடிய பாடல்கள் உண்டு. இம்மூவரும ஒருவரே என்று கூறுவார் பின்னத்தூர் அ நாராயணசாமி ஐயர்.

இம்மூவரையும் வேறு வேறாகக் கொள்வதே பொருத்தம் உடையது. களப்பாள் என்னும் ஊரைச் சார்ந்தவராக இவர் இருக்கலாம் என்று கூறுப.

நூல்: நற்றினை 148-ஆம் பாட்டு.

## கருவூர்க் கலிங்கத்தார் (சங்ககாலம்)

நூல்; அகநானூறு 183ஆம் பாட்டு.

## கருவூர்க்கோசனார் (சங்ககாலம்)

நூல்: நற்றினை 214ஆம் பாட்டு.

## கருவூர் கிழார் (சங்ககாலம்)

**நூல்:** குறுந்தொகை 170 ஆம் பாட்டு

## கருவூர்ச் சித்தர் ( )

**நூல்:** கருவூரர் நொண்டிமாலை', 'கருவூரர் சூத்திரம் 116' கருவூரர் வெண்பா. பெருந்தொகையில் 1821 ஆம் பாட்டாகிய வாய்க்கும் குருளகத்திருவீதி என்று தொடங்கும் செய்யுளை இவர் பாடினர் என்பர்.

## கருவூர் சேரமான் சாத்தன் (சங்ககாலம்)

**வே பெ:** சாத்தன்; கருவூர்ச் சேரமான் சிரத்தன்; சேரமரபினர்.

இயற்பெயர் சாத்தன் என்றும், சேரமரபினர் என்றும், இவருடைய ஊர் கருவூர் என்றும் கொண்டு இவரைக் கருவூர் சேரமான் சாத்தனர் என்றழைத்தனர் என்று கூறுவது பொருந்துவதாக உள்ளது. கருவூர்ச் சேரமான் சிரத்தன் என்ற பாடம் உண்டு என்று குறிப்பிடுவர். டாக்டர் உ. வே. சாமிநாதையர்.

**நூல்:** குறுந்தொகை 268ஆம் பாட்டு.

## கருவூர்த் தேவர் (9 அல் 10-நூ)

**ஊர்:** திருச்சிக்கு அருகிலுள்ள கருவூர். அந்தணர்.

**காலம்;** கி. பி. 9 அல்லது 10 ஆம் நூற்றுண்டு.

இவர் பல சித்துக்களிலும் வல்லவர் என்று கூறுவர். பரமசிவம் உறையும் பல ஊர்களுக்குச் சென்று ஆங்காங்கு அவ்வவ்விறைவன் மேல் பதிகங்கள் பாடியுள்ளார். தஞ்சைப் பெருவுடையார் கோயிலினைச் சோழன் இராசராசன் கட்டி முடித்துக் குடமுழுக்குச் செய்ய எண்ணியபொழுது அக் கோயிலில் உள்ள லிங்கம் ஆவுடையாரோடு பந்தனமாகாமல் மருந்து இளகிக் கொண்டிருந்ததென்றும், அதுபொழுது

கருவூர்த் தேவர் அங்குச் சென்று தன்னுடைய வாயிலிருந்த தாம்பூல எச்சிலை அவ் இலிங்கத்தின்மேல் உமிழ்ந்தார் என்றும், உடனே இலிங்கமும் ஆவுடையாரும் பந்தனயாயினவென்றும் கூறுவர். இவரைப் பற்றி வழங்குகின்ற கதைகள் பல. தஞ்சைப் பெருவுடையார் கோயிலின் கருவறையின புறச் சுவரின் மேல் காணப்பெறும் சோழர் கால ஓவியத்திலே சடையினையும் முடியினையும் கொண்டு காணப்பெறுகின்றவர் இக் கருவூர்த் தேவரே என்பர். கருவூர் திரு. ஆநிலைக்கோயிலின் திருச்சுற்றில் இவருக்கு ஒரு கோயில் எடுப்பிக்கப் பெற்று கருவூரா சந்நிதி என்று அழைக்கப் பெறுகின்றது. தஞ்சைப் பெருவுடையார் கோயிலின் திருச்சுற்றிலும் இவருக்கு ஒரு கோயில் இருப்பதாகத் தெரிகின்றது. கருவூர்த் தல புராணத்திலே இவருடைய வரலாறு காணப்பெறுகின்றது. கருவூர்த் தேவர் வேறு, கருவூர்ச் சித்தர் வேறு என்பர்.

ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பாக்களிலே இவர் பாடிய பாக்கள் இடம் பெற்றுள்ளன. அப்பாக்கள், திருக் களந்தை ஆதித்தேசுவரம், கீழ்க்கோட்டூர், மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், திருப்பூவனம், திருச்சாட்டியக்குடி, திருவிடைமருதூர், தஞ்சை இராச ராசேசுரம், கங்கை கொண்ட சோழேச்சுரம் ஆகிய ஊர்களிலே எழுந்தருளியுள்ள பெருமான்கள் மேல் பாடப்பெற்றவை. இவர் தாம் பாடிய பதிகங்களின் ஈறறில், கருவூரன், கருவூர வேள் என்று தம்மைக் குறிப்பிடுவார்.

## கருவூர் நன்மார்பனார் (சங்ககாலம்)

நூல்: அகநானூறு 277ஆம் பாட்டு.

## கருவூர்ப் பவுத்திரனார் (சங்ககாலம்)

பவுத்திரன் என்பது பவித்திரன் என்னும் வடச்சொல்லின் திரிபாகும். இது தூய்மையுள்ளவன் என்று பொருள்படும்.

நூல்: குறுந்தொகை 162ஆம் பாட்டு.

## கருவூர்ப் புராண ஆசிரியர் (17-நூ)

இவர் கமலைஞானப் பிரகாசரின் மாணுக்கர்களுள் ஒருவர் 16ஆம் நூற்றுண்டின் இறுதியிலும் 17ஆம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர்.

**நூல்:** கருவூர்ப் புராணம்.

## கருவூர்ப் பூதஞ் சாத்தனுர் (சங்ககாலம்)

**நூல்;** அகநானூறு 50ஆம் பாட்டு.

## கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனுர் (சங்ககாலம்)

**ஊர்:** கருவூர்.

இவர் கோப்பெருஞ்சோழனைப் பாடியுள்ளார்.

**நூல்;** புறநானூறு 219ஆம் பாட்டு.

## கருவூரார்

**நூல்:** கருவூரார் பல திரட்டு 300 (1877), கருவூரார் பூஜாவிதி 38 (1880), கருவூரார் பூஜாவிதி 30 (1888), காயகப்பல்.

கருவூரார் பலதிரட்டு 300: முன்னூற்ருெரு செய்யுட்களைக் கொண்டது, கருக்கிடை, குருக்கிடை, பராபரத்தின் நிலை முதலியவற்றை உரைப்பது. கருவூரார் வரலாறும், நூற் பொருள் அட்டவணையும் நூல் முகப்பில் உள்ளன. அந்தாதி அமைப்பில் அமைந்தது.

கருவூரார் பூஜாவிதி 38. முப்பத்தொரு செய்யுட்களைக் கொண்டது. கருவூரார் தமது அனுபவத்தை இந்நூலில் வெளியிடுகின்ருர். பூசை, தியானம் முதலியன பற்றி விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இந்நூல் அந்தாதியாக அமைந்துள்ளது. தத்துவ முறையில் இறைவனைச் சிந்திப்பது பற்றிக் கூறுவது.

**கல்கி ( )**

**பார்க்க:** கிருட்டிணமூர்த்தி ரா.

**கல்பொரு சிறுநுரையார்** (சங்ககாலம்)

இவர் உவமையாற் பெயர் பெற்றவர். நுரை, கல்லில் மோதுந்தோறும் சிறிது சிறிதாகக் கரைதலைப் போலத் தலைவர் பிரிவை எண்ணுந்தோறும் உயிர் தேய்ந்தழிகிறது என்பதனைத் தலைவி,

'கல்பொரு சிறுநுரை போல
மெல்ல மெல்ல வில்லாகுதுமே'

என்று கூறுகின்ருள். இவ்வழகிய உவமையால், இப்பா-வியற்றிய இப்புலவர் வழக்கம் போல் ஆர் என்னும் உயர்வுப் பன்மை விகுதி சேர்த்து 'கல்பொரு சிறுநுரையார்' என்று அழைக்கப்பெற்ருர்.

**நூல்:** குறுந்தொகை 290ஆம் பாட்டு.

**கல்லாட தேவநாயனுர்** (9-நூ)

**நூல்:** திருக்கண்ணதேவர் திருமறம்.

இது பதினோராந் திருமுறையிலுள்ளது. நக்கீரரும் இப் பெயருடைய பிரபந்தமொன்று செய்துள்ளார்.

**கல்லாடர்-1** (11-நூ)

**வே பெ;** கல்லாடதேவநாயனுர்.

**ஊர்:** கல்லாடம்.

**வாழ்விடம்:** மதுரை.

பாண்டிய நாட்டிலுள்ள சிவனுறையும் தலங்களில் கல்லாடம் என்பது ஒன்று. இது மேற்குக் கடற்கரையில்

கொல்லத்திற்கு அருகில் உள்ளது என்றும் கூறுவர். இத்தலம் 'கல்லாடத்துக் கலந்தினிதருளி நல்லாளோடு நயப்புற வெய்தியும்' என்று திருவாசகத்திற் காணப் பெறுகின்றது, வீரசைவ ஞானாசிரிய மரபு ஒன்று ஹல்லட என்று வழங்கப் பெறுவதாகவும், கல்லாடர் என்ற பெயரோடு ஒருகால் அப்பெயர் ஒற்றுமையுடையதாக இருக்கக் கூடுமென்றும் சிலர் கருதுகின்றனர். இவருடைய பெயர் இயற்பெயரா, ஊர் பற்றி வந்ததா, குடிபற்றி வந்ததா என்பது ஆராய்தற்குரிய ஒன்று.

இவர் கல்லாடம், திருக்கண்ணப்ப தேவர் திருமறம், ஆகிய நூல்களைச் செய்துள்ளார். திருவள்ளுவமாலையில் ஒரு வெண்பாவும் பன்னிருபாட்டியலில் சில சூத்திரங்களும் இவர் பெயரில் உள்ளன. திருக்கோவையாரில் உள்ள துறைகளில் நூறு துறைகளைப் பொறுக்கி ஒவ்வொரு துறைக்கும் ஒவ்வொரு அகவல என்ற முறையில் பாடப்பெற்றது இக் கல்லாடம் என்றும், திருக்கோவையாரின் நலத்தினையும் சிறப்பினையும் உலகறியச் செய்வதே இவருடைய நோக்கம் என்றும் கூறுவர். இந்நூல் அரங்கேற்றம் செய்யப்பெற்ற பொழுது சிவபெருமானே புலவர் கோலத்துடன் வந்து ஒவ்வொரு செய்யுளையும் கேட்டு அதனைப் பாராட்டும் வகையில் தம் திருமுடியைத் துளக்கி மகிழ்ந்தார் என்பர். இந்நூலில் 102 செய்யுட்கள் உள்ளன. முதலாவது அகவல் பிள்ளையாருக்கும் இரண்டாவது அகவல் முருகப்பெருமானுக்கும் வணக்கம் கூறும் செய்யுட்கள் ஆகும். இந்நூலில் உள்ள செய்யுட்கள் சொல்லாலும் நடையாலும் சங்கச் செய்யுட்களையும் பொருளால் இடைக்காலச் செய்யுட்களையும் ஒத்துள்ளன.

இந்நூல், மக்கள் தெய்வ நலத்தில் ஈடுபட வேண்டும் என்னும் நோக்கத்துடன் இயற்றப் பெற்றது. இந்நூலில் மதுரை, திருப்பரங்குன்றம் ஆகியவற்றின் சிறப்புக்கள் புனைத்துரைக்கப் பெற்றுள்ளன. நூல் முழுவதும் சிவபெருமானுடைய அருட் பெருக்கும் முருகனுடைய பெருமையும் கூறப்பெற்றுள்ளன.

இந்நூல் அளவால் சிறியது. ஆனால் இந்நூலில் இராமாயணம், பாரதம், திருவிளையாடற்புராணம், திருத் தொண்டர்புராணம் ஆகிய நூல்களில் உள்ள கதைகள் பல

கூறப்பெற்றுள்ளன. இசை, நாட்டியம், வாட்போர் முறை, அரதனங்களின் வகை முதலியன பற்றிய செய்திகள் காணப் பெறுகின்றன, எல்லாச் செய்யுட்களும் ஆசிரியப் பாக்களால் ஆனவை என்ற முறையில் அகவலோசையையுடையன வென்றாலும் அவ்வோசையிலேயே பல ஒலி நயங்களை, தான் கையாளுகின்ற சொற்கள், சொற்றொடர்களால் ஆசிரியர் புலப்படுத்துகின்றார். இந்நூல் சொல்லணி பொருளணி நிரம்பப் பெற்றது. இந்நூலிலுள்ள அருகிய வழக்குள்ள சொற்களாலும், செறிந்த சொல்லமைப்பாலும் இந்நூலினை முதலில் படித்து எளிதாகப் பொருள் தெரிந்து கொள்ள இயலாது, இதனாலேயே 'கல்லாடம் கற்றவனோடு சொல்லாடாதே' என்றும் 'கல்லாடம் படித்தவனோடு மல்லாடாதே' என்றும் பழமொழிகள் எழத் தலைப்பட்டன.

இந்நூலில் பிட்டுக்கு மண் சுமந்தது, நரியைப் பரியாக்கியது முதலிய திருவிளையாடல்கள் பேசப்படுகின்றன. இதனால் இவருடைய காலம் மாணிக்கவாசகர் காலத்திற்குப் பிற்பட்டது ஆகும், சேரமான் பெருமாள் நாயனாருக்குப்பாணபத்திரனிடம் 'மதிமலிபுரிசை' என்று தொடங்கும் பாசுரம் கொடுத்தனுப்பிய செய்தியும் இந்நூலிற் காணப்பெறுகின்றது இதனால் இவர் காலம் சுந்தரர் காலத்திற்குப் பிந்தியது எனலாம். இக் காரணங்களால் இவருடைய காலம் கி. பி. 11-ஆம் நூற்றாண்டு என்பர். தேவாரம் பாடிய மூவர் பற்றிய செய்திகள் இந்நூலிற் கூறப்பெறவில்லை. திருமுகப் பாசுரம் கொடுத்தனுப்பப் பெற்றது சேரமான் பெருமாளுக்கல்ல பிறிதொரு சேரனுக்கே, மாணிக்கவாசகர் காலம் கி. பி. 3-ஆம் நூற்றாண்டு; ஆகையால் கல்லாடரின் காலம் கி. பி. 6-ஆம் நூற்றாண்டு என்று கொண்டவரும் உண்டு. இவர் சைவ சமயத்தவராயினும் பல சமய ஆராய்ச்சிகளுடையவரென்பது 'சமயக் கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறிப் பொருளிதுவென்ற வள்ளுவன் தனக்கு வளர்கவிப்புலவர்முன் முதற்கவி பாடிய முக்கண் பெருமான்' என்ற இந்நூலின் அடிகளால் தெரிய வருகின்றது.

இந்நூலின் முதல் 37 செய்யுட்களுக்கு மயிலேறும் பெருமான் பிள்ளையின் விளக்க உரையும், எஞ்சிய செய்யுட்களில்

மூன்று செய்யுட்கள் நீங்கலாக மற்ற செய்யுட்களுக்குப் புதுவை சுப்பராய முதலியாரின் பதவுரையும் உள்ளன.

திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்ற நூல் கண்ணப்ப நாயனுரின் வரலாற்றினைச் சுருக்கமாகக் கூறுவது. 38 அடிகளாலாகிய ஆசிரியப் பாவாலமைந்தது. இந் நூல் பதினேராந் திருமுறையில் உள்ளது.

## கல்லாடர்-2 (16-நூ)

இவர் தொல்காப்பியத்திற்கு உரைகண்ட உரையாசிரியர்களில் ஒருவர். தொல்காப்பியத்தில் சொல்லதிகாரத்தில் இடையியல் 13 நூற்பாக்கள் வரை இவருடைய உரை உளது என்பர். இவ்வுரை அத்துணைச் சிறந்ததல்ல என்பது பலருடைய கருத்து. இவருக்கு முன் எழுந்த பல உரைகளிலிருந்து தமக்கு விருப்பமானவற்றை எடுத்துச் சேர்த்த உரையாக இது தோன்றுகின்றது. பலஇடங்களில் இளம்பூரணர், சேனுவரையர் ஆகியோர் காட்டிய எடுத்துக்காட்டுக்களை அப்படியே கொள்கின்றூர்.

## கல்லாடனார் (சங்ககாலம்)

ஊர்: கல்லாடம்

தொல்காப்பியத்திற்கு உரைசெய்த கல்லாடரினும் இவர் வேருவர். பகைவருடைய நீர்நிலையைக் கெடுத்தல், கடிமரந்தடிதல், அவர்முரசைக் கைக்கொள்ளுதல் முதலிய தலைவர்களின் வீரச்செயல்களும், கணவர் இறந்தபின் அவருடைய மனைவியர் கைம்மை நோன்பு நோற்றிருத்தலும் இவரால் கூறப்பெற்றுள்ளன. இவர் பாடிய மறக்களவழி, ஏர்க்களவுருவகமென்னும் துறைகள் பெரிதும் நயப்பாடுடையன.

நூல்: அகநானூறு: 9, 83, 113, 171, 199, 209, 333.
குறுந்தொகை: 23, 25, 371, 385, 391.

### கல்விக்களஞ்சியப்புலவர் (19-நூ)

ஊர்: மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த மேலூர். சீருப்புராணம் பாடிய உமறுப்புலவரின் வழியில் தோன்றியவர் என்று கூறுவர். மறைவு கி. பி. 1891.

நூல்: சீருப்புராண வண்ணம், சித்திரகவித்திரட்டு. சீருப்புராண வண்ணம் நபியின் வரலாறு உரைக்கும் நூல். இவர் இஸ்லாமிய சமயத்தைச் சேர்ந்தவராயினும், முருகக் கடவுள் மீதும் சில பாடல்கள் பாடியுள்ளார்.

### கவி சிவலிங்கஞ்செட்டியார் (19-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் அருப்புக்கோட்டை.

இவர் தம் ஊரில் வாழ்ந்த வள்ளிநாயகம்பிள்ளை என்னும் புலவர் பால் கல்வி கற்றுப் புலமை அடைந்தார்.

நூல்: வள்ளிநாயகம்பிள்ளை இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

### கலியப்பெருமாள் பிள்ளை ( )

ஊர்: தஞ்சாவூர்

நூல்: திருமழுவாடி புராண வசனம், சிற்றின்ப சிரோன்மணி திருமழுவாடி புராண வசனம் என்னும் நூல் கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள திருமழுவாடியின் மான்மியத்தை உரை நடையிற் கூறும் நூலாகும். இந்நூல் இருபத்துநான்கு அத்தியாயங்களைக் கொண்டது.

### கலியாணசுந்தரக் கவுண்டர் (20-நூ)

ஊர்: கோயம்புத்தூர் மாவட்டத்தில் உள்ள செட்டிபாளையம்.

தந்தை: நஞ்சப்பக் கவுண்டர்

நூல்: 'கந்தன் சித்திர பந்தனமாலை' இந்நூலில் இரட்டை நாக பந்தனம், முரசபந்தனம், கமலபந்தனம் முதலிய சித்திர கவிகள் உள்ளன.

### கலியாணசுந்தரம்பிள்ளை-1 (  )

ஊர்: முதுகுளத்தூர்.

நூல்: மெய்அரிச்சந்திர நாடகம்.

### கலியாணசுந்தரம்பிள்ளை-2 (  )

ஊர்: கும்பகோணம்.

தந்தை: வெள்ளைவாரணம்பிள்ளை.

நூல்: 'நாட்டரசன் கோட்டை என்னும் ஊரினைச் சேர்ந்த கண்ணப்பச் செட்டியார் மீது காதல்'

### கலியாணசுந்தரம்பிள்ளை-3 (  )

ஊர்: விருந்தாசலம். தந்தை: தியாகராசக் கவிராயர்.

நூல்: தனிப்பாடல்கள்.

### கலியாணசுந்தரமுதலியார் (20-நூ)

ஊர்: சென்னையை அடுத்துள்ள பறங்கிமலை; பின்னுளில் பூவிருந்தவல்லியில் வாழ்ந்தவர்.

தந்தை: அண்ணுச்சாமி முதலியார்.

தாய்: உண்ணுமுலையம்மையார்.

வாழ்ந்தகாலம்: 10—8—1854 - 28—12—1918.

இவர் தொடக்கத்தில் பூங்காவனக் கவிராயரிடம் கல்வி கற்ருர். சிலகாலம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியிற் படித்தார். பின்னர் சென்னையிலிருந்து இராமலிங்கத் தம்பிரானிடம் தமிழ் நூற்களைக் கற்ருர். திருக்கழுக்குன்றத்தில் வாழ்ந்த தசாவதான செகந்நாதப் பிள்ளையிடம் தமிழ் நூற்களைக் கற்றுத் தெளிந்ததோடு அவதானம் செய்யவும் கற்றுக் கொண்டார். கி. பி. 1898ஆம் ஆண்டில் ஒரு பேரவையில்

அவதானம் செய்து காட்டி அட்டாவதானம் கலியாண சுந்தர முதலியார் ஆனார். இவருக்குச் சித்தாந்த சரபம் என்ற மற்றொரு பட்டமும் உண்டு. இவருக்கு ஆங்கிலமும் நன்கு தெரியும். தம்முடைய ஆசிரியர் செகந்நாதப்பிள்ளையிடத்தில் நிறைந்த அன்புடையவர். இவர் அவதானம் செய்த காலத்தில் இவருக்கு வந்த பரிசுகளையெல்லாம் தம்முடைய ஆசிரியர் செகந்நாதப்பிள்ளையிடமே கொடுத்து விட்டார். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை, வடலூர் இராமலிங்க அடிகள் ஆகியோருடன் இவருக்குத் தொடர்பு உண்டு.

இவர், கி. பி. 1879இல் பார்ப்பாத்தி என்ற பெண்ணை மணஞ்செய்துகொண்டார். இரண்டு ஆண் மக்களும் ஒரு பெண்மகவும் இவருக்கு உளர். சிலகாலம் இவர் பறங்கிமலையில் அரசாங்க அலுவலில் இருந்தார். பின்னர் தம் மைத்துனருடைய வாணிப நிலையத்தில் பணிபுரிந்தார். வாழ்நாள் முழுவதும் வறுமையிலே உழன்றார். இருப்பினும் இவருடைய நாட்டம் எல்லாம் தமிழ் நூற்களைக் கற்பதிலும் பிறருக்கு அவைகளைப் பாடஞ்சொல்வதிலுமே இருந்தது. சைவ சமயச் சொற்பொழிவுகள் செய்வதில் வல்லவர். இவருக்கு வாழ்க்கையில் பலவியத்தகு நிகழ்ச்சிகள் நடந்ததாகச் சொல்வார்கள். சென்னை சிவனடியார் சங்கத்திற்கும், சிவனடியார் தவ யாத்திரைச் சங்கத்திற்கும் இவர் தலைவராக இருந்து தொண்டாற்றினார். மறைமலையடிகளாரோடு சேர்ந்து மெய்கண்ட சந்தான சபை என்ற ஒரு அவையை நிறுவினார். இருவரும் ஒரு நூல் நிலையம் அமைத்தனர்.

மக்களும் மனைவியும் மறைய இவர் தனியரானார். தம்முடைய கடைசிக் காலத்தில் இவருடைய உள்ளம் துறவறத்தை மேற்கொள்ள விரும்பிற்று, காஞ்சிபுரத்தில் மெய்கண்ட சந்தான ஞானபீடத்திலிருந்த ஞானப்பிரகாச சாமிகளிடம் துறவு நிலையை ஏற்றார். இவர் யதீந்திரர் என்னும் துறவப்பெயரையும் பெற்றார். சென்னை அருணாசலேசுரர் கோயில் திருவிழாவில் இவருக்கு ஏற்பட்ட ஒரு விபத்தினால் உடல்நலங்குன்றி கி. பி. 1981இல் மறைந்தார். திருவொற்றியூரில் இவர் உடல் அடக்கம் செய்யப்பட்டது. இவருடைய சமாதி நிலையம் அழகாக அமைக்கப்பெற்ற

'மன அழகர் மண்டபம்' என்ற பெயருடன் இன்றும் விளங்குகின்றது.

நூல்: திருப்பாசூர்ப் புராண வசனம், திருவலிதாயபுராண வசனம், திருவேற்காட்டுப் புராண வசனம், திருவொற்றியூர்ப் புராண வசனம், சீகாளத்திப்புராண வசனம், சித்தாந்த சாதனக் கட்டளை, சித்தாந்த தசகாரியக் கட்டளை, மாசிலாமணியீசர் பதிகம், கற்பக விநாயகர் பதிகம், காமாட்சியம்மன் பதிகம், சேக்கிழார் வரலாறு, திருவான்மியூர்ப் புராணம், தாயுமானவர் பாடற்றிரட்டு - உரை, பட்டினத்தார் பாடற்றிரட்டு - உரை ஏகாம்பரேசர் பதிகம், சுந்தர விநாயகர் பதிகம், திருக்கழுக் குன்றம் திரிபுர சுந்தரி மாலை, சைவசித்தாந்த வசன பூஷணம், இலௌகிக போஜன விதி, செய்யுளிலக்கணம், அகத்திய பஞ்சகம், கடம்பன் கவசம், பூவாளூர்ப்புராணம், செங்கல்வபுரி மஹாத்மிய ஸாரம், பாடி என வழங்கும் திருவலிதாயபுராணம். சித்தாந்தம் என்னும் இதழின் ஆசிரியராக 1918ஆம் ஆண்டிலிருந்து பணிபுரிந்தார். திருவருட்பா, திருவேற்காட்டுப் புராணம், சிவப்பிரகாசம், சித்தாந்தக் கட்டளை, முதலிய நூல்களைப் பதிப்பித்துள்ளார்.

கடம்பன் கவசம் என்னும் நூல் முருகனைத் துதிப்பதாகும். இந்நூல் அகத்திய பஞ்சகம், இடும்பன் கவசம் என்னும் நூற்களுடன் கி. பி. 1883இல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. செங்கல்வபுரி மஹாத்மிய ஸாரம் என்னும் நூல் வடமொழி யிலிருந்து மொழிபெயர்க்கப் பெற்றது. செங்கற்பட்டு என வழங்கும் செங்கல்வபுரி மஹாத்மிய சாரம் என்பது இந்நூலின் முழுப்பெயராகும். செங்கற் பட்டின் புராண வரலாறும் பிற்காலத்திய சரித்திர வரலாறும் இந்நூலில் இடம் பெற்று உள்ளது. 1880இல் அச்சிடப்பெற்றுள்ளது. பாடி என வழங்கும் திருவலிதாயப்புராணம் என்னும் நூல் பாடி என வழங்கும் திருவலிதாயத்தில் உள்ள மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றின் சிறப்புக்களைக் கூறுவது.

## கலியாணசுந்தரமுதலியார், திரு. வி. க. (20-நூ)

ஊர்: சென்னையைச் சேர்ந்த செங்கற்பட்டு மாவட்டம் துள்ளம் என்னும் சிற்றூர்.

தந்தை: விருத்தாசல முதலியார். தாய்; சின்னம்மாள்.

வாழ்ந்த காலம்; கி. பி. 1883 - 1953.

கலியாணசுந்தர முதலியாரின் முன்னோர்கள் திருவாரூரில் வாழ்ந்த காரணத்தால் தன் பெயருக்கு முன்னால் 'திரு' என்பதனையும் சேர்த்துக் கொண்டார், இவர் முதலில் தம் தந்தையாரிடமே கல்வி பயின்றார். அதன்பின் வெஸ்லி கல்லூரியிலும் கல்வி கற்றார். ஓராண்டு காலம் நோயினாலும், இரண்டாண்டுகள் குடும்பத் தொல்லைகளாலும் படிக்காமல் விட்டு விட்டார், 1898 தொடங்கி 1904ஆம் ஆண்டு வரை தொடர்ச்சியாகப் படித்தார். பின்னர் யாழ்ப்பாணம் நா, கதிரைவேல் பிள்ளையிடம் தமிழ் பயின்றார், அத்தொடர்பால் இவருக்குத் தமிழ்ப்பற்று மிகுதியாயிற்று. அப்போது ராயப்பேட்டை பாலசுப்பிரமணிய பக்தசன சபையிலும், திருவல்லிக்கேணிச் சிவனடியார் திருக்கூட்டத்திலும் தொண்டாற்றினர். மயிலை மகாவித்துவான் தணிகாசல முதலியாரிடம் சித்தாந்த சாத்திரம் பயின்றார். மறைமலை அடிகளிடம் சில இலக்கிய நூல்களைக் கற்றார், பல பெரியோர்களோடும் பழகிப் பல்வேறு சமய உண்மைகளை உணர்ந்து கொண்டார். இசுலாமியச் சமய நூல்கள் சிலவற்றைக் கற்று அச்சமயத்தைப் பற்றியும் அறிந்து கொண்டார். சென்னை உயர்நீதி மன்ற நடுவர் சர். டி. சதாசிவ ஐயர், அன்னிபெசண்ட் அம்மையார், எஸ். சீனிவாச ஐயங்கார ஆகியோரிடம் பழகிப் பலதிறப் பொதுத் தொண்டுகளில் ஈடுப்பட்டார். ஸ்பென்சர் நிறுவனத்தில் சிறிது காலம் வேலையிலிருந்தார். பின்னர் சென்னை ஆயிரம் விளக்குப் பகுதி ஆதி திராவிடர் பள்ளியில் ஆசிரியராகவும் அதன்பின் இராயப்பேட்டை கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் பணிபுரிந்தார். சைவ சித்தாந்த மகாசமாஜம் ஆதரவில் சொற்பொழிவுகளாற்றிப் பெரும் புகழ் பெற்றார். 1917இல் நாடெங்கும் தன்னுரிமைக் கட்சி மிகுதிப்பட்டது. அப்போது அன்னிபெசன்ட், அருண்டேல், வாடியா ஆகிய மூவரும் கைதாயினர். அதைக் குறித்து நாட்டில் பெருங்கிளர்ச்சி ஏற்பட்டது. நீதி கட்சி தன்னுரிமைக் கட்சியைத் தடுக்க முயன்றது.

அப்போது வெளிவந்த 'திராவிடன்' என்ற பத்திரிகையில் சமயப் போராட்டம் தலைவிரித்தாடியது. திரு. வி க. தன்னுரிமைக் கட்சியோடு சேர்ந்து இந்து சமயத்தைத் தாக்கும் கட்சியை ஒழித்துக்கட்ட எண்ணினார். இந்நிலையில் 'தேசபக்தன்' இதழில் ஆசிரியராக அமர்ந்து தொண்டாற்றினார். திரு.வி.க.வின் உரைநடை இனிய உரைநடை. இவர் தேசபக்தனில் எழுதிய தலையங்கங்கள் தமிழ் மக்களைத் தட்டியெழுப்பின. இந்தியாவிலேயே முதற் தொழிற்சங்கமாகிய 'சென்னைத் தொழிலாளர் சங்கத்தை' வாடியா என்ற அறிஞரின் துணை கொண்டு 27—4—1918இல் தோற்றுவித்தார். அரசியலில் மிக ஈடுபட்டு எழுத்தாலும், பேச்சாலும் அருந்தொண்டு ஆற்றினார் பற்பல மாநாடுகளுக்குத் தலைமை தாங்கினார். சென்னை பக்கிங்காம் ஆலை தொழிலாளர்களுக்காக முன்னின்று தொழிலாளர் நலன்களைக் காத்தார்.

இவர் சிறுவராயிருந்த போதே நாட்டு விடுதலையில் நாட்டங்கொண்டார். சுரேந்திரநாதர், விபின்சந்திரர் முதலியோருடைய பேச்சுக்கள் திரு வி. க வின் ஊக்கத்திற்கு ஆக்கம் விளைவித்தன. 1912இல் கமலாம்பிகை என்ற அம்மையாரை மணந்து இல்லறம் நடத்தினார். ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தை ஒன்றும் பிறந்தது: துணைவியார் மறைந்தார். பின்னர் மணஞ் செய்து கொள்ளாமல் தம்முடைய தமையனார் உலகநாத முதலியாரின் குடும்பத்தில் ஒருவராக விளங்கினார். சமரசச் சன்மார்க்கக் கொள்கையினையுடைய இவர் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற நெறியினர். 1912ஆம் ஆண்டில் காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தைத் தென்னாட்டில் முன்னின்று நடத்தினார். மாவட்ட மாநாடுகளில் தலைமை தாங்கி அவற்றைச் சிறப்புற நடத்தினார். 1925ஆம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் மாகாண மாநாடு திரு. வி.க. வின் தலைமையில் கூடியது. இம்மாநாட்டில்தான் பெரியார் ஈ. வே. இராமசாமி திரு. வி. க. வுடன் கருத்து வேற்றுமை கொண்டு பிரிந்தார்.

சில காரணங்களால் திரு. வி. க. தன்னுரிமைக் கட்சியின் பெரும் பொறுப்புக்களிலிருந்து விலகினார். பின்னர் அரசியல், தொழிலாளர் இயக்கம், சமய நிலையங்கள், இலக்கியக் கழகங்கள் இளைஞர் முன்னேற்ற அமைப்புகள், சீர்திருத்தத் துறைகள்,

சீவகாருண்ய சங்கங்கள் முதலிய பலவற்றிலும் தொடர்பு கொண்டு வாழ்நாள் முழுவதும் ஓயாது தொண்டாற்றினர். பெண் சமுதாயத்திற்கு அவர் ஆற்றிய தொண்டு ஒப்பற்றது. பெண் பிறவியே உயர்ந்தது என்றும், பெண்மையே விழுமிய பண்பு என்றும் அடிக்கடி அவர் பேசியும் எழுதியும் வந்தார். இல்வாழ்க்கையே சிறந்த நெறி என்று போற்றினர். வாழ்க்கை வெறுப்பினால் மேற்கொள்ளும் போலித்துறவைக் கடிந்தார். தீண்டாமை ஒழிப்பிலும், சாதி வேற்றுமை ஒழிப்பிலும் அவருக்கு மிக்க ஆர்வம் இருந்தது. காந்தியடிகளின் அகிம்சைக் கொள்கையைத் தமது எழுத்தாலும், பேச்சாலும் பரவச் செய்தார். இப்பெரியார் 1953ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 17ஆம் நாள் இறைவன் திருவடி சேர்ந்தார்.

நூல்: திருத்தொண்டர் புராண அரும்பதவுரை, மனித வாழ்க்கையும் காந்தியடிகளும், திருக்குறள்-முதல் 10அதிகாரம் விரிவுரை, பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை, தமிழ்ச்சோலை, தமிழ்த்தென்றல், இந்தியாவும் விடுதலையும், பரம்பொருள் அல்லது வாழ்க்கை வழி, உள்ளொளி, நாயன்மார் வரலாறு, இருமையும் ஒருமையும், சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து, இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், என் கடன் பணி செய்து கிடப்பதே, சைவத்தின் சமரசம், சைவத்திறவு, சமரச சன்மார்க்கம், தமிழ்நாடும் நம்மாழ்வாரும், இமயமலை அல்லது தியானம், ஆலமும் அமுதமும், கடவுட்காட்சியும் தாயுமானாரும், உரிமை வேட்கை அல்லது நாட்டுப்பாடல், தமிழ் நூல்களில் பௌத்தம், முருகன் அருள்வேட்டல், திருமால் அருள்வேட்டல், கிறிஸ்துவின் அருள்வேட்டல், கிறிஸ்துவின் மொழிக்குறள், நாயன்மார் திறம், நினைப்பவர் மனம், சித்தமார்க்கம், புதுமை வேட்டல், சிவனருள் வேட்டல், பொதுமை வேட்டல், இருளில் ஒளி, சமரச தீபம், முதுமை உளறல், படுக்கையில் பிதற்றல், அருகன் அருகே அலலத! விடுதலைவழி, பொருளும் அருளும் அல்லது காந்தீயமும் மார்க்சீயமும்.

திருத்தொண்டர் புராண அரும்பதவுரை, பத்திரிகையில் திங்கள்தோறும் பகுதி பகுதியாக வெளிப்படுத்தப்பட்டது. மனித வாழ்க்கையும், காந்தியடிகளும் என்னும் நூல் காந்தி அடிகளின் கொள்கை, நோக்கம், தொண்டு முதலியவைகள்

குறித்து எழுதப்பட்டது. பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை என்ற நூல் பெண் குலத்தின் பெருமையை உயர்த்துவதற்காக எழுதப்பட்டது. தமிழ்ச்சோலை கட்டுரைத் தொகுப்பு. தமிழ்த்தென்றல் சொற்பொழிவுகளின் தொகுப்பு.

### கலியாண சுந்தர யதீந்திரர் ( )

நூல்: 'செய்யுள் இலக்கணம்' (1917).

### கலியாண சுப்பிரமணிய ஐயர் ( )

நூல்: 'தருமநாடகம்' (1888). இந்நூல் தருமர் வைகுந்தம் சென்ற வரலாற்றினை நாடக வடிவில் கூறுவது. உரைநடையிலும் செய்யுளிலுமாக அமைந்தது.

### கலியாணராம சாஸ்திரி (20-நூ)

ஊர்: சோழநாட்டில் பருத்தியூர்.

தந்தை: கிருட்டிணசாத்திரி.

நூல்: ருக்மணி பரிணயம். இந்நூல் இசைப் பாடல்களால் ஆகியது.

### கலைக்கோட்டுத் தண்டர் ( )

நூல்: கலைக்கோட்டுத்தண்டு. நூல் செய்ததால் பெற்ற பெயருக்கு எடுத்துக்காட்டாக இறையனார் களவியல் உரை இந்நூலைக் கூறும். இடுகுறியாற் பெற்ற பெயருக்கு எடுத்துக் காட்டாக இந்நூலை மயிலைநாதர் கூறுவர்.

### கவிசுப்பரச உடையார் ( )

பார்க்க: சுப்பரச உடையார்.

### கவிக்களஞ்சியப் புலவர்–1 (18-நூ)

தந்தை: உமறுப்புலவர்.

வாழ்ந்தகாலம்: கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி.

நூல்: நபி அவ்தார அம்மானை.

இந்நூல் 289 கண்ணிகளைக் கொண்டது. நபியின் வரலாற்றைக் கூறுவது.

## கவிக்களஞ்சியப் புலவர்-2 (    )

ஊர்: புதுப்பாகை.

தந்தை: கருப்பன்.

நூல்: வேதாளக்கதைச் செய்யுள். இந்நூல் 850 செய்யுள்களைக் கொண்டது. இந்நூலில் 25 கதைகள் உள்ளன. இக்கதைகள் சிவபெருமான் சாபத்தால் வேதாளமாக மாறிய அந்தணன் ஒருவன் விக்கிரமாதித்தனுக்குச் சொல்லியவை ஆகும்.

## கவிக்குஞ்சர பாரதி (19-நூ)

வே. பெ கோடீசுவரபாரதி, ஆனை ஐயர்.

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் பெருங்கரை.

தந்தை: சுப்பிரமணிய பாரதி.

வாழ்ந்தகாலம்: கி பி. 1810-1896.

இவர் இளமையில் தமிழிலும், வடமொழியிலும், இசையிலும் தேர்வு பெற்றார். மதுரகவி பாரதியார் என்பவரிடம் பயின்று செய்யுள்கள், பதங்கள், கீர்த்தனங்கள் இயற்றத் தொடங்கினார். இவருடைய பாடல்களில் பக்திப் பெருக்கினையும், சொற்சுவை பொருட்சுவை இசையின்பம் இன்ன பிற சிறப்புக்களையும் காணலாம்.

இவர் சிவகங்கைப் பெருநிலக்கிழாராகிய கௌரிவல்லபராசாஎன்பவரின் அவைக்களப்புலவராக இருந்து கவிக்குஞ்சரம் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார். பின்னர் இராமநாதபுரம் அரசர் முத்துராமலிங்க சேதுபதியின் அவைக்களப் புலவரானார். சேதுபதியின் சகோதரர் பொன்னுச்சாமித் தேவரின் வேண்டுகோளின் பேரில் 1865ஆம் ஆண்டில் அச்சியப்பாது கந்த-

புராணத்தைக் கீர்த்தனங்களாகவும், விருத்தங்களாகவும் இயற்றத் தொடங்கி ஐந்து ஆண்டுகளுக்குள் முடித்தார். இந்நூல் கந்தபுராணக் கீர்த்தனை என்று வழங்குகிறது. இதனுடன் இவர் கவிக்குஞ்சரம் என்னும் பெயரினையே முத்திரையாகக் கொண்டு பல தனிக் கீர்த்தனைகளையும் இயற்றி உள்ளார்.

நூல்: பேரின்பக் கீர்த்தனைகள், அழகர் குறவஞ்சி, அழகர் கலம்பகம், மதுரை மீனாட்சி அம்மன் மீது அடைக்கலமாலை, கயற்கண்ணிமாலை, திருவேங்கடமாலை, திருமுகவிலாசம், வேங்கைக் கும்மி.

## கவிக்குஞ்சர ஐயர் (        )

ஊர்: பாண்டியநாட்டில் உள்ள வேம்பத்தூர். சோழிய அந்தணர்.

நூல்: அழகர் கலம்பகம், அழகர் பிள்ளைத்தமிழ்.

## கவிகுமுத சந்திரபண்டிதன் திருநாராயணப்பட்டன் (12-நூ)

வே. பெ: கவிகுமுதசந்திர பண்டிதன்.

ஊர்: இவர் புதுச்சேரிக்கு அருகில் உள்ள திரிபுவனி சதுர்வேதி மங்கலம். இது இப்பொழுது திரிபுவனி என்று அழைக்கப்பெறும் ஊர்.

இவர் கல்வெட்டால் அறியப்பெறும் புலவர் ஆவர்; இவர் முதல் குலோத்துங்கனது வரலாற்றினை 'குலோத்துங்க சோழ சரிதை' எனறு காவியமாகப் பாடியுள்ளார். இந்நூலைப் பாடி அவ்வூர் பேரவையில் அரங்கேற்றம் செய்தார். இந்நூலுக்காக அவ்வூரில் இறையிலி நிலம் வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. இச் செய்திகள் குலோத்துங்கனுடைய 27-ஆம் ஆண்டில் அமைந்த கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.

## கவிசாகரப் பெருந்தேவனார் (        )

'கவிசாகரம்' என்னும் பழைய யாப்பு இலக்கண நூலை இவர் இயற்றியமையால் இவருக்கு இப்பெயர் வந்தது என்று சிலர் கருதுவர்.

நூல்: திருவள்ளுவமாலையில் 36-ஆவது செய்யுள்.

**கவிதா ரத்தினம்** (20-நூ)

ஊர்: செவ்வாய்ப்பேட்டை.

நூல்: கவிராச பண்டிதர் ஆந்திர காசியப திம்மப்ப அந்தணனார் என்பவர் இயற்றிய 'திருவேங்கட மும்மணிக்கோவை' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**கவிப் பெருமாள்** (     )

திருக்குறளுக்கு உரை வரைந்த உரையாசிரியர்களுள் ஒருவர் என்பர்.

**கவிராச கந்தசாமிப்பிள்ளை** (     )

பார்க்க: கந்தசாமிப்பிள்ளை.

**கவிராச கலைவாணி** (     )

வே. பெ; வென்றிமாலை கவிராச கலைவாணி

நூல்: திருச்செந்தூர் தலபுராணம். இப்புராணம் முருகப்-பெருமானது படைவீடுகளில் ஒன்றாகியதிருச்செந்தூர்த்தலத்தின் சிறப்பைக் கூறுவது. 21 படலங்களைக் கொண்டது. நூல் அச்சாகியுள்ளது.

**கவிராச நாயகம் பிள்ளை** (20-நூ)

நூல்: திருச்சாய்க்காடு என்னும் சாயாவன புராணம் (1909). இப்புராணம் பத்துச் சருக்கங்களையும் 432 செய்யுட்களையும் கொண்டது. இப்புராணத்தைப் பெருந்தோட்டம் என்னும் ஊரைச் சேர்ந்த தெ. சி. துரைசாமிப்பிள்ளை இயற்றியுள்ளார்.

**கவிராச நெல்லையப்பப்பிள்ளை மு.** (     )

பார்க்க: நெல்லையப்பப் பிள்ளை மு.

## கவிராச பண்டாரத்தையா (20-நூ)

ஊர்: செங்கோட்டை. இவரது பெயரின் இறுதியில் உள்ள 'ஐயா' என்ற சிறப்பு அடைமொழி, இவர் வேளாளர்க்குரிய குருக்களாயிருந்து வந்தவர் என்பதைக் குறிப்பதாகும்.

நூல்: திருமலை முருகன் பிள்ளைத்தமிழ், திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ்.

## கவிராச பண்டிதர்-1 (19-நூ)

வே. பெ: சிற்றம்பலம்

தந்தை: சங்கரநாராயண ஐயர்; அந்தணர். கொங்குநாட்டில் பிறந்த இவர் கவிபாடுவதில் சிறந்து விளங்கியமையால் கவிராச பண்டிதர் என்று அழைக்கப்பட்டார்.

நூல்: திருச்செங்கோட்டுத்தல புராணம்

இந்நூல் 45 சருக்கங்களும் 1223 செய்யுட்களும் அமையப் பெற்றது.

## கவிராச பண்டிதர்-2 (16-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் மானாமதுரையை அடுத்த வீரை. அந்தணர்.

வேம்பத்தூரில் வாழ்ந்த அந்தணர்களில் பலர் நல்ல தமிழ்ப்பற்று உள்ளவர்களாக விளங்கினார்கள். அவர்களில் சிலர் வீரசோழன் என்ற ஊரில் வாழ்ந்தனர். அங்கு வாழ்ந்த குடும்பம் ஒன்றில் தோன்றியவரே கவிராச பண்டிதர். இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. இவர் வடமொழியிலும் நல்ல தேர்ச்சி உள்ளவர். இவருடைய மகன் அம்பிகாபதி என்றும், அவர் 'நெல்லைவருக்கக் கோவை' செய்தார் என்றும் கூறுவர்.

நூல்: சௌந்தர்யலகரி, வராகிமாலை, ஆனந்தமாலை,

சௌந்தர்யலகரி வடமொழியில் ஆதிசங்கரரால் இயற்றப் பட்டது. உமாதேவியின் பெருமைகளையும் அவயவங்களையும் நன்கு வருணிப்பது. கவிராச பண்டிதருக்குப் பிரமாதிராயன் என்பவர் வடமொழி சௌந்தர்யலகரியின் நுட்பங்களை எடுத்துக் கூற, கவிராச பண்டிதர் தமிழ்மொழியில் அந்நூலினை 103 விருத்தப்பாக்களில் பாடியுள்ளார். இந்நூல் சௌந்தர்யலகரி, ஆனந்த லகரி என்ற இரண்டு பிரிவுகளை உடையது. இந்நூலிற்கு உண்ணுமலை எல்லப்ப நைனார் என்பவர் உரை எழுதியுள்ளார்.

## கவிராச பிள்ளை (16-நூ)

வே. பெ: சேறை ஆசு கவிராசர்.

ஊர்: சேரழநாட்டிலுள்ள ற. கருணிகர் குலம்.

இவர் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களிலும், சைவ சித்தாந்த நூல்களிலும் மிகுந்த பயிற்சியுடையவர். சொன் நயமும், பொருள் நயமும் அமையச் செய்யுள் செய்வதில் வல்லவர்.

நூல்: திருக்காளத்திநாதர் உலா, திருக்காளத்தி நாதர் கட்டளைக் கலித்துறைமாலை, சேயூர் முருகனுலா, திருவண்ணமலையார் வண்ணம், இரத்தினகிரியுலா.

திருக்காளத்திஉலா: இந்நூல் சீகாளத்தியிலுள்ள சிவபெருமான் மீது பாடப்பெற்றது; 578 கண்ணிகள் கொண்டது. இந்நூலில் சிவபெருமானுடைய அருட்செயல்கள் பலபடப் பாராட்டிக் கூறப்பெற்றுள்ளன.

திருக்காளத்திநாதர் கட்டளைக் கலித்துறைமாலை:— இது நூறு கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களையுடையது. இது அதிவீரராம பாண்டியன் வேண்டுகோட்கிணங்கப் பாடப்பெற்றது

சேயூர் முருகனுலா: இது சேயூரில் கோயில் கொண்டு எழுந்தருளிய முருகக் கடவுள் மீது பாடப்பெற்ற உலாப் பிரபந்தம். இதனை அந்தகக்கவி வீரராகவ முதலியார் பாராட்டிப் பாடியுள்ளார். இந்நூல் அச்சேறவில்லை.

இரத்தினகிரியுலா: இது வாட்போக்கிநாதருலா என்றும் பெயர் பெறும். இது 408 கண்ணிகளையுடையது. இவ்வுலாவில் வழக்கொழிந்த சில கதைகள் காணப்படுகின்றன.

## கவிராச முத்துக்குமாரசாமியா பிள்ளை (    )

ஊர்: திருநெல்வேலி. நெல்லையப்பர் கோயில் மரபுவழிப் புலவராக விளங்கியவர்.

நூல்: ஆழ்வாரப்பபிள்ளை என்பவர் இயற்றிய 'கிரகாச்சிரம தருமம்' என்னும் நூலுக்கு வழங்கிய பாயிரம்.

## கவிராசர் (18-நூ)

வே. பெ: கவிராச வரோதியன்.

ஊர்: யாழ்ப்பாணத்தில் திரிகோணமலை.

திரிகோணமலையில் கோணேசுவரர் கோயிலில் குருக்களாக இருந்த பண்டிதராசரும், இவரும் ஒரு காலத்தவர்.

நூல்: பண்டிதராசர் இயற்றிய கோணசல புராணத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம். கோணேசர் கல்வெட்டு என வழங்கும் கோணேசர் சாசனத்தை இவர் பாட்டாலும், உரையாலும் எழுதியுள்ளார்.

## கவிவீரராகவ முதலியார் (    )

பார்க்க: வீரராகவ முதலியார்.

## கவீசுவர சுப்பிரமணிய ஐயர் (    )

ஊர்: கோயம்புத்தூர்.

நூல்: மீனாட்சியம்மை ஊஞ்சல்

## கவீந்திரர் ( )

நூல்: சிவாஜி சரித்திரம். இந்நூல் சிவாஜிப் பேரரசரின் வரலாற்றைக் கூறுவது. இந்நூலில் பிழைகள் மிகுதியாக உள்ளதாகக் கூறப்பெறுகின்றது. அச்சிடப்பெறவில்லை.

## கவுணியனார் (10-நூ)

நூல்: திருவள்ளுவமாலையில் 'சிந்தனைக்கினி' என்று தொடங்கும் வெண்பா.

## கவுஸ்கான் சாயபு ( )

நூல்: இந்துஸ்தானி தமிழ் ஒக்கபிலேரி (1880). இந்நூல் இந்துஸ்தானிச் சொற்களைத் தமிழ் எழுத்துக்களில் கொடுத்து அச்சொற்களுக்குத் தமிழில் பொருளும் கூறுகிறது. பேச்சு வழக்கில் நாள்தோறும் பயன்படுத்தப் பெறும் சொற்களே காணப்படுகின்றன.

## கவைமகன் (சங்ககாலம்)

இவர் உவமைத் தொடராற் பெயர் பெற்றவராவர். குறுந்தொகை 324ஆம் பாட்டில் இரட்டைப்பிள்ளைகளைக் 'கவைமக' என்று குறிப்பிட்டமையால் இவர் கவைமகன் என்று அழைக்கப்படுகிறார்.

நூல்: குறுந்தொகை 324ஆம் பாட்டு.

## கழறிற்றறிவார் ( )

பார்க்க: சேரமான் பெருமான்

## கழாத்தலையார் (சங்ககாலம்)

ஊர்: கழாத்தலை.

இவர் செய்யுள், புலவர் புகழும் சிறப்புடையது என்பதும் இவர் பெயர் கழாஅத்தலை என்பதும் தோன்றப், 'புகழ்ந்த செய்யுள்கழாஅத் தலையை இகழ்ந்ததன் பயன்'' என்று கபிலர்

கூறுவதால் இவருடைய சிறப்பு விளங்கும். குடக்கோ நெடுஞ்சேரலாதனால் அவன் இறக்கும்பொழுது ஆரம் வழங்கப்பெற்ற பெருஞ்சிறப்பினையுடையவர்.

நூல்: புறநானூறு 62, 65, 270, 288, 289, 368.

## கழார்க்கீரனெயிற்றியனுர் (சங்ககாலம்)

நூல்: குறுந்தொகை 330ஆம் பாட்டு

## கழார்க்கீரனெயிற்றியார் (சங்ககாலம்)

ஊர்: சோழநாட்டு மாயூரத்தின் கீழ்பாலுள்ள கழார்.

இவர் எயிற்றி என்னும் பெயருடையார்; கீரன் என்பவரின் மனைவியார். இவர் கணவர் கீரனார் என்பவர் சோழர்க்குப் படைத்துணையாகச் சென்று போர்முகத்துப் பொருது வெற்றி தரும் தன்மையராய் விளங்கினர்.

நூல்: அகநானூறு 163, 217, 235, 294; குறுந்தொகை 135, 261. நற்றிணை 281, 312.

## கழாரம்பர் (        )

இவர், அகத்தியர் மாணவர்களில் ஒருவர் என்பர்.

நூல்: 'கழாரம்பம்'. இந்நூல் இலக்கண நூலாகும்.

## களழ்தின்யானையார் (சங்க காலம்)

தொடராற் பெயர் பெற்ற புலவர். வல்வில் ஓரியைப் பாடியுள்ளார்.

நூல்: புறநானூறு 204ஆம் பாட்டு.

## கள்ளப்பிரான் கவிராசர் (19-நூ)

ஊர்: திருநெல்வேலியைச் சேர்ந்த வண்ணாரப்பேட்டை.

**தந்தை:** திருப்பாற்கடல் நாதன் கவிராசர்.

நூல்: வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ்.

## கள்ளப்பிரான் பிள்ளை, வை. (20-நூ)

இவர் செங்கற்பட்டில் கோட்டாட்சித் தலைவராகப் பணி ஆற்றியவர்; மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உறுப்பினராகவும் இருந்துள்ளார்.

நூல்: வேங்கடத்துறைவான் கவிராயர் இயற்றிய மாறன் கோவையையும், அந்நூலைப் பதிப்பித்தவரையும் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கள்ளர்பிரான் பிள்ளை ( )

நூல்: சேக்ஸ்பியர் எழுதிய வெனிஸ் வர்த்தகன் என்னும் கதையின் தமிழாக்கம்.

## கள்ளிக்குடி பூதம்புல்லனார் (சங்ககாலம்)

இவரது இயற்பெயர் புல்லன்; பூதன் தந்தை பெயர் போலும்; ஊர் கள்ளிக்குடி. இப்பெயர் கொண்ட ஊர்கள் பல இருத்தலால் இவர் ஊர் இப்பொழுது எங்குள்ள-தென்று அறியக்கூடவில்லை. இவர் பாலை நிலத்தைய சிறப்பித்துப் பாடியிருத்தலின் இவர் நீர்நாட்டினர் அல்லர் என்பது மட்டுந் தெரிகிறது.

நூல்: நற்றிணை 333ஆம் பாட்டு.

## கள்ளில் ஆத்திரையனார் (சங்க காலம்)

இவர் இப்பெயரைப் பெற்றமைக்கு இருவகை விளக்கம் கூறப்படுகின்றது. குறுந்தொகைப்பாடலில் 'கள்ளிற் கேளி ராத்திரை உள்ளூர்' என வரும் சொற்றொடரால் பெயர் பெற்றாரென்பது ஒரு சாரார் கருத்து. மற்றொரு சாரார் கள்ளில் என்பது தொண்டைநாட்டிலுள்ள திருஞானசம்பந்தர்

தேவாரம் பெற்ற சிவத்தலமென்றும், அத்திரிகுலத்தில் (ஆத்திரைகுலம்) பிறந்து ஊராலும் குடிப்பெயராலும் கள்ளில் ஆத்திரையனார் என அழைக்கப்பட்டார் என்றும், கூறுவர்.

கள்ளில் ஆத்திரை என்ற இவ்விரு சொற்களும் தொடர்ச்சி-யாக வாராமல் இடையே 'கேளிர்' என்ற சொல் வருவதால் இப்புலவர் சொற்றொடரால் பெயர் பெற்றார் என்பதைவிட ஊராலும் குடிப்பெயராலும் பெயர் பெற்றார் என்று கூறுவது பொருத்தமுடையது. ஆத்திரையனார் என்ற பெயர் அந்தணர் மரபுக்கே சிறப்பாக உள்ள தந்தை வழி மூதாதையர் பெயரை இடும் கோத்திரமுறைமையால் வந்த பெயரென்பதனை அக்கோத்திரத்தைச் சேர்ந்த தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் என்ற புலவர் பெயராலும் அறிகிறோம்.

நூல்: குறுந்தொகை 293. புறநானூறு 175, 389.

## களத்தூர் கிழார் ( )

ஊர்: மதுரையை அடுத்த களத்தூர்.

நூல்: திருவள்ளுவ மாலையில் உள்ள 'ஒருவர் இரு குறளே' என்று தொடங்கும் வெண்பா.

## களந்தைக்குமரன் (17-நூ)

ஊர்: தொண்டைமண்டலத்தைச் சேர்ந்த பொன்விளைந்த களத்தூர்; வேளாளர், கி. பி 17ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர்.

இவரது இயற்பெயர் குமரன்; ஊர்ப்பெயருடன் சேர்த்துக் களந்தைக் குமரன் என்றே அழைக்கப்பெற்றார்; சோழநாட்டில் உள்ள முகுந்தனூர் வேளாளர் தலைவரான அழகன் என்பவரால் ஆதரிக்கப்பெற்றார்; திருவாஞ்சியம் என்ற ஊரில் அவ்வூர்த் தலவிசாரணை செய்பவராக இருந்தார். ஆதலால் அவரது வேண்டுகோளுக்கேற்பத் திருவாஞ்சியபுராணம் என்ற நூலினைப் பாடினார். இந்நூல் கி. பி. 1616ஆம் ஆண்டில் அரங்கேற்றஞ் செய்யப் பெற்றது. இது 830 திருவிருத்தங்களை உடையது.

## கறுப்பண்ண தேசிகர் (19-நூ)

ஊர்: பழநிப் பகுதியைச் சேர்ந்த பாப்பாநகர்.

தந்தை: குழந்தைவேலு.

நூல்: தில்லையந்தாதி. இந்நூல் 100 வெண்பாக்களைக் கொண்டது. திருமலை ராயன் பட்டினம் வீரப்ப பிள்ளை என்பவர் இந்நூலை அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

## கறுப்பண்ணப் பிள்ளை (19-நூ)

ஊர்: கோயம்புத்தூர் மாவட்டத்தில் உள்ள குனியமுத்தூர்.

நூல்: கோயம்புத்தூர் ஆறுமுகம் பிள்ளை என்பவர் இயற்றிய 'திருப்பேரூர்ப்பட்டி விநாயகர் மாலை' 'கோயம்புத்தூர் வரசித்தி விநாயகர் வெண்பாமாலை' ஆகிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கன்ருப்பூர்க் கவிராயர் ( )

நூல்: 'திருவருட்பாமாலை' 'வசைவிடு தூது'

இந்நூல்களுள் 'திருவருட்பாமாலை' ஊற்றுமலை சமத்தானப் பெருநிலக்கிழார் இருதாலய மருதப்பத்தேவரின் முன்னோர்களில் ஒருவரான மருதப்பத்தேவர் மீது இயற்றப்பெற்றது. வசைவிடு தூது நவநீத கிருட்டினத் தேவர் மீது இயற்றப் பெற்றது.

## கன்னியப்பப் பிள்ளை ச. (19-நூ)

சி. பெ: மதுரகவி

ஊர்: காஞ்சிபுரம்.

தந்தை: சகநாதப்பிள்ளை. ஏனாதிநாயனருடைய மரபு என்பர்.

நூல்: சமரபுரியென்னும் திருப்போரூர் வெண்பாவந்தாதி (1874), சிலேடை வெண்பாமாலை.

சமரபுரியென்னும் திருப்போரூர் வெண்பாவந்தாதி. திருப்போரூர் முருகப்பெருமானின் புகழ் பாடுவது. இந்நூலில் 103 செய்யுட்கள் உள்ளன. சபாபதி முதலியார், சுப்பராயச் செட்டியார் ஆகிய இருவரும் இந்நூலினை அச்சிட்டுள்ளனர்.

### கன்னையதாசர் ( )

ஊர்: தென்னார்க்காடு மாவட்டம் கடலூர்.

நூல்: மகாபக்த விலாசம் என்னும் நூலின் தமிழாக்கம்.

### கன்னையநாயுடு ஆ. வி. ( )

ஊர்: வேலூர்.

நூல்: கீசகவிலாசம் (1897). இந்நூல் பாரதத்தில் விராட பருவத்தில் வரும் கீசகனுடைய வரலாற்றை நாடக வடிவில் கூறுவது; உரைநடையிலும் செய்யுளிலுமாக அமைந்த இந்நூல் 62 பக்கங்களில் அச்சிடப்பெற்றுள்ளது.

### கன்னையா ஆ. நா. ( )

நூல்: பகீரதன்.

### கனகசபாபதி ஐயர்-1 ( )

நூல்: 'திருக்கடகப்புராணம்' (1900) இந்நூல் கடகநகரின் புராணச் சிறப்புக்களை எடுத்துரைப்பது, பாயிரம் உள்பட 13 படலங்களையும் 312 செய்யுட்களையும் கொண்டது.

### கனகசபாபதி ஐயர்-2 ( )

ஊர்: ஈழநாட்டில் யாழ்பாணத்து நல்லூர்.

தந்தை: வேங்கடசுப்பையர்.

இவர் இந்திய நாட்டிலும், இலங்கை, பர்மா, சிங்கப்பூர், சைகோன் போன்ற பிற நாடுகளிலும் சமயச் சொற்பொழிவுகள்

பல நிகழ்த்தியுள்ளார். வண்ணப் பாடல்களை இயற்றும் ஆற்றலால், இவர்க்குப் 'பலவகை வண்ணப் பாராவாரம்' என்ற சிறப்புப் பெயருண்டு.

நூல்: தனிப்பாடல்கள், கந்தபுராணசாரம், கந்தபுராண படன உபந்நியாசம.

**கனகசபாபதி ஐயர் வே.** (20-நூ)

நூல்: சிவசுப்பிரமணிய சிவாசாரியார் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**கனகசபாபதி முதலியார்** ( )

நூல்: திருநாவுக்கரசு நாயனர் சரித்திரம் (1899). இந்நூல் சைவ சமயக்குரவராகிய திருநாவுக்கரசரின் வரலாற்றினை விரிவாகக் கூறுவது. உரைநடையில் அமைந்தது.

**கனகசபாபதி முதலியார் தை. ஆ.** (20-நூ)

ஊர்: சென்னை. இவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி பயின்றவர்.

நூல்: திருமுருகாற்றுப்படை உரை. திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இவ்வுரையையும், இவரது புலமையையும் பாராட்டி உள்ளார்.

**கனகசபாபதியாபிள்ளை ஆ.** (19-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் தென்காசி.

தந்தை: ஆண்டியாபிள்ளை.

இவர் திருநெல்வேலி இந்துக்கல்லூரியில் தமிழ்ப்பேராசிரி_யராகப் பணியாற்றியவர்.

நூல்: சாமிநாதபிள்ளை என்பவர் இயற்றிய விநாயகபுராணச் சுருக்கம்(சங்கிரகம்) என்னும் நூலுக்குவழங்கிய சிறப்புப்பாயிரம்.

## கனகசபை ஐயர் (19-நூ)

ஊர்: திருப்பனந்தாள் காசிமடத்தில் புலவராக இருந்தவர்.

இவரும், ஆனத்தூர் வீரசைவ மடத்தில் இருந்த பு. தெ. கனகசபை ஐயர் என்பவரும் ஒருவரா வேறு என்பது தெரியவில்லை.

நூல்: சாமிநாத சாமிகள் என்னும் தம்பிரான் மீது 'கொம்மிப்பாட்டு' 'பவனிச் சிறப்பு' 'கொலுச்சிறப்பு' தனிப்பாடல்கள்.

காசிமடத்து முகப்புத்தூணில் உள்ள குரங்கைக் குறித்தும், மற்றும் பல வேடிக்கையான பாடல்களும் இயற்றியுள்ளார்.

## கனகசபை ஐயர் பு. தெ. (20-நூ)

இவர் ஆனத்தூர் வீர சைவ மடத்தில் இருந்தவர்.

நூல்: பண்ணுருட்டியில் இருந்த அப்பாவையர் என்பவர் திருவதிகைப்புராணம் பாடி அரங்கேற்றம் செய்தபோது, சிவசிதம்பரம் பிள்ளை என்பவர் அதற்கான சிறப்பு ஏற்பாடுகளைச் செய்தார். அவரைப் பாராட்டி, இவர் பல பாடல்களை இயற்றியுள்ளார். திருப்பனந்தாள் காசி மடத்துப் புலவராக இருந்த கனகசபை ஐயரும் இவரும் ஒருவரா வேறு என்பது தெரியவில்லை.

## கனகசபைக் கவிராயர் ( )

ஊர்: உடையார்பாளையம்.

நூல்: திருப்புன்கூர்ப் புராணம்.

## கனகசபைத் தம்பிரான் (19-நூ)

நூல்: ஆதிபுரி வடிவுடையம்மை பிள்ளைத் தமிழ் (1887).

இந்நூல் திருவொற்றியூர் என வழங்கும் ஆதிபுரியில் எழுந்தருளியுள்ள வடிவுடையம்மை மீது பாடப்பெற்றது. 101 செய்யுட்களைக்கொண்டது.

## கனகசபைநாயகர் பு. (19-நூ)

ஊர்: தொண்டை நாட்டில் காஞ்சிபுரம்.

காஞ்சிபுரம் மிஷன் உயர்நிலைப்பள்ளியில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: கல்பாக்கம் குமாரசாமி தேசிகர் என்பவர் இயற்றிய ஏகாம்பரநாதர் யமகக் கலிந்துறை அந்தாதி என்னும், நூலுக்குப் பதவுரை. சிவநாமம் பஞ்சரத்னக் கீர்த்தனம்(1881), திருவொற்றியூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி (1879), அகிலாண்டேஸ்வரி பஞ்சரத்னம் (1881). கச்சிப் பதிற்றுப்பத்தந்தாதி (1881), கைலாசபதி நேரிசைவிருத்தம், சடாரணியம் சுப்பிரமணிய சுவாமிகள் பாமாலை (1881), சடாரணியம் சுப்பிரமணிய சுவாமியார் மும்மணிக்கோவை, தக்ஷிணாமூர்த்திகள் மீது நான்மணிமாலை (1881) திருமயிலைப் பதிற்றுப்பத்தந்தாதி (1883) திருவான்மியூர் பதிற்றுப்பத்தந்தாதி (1883), திருவேகம்பர் சந்தப்பதிகம் (1881) தேவார சந்தப் பதிகங்கள், பாமாலை 1881), மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி (1879).

## கனகசபைப் பண்டாரம் ( )

நூல்: இராமாயண வசனம். இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் கையெழுத்துப்படியாகவுள்ளது.

## கனகசபைப்பிள்ளை கூ. (20-நூ)

ஊர்: தென்னார்க்காடு மாவட்டம், கூடலூர்; வேளாளர்.

இவர் ஆங்கிலம், தமிழ் இரு மொழிகளையும் கற்றுச் சென்னையில் அரசாங்கக் கணக்கு நிலையத்தில் அலுவல் பார்த்தார்.

நூல்: வருணசிந்தாமணி. இந்நூல் குலமுறைகளையும் தன்மைகளையும் நன்கு விளக்கிக் கூறுவது.

## கனகசபைப்பிள்ளை வி. (20-நூ)

**ஊர்:** சென்னைக் கோமளேசுவரன்பேட்டை.

**தந்தை:** விசுவநாதபிள்ளை.

**வாழ்ந்தகாலம்:** கி. பி. 1885-1906.

இவரது தந்தையார் யாழ்ப்பாணத்திலுள்ள மல்லாகம் என்ற ஊரினர்; சென்னைக்கு வந்து கல்வித்துறைத் தலைவரின் அலுவலகத்தில் மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றினார். அப்போது உவின்சுலோ பாதிரியாரின் தமிழ் அகராதி வெளி-வருதற்குப் பெரிதும் துணைசெய்தார். இவரது மகன் கனகசபைப்பிள்ளை இளமையிலேயே பி. ஏ. பட்டம் பெற்று வழக்கறிஞர் தொழிலில் தேர்ச்சி பெற்றார். இளமையில் பட்டம் பெற்ற இவரைப் பலரும் பட்டதாரிப் பையன் என்றழைத்தனர். இவர் மதுரையில் வழக்கறிஞராகப் பணியாற்றினார். பின்னர் சென்னை வந்து அஞ்சல் துறையில் பணியாற்றத் தொடங்கி அஞ்சல் துறையின் மேற்பார்வையாளராகப் பதவியில் உயர்ந்தார். அலுவலை முன்னிட்டு அடிக்கடி வெளியூர் சென்றதால் ஓய்வுநேரங்களில் தமிழ் இலக்கண இலக்கியங்களை ஆராய்ந்தார் பல ஏட்டுச்சுவடிகளைப் பெற்று உ.வே.சாமிநாத அய்யருக்குக் கொடுத்துதவினார்.

எட்டுத்தொகை பத்துப்பாட்டு முதலிய நூல்களை நன்கு ஆராய்ந்து பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்வாழ்ந்த தமிழ் மக்களின் வரலாறுகளை நன்கு விளங்கச் செய்துள்ளார். இது தொடர்பான கட்டுரைகள் (மதராஸ் ரெவ்வியூ Madras Review) என்ற ஆங்கில இதழில் தொடர்ந்து வெளியிடப் பெற்றுப் பின்னர் ஒன்றாகத் தொகுக்கப் பெற்று The Tamils 1800 years Ago (ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்) என்ற பெயரில் வெளியிடப் பெற்றுள்ளது. இந்நூல் பலராலும் பாராட்டப்பெற்றது. தமிழறியாத ஏனைய நாட்டவரும், ஐரோப்பியர் முதலிய மேனாட்டவரும் தமிழ் மொழியின் பழமையையும் தமிழர் பண்பாட்டையும் தெரிந்து கொள்ள உதவி செய்கிறது.

இவர் 'The Indian Antiquary' என்ற ஆங்கிலத் திங்களிதழில் Tamil Historical Texts என்ற தலைப்பின் கீழ்க் களவழி நாற்பது, கலிங்கத்துப்பரணி, விக்கிரம சோழன் உலா முதலிய தமிழ்நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். இவர் மேலும் The conquest of Bengal and Burma by the Tamils, Raja Raja Chola என்ற சிறு நூல்களையும் ஆங்கிலத்தில் எழுதியுள்ளார்.

## கனகசபைப் புலவர் வே. (19-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் அளவெட்டி.

தந்தை: வேலுப்பிள்ளை.

வாழ்ந்தகாலம்: கி. பி. 1829-1873

இவர் ஆங்கில மொழியையும் நன்கு கற்றவர். இவர் தந்தை சைவராக இருந்தும் கல்வி கற்பதற்காகக் கிறித்துவராக மாறினர். உவாட் என்ற ஐரோப்பியரிடம் மேனாட்டு மருத்துவ முறையைக் கற்றுக் கொண்டார். தம் தந்தையாரிடம் ஆயுர்-வேத மருத்துவத்தையும் கற்றார்.

நூல்: திருவாக்குப்புராணம், அஞ்ஞானக்கும்மி மறுப்பு, அழகர் சாமி மடல், ஒரு சொல் பல பொருட்டொகுதி. திருவாக்குப்-புராணம்; இது 1751 பாட்டுக்களைக் கொண்டது. கிறித்தவர்-களால் பெரிதும் போற்றப் பெறுவது.

## கனகசபை முதலியார் (20-நூ)

ஊர்: செங்கற்பட்டு மாவட்டம் வானவன்மாதேவி.

தந்தை: அண்ணாமலை முதலியார்.

தாய்: விசாலாட்சி அம்மாள்; செங்குந்தர்.

வாழ்ந்தகாலம்: கி. பி. 1888-1951

இவர் சென்னைக்குச் சென்று துணை இந்து யூனியன் பள்ளியிலும் பிறகு எஸ். பி. சி. உயர்நிலைப்பள்ளியிலும் கற்று

1907ஆம் ஆண்டு மெட்ரிகுலேஷன் தேர்வு பெற்றார். 1908ஆம் ஆண்டில் அஞ்சல் பிரிவில் சேர்ந்து 1943ஆம் ஆண்டுவரை 35 ஆண்டுகள் வேலை பார்த்தார். அலுவலில் இருந்தபோது வேல் முதலியார் என்பவரிடம் அட்டபிரபந்தம், நைடதம் முதலியவற்றைக் கற்றார். பின்னர் வா. மகாதேவ முதலியார், வீரசுப்பைய ஞானதேசிகர் முதலியவரிடம் இலக்கண இலக்கியங்களையும், தருக்க சாஸ்திர நூல்களையும் கற்றார். 1939ஆம் ஆண்டில் சென்னை நகரில் தமிழர் நல்வாழ்க்கைக் கழகம் என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தித் தொண்டாற்றினார். 1948ஆம் ஆண்டில் இவரது மணிவிழா நடந்தது. 1951ஆம் ஆண்டில் ஜனவரித் திங்கள் 25ஆம் நாள் இவர் காலமானார்.

நூல்: கோடம்பாக்கம் புலிச்சரப்பத்து, கோடம்பாக்கம் வடபழனிப்பத்து, தணிகாசலப்பத்து, வெண்குன்றப்பத்து, வானவன்மாதேவி வானசுந்தரர் பத்து, வானவன்மாதேவி பெரியநாயகியம்மை பத்து

## கனகசுந்தரம் பிள்ளை தி. த. (20-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் உள்ள திருக்கோணமலை.

தந்தை: தம்பிமுத்துப்பிள்ளை

வாழ்ந்தகாலம்: கி. பி 1863-1922.

இவர் இளமையில் கணேச பண்டிதர், கதிரைவேற்பிள்ளை ஆகியோரிடத்தில் தமிழ் நூல்களையும் ஆங்கிலத்தையும் கற்றார். பின் சென்னை சென்று செல்வ நாயக்கர் பாடசாலை, பச்சையப்பன் கல்லூரி மாநிலக் கல்லூரி, ஆகியவற்றில் படித்து பி.ஏ. பட்டம் பெற்றார்.

வாழ்க்கையின் தொடக்கத்தில் சிற்றூர் ஒன்றில் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றினார். அதன்பின்பு சைதாப்பேட்டை ஆசிரியராகப் பணியாற்றினார். அதன் பின்பு சைதாப்பேட்டை ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் சிறிது காலம் ஆங்கில ஆசிரியராக இருந்தார். சென்னை பச்சையப்பன் கல்லூரி, கிறிஸ்தவக் கல்லூரி ஆகியவற்றிலும் தமிழ் ஆசிரியராகப்

பணிபுரிந்துள்ளார். அரசியலார் செயலகத்திலும் பணிபுரிந்து உள்ளார்.

இவரிடம் பயின்றவர்களில் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் மோசூர் கந்தசாமிமுதலியார், மணி. திருநாவுக்கரசு முதலியார், கிறித்தவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் சுப்பிர-மணிய சிவா, யாழ்ப்பாணத்து நா. கதிரைவேற்பிள்ளை ஆகிய-வர்கள் குறிப்பிடத் தகுந்தவர்கள் ஆவர்.

இவர் சுந்தரம் என்னும் பெண்ணை மணஞ்செய்து கொண்டார். இவருக்கு நான்கு ஆண்மக்களும், ஒரு பெண்ணும் உள்ளனர். இவருடைய மனைவியார் அவருடைய இளமைக் காலத்திலேயே காலமாகி விட்டார். ஆனாலும இவர் மறுமணம் செய்து கொள்ளாது எஞ்சிய நாட்களைத் தமிழ் நூல்களைப் படிப்பதிலும், பிறருக்குக் கற்றுக் கொடுப்பதிலும், அவைகளைப் பதிப்பிப்பதிலும் செலவிட்டார்.

இவருக்குச் சரவணமுத்துப்பிள்ளை என்ற ஒரு தம்பி இருந்தார். அவர் இளமையிலேயே காலமாவதற்கு முன்னர் சில தமிழ் நூல்களை இயற்றியுள்ளார். கனகசுந்தரம்பிள்ளை சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி தொகுப்புப் பணியில் துணைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றினர்.

நூல்: தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரையையும், சொல்லதிகாரம் சேனாவரையர் உரையையும் பல ஏட்டுப் படிகளுடன் ஒப்பிட்டு, நூற்பாக்கள் பலவற்றையும் செம்மை செய்து, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மூலம் வெளியிட்டுள்ளார். சுன்னாகம் குமாரசாமிப் புலவருடன் சேர்ந்து நம்பியகப்பொருளுக்குப் புத்துரை, தமிழ்நாவலர் சரிதை, ஈழ-மண்டலத் தேவாரம், ஈழமண்டலத்திருப்புகழ் ஆகியவற்றிற்குக் குறிப்புரை எழுதியுள்ளார். வால்மீகி இராமாயணத்தில் கிட்கிந்தா காண்டத்தின் ஒரு பகுதியினையும், சுந்தரகாண்டத்தையும் மொழி பெயர்த்துள்ளார். கம்பராமாயணத்தைத் திருத்தமான பாடல்களுடன் தம்முடைய அரும்பதவுரைக் குறிப்போடு வெளியிடுவதற்கு எண்ணியிருந்தார். ஆனால் இவர் காலத்தில் பாலகாண்டம் மட்டுமே வெளியிட முடிந்தது. நற்றிணைக்குப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் எழுதிய

உரையினை, அவர் காலத்திற்குப்பின் வெளியிடுதற்கு இவர் துணை செய்தார். 'இல்லாண்மை' என்ற நூலும் இவரால் எழுதப்பட்டுள்ளது. திங்கள் வெளியீடுகளில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

## கனகரத்தின உபாத்தியாயர் (19-நூ)

ஊர்: இலங்கையில் யாழ்ப்பாணம்.

நூல்: ஆறுமுகநாவலர் சரித்திரம்.

## கனகராய முதலியார் (19-நூ)

ஊர்: புதுச்சேரி.

நூல்: ஆரோக்கியநாயகர் என்பவர் இயற்றிய 'ஆரோக்கிய-நாயகர் தேம்பாவணிக் கீர்த்தனை' என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## கனம் கிருட்டிண ஐயர் ( )

பார்க்க: கிருட்டிணையர் கனம்.

## கஸ்தூரி ரங்கையர் ( )

நூல்: மகாபாரத வினா விடை.

## காக்கை பாடினியார்

இவர், அகத்தியர் மாணவர் பன்னிருவருள் ஒருவர் என்பர். பாடினி என்று இவருடைய பெயர் முடிவதால் இவர் ஒரு பெண்பாற் புலவர் சங்க காலத்தில் வாழ்ந்த காக்கை பாடினியார் நச்செள்ளையார் இவரினும் வேருனவர். சிறு காக்கை பாடினியார் என்ற பெயரில் இன்னொரு புலவர் வாழ்ந்துள்ளார்.

நூல்: காக்கை பாடினியம். மறைந்து போன நூல்களுள் இதுவும் ஒன்று. இதனுடைய சூத்திரங்களை இலக்கண உரையாசிரியர்-

களாகிய இளம்பூரணர். பேராசிரியர், யாப்பருங்கல விருத்தி யுரைகாரர், யாப்பருங்கல உரையாசிரியராகிய குணசாகரர், வீரசோழிய உரையாசிரியராகிய பெருந்தேவனார் ஆகியோர் தங்கள் உரைகளில் மேற்கோள்களாகக் காட்டுகின்றனர் இச் சூத்திரங்கள் யாப்பிலக்கணம் பற்றியவை, இச்சூத்திரங்கள் நூற்றுக்கு மேற்பட்டிருக்கும். தொல்காப்பியர் செய்த இலக்கணத்தினை இவர் தொகுத்துக் கொடுத்தாரென்று

'தொல்காப் பியப்புலவோர் தோன்ற விரித்துரைத்தார்
பல்கா யனார் படுத்துப் பண்ணினார்-நல்யாப்புக்
கற்றார் மதிக்குங் கலைக்காக்கை பாடினியார்
சொற்றார்தந் நூலுட் டொகுத்து''

என்ற வெண்பா கூறுகின்றது.

## காக்கைபாடினியார் நச்செள்ளையார் (சங்ககாலம்)

இவர் பெண்பாலர். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனென்னும் அரசன் மீது பதிற்றுப்பத்துள் ஆறும்பத்தைப்பாடி. அணிகலனுக்கென்று ஒன்பது துலாம் பொன்னும், நூறாயிரம் பொற்காசும் பரிசு பெற்றவர். நச்செள்ளையாரென்பது இவரது இயற்பெயரென்பதும், குறுந்தொகையில் ''திண்தேர் நள்ளி கானத்தண்டர் பல்லா பயந்த நெய்யிற் றொண்டி. முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோற்றெழுகலத்தேந்தினும் சிறிதென் தோழி, பெருந்தோள் நெகிழ்த்த செல்வற்கு, விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே' என்னும் பாட்டில் காக்கை கரைந்தமையைப் பாராட்டிக் கூறிய அருமை பற்றிக் காக்கைப்பாடினியார் என்ற சிறப்புப் பெயரைப் பிற்காலத்தில் இவர் பெற்றனர் என்பது தெரிகின்றது. பாடினி-பாடுபவள் செள்ளை என்பது பெண்பாலர்க்கு இயற்பெயராகப் பண்டைக் காலத்து வழங்கி வந்தது. பதிற்றுப்பத்து ஒன்பதாம்பத்தின் பதிகத்தில் மையூர் கிழானுடைய மனைவியின் பெயர் அந்துவஞ் செள்ளை என வந்திருத்தல் இதனை வலியுறுத்தும். 'ந' என்பது சிறப்புப் பொருளைத் தருவதோரிடைச்சொல்.

நூல்: குறுந்தொகை 210, பதிற்றுப்பத்து ஆறும்பத்து-51-60உம் அதன் பதிகமும்.

### காக்கையர் (         )

வே. பெ: புசுண்ட மகாரிஷி.

நூல்: **காக்கையர் சிற்பம், புசுண்டர் சல்லியம்.**

### காங்கிச்சாமிகள் (         )

நூல்: திருப்பதிகமஞ்சரி

### காங்கேயர் (14 அல்லது 17-நூ)

வே. பெ: இம்முடிப்பட்டம் பெற்ற காங்கேயர்.

வாழ்ந்த இடம்: தொண்டை மண்டலம்; செங்குந்தர்.

இவர் செங்கற்பட்டைச் சேர்ந்தவர் என்று சிலரும், கொங்கு நாட்டின் மோரூரைச் சேர்ந்தவர் என்று சிலரும், கூறுவர்.

நூல்: உரிச்சொல் நிகண்டு. இந்நிகண்டில் வணக்கத்தைக் குறிக்கும் சொற்களில சலாம் என்றசொல்லும் காணப்படுகிறது. அதனால் முகமதியர்கள் தென்னாட்டின் மீது படையெடுத்த பின்னரும், அவர்களின் செல்வாக்குப் பரவிய பின்னரும் இந்நூல் தோன்றியிருக்கலாம் எனக் கருதப்படுகிறது. வெண்பாவால் அமைந்தது. இந்நூலின் சில பதிப்புக்களில் 220 வெண்பாக்களும், சிலவற்றில் 285ம் சிலவற்றில் 330ம் காணப்பெறுகின்றன. இந்நூலில் 10 தொகுதிகளே இருந்திருக்க வேண்டும் என்றும், பின்னர்வந்த புலவர் இரண்டு தொகுதிகளைப் பாடிச் சேர்த்திருக்க வேண்டும் என்றும் தெரிகிறது. செய்யுள் எண்ணிக்கையில் மிகுதியும், வேறுபாடும் இந்நிகண்டின் அவ்வப்போது இடைச்செருகலாகப் பல பாக்கள் சேர்க்கப்பட்டிருக்கக் கூடும் என்றகருத்தை ஏற்படுத்துகின்றன. அவ்வாறு சேர்க்கப்பெற்ற பாடலில் சலாம் என்ற சொல்லும் இடம் பெற்றிருக்கலாம். அச்சொல் வரவு பற்றி இவ் உரிச்-சொல் நிகண்டின் காலத்தைப் பின்னுக்குக் கொண்டு வருவது முறையாகாது என்பர்.

## காங்கேயன் (          )

இந்நூல் திருவிளையாடலில் வருகின்ற வலைவீசு படலத்தின் கதையினை அடிப்படையாகக் கொண்டு பாடப் பெற்றது. விருத்தப்பாக்களும் அகவற்பாக்களும் இடை-யிடையே விரவி வரச் செய்யப்பெற்றது.

## காசாமுகைதீன் (          )

நூல்: முகம்மது விளக்கம் என்னும் கிறித்து மத சங்காரம்.

இந்நூல் கிறித்தவ சமயத்தினைக் கண்டனஞ்செய்வது

## காசிக்கலியன் கவிராயர் (19-நூ)

வே பெ: கலியன் கவிராயர்.

ஊர்: தென்காசி. முற்காலத்தில் தென்காசியில் பிறந்தவர்கள் தங்கள் பெயருக்கு முன்னர் 'காசி' என்ற பெயரினை வைத்துக் கொள்வது மரபு. அம்முறையில் இவர் பெயர் காசிக்கலியன் கவிராயராயிற்று.

வரதுங்கராம பாண்டியனுடைய அவைக்களத்திலிருந்த புலவர்களில் இவர் தலைமைப் புலவராக வீற்றிருந்தார் எனலாம் அப்பாண்டியன் பட்ட மெய்திய காலத்து இவர் பாடிய பஞ்சரத்தினமாலை ஆகிய ஐந்து வெண்பாக்கள் தென்காசி விசுவநாதர் கோயிலின் இடிந்த கோபுரத்தின் வடபுறமுள்ள நிலைக்கல்லில் பொறித்து வைக்கப் பெற்றுள்ளன முதல் வெண்பா அபிராமன் என்ற அரசன், (வரதுங்கன்) வீரபாண்டியன் என்ற அபிஷேக நாமம் பெற்று முடிசூடிக் கொண்டதனைச் சொல்லுகின்றது 2, 3, 5 ஆவது வெண்-பாக்கள் முறையே குடைமங்கலம், வாண்மங்கலம், நாண்-மங்கலம் என்ற புறந்துறையமையப் பாடப்பெற்றவை. இறுதி வெண்பாவில் அரசனுடைய சிறப்புக்களைச் சொல்லி, இப்-பாக்களைப் பாடிய தன்னுடைய பெயரையும் கூறியுள்ளார்.

## காசிகானந்த நாஞுச்சாரிய சுவாமிகள் (19-நூ)

பிறப்பு: கி. பி 1885.

நூல்: வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் சரித்திரம் (1932) ஹரி-ஹரடே ஹரிதத்துவ முக்தாவலி (1935), சீடாசாரம் (1929).

சீடாசாரம் என்ற நூல் குருவிடம் மாணவர் கொள்ள வேண்டிய பணிவு குறித்துக் கூறுவது.

## காசிச்செட்டியார் ( )

நூல்: காங்கயமாலை.

இந்நூல் 32 செய்யுட்களைக் கொண்டது. மருதாசலக் கடவுளாகிய முருகன்புகழைக் கூறுவது. முருக காங்கேயனிடம் தமது குறையைக் கூறி வேண்டுவதாக அமைந்தது.

## காசி சிவானந்தர் ( )

ஊர்: தருமபுரம்.

நூல்: சம்பிரதாயதீபம்.

## காசிநாதப்புலவர் (18-நூ)

ஊர்: கும்பகோணம்

நூல்: தாலபுராணம்

இந்நூல் பனையின் பயன்களைக் கூறுவது, கலிவெண்பா யாப்பில் அமைந்தது. நூலின் ஆங்கில மொழி பெயர்ப்பு நூற்றுண்டுகளுக்கு முன்பு தெனண்ட் என்பவர் எழுதிய 'இலங்கை' என்னும் நூலின் இரண்டாம் பகுதியில் காணப் படுகிறது.

## காசிபன் கீரன் (சங்ககாலம்)

இவர்இயற்பெயர் கீரன் என்பது. காசிப கோத்திரத்-தினைச் சேர்ந்தவர் என்பர்.

நூல்: நற்றிணை 248ஆம் பாட்டு.

## காசிம்புலவர் (17-நூ)

ஊர்: காயல்பட்டினம்.

தந்தை: அப்துல்காதிர்,

இவர் திருவடிக்கவிராயர் என்ற புலவரிடத்தில் கல்வி கற்றார். அவர் பாடம் சொல்லும்போது அருணகிரிநாதரின் திருப்புகழில் அதிகம் ஈடுபாடு கொண்டு திருப்புகழுக்கு நிகரான மறுபுகழ் உண்டோ என்று அடிக்கடி கேட்பாராம். இதனால் தூண்டப்பட்ட காசிம்புலவர் தாமே அப்படி ஒரு நூலை இயற்றுவதாகக்கூறி, அன்று முதல் படிப்பை விட்டு விட்டார். பின்னர் 'நாயகமே' நீங்கள் என் கனவில் தோன்றி எனக்கு முதற்சீர் எடுத்துத் தந்து தங்கள் மீது திருப்புகழ்பாட ஆசி-மொழி பகர்ந்து அனுமதித்தாலொழிய நான் பாடப்போவது இல்லை என்று அழுது கெஞ்சினார் என்றும், அங்ஙனமே நபிகள் நாயகம் 'பகரும்' என்று அடி எடுத்துக் கொடுக்க 141 செய்யுட்களில் திருப்புகழ்பாடி முடித்தார் என்றும் கூறுவர். இப்பாக்கள் செம்பாகமாக அமைந்தனவ என்று சவ்வாதுப் புலவர் பாராட்டியுள்ளார். இவரது வாக்குப் பலித்தது என்று அக்காலத்தில் பலரும் நம்பினர். மேலும் இவர் பல விந்தைச்-செயல்கள் செய்ததாகவும் கதைகள் வழங்குகின்றன.

நூல்: திருப்புகழ் (1880), இன்னிசை (1875) முதலாவது நூல் நபியின் புகழைப் பேசுவது; 141 செய்யுட்கள். இரண்டாவது நூல் தொழுகைநாமா என்னும் நூலுடனும், சொர்க்கநீதி என்னும் நூலுடனும் பதிப்பிக்கப்பெற்றுளது.

## காசிவிசுவநாத முதலியார் (19-நூ-பிற்பகுதி)

ஊர்: சைதாப்பேட்டை.

தந்தை: தியாகராச முதலியார்,

நூல்: யாப்பிலக்கண வினா-விடை.

இடம்பாச்சாரி விலாசம், பாகசாத்திரம், சதுர்வேத தாற்-பரிய சங்கிரகம், தாசில்தார் நாடகம், தாலுகாச்சட்டம்,

தாருகாவிலாசம், வேதப்பொருள்விளக்கம், அப்பர்சாமிபதிகம், கூலிக்கு மாரடிக்கும் கூத்தாடிச்சிகள் நடிப்பு, பிரம்ஹ சமாஜ நாடகம், மேக வெள்ளைக்கு மேலான பரிகாரம், நான்கு வேத ரகசியம், எடின்பர்க்கு பிரபு வந்தபோது பாடிய கும்மிப்பாட்டு.

இவர் பிரமதீபிகை என்னும் இதழை பாரிஸ்டர் இராமசாமி ராசு என்பவருடன் சேர்ந்து கி. பி. 1871 ஆம் ஆண்டு முதல் சென்னையிலிருந்து வெளியிட்டார். இவருக்குப் பின்னர் இவ்விதழ் நின்றுவிட்டது.

இடம்பாச்சாரி விலாசம் என்பது அன்றைய செல்வச்சீமான்களின் போலி வாழ்வை நகையாடுவது. சென்னையில அவர் காலத்து வாழ்ந்த செல்வந்தர் ஒருவரின் உண்மையான வாழ்வை ஆதாரமாகக் கொண்டு உருவாக்கப்பட்டது.

பாகசாஸ்திரம் என்பது ஒரு மொழிபெயர்ப்பு நூல்; உரை நடையில் அமைந்தது. இந்நூலில் பலவிதமான சமையல் முறைகள் விளக்கப்பட்டுள்ளன.

மேகவெள்ளைக்கு மேலான பரிகாரம் என்னும் நூல் மருத்துவம பற்றியது.

தாசில்தார் நாடகம் என்னும் நூல் உரைநடையிலும் செய்யுள் அமைப்பிலும் அமைந்தது. அரசினர் தாலுகா அலுவலகங்களில் நடைபெறும் சில முறைகோடான செயல்களைச் கட்டிக் காட்டி நகையாடும் சமூக நாடகமாகும்.

### காசிவிசுவநாதன் அ. (20-நூ)

நூல்: வின்ஸடன் சர்ச்சில்

### காசிவிசுவநாதன் செட்டியார் இராம உ. (20-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம், காரைக்குடி, இவர் சிதம்பரம் மெய்கண்ட வித்தியாசாலை அறக்கட்டளையினருள் ஒருவர்.

நூல்: ஸ்ரீமத் சொக்கலிங்க ஐயா சரித்திரம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்

**காஞ்சி ஞானப்பிரகாசர் (        )**

பார்க்க: ஞானப்பிரகாசர்

**காஞ்சிநாகலிங்க முனிவர் (        )**

பார்க்க; நாகலிங்க முனிவர்

**காட்டானை செய்கொலியுல்லா(        )**

நூல்: ஞானவெண்பா

இந்நூல் இசுலாமின் உயர்வினைப் புலப்படுத்திடுவது,103 செய்யுட்களைக் கொண்டது.

**காட்டானை சைகொலிசாயபு (        )**

நூல்: முனுசாத்து

**காட்டுவாவா சாயபு** (19-நூ)

சி. பெ. கவிமேகம்

இவர் விரைவாகவும் மிகுதியாகவும் செய்யுள் இயற்று வதில் ஆற்றல் பெற்றவர். கரிசைப்பட்டு என்ற ஊரில் இருந்த இராமச்சந்திரன் வெள்ளைப் பொம்மைய நாயகர் என்ற சிற்ற ரசரிடத்தல் அவைக்களப்புலவராக இருந்தரர்.

நூல்: இதயதீபம் என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்

**காட்டூர் கிழார் மகனார் கண்ணனார்** (சங்ககாலம்)

நூல்: அகநானூறு 85 ஆம் பாட்டு

**காத்தபெருமாள் பிள்ளை ரா.** (19-நூ)

ஊர்: சோழநாட்டில் திரிசிரபுரம். இவர் புகை வண்டி நிலையத் தலைவராகப் பணிபுரிந்தார். கல்வி கற்பிக்கும் பணிரைா மேற்-கொண்டார்

நூல்: விருதுப்பட்டி கந்தசாமிப் பிள்ளை இயற்றிய திருச்செந்தூர் முருகக் கடவுள் தோத்திரப் பாமாலை என்ற நூலுக்கு வழங்கிய-சிறப்புப்பபாயிரம்

## காத்தமுத்துப்பிள்ளை அ. (        )

ஊர்: அறந்தாங்கி.

நூல்: திருமந்திரநகர சந்தன மாரியம்மன் விருத்தம்: இந்நூலுக்குச்-சந்தன மாரியம்மன்பதிகம் என்ற பெயரும் உண்டு. தூத்துக்குடி மகராசப் பிள்ளை கேட்டுக் கொண்டதற்கிணங்க இந்நூல் பாடப்-பெற்றது. 11 செய்யுட்களைக் கொண்டது. ஒவ்வொரு செய்யுளின் இறுதியிலும் சந்தனமாரி உமையே என்ற மகுடம் காணப்பெறு-கிறது.

## காதிர் மீராப்புலவர் (20-நூ)

ஊர்: சிவகங்கை.

நூல்: சங்கரநாராயண ஆச்சாரியார் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## காதிர் உசேன் (        )

நூல்: முகம்மது மார்க்க மருத்துவ சிங்காரம்.

இந்நூல் முகம்மதிய மதத்தின் சிறப்பினைக் கூறுவது. கிறித்தவ சமயத்தார்களுடைய ஐயங்களுக்கு இந்நூலில் விடைகள் தரப்பட்டுள்ளன.

## காதிர்சாயபு (        )

ஊர்: மலேசிய நாட்டைச் சேர்ந்த பினாங்கு.

நூல்: ஹாசிய மஞ்சரி

இது ஒரு கதை நூல்.

**காதிர்சாயபு வா. சா. ( )**

நூல்: ஜெமேசா ஒலியுல்லா மேல்பாடிய பவனிச்சிறப்பு

இந்நூல் எட்டுச் செய்யுட்களைக் கொண்டது. கோயம்புத்துரைச் சேர்ந்த ஜெமேசா ஒலி அர்களின் புகழை-கீர்த்தனை முதலிய பாக்களில் உரைப்பது.

**காதிர் முகியித்தீன் ( )**

சி. பெ: நவரத்தின கவி.

இவர் செய்யிது முகம்மது என்பவருடைய வழிமுறையில் வந்தவர்.

நூல்: பிக்குமாலை. இந்நூல் இருபத்தைந்து நபிமார்களின் பெயர்களை ஒரு சேர எடுத்துரைக்கின்றது

**காதிர் முகியித்தீன் சாயபு க (20-நூ)**

ஊர்: நாகூர்.

நூல்: கீழக்கரையைச் சார்ந்த அப்துல்மசீது. மு. க. என்பவர் இயற்றிய ஆசாரக்கோவை நூலைப்பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**காதிர் முகயித்தீன்புலவர் ஒ. ப. ( )**

ஊர்: புதுச்சேரி.

நூல்: நஸிஹத்துல் மூமினின்மாலை. நீதிநெறியானந்தக் களிப்பும் சில சுகிர்தப் பதங்களும், பஞ்சரத்தின வொளிவட்டம்.

நஸிஹத்துல் மூமினின் மாலை (1891) என்னும் நூல் 32 படலங்கள், 1991 செய்யுட்கள், விருத்தங்கள், கீர்த்தனைகள் ஆநந்தக் களிப்புக்கள் ஆகியவை உள்ளன. இந்நூலில் பெண்களின் நன்மை தீமையைக் காட்டிய படலம் முதலியன வற்றில் உலகியல் கூறப்படுகின்றது. மெஞ்ஞானக் கீர்த்தனை-களும் பல உள.

நீதிநெறியானந்தக் களிப்பும் சில சுகிர்தப்பதங்களும் (1893) என்னும் நூலில் 6 செய்யுட்கள் இசுலாமியருக்கு ஏற்ற அறவுரைகளைக் கூறுவது. பஞ்சரத்தினவொளி வட்டம் (1880) என்னும் நூலில் 5 அத்தியாயங்கள் உள்ளன.

**காதிரசனு மரைக்காயர்** (19-நூ)

வாழ்விடம்: தென்னார்க்காடு மாவட்டம் பரங்கிப்பேட்டை.

தந்தை: முகம்மது மகுதும் கவுசும்மியா சாயபு.

இவர் இளமைக்காலத்தில் மதசார்பான கல்வியைக்கறற் பின்பு தம்முடைய முயற்சியால் தமிழ் கற்றவர்.

நூல்: திருமணிமாலை, சீருப்புராணம் நபி அவதாரப்படல உரை, கிருஸ்துமத தீபிகை.

**காந்திமதி நாதக் கவிராயர்** (19-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் சேற்றூர்.

நூல்: திருப்பனந்தாள் காசிமடத் தலைவர் சாமிநாத சுவாமிகள் மீது பாடிய செய்யுட்கள்.

**காந்திமதி நாதப்பிள்ளை** (       )

ஊர்: திருநெல்வேலி மாவட்டம், செவ்வல்.

இவர் பத்தமடை என்ற ஊரில் இருந்த கல்லூரி ஒன்றில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: ஆழ்வாரப்பப் பிள்ளை என்பவர் காரக்குறிச்சி மடத்தில் நிகழ்த்திய காரைக்கால் அம்மையார் வரலாற்றுச் சொற்பொழிவினைப் பாராட்டி வழங்கிய செய்யுள்.

**காந்திமதி நாதப்பிள்ளை, வி. பி.** (       )

நூல்: சிவஞானபோத உபந்நியாச பாடம்.

## காப்பியஞ்சேந்தனர் (சங்ககாலம்)

இ. பெ. சேந்தனர். காப்பியம் குடியென்பர்; ஊரின் பெயரென்ற கருத்தும் உண்டு.

நூல்: நற்றிணை 246ஆம் பாட்டு.

## காப்பியாற்றுக் காப்பியனர் (சங்ககாலம்)

இவர் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்னும் அரசன்மீது பத்துப்பாட்டுப்பாடி நாற்பது நூருயிரம் பொன்னும் அவன் ஆண்ட நாட்டில் ஒரு பங்கும் பரிசிலாகப் பெற்ருர். இவர் பாடிய பத்துப்பாட்டும் பதிற்றுப் பத்தில் நான்காம் பத்தாக விளங்குகிறது.

நூல்; பதிற்றுப்பத்து நான்காம் பத்து 31-40ம் அதன் பதிகமும்.

## காபில் முகம்மது அல்காகிரி (        )

நூல்: குரான் (தமிழாக்கம்) இந்நூல் அராபிய மொழியிலிருந்து தமிழாக்கம் செய்யப்பெற்றுக் குறிப்பெழுதி வெளியிடப்பட்டுள்ளது

## காமஞ்சேர் குளத்தார் (சங்ககாலம்)

வே. பெ: காமஞ்சொகினத்தார்.

நூல்: குறுந்தொகை, 4ஆம் பாட்டு.

## காமாட்சிநாதன் செட்டியார், வ. நா. (20-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் நரசிங்கநல்லூர்.

நூல்: திருநெல்வேலியில் அருளாட்சி நடத்தும் நெல்லையப்பர் மீதும் காந்திமதியம்மை பேரிலும், குறுக்குத்துறை முருகக் கடவுள் மீதும் இசைப்பாடல்கள் பல பாடியுள்ளார். அருணகிரியாரின் திருப்புகழ்ப்பாக்களைப் போன்றும், அண்ணமலை ரெட்டியாருடைய காவடிச்சிந்தைப் போன்றும் அமைந்துள்ளன.

## காமியப்பக் கவிராயர், மு. (     )

ஊர்: சென்னை

நூல்: திருவொற்றியூர்வழிநடைப்பதம். இந்நூல் திருவொற்றியூர் வடிவுடையம்மைப்பதம், திருவொற்றியூர் வடிவுடையம்மைக் கீர்த்தனை ஆகிய நூல்களுடன் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. திருவொற்றியூர் வழிபடச் செல்லும் ஒரு தலைவனும், தலைவியும் அங்குக் காணப்பெறும் நிகழ்ச்சிகளைப் புகழ்ந்து பாடப்பெற்றது. தலைவன் தலைவியை நோக்கிக் கூறுவதாக அமைந்த இசைப்பாடல்.

## காமினி (     )

இப்பெண்பாற் புலவர் தொண்டை நாட்டில் கழைக்கூத்தாடிகள் மரபில் தோன்றியவர். விச்சுளிப்பாய்ச்சல் என்ற வித்தையில் வல்லவர். இவர் சென்னைக்கு அருகிலுள்ள புழற்கோட்டத்தைச் சார்ந்த அயனம் பாக்கத்தில் வாழ்ந்த சடையநாதரிடம் இவ்வித்தையைச் செய்து காட்டிச் சிறந்த பரிசு பெற்றார். மதுரையில் பாண்டியனிடம் இவ்வித்தையை இவர் காட்ட முற்பட்டார். அரசன் கண் இமைக்காமல் இவ்வித்தையைக் காணவேண்டும் என்று சொன்னார். ஆனால் அவனே இவ்வித்தையின் அருமை தெரியாதவனாக வித்தை நிகழ்ந்தபோது தன் காமக்கிழத்தியுடன் உரையாடிக் கொண்டிருந்து விட்டான். வித்தையைப் பார்த்தவர்கள் பாராட்டினர். பாண்டியன் பார்க்காததற்கு வருந்தி மறுமுறையும் இவ்வித்தையைச் செய்யுமாறு சொன்னான். உடனடியாக இவ்வித்தையைச் செய்வதற்கு ஆறுமாதகால அவகாசம் வேண்டும். அப்படியில்லையேல் உயிருக்கு ஊறு ஏற்படும். ஆனால் அரசன் வலியுறுத்த இவர் வித்தையைச் செய்ய வேண்டியவரானார். தம் உயிருக்கு இறுதி ஏற்படும் என்பதறிந்த காமினி அதனை அயன்றைச் சடையரிடம் கூறுமாறு விண்ணில் பறந்து சென்ற பறவைக் கூட்டத்தினைப் பார்த்து ஒரு பாட்டுப் பாடினார். வித்தைசைச் செய்யத் தொடங்கி உயிரும் துறந்தார்.

## காமு செட்டியார் (      )

நூல்: சோடச பங்கியும், இரட்டை நாகபந்தமும். சோடச பங்கியில் பதினறு பாடல்கள் நிரோட்டகமாக உள்ளன. இரட்டை நாகபந்தத்தில் ஒரு செய்யுளும் சிவசங்கர கீர்த்தனைகள் இரண்டும் நூலின் இறுதியில் காணப்படுகின்றன.

## கார்த்திகேய பிள்ளை, வ. (20 நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் மேலைப்புலோலி

தந்தை: வல்லியப்பப் பிள்ளை

இவர் நா. கதிரைவேல் பிள்ளைக்குத் தாய்மாமன். இவருடைய சைவ சித்தாந்தப் புலமைக்கும் கற்பிக்கும் ஆற்றலுக்குமாக சுத்தாத்துவித சைவசித்தாந்தப் போதக ஆசிரியர் என்னும் சிறப்புப் பெயர் வழங்கப்பெற்றது

நூல்: சைவ சித்தாந்த சங்கிரகம்.

## கார்த்திகேயப்புலவர், மு (19-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தைச்சேர்ந்த காரைத்தீவு

தந்தை: முருகேச ஐயர்

இவர் தமிழ் மொழியில் வல்லமை பெற்றிருந்தது மட்டுமன்றி வடமொழிப்புலமையும் பெற்றிருந்தார். இவர் தம் ஊரில் ஒரு பள்ளியை நிறுவிப் பலருக்குத்தமிழைக் கற்பித்தார்.

நூல்: பல்சந்தமாலை, தன்னை யமக அந்தாதியில் 30 செய்யுட்கள். சில தனிப்பாடல்கள்.

பல்சந்தமாலை: இது தில்லையில் பாடப்பெற்றது.

தன்னையமகவந்தாதி: இந்நூல் இவருடைய தந்தையால் பாடப்பெற்றது. இந்நூலில் எஞ்சியிருந்த 30 செய்யுட்களையும் இவர் பாடிமுடித்தார்.

**சில தனிப்பாடல்கள்:** இத் தனிப்பாடல்கள் இலங்கைநேசன், உதயபானு முதலிய இதழ்களைப் பாராட்டிப் பாடப்பெற்றவை.

## கார்த்திகேய முதலியார் ( )

**நூல்:** கச்சி இதழகலந்தாதி

## கார்த்திகேய முதலியார்-மாகறல் (20 நூ)

இ. பெ. கார்த்திகேய முதலியார்

ஊர்: செங்கற்பட்டு மாவட்டம் வேட்டூர்.

இவர் தமிழ் மொழியில் புலமை மிக்கவராகிக் கிண்டி தியாலாசிகல் கல்லூரியில் பல் ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராகப் பணி புரிந்தார். தமிழ் நூல்கள் திருத்தமாக வெளிவர வேண்டும் என்ற நோக்கத்துடன் பெரிதும் உழைத்தார். இவரால் பிழையின்றி அச்சாகி வெளிவந்த நூல்கள் பல. இவர் 51க்கு மேற்பட்ட நூல்களை எழுதுவதற்கான குறிப்புக்களைத் தொகுத்து வைத்துள்ளார்.

நூல்: மொழிநூல்

இது, கார்த்திகேய முதலியார் தமிழில் முயன்று கண்ட முடிவுகளை விளக்குகின்றது. இந்நூலுக்கு மு. சி. பூரணலிங்கம் பிள்ளை ஆங்கிலத்தில் ஒரு முன்னுரை வழங்கிப் பாராட்டியுள்ளார்.

## கார்த் வெயிட்டி ( )

நூல்: நூலாதாரம்.

இந்நூல் இரண்டு பாகங்களாக வெளிவந்துள்ளது. முதல் பகுதியில் எழுத்துக்கள், சொற்கள், வாசகபாடம் முதலியவை அமைந்துள்ளன. இரண்டாம் பகுதியில் நாற்பத்தெட்டுப் பாடங்கள் காணப்படுகின்றன.

## கார்மேகக் கவிஞர் (18-நூ)

இ. பெ. சினேந்திரன்.

ஊர்: கொங்குநாட்டிலுள்ள விசயமங்கலம்

தந்தை: பத்மநாப ஐயர்; சைவ சமய அந்தணர்.

இவருடைய தாய்வழி உறவினர்கள் சேதுநாட்டில் உள்ள அனுமந்தக்குடியில் வாழ்ந்து வந்தார்கள். அங்கு சென்று சைன சமய நூல்களைக் கற்றார். பின்னர்த் தமிழ் நாட்டில் பல இடங்களுக்குச் சென்று பல பாக்களை இயற்றியும், உரை நிகழ்த்தியும் வந்தார். இவைகளை இவர் விரைவாகச் செய்வதைக் கண்டு இவருக்குக் 'கார்மேகக் கவிஞன், என்ற பட்டத்தினை மக்கள் வழங்கினர்.

இவர் மைசூர் மாநிலத்தில் உள்ள கோல்லாபுரத்தில் வாழ்ந்த சாந்தம் என்ற பெண்ணைத் தம்முடைய 20-ஆவது ஆண்டில் திருமணம் செய்து கொண்டார்.

நூல்: கொங்குமண்டலசதகம், தனிப்பாடல்கள். இந்நூல். கொங்கு நாட்டின் பெருமைக்குரிய பலசெய்திகளையும் பழைய வரலாறுகளையும் கூறுகிறது. இந்நூல், உரை கதைக்குறிப்பு முதலியவைகளுடன் திருச்செங்கோடு தி. அ. முத்துசாமிக் கோனாரால் வெளியிடப் பெற்றுள்ளது.

## கார்மேகக் கோனார் (20-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டத்தில் அகத்தாரிருப்பு. இவருடைய தந்தை ஆயர்பாடிக்கோன். தாய் இருளாயி அம்மாள்.

வாழ்ந்தகாலம்: கி. பி. 1889-1957.

இவர் உள்ளூர்ப்பள்ளியில் தொடக்கக் கல்வியினை முடித்துக் கொண்டு, மதுரையில் தமிழ்ச் சங்கத்தார் நடத்திய தமிழ்ப் பள்ளியில் எட்டு ஆண்டுகள் பயின்று பண்டித பட்டம் பெற்றார். இவருடைய சிறப்பான தேர்ச்சிக்காகச் சங்கத்தார் இவருக்குப் பொற்பதக்கம் அளித்தார்கள். பட்டம் பெற்றவுடன் மதுரை அமெரிக்கன் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரியத் தொடங்கினார். அக்கல்லூரி ஒன்றிலேயே 37 ஆண்டுகள் தொடர்ந்து பணிபுரிந்து ஓய்வு பெற்றார். அக்காலத்தில் மாணவர்களிடையே தமிழ்ப்பற்றோ, தமிழாசிரியர்களுக்கு

மதிப்புக் கொடுக்கும் நிலையோ இல்லை. இருப்பினும் இவர் தம்முடைய தோற்றப் பொலிவாலும், பாடம் கற்பிக்கும் ஆற்றலாலும் மாணவர்களைக் கவர்ந்தார். அதனால் பிற ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்பெறாத மதிப்பு மாணவர்களால் இவருக்குக் கொடுக்கப்பெற்றது. மதுரைத் திருவள்ளுவர் கழகத்தார் இவருடைய தமிழ்த்தொண்டைப் பாராட்டி இவருக்குச் சோமசுந்தர பாரதியார் தலைமையில் பொன்னாடை போர்த்தி ''செந்நாப்புலவர்'' என்னும் சிறப்புப் பட்டத்தையும் வழங்கினர்.

இவர் மனைவி பத்மாசனி அம்மாள் ஆவர். இவருடைய மக்களுள் மூத்தவராகிய கிருட்டிணன் இவருக்குப் பின்னர் அமெரிக்கன் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். இவர் தமது இறுதிக்காலத்தில் தாமே ஒரு வெளியீட்டகத்தை நிறுவி நூல்களை வெளியிடும் பணியில் ஈடுபட்டார்.

நூல்: நல்லிசைப்புலவர்கள், கண்ணகிதேவி, ஆபுத்திரன்வரலாறு, காப்பியக் கதைகள், தமிழ் மொழியில் மறுமலர்ச்சி, ஆராய்ச்சிக் கட்டுரைகள்.

## காராணை விழுப்பரையர் (        )

பார்க்க: விழுப்பரையர்.

## காரி (        )

இவர் பொன்னி நாட்டில் முகரியம்பதியில் கொறுக்கையர் மரபில் பிறந்தவர் என்பர். தந்தையார் பெயர் பூதன் என்பர்.

நூல்: கணக்கதிகாரம் உரை. இந்நூல் வடமொழியில் உள்ள கணிகி சாஸ்திர புவனதீபம் முதலிய வடமொழி நூல்களைப் பின்பற்றிச் செய்யப் பெற்றது. இந்நூலின் இறுதியில் சங்கம், விந்தம், பதுமம், நாடு, சமுத்திரம், வெள்ளம் போன்ற அளவைகளைப் பற்றிக் கூறப்பெற்றுள்ளது. நூலின் தொடக்கத்தில் கணேசருக்கு வணக்கம் கூறப்பெற்றுள்ளது. முதலில் நிரைகளையும், அளவைகளையும் கூறிவிட்டுப் பின்னர் பல கணக்குகளையும் அவைகட்கு உரிய விடைகளையும் தருகின்றது,

**காரி கிழார்** (சங்ககாலம்)

ஊர்: காரி; இவ்வூர் இப்பொழுது தொண்டைநாட்டில் இராமகிரி என்றழைக்கப்படும் ஊராகும்.

நூல்: புறநானூறு 6ஆம் பாட்டு.

**காரிநாயனூர்** ( )

இவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர்; திருக்கடவூரில் வாழ்ந்தவர். சிவபெருமான் மீது செய்யுள் பாடினுர் என்று நம்பியாண்டார் நம்பி தான் இயற்றிய திருத்-தொண்டர் திருவந்தாதியில் கூறியுள்ளார். இவர் இயற்றிய காரிக்கோவை சொல் விளங்கிப் பொருள் விளங்கா முறையில் இயற்றப்பட்டது என்றும், மூவேந்தர்களிடம் இக்கோவையைக் கொண்டு சென்று செய்யுட்களைப்பாடிப் பொருள் உரைத்து அவர்கள் வழங்கிய பொருளைக் கொண்டு சைவத்தொண்டு செய்தார் எனறும் சேக்கிழார்பெரியபுராணத்தில் கூறியுள்ளார்,

நூல்: காரிக்கோவை.

**காரியாசான்** (5-நூ)

ஊர்: மதுரை. இவர் மதுரையைச் சேர்ந்தவர் என்று சிலர் கருதுகின்றனர். கல்விகற்கும் பொருட்டு மதுரைக்கு வந்து தம் வாழ்நாள் முழுமையும் அங்கு வாழ்ந்திருக்க வேண்டுமென்று கூறுகின்றனர். சைனர், ஐந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்தவர் என்றும் கருத்துண்டு.

இவருடைய ஆசிரியர் மதுரைத்தமிழாசிரியர் மாக்காயனுர் ஆவார். அவர் கி.பி.470ல் வச்சிரநந்தி என்ற சமணமுனிவரால் நிறுவப்பெற்ற தமிழ்ச்சங்கத்தில் ஓர் உறுப்பினர் என்பர். பதினென்கீழ்க்கணக்கு நூல்களுள் திணைமாலை நூற்றைம்பது, ஏலாதி என்னும் இரண்டு நூல்களை எழுதிய கணிமேதாவியார் இவருடன் பயின்ற ஒருசாலை மாணவர் என்பர்.

நூல்: சிறுபஞ்சமூலம் இந்நூல் பதினென்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. அயமை எனற வனப்பினைப் பெற்றது. கண்டங்கத்தரி

சிறுவழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெருஞ்சி ஆகிய ஐந்தின் வேர்கள் மக்களின் உடற்பிணியைப் போக்குதற்கு ஒரு சிறந்த மருந்தாகும். இவ்வைந்தையும் மருத்துவ நூலார் சிறுபஞ்சம் என்பர். இதனைப்போல் இந்நூலில் ஒவ்வொரு வெண்பாவிலும் உள்ள ஐந்து பொருள்கள் நூலைக்கற்போரின் உள்ளப்பிணியைப் போக்க வல்லன என்ற கருத்தில் சிறுபஞ்சமூலம் என்ற பெயர் வந்தது என்பர். இந்நூலில் சிறப்புப்பாயிரச் செய்யுட்கள் இரண்டு உட்பட நூற்று நான்கு வெண்பாக்கள் உள்ளன. இந்நூலில் பெரும்பாலாகச் சொல்லப்பட்ட கருத்துக்கள் எல்லாச் சமயத்தார்க்கும் ஏற்றவையே. சமண சமயக் கருத்துக்கள் சிறுபான்மையே காணப்படுகின்றன.

## காரியாசர் (15-நூ)

ஊர்: சோழநாட்டில் முகரியூர்: கொறுக்கையர் குலம்.

திருக்கடவூரில் வாழ்ந்த அந்தணர் காரிநாயனார், சிறுபஞ்சமூலம் செய்த காரியாசான் ஆகியோரிலும் இவர் வேருவர். இவரைக் குறித்த பழம் பாட்டொன்ருல் இவர் குறுக்கையர் குடியினர் என்று தெரிகின்றது.

நூல்: கணக்கதிகாரம்.

இது பண்டைக்கணித நூல்களுள் ஒன்று. இது நிலம், பொன், நெல், அரிசி, கல், கால் என்ற ஆறு வழிகளில் வரும் கணக்குகளை உரைப்பது. இவையன்றியும் வேறு பல சிந்தனைக் கணக்குகளும் இந்நூலுள் கூறப்பட்டுள்ளன. இந்நூலுள் பாயிரம் 17 பாடல்களும், நூல் 110 பாடல்களும் உள்ளன. இப்பாடல்களுள் வெண்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தம் ஆகிய பாக்கள்காணப்படுகின்றன. நூல் மூலமும் உரையுமாக உள்ளது. தம் கருத்தை விளக்க ஆசிரியரே உரை எழுதியிருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

## காரி ரத்தினக் கவிராயர்-1 (          )

பார்க்க: இரத்தினக்கவிராயர்.

**காரி ரத்தினக் கவிராயர்-2 ( )**

பார்க்க: இரத்தினக்கவிராயர்-2

**காரைக்காலம்மையார்** (6-நூ)

இ. பெ. புனிதவதி.

ஊர்: காரைக்கால்.

தந்தை: தனதத்தன். இவருடைய ஊர் பற்றியும், இவரைச் சிவபெருமான் அம்மையே என்றழைத்த சிறப்புப் பற்றியும் காரைக்காலம்மையார் என்றழைக்கப் பெற்றார்.

இவர் நாகப்பட்டினத்தில் வாழ்ந்த பெருவணிகனாகிய நிதிபதி என்பவனுடைய மகன்பரமதத்தனை மணந்துஇல்வாழ்வு நடத்தினார். ஒருமுறை கணவன் கொடுத்தனுப்பிய மாங்கனிகளுள் ஒன்றினைப் பசித்து வந்த சிவனடியார் ஒருவருக்கு உணவுடன் படைத்து விட்டார். பின்னர் கணவர் வீடு திரும்பியதும் உணவு உண்டபோது சிவபெருமான் அருளால் அந்த மாங்கனியினைத் திரும்பவும் வரவழைத்துக் காட்டினாள். இதனைக் கண்ட பரமதத்தன் மிகவும் அச்சம் கொண்டு புனிதவதியாரைத் தம்முடைய மனைவியாகக் கொள்ளாமல் தெய்வத்தன்மை பெற்ற ஒருத்தியாகவே எண்ணத் தலைப்பட்டான். இந்நிலையில் அவன் வணிகத்தின் பொருட்டுப் பிற வணிகர்களுடன் வெளிநாடு சென்றான். பெரும் பொருளீட்டிக் காரைக்காலிற்குத் திரும்ப விரும்பாதவனாகிப் பாண்டி நாட்டிற்குத்திரும்பினான். அங்கு வணிக குலப்பெண் ஒருத்தியை மணந்தான். அவருக்குப் பிறந்த பெண்குழந்தைக்குப் புனிதவதி என்று பெயரிட்டான். பரமதத்தன் பாண்டி நாட்டில் இருப்பதை அறிந்த புனிதவதியாரின் உறவினர்கள் அவரைப் பாண்டி நாட்டிற்கு அழைத்துச்சென்று மீண்டும் இல்லறத் தொடர்பினை ஏற்படுத்த முயன்றனர். அவர்கள் தன்னிடம் வந்தபோது பரமதத்தன் தன் மனைவி மக்களுடனும் புனிதவதியார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். பரமதத்தனுடைய மனநிலையை அறிந்த புனிதவதியார் இதுவரை போற்றி வந்த தமது உடல் வனப்பினை விடுத்துச் சிவபெருமானை வேண்டிப் பேய் வடிவு பெற்றார்.

புனிதவதியார் பின்னர் சிவனுடைய பல தலங்களுக்கும் சென்று, தலையாலேயே நடந்து கைலாய மலையினை அடைந்தார். அங்குச் சிவபெருமான் இவரை 'அம்மையே' என அழைக்க இவர் சிவபெருமானை 'அப்பா' என்றழைத்தாதார். பின்னர் சிவபெருமான் புனிதவதியாரிடம் 'ஆலங்காட்டில்' ஆடுமா நடமும் நீ கண்டாளர்தஞ் சேர்ந்து எப்போதும் பாடுவாய் நம்மை என்றார். புனிதவதியாரும் தலையினாலேயே நடந்து திருவாலங்காடு சென்று, சிவபெருமானுடைய ஆனந்தத் தாண்டவத்தினைக் கண்டுமகிழ்ந்தார். இவர் திருவாலங்காட்டுத் திருப்பதியில் காலால் நடவாமல் தலையால் நடந்து சென்றமை-யால், அத்தலத்தினை நெருங்கிய சம்பந்தர் அங்குச்செல்லாது அவ்வூர் எல்லையில் தொழுது சென்றார் என்பர்.

நூல்: அற்புகத் திருவந்தாதி' திருவிரட்டை மணிமாலை, திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள், அற்புதத் திருவந்தாதி அந்தாதித் தொடையில் அமைந்தது. 101 வெண்-பாக்களை உடையது. திருவிரட்டை மணிமாலை 20 செய்யுட்-களைக் கொண்டது, கலித்துறையும் வெண்பாவும் மாறி மாறி வர அமையப்பெற்றது. திருவாலங்காட்டு முத்ததிருப்பதி-கங்கள் ஒவ்வொன்றும் 11 விருத்தங்களை உடையன.

## கால்டுவெல் (19-நூ)

ஊர்: அயர்லாந்தில் கிளாடி ஆற்றின் கரையிலுள்ள சிற்றூர்.

வாழ்ந்தகாலம்: 1814-1891.

இவர் டப்ளின் நகரத்திலிருந்த அழகுக்கலைக் கல்லூரியில் ஓவியம் பயின்றார். பிறகு லண்டன் சமயத்தொண்டர் சங்கச்சார்பில் கிளாஸ்கோ கல்லூரியிலே கல்வி கற்றார். அச்-சங்கச் சார்பில் கிறிஸ்தவ சமயத் தொண்டு புரியத் தமிழ் நாட்டிற்கு 1838இல் வந்தவர் சென்னையில் மூன்றாண்டுகள் தங்கித் தமிழ் கற்றார். சென்னையிலிருந்து கால்நடையாகவே தமிழ் நாடெங்கும் சுற்றிப் பார்த்தார். பிறகு திருநெல்வேலியில் இடையன்குடி என்னும் ஊரில் ஐம்பதாண்டுகள் வாழ்ந்து சிறப்பாகச் சமயப்பணிபுரிந்தார். இவர் தெலுங்கு, கன்னடம்,

மலையாளம் முதலிய மொழிகளையும் நன்கு அறிந்தவர். இராயல் ஆசியச் சங்கம், சென்னைப் பல்கலைக்கழகம், ஆகிய-வற்றில் இவர் உறுப்பினராக இருந்தார். இவரது சமயப்-புலமையைப் பாராட்டி டர்காம் பல்கலைக்கழகம் இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கிற்று.

1877இல் இவர் திருநெல்வேலியில் பிஷப்பாகப் பட்டம் பெற்றார். 1891இல் கொடைக்கானல் மலையில் ஒய்வு பெற்று இருந்தபோது காலமானார். இவரை இடையன் குடியிலே இவரால் கட்டப்பெற்ற கோயிலிலே அடக்கஞ் செய்துள்ளனர்.

நூல்: திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், திருநெல்வேலிச் சரித்திரம், நற்கருணைத்தியான மாலை, தாமரைத் தடாகம், ஞானஸ்நானம், நற்கருணை.

திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் துளுகுடகு ஆகிய திருந்திய மொழி ஆறினையும், துதம் கோதம் கந்தம், கூ, ஓராவான், ராஜ்-மகால் ஆகிய திருந்தா மொழி ஆறினையும் ஒப்பு நோக்கி ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற இலக்கண நூல். இந்நூல் எழுந்த பின்னர்த்தான் தமிழ் வடமொழிக்கு இனமில்லாத தனிமொழி என்னும் உண்மை பரவலாயிற்று.

திருநெல்வேலிச் சரித்திரம். திருநெல்வேலியின் வரலாற்-றை ஒழுங்கு பெறக் கூறும் நூல்.

நற்கருணைத் தியானமாலை, தாமரைத்தடாகம் இவை இரண்டும் தமிழ் நூல்கள். ஞானஸ்நானம், நற்கருணை: இவை இரண்டும் கட்டுரைகள்.

## *காலகாலன் ( )*

இ. பெ 'ஈழத்தரையன்' சிங்களத்தரையன் சோழநாட்டுத்-திருக்கடவூர் வீரட்டானேசுவரர் கோயில் மூன்றுங்கோபுரத்தே உள்ள கல்வெட்டொன்றில் இவரது பாடல் காணப்படுகிறது.

## *காலசித்தர் ( )*

நூல்: 'காலசித்தர் பாட்ல்' இது சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் கையெழுத்துச் சுவடியாக உள்ளது.

## காலிங்கர் (13-வது நூ. முற்பகுதி)

வே. பெ: காளிங்கர்.

திருக்குறளிற்கு உரை வரைந்த பலருள் இவர் ஒருவர். இவருடைய உரை, முதல் 304 குறள்களுக்குக் கிடைக்கப்பெறவில்லை. ஏனைய பகுதிகளுக்கும் உரைகுறைந்தும் சிதைவுற்றும் காணப்பெறுகின்றது. இவருரை தி. பொ. பழனியப்ப பிள்ளையால் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

இவர் 'பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர்' என்ற குறளிற்கு 'நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்' என்ற தொடருக்கு பெரியோரால் விரும்பத்தக்க உலகினுள் சிறப்புடையதாகிய உத்தர குரு வினைத்தாம் எய்தி இனிது வாழ்ந்திருக்க வேண்டுபவர் என்று உரை எழுதுகின்றார். சைவர்களுடைய கொள்கைப்படி உத்தரகுரு என்பது போகம் துய்க்கும் பூமியாகும். 'வகுத்தான் வகுத்த வகையல்லால்' என்பதனை, வகுத்தார் வகுத்த வகையல்லால் என்று பாடங்கொண்டு, அக்குறளிற்கு அச்சமயத்தார் கொண்டுள்ள பழவினை, தன்னைச் செய்தானைச் சென்றடையும் என்ற கொள்கை அடிப்படையில் உரை எழுதி உள்ளார். ஆங்காங்கே இங்ஙனம் தம் உரையினைச் சமண சமயக் கொள்கை அடிப்படையில் இவர் வரைந்துசெல்வதனைக் காணலாம்.

பரிமேலழகர்க்கு இவர் காலத்தால் முந்தியவர். மணக்குடவர், பரிப்பெருமாள் ஆகியோருக்கும் இவர் முற்பட்டவர் என்ற ஒரு கருத்துத் தெரிவிக்கப் பெறுகின்றது.

காமத்துப்பாலில் ஆண்பாற் கூற்று, பெண்பாற்கூற்று, இருபாற்கூற்று என முத்திறமாகப் பிரித்துப்பொருள் கூறுகிறார். அப்பாலில் உள்ள சில குறள்கள், பிற உரைகளை நோக்க இவருடைய உரையில் அதிகாரம் மாறிக்காணப்பெறுகின்றன. இவர் காமத்துப்பாலில் கொடுத்திருக்கின்ற அதிகாரப்பெயர்கள், பரிமேலழகர் உரையில் சில வேறுபாடுகளுடன் காணப்பெறுகின்றன. (எ. டு) 'அவர் வயின் விரும்பல்' (காலிங்கர்) 'அவர் வயின்விதும்பல்' (பரிமேலழகர்). பல குறள்களுக்கு இவர் வேறுபாடங்களும், அவைகளுக்கு விளக்கங்

களும் கொடுத்துள்ளார். (எ. டு) அன்பகத்தில்லா' என்ற குறளில் வன்பால் என்பதனை, வன்பார் என்கிறது. சிலவற்றிற்கு இவர் கொண்ட பாடங்களும், கொடுக்கும் விளக்கங்களும் சிறப்பாக உள்ளன. சில சொற்களுக்கு இவர் புதுப்பொருள் கொடுக்கின்றார். (எ. டு.) காடி-நடுவுநிலைமை மட்பகை-நீர் வெள்ளம், ஒருவந்தம்-பெருஞ்செல்வம். இவருரை பிண்டப் பொழிப்பாகவுள்ளது. ஒவ்வோர் அதிகாரத்தின் இறுதிக் குறளிலும் அடுத்த அதிகாரத்தினைத் தொடர்பு படுத்திக் காட்டுகின்றார். ஆனால் அதிகாரத்தின் தலைப்புப்பொருளை விளக்கிச் செல்வதில்லை.

## காலிங்கன் ( )

நூல்: திருவெண்காட்டுப்புராணம். இந்நூல் மாயூரம் கோட்டத்தில் உள்ள திருவவெண்காட்டுத்தலச் சிறப்பைக் கூறுவது. பதினெட்டுச் சருக்கங்களையும் கொண்டது. இப்புராண நூல் தஞ்சாவூர் சரசுவதி மஹால் நூல்நிலையத்தில் கையெழுத்துச் சுவடியாக உள்ளது.

## காலெறி கடிகையார் (சங்க காலம்)

தொடராற் பெயர் பெற்ற புலவர்.

நூல்: குறுந்தொகை 267 ஆம் பாட்டு.

## காவட்டனார் (சங்க காலம்)

இப்பெயர் காவிட்டன் எனக் கோவில் பட்டர்களிடையே மிகுதியும் வழங்கியதென்பது சோழவந்தானுக்கு அண்மையில் உள்ள தென்கரைக் கல்வெட்டுக்களால் தெரிகிறது. அதிஜய மங்கலத்துக் காவிட்டன் முத்துசீராமபட்டன்; காவிட்டன் வடுகனாதித்தன் (S I.I Vol 5 No.294) எனவரும் கல்வெட்டுப் பகுதியால் புலனாகும்.

நூல்: அகநானூறு 378ஆம் பாட்டு.

## காவற் பெண்டு (சங்க காலம்)

வே. பெ: காதற்பெண்டு. பெண்புலவர்.

நூல்: புறநானூறு 86ஆம் பாட்டு.

## காவன் முல்லைப் பூதனார் (சங்க காலம்)

இவரது இயற்பெயர் பூதனார். காவல் முல்லை என்னும் புறத்திணையைப் பாடும் வல்லமையுடையவராக விளங்கின-மையின் காவல் முல்லை என்னும் அடைமொழி இவர் பெயரோடு இயைந்து விளங்குவதாயிற்று. இவர் பாலைத் திணையைப் பலவாறு புனைந்து பாடியுள்ளார்.

நூல்: அகநானூறு 21, 151, 241, 293, 391.

குறுந்தொகை; 104, 211. நற்றிணை 274.

## காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார் (சங்க காலம்)

ஊர்: காவிரிப்பூம்பட்டினம்.

நூல்: குறுந்தொகை 342ஆம் பாட்டு.

## காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் (சங்க காலம்)

ஊர்: காவிரிப்பூம்பட்டினம்.

இப்புலவர் ஊர்ப்பெயருடனும் ஊர்பெயரின்றித் தனியாகக் காரிக்கண்ணனார் எனவும் அழைக்கப் பெறுகின்றார் .இப்புலவர் உறுப்பால் பெயர் பெற்றவரென்றும். (காரி – கரிக்குருவி) வணிகரென்றும் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் குறிப்பிடுவர். கரிக்குருவியின் கண் போல அழகான கண்ணுடையவர் என்பதால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். தொல்காப்பியம் மரபியலில் "ஊரும் பெயரும்" (74) என்ற நூற்பாவிற்கு உரை எழுதும் பேராசிரியர், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணன், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டன் என்பன

வணிகர்க்குரிய பெயரென்று குறிப்பிடுவர். இவரது பாடற் குறிப்புக்களால் இவரை வைணவரென்று கருத இடமுண்டு. சங்கப் பாடல்களோடு திருவள்ளுவமாலையில் இவர் பெயரில் ஒரு பாடல் காணப்படுகிறது.

இவர், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறன், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, குராப் பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன் ஆகிய பேரரசர்களையும், சேரமான் கோதைக்குப் படைத் தலைவனை பிட்டங்கொற்றனை யும் பாடியுள்ளார். இவர் பாடிய திருவள்ளுவமாலைச் செய்யுளில் நான்முகனே திருவள்ளுவராக வந்து வேதப் பொருள் பொய்யுருது விளங்கத் திருக்குறள் இயற்றினுரென்று கூறுகிருர்.

நூல்: அகநானூறு 107, 123, 285 குறுந்தொகை 297. புறநானூறு 57, 58, 169, 171, 353. திருவள்ளுவமாலை 28.

## காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்

(சங்க காலம்)

ஊர்: காவிரிப்பூம்பட்டினம்.

இவர் அவியன் என்னுங் கொடையாளியையும் அவனது மலையையும் சிறப்பித்துப் பாடியிருக்கிருர். இவர் பெரும்பாலும பாலைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார்.

நூல்: அகநானூறு 103, 271. நற்றிணை 389.

## காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன் கண்ணன்

(சங்க காலம்)

ஊர்: காவிரிப்பூம்பட்டினம்.

நூல்: குறுந்தொகை 347ஆம் பாட்டு.

## காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் (சங்க காலம்)

ஊர்: காவிரிப்பூம்பட்டினம்.

தந்தை: பொன்வாணிகனார்; வணிகர்.

நூல்: பத்துப்பாட்டு - 5வது முல்லைப்பாட்டு.

இது 103 அடிகளையுடைய ஆசிரியப் பாவாலமைந்தது. போர் செய்தற்குப் பிரியக் கருதியதனைக் குறிப்பாலுணர்ந்து தலைவி ஆற்ருமை எய்தினுள். தலைவன் அவள் வாட்டத்தைக் கண்டு வற்புறுத்திச் சென்ருன். ஆயினும் தலைவி உடன்படா நிலையிலிருந்ததை அறிந்த பெருமுது பெண்டிர் 'அவன் வினை முடித்து வருதல் உண்மை. நீ வருத்தம் நீங்குக' என ஆறுதல் கூறினர். தலைவி ஆற்றியிருந்தாள்; தலைவனும் போர் முடித்து வந்தான். தலைவன் வருகையைத் தோழி முதலியோர் தம்முட் கூறியதாக நப்பூதனுர் பாடியது இப்பாட்டு.

முல்லை என்பது ஆற்றியிரு என்ற கணவன் சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறம் நிகழ்த்திய இயற்கை ஆகும். இப்பாட்டினுல் பெருமுது பெண்டிர் விரிச்சி பார்க்கும் வழக்கமும், பாசறையின் அமைப்பும், பாசறையிலுள்ள பள்ளி-அறையின் இயல்பும், 'வீரமங்கையர், நாழிகை சொல்வார், மெய்காப்பாளர் என்பவர்களுடைய செயல்களும், தலைவன் தன் படைகளின் வருத்தத்தை நினைந்து வருந்தும் அன்பின் திறனும், தலைவி தலைவனைக் காணுது துயருறுவதும், காட்டு வழியில் தோன்றும் காட்சிகளும் அறியப்படுகின்றன.

## காவை அம்பலவாணத் தம்பிரான் ( )

இவர் தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த தம்பிரான்களில் ஒருவர். இவருடைய ஆசிரியர் வெள்ளி அம்பலவாணத் தம்பிரான் ஆவார்.

நூல்: பிரசாத அலுவல். இந்நூலினைத் தவிர சிவப்பிரகாசர் செய்யுட்கள் ஒவ்வொன்றின் கருத்து விளங்குமாறு நூறு குறள் வெண்பாக்களும், திருவருட்பயன் என்னும் நூலில் உள்-ளடங்கிய உண்மைப் பொருட்களைக் கொண்ட நூறு கலித் துறைச் செய்யுட்களையும் இயற்றியுள்ளார்.

## காழி காவற்பண்டாரம் (பிற்காலம்)

நூல்: உரோமரிஷி பதினறு' இது வேதாந்த நூல்களைச்சார்ந்தது. யோகஞ்செய்யும் முறையைக் கூறுவது.

## காழிஞானதேசிகர் (பிற்காலம்)

ஊர்: கார்த்திகேயபுரம்

நூல்: அழகிய மாமுலை அம்மை பிள்ளைத்தமிழ், இந்நூல் திருவீழிமிழலை அழகிய மாமுலை அம்மை மீது இயற்றப்பெற்றது.

## காழி மறைஞானதேசிகர் ( )

பார்க்க: மறைஞான தேசிகர்

## காளத்தி ஐயர் (பிற்காலம்)

நூல்: திரிவிரிஞ்சைபுரம் வழிநடைப்பதம், விரிஞ்சிபுரத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைக் கண்டு வழிபடலாம் எனத் தலைவன் ஒருவன் தன் தலைவியை அழைக்கும் முறையில் அமைந்துள்ளது.

## காளமேகப்புலவர் (15-நூ)

வே. பெ: வரதர்

ஊர்: தஞ்சைமாவட்டம் கும்பகோணக் கோட்டத்திலுள்ள நந்திபுரம்.

இவர் திருவரங்கம் பெரிய கோயிலில் மடைப்பள்ளித் தொழிலில் இருந்து வந்தார். அப்பொழுது கோயில் தாசி மோகனங்கி என்பவளிடத்துக் காதல் கொண்டார். அதனால் வைணவராக இருந்த இவர் சைவரானார்; திருவானைக் கோயிலில் மடைப்பள்ளித் தொழிலை மேற்கொண்டார், திருவானைக்காவலில் எழுந்தருளியுள்ள அகிலாண்டேசுவரியின் திருவருளால் விரைந்து கவ்பாடும் திறமை பெற்றார். இவர் பாடிய தனிப்பாடல்கள் பல.

இவருடைய காலத்தில் திருமலைராயனுடைய அவையில் அதிமதுரகவி என்ற புலவர் ஒருவர் இருந்தார். காளமேகம் திருமலைராயன் பட்டிணம் சென்றபொழுது அதிமதுரகவி இவரை மதிக்கவில்லை. வருத்தங் கொண்ட காளமேகம்

தம்முடைய புலமையை அவர்களுக்குக் காட்டுவதற்காக மிகக் கடுமையான சோதனையாகிய எமகண்டம் பாடி அதில் வெற்றியும் பெற்றார். அரசனும் அதிமதுரகவியும் இவருக்குச் சிறப்புச் செய்யாமையால் இவர் வெகுண்டு திருமலைராயன் பட்டினம் மண்மூடிப்போகும்படி வசைபாடினார்.

இவர் சிலேடை பாடுவதில் வல்லவர்; பாம்புக்கும் வாழைப்பழத்திற்கும், பாம்புக்கும் எள்ளுக்கும், பாம்புக்கும் எலுமிச்சம்பழத்திற்கும், முகுந்தனுக்கும் முறத்திற்கும் எனப்பல சிலேடை வெண்பாக்கள் பாடியுள்ளார். தெய்வங்களைப் பாடிய பாடல்கள் பழிப்பன போலப் புகழ்வனவாக உள்ளன.

இவர் தாம் பாடிய 'இந்திரன் கலையாய் என் மருங்கிருந் தான்' எனத்தொடங்கும் பாட்டில் 'நலைசெயு என்னை நிலைசெய், கல்யாணிச் சாளுவத் திருமலைராயன், மந்தரப்புயனுங் கோப் பயனுதவு மகிபதிவிதரணராமன், வாக்கினுல் குபேரனுக்கினுன் என்று தன்னை ஆதரித்த சாளுவத்திருமலைராயனைக் குறிப்பிட்டுள்ளாராதலின் இவர் அச்சாளுவத் திருமலைராயனுடைய காலத்தில் வாழ்ந்தவராவர். தஞ்சை இராசராசேச்சுரத்தில் காணப்படும் கல்வெட்டால் திருமலைராயன் என்பான், சோழ நாட்டில் விசயநகர வேந்தனின் பிரதிநிதியாக இருந்து கி. பி 1455இல் ஆண்டு வந்தானென்று தெரிகிறது. ஆதலின் காளமேகப்புலவரின் காலம் 15ஆம் நூற்றாண்டாகும்.

இவர் வசைபாடுதலில் வல்லவராக விளங்கியமையின் வசைபாடக் காளமேகம் என்று சிறப்பித்துக் கூறப்பெற்றார். இவர் பாடிய தனிப்பாடல்களைத் தமிழ் நாவலர் சரிதை, தனிப்பாடற்றிரட்டு, தனிச்செய்யுட்சிந்தாமணி, பெருந்தொகை ஆகிய நூல்களிற் காணலாம். இவர் சரசுவதிமாலை, பரப்பிரம விளக்கம், சித்திரமடல் ஆகிய நூல்களையும் பாடினார் என்பர்.

**நூல்: திருவானைக்கா உலா**

திருவானைக்காவில் கோவில் கொண்டெழுந்தருளியுள்ள சிவபெருமான் மீது பாடப்பெற்ற ஓர் உலாப்பிரபந்தமாகும்.

**காளிங்கர் ( )**

பார்க்க: காலிங்கர்

**காளிங்கராயப்பிள்ளை (19-நூ)**

ஊர்: கோயம்பேடு; சீர்கருணீகர் குலத்தவர்.

நூல்: திருமழிசைச் சிலேடை வெண்பா, இந்நூல் 100 பாடல்களைக் கொண்டது. இந்நூலின் பாடல்களில் காணப்படும் எகர, ஒகரங்கள் புள்ளி பெற்றுள்ளதால் இந்நூலாசிரியர் பழங்காலத்தில் வாழ்ந்தவர் என்றும், இந்நூல் அச்சுப்பொறி இந்தியாவிற்கு வந்த தொடக்ககாலத்திலேயே அச்சிடப்பட்டது என்றும் ஒரு கருத்து உண்டு.

**காளிச்சாமிகள் (19-நூ)**

ஊர்: எட்டையபுரம்

நூல்: கயிலைக் கலித்துறையந்தாதி, கயிலை வெண்பாவந்தாதி, அருணைப்பதிகம், பழமலைப்பதிகம், திருச்செந்திற்பதிகம், கழுகுமலைப்பிள்ளைத்தமிழ்.

**காளிந்திதாசர் (பிற்காலம்)**

ஊர்: கோயம்புத்தூர்

நூல்: சபாரஞ்சிதகீதம். இந்நூலுக்குக்கோவிந்தநாம சங்கீர்த்தனம் என்னும் சபாரஞ்சிதகீதம் என்பது முழுப்பெயராகும் இதில் திருமாலைப் புகழ்ந்து பாடிய நாற்பத்து மூன்று கீர்த்தனங்கள் உள்ளன.

**காளிமுத்தம்மை (15-நூ)**

நூல்: வருணகுலாதித்தன் மடல்

இம்மடல் நாகைப்பட்டினத்தில் வாழ்ந்த வருணகுலாதித்தன் மீது பாடப் பெற்றது. இம்மடலில் இவள் பெயர் காத்தாள், வருணகுலாதித்தன், அச்சுதராயன் என்று கூறப்-

பட்டுள்ளது. இவள் தந்தை கேனேரிராஜ வருணகுலாதித்தன். இவள் தம்பி பெயர் காத்தான்.

இம்மடல் உலா மடலாகும் என்பது காப்புச் செய்யுளால் தெரிகிறது. இது பாயிரமாக விநாயகர் வணக்கம், முருகன் வணக்கம, பாட்டுடைத் தலைவன் சிறப்பு என மூன்று வெ ா பாக்களையும், 47 கலிவெண்பாக் கண்ணிகளையும் கொண்டது.

## காளிமுத்து (17-நூ)

பெண்புலவராகிய இவர் பரத்தையர் குடியில் தோன்றியவர்; மயிலைக்குழந்தை முதலியார் என்பவரையும், பள்ளிகொண்டான் என்னும் பரதவனையும் பாடிப் பரிசு பெற்றவர். 'நெல்லைச்சொன்னுபரணத்தை' என்று தொடங்கும் தனிப்பாடலும் 'வள்ளிகொண்டான் மயிலேறிக்கொண்டான்' என்ற பாடலும் இவர் பாடியனவாகும்.

## காளிமுத்துப்புலவர்-1 (15-நூ)

வாழ்ந்த காலம்: கி. பி. 1422-1482

நூல்: பராக்கிரம பாண்டியனைப் புகழ்ந்து பாடிய தனிப்பாடல்.

## காளிமுத்துப்புலவர்-2 (பிற்காலம்)

ஊர்: சென்னை

நூல்: சென்னைத் திருமயிலையில் வாழ்ந்த பூம்பாவை வேலப்ப முதலியார் மகன் குழந்தைக்குருநாத முதலியார் என்பவர் மீது பாடிய செய்யுட்கள்.

## காளியண்ண பிள்ளை (பிற்காலம்)

ஊர்: கொங்குநாட்டுப் பூந்துறை, கருணீகர், பூந்துறையில் கோட்ட ஆட்சி அலுவலராகப் பணிபுரிந்த வாரணவாசிக்கவுண்டர் ஆதரவில் ஐம்பது ஆண்டுகள் வாழ்ந்தார். இறுதிக் காலத்தில் வேண்டுறிச்சி வேலப்பக் கவுண்டரிடம் தங்கியிருந்தார்.

நூல்: விநாயகபுராண வசனம், ஆத்திசூடி வெண்பா. இவர் பல பெருநிலாக்கிழார்கள் மீது யமகம், மடக்கு, அந்தாதி முதலிய நூல்களையும், தனிப்பாடல்களையும் இயற்றியுள்ளார்.

## காளியப்ப பிள்ளை (20-நூ)

தந்தை: கலியாணசுந்தர கவிராயர்.

இவர் சேற்றூர் சமத்தானத்தில் இருந்தவர். தந்தையாரிடம் இலக்கண இலக்கியம் கற்றுப் புலமை பெற்றார். சேதுபதி பள்ளியில் ஆசிரியராகவும், அஞ்சல் நிலையத்தலைவராகவும் இருந்தார்.

நூல்: திருமலைச் சிங்காரமாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## காளை அசன் அலிப்புலவர் (பிற்காலம்)

நூல்: அனுகூலபுஞ்சம் (1900) இது இரகுமான், இரசூல் முதலியோர் பேரில் புகழ்ந்து பாடிய கவிதைகள், கீர்த்தனங்கள் முதலியவற்றைக் கொண்டது.

## காளைச்சித்தர் (15-நூ)

வே. பெ: காளச்சித்தர்

இவர் காளைபூட்டி, உழக்கோலைக் கையில் கொண்டு ஏர் உழுது பயிர்த்தொழில் செய்வதாக ஞானப்பொருள்களை உருவகம் செய்து பாடுவதால் இப்பெயர் பெற்றார் என்பர்.

நூல்: தொன்னூல் நிலைய ஏட்டுப்பிரதியில் காணப்படும் எட்டுப் பாடல்கள்.

## கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார் (சங்ககாலம்)

ஊர்: திண்டிவனம்.

தந்தை: கீரன்.

இவரது இயற்பெயர் கண்ணனார். இவர் காவிதிப்பட்டமும் பெற்றுள்ளமையின் உழுவித்துண்ணும் வேளாண்மரபினராவர். இவர் நெய்தல் குறிஞ்சி முதலாய வளங்களைச் சிறப்பித்துப்பாடியுள்ளார்.

நூல்: நற்றிணை 218ஆம் பாட்டு.

## கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார் (சங்ககாலம்)

ஊர்: திண்டிவனம்.

கொற்றன் எனப்பலர் இருத்தலின் அவர்களின்வேறுனவர் என்பது புலப்பட இவர் பெருங்கொற்றன் எனப்பட்டார்.

நூல்: நற்றிணை 364ஆம் பாட்டு.

## கிடங்கில் குலபதி நக்கண்ணனார் (சங்க காலம்)

ஊர்: திண்டிவனம்.

இவரது இயற்பெயர் கண்ணன். 'ந' என்பது சிறப்புப் பற்றி வந்தது. ஆயிரம் மாணவர்களை ஆதரித்துக் கல்வி புகட்டுவோர் குலபதியாவர். இப்பட்டத்தைப் பெற்றிருத்தலின் இவர் சிறந்த ஆசிரியர் என்று தெரிகிறது.

நூல்: குறுந்தொகை 252ஆம் பாட்டு.

## கிதுரு முகம்மது மரைக்காயர் (19-நூ)

ஊர்: நாகூர்.

நூல்: செய்யப்ப முதலியார் இயற்றிய மும்மணிமாலை என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## கிரிஸ்மஸ், ஜே. ஐ. ( )

நூல்: கீதபோதினி இந்நூல் கிருத்தவ மதத்தினைப் பரப்பும் நோக்குடன் பாடப்பெற்ற இசைப்பாடல்களைக் கொண்டது.

### கிருட்டிண ஐயங்கார்-1 ( )

நூல்: திருமங்கையாழ்வார் வைபவச் சிந்து (1915).

### கிருட்டிண ஐயங்கார்-2 (19-நூ)

இவர் சேதுபதி சின்னப்பிரதானி கிருட்டிண ஐயங்கார் என்பாரது பேரனின் மகனுவர். தமிழ்ப்பெரும்புலவர் ரா. இராகவையங்காரின் தாய்மாமன். சேதுபதி அரசவையில் வீற்றிருந்த அரண்மனைப்புலவர்.

இவர் அட்டாவதானம் செய்வதில்வல்லவர்; தென்மொழியும் வடமொழியும் கற்றுத்தேர்ந்தவர். சமயநூல் அறிவு மிக்கவர். இவருடைய புலமையை முத்துராமலிங்க சேதுபதியும், பொன்னுசாமித்தேவரும், மன்னார்குடி இராசு சாத்திரியும் புகழ்ந்து பாராட்டியுள்ளனர்.

நூல்: நாலுமந்திரிகதை. பஞ்சதந்திரம், வீரகுமார நாடகம், விடநிக்கிரக சிந்தாமணி. பல தனிப்பாடல்கள்.

### கிருட்டிண ஐயங்கார்-3 (19-நூ)

ஊர்: ஆழ்வார் திருநகரி இவர் இலக்கண வித்துவான் சீயர் கிருட்டிண ஐயங்கார் என்றும் அழைக்கப்பெறுவார்.

நூல்: தம் உடன் பிறந்தவராகிய அனந்தாச்சாரியார் இயற்றிய 'சடகோபன் சந்திரகலாமாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

### கிருட்டிண ஐயங்கார், சி. (20-நூ)

ஊர்: திருவாமாத்தூர்.

தந்தை: சிங்கையங்கார்.

இவர் எளிதில் கவிபாடும் ஆற்றல் மிக்கவர். திருப்புகழ் சாமிகள் எனவும், முருகதாச சாமிகள் எனவும் பெயர் பெற்று விளங்கிய வண்ணச்சரபம் தண்டபாணிஅடிகளோடு நெருங்கிய நட்புக் கொண்டவர்.

நூல்: திருவாமாத்தூர்ப்புராணத்திற்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## கிருட்டிண ஐயர்-1 (19-நூ)

நூல்: மீனுட்சி அம்மன் திருக்கல்யாணம். இந்நூல் கதாகாலட்சேபம் செய்பவர்க்குப்பயன்படும் வகையில் கீர்த்தனைக்கவிதைகளில் அமைந்தது.

## கிருட்டிண ஐயர்-2 ( )

ஊர்: மயிலாடுபுரம்.

நூல்: திருவையாறு முத்துச்சாமிபாரதியார் செய்த விசுவபுராணத்திற்கு உரை,

## கிருட்டிண ஐயர்-3 ( )

ஊர்: கோயம்புத்தூர்.

நூல்: மீனுட்சி அம்மன் கொம்மிகள். இது கும்மி மெட்டில் அமைந்த துதிப்பாடல்களைக் கொண்டது.

## கிருட்டிண ஐயர்-4 ( )

பார்க்க: கிருட்டிஞநந்தயோகி

## கிருட்டிண ஐயர் (கனம்) (19-நூ)

ஊர்: திருச்சிராப்பள்ளி மாவட்டம், உடையார்பாளையம் கோட்டத்தில் திருக்குன்றம்.

தந்தை: இராமசாமி ஐயர், அந்தணர்.

இவருடைய தந்தையார் தொன்று தொட்டு இசையிலும் தமிழிலும் நல்ல தேர்ச்சியுடைய குடும்பத்தில் வந்தவர். அவருக்கு இரண்டிலும் நல்ல புலமையுண்டு. அவர் கபிஸ்தலத்திலிருந்த முத்தைய மூப்பஞராலே நன்கு ஆதரிக்கப்பெற்றவர். அவருடைய ஐந்தாவது மகன் கிருட்டிணையர் ஆவர். சரபோசி மன்னன் அவைக்களத்தில் கனமார்க்கம் என்ற இசையில் தமக்குள்ள புலமையைக் காட்டியதால் கனம் கிருட்டிண ஐயர் என்று அழைக்கப்பெற்ருர்.

தொடக்க காலத்தில் கிருட்டிணையர் தம் தமையன்மார்களுடன் தம் தந்தையாரிடத்திலும், பின்பு அரியலூரிலிருந்த சண்பகமன்னாரிடத்திலும் இசையினையும் தமிழையும் கற்றார். அதன் பின்பு தஞ்சாவூர் சரபோசி மன்னரவையில் இசைப் புலவராகத்திகழ்ந்த பச்சைமிரியன் ஆதிப்பையரிடம் இசைப் பயிற்சி பெற்றார்.

கிருட்டிணையருக்கு, கபிஸ்தலம் இராமபத்திர மூப்பனார், திருவிடை மருதூரில் வாழ்ந்த தஞ்சை அரசரின் உறவினர் அமரசிமமர் ஆகியோர் உதவினர். ஆனால் உடையார்பாளையம் பெருநிலக்கிழார் கச்சிரங்கர், அவருடைய மகன் கலியாண ரங்கா ஆகியோருடைய நெடுநாள்ஆதரவில் இவர் வாழ்ந்தார்.

இவர் திருக்குன்றம், திருவிடைமருதூர், திருவரங்கம், கும்பகோணம், திருச்சேறை, உடையாளூர், மன்னார்குடி முதலிய ஊர்களிலுள்ள கடவுளர்கள் மீது பல கீர்த்தனங்களி-யற்றியுள்ளார். தன்னை ஆதரித்த புரவலர்கள் மீதும் கீர்த்தனங்கள் செய்துள்ளார். கச்சிரங்கர், கல்யாணரங்கர் மீது மிகுதியான கீர்த்தனங்கள் பாடியுள்ளார். இவருடைய கீர்த்தனங்கள் சிலவே இப்பொழுது தெரிய வருகின்றன. பல இசைப்புலவர்கள் இவர்காலத்தில் இவருடைய கீர்த்தனங்களை தெரிந்து இவரிடம் சென்று பாடியதுண்டு உ. வே. சாமி-நாதையர் எழுதியுள்ள கனம் கிருஷ்ணையர் என்ற நூலின் இறுதியில் இவருடைய கீர்த்தனங்கள் பல கொடுக்கப்பெற்று-உள்ளன. இவருடைய கீர்த்தனங்கள் எளிய நடையில் அமைந்தவை. உலக வழக்குச் சொற்களைக் கொண்டவை. பல கீர்த்தனங்கள் சிருங்காரச்சுவையினை மிகுதியாகக்கொண்டவை ஒவ்வொரு கீர்த்தனத்திலும் ஈற்றில் முருகக் கடவுளுடைய பெயரினை இவர் அமைத்துள்ளார். கலித்துறை முதலிய இயற்றமிழ்ப் பாட்டுக்கள் பாடுவதிலும் இவர் வல்லவர். இவர் காலத்தில் வாழ்ந்த அமரசிம்மருடைய ஆஸ்தான இசைப் புலவர் இராமதாஸ், திருவையாற்றில் வாழ்ந்த தியாகையர் முதலியோர் இவருடைய இசைப் புலமையினைப் பாராட்டி உள்ளனர்.

நூல்: கடவுளர் மீது பாடிய பல கீர்த்தனங்கள், இயற்றமிழ் பாக்கள்.

### கிருட்டிண ஐயர் கெள. ரா (20-நூ)

ஊர்: சோழநாட்டில் உள்ள அம்மாப்பேட்டை; செளராட்டிரர்.

நூல்: வேங்கடராம சாத்திரியார் இயற்றிய தஞ்சைத் தலபுராணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம், தஞ்சைத்தல மான்மியச் சுருக்கம்

### கிருட்டிண ஐயர், கே. ( )

நூல்: நீதிக்கீர்த்தனை (முதற்பாகம்),

### கிருட்டிண சாத்திரி ( )

நூல்: சைவ சித்தாந்த பரிபாஷை, மகாபாரதத்தில் உத்தியோக பருவம் வசனம்.

### கிருட்டிணசாமி உபாத்தியாயர் (19-நூ)

ஊர்: நாகப்பட்டினம்.

இவர் பள்ளி ஒன்றில் ஆசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: நாகப்பட்டினம் நீலாயதாட்சியம்மை பிள்ளைத்தமிழ், எட்டுக்குடி முருகன் பல்சந்தமாலை.

நாகப்பட்டினம் நீலாயதாட்சியம்மை பிள்ளைத்தமிழில் காப்புச் செய்யுள்உள்பட 105 செய்யுட்கள் காணப்படுகின்றன.

### கிருட்டிணசாமி ஐயங்கார் (20-நூ)

ஊர்: மதுரை மாவட்டம் பெரியகுளம் பகுதி அனுமந்தன்பட்டி.

நூல்: வேங்கடதாசர் என்ற சிறப்புப் பெயரினைப் பெற்ற பெருமாளய்யங்கார் என்பவர் இயற்றிய நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

### கிருட்டிணசாமி ஐயங்கார், எஸ். (20-நூ)

ஊர்: கும்பகோணம் அருகில் உள்ள சாக்கோட்டை.

வாழ்ந்த காலம்: கி. பி. 1885-1944.

பெங்களூர் மத்திய கல்லூரியிற் சேர்ந்து பௌதிகத்தில் பட்டம் பெற்றார். பின்பு அக்கல்லூரியில் ஆசிரியரானார். பின்பு வரலாற்றுத்துறையில் கவனம் செலுத்தி சிக்கமங்களூர், கோலார் ஆகிய இடங்களில் விஞ்ஞான ஆசிரியராகப் பணியாற்றியபோது வரலாற்றுத்துறையில் எம். ஏ. பட்டம் பெற்றார். உயர்நிலைப்பள்ளிகளில் ஐந்து ஆண்டுகளும், பெங்களூர் மத்திய கல்லூரியில் வரலாற்று விரிவுரையாளராக-வும் பணியாற்றினார்.

1904இல் பெங்களூர் மத்திய கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராகவும், 1914இல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் வரலாற்று ஆராய்ச்சித்துறை ஏற்பட்டபோது முதல் பேராசிரி-யராகவும் பணிபுரிந்தார்.

இவர் கீழைநாட்டுக் கலை மாநாடுகளிலும், இந்தியத் தொல்பொருளியல் சர்வே வேலைகளிலும், இந்திய வரலாற்றுச் சாசனக்கமிஷன் வேலைகளிலும் கலந்து கொண்டார். 1921இல் இந்தியத் தொல்பொருளில் சர்வே செயலாளர்களில் ஒருவராக வும் 1931இல் வங்காள ராயல் ஆசியச் சங்கத்தின் உறுப்பின-ராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். பம்பாயில் நடைபெற்ற முதல் இந்தியக் காங்கிரசிற்குத் தலைமை தாங்கினார். தென் நாட்டு வரலாற்றை நன்முறையில் எழுதியவர்களில் இவர் முதல்வராவார்.

## கிருட்டிணசாமி ஐயர், (20-நூ)

ஊர்: சேலம்.

நூல்: கவிராச பண்டிதர் ஆந்திர காசியப திம்மப்ப அந்தணனார் என்பவர் இயற்றிய 'திருவேங்கடமும்மணிக்கோவை' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## கிருட்டிணசாமி ஐயர் சா (20-நூ)

ஊர்: சேலம் மாவட்டம். ஓமலூர்ப் பிரிவில் உள்ள வெள்ளாளப்-பட்டி.

தந்தை: சாமய்யர்.

இவருடைய வழிமுறையினர் புலமை மிக்கவர்கள், இவர் தம் தந்தையாரிடமே தமிழ் கற்றுத்தேர்ந்தார்.

நூல்: சிலையெழுபது-உரை என்னும் நூலுக்கு வழங்கிய சாற்றுக்கவி.

## கிருட்டிணசாமிக் கவுண்டர் ரா. (20-நூ)

ஊர்: கொங்குநாட்டில் கணபதி என்னும் சிற்றூர்.

தந்தை: இராமசாமிக் கவுண்டர்.

இவர், 'வேளாள வாலிபன்' என்னும் இதழின் ஆசிரியராக இருந்து நடத்தியுள்ளார்.

நூல்: கலியாணசுந்தரக்கவுண்டர் என்பவர் முருகக் கடவுள் மீது பாடிய சித்திரபந்தன மாலைக்கு வழங்கிய சாற்றுக்கவி.

## கிருட்டிணசாமிக் கோனர், வா. ( )

நூல்: மகாபாரதத் திருப்புகழ்ச்சிந்து (1916) இந்நூல் பெ. ஆறுமுக முதலியாரால் பதிப்பிக்கப்பெற்றது.

## கிருட்டிணசாமிச் செட்டியார், பா. (19-நூ)

நூல்: த. செய்யப்ப முதலியார் இயற்றிய மும்மணி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## கிருட்டிணசாமி சர்மா எஸ். (20-நூ)

சி. பெ: திராவிட ரத்தினம்.

ஊர்: காஞ்சிபுரம்; வைணவ அந்தணர்

மறைவு: 23—6—1925.

இவர் நாட்டு உரிமைப்போரில் பெரும்பங்கு கொண்டவர். வ. உ. சிதம்பரனார், சுப்பிரமணிய சிவா முதலிய அரசியல்

தலைவர்கள் கைது செய்யப்பட்ட போது நாட்டுப்புறங்கட்குச் சென்று பொதுமக்களை உரிமைப்போரில் ஈடுபடும்படி செய்தார். 1908ஆம் ஆண்டில் கரூரில் உணர்ச்சிமிக்க சொற்பொழிவு ஒன்றினை நிகழ்த்திப் பொதுமக்களை உரிமைப்போரில் ஈடுபடு-மாறு செய்தார். போர் வீரர்களையும், ஊர்க்காவலர்களையும் கண்டு, அடிமை வேலையை விடுத்து உரிமை உணர்வு பெற வேண்டும் என அறிவுரை கூறினார். விடுதலைப் போராட்டத்தில ஈடுபட்ட இவர் ஆறு திங்கள் சிறைத் தண்டனை பெற்றார். விடுதலை பெற்றும் நாட்டுத் தொண்டிலேயே நாட்டம கொண்டார்.

நூல்: நெப்போலியன் சரித்திரம், அரசியல் வரலாறு, புத்தர் சாதக் கதைகள், காந்தி வரலாறு.

## கிருட்டிணசாமி சேனை நாட்டார், க. (20-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் இடையிருப்பு, வாழ்விடம் பள்ளியூர்.

தந்தை: கரும்பாயிரச் சேனை நாட்டார்.

வாழ்ந்தகாலம்: கி. பி. 1878-1930.

இவரது தந்தையார் நாடக ஆசிரியர். இவர் தமது சிறு வயதில் கரும்பத்தூர் கண்ணுச்சாமி பிள்ளை என்பவரிடம் இலக்கண இலக்கியம், திவாகரம், நிகண்டு முதலிய நூல்களைக் கற்றார். பள்ளியூரில் இருந்தபோது அண்ணுச்சாமி பண்டிதர் என்பவரிடம் பேரிலக்கியங்களைக் கற்றார்.

இவர் தொடக்கத்தில் சிறிதுகாலம் கிராமக் கணக்கராகப் பணியாற்றினார். அதன்பின்பு பள்ளியூரில் பள்ளிக்கூடம் ஒன்றினை ஏற்படுத்தி மாணவர்கட்குத் தமிழ் கற்பித்தார். இவர் சங்க இலக்கியங்களைக் கற்பதில் ஆர்வம் உள்ளவராகத் திகழ்ந்தார். பாடல்களை மனப்பாடம் செய்வதிலும் வல்ல-வராகத்திகழ்ந்தார். இதனால் அந்நாளில் பெரும்புலமையும் வல்லமையும் பெற்று விளங்கிய அரித்துவாரமங்கலம் கோபால சாமி இரகுநாத இராசாளியாரின் பாராட்டினைப் பெற்றார்.

நூல்: ஆலபோத விளக்கம், தொகைப்பொருள் நிகண்டு, நாதர் இலக்கணம், பழஞ்செய்யுள் திரட்டு.

## கிருட்டிணசாமி தாசர் (      )

நூல்: நூற்றெட்டுத் திருப்பதி பிரபாவக் கீர்த்தனைகள். இந்நூல் திருமால் உறையும் நூற்றெட்டுத் திருப்பதிகளின் சிறப்புக் களைக் கீர்த்தனைகளால் கூறுகிறது.

## கிருட்டிணசாமி நாயுடு, அ. (19-நூ)

ஊர்: கோயம்புத்தூர் மாவட்டம் பூளைமேடு.

தந்தை: அப்பநாயுடு

பிறந்தநாள்: 10—12—1888.

இவர் வடமொழி, தெலுங்கு, மலையாளம், கன்னட மொழிகளில் பயிற்சி பெற்றவர். மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வில் பண்டிதம் பட்டம் பெற்றார். 'காவியக் கவிமன்னன்', 'ஆராய்ச்சி அரசன்' என்ற சிறப்புப் பட்டங்களையும் பெற்றவர்.

நூல்: திருவள்ளுவர் காவியம், திருமணத்திருமந்திரம், செந்தமிழ்த்தாய் திருப்பள்ளி எழுச்சி, சுதந்திரதேவி திருப்பல்லாண்டு.

தொல்காப்பியர் கண்ட தமிழர்சமுதாயம், தொல்காப்பியர் வரலாறும் கொள்கையும், கவிச்சக்கரவர்த்தி கம்பர் வரலாறு, கம்மவாரும் தென்னாடும், பழங்காலக் கிராம சமுதாயம், பாவை நோன்பின் வரலாறு, திரு. கிருஷ்ணபிரான் வரலாறு, திரு. பகவத் கீதை உண்மைப் பொருள்.

## கிருட்டிணசாமிப் பாவலர், தெ. பொ. (20-நூ)

சி. பெ. பிரசன்ன சிந்தாமணி.

ஊர்: செங்கல்பட்டு மாவட்டம் தென்பட்டினம்.

வாழ்விடம்: சென்னை சிந்தாதிரிப்பேட்டை.

தந்தை: பொன்னுச்சாமிக் கிராமணியார்.

மறைவு: கி. பி. 1934

இவர் வடிவேலுச் செட்டியாரிடம் தமிழ்நூல்களைக் கற்றார். சதாவதானம் செயயும் பயிற்சியுள்ளவராக விளங்கினார். அதனால் சதாவதானம் கிருட்டிணசாமிப்பாவலர் என்று அழைக்கப்பட்டார். சொற்பொழிவாற்றும் வன்மையில் பிரசன்ன சிந்தாமணி என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார் சிவகாசி உயர்நிலைப் பள்ளியில் சிறிதுகாலம் பணி ஆற்றினார். காங்கிரஸ் இயக்கத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். பத்திரிகைத் துறையில் தொண்டாற்றக்கருதி நாரதர், தேச பந்து, இன்றைய சமாச்சாரம் என்ற பத்திரிகைகளைத் தொடங்கினார். சிந்தாதிரிப்பேட்டையில் கல்வித் தொண்டு ஆற்றிய இவர் அங்கிருந்த உயர்நிலைப்பளளியில் பொறுப்பாளராகச் சேர்ந்து பல்வகையான செயல்களைச் செய்தார். பள்ளிப் பணிக்காக நாடகத்தொழிலில் ஈடுபட்டார். நாடகப் பேராசிரியர் சம்பந்தர் முதலியவர்களுடன் சேர்ந்து நடித்தார். பாலமனோகர் நாடக சபா என்ற அரங்கையும் ஏற்படுத்தினார். பாவலர் பாய்ஸ் கம்பெனி என்ற பெயரில் நாடகக்குழு ஒன்றினையு அமைத்தார். நாட்டு விடுதலைக்கு ஏற்பக் கதரின் வெற்றி என்ற நாடகத்தை நடத்தினார்.

நூல்: கவசைச்சிலேடை வெண்பா உரை, பெசன்ட் அம்மையார் உரை, தேசிகுராசன், பிரகலாதன், கணபதி, சாவித்திரி.

## கிருட்டிணசாமிப் பிள்ளை ( )

ஊர்: தஞ்சாவூர்.

இவர் சொக்கலிங்க தேசிகர் என்பவரின் மாணவர்.

நூல்: நவநாடகம் என்று வழங்குகின்ற தமயந்தி நாடக. இந்நூல் நள தமயந்தியரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுகிறது.

## கிருட்டிணசாமிப் பிள்ளை அ. ( )

நூல்: அயிந்திர மதத் தமிழுரை.

இந்நூல் சோதிடக் கலை பற்றியது.

## கிருட்டிணசாமி முதலியார்-1 (      )

ஊர்: சாத்தப் பாக்கம்.

நூல்: குசேல முனிவர் சரித்திரம். இந்நூல் உரை நடையில் அமைந்தது.

## கிருட்டிணசாமி முதலியார்-2 (20-நூ)

இவர் மாம்பழக் கவிச் சிங்க நாவலர் என்ற புலவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தவர்.

நூல்: சங்கீத சந்திரிகை என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கிருட்டிணஞ் செட்டியார். வெ.

நூல்: காராளன் கார்காத்த நாடகம் (1893).

## கிருட்டிணதாஸ் டி. வி. (20-நூ)

ஊர்: தஞ்சாவூர்.

இவர் 'சனானுகூலன்' என்ற கிழமை இதழின் மூலமாகத் தமிழ் நாட்டு மக்களுக்கு நன்கு அறிமுகமானவர்,

நூல்: மருமகள் துயரம், மகாத்மாக்களின் மகிமை.

## கிருட்டிணப்பிள்ளை-1. (      )

ஊர்: தஞ்சாவூர்.

நூல்: தமயந்தி நாடகம்.

## கிருட்டிணப் பிள்ளை-2. (      )

ஊர்: விக்கிரவாண்டி சாலை.

நூல்: கெங்கையம்மன் நாடகாலங்காரம், சயந்தவ நாடகாலங்காரம்.

முதல் நூல் தெங்கையம்மனின் வரலாற்றையும் சிறப்பையும் கூறுவது. இரண்டாவது நூல் பாரதத்தில் உள்ள சயந்தவஅரசாது கதையைக் கூறுவது.

## கிருட்டிணப் பிள்ளை ஹெ.ஆ. (19-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம், பாளையங்கோட்டைக்கு அருகாமையில் உள்ள இரட்டியப்பட்டி.

தாய்: தெய்வநாயகி அம்மாள்.

தந்தை: சங்கரநாராயணப்பிள்ளை; வேளாளர்.

வாழ்ந்த காலம்: 23—4—1827 — 3—2—1900.

இவர், இளமையில் தன் தந்தையாரிடம் பல வைணவ சமய நூல்களைக் கற்றார். பின்னர் மாணிக்கவாசகத் தேவரிடம் இலக்கணம் கற்றார். இவருக்குப் பதினைந்தாவது வயதிலேயே திருமணம் நடைபெற்றது. பின்பு இவரது தந்தையார் காலமானார். இருப்பினும் அக்காலத்தில் சிறப்புற்று விளங்கிய திருப்பாற்கடல்நாதன் கவிராயரிடம் இவரும் இவர் தம்பி முத்தையாவும் ஐந்திலக்கணங்களையும் கற்றுத் தேர்ந்தனர்.

அந்நாளில் தமிழ் நாட்டில் கிறித்தவ சமயம் விரைவாகப் பரவிக்கொண்டு வந்தது. சிறந்த வைணவராக விளங்கிய கிருட்டிணப்பிள்ளைக்கு மனம் பொறுக்கவில்லை. கிறித்தவர்களுடைய வீடுகளுக்குள் நுழைந்து இவரும், இவர் தம்பியும் மற்றோரும் கொள்ளையிட்டனர். அக்கூட்டத்தில் பலர் பிடிபட்டுத் தண்டனையடைந்தனர். ஆனால் கிருட்டிணப்பிள்ளை பிடிபடவில்லை இந்நிலையில் திருநெல்வேலி மாவட்டத்தில் சாயர்புரத்தில் போப்பையர் நிறுவி நடத்திவந்த கல்லூரிக்கு ஒரு தமிழாசிரியர் வேண்டியிருந்தது. கிருட்டிணப்பிள்ளை தமது திறமையால் அப்பதவியினைப் பெற்றார். வைணவராக இருந்து கொண்டே அப்பணியினைத் திறம்படச் செய்து வந்தார். அப்பொழுது கிறித்தவ சமய நூல்களைப் படிக்கத் தொடங்கினார். கிறித்தவப் பாதிரிமார்களுடைய பரிவும் அன்பும் அவரது உள்ளத்தைக் கவர்ந்ததால், மயிலாப்பூர்

சென்று 18—4—1858 இல் கிறித்தவராக மாறி 'ஹென்றி ஆல்பிரட்' என்று பெயரையும் மாற்றிக்கொண்டார். இதனை யறிந்த இவருடைய மனைவியார் தன்னுடைய பெற்றோர் வீட்டிற்குச் சென்று விட்டார். ஏறத்தாழ இரண்டாண்டு காலம் பிரிந்திருந்த அவ்வம்மையார் தம்முடைய பிள்ளைகளைப் பிரிந்திருக்க மாட்டாது கி.பி. 1860 இல் கிறித்தவராக மாறினார். பின்பு, கிருட்டிணப்பிள்ளை திருநெல்வேலியிலிருந்த சி.எம்.எஸ் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரியத் தொடங்கினார். இறுதியில் கி.பி. 1900 இல் இவர் மறைந்தார்.

நூல்: இரட்சணிய யாத்திரிகம், இரட்சணிய சமய நிர்ணயம், இரட்சண்ய மனோகரம், இரட்சண்யக் குறள்.

இரட்சண்ய யாத்திரிகம் என்ற நூல் நற்போதகம் என்னும் இதழில் முதலில் வெளிவரலாயிற்று. பின்னர் நூல் வடிவிலே கி.பி. 1894 இல் வந்தது. ஜான் பனியன் என்பவர் ஆங்கிலத்தில் 'தி பில்கிரிம்ஸ் பிராகிரஸ்' (The Pilgrims Progress) என்னும் நூல் ஒன்று எழுதியிருந்தார். அதனைத் தமிழில் மோட்சப்பிரயாணம் என்ற பெயரில் மொழி பெயர்த்திருந்தார்கள். அந்நூலினைப் பின்பற்றியும் தழுவியும் இரட்சண்யயாத்திரிகம் என்ற நூலினைச் செய்தார் கம்பராமாயணம், சிலப்பதிகாரம் முதலிய பெருங்காப்பியங்களைப் பின்பற்றித் தமிழ் மரபிற்கேற்ப இந்நூலினைக் காப்பியமாகச் செய்துள்ளார். தமிழ் மரபிற்கேற்பவே கிறித்துபெருமானையும் படைத்துள்ளார், இந்நூலில் 3800 செய்யுட்கள் உள்ளன. யமகம் திரிபு, மடக்கு, சிலேடையாக அமைந்தவை 21. இந்நூலில், உரை நடையும் இசைப்பாட்டுக்களும் இடையில் விரவி வந்துள்ளமையால், இந்நூல் உரையிடைப்பட்ட பாட்டுடைச் செய்யுள் என்று அழைக்கப் பெறுகின்றது. தேவாரம் திவ்யப்பிரபந்தம் போன்ற பல பக்திப்பாடல்களைத் தன்னகத்தே கொண்டது.

## கிருட்டிண பரமாத்மாச்சாரியார் (        )

நூல்: சூத சம்கிதாசாரசங்கிரம். இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் கையெழுத்துப் படியாகவுள்ளது.

## கிருட்டிண பாரதி, (19-நூ)

ஊர்: திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள திருநயம்.

வாழ்ந்த காலம்: கி.பி. 1791—1869.

இவர் சேலம் முதலிய பல ஊர்களில் வாழ்ந்தார் இசையில் தேர்ச்சி பெற்றவர்; இறுதியில் துறவு பூண்டார். பல இசைப் பாடல்களும் செய்யுள் நூல்களும் இயற்றியுள்ளார்.

நூல்: திருவிளையாடற் கீர்த்தனை, திருவிளையாடல் நாடகம், திரு வரங்கமான்மியம், திருத்தவத்துறை மான்மியம்' திருவன் பிலாந்துறை மான்மியம், குமாரசம்பவம் - மொழிபெயர்ப்பு பிரபோத சந்திரோதயம்.

திருவிளையாடல் நாடகம், என்னும் நூல் உரைநடையும் செய்யுளுமாக அமைந்தது. இந்நூல் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணத்தையொட்டி, கீர்த்தனை முதலிய இசைப்பாக்களினுல் நாடக வடிவில் இயற்றப் பெற்றுள்ளது.

## கிருட்டிண பாரதிகள் ( )

நூல்: பஞ்சநதீச விருஷப வாஹன மகோத்சவ கீர்த்தனம் (1892) இந்நூல் திருவையாற்றில் நடைபெறும் இடப வாகனத்திரு விழாவை வருணிப்பது. வெண்பா ஒன்றும், விருத்தப்பாக்கள் ஆறும் கீர்த்தனைகள் ஐந்தும் இந்நூலில் உள்ளன.

## கிருட்டிணமாச்சாரியார்-1 ( )

நூல்; அரிச்சந்திரன் கதை (1884) இந்நூல் வேதவியாசர் அருளிச் செய்த பதினென் புராணங்களில் ஒன்றாகிய ஸ்காந்த புராணத் திலிருந்து மொழியாக்கம் செய்யப் பெற்று எழுதப்பட்டுள்ளது. முப்பது அத்தியாயங்களை உடையது. இச்சரிதையிலுள்ள அருஞ்சொல் விளக்கம் அகராதி முறையில் கொடுக்கப் பட்டுள்ளது.

**கிருட்டிண மாச்சாரியார்-2. (        )**

இவர் ஆத்தான்சீயரின் மாணவர்

நூல்: திருமந்திரார்த்த விசாரம்

**கிருட்டிண மாச்சாரியார்-3. (        )**

நூல்: தேவாரப் புலவர்கள் (1923).

**கிருட்டிண மாச்சாரியார்-4 (        )**

ஊர்: அரசாணிப்பாலை.

நூல்: திருவல்லிக்கேணி தல் மகாத்மியம் (1872). இந்நூல் திருவல்லிக்கேணியின் பெருமையினைக் கூறுவது. பத்து அத்தியாயங்களைக் கொண்டது.

**கிருட்டிண மாச்சாரியார்-5 (20-நூ)**

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் சூரியங்குட்டம்.

இவர் அரியக்குடி என்ற ஊரில் மாணவர்கட்குக் கல்வி கற்பித்தார். சைவ சமயத்தில் ஆழ்ந்த பற்றுள்ளவர்.

நூல்: திருபுன்னை திரிபந்தாதி, திருவெவ்வளூர் திரிவந்தாதி, திருக்குருகூர் யமகவந்தாதி, திருநாகைத் திரிபந்தாதி, திருவரியக்குடி திரிவந்தாதி, திருவரியச் சிலேடை மாலை, அரியக்குடி அலர்மேல் மங்கைப் பிள்ளைத்தமிழ், திருக்குருகூர் திரிபந்தாதி.

**கிருட்டிண மாச்சாரியார்-6 (        )**

நூல்: ஷேக்ஸ்பியர் நாடகக் கதைகள்.

**கிருட்டிண மாச்சாரியார்-7 (20-நூ)**

ஊர். தஞ்சாவூர் மாவட்டம் நன்னிலம் கோட்டத்தில் திருக்கன்னபுரத்திற்கு அருகில் உள்ள பில்லாலி.

வாழ்ந்தகாலம்: கி. பி.1876-1922.

இவர் தொடக்க காலத்தில் கோயம்புத்தூரில் புத்தகக் கடையொன்றில் இருந்தகாலை புலவர் சா திருச்சிற்றம் பலம்பிள்ளையின் தொடர்பு ஏற்பட்டது அவரிடம் கல்வி கற்றார்; இவருடைய உடன்பிறந்தாள் மகளாகிய சாரநாயகி என்னும் பெண்ணை மணந்து கொண்டார்.

சீர்காழி சபாநாயக முதலியார் இந்துமத உயர்நிலைப் பள்ளியிலும், மன்னார்குடி தேசிய உயர்தரப் பள்ளியிலும் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். சொற்பொழிவுகள் செய்வதில் நல்ல ஆற்றல் உடையவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் இவருடைய புலமைக்காகப் பாலசரஸ்வதி என்னும் பட்டத்தை கி பி. 1911-ஆம் ஆண்டில் இவருக்கு அளித்தார்கள். இராம நாதபுரம் சேதுபதி மன்னர் இவருக்குத் தங்கத்தோடா ஒன்றினைப் பரிசாக அளித்தார். இவர் அவ்வப்பொழுது பல தனிப்பாடல்கள் இயற்றியுள்ளார்.

நூல்: இரட்டைமணிமாலை, கோவைக் கலம்பகம், நன்றிமாலை, நவமணிமாலை, சீதாலட்சுமி, அமிர்தவல்லி, மூத்தாள் இளையாளான கதை, இலண்டன் சாமர்த்தியத் திருடர்கள், முடிசூட்டு வைபவம், திருப்பாண்டிக்கொடுமுடி மும்மணிக்கோவை, வேசையர் விழைவு அறல், மணவாள மாமுனி நூற்றந்தாதி, திருநறையூர் நம்பி மேகவிடு தூது, அன்னிபெசண்டு வரலாறு, புலவராற்றுப்படை.

## கிருட்டிண மாச்சாரியார் பி. ஆர் (19-நூ)

வே. பெ. அப்பன் கவிராயர்.

இவர் சென்னை நகரிலிருந்து 'ஞான போதினி' என்ற இதழை நடத்தியவர். செய்யுளியற்றுவதில் வல்லவர்.

நூல்: கொடுமுடி வெண்பா அந்தாதி, இரட்டை மணிமாலை, பெத்தாச்சி செட்டியார் மீது இரட்டைமணிமாலை, பெத்தாச்சி செட்டியார் மீது நவமணிமாலை.

கொடுமுடி வெண்பா அந்தாதி கொடுமுடி இறைவன் மீது பாடப்பெற்றது. இரட்டை மணிமாலை சென்னையிலிருந்த கா. சதாசிவ முதலியார் மீது பாடப்பெற்றது. பெத்தாச்சி செட்டியார் மீது இரட்டை மணிமாலை, நவமணி மாலை என்ற நூல்கள் ஆண்டிப்பட்டி பெருநிலக்கிழார் பெத்தாச்சி செட்டியார் மீது பாடப்பெற்றன

## கிருட்டிண மாச்சாரியார் வி (        )

நூல்: இலக்கண விளையாட்டு (1897) சித்திரவெழுத்து வருக்கைப் பாட்டு (1886), நீதிகதா கிருதிகள் (1886), விக்டோரியா சக்கர வர்த்தியாருடைய சரித்திர சங்கிரகம் (1896). விக்டோரியா மகாராணியார் இராஜ்ய பரிபாலன சஷ்டிபூர்த்தி வைபவம் (1897).

'இலக்கண விளையாட்டு' என்னும் நூல் உரையாடல் முறையில் இலக்கணச் செய்திகளைக் கூறுவது.

சித்திரவெழுத்து வருக்கைப்பாட்டு, இந்நூல் உயிர்வருக்கம் முதலிய எழுத்துக்கள் முதலில் வர அமைக்கப்பெற்ற பாடல் களைக் கொண்டது.

நீதிகதாகிருதிகள்: இந்நூல் பாட்டுக்களாகப் படங் களுடன் வெளியிடப் பெற்றுள்ளது. ஈசாப் சொல்லிய கற்பனைக் கதைகளில் சிலவற்றைக் கூறுவது. விக்டோரியா சக்கர வர்த்தினியாருடைய சரித்திர சங்கிரகம். விக்டோரியா அரசியின் வரலாற்றையும், அவருடைய ஆட்சியில் பிரிட்டிஷ் அரசாங்கம் அடைந்த சீர்திருத்தங்களையும்பற்றிக் கூறுவது.

விக்டோரியா மகாராணியார் இராஜ்ய பரிபாலன சஷ்டி பூர்த்தி வைபவம்: இந்நூல் விக்டோரியா அரசியின் வர லாற்றினைக் கூறுவதாய்ப் பல படங்களைக் கொண்டது.

## கிருட்டிண மூர்த்தி ஆச்சாரியார் (20-நூ)

நூல்: கி. சுந்தராச்சாரியார் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கிருட்டிண மூர்த்தி ஐயர் (20-நூ)

ஊர்: சிதம்பரம்

இவர் வடமொழியிலும் புயிற்சி உடையவர். சிதம்பரம் நாவலர் தமிழ்க்கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றியவா

நூல்: மகாபாரத சதகம்.

## கிருட்டிண மூர்த்தி சாத்திரிகள் (20-நூ)

நூல்: கிருட்டிணமூர்த்தி ஐயர் என்பவரியற்றிய மகாபாரத சதகம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய நல்லுரைச் செய்யுள்.

## கிருட்டிண மூர்த்தி ரா. (20-நூ)

பு. பெ: கல்கி.

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம், புத்தேரி

தந்தை: இராமசாமி ஐயர்.

வாழ்ந்த காலம்; கி. பி. 1899—1954.

இவர் கல்கி, கர்நாடகம், வாஸ்கூலன், தமிழ் மகன், விவசாயி, தமிழ்த்தேனீ, யமன், ரா. கி, அகஸ்தியர் என்ற புனைபெயர்களில் பல வரலாற்றுப் புதினங்களையும், சிறு கதைகளையும் படைத்த புகழ் பெற்ற எழுத்தாளராவர் இளமையில் புத்தமங்கலம் தொடக்கப்பள்ளியில்கல்வி பயின்றார் பன்னிரண்டாவது வயதில் ஹரிகதை, பஜனைப்பாடல் முதலியவற்றில் தீவிர முயற்சி கொண்டார். பின்பு திருச்சி நேஷனல் கல்லூரியில் எட்டாவது வகுப்பில் சேர்ந்து படித்தார். காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து 1921 ஆம் ஆண்டில் சிறைசென்றார்.

பின்பு திரு. வி. க நடத்திய 'நவசக்தி' இதழில் தொண்டாற்றினார்: இராஜாஜி நடத்திய 'விமோசனம்' என்ற இதழில் சில நாட்கள் பணியாற்றினார். பின்னர் 'ஆனந்த

விகடன்' பத்திரிகையில் சேர்ந்து 'கல்கி' என்ற புனைபெயரில் பல கட்டுரைகள் எழுதினார். 1941 ஆம் ஆண்டில் அப்பணியிலிருந்து விடுபட்டு, 'கல்கி" என்ற இதழைத் தொடங்கினார். முப்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பத்திரிகை உலகில் சேவை செய்தார். காந்தியடிகள் நடத்திய சத்தியாக்கிரக இயக்கத்தில் சேர்ந்து மூன்றுமுறை சிறைசென்றார்.

தமிழ்வளர்ச்சிக் கழகத்தின் செயலாளர்களில் ஒருவராகவும் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராகவும் இருந்துள்ளார். வ. ரா, நாமக்கல் கவிஞர், பரலி நெல்லையப்பர் போன்ற பல அறிஞர் பெருமக்களைச் சிறப்புச் செய்ய மக்களிடம் நிதி திரட்டி உதவினார். இவரது முயற்சியால் எட்டையபுரம் பாரதி மண்டபம் தோன்றியது. தூத்துக்குடி வ.உ.சி.கல்லூரி தோன்றுவதற்குக் காரணமாக இருந்தார். திரு.வி.க மண்டபம், காந்தி நினைவு மண்டபம் ஆகியவற்றிற்கு நிதி திரட்டி உதவியுள்ளார்.

நூல்: அபலையின் கண்ணீர், அலை ஓசை, அமரவாழ்வு, பாரதி பிறந்தார், சோலைமலை இளவரசி, தேவகியின் கணவன், ஏட்டிக்குப் போட்டி, ஜமீன்தார்மகன், கைராட்டை, கள்வனின் காதலி, மகுடபதி, மாடத்தேவன் சுனை, மோகினித்தீவு, மூன்று மாதம் கடுங்காவல், நம் தந்தையார் செய்த விந்தைகள், நமது தாய்நாடு, நாட்டுக்கொரு புதல்வர், ஒற்றை ரோஜா, பாங்கர் விநயகராவ், பார்த்திபன் கனவு, பொய்யம்மான்காடு, சங்கீத யோகம், சாரதையின் தந்திரம், சத்திய சோதனை. சிவகாமியின் சபதம், தியாகபூமி, வீணைபவானி, கனையாழியின் கனவு' புன்னைவனத்துப் புலி.

## கிருட்டிணர் ( )

தந்தை: யாமுனர்.

நூல்: பாசுரப்படி இராமாயணம்.

## கிருட்டிணராசு (20-நூ)

ஊர். தாசரப்பட்டி.

நூல்: பல தனிப்பாடல்கள்.

## கிருட்டிணராயர் எஸ். (        )

வே. பெ: வைத்திய பூபதி.

நூல்: கவிராச சேகரம், சக்ஸ்திர சித்தயோகம், ஆசவாரிஸ்ட கல்பம், நிகண்டு ரத்னாகரம், இவற்றுள் முதல் நூல் மூன்று பாகங்களாகவும். இரண்டாவது நூல் இரண்டு பாகங்களாகவும் வெளிவந்துள்ளன.

## கிருட்டிணன் (        )

ஊர்: வல்லம்பர் நாட்டுச் செஞ்சை. இவர் புத்தூர் பெரியதேவன் என்பவரது மாணவர்.

நூல்: பாரத அம்மானை. இந்நூல் பாரதக் கதையை அம்மானை அமைப்பில் கூறுவது.

## கிருட்டிணாநந்த யோகி (18-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் மாயூரத்திற்குக் கிழக்கேயுள்ள நல்லத்துக்குடி.

இவர் இளமையிலேயே தமது பெற்றோரை இழந்து விட்டார். மாயூரம் அவையாம்பிகைமீது ஈடுபாடு கொண்டவர்.

நூல்: அவையாம்பிகை சதகம், சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ், திருப்புகழ் சந்த விருத்தம், மயிலைச் சிலேடை வெண்பா, ஞான சித்தர் மும்மணிக்கோவை.

அவையாமபிகை சதகம்: இந்நூல் அவையாம்பிகை பற்றிய நூறு பாடல்களைக் கொண்டது. சிவகாமியம்மை பிள்ளைத் தமிழ்: இவர் சிதமபரத்திற்குச் சென்ற காலையில் தில்லைவாழ் அந்தணர்களில் ஒருவர் வேண்டிக்கொள்ளப்பாடப் பெற்றது. இந்நூல் 15 பருவங்களையும் 120 செய்யுட்களையும் கொண்டது.

திருப்புகழ் சந்தவிருத்தம்: நடராசப் பெருமான் மீது இயற்றப்பெற்றது; 100 செய்யுட்களைக் கொண்டது.

ஞான சித்தர் மும்மணிக்கோவை: இந்நூல் ஞானசித்தர் மீது கொண்ட அன்பு காரணமாக இயற்றப் பெற்றது.

## கிருட்டிண புரத்துக் கவிராயர் ( )

இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவர், சொக்கம்பட்டி பெருநிலக் கிழார் பெரியசாமி பூபால ருடைய அவைக்களப் புலவராக இருந்தவர்.

நூல்: தனிப்பாடல்கள்.

## கிருபாசங்கர ராசா (20-நூ)

ஊர்: தொண்டை நாட்டில் கோரஞ்சூர்.

தந்தை: கந்தசாமிக் கவிராயர்.

இவர், தம் தந்தையாரிடமே கல்வி கற்ருர்.

நூல்: நாதமுனி முதலியார் இயற்றிய திருமயிலைத் தலபுராணத் திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கிருபை சத்திய நாதன் அம்மாள் ( )

நூல்: கமலம், சுகுண, இந்நூல்களுள் கமலம் என்றநூல் ஓர்இந்துப் பெண்ணின் குடும்ப வாழ்வைக் கதைப் போன்று கூறுவது. முதலில் இந்நூல் ஆங்கிலத்தில் வெளிவந்தது. அதன் தமிழாக்கமே இந்நூல். 'சுகுண' என்ற நூலில் நூலாசிரியர் சுகுணு என்ற செல்லப் பெயரை வைத்துக் கொண்டு தன் குடும்ப வரலாற்றினையும், வாழ்க்கை வரலாற்றினையும் கூறு கின்ருர். இது ஒரு கிறித்துவக் குடும்பத்தின் வரலாறு.

## கிள்ளி மங்கலங் கிழார் (சங்க காலம்)

இவர் வேளாண் மரபினர்.

நூல்: குறுந்தொகை. 76, 110, 152, 181.

## கிள்ளி மங்கலங் கிழார் மகனார் சேரகோவனார்

(சங்க காலம்)

**ஊர்:** கிள்ளி மங்கலம்.

**தந்தை:** கிள்ளிமங்கலம் கிழார். வேளாளர்.

இவர் இயற்பெயர் கோவன். சேர என்னும் அடைமொழியின் பொருள் விளங்கவில்லை.

நூல்: நற்றிணை 365ஆம் பாட்டு.

## கிளார்க்கு ஐயர் (19-நூ)

இவர்ஐரோப்பியர்; கிறிஸ்துசமய போதகர்; இராமாநுசக் கவிராயரிடத்தில் தமிழ் கற்றூர்.

நூல்: போதகர் ஒழுக்கம், தீர்க்க தரிசன வியாக்கியானம்.

## கிளாரேடி நோவாக்கர் (      )

**நூல்:** நேர்சிங் பாடல்கள் (1899). இது மருத்துவப் பணி பற்றிய பாடல்களைக் கொண்டது.

## கீரங் கீரனார் (சங்க காலம்)

**தந்தை:** கீரன்.

நூல்: நற்றிணை 78 ஆம் பாட்டு.

## கீரந்தையார் (சங்ககாலம்)

நூல்: பரிபாடல் 2 ஆம் பாடல்.

## கீழ்வேளூர் சுப்பிரமணிய தேசிகர் (      )

**பார்க்க:** சுப்பிரமணிய தேசிகர் கீழ்வேளூர்.

## குகதாஸ் (    )

நூல்: அத்யாத்மயோகம் அல்லது ஆத்மப் பயிற்சி (1930)

## குகபாததாசர் (    )

நூல்; குமரேச சதகம். இந்நூல் புதுக்கோட்டையைச் சேர்ந்த புல்வயல் என்னும் ஊரில் எழுந்தருளியுள்ள குமரக்கடவுளை முன்னிலைப்படுத்தி இயற்றப் பெற்றது. பாக்களின் இறுதியடிகளில் இறைவன் பெயரை 'மயிலேறி விளையாடு குகனேபுல் வயல் நீடு மலைமேவு குமரேசனே' என்று ஒரே மகுடமாக அமைத்து, மேல் அடிகளிலெல்லாம் மக்கள் கைக் கொள்ள வேண்டிய பல அறங்களையும், பழக்க வழக்க ஒழுக்க முறைகளையும் கூறுகின்றது. இந்நூலில் காப்புச் செய்யுளாக உள்ள ஒரு வெண்பாவும், அவையடக்கமாக ஒரு விருத்தமும் நீங்கலாக நூறு ஆசிரிய விருத்தச் செய்யுட்கள் காணப்பெறு கின்றன.

## குகனேரியப்ப நாவலர் (16-நூ)

ஊர்: காஞ்சிபுரம்.

தந்தை: சிவானந்த முதலியார். தாய்: அமுதாம்பிகை.

குகனேரியப்ப நாவலர் கச்சியப்ப சிவாச்சாரியரின் மாணவா ஆவார் இவர் முருகக் கடவுளுக்கு வழிபாடு செய்யும் தொழிலை மேற்கொண்டார், கச்சியப்ப சிவாச்சாரி யார் கந்தபுராணம் பாடிய காலத்தில் அவருக்குப் பெரும் துணையாக இருந்தார். கச்சியப்பர் கந்தபுராணம் முழு வதனையும் முடிக்கவில்லை. சம்பவ காண்டம், அசுர காண்டம், மகேந்திர காண்டம், யுத்த காண்டம்' தேவ காண்டம், தக்க காண்டம் என்ற ஆறு காண்டங்களையும் பாடி முடித்து உபதேச காண்டத்தைப் பாடுமாறு இவருக்குக் கட்டளையிட்டார். அதன் படி இவர் உபதேச காண்டத்தைப் பாடினார், முருகப் பெருமானைக் குறித்துச் சில தனிப்பாடல்களும் பாடியுள்ளார்.

**குகை நமச்சிவாயர்** (16.நூ)

வாழ்விடம்: திருவண்ணாமலை. திருவண்ணாமலையில் இவர் ஒரு குகையில் நிட்டையில் அமர்ந்து வந்தாராகையால் குகை நமச்சிவாயம் என்று அழைக்கப் பெற்றார். இவர் சித்துக்களில் வல்லவர்; வீர சைவர் என்பர். இவர் காலத்தில் பிராமணர் அல்லாத துறவிகள் வாழ்ந்த மடத்திற்குக் குகை என்ற பெயர் வழங்கப்பெற்று வந்ததென்றும் கூறுவர். இவருடைய மாணவர் குருநமச்சிவாயர். இம்மாணவர் சிதம்பரம் கோயிலில் பல திருப்பணிகள் செய்தார். குகை நமச்சிவாயர் தம்முடைய இறுதிக் காலத்தினைச் சிதம்பரத்தில் கழித்தார்.

நூல்: அருணகிரியந்தாதி (1874), சோணகிரிமாலை. அருணகிரி அந்தாதி காப்புச் செய்யுளுடன் 101 செய்யுட்களைக்கொண்டது; வெண்பா யாப்பில் அமைந்தது; திருவண்ணாமலையில் கோயில் கொண்டிருக்கும் இறைவனைப்ப பற்றியது. சோணகிரி மாலை தன்னுடைய நெஞ்சினை நோக்கிக் கூறுவதாக அமைந்தது.

**குஞ்சி ஐயா பாரதிகள்** (பிற்காலம்)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் திருச்செந்தூர்.

நூல்: திருச்செந்தூர் அட்டபந்தன செடி பந்தனக் கவிதைகள் (1868):

நூலில் முருகப்பெருமான் வரலாறும், பெருமைகளும் கூறப் பட்டுள்ளன. திருச்செந்தூரில் உள்ள முருகப்பெருமான் கொண் டருளின அட்டபந்தனம் செடிபந்தனம் பற்றிக் கூறுகிறது. 48 செய்யுட்கள் உள்ளன. இவர் மேலும் ஊற்றுமலைப் பெரு நிலக்கிழார் இருதயாலயமருதப்பத்தேவர் மீது பல பாடல்கள் பாடியுள்ளார்.

**குஞ்சுமூசுப் புலவர்** ( பிற்காலம் )

வே. பெ; லெப்பை காஜியாலிம்.

ஊர்; குழந்தைநகர் என்று பெயர் பெற்ற தேங்காய்ப்பட்டினம்.

தந்தை: சையிது முகம்மது முதலாளி.

இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் காசிம் புலவரிடத்தில் கற்றார்; அப்துல் காதிர் ஆலிம் என்பவரிடம் அரபு மொழிக் கல்வியினைப் பயின்றார்.

இவர், திருவாங்கூர் மன்னரின் தாயாதிகளுக்குள் பட்டமேறுவது பற்றிப் பெரும்பகை ஏற்பட்ட பொழுது, திருவாங்கூர் மன்னருக்குத் தம் இல்லத்தில் அடைக்கலம் நல்கிக் காத்தார். அந் நன்றிக்குப் பதிலாகத் தாம் அவருக்கு என்ன செய்ய வேண்டும் என்ற கேட்டபொழுது, 'எங்கள் இல்லத்தில் நிகழும் திருமணங்களுக்குத் தங்களின் அரண்மனையிலுள்ள குதிரைகளும், அலங்கார சோடிப்புகளும் வர வேண்டும்" என்று கூறினார். அவர் கேட்டுக்கொண்டபடியே இன்றும் நடைபெற்று வருவதாகக் கூறுவர்.

நூல்: சையிதத்துப் படைப்போர், ஸலாத்து மாலை, அஜபு மாலை, தூதுரையின் மாலை, இறவுசுல்கூல் படைப்போர். மணம்புரி மஸ் அலா.

## குட்டி உபாத்தியாயர் (பிற்காலம்)

ஊர்: திருத்தான்தோணி.

நூல்: மதுரை வீரநாடகம் (1370). இந்நூல் தென்மதுரை வீரனாகிய முத்துவீரையன் சிறப்பினைக் கூறும் நாடகநூலாகும்; கீர்த்தனைகள் மிகுதியாக உள்ளன. இடையிடையே விருத்தப் பாக்களும் காணப்பெறுகின்றன. உரைநடைப் பகுதியும் அங்கங்கே விரவி வருகின்றது. கூற்று நிகழ்த்துவோரைப் பற்றிய குறிப்பும் அங்கங்கே உள்ளது.

## குட்டிக் கவுண்டர் (20-நூ)

ஊர்- பேரூர் உடுமலைப்பேட்டை.

நூல்; அரசம்பலவிருத்தம்.

## குட்டிசாமி நாயகர் ( 20-நூ )

ஊர்: திருப்போரூர்க்கு அண்மையில் உள்ள கோவளம். இவர், பலருக்குக் கல்வி கற்பிக்கும் பணியை மேற்கொண்டிருந்தார்.

நூல்: இராசகோபால முதலியார் என்பவர் இயற்றிய 'மல்லாபுரத் தல மகாத்மியச் சுருக்கக் கொம்மிப் பாடல் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குட்டியக் கவுண்டர் ( 18-நூ )

ஊர்; கோயமுத்தூர் மாவட்டம். செட்டிபாளையம்.

இவர் தமது இளமைப் பருவத்திலேயே கண்ணிழந்து மருதமலை முருகன் திருவருளைப் பெற்றார்; நிலத்திற்கு அடியில் 48 நாள் சமாதி செய்திருந்தார்.

நூல். மருதீசர் சதகம், மருதீசர் பதிகம், தாய்மகளேசல், பேரூர் பச்சை நாயகி பதிகம், பச்சை நாயகி அந்தாதி, பஞ்சாங்க கணித மஞ்சரி, கிரக கணித மஞ்சரி.

## குட்டுவன் கண்ணனார் (சங்க காலம்)

இ. பெ: கண்ணனார்; சேரமரபினராகலாம்.

நூல்: குறுந்தொகை 179ஆம் பாட்டு.

## குட்டுவன் கீரனார் (சங்க காலம்)

இ. பெ- கீரனார்; சேரர் மரபினராகலாம் இவர் பாட்டில் ஆய் அண்டிரனைப் பாடியுள்ளார்.

நூல்: புறநானூறு 240-ஆம் பாட்டு.

## குடபுலவியனார் (சங்க காலம்)

வாழ்விடம்: குடநாடு.

புலவியன் என்பது இவரது இயற்பெயர். பரந்த அறிவுடையவர் என்னும் பொருள்பட வந்த பெயர். குட நாட்டைச் சேர்ந்தவராதலால் குடபுலவியனார் என்று அழைக்கப்பட்டார்.

நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்று வந்த பொழுது அவனைக் காண வந்தார் குடபுலவியனார். புலவரை அன்போடு வரவேற்றுத் தழுவிக் கொண்டான். அது கண்டு வியந்து அவனது அன்பையும் போர்ச்செயலையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். மற்றொரு புறப் பாடலில் நீரின் சிறப்பை எடுத்துக் கூறுகின்றார்.

நூல்: புறநானூறு 18, 19.

## குடமூக்கிற் பகவர் ( )

வாழ்விடம்: கும்பகோணம்.

இவர் இக்காலத்தில் கும்பகோணம் என வழங்கும் குடமூக்கில் வாழ்ந்தமை பற்றிக் குடமூக்கிற் பகவர் எனப்பெற்றார். இவர், தொன்மைக் காலத்தில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர் ஆவர்.

நூல்: வாசுதேவனார் சிந்தம், யாப்பருங்கல விருத்தியில் 'பொய்கையார் வாக்கும் குடமூக்கிற் பகவர் செய்த வாசுதேவனார் சிந்த முதலாகிய வொருசார் செய்யுட்களும் எப்பாற்படு மாவெனின் ஆரிடச் செய்யுள் எனப்படும்' என்று குறிப்பிடப்படும் செய்தியால் இப்புலவர் இயற்றிய நூலைப் பற்றிய குறிப்புத் தெரிகிறது.

## குடவாயிற் கீரத்தனார் (சங்க காலம்)

ஊர். தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த குடவாயில்.

இவர், ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனார் இறந்த பின்பு அவனுடைய வண்மையைப் பாராட்டியும் இரவலர் வருந்துதலை ஒருவகையாகப் புலப்படுத்தியும் பாடியுள்ளார். சேரனுடைய தொண்டி, பாண்டியனுடைய கூடல் நகர், கொற்கைத்துறை, சோழருடைய உறையூர் ஆகியவை இவர் பாடலில் பாராட்டப் பெற்றிருத்தலின் பெருஞ்சாத்தனாலும் சேரர் முதலிய முடிமன்னர் மூவராலும் இவர் ஆதரிக்கப் பெற்றவர் என்பது தெரியவருகிறது.

நூல்: அகநானூறு 44, 60, 79, 119, 129, 287, 315, 345, 366 385.
குறுந்தொகை: 79, 281, 369.
நற்றிணை: 27, 42, 212, 379.
புற நானூறு: 242.

## குண்டுகட் பாலியாதனார் (சங்க காலம்)

ஆதன் என்ற இயற்பெயரையுடைய இவர் பாலி என்னும் ஊரினைச் சேர்ந்தவராக இருக்கலாம். ஆழ்ந்த கண்ணுடைமையின் குண்டுகண் என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டுக் குண்டுகட் பாலியாதனார் என்று சினையாலும் இடத்தாலும இப்புலவர் பெயர் பெற்றாரென்று டாக்டர் உ. வே சாமிநாதையர் குறிப்பிட்டுள்ளார். ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் இப்புலவரின் பெயரைக் குன்றின் கட் பாலியாதனார் என்று கொண்டு, ஆதன் என்பது இயற்பெயரென்றும், இவரது ஊர் குன்று கட்பாலியாதலால் குன்றின் கட் பாலியாதனார் என்று அழைக்கப் பட்டாரென்றும, நாளடைவில் இப் பெயர் குண்டுகட் பாலியாதனார் என்று திரிந்து விட்டது என்றும் கூறுகிறார். குன்று கட்பாலி என்பது இப்போது பாலக்குன்று என்ற பெயருடன் மலையாளத்தில் கோழிக்கோட்டுப் பகுதியில் உள்ளதென்றும் எடுத்துக் காட்டுகிறார்.

புற நானூற்றில் இவர் பாடிய பாட்டு சேரமான் சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பற்றியதாகும். பதிற்றுப் பத்தினுள் கபிலரின் ஏழாம் பத்தில் பாடப் பெற்ற இவ்வரசன் இப்புலவராலும் புகழ்ந்துரைக்கப்படுகிறான்.

நூல்: நற்றிணை. 220. புறநானூறு 387.

## குணங்குடி மத்தான் சாயபு ( )

பார்க்க: மத்தான் சாயபு, குணங்குடி.

## குணசாகரர் ( )

சமணர்: கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பின்வாழ்ந்தவர் என்பர்.

நூல்: யாப்பருங்கலக் காரிகை உரை. யாப்பருங்கலம் என்னும் நூலினைச் செய்தவர் இவர் என்பாரும் உளர். அமிதசாகர ருடைய ஆசிரியர் குணசாகரர் இக்குணசாகரரின் வேறென்பர்.

## குணவீரபண்டிதர் ( 12-நூ )

ஊர்: செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள களந்தை.

வாழ்ந்த காலம்: திரிபுவனதேவனென்றழைக்கப்பெற்ற மூன்றும் குலோத்துங்கன் காலமாகிய கி. பி. 12–ஆம் நூற்றாண்டு.

நூல்: நேமிநாதம், வெண்பாப் பாட்டியல்.

சமணர்களுடைய தீர்த்தங்கரர்களில் இருபத்திரண்டாம் தீர்த்தங்கரராகிய நேமிநாதர் பெயரால் எழுதப் பெற்ற இலக்கண நூல் நேமிநாதம். மூதனூலாகிய தொல்காப்பியத் தினை நோக்க இந்நூல் சிறிதாயிருந்தமையால் இந்நூலிற்குச் சின்னூல் என்ற பெயரும் உண்டு. நன்னூலிற்குக் காலத்தால் முந்தியது. முற்காலத்தில் தொல்காப்பியம் பயில விரும்புவார் முதலில் இந்நூலினைக் கற்று வந்ததாகத் தெரிகின்றது. வெண்பா யாப்பில் அமைந்தது; தொல்காப்பியச் சுருக்கமாக உள்ளது. பண்டித முனி என்பவர் முன்னிலையில் அரங்கேற்றப் பட்டதாகச் சொல்லப்பெறுகின்றது. எழுத்து, சொல் என்ற இரண்டு அதிகாரங்களைக் கொண்டது. எழுத்ததிகாரத்தில் இயல் பிரிவுகள் இல்லை. சொல்லதிகாரத்தில் தொல்காப்பியத் தினைப்போல் ஒன்பது இயல்கள் உள்ளன. தொல்காப்பியச் சொல்லதிகார இயல்களின் பெயர்களே சிறிதுமாற்றங்களுடன் இங்கு காணப் பெறுகின்றன. இந்நூலில் கடவுள் வாழ்த்து, அவையடக்கம ஆகியவையடங்கிய பாயிரப் பகுதியில் 2 செய்யுட்களும் எழுத்ததிகாரத்தில் 24 செய்யுட்களும் சொல் லதிகாரத்தில் 71 செய்யுட்களும் காணப்பெறுகின்றன, இந் நூலிற்கு உரையொன்றுள்ளது; உரையாசிரியர் பெயர் தெரியவில்லை.

இவ்வுரை கருத்துரை, பொழிப்புரை, உதாரணம், வினா விடை, விளக்கம் ஆகியப்பகுதிகளைக் கொண்டுள்ளது.

வெண்பாப் பாட்டியல் என்னும் நூலிற்கு வச்சனந்திமாலை என்ற பெயரும் உண்டு. குணவீர பண்டிதரின் ஆசிரியர் வச்சனந்தி முனிவர் பெயராலே இந்நூலியற்றப் பெற்ற தென்றும் சொல்லுவர். இந்நூல் பாட்டியல் இலக்கணங் கூறுவது. 101 வெண்பாக்களை உடையது. முதன் மொழி இயல், செய்யுளியல், பொதுவியல் என்னும் மூன்று இயல்களைக் கொண்டது. முதன் மொழியியலில் மங்கலம், சொல் முதலிய 10பொருத்தங்கள் கூறப்பெற்றுள்ளன. செய்யுளியலில், பிள்ளைக் கவி, கலம்பகம் முதலிய பிரபந்தங்களுக்கு இலக்கணம் சொல்லப் பெற்றுள்ளது. பொதுவியலில் நூற்பாக்களின் சாதி, இடம், நிறம், நாள், ராசி முதலியன காணப்பெறு கின்றன. செய்யுளியலில் மூன்ருவது செய்யுளில் வச்சனந்தியைப் பற்றி ஒரு பாட்டு உள்ளது. இந்நூலிற்கு உரை ஒன்று உண்டு. இப்பாட்டியல் இந்திரகாளி என்பாருடைய மரபினைப் பின்பற்றியது என்று அவ்வுரை கூறுகின்றது.

## குதம்பைச் சித்தர் ( )

இவர் பதினெண் சித்தர்களின் ஒருவர். குதம்பேய்ச் சித்தர் என்றும் அழைக்கப்பட்டார். குதம்பை என்பது மகளிர் காதில் அணியும் அணியாகும். குதம்பை அணிந்த ஒரு பெண்ணை முன்னிலைப் படுத்திக் கூறும் முறையில் கடவுள் வழி பாட்டையும், உலகியல் நெறிகளையும் பாடியுள்ளார். அதனுல் குதம்பைத் சித்தர் என்று அழைக்கப்பெற்ருர், இவர் பெண் களைப் பேய் என்று கருதுபவர் என்றும், அம்முறையில் இவருக்குக் குதம்பேய்ச் சித்தர் என்ற பெயர் ஏற்பட்டதென்றும் கூறுவர்.

நூல்: குதம்பைச் சித்தர் பாடல்கள். பதினெண் சித்தர் ஞானக் கோவை என்று வழங்கும் பாடற்ரெருகுதியில் இவரது பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

## குதிரைத் தறியனுர் (சங்க காலம்)

ஊர்: குதிரைத்தறி.

குதிரைத்தறி என்பது ஒருராக இருக்கலாமென்று கருதுகிறார் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர். கோயம்புத்தூர் மாவட்டத்தில் குதிரை மலை என்ற ஊரும், திருநெல்வேலி மாவட்டத்தில் குதிரை மொழித்தேறி என்ற ஊரும் இருப்பதால் குதிரைத்தறி என்பது ஊராகவே இருக்கக்கூடும்.

நூல்: நற்றிணை 296 ஆம்பாட்டு.

## குப்பாண்டி முதலியார் இ. ரா (பிற்காலம்)

நூல்: கணபதிமாலை. இந்நூல் 102 செய்யுட்களைக் கொண்டது; கணபதியைப் பற்றிய சில தோத்திரங்களின் திரட்டு. நூலில் கணபதிமாலை, சந்தி விநாயகர் பதிகம், விநாயகர் மாலை, பஞ்சரத்தினக் கவி, கணபதி சந்தப் பதிகம், பஞ்சரத்தின தோத்திரக் கவி, தனிக்கவி ஆகியவை அடங்கியுள்ளன,

## குப்புச்சாமி ( பிற்காலம் )

நூல். சொருபாநந்த விளக்கம் (1912) சாமவிளக்கம் (1916).

## குப்புச்சாமி ஆச்சாரியார் ( 19-நூ)

ஊர்: வட ஆர்க்காடு மாவட்டம் போளூர் மாவட்டத்தில் உள்ள வில்வாரணி.

தந்தை: தீர்த்தகிரி ஆச்சாரியார்.

பிறந்தநாள்: 7—5—1887.

இவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களைத் திரு. கூ. அருணாசலச் செட்டியாரிடமும், திரு. மல்லிகார்ச்சுனப் பிள்ளையிடமும் கற்றார். பொன்வினைஞர் பணியினைச் செய்துகொண்டே மாணவர்களுக்குத் தமிழ் நூல்களைப் பாடஞ்சொல்லியவர்; சொற்பொழிவாற்றும் திறம் பெற்றவர்.

நூல்: உடுமலைப் பாமாலை, ஆலடிநாதர் தோத்திரப்பாமாலை, வேங்கடேச்சுவரர் தோத்திரப் பாமாலை, பாலசுப்பிரமணி தோத்திரப் பாமாலை, ஆலடிநாதர் நான்மணிமாலை, தண்டபாணிசுவாமிகள் பதிகம், நவரத்தினமாலை, வரசித்தி விநாயகர் பதிகம்.

## குப்புச்சாமி ஆச்சாரியார் தொ. ( 20 நூ )

நூல்: கோவிந்தராசச் செட்டியார் இயற்றிய 'தனிகை நிரோட்டக யமகவந்தாதி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குப்புச்சாமி ஐயர் (பிற்காலம்)

நூல்: பஞ்சதசோபநிஷத் (1887) நூற்றி எட்டு உப நிடதங்களில் கைவல்ய உபநிடதம் முதலிய பதினைந்து உபநிடதங்களைத் தேர்ந்தெடுத்து மொழிபெயர்த்துள்ளார்.

## குப்புச்சாமிக் கிராமணியார் (19-நூ)

வாழ்விடம்: சென்னை.

தந்தை: தியாகராயக் கிராமணியார்.

நூல்: மாணிக்கவாசக சுவாமி விலாசம் (1868). இந்நூல் மாணிக்க வாசகர் வரலாற்றை நாடக முறையில் விளக்குவது; 192 செய்யுட்கள். இது பெரும்பான்மை கீர்த்தனைகளையும், இடை யிடையே விருத்தப்பாக்களையும், உரைநடைப் பகுதிகளையும் கொண்டது.

## குப்புசாமி தாச சாமிகள் ( )

ஊர்; லாலாபேட்டை.

நூல்; ஞானமிர்த பல கீர்த்தனை (1899). இந்நூலில் 95 கீர்த்தனங் கள் உள்ளன. இந்நூல் திருமாலைப் பற்றிய பக்திக் கீர்த்தனங் களின் தொகுதியாகும்.

## குப்புசாமி தீட்சிதர் (20-நூ)

ஊர்: சிதம்பரம். கிருட்டிணமூர்த்தி ஐயர் என்பவர் இயற்றிய 'மகாபாரத சதகம்' என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய நல்லுரை.

## குப்புச்சாமி நாயுடு த. (20-நூ)

ஊர்: மதுரை.

நூல்: திருப்போரூர்ச் சுப்பிரமணியர் வருகைப்பத்து, 'சடாமுனி நவரத்தினம்'

## குப்புச்சாமிப் பந்தர் தி அ. (20.நூ)

நூல்: க. அப்பாவையர் என்பவர் இயற்றிய 'திருவதிகைப் புராணம்' என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்

## குப்புச்சாமிப் பிள்ளை அ. (20-நூ)

வாழ்விடம்: சோழநாட்டில் சோழமாதேவி, சந்தப் பாடல்கள் பாடுவதில் வல்லவர்.

நூல்: திருச்சிராப்பள்ளியைச் சேர்ந்த சுந்தரநாதன் என்பவனைப் பாராட்டி வழங்கிய சாற்றுக்கவி.

## குப்புச்சாமி முதலியார்–1 ( )

நூல்: அறுசுவை வெண்பா (1922).

## குப்புச்சாமி முதலியார்–2 ( )

நூல்: கபிலை காவியம் (1922).

## குப்புச்சாமி முதலியார்–3 (20-நூ)

ஊர்: சென்னையை அடுத்த கிருஷ்ணாம் பேட்டை.

தந்தை: தருமசிவ முதலியார். இவர் தம்முடைய மைத்துனர் ஆறூர் சிங்கார வேல் முதலியாரிடம் கல்வி கற்றார். இராயப் பேட்டை வெஸ்லி கல்லூரியில் சில திங்கள் தமிழாசிரியராகப் பணியாற்றிப் பின்னர் அவ்வேலையை விடுத்து பி. ஆர். அன் சன்ஸில் எழுத்தராக அமர்ந்தார்.

இவர் திருமயிலை சங்கீத சபையைத் தொடங்கியவர்களில் ஒருவர். செங்கற்பட்டு, திருக்கழுக்குன்றம் முதலிய இடங்களில் சைவ சபைகள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தார். கி.பி. 1913—1917 வரை சைவ சித்தாந்த மகாசமாசத்தின் அமைச்சராகப் பணியாற்றினார். இவர் காலத்தில் மெய்கண்ட சாஸ்திர மூலத்தை அச்சிட்டுப் பலருக்கு நன்கொடையாக அளித்தார். கி.பி. 1918—20 ஆண்டுகளில் 'சித்தாந்தம்' என்ற இதழின் ஆசிரியராக இருந்தார். அமைச்சர், நடுவர் முதலிய உயர் அலுவலர்களுக்குத் தமிழ் நூல்களையும், சமய நூல்களையும் கற்றுக்கொடுத்தார்.

நூல்: திருக்குறள் விளக்கம்
இந்நூல் பரிமேலழகர் உரையை விளக்குவது.

## குப்புச்சாமி முதலியார் கி. (20-நூ)

ஊர்: சென்னை.

நூல்: திருமலைராயன்பட்டினத்தைச் சேர்ந்த அருணாசல முதலியார் என்பவர் இயற்றிய 'அற்புதத் திருவந்தாதிஉரை' 'திரு விரட்டை மணிமாலை உரை' முதலிய நூற்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குப்புச்சாமி ராசு வெ. (20-நூ)

வே.பெ: பிரமானந்த அடிகள்.

ஊர்: தஞ்சாவூர்.

தந்தை: வேங்கடசாமி ராசு; தாய்: பாப்பம்மாள் ராசு; சத்திரிய குலத்தினர்.

இவர் முதலில் தம் தந்தையாரிடம் கல்வி கற்றார். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், வடமொழி, மராட்டி, இந்தி, வங்காளி, ஆங்கிலம். சிங்களம் முதலிய மொழிகளில் தேர்ச்சி பெற்றுள்ளார். இளமையிலேயே இவருக்குத் துறவறத்தில் நாட்டமேற்பட்டது. இருப்பினும் இவருடைய பெற்றோர்கள் இவருக்குக் கிருட்டிணம்மாள் என்ற பெண்ணை மணஞ் செய்து

வைத்தனர். சிறிது காலம் இல்லறத்தில் இருந்துபின்னர் திரு விடை மருதூர், திருவையாறு முதலிய ஊர்கட்குச் சென்று ஆங்காங்கு மறைவாக நிட்டை முதலியன செய்து வந்தார். ஒரு முறை திருவிடைமருதூர் மருவானப் பெருமான் அந்தணர் வடிவில் வந்து இவருக்கு உணவு வழங்கினர் என்பர். தஞ்சாவூர் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் இவருக்கு 'குருகீதை' என்ற அரிய நூல் கிடைத்தது. அதன் பின்னர் தக்கார் ஒருவர் பால் ஞானம் பெற வேண்டும் என்ற அவா எழுந்தது. அப்பொழுது தஞ்சாவூரில் இருந்த விட்டினுபாவா என்ற பெரியாரிடத்தில் வேதாந்த நூல்களைக் கற்றுணர்ந்தார். ஆசிரியர்களின்கட்டளைக் கேற்ப இவர் பல வடமொழி வேதாந்த நூல்களைத் தமிழாக்கம் செய்தார். இவருடைய மனைவியும் இரண்டு குழந்தைகளும் மறைந்தபின் வடநாடு சென்று துவாரகை முதலிய இடங்களைப் பார்த்துத் திரும்பினர். இவரிடம் கற்றுத்தெளிந்த மாணவர் கள் பலர். அவர்களுள் இராமசாமி ஐயா என்பவர் கீதாசாரதா லாட்சி என்னும் நூலுக்கு உரை எழுதியுள்ளார். சங்கர விலாச சாரதா மந்திரம் என்னும் பெயரில் நூல் வெளியீட்டுக் கழகம் ஒன்று நிறுவித் தம்முடைய நூல்களையெல்லாம் வெளியிடுமாறு செய்தார். இவர் கி. பி. 1921ஆம் ஆண்டில் திருச்சி மாவட்டம் இரெட்டியார் துறையூருக்கு அடுத்த சிக்கந்தனூர் என்ற ஊரில் வீடு பேறு அடைந்தார்: அவ்வூரில் இவருக்கு ஒரு சமாதி உள்ளது. இவர் பால் அன்பு கொண்ட பலர் 'நான்மணி மாலை' முதலிய நூல்களும் தனிப்பாடல்களும் இவர் மேல் பாடியுள்ளனர்.

நூல்: பஞ்சத பிரகரணம், சீவன் முக்தி விவேகம், பாலபோதம், விருத்தி ரத்தினவளி, நாதாசீவ வாதக் கட்டளை குறிப்புரை, விவேகசிந்தாமணி, சங்கர நீல கண்டாச்சாரிய சம்வாதம், ஹடயோகம் பிரத்பிகை, சிவயோகப் பிரத்பிகை, அட்டாங்க யோக சூத்திரம், யோக தாராவலி, நாரதபத்தி சூத்திரம், பாலினி வியாகரணம் தமிழ் வியாக்யானம், அபரோச்சாநு பூதி (தமிழாக்கம்), ஆத்மபோதமும் தத்துவ போதமும், பஞ்சீகரணம் குருபு சங்க தோத்திரம், பிரச்நோத்தாரத்திற மாலை, சதர சாரம், ஆத்மநாத்ம விவேகம், சிவஞானபோத உரைநடை, ஞானவாசிட்ட உரைநடை, கைவல்லிமயாபநிடதம், அமிர்த பிந்துபநிடதம், சுகரகசியோபநிடதம், கந்தோப நிடதம்,

தத்துவமசி மகாவாக்கிய உபதேசம், (மொழியாக்கம்) சுருதி சட்லிங்க சங்கிரகம், நந்திகேஸ்வர காசிகை, உத்தரகீதை (மொழியாக்கம்), பகவத் கீதை, (மொழியாக்கம்) தேவி கீதை, குரு கீதை, ராமகீதை, கணேச கீதை, சிவஞான போத குல கோபிகை, சர்வஞானோத்ரம், சிவபஞ்சாட்சர விளக்கம், வைணவ அட்டாச்சர மந்திரார்த்த சங்கிரகம், சகத்குருவரலாறு, கீதாசாரத் தாலாட்டு உரை, பிரமவித்தாசீர் வாதபத்ததி, பிரமநாமாவளி, விசார சந்திரோதயம் (மொழியாக்கம்), தத்துவபோதம் (மொழியாக்கம்), சுவாத்துமநிருபணம் (மொழியாக்கம்), தருக்ககௌமுதி (மொழியாக்கம்), விருத்திப் பிரபாகரம்,

## குப்புசாமிகள் ப. ( )

நூல்: ஸ்ரீ சிவபஞ்சாட்சர விளக்கம் (1919).

## குப்பைக் கோழியார் (சங்க காலம்)

இவரது பாடலில் 'குப்பைக் கோழி' என்ற தொடரைப் பயன்படுத்தியுள்ளமையால் இவர் தொடரால் பெயர் பெற்ற புலவராவர்.

நூல்: குறுந்தொகை 305 ஆம் பாட்டு.

## கும்பகவி (17. நூ)

ஊர்: கும்பகோணம். கம்மாள மரபினர்.

படிக்காசுப் புலவருக்கும், இவருக்கும் பகைமை உண்டு. ஒருமுறை இவர் இரகுநாத சேதுபதி மீது பல பாடல்களைப் பாடிப்பரிசு பெற்றார். இதனை அறிந்த படிக்காசுப்புலவர் இவருடைய புலமையைக் குறைத்துப் பாடினார். இவர் சினம் கொண்டு, அவருடைய குலம் முதலியவற்றைக் குறைத்துப் பாடினார். சேதுபதி இவ்விருவருடைய பகைமையையும் போக்கி இருவரையும் நண்பர்களாக்கினர் என்பர்.

## கும்பநாதச் செட்டியார் ஆ. (19-நூ)

ஊர்: கும்பகோணம். வைசிய குலம்.

தந்தை: ஆறுமுகச் செட்டியார்.

நூல்: ஆதிகும்பேசுரர் தோத்திரப் பதிகங்கள், திருக்குடந்தை பதிற்றுப்பத்தந்தாதி.

## கும்பன் (17-நூ)

இவர் படிக்காசு புலவர் காலத்தவர். தம்பியர் மரபினர்.

நூல்: ரகுநாத சேதுபதி மீது பாடிய பாடல்கள்.

## குமட்டூர்க் கண்ணனார் (சங்க காலம்)

ஊர்: குமட்டூர், அந்தணர்.

கண்ணனார் இயற்பெயர். கண்ணனார் என்று ஒரு புலவர் உளர்; அவரினின்றும் வேறுபடுத்தற்கு ஊர்ப்பெயரொடு சேர்த்து இவர் வழங்கப்பெற்றார். இவர் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் மீது பத்துப்பாட்டுப்பாடி உம்பற்காட்டு ஐந்நூறு ஊர்களும் முப்பத்தெட்டு ஆண்டுகள் தென்னாட்டு வருவாயில் பாகமும் பரிசிலாகப் பெற்றார். இவர் பாடிய பத்துப்பாட்டும் பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தாக விளங்குகிறது.

நூல்: பதிற்றுப்பத்து 2-ஆம் பத்து 11-20 உம் அதன் பதிகமும்.

## குமரகுருதாச சாமிகள் (20-நூ)

வே. பெ: பாம்பன் சாமிகள், அப்பாவு.

ஊர்: இராமநாதபுர மாவட்டம் இராமேஸ்வரத்தை அடுத்த பாம்பன்.

தந்தை: சாத்தப்பன் பிள்ளை. தாய்: செங்கமலம், அகமுடையார் குலம், வேளாளர் என்பவரும் உண்டு.

வாழ்ந்த காலம்; கி. பி. 1850-1929.

இவர் இளமையில் முனியாண்டி பிள்ளை என்பவரிடம் கல்வி கற்றார். தொடக்கப்பள்ளியோடு இவருடைய கல்வி முற்றுப்

பெற்றது. பின்னர் தாமே தமிழினையும், வடமொழியையும் முயன்று கற்றார். இவர் நாகநாதக் கோவிலில் நடைபெற்ற திருவிழாவுக்குச் சென்றபோது ஒரு துறவியின் உறவு காரணமாக சிவ சிவ என்று மூன்று நாட்கள் இடையறுது ஓதினர். பின்னர் கந்தர் சஷ்டி கவசம் என்னும் நூலினைப் பாராயணம் செய்யத் தொடங்கினர். ஒரு நாள் தன்னுடைய தென்னந்தோப்பில் இவர் இருந்தபோது முருகக் கடவுள் மீது செய்யுள் இயற்ற வேண்டும் என்ற எண்ணம் தோன்றிற்று. உடனே ஒரு செய்யுளும் இயற்றினர். அதுமுதல பல செய்யுட்களைப் பாடத் தொடங்கினர். இவருடைய பாட்டின் சிறப்பினை அறிந்த இராமேச்சுவரம் சேதுமாதவய்யர் இவரை அங்கு அழைத்துச் சென்று ஆறெழுத்து மந்திரத்தை ஓதினர்.

இவர் தமது 25வது வயதில் காளிமுத்து என்ற அம்மையாரை மணந்தார். மூன்று ஆண் மக்கள் பிறந்தனர். ஆனாலும் இவருடைய உள்ளம் துறவறத்திலேயே ஈடுபட்டது. பின்னர் 1894 ஆம் ஆண்டு பிர்ப்பன்வலசை என்ற ஊரில் முப்பத்தைந்து நாட்கள் ஊணுறக்கமின்றி நிட்டையிலிருந்தார். எத்தகைய ஊறுபாடும் ஏற்படவில்லை. 1895இல் துறவியானர். எப்போதும் முருக நாமத்தையே கூறியதனல் அப்பாவு என்ற இவருடைய இயற்பெயர் மறைந்து குமரகுருதாச சாமிகள் என்று அழைக்கப் பெற்றார். பல தலங்களுக்கும் சென்றார். காசியில் குமரகுருபரர் மடத்தில் இவர் தங்கியிருந்த காலை இவருக்குக் காவியுடையினை ஒரு பெரியார் அணிவித்தார்.

இவர் துறவறத்தினை மேற்கொண்ட பின்னர் சிதம்பரத்திற்கு அருகாமையிலுள்ள பின்னத்தூரிலும், சென்னையிலும் வாழ்ந்தார்.

இவர் சமயப்பொது நோக்குடையவராவர். எத்தெய்வத்தைக் கண்டாலும் முருகனகவே நினைத்து வழிபடுவார். மகாதேசோமண்டலம் என்ற ஒரு திருச்சபை இவரால் நிறுவப் பெற்றது. இம்மண்டலத்தினைச் சார்ந்தவர்கள் நாடு, மொழி, சாதி வேறுபாடின்றி முருகனை வழிபடுவர். அருணகிரிநாதருடைய திருநாளைக் கொண்டாட வேண்டுமென்று முதன் முதலில் அந்நாளினைக் கொண்டாடியவர் அடிகளேயாவர்.

குழந்தை உருவில் வந்து திருமலைநாயக்கருடைய மடிமீது அமர்ந்து கேட்டு வந்தார். அப்பருவத்தில் உள்ள 'தொடுக்குங் கடவுட் பழம்பாடல்' என்ற பாடலினைப்பாடிப் பொருளுரைதது முடித்தபொழுது அக்குழந்தை அரசனுடைய கழுத்திலிருந்த முத்துமாலையினை எடுத்துக் குமரகுருபரர் கழுத்திலிட்டு மறைந் தது. அப்பொழிதுதான் வந்த குழந்தை மீனாட்சியம்மை என்பது தெரியவந்தது. நூல் அரங்கேற்றம் முடிந்தவுடன் அரசன் புலவருக்குப் பெருஞ்சிறப்புச் செய்தான். மன்னன் வேண்டுகோட்கிணங்க இவர் அங்குச் சிலகாலம் தங்கி யிருந்தார். ஒருநாள் மன்னன் நெடுநேரம் வரை உணவு உண்ணாமல் அரச காரியங்களில் ஈடுபட்டிருந்து பின்பு வந்து உணவு உண்ணுவதனைக் கண்டார் புலவர். அப்பொழுது 'வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி தொடுத்தார்க்கும துய்த்தலரிது'' என்னும் திருக்குறளினை எடுத்துக்கூறினார். மன்னன் குறளினுடைய பெருமையினை அறிந்து திருக்குறளில் உள்ள சிறந்த கருத்துக்களையெல்லாம அடக்கி ஒருநூல் செய்து தர வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். குமரகுருபரரும் நீதிநெறிவிளக்கம் என்னும் நூலினைச் செய்தார். இந்நூலிற்குப் பரிசாக இருபதினாயிரம் சிறுபொன் வருவாயினையுடைய அரிய நாயகிபுரம் என்னும் சிற்றூரினை அரசன் நன்கொடையாக அளித்தான். இந்நீதி நூலினைப் பாடுதற்கு முன்னர் 'மீனாட்சி குறம்', 'மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை' மதுரைக் கலம்பகம்' ஆகிய நூல்களையும் மன்னன் வேண்டப் பாடினார் என்று கூறுவர். பின்னர்ப் பல தலங்களுக்கும் செல்ல விரும்பினார். அரசனும பெரும் பொருளினைப் பரிசிலாகக் கொடுத்தனுப்பினான்.

இவா பலதலங்களுக்கும் சென்று திருவாரூரையடைந்தார் அங்குத்திருவாரூர் நான்மணிமாலை என்றும் நூலினைப்பாடினார். பின்னர் திருவாவடுதுறை முதலிய தலங்களுக்குச் சென்று தருமபுரம் சேர்ந்தார். அவ்வாதீனத்தில் நான்காவது பட்டத் திலெழுந்தருளுயிருந்த மாசிலாமணி தேசிகரிடம் சென்றார். அவர் பெரியபுராணத்தில் தடுத்தாத்கொண்ட புராணத்தில் வரும 'ஐந்து பேரறிவும கண்களே கொள்ள' என்ற பாட்டிற்கு அனுபவப்பொருள் சொல்லும்படி பணித்தார். அப்பொழுது குமரகுருபரர்க்கு வாக்குத் தடைப்பட்டது. உடனே அவரே

தம்முடைய ஞானசிரியரென்பதனை உணர்ந்து அருளுபதேசம் செய்தருளுமாறு வேண்டினர். அவர் இவரைக் காசி வரை சென்று பலதலங்களையும் தரிசித்துக்கொண்டு வருகவென்றார். அதற்கு நீண்டகாலமாகுமாகையால் அதுவரை குருவினுடைய அருளுரை பெறாது நாளினை வீணாக்க விரும்பாதவராய் மறு முறையும் ஆசிரியரை வேண்டிக்கொண்டார். அங்ஙனமாயின் சிதம்பரம் வரை சென்று வருகவென்றார். இவரும் பல தலங் களுக்கும் சென்று இறைவனை வழிபட்டுச் சிதம்பரத்தினை அடைந்தார். வழியில் வைத்தீஸ்வரன் கோயிலில் எழுந்தருளி யுள்ள முத்துக்குமாரசாமி மீது 'முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்' என்னும் நூலினையும் பாடினார். சிதம்பரத்தில் தங்கி யிருந்த காலை சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட் கோவை, சிவகாமியம்மை இரட்டை மணிமாலை, ஆகிய நூற் களை இயற்றினர். தருமபுரத்திற்கு திரும்பி வந்தார். மாசி லாமணி தேசிகருடைய அருள் கிடைத்தது. அவரும் இவருக்கு அருளுரை வழங்கினர். தம் ஞானசிரியர் மீது 'பண்டார மும் மணிக்கோவை' என்னும் நூலினைப் பாடினர்.

பின்னர் ஆசிரியருடைய ஆணைப்படி காசிவரையுள்ள தளங் களைத் தெரிசித்துக்கொண்டு காசியினையடைந்தார். அக்காலத் தில் காசியினை டில்லிபாட்சா ஆண்டு கொண்டிருந்தார். அவரைக்கண்டு தான் தருமையியற்றுவதற்கு வேண்டிய இடம் பெற விரும்பினர். அரசருடன் உரையாடற்கு இந்துஸ்தானி மொழி தெரியவேண்டும். குமரகுருபரருக்கு அம்மொழி தெரி யாது. கலைமகளைக் குறித்து 'சகலகலாவல்லி மாலை' என்னும் நூலினைப் பாடி அவளருள் பெற்று அம்மொழியிற் பேசும் ஆற்றலையடைந்தார். அரசரிடம் சென்று தம் கருத்தினைத் தெரிவித்தார். குமரகுருபரரிடத்தில் தெய்வீகத்தன்மையிருப் பதனைத் தானறிய வேண்டுமென்றார். அடிகள் இறைவியை வேண்டி அவளுடைய ஊர்தியாம் சிங்கத்தினைப் பெற்று அதன் மேலேறி மறுநாள் அரசவைக்கு சென்றார். அரசன் அடிகளு டைய சிறப்பினையறிந்தான். அரசன் தன் தவற்றிற்கு வருந்தினன். ஆனல் அரசனுடைய அவையிலுள்ளவர்களோ இவர்பால் அழுக்காறு கொண்டனர். பல சோதனைகளை ஏற் படுத்தச் செய்தனர். அவைகளில் இவர் வெற்றி பெற்றார். அரசன் மகிழ்ந்தான். இவர் தாம் கோயில் கட்டுதற்கு, கேதார

கூட்டத்திற்கருகில் அரசனுடைய பள்ளிவாசல் உள்ள இடத்தினைக் கேட்டார். அவனும் அவ்விடத்தினைக் கொடுத்தான். அடிகள் அவ்விடத்திலேயே குமாரசாமி மடம் என்ற ஒன்றினை நிறுவினார். திருமலைநாயக்க மன்னன் கொடுத்த பெரும்பொருளின் துணைகொண்டு கேதாரநாதருக்குக் கோயிலமைத்தார். சத்திரம் ஒன்றினையும் கட்டினார். காசியிலிருந்த காலை 'காசிக் கலம்பகம்", காசித்துண்டி விநாயகர் பதிகம் என்னும் நூல்களை இயற்றினார். ஒரு முறை தருமபுரம் வந்து தம்முடைய ஞானாசிரியரைத் தரிசித்துச் சென்றார். அவர் ஆணைப்படியே காசியிலேயே இருந்து வருவாராயினார். அங்கேயே இறைவனடி சேர்ந்தார். இவருக்குப் பின்னர் இவரால் நிறுவப்பெற்ற காசி மடத்தில் சொக்கநாதமுனிவர் அருணாசல முனிவர், அம்பலவானமுனிவர், சடையப்பமுனிவர் என்பவர்கள் முறையே ஒருவர்பின் ஒருவராக இருந்து அடிகள் ஏற்படுத்தியிருந்த அறங்களைப் பேணி வந்தனர். இதற்கிடையில் திருப்பனந்தாளில் ஒரு கிளைமடம் நிறுவப்பட்டிருந்தது. சடையப்ப முனிவருக்குப் பின்வந்த தில்லை நாயக சாமிகள் என்பவர் வேறொருவரைக் காசியில் இருக்கச் செய்து தான் திருப்பனந்தாளைத் தலையிடமாகவும் காசியினைக் கிளையிடமாகவும் கொண்டனர். திருப்பனந்தாள் மடத்தவர் தமிழிற்கும் சைவத்திற்குமாகப் பல நூறாயிரம் வெண்பொற் காசுகளைச் செலவிட்டுள்ளனர். குமரகுருபரருடைய வரலாற்றினை மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை செய்யுள் வடிவிலே பாடியுள்ளார்.

நூல்: கந்தர் கலிவெண்பா; கயிலைக் கலம்பகம், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், நீதிநெறிவிளக்கம், திருவாரூர்நான்மணிமாலை முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, சிவகாமியம்மை இரட்டை மணிமாலை, பண்டார மும்மணிக்கோவை, காசிக்கலம்பகம், சகலகலா வல்லிமாலை, காசித்துண்டி விநாயகர் பதிகம் மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மதுரைக் கலம்பகம் ஆகிய மூன்று நூல்களும் இவராற் செய்யப்பட்டவையென்றும், அன்று என்றும் இருவேறு கருத்துக்கள் உள.

'கந்தர் கலிவெண்பா' இந்நூல் 122 கண்ணிகளையுடையது. குமரகுருபரர் மூங்கைப் பிள்ளையாயிருந்து திருச்செந்தூர் முருகன் திருவருளால் அம்மூங்கைத் தன்மை நீங்கப் பெற்ற பொழுது அம்முருகன் மீது பாடப்பெற்றது. பலரால பாரயண மாகப் படிக்கப்பெறும் நூல். கந்தபுராணச் செய்திகளைக் கொண்டது. முருகனுடைய கை, முகம் முதலியவற்றைத் திருமுருகாற்றுப் படையைப் போல வர்ணிக்கிறது.

கயிலைக் கலம்பகம்: இந்நூல் இவருடைய பிறப்பிடத்தில் குடி கொண்டுள்ள கயிலை நாதர் மீது ப்பாடப்பெற்றது. இந் நூலின் ஒரு பகுதிறே இப்பொழுது கிடைத்துள்ளது. மீனாட்சி யம்மை பிள்ளைத்தமிழ்:- பத்துப் பருவங்களையும் நூறு செய்யுட் களையும் கொண்டது. 'காலத்தொடு கற்பனை', தொடுக்கும் கடவுட் பழம்பாடல் என்ற செய்யுட்கள் எல்லோராலும் பாராட்டப் படுபவை. நீதிநெறி விளக்கம் 102 வெண்பாக்களை யுடையது. திருக்குறளின் கருத்துக்களைக் கொண்டது. திருக்குறளின் வழி நூல் என்று சொல்லப்பெறும் தகுதி யுடையது. ஆங்கிலத்தில் இந்நூல் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது.

திருவாரூர் நாண்மணிமாலை : இந்நூல் திருவாரூரில் எழுந் தருளியுள்ள தியாகராசப்பெருமான் மீது பாடப்பெற்றது; நாற்பது பாக்களைக் கொண்டது.

'முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்: இந்நூல் நூறு செய்யுட் களாலயது. வைத்தீஸ்வரன்கோயில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமான்மீது பாடப்பெற்றது. சிதம்பர மும்மணிக் கோவை; இந்நூல் 30 பாக்களையுடையது. நடராசப்பெருமான் மீது பாடப்பெற்றது. திருக்குறளின் அறத்துப்பால் கருத்துக் களைக் கொண்டது. சிதம்பரச் செய்யுட்கோவை: இந்நூல் 84 செய்யுட்களையுடையது. ஒருமுறை அடிகள் சிதம்பரத்தில் வீதி வழியே சென்று கொண்டிருந்தார். புராணச் சொற்பொவு ஒன்று நடந்து கொண்டிருந்தது. அடிகளாரைக் கண்டவுடன் சொற்பொழிவினைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களெல்லாம் எழுந்து சிறப்புச் செய்தனர். சொற்பொழிவாளர் சிறப்பு எதுவும் செய்யவில்லை. மேலும் மற்றவர்களைப் பார்த்துக்

குமரகுருபரர் வரகவிதானே. அவருக்கு இலக்கணம் தெரியுமோ என்றார். இதனைக் கேள்வியுற்ற குமரகுருபரர் இந்நூலினைச் செய்தார். இந்நூல், நால்வகைப் பாக்களின் பலவகைகளுக்கும் பாவினங்களுக்கும் எடுத்துக்காட்டுக்களை உடையது. கோவை என்று பெயரிடப் பெற்றிருப்பினும் இந் நூல் கோவைப் பிரபந்தமல்ல,

சிவகாமியம்மன் இரட்டை மணிமாலை; இந்நூல் சிதம்பரத் தில் எழுந்தருளியுள்ள சிவகாமியம்மன் மீது பாடப்பெற்றது. இருபது செய்யுட்களையுடையது/ 'பண்டாரமும்மணிக்கோவை: இந்நூல் முப்பது பாட்டுக்களையுடையது; குமரகுருபரருடைய ஞானாசிரியர் மாசிலாமணி தேசிகர் மீது பாடப்பெற்றது.

காசிக்கலம்பகம்: இந்நூல் நூறு செய்யுட்களைக் கொண்டது; காசியிலெழுந்தருளியுள்ள விசுவநாதர் மேல் பாடப்பெற்றது. 'சகலகலாவல்லி மாலை; இந்நூலுக்கு வெள்ளைக்கிழத்திமாலை என்ற பெயரும் உண்டு. இந்நூலில் 10 செய்யுட்கள் உள. அடிகள் இந்துஸ்தானி மொழியில் பேசும் ஆற்றல் பெறக் கலைமகளை நோக்கிப் பாடப்பெற்றது. அந்நூலிற் கலைமகளை கண்கண்ட தெய்வம் நின்போல் உளதோ என்று அடிகள் பாராட்டுகின்றார். 'காசித்துண்டிவிநாயகர் பதிகம்: இந்நூல் காசியில் எழுந்தருளியுள்ள பிள்ளையார் மீது பாடப்பெற்றது. மீனாட்சியம்மை குறம் 51 செய்யுட்களையுடையது. குறவஞ்சி என்றழைக்கப் பெறும் பிரபந்த வகைகளில் சிலவற்றை நீக்கிக் கூறுவது. மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, வெண் பாவும் கலித்துறையும் மாறிமாறி வர அமைந்த இருபது செய்யுட்களையுடையது. மதுரைக் கலம்பகம்: இந்நூல் சொக்கலிங்கப் பெருமானுடைய பெருமையைக் கூறுவது. 102 செய்யுட்களைக் கொண்டது.

## குமரப்பிள்ளை ( )

நூல்: வள்ளியம்மை நாடகம். இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் ஓலைச்சுவடியாக வுள்ளது,

## குமரன் ( )

ஊர்: திருக்களந்தை.

நூல்: திருவாஞ்சியத்தலபுராணம். இப்புராணம் சோழ நாட்டில் உள்ள ஸ்ரீவாஞ்சியம் என்னும் தலத்தின் சிறப்பினைக் கூறுவதாகும். 14 படலங்களையும் 850 செய்யுட்களையும் கொண்டது.

## குமாரண்டி ஞானியார் (19 நூ)

ஊர்: கேரளமாநிலத்தில் உள்ள உசரவிளை என்ற சிற்றூர்.

முருகக் கடவுள் எழுந்தருளியுள்ள பதிகள்தோறும் சென்று வழிபாடு செய்தலை மேற்கொண்டவர்

நூல்; சடாட்சர விருத்தம், இந்நூல் சுப்பிரமணியக் கடவுள் மீது ஹ்ரி முதல் ஃ வரையுள்ள எழுத்துக்களைக் கொண்டு இயற்றப் பெற்றது. 23 செய்யுட்கள் உள்ளன.

## குமாரகவிராய தேசிகர் (19-நூ)

வே. பெ: அழகிய திருச்சிற்றம்பல தேசிகர். இவர் தில்லை கண்ட குலசேகர பாண்டியன் தென்காசியில் நிலைநிறுத்திய சந்திர சேகர குரு வழிமுறையில் நாற்பத்திரண்டாவது தலைமுறையில் வந்தவர்.

நூல்: தென்காசிப்புராணம். இந்நூல் சைவ சமயச் சான்றோர் பலரது வேண்டுகோளுக்கு ஏற்பப் பாடப்பெற்றது வடமொழிப் புராணம் தமிழாக்கம் செய்யப் பெற்றது.

## குமாரகுலசிங்க முதலியார் (19-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் உள்ள தெல்லிப்பழை.

வாழ்ந்தகாலம்: 1826-1884.

இவர் ஆங்கிலத்திலும் தேர்ச்சி பெற்றிருந்தார். நீதி மன்றங்களில் மொழி பெயர்ப்பாளராகப் பணியாற்றினர். இவருடைய மகன் வலிகாமம் வடக்கு மணியகாரர் குமாரகுல சிங்கம் ஆவர்.

நூல்: பதிவிரதை விலாசம், தனிப்பாடல்கள்.

## குமார சரசுவதி (16-நூ)

இவர் விசயநகரப் பேரரசைச் சிறப்பாக ஆண்ட கிருட்டிண தேவராயரின் அவைக்களப் புலவர்.

இவருக்குத் தெலுங்கு, கன்னடம், இந்துஸ்தானி, வடமொழி முதலிய பல மொழிகளில் பயிற்சி உண்டு. கிருட்டிண தேவராயர் ஒட்டிர தேசத்து அரசனாகிய பிரதாருத்திரனை வென்று அவனுடைய மகளை மணந்தார். அப்பொழுது ஒட்டிர அரசன் மேல்பெற்ற வெற்றியினையும், அவன் பெண்ணையும் குறிக்கும் படியாகச் சிலேடையில் ஒரு செய்யுள் இயற்றினார், பின்பு ஒருமுறை அவருடைய படைத்தலைவன் அபிராமன், இவருடைய பன்மொழிப் புலமையை இகழ்ந்தபொழுது இவர் பல மொழிச் சொற்களும் ஒரு வெண்பாவில் அமையுமாறு பாடி அவனை இழிவுபடுத்தினார்.

நூல்: தனிப்பாடல்கள்.

## குமாரசாமி அவதானி (16-நூ)

இவர் அரியநாயக முதலியாரின் மருகர் எனவும், வள்ளல் தன்மை உடையவர் எனவும் தெரியவருகிறது. இப்புலவர் அட்டாவதானம் செய்வதில் வல்லவராக இருந்தமையினால் அவதானி என்று அழைக்கப்பட்டார்.

நூல்: தெய்வச்சிலையார் விறலி விடு தூது இந்நூல், தெய்வச் சிலையார் மீது பாடப்பட்டது.

## குமாரசாமி ஆச்சாரி (19 நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் கமுதக்குடி.

நூல்: இராமலிங்கம்பிள்ளை என்பவர் இயற்றிய 'கந்தபுராண வண்ணம்' என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குமாரசாமி ஆச்சாரியார் சு. ஏ. (19-நூ)

ஊர்: தென்னார்க்காடு மாவட்டம் பரங்கிப்பேட்டை.

தந்தை: ஏகாம்பர ஆச்சாரியசர், தாய், மீனாட்சி அம்மையார் விசுவ பிராமணர்.

பிறந்தநாள்: 3—11—1882.

இவர் யாழ்ப்பாணம் ஸ்ரீநிவாசம்பிள்ளை, கந்தையாபிள்ளை முதலியோரிடம் தமிழ் கற்றார். காலக்கணிதம், மருத்துவம். சிற்பம் முதலிய கலைகளைத் தன் தந்தையாரிடமே கற்றார். மீன லோசனம் மருத்துவ நிலையம் என்ற பெயரில் ஒரு மருத்துவ மனையை நிறுவி மக்களுக்குப் பணிபுரிந்தார்.

நூல்: மேகமாக என்னும் புட்ப பந்தம், பலதீபிகை, உமா மகேஸ்வர சம்வாதமும் காலச்சக்கர கண்ணாடியும், சாராவளி சட்பஞ்சாசிகா ஓராசாரம், சைமினி சூத்திரம், யோகமஞ்சரி மூலமும் உரையும்.

## குமாரசாமி உபாத்தியாயர் (19-நூ)

ஊர்: கலவை.

நூல்: இரணிய விலாசம் (1899).

## குமாரசாமி ஓதுவார் (19-நூ)

ஊர்: ஆற்பாக்கம்.

நூல்: ஐயாத்துரை ஞானியார் என்பவர் இயற்றிய சிவகாமி யம்மை சதகம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்,

## குமாரசாமிக் குருக்கள் 1. (          )

நூல்: சிவபூசை விளக்கம், சிரார்த்த தீபிகை, சௌரசாந்திர மாசமும் விரதங்களும்.

## குமாரசாமித் தம்பிரான் (19-நூ)

ஊர்: பாண்டிய நாட்டில் உள்ள வண்டானம்; சைவவேளாளர்.

இவர் திருவாவடுதுறை ஆதினத்தில் பதினாறுவது பட்டத் தில் வீற்றிருந்த சுப்பிரமணிய தேசிகரிடம் தீக்கையும் துறவுத்

பெற்றவர். இவர் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்தார். பிற்காலத்தில் இவர் திருப்பனந்தாள் காசிமடத் தலைவராக அமர்ந்திருந்தார். யாழ்ப்பாணம் வடகோவைச் சபாபதி நாவலரைக் கொண்டு வடமொழியில் இருந்த சிவகர்ணமிர்தம் என்ற நூலைத் தமிழாக்கம் செய்யச் செய்தார்.

**நூல்:** சிவஞான முனிவர் மீது இயற்றிய பாடல்கள்.

### குமாரசாமி தேசிகர் 1 (1 9-நூ)

**ஊர்:** செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள கல்பாக்கம்.

**நூல்:** ஏகாம்பரநாதர் யமகக் கலித்துறை யந்தாதி.

### குமாரசாமி தேசிகர் 2 (17-நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்.

இவர் சிவப்பிரகாசர், கருணைப்பிரகாசர், வேலைப்பிரகாசர் ஆகியோரின் தந்தையாவர்.

**நூல்:** தனிப்பாடல்கள்,

### குமாரசாமி தேசிகர் 3

**ஊர்:** காஞ்சிபுரம்.

**நூல்:** நைடதம் - உரை, திருவாதவூரர் புராணம் - உரை.

### குமாரசாமி தேசிகர் சிவ. சு. (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டத்தில் ஒட்டப்பிடாரம்.

**நூல்:** பார்வதியம்மன் திருக்கலியாண மகிமை, திருவுரு அட்ட பந்தன சதகம்.

### குமாரசாமிப் பண்டிதர் (20-நூ)

**வாழ்விடம்:** வடஆர்க்காடு மாவட்டம். திருப்பத்தூர்.

இவர் திருப்புத்தூர் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். அவ்வூர் சொருபாநந்த சபையில் புலவராகவும் இருந்து பணிபுரிந்துள்ளார்.

நூல்: குடியேற்ற நல்லூர்ப் புராணம். இப்புராணம் 614 செய்யுட்களில் அமைந்துள்ளது.

## குமாரசாமிப் பிள்ளை 1 (20-நூ)

ஊர்: பவானி.

நூல்: பவானி பதிற்றுப்பத்தந்தாதி.

## குமாரசாமிப் பிள்ளை 2 (19-நூ)

ஊர்: சோழநாட்டில் உள்ள வேதாரணியத்திற்கு அண்மையில் உள்ள குறுக்கை.

நூல்: ஆறுமுகநாவலர் சேதுபுராணத்தை அச்சிட்டு வெளிப்படுத்தியபோது வழங்கிய சிறப்புப்பாயிரம்,

## குமாரசாமிப் பிள்ளை 3 (20-நூ)

ஊர்: புத்தேரி.

நூல்: சங்கரநாராயண பாரதியார் என்பவர் இயற்றிய கன்னியாகுமரி பகவதியம்மன் பதிகம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குமாரசாமிப்பிள்ளை 4 (20-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள மருதவனம். அதிவீரராமன் பட்டினத்தில் இருந்த புலிக்குட்டிக் கவிராயரிடத்தில் தமிழ் நூற்களைக் கற்றார்.

நூல்: மருதவன புராணம், தனிப்பாடல்கள்.

## குமாரசாமிப் புலவர் அ. (20-நூ)

ஊர்: ஈழநாட்டில் சுன்னாகம்.

தந்தை: உடுவில் முத்துக்குமார கவிராயர் மரபிலேவந்த அம்பலவாணப்பிள்ளை.

வாழ்ந்த காலம்: கி. பி. 1850-1922.

இவர் ஆங்கிலம், தமிழ், வடமொழி ஆகிய மூன்றிலும் தேர்ச்சி உடையவர். முருகேச பண்டிதரிடத்தில் தமிழும், நாகநாதபண்டிதரிடத்தில் வடமொழியும் கற்றுக் கொண்டார். சி. வை. தாமோதரம்பிள்ளை ஏழாலை என்னும் ஊரில் நிறுவிய தமிழ்ப் பள்ளியில் இவர் ஆசிரியராகவும், தலைமை ஆசிரியராகவும், பணியாற்றினர். பின்னர் யாழ்ப்பாணத்தில் வள்ளுவர் பண்ணையில் ஆறுமுக நாவலரால் நிறுவப்பட்ட சைவப்பிரகாச வித்தியாசாலையில் தலைமை ஆசிரியராகவும் பணிபுரிந்தார். அக்கல்விக் கூடத்தில் தலைவராக இருந்த த. கைலாச பிள்ளை ஒரு தமிழ்ச் சங்கத்தினை நிறுவினர். அதில் இவர் தலைமைத் தமிழாசிரியராக இருந்து மாணவர்களுக்குத் தமிழ் கற்றுக் கொடுத்தார். இடையிலே சிறிது காலம் தனனுடைய வீட்டில் இருந்தும் பாடம் சொல்லி வந்தார். இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தை நிறுவிய பாண்டித்துரைத் தேவரால் மதிக்கப் பெற்றவர். கு கதிரைவேற்பிள்ளை தமிழ்ப் பேரகராதியினைத் தொகுத்த காலத்தில் இவர் அவருக்கு உதவியாக இருந்தார். சென்னை அரசாங்கம் தமிழ்ப் புலவர்களைக் கூட்டி சாண்ட்லர் எனபவர் தலைமையில் ஒரு பேரகராதியினை வெளியிட விரும்பிற்று, அத்தலைவர் இவருடைய அரிய கருத்துக்களையும் இவர் அச்சிடும் நோக்கமாக எழுதிவைத்திருந்த ஓர் அகராதிப் படியினையும் பெற்றுக் கொண்டார்.

நூல்: தமிழ்ப்புலவர் சரிதம், வதுளைக் கதிரேசர் ஊஞ்சற் பதிகம் நகுலேசுவரர் ஊஞ்சல், துணைவைப்பதிகம், தென்கோவை, வெள்ளெருவை விநாயகர் ஊஞ்சற் பதிகம், ஏழாலை அத்தியடி விநாயகர் ஊஞ்சற்பதிகம், மிலேச்சமத விகற்பக் கும்மி, தமிழ்ப் புலவர் சரித்திரம், சிசுபால சரிதம், வினைப்பகுபத விளக்கம், இதோபதேசம், இலக்கியச் சொல்லகராதி, சிவகோத்திரக்கவித்

திரட்டு, இரகுவம்ச சரிதாமிர்தம், ஏகவிருத்த பாரதாதி, மாணவப்பதிகம், இலக்கணச் சந்திரிகை, கலசைச் சிலேடை வெண்பா அரும்பதவுரை, கம்பராமாயணம்-பாலகாண்டம்-அரும்பதவுரை, நீதிநெறிவிளக்கம்-புத்துரை, யாப்பருள், கலக் காரிகை-புத்துரை, சூடாமணி நிகண்டு-முதலாவது இரண்டாவது தொகுதிகள் சொற்பொருள். மேலும் இவர் மேகதூதக் காரிகை, இராமோதத்தம், சாணக்கிய நீதிவெண்பா முதலிய நூற்களை வடமொழியிலிருந்து மொழிபெயர்த்துள்ளார். தனிப் பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

தமிழ்ப்புலவர் சரிதம் ஏறத்தாழ 400 புலவர்களுடைய வரலாற்றினைக் கூறுகிறது. அகர வரிசையில் அமைந்துள்ளது.

## குமாரசாமிப் புலவர் வ. (20-நூ)

வே. பெ: கோவிந்தப்பிள்ளை. சி.பெ. இலக்கணக் கொத்தர்.

ஊர்: யாழ்ப்பாணத்தில் புலோலியூர்.

தந்தை: வல்லிபுரநாதபிள்ளை.

இவரும், இவருடைய தங்கை பார்வதி அம்மையாரும் உடுப்பிட்டி சிவசம்புப் புலவரிடம் தமிழ் கற்றனர். இளமையிலேயே இவருக்கு இலக்கணத்தில் அதிக ஈடுபாடு உண்டு. பொதுமக்களிடம் பேசும்போதும் இலக்கணப் பிழையின்றிப் பேசிவந்தமையால் இவரை 'இலக்கணக் கொத்தர்' என்று அழைத்தனர். இவருக்கு வடமொழியிலும் நல்ல பயிற்சி உண்டு. இவர் வண்ணரப் பண்ணையில் உள்ள இந்துக் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றினர்.

நூல்: நன்னூல் காண்டிகை உரை விளக்கம். வில்லி பாரதத்தில் சூதுபோர்ச் சருக்கம் முதலிய பல சருக்கங்களுக்கு எழுதிய உரை.

## குமாரசாமி முதலியார்-1 ( )

நூல்: மதனலீலாவதி.

## குமாரசாமி முதலியார்-2

ஊர்: ஸ்ரீவில்லிபுத்தூர் கோட்டத்தைச் சேர்ந்த குன்னூர்.

தந்தை: பழநியப்ப முதலியார்.

வாழ்ந்த காலம்: கி.பி, 1850-31-12-1935.

இவர் குடும்பத்தின் செல்வப் பெருக்குக் காரணமாக பெரியவீடு என்ற பட்டம் இவரது குடும்பத்தாருக்கு உண்டு. தமிழ்ப் புலவர்களைப் போற்றும் பண்பினர். இசையுடன் இனிமையாகச் செய்யுள்பாடும் ஆற்றல்உடையவர், மாவட்டக் கழகம், கோட்டக் கழகம் ஆகியவைகளில் உறுப்பினராக இருந்துள்ளார் இவர் வெள்ளகால் சுப்பிரமணிய முதலியாருக்கு மைத்துனர் உறவினர்.

நூல்: தனிப்பாடல்கள். இப்பாடல்கள் ஊற்றுமலைப் பெருநிலக் கிழார் மீது பாடப்பெற்றவை. தனிச் செய்யுட் சிந்தாமணியில் காணப்படுகின்றன.

## குமாரசாமி முதலியார்-3 (19-நூ)

ஊர்: சேலம்

தந்தை: அருணாசல முதலியார், தாய்: மீனாட்சியம்மாள்.
இவருடைய தந்தையார் சென்னையை அடுத்த குன்றத்தூரில் பிறந்தவராய் இருப்பினும் சேலத்திலேயே தங்கினார். அங்கு இவர் கி. பி. 1803ஆம் ஆண்டில் பிறந்தார்.

இவர் இளமையில் அத்தப்ப உபாத்தியரிடம் கல்விகற்றார். சுந்தரமய்யர், இராம கிருட்டிணய்யர் ஆகியோர் இவருக்கு இசை கற்பித்த ஆசிரியர்கள்.

இவர் அரசாங்கத்தில் எழுத்தராகப் பணியாற்றினார் பின்னர் சவுக்கைத்தாரராகவும் பணிபுரிந்துள்ளார். அரசாங்க அலுவலர் ஆகையால் பல ஊர்களுக்கு மாற்றப்பட்டார். ஆங்காங்குள்ள கடவுளர் மீது இவர் பல இசைப்பாடல்கள் பாடியுள்ளார்.

நூல்: கந்தபுராண கீர்த்தனை, சுவாமிமலை, சுவாமிநாதப் பதிகம், சுப்பிரமண்யர் லாலி சுப்பிரமண்யர் பதிகம், தர்ம சம்வர்த்தனி கீர்த்தனை, அறம் வளர்த்த நாயகி கீர்த்தனம், தண்டாயுதக் கடவுள் பஞ்சரத்ன மாலை, பழனிமும்மணிமாலை, இரட்டை விநாயகர் கீர்த்தனை, மூல விநாயகர் கீர்த்தனை, சோமசுந்தரக் கடவுள் பதிகம், திருப்பரங்குன்றம் முருகர் பதிகம், தண்டாயுத பாணி கலித்துறைப் பதிகம், தண்டாயுதபாணி ஒருபா ஒரு பஃது, பெரியநாயகி அம்மன் கும்மி, பழனியாண்டவர் சதகம், பழனியாண்டவர் வண்ணம்.

## குமாரசாமி முதலியார்-4 (  )

ஊர்: திருப்புத்தூர்.

தந்தை: கந்தப்ப முதலியார், செங்குந்தர்.

நூல்: திருப்புத்தூர் புராணம், செங்குந்தர் வேற்பதிகம்.

திருப்புத்தூர்ப் புராணம் 411 பாடல்களைக் கொண்டது. செங்குந்தர் வேற்பதிகம, செங்குந்தர்களின் சிறப்பையும், அவர்களுடைய வேலின் சிறப்பையும் விளக்குவது.

## குமாரசாமி முதலியார்-5 (  )

ஊர்: பழுவூர். இவர் வடமொழிப்பயிற்சி உடையவர்.

நூல், திருத்தவத்துறைப் புராணம். திருத்தவத்துறையென்பது இப்பொழுது லால்குடி என்று வழங்கும் ஊருக்கு மறுபெயராகும். இப்புராணம் 18 சருக்கங்களையும, 768 பாடல்களையும கொண்டது.
வடமொழிப் புராணத்தை அடிப்படையாகக் கொண்டது.

## குமாரசாமி முதலியார்-6 (  )

ஊர்: புதுச்சேரி.

நூல்: தியாகராசக் கவிராயர் என்பவர் இயற்றிய 'திருவாலங் காட்டுப் புராணத்தின்' உரையைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## குமாரசாமி முதலியார்-7 (19-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த உடுப்பிட்டியில் உள்ள வல்லு வெட்டி.

தந்தை: கதிர்காம முதலியார்.

தாய்: வள்ளியம்மை.

வாழ்ந்த காலம்: 1791—1874.

இவர், ச. குமாரசாமி முதலியாரின் மருமகன் ஆவர். இவருடைய மனைவியார் சிவகாமிப் பிள்ளை. இவருடைய இளையமகன் தமிழ்ப் பேரகராதியை ஆக்கிய கதிரைவேற்பிள்ளை ஆவர். இவர் தம் தாய் மாமனாகிய முத்துக்குமாரு முதலி யாரிடம் கல்வி கற்றார்.

நூல்: அருளம்பலக் கோவை, சீருவிற் சுப்பிரமணியர் பதிகம், மூவாய்ச் சித்தி விநாயகர் ஊஞ்சல், நல்லைக்கலித்துறை, கந்த வனநாதர் ஊஞ்சல், இந்திர குமார நாடகம்.

## குமாரசாமி முதலியார்-கோ. (19-நூ)

ஊர்: தொண்டைநாடு. பாண்டிய நாட்டில் தங்கி இருந்தார்.

தந்தை: கோபால கிருட்டிண முதலியார்.

நூல்: வேந்தன்பட்டி என்னும் ஊரில் எழுந்தருளிய விநாயகக் கடவுள் மீது அந்தாதி. இவ் அந்தாதி 100 பாடல்களைக் கொண்டது.

## குமாரசாமி முனிவர் (19-நூ)

வாழ்விடம்: திருவண்ணாமலை.

நூல்: திருவண்ணாமலை ஆதீனத்தின் பெரிய குருமூர்த்தியாக இருந்த தெய்வசிகாமணித் தேசிகர்மீது தேவசிகாமணி தேசிகர் ஞானவந்தாதி (1887) தேவசிகாமணி தேசிகர் நான்மணிமாலை (1887).

தேவசிகாமணி தேசிகர் ஞானவந்தாதி என்னும் நூல் 101 செய்யுட்களைக் கொண்டது; தெய்வசிகாமணி தேசிகரது பெருமையினைக் கூறுவது; நான்மணிமாலையும் இதனைப் போன்றதே.

## குமாரசாமியார் 1 (17-நூ)

ஊர்: பழுவூர்.

பெருந்தொகை 1945ஆம் செய்யுள் தலைப்பில் இவர் சிவப் பிரகாசர் முதல் மூவர்க்கும் தந்தை என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

நூல்: திருத்தவத்துறை புராணம், பெருந்தொகை செய்யுள் எண் 1945.

திருத்தவத்துறை புராணம். திருத்தவத்துறை மகாத்மியத்தைக் கூறுவது. திருத்தவத்துறை என்பது இந்நாளில் 'லால்குடி' என வழங்கப் படுகின்றது.

## குமாரசாமியார்–2 ( )

நூல்: சிங்கீசுவர சுவாமி பாரிசாத நாடகம். இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் ஓலைச்சுவடியாக உள்ளது.

## குமாரசிங்க முதலியார் (19-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் மாந்தோட்டையைச் சேர்ந்த நாவற்குழி; கிறித்தவர்.

இலங்கை அரசாங்கம் கி. பி. 1800 இல் விதித்த ஆபரண வரியை எதிர்த்து இவர் கிளர்ச்சி செய்தமையால் அரசாங்கத்தால் சவுக்கடித் தண்டனை கொடுக்கப் பெற்றார். தண்டனை பெற்ற காலத்தில் வலியைப் பொறுத்துக் கொள்ளு மாறு செய்ய வேண்டும் என்று கன்னிமேரி மீது பல பாடல்கள் இயற்றினர். இப்பாடல்கள் இன்றும் மர்ந்தோட்டைப் பகுதியில் உள்ள கத்தோலிக்கக் கோவில்களில் பாடப் பெறுகின்றன.

நூல்: தனிப்பாடல்கள்.

## குமாரசூரியப் பிள்ளை (20-நூ)

ஊர்: ஈழ நாட்டில் உடுப்பிட்டி.

தந்தை: மயில்வாகனப்பிள்ளை.

நூல்: சிவராத்திரி புராணம்—பதவுரை. சிவராத்திரி புராணம். வரத பண்டிதர் என்பவரால் இயற்றப்பட்டது.

## குமாரசேனாசிரியர் ( )

நூல்: குமாரசேனாசிரியர் கோவை. இந்நூலினைப் பற்றி யாப் பருங்கல விருத்தியுரையில் குறிப்பு உள்ளது.

## குமார தேசிகர் ( 19- நூ)

வாழ்விடம்: காஞ்சிபுரம்.

நூல்: காஞ்சிபுரம் வழக்கறுத்த நாதர் பதிற்றுப்பத்தந்தாதி.

## குமார தேவ சாமிகள் (18-நூ)

வாழ்விடம்: விருத்தாசலம்; வீர சைவர்.

இவர் கன்னட நாட்டினைச் சேர்ந்தவர்; அரச குடும்பத்தில் பிறந்தவர்; துறவு பூண்டு விருத்தாச்சலத்தில் தங்கி வீடு பேற்றினை அடைந்தார்.

இவர் அரச குடும்பத்தில் பிறந்து மனைவி முதலியோரைத் துறந்து தமிழ்நாடு வந்து பேரையூரில் வாழ்ந்த சாந்தலிங்க அடிகளிடம் அறிவுரை பெற்றார்.

ஆசிரியர் இவரை மகாராஜா என்று பெயரிட்டு அழைத்து விருத்தாசலக் செல்லுமாறு பணிக்க அவ்வாறே இவர் அங்கு சென்று ஓர் அரசமரத்தடியில் தங்கிப்பல சித்துக்களைச் செய்தார். திருப்போரூர் சந்நதி முறை முதலிய நூல்களை இயற்றிய திருப்போரூர் சிதம்பர சிவாமிகள், ரெட்டி சிதம்பர சாமிகள்

ஆகிய இருவருக்கும் அருளுரைச் செய்து அவர்களின் ஞான குருவாக விளங்கினர். இவர் விருத்தாசலத்தில் பழமலைநாதர் கோயிலில் பெரிய நாயகி அம்மன் சந்நதிக்கு முன் உள்ள மண்டபம் கட்டுவதற்குக் காரணமாக இருந்தார். சிவாத்து வைத சிவஞானக்குரவராய் விருத்தாசலத்தில் இறைவனடி சேர்ந்தார், ரெட்டி சிதம்பர அடிகள் இவர் பெயரால் கோயில் மடம் முதலியவை கட்டியுள்ளார்.

நூல்: அத்துவைத உண்மை, விஞ்ஞான சாரம், பிரமாநுபூதி விளக்கம், மகாராஜா துறவு, ஆகமநெறிஅகவல், பிரமாநுபவ அகவல், வேதாந்த சதாவத்தைக் கட்டளை, வேதாந்த தச காரியக் கட்டளை, ஞான அம்மானை, பிரமசித்தி அகவல், உப தேச சித்தாந்தக் கட்டளை, சிவதரிசன அகவல், சிவசமரச வாத அகவல், சுத்தசாதகம், சகசநிட்டை, வேதநெறி அகவல் என்பன.

திருவாதவூரர் புராணத்துக்கு உரையும், சாத்திரக் கோவை என்னும் நூலையும் இவர் எழுதினர் என்று கூறுவர்.

## குமாரதேவ வள்ளலார் ( )

நூல்: கந்தசாதகம்.

## குமார பாரதியார் ( )

ஊர்: புதுச்சேரி,

நூல். திருத்தொண்டர்மாலை, சரவண தேசிகர் தோத்திரம்.

திருத்தொண்டர்மாலை என்னும நூல் வெண்பாக்களால் ஆகியது, வெண்பாவின் முன் இரண்டு அடிகளில் திருத் தொண்டர் வரலாற்றுக் குறிப்பும், பின்னிரண்டு அடிகளில் திருக்குறளும் இடம் பெற்றுள்ளன. இந்நூல் உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது.

## குமாரமலை மருந்தர் (     )

இவர், பச்சைகந்த தேசிகர் ஆதினத்தைச் சேர்ந்தவர்.

நூல்: திருத்தினை நகர்ப்புராணம். இப்புராணம் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் ஓலைச் சுவடியாகவுள்ளது.

## குமாரவிசயகிரிவேலச் சின்னோபயன் (18-நூ)

தந்தை; விசயகிரி வேலச் சின்னோபையன்;

இவர் மதுரை மாவட்டத்தில் உள்ள பழநிப் பெருநிலப் பகுதியின் தலைவர்.

வையாவிக்கோ பெரும் பேகன் மரபினர் ஆண்ட வையாபுரிநாடு இச்சின்னோபையன் மரபினரால் கி. பி. 16, 17, 18ஆம் நூற்றுண்டுகளில் ஆளப்பட்டது இப்பகுதி கொங்குநாட்டில் 24 பிரிவுகளில் ஒன்ருகும். பழநிக்கு விசயகிரி என்ற ஒரு பெயர் உண்டு. இப்பெருநிலக் கிழாரின் குல தெய்வம் சின்னோவன் என்பதாகும். அதனுல் இம் மரபினர் விசயகிரி என்ற அடைமொழியைத் தம் பெயருக்கு முன்னும் சின்னோபையன் என்னும் பெயரைத் தம் பெயருக்குப் பின்னும் வைத்துக் கொள்வர், 'சின்னோபலையன்' என்பது 'சினனோபையன்' என மருவிற்று.

நூல்: வையாபுரிப்பள்ளு. இந்நூல் இவரது தந்தையாரைச் சிறப்பித்துப் பாடப்பெற்றது.

## குமாரவேலு முதலியார் (19-நூ)

ஊர்: புதுவை.

இவர் சென்னை சீரங்கபட்டாம் சுப்பராய முதலியார் தெருவில் பள்ளிக்கூடம் வைத்துப் பழங்கால முறையில் மாணவர்கட்குக் கல்வி கற்பித்தவர். செய்யுள் இயற்றுவதில் வல்லவர்.

பொன்னுசாமித் தேவர் சேதுபுராணம், திருக்குறள் பரிமேலழகர் உரை, திருக்கோவையார் உரை முதலிய நூல்களை அச்சிட்டு வழங்கிய போது அவருக்குச் சில செய்யுட்களை எழுதி வேண்டிய நூல்களைப் பெற்றுர்.

நூல்: தில்லை வெண்பாமாலை.

**குமுழி ஞாழலார் நப்பசலையார்** (சங்ககாலம்)

நூல்: அகநானூறு 160ஆம் பாட்டு.

**குர்ட்ஜ் சாத்திரி** ( )

நூல்: 'பரிசுத்த சாத்திரம்' முதற்பங்கு பழைய ஏற்பாட்டின் சரித்திரம் (1869). இந்நூலின் முதற்பங்கில் பழைய ஏற்பாட்டின் வரலாறு கூறப்பட்டுள்ளது, ஜெர்மன் மொழியில் எழுதப்பட்ட நூலின் தமிழாக்கம் ஆகும். இது ஏழு கால வகுப்புக்களைக் உடையது.

**குரவலிங்கர்** ( )

நூல்: திருவிடைக்கழித் தலபுராணம் இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் ஒலைச் சுவடியாக உள்ளது.

**குருகைப் பெருமாள் கவிராயர்** (16-நூ)

வே. பெ: சடையன்.

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் ஆழ்வார் திருநகரி என்றழைக்கப் பெறும் திருக்குருகை.

தந்தை: திருக்குருகை பெருமாள் கவிராயர்; வேளாளர்,

இவர் மரபினர் வேளாளராயினும் வாணிகம் செய்து வந்தனர். இவருடைய முன்னோர்கள் நல்ல தமிழ்ப் புலமையும் பெற்றிருந்ததனுல் திருக்குருகை பெருமாள்சந்நிதி ஆஸ்தானப்

புலவராய் இருந்தனர். அப்பதவியைப் பெறும் பொழுது ஒவ்வொருவருடைய இயற்பெயரும் மறைந்து திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்று அழைக்கப் பெறுவர். இவர் திருக் குருகூர் பெருமாள் கவிராயர் பெருமாள் என்றும் அழைக்கப் பெற்றார்.

இவர் தமிழ் நூல்களைத் தம் தந்தையாரிடமே கற்றார். வைணவ சமய நூல்களைத் திருக்குருகூர் எம்பெருமானார் சந்நிதி சீயர் பரம்பரையில் திருப்பதி சீனிவாச சீயர் சாமிகளிடம் கற்றுத் தெளிந்தார், அவருக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் தாம்பாடிய மாறனலங்காரத்தில் அவரை இரண்டு இடங்களில் பாடியுள்ளார்.

இவருடைய தமிழ்ப்புலமையினைக் கண்டவர்கள் இவரைச் சங்கப் புலவராகவே கருதுவர். மாணவர்களுக்குப் பாடம் சொல்லியும் பழைய ஏட்டுச் சுவடிகளைச் சேகரித்தும் வந்தார், பிற்காலத்தில் இவருடைய குடும்பத்தாரிடமிருந்து சாமிநாத ஐயர் போன்றோர் பல ஏட்டுச் சுவடிகளைப் பெற்று வெளியிட்டனர். இவர் வழி முறையினரிடமிருந்து பெற்ற ஏட்டுச் சுவடிகள் பிழைகளில்லாமலும் (திருத்தமுடையனவாகவும்) நல்ல பாடங்களைக் கொண்டனவாகவும் இருந்தன.

நூல்: குருகாமான்மியம், மாறனகப்பொருள், திருப்பதிக்கோவை மாறனலங்காரம், தம்பெருமாள் மும்மணிக்கோவை, மாறன் கிளவிமணிமாலை, மாறன் பாப்பாவினம்.

குருகாமான்மியம்: இது வடமொழியிலுள்ள குருகாமான்மியம் என்னும் நூலின் வழி நூலாக எழுதப் பெற்றது. ஆதிநாதப் பட்டர் வேண்டுகோளுக்கு இணங்க இவர் கி. பி. 1548இல் இந்நூலினை இயற்றினார். குருகூரின் சிறப்பினைக் கூறும் காப்பியம். பல சருக்கங்களைக் கொண்டது.

மாறனகப்பொருள்: இது தொல்காப்பியத்தின் பொருளதிகாரம் செம்மையாக விளக்குதற் பொருட்டு இயற்றப்பெற்றது. சில இடங்களில் தொலகாப்பியத்தினின்றும் வேறுபட்டுச் செல் கின்றது. நம்மாழ்வாராகிய சடகோபருக்குமாறன் என்ற ஒரு பெயரும் உண்டு. அந்தபெயரால் இது கி.பி. 1552ல் செய்யப் பெற்றது- அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல்

ஒழிபியல் என்ற ஐந்து இயல்களைக் கொண்டது. 363 நூற் பாக்களையுடையது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் களவியல், வரைவியல், கற்பியல் என்ற மூன்று இயல்களை வெளி யிட்டுள்ளனர்.

திருப்பதிக்கோவை: இந்நூல் திருமாலுவந்தருளிய திருப்பதி களின் மீது அகப்பொருளில் பாடப்பெற்றது. இடையிடையே நம்மாழ்வாரைப் பற்றிய பாடல்கள் உள. மாறனகப்பொருள் என்ற இலக்கணத்திற்கேற்ப எடுத்துக் காட்டுகளைக் காட்ட எழுதப் பெற்றது. 527 கட்டளைக் கலித்துறைகளையுடையது.

மாறனலங்காரம்: இது அணிவகைகளைக் கூறும் இலக்கண நூலாகும். தண்டியலங்காரத்திற்கு அடுத்த நிலையில வைத்து எண்ணப்படுவது. இந்நூல் நேரடியாக வடமொழியினைப் பின் பற்றிச் செய்யப்பெற்றது அன்று என்றும், தண்டியலங்காரம். தொல்காப்பியம் முதலியவற்றைப் பின்பற்றி எழுந்த நூலென்றுஞ் சொல்வர். இது பாயிரம், பொதுவியல், பொரு ளணியியல், சொலலணியியல், எச்சவியல் என்ற பிரிவுகளை யுடையது. நம்மாழ்வாரிடத்தில் ஆசிரியர் கொண்டிருந்த ஈடுபாடு காரணமாக இந்நூலுக்கு மாறனலங்காரம் என்ற பெயரை வைத்துள்ளார். தண்டியலங்கார ஆசிரியர் போல இலக்கண விதிகளையும் அவற்றை விளக்குகின்ற எடுத்துக் காட்டுச் செய்யுட்களையும் இவரே இயற்றியுள்ளார். இந் நூளில் 64 அணிகள் கூறப்பெற்றுள்ளன. தண்டியலங்காரத்தில் 35 அணிகளே பேசப் பெற்றுள்ளன. பூட்டுவில். இறைச்சிப் பொருள் முதலியவற்றை அணிகளாகக் கூறியுளளார். இலக்கி யங்களிற் காணப்பெறும் சிலபொருள் நயங்களை அடிப்படை யாகக் கொண்டு வலை முதலடுக்கு, இணையெதுகை, உபாயம் முதலிய அணிகளைப் புதிதாகச் சேர்த்துள்ளார். சொல்லணி யியலில் மடக்கணியின் வகையும் 32 சித்திர கவிகளும் கூறப் பெற்றுள்ளன.

இந்நூலிற்கு இவருடைய மாணவர் திருப்பேரை காரி ரத்தினக் கவுராயர் உரை எழுதியுள்ளார். இந்நூலிற்குரிய எடுத்துக் காட்டுச் செய்யுட்களைத் தாம் பாடிய திருக்குருகா மாண்மியம், நம் பெருமாள் மும் மணிக்கோவை, மாறன் கிளவி மாலை என்னும் நூல்களினின்றும் காட்டியுள்ளார்.

நம்பெருமாள் மும்மணிக்கோவை: இந்நூல் ஆழ்வார் மேல் இயற்றப்பெற்றது. மாறனலங்கார மேற்கோளாகக் காட்டப் பெற்றுள்ளது.

மாறன்கிளவிமாலை: இந்நூல் குருகூர்ப்பிரான் மேல் பாடப் பெற்றது. இதிலுள்ள செய்யுட்கள் மாறனலங்காரத்தில் எடுத்துக் காட்டுகளாகக் காட்டப் பெற்றுள்ளன.

மாறன் பாப்பாவினம்:— இந்நூல் செய்யுளியலைக் கூறுவது. முதலில் ஒரு செய்யுளைக் கூறி அது இன்ன செய்யுள் என்று சொல்லி, அச்செய்யுளின் அலங்காரம், பகுதி, துறை முதலிய வற்றைக் கூறுவது. தாம் இயற்றிய வேறு நூல்களிலுள்ள செய்யுட்களுடன் புதிய சில செய்யுட்களையும் இயற்றிச் சேர்த்து இந்நூலை அமைத்துள்ளார். இந்நூலில் நால்வகைப் பாக்கள், அவற்றின் இனங்கள், மருட்பாவகைகள். பரிபாடல் ஆக 140 செய்யுட்கள் காணப்பெறுகின்றன. பரிபாடல் என் னும் நூலிற்குப் பின்னர் யாரும் பாடிய பரிபாடல் நமக்குக் கிடைக்கவில்லை. இந்நூலில் ஐந்து பரிபாடல்கள் பாடிசேர்க்கப் பெற்றுள்ளன.

## குருகை ஐவகுண்டர்

நூல்: இராமாயணச் சிந்து. இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் ஓலைச்சுவடியாக உள்ளது.

## குருகையூர் வைணவப்புலவர் ( )

ஊர்: திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஆழ்வார் திருநகரி.

இவர் திருமாலினைத் தவிர வேறு எந்தக் கடவுளையும் வழி படாத விரதம் உடைய வீர வைணவர்.

## குரு சாஜலபர் ( )

நூல்: திருக்குறள் வசனம்.

### குருசரணலயன்—தி. செ. (20-நூ)

இ. பெ: திருவேங்கடப்பிள்ளை.

ஊர்: சென்னை.

இவர் சாந்தாநந்த அடிகள் என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்றவர்.

நூல்: ஆத்மஞானத்பிகை, இந்நூல் மெய்யறிவுச் செய்திகளைஒன்று திரட்டி இயற்றப் பெற்றது.

### குருசாமி, நா. (19-நூ)

ஊர்: கடம்பந்துறை.

துறவியாக விளங்கிய இவர், திருப்பழனம் என்னும் ஊரினைச் சேர்ந்த நாராயணசாமிகள் என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்ருர்.

நூல்: குருதோத்திரம் (1893). பரிபூரணனந்த கும்மி, பவரோக வைத்தியம்.

குருதோத்திரம் என்னும் நூல் நாராயண குரு சாமிகளைக் குறித்துப் பாடப் பெற்றது. நாராயண குரு சாமிகள் இந் நூலாசிரியரின் ஆசிரியர் ஆவர்; இத்நூல் 10 செய்யுட்களைக் கொண்டது.

### குருசாமி சர்மா வை. (          )

நூல்: பிரேமகலாவத்யம் (1893). இந்நூல் ஒரு புதினமாகும்.

### குருசாமி தாசர் (          )

நூல்: துருவதாசு சரித்திரம் (1869). இந்நூல் துருவனது வரலாற்றினைக் கூறுவது. 46 செய்யுட்களைக் கொண்டது. சிற்சில விருத்தப்பாக்களும் இடையிடையே காணப்படுகின்றன.

## குருசாமி தேசிகர் (  )

நூல்: தில்லைமகாகாளி அம்மன் பேரில் கும்மியும் விருத்தமும் (1890) இந்நூல் 67 செய்யுட்களைக் கொண்டது. தில்லையில் எழுந்தருளியுள்ள காளியம்மனின் புகழினைக் கூறுவது.

## குருசாமிப் பிள்ளை (  )

நூல்: திருக்குறள் முதனினைப்பு (1913).

## குருசாமிப் பிள்ளை மு. (19-நூ)

ஊர்: தஞ்சாவூர். இவர் தமிழாசிரியராகப் பணிபுரிந்துள்ளார்.

நூல்: தம்முடைய உடன் பிறந்தாராகிய ஐயாசாமிப் பிள்ளை என்பவர் இயற்றிய 'தில்லை யமக வந்தாதி-உரையினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குருசாமி பாரதி (20-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் ஸ்ரீவில்லிபுத்தூர்.

நூல்: இராமலிங்கக் கவிராயர் பொ. மீ. என்பவர் மதுரையில் அட்டாவதனம் செய்த பொழுது அவ் அவதானத்தைப் பாராட்டிப் பாடிய செய்யுள்.

## குருசாமி முதலியார் (19-நூ)

ஊர்: கோட்டைப்பட்டினம்.

நூல்: கிருட்டிணசாமி உபாத்தியாயர் என்பவர் இயற்றிய 'பிள்ளைத் தமிழைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குருசாமி முதலியார், நாத சி. (19-நூ)

நூல்: பழனி ஆண்டவர் தோத்திரப்பாமாலை (1889). இந்நூல் 104 வெண்பாக்களைக் கொண்டது. பழனி முருகனைப் புகழ்ந்து பாடுவது.

## குருசாமி முதலியார் மு (19-நூ)

ஊர்: சென்னை.

தந்தை: முத்துக்குமரப்ப முதலியார். இவர் ஆங்கில மொழிப் பயிற்சியும் உடையவர். வனத்துறை ஆய்வாளர் அலுவலகத்தில் தலைமை கணக்கராகப் பணிபுரிந்துள்ளார். தாதசாமிகள் என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்றவர்.

நூல்: பழனியாண்டவர் தோத்திரப்பாமாலை, கற்பு நிலைச் சிறப்பு. பழனியாண்டவர் தோத்திரப் பாமாலை 100 செய்யுட்களைக் கொண்டது.

## குருசுப்பிரமணிய ஐயர் (20-நூ)

ஊர்: திருவரங்கம்.

நூல்: சோமசுந்தரம்பிள்ளை கு. என்பவர் இயற்றிய ஆசாரவிளக்கம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குருஞான சம்பந்தர் (16-நூ)

வே. பெ: தளபதி, ஞானசம்பந்த தேசிகர்.

ஊர்: இராமநாதபுரம் மாவட்டத்தில் வில்லிப்புத்தூர்.

தந்தை: குருபாலன், வேளாளர்,.

இவருடைய இளமைக் காலத்தில் தம் தந்தையாரை இழந்தார். இவருடைய மனம் இல்லறத்தில் ஈடுபடவில்லை. தனக்கு ஞானம் வழங்கும் குருவினை நாடி பல ஊர்களுக்குச் சென்றார். மதுரைக்கு வந்து சிலகாலம் தங்கியிருந்தார். இச் செய்திகளை இவருடைய வரலாற்றினை எழுதிய சிதம்பரநாத முனிவர் 'ஞானப்பிரகாச சாமிகள் மான்மியம்' என்னும் நூலிற் கூறியுள்ளார். இவருடைய வரலாற்றினைத் திருஞானசண்முகத் தம்பிரான், ஸ்ரீமந் குருஞானசம்பந்த தேசிகர்சரித்திர சங்கிரகம் என்னும் நூலாக வெளியிட்டார். அதில் இவருடைய தந்தையார் சுப்பிரமணியப்பிள்ளை, தாயார் மீனாட்சியம்மாள் என்றும், ஞானசம்மந்தரென்பதே இவருடைய இயற்பெயரென்றும், இவர்

பெற்றோர்களுடன் மதுரைக்குச் சென்றார் என்றும், மதுரையிலிருந்து திரும்பும் காலையில் அவர்கள் பலமுறை வேண்டிக்கொள்ளவும் இவர் மதுரையை விட்டு வர மறுத்தாரென்றும் அதனால் இவரை மதுரையில் விட்டுத் தாங்கள் மட்டும் ஊர் வந்தார்களென்றும் காணப்பெறுகின்றது.

மதுரையில் தங்கியிருந்தபொழுது சொக்கலிங்கப் பெருமானுடைய திருவருளால் பொற்றாமரைக் குளத்தில் இவருக்கு ஒரு பெட்டியில் சிவலிங்கம் கிடைத்தது என்பர். அந்த லிங்கம் இன்றும் இவரால் நிறுவப்பெற்ற தருமபுர மடத்தில் வழிபடப் பெறுகின்றது. அவ்விறைவன் கனவில் தோன்றிக் கூற இவர் திருவாரூரிலே வாழும்ஞானப்பிரகாசர், தம்முடைய ஞானாசிரியர் என்பதனை உணர்ந்தார். பின்னர்த் திருவாரூர் சென்று குருவினைக் கண்டார். அவர் இவருடைய பக்குவ நிலையினைக் கண்டு கொண்டார். ஞானசம்பந்தர் என்ற துறவுப் பெயரினைக் கொடுத்து அவர் வழிபட்ட சிவலிங்கத்திற்கு சொக்கலிங்கம் என்ற பெயரினை சூட்டித் தீட்சை செய்வித்தார். சிலகாலம் ஆசிரியரோடு குருஞானசம்பந்தர் உறைந்து வந்தார். ஒரு நாள்ஆசிரியர் இவரை நோக்கிக் காவிரிக் கரையில் மாயூரத்தை அடுத்துள்ள தருமபுரத்திற்குச் சென்று அங்கு மாணவர்கட்கு உபதேசம் செய்து கொண்டிருக்குமாறு கட்டளையிட்டார். ஆசிரியருக்கு இவரைப் பிரிய மனமில்லை. அதனையறிந்து வியாழக்கிழமை தோறும் இவர் திருவாரூக்கு வந்து தம்மைக் கண்டு செல்லுமாறு பணித்தார். அதுபோன்று குருஞானசம்பந்தர் தருமபுரம் சென்று ஒருமடத்தினை நிறுவி ஞானோபதேசம்செய்து கொண்டு வந்தார். இவரால் நிறுவப்பெற்ற மடமே இன்று சிறப்புடன் விளங்கும் தருமபுர மடமாகும்.

நூல்: பண்டாரக் கலித்துறை, சொக்கநாதக் கலித்துறை, சிவபோக சாரம், சொக்நாத வெண்பா, முக்தி நிச்சயம், நவரத்ன மாலை, திரிபதார்த்த தசகாரிய அகவல், பரமானந்த விளக்கம், பேரானந்த சித்தியார் என்ற நூலும் இவரால் எழுதப்பெற்றதென்பர். ஆனால் இதனை இயற்றியவர் வித்தியானந்தர் என்று தெரிகிறது.

பண்டாரக்கலித்துறை, இந்நூல் ஞானப்பிரகாச மாலை எனவும் வழங்கப்பெறும் தம்முடைய ஞானசிரியராம் ஞானப் பிரகாசர் மேலியற்றப் பெற்றன. 36 கலித்துறைகளைக் கொண்டது.

சொக்கநாதக் கலித்துறை: இந்நூல் இவருடைய ஆன் மார்த்தலிங்கமான சொக்கநாதசாமி மேற்பாடப்பெற்றது. 11 கட்டளைக் கலித்துறைகளைக் கொண்டது.

சிவபோக சாரம்: இந்நூல் 139 வெண்பாக்களையுடையது சைவ சித்தாந்தத்தைப் பற்றிப் பேசுவது.

சொக்கநாத வெண்பா: இந்நூல் 100 வெண்பாக்களா லாகியது. ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கநாதப் பெரு மானை முன்னிறுத்திச் சைவசித்தாந்தக் கருத்தினைச் சொல்வது.

முத்தி நிச்சயம்: இந்நூலில் 22 வெண்பாக்கள் உள. தில்லையில் குகை மடத்தில் வாழ்ந்த மறைஞானதேசிகர் ஆன் மானந்தவாதம் என்ற கொள்கையை நிறுவி முத்திநிலை என்ற தொரு நூல் செய்தார். அக்கொள்கையினை மறுத்து சிவபெரு மானுடைய திருவடிகளில் இரண்டறக் கலப்பதே முக்தியெனக் கூறி அவருடைய செய்யுட்களையே சிறிது மாற்றியும், சேர்க்க வேண்டுவனவற்றைச் சேர்த்தும் இந்நூலினை இயற்றினர். இந்த நூலிற்கு வெள்ளியம்பலவாணத் தம்பிரானென்பவர் சிற்றுரை ஒன்றும் பேருரை ஒன்றும் எழுதியுள்ளார்.

நவரத்னமாலை: இந்நூல் இவருடைய ஆசிரியர் மறைந்த காலை பாடப் பெற்றது; 9 கட்டளைக் கலித் துறைகளைக் கொண்டது.

திரிபதார்த்த தசகாரிய அகவல்: இந்நூல் திரிபதார்த்த போதி தசகாரிய அகவல் என்றும் அழைக்கப்பெறும். தத்வரூப முதலாய தசகாரியங்களும் அகவற்பாவில் சொல்லப்பெற் றுள்ளன.

பரமானந்த விளக்கம்: இந்நூல் சைவசித்தாந்தத்தினைக் கூறுவது.

வாழ்விடம்: சிதம்பரம்.

*வாழ்ந்த காலம்: கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.*

இவர் குகை நமச்சிவராயரின் மாணவர். சிதம்பரத்தில் வாழ்ந்து திருப்பெருந்துறையிலே கி. பி. 1607இல் இறைவனடி சேர்ந்தார்.

இவர் தம்முடைய ஆசிரியரின் கட்டளைக் கிணங்கத் திருவண்ணுமலையிலிருந்து சிதம்பரத்திற்கு வந்து சிதம்பரம் கோயிலில் பல திருப்பணிகள் செய்துள்ளார். விசயநகர அரசன் வேங்கடபதி தேவராயர் ஆட்சியில் சிதம்பரம் கோயில் கட்டளை கள் பலவற்றினை இவரை மேற்பார்த்துக் கொள்ளச் சொல்லிய தாகத் தெரிகிறது, குருநமச்சிவாய தேசிகருடைய மடத்தின் தலைவருக்குச் சிதம்பரம்கோயில் திருவிழாவில் பல்லக்கு முதலிய சிறப்புக்கள் செய்ததாகத் தெரிகிறது.

நூல்: சிதம்பரவெண்பா, பரமரகசியமாலை, அண்ணுமலைவெண்பா,

சிதம்பர வெண்பா: இந்நூல் 101 செய்யுட்களைக் கொண்டது. ஒவ்வொரு செய்யுளும் சிதம்பர தேவா என்று முடிகிறது. சிதம்பரத்தில் கோயில் கொண்டருளும் இறைவனை முன்னிலைப்படுத்திக் கூறுவது.

அண்ணுமலை வெண்பா: இது 102 செய்யுட்களைக் கொண் டது. ஒவ்வொரு பாடலும் அண்ணுமலை என்ற சொல்லின் முடிவினைக் கொண்டது. திருவண்ணுமலையில் கோயில் கொண் டிருக்கும் இறைவனைப் பற்றியது.

**குருபாததாசர்** (18-நூ)

இ. பெ; மீனுட்சி சுந்தரக் கவிராயர்; வேளாளர்.

நூல்: குமரேச சதகம். இந்நூல் புதுக்கோட்டையைச் சேர்ந்த புல்வயல் என்னும் ஊரில் எழுந்தருளியிருக்கும் குமரக்கடவுள் மீது இயற்றப் பெற்றுள்ளது. திருப்புல்வயல் குமரேச சதகம், என்றும் இது வழங்கப்பெறும். உலகியல் அறங்கள் அனைத் தையும் தொகுத்து உரைப்பது. ஒவ்வொரு பாடலின் இறுதி

யிலும் மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு மலைமேவு குமரேசனே எனக் குமரேசனைத் துதிக்கும் தொடர் காணப்பெறும். மக்களின் பழக்க வழக்க உலகியல் ஒழுக்கங்களை இதில் காணலாம். கடவுள் வாழ்த்து உட்பட 101 செய்யுட்கள் உள்ளன. இந்நூல் பலபதிப்புக்களாக வெளிவந்துள்ளது.

## குருமூர்த்தி ஐயர் (20-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் வட்டுக்கோட்டை. நல்லூர் த. கைலாசப் பிள்ளை. சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவர் ஆகியோரிடம் கல்வி கற்றார். கண்ணலிங்கேசுவர சுவாமி கோயிலின் தலைவராகப் பணியாற்றியவர்.

நூல்: கந்தபுராணச் சுருக்கம்.

## குருவாசு தேவேந்திர சாமிகள் ( )

நூல்: விவேகசாரம். இந்நூல் சென்னைஅரசுஅரங்க நூல்நிலையத்தில் ஓலைச் சுவடியாக உள்ளது,

## குலசேகர ஆழ்வார் (8-நூ)

வே' பெ: குலசேகரப் பெருமாள்.

இவர் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவர். சேரநாட்டினை ஆண்டு வந்த மரபுகளில் பெருமாள் மரபு என்று ஒன்று உண்டு. அம்மரபில் வந்தஅரசர்களெல்லாம் பெருமாள்என்று அழைக்கப் பெற்றனர். குலசேகரும் அம்மரபில் வந்தாராகையால் குலசேகரப்பெருமாள் என்றழைக்கப் பெற்றார். இவர் திருவஞ்சைக் களத்தில் பிறந்து அங்கிருந்து அரசாண்டு வந்தாரென்பர்.

இவருடைய தந்தையார் திருவிருதரென்றும், இவர் பாண்டியனுடைய மகளை மணந்து கொண்டாரென்றும், இவருக்குத் திடவிரதன் என்ற மகனுண்டென்றும் சொல்வர். இளை என்ற தம்முடைய பெண்ணை எம்பெருமானுக்கே மணஞ்செய்துகொடுத்தார் என்பர். இவர் தம்முயை பகையரசர்களாகிய சோழர்கள், பாண்டியர்கள் முதலியோரைப் புறங்கண்டு வெற்றி பெற்ற செய்தியினைத் தம்முடைய பாசுரங்களிலே கூறுகின்றார். இவர்

தென்பாண்டி நாட்டிலே பிரமதேசம் - மன்னர் கோயிலிலே இறைவனடி சேர்ந்தார்.

இவருக்குத் திருமகள் நாதனிடத்திலே மாறாத அன்பிருந்தது. அவனுடைய அடியார்கள் கூட்டத்திலேயிருந்து அவனுடைய புகழைக் கேட்பதிலும் பேசுவதிலும் மிகுந்த ஈடுபாடு இருந்து வந்தது. ஒருமுறை வால்மீகி இராமாயணக் கதையினை ஒருவர் சொல்லிக் கொண்டு வருகின்ற பொழுது கரண், தூடணன் முதலியோர் பெரும்படையுடன் இராமனுடன் போர் புரிவதற்குச் சென்றார்கள் என்ற செய்தியினைச் சொல்ல, அதனைக்கேட்ட மாத்திரத்தானே தாம் கதை கேட்டுக் கொண்டு வருகின்றோமென்பதையும் மறந்தவராக,இராமபிரானிடத்திலே கொண்ட அளவில்லாத அன்பினாலே இராமபிரானுக்குத் துணையாகச் செல்ல வேண்டும் என்ற ஆர்வமுடையவராகத் தன்னுடைய படைகளையெல்லாம் திரட்டுமாறு கட்டளையிட, அந்நிலையில் கதை கூறுபவர் இராமன் தான் ஒருவனாகவே கரன் முதலியவர்களை அழித்துவிட்டான் என்று சொல்லக் குலசேகரர் தெளிவடைந்தார் என்பர். இக்கதை குலசேகர ஆழ்வாருக்கு இராமபிரானிடத்தினிலே எத்தகைய அன்பிருந்தது என்பதனைக் காட்டுகிறது.

ஆட்சிப் பொறுப்பினையேற்றிருந்த அரசன் அவ்வாட்சியிலே செலுத்த வேண்டிய நேரத்தினைத் திருமாலடியவர்கள் கூட்டத்திலே செலவிடுவதனைக் கண்ட அமைச்சர்கள், ஆழ்வார் வழிபடு தெய்வத்திற்கு அணியும் மணி மாலையினை மறைத்து வைத்தனர். அதனைக் களவாடியவர் அடியார் கூட்டத்திலே ஒருவரென்று குற்றம் சாட்டினர். அடியார்கள் யாரும் அதனைச் செய்யார் என்று கூறி, அங்ஙனம் அவர்கள் செய்யவில்லையென்பதனை மெய்ப்பிப்பதற்காக நல்லபாம்பு இடப்பட்ட குடத்தினுள் கையிட்டார். பாம்பு அவருக்கு ஊறு ஒன்றும் செய்யவில்லை. இந்நிகழ்ச்சிக்குப்பின்னர், தாம் மேலும் அரசு கட்டிலில் இருக்க விரும்பாதவராகத் தம்முடைய மகனுக்கு முடிசூட்டிவிட்டுத் திருவரங்கம் முதலிய திருப்பதிகளுக்குத் திருமகள் நாதனைக் கண் குளிரக் கண்டு வணங்குதற்குச் சென்றார்,

முன்னர்க் கூறியது போல் இவர் சேர நாட்டையாண்ட அரசர்களில் பெருமாள் மரபில் தோன்றியவராகையால் குல

சேகரப் பெருமாள் என்றழைக்கப் பெற்ருர். இவர் பாடிய பாசுரங்கள் பெருமாள் திருமொழி என்றழைக்கப்பெற்றது. இனி, திருமாலுடைய பத்து அவதாரங்களிலே இவருக்கு இராமபிரானுகிய பெரிய பெருமானிடத்திலே ஈடுபாடு அதிகமாயிருந்து இராமரைப் பற்றிய பாடல்கள் பாடியிருப்பதால் இவருடைய திருமொழிக்குப் பெருமாள் திருமொழி என்று பெயர் வந்ததென்பர். இவருடைய பாசுரங்களில் கண்ணனும் அடியார்களும் பேசப் பெறுகின்ருர்களாகையால், இக்காரணம் பற்றி இவருடைய பாசுரங்களுக்குப் பெருமாள் திருமொழி என்று பெயர் வந்தது என்பது பொருந்தாது எனலாம். இவர் பாடிய திருமொழிகள் 10. அவற்றுள் இரண்டாவது, ஐந்தாவது, ஆருவது திருமொழிகள் ஒவ்வொன்றும் பத்துப் பத்துப் பாசுரங்களேயும், மூன்ரும் திருமொழி ஒன்பது பாசுரங்களேயும், எஞ்சிய ஆறு திருமொழிகள் ஒவ்வொன்றும் பதிஞெரு பாசுரங்களேயும் கொண்டுள்ளன. இவருடைய பாசுரங்களேப் பெற்ற பதிகள் திருவரங்கம், திருக்கண்ணபுரம், திருச்சித்திரக்கூடம், வித்துவக்கோடு, திருவேங்கடம், அயோத்தி, திருப்பாற்கடல் என்பர்.

இவருடைய பாசுரங்களில் ‘தேட்டருந்திறல்’ என்று தொடங்கும் பாசுரம் சிறந்ததென்பர். கல்வெட்டொன்றில் தேட்டருந்திறல் கேட்டருளும் பொழுது என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. திருச்சித்திரக்கூடம் என்றழைக்கப்பெறும் சிதம்பரத்தில் எழுந்தருளியுள்ள பெருமாளேப் பாடிய பதிஞெரு பாசுரங்களில், இராமனுடைய பிறப்பிலிருந்து இராவணனேக் கொன்று முடிசூட்டிக் கொள்ளும் வரை நடைபெற்ற சிறப்பு நிகழ்ச்சிகளேச் சொல்லி இராமாயணக் கதையினேயே முதல் ஏழு பாசுரங்களில் கூறுகின்ருர். திருக்கண்ணபுரத்துப் பாசுரங்களே காகுத்தன் தாலாட்டாக அமைத்துள்ளார். ஊனேறு என்று தொடங்கும் திருவேங்கடமுடையானுக்குரிய பத்தில், ஆழ்வார் “நெடியானே, வேங்கடவா நின்கோயிலின் வாசல், அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும், படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பவனே” என்று பாடியுள்ளார், அதனுல் திருமால் உறையும் கோயில்களில் உள்வாயிற்படி குலசேகரன் படி என்றழைக்கப்பெறுகின்றது.

**நூல்: பெருமாள் திருமொழி, இது 105 பாசுரங்களேக் கொண்டது**

வடமொழியில் முகுந்தமாலா என்ற நூலினையும் இயற்றியுள்ளார். சுபத்ரா தனஞ்செயம், தபச்சம்வரணம் என்ற இரு நாடகங்களையும் இயற்றினரென்பர்.

## குலசேகர பாண்டியன் ( )

இவர் பாண்டியர் மரபைச் சேர்ந்தவர்.

நூல்: இலிங்கபுராணம், மதுராபுரி அம்பிகைமாலை.

மதுராபுரி அம்பிகைமாலை(1890), இந்நூல் திருவொற்றியூர் திரிபுரசுந்தரிமாலை,வராகிமாலை என்னும் நூற்களுடன் சேர்ந்து வெளியிடப்பட்டுள்ளது.

இலிங்கபுராணம், வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப் பட்டது. இரண்டு காண்டங்களையும் 154 அத்தியாயங்களையும் 2506 செய்யுட்களையும் கொண்டது.

## குலசேகர வரதுங்க பாண்டியன் ( )

வே. பெ: குலசேகர வரகுல பாண்டியன்.

நூல்: வாயு சங்கிதை (1889), இந்நூல் அதிவீரராம பாண்டியனால் இயற்றப்பெற்றது என்று கொண்டாரும் உண்டு. 1334 செய்யுட்களைக் கொண்டது. வடமொழி சைவபுராணத்தில் உள்ள 12 சங்கிதைகளில் வாயுசங்கிதையின் மொழி பெயர்ப்பு இந்நூலாகும்.

## குலபதியார் ( )

நூல்: திருவண்ணமலையில் உள்ளக் "கமலவர்த்தி" என்று தொடங்கும் வெண்பா.

## குலாம் காதிர் நாவலர் (20-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டத்தில் நாகூர்.

தந்தை: ஆயுர்வேத பாஸ்கர பண்டித வாப்பு ராவுத்தர்.

வாழ்ந்த காலம்: கி. பி. 1833-28—1—1908.

இவருடைய தந்தையார் மருத்துவத்தில் வல்லவர். தமிழிலும் நல்ல தேர்ச்சியுடையவர். நாகூரில் காசுக் கடை ஒன்று வைத்திருந்தார். நாவலரின் பெரிய தந்தையார் பக்கிரி தம்பி சாயபு ஆவர். அவர் இரங்கூனில் வாணிபம் நடத்தியவர். இவர்களுடைய முன்னோர்கள் ஏறத்தாழ 150 ஆண்டுகளுக்கு முன்னர் சேது நாடாகிய இராமநாதபுர மாவட்டத்திலிருந்து நாகூரில் வந்து தங்கினர்.

இளமையில் நாவலரின் தந்தையாரே நாவலருக்குக் கல்வி கற்றுக் கொடுத்தார், இவருடைய தந்தையார் மறைவிற்குப் பின்னர் இவருடைய பெரிய தந்தை பக்கீர் தம்பி சாயபு இவருக்குக் கல்வி கற்றுக் கொடுத்தார். நாகூரில் வாழ்ந்த தமிழ்ப்புலமை பெற்றவரும் இவருடைய தந்தையாரின் தோழரும் புத்தகக்கடை வைத்திருந்தவருமான நாராயண சாமிப் பிள்ளையிடம் தமிழ் நூற்களைக் கற்றார். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையிடம் சைவசித்தாந்த நூற்களைக்கற்றார் இவர் தந்தையாரின் நண்பரான சரவணப் பெருமாளையர் என்ற வழக்கறிஞரிடம் ஆங்கிலம் கற்றார். இளமையிலேயே அரபு மொழியில் தேர்ச்சிபெற்றுத் திருக்குர்ஆனையும்பயின்றிருந்தார்.

இவர் மகதூம்கனி அம்மாளினை மணந்தார். பிள்ளைப்பேறு இல்லாமையினால் அவ்வம்மையாருடைய அனுமதி பெற்று ஆமீரு என்ற பெண்ணை மணந்துகொண்டார். நாவலருடைய 74ஆவது வயதில் அவ்வம்மையார் மூலமாக ஆரிபு என்ற மகன் பிறந்தார்: மகன் பிறந்த பத்தாவது நாளில் தாய் ஆமீரு அம்மையார் காலமானார். ஓராண்டில்நாவலரும் இம்மண்ணுலக வாழ்வினை நீத்தார். இவ் ஆரிபு நாவலர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உறுப்பினராகவும் நாகூர் தர்க்கா வித்வானாகவும் பங்கேற்றவர்.

சேதுபதி மன்னரும், பாண்டித்துரை தேவரும் இவருடைய புலமையையறிந்து போற்றினர். இவர் மலேசியா, இலங்கை முதலிய நாடுகளுக்குச் சென்றுள்ளார். இரங்கூனில் பெருந் திருவுடன் விளங்கிய மதுரைப்பிள்ளை என்பவருக்கு அரசாங்கம் 'ராவ்பஹதூர்' என்ற பட்டத்தினை வழங்கிற்று. அதுபொழுது அவரை வாழ்த்தியும் பாராட்டியும் மதுரைக் கோவை என்னும்

நூலினைப் பாடினர். மதுரைப்பிள்ளை குலாம்காதிரை இரங்கூனுக்கு வரவழைத்து அந்நூலினை அரங்கேற்றச் செய்து பொற்பதக்கமும், பொற்கடியாரமும், ரூபாய் ஆயிரங்கொண்ட பணமுடிப்பும் வழங்கினர். பின்னர் சென்னையில் வேப்பேரியில் ஓர் அவையில் 'நாவலர்' என்ற பட்டமும் வழங்கினர்.

இவரிடம் கல்வி கற்ற பலர் பிற்காலத்தில் சிறந்த புலவர்களாகத் திகழ்ந்தார்கள். மறைமலையடிகள் இவருடைய மாணவர்களில் ஒருவராவர். திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரியின் தமிழாசிரியர், இலக்கணக்கோடரி பிச்சை இபுருகிம் புலவர் இன்னொரு மாணவர். பல புலவர்கள், தாங்கள் பாடிய நூற்களுக்குச் சிறப்புப் பாயிரம் இவரிடத்தில் பெற்றுச் செல்வதுண்டு. இவர் எளிமையான தோற்றமும் வாழ்க்கையும் உடையவர்.

நூல்: மதுரைக்கோவை, நபிநாயக மும்மணிக்கோவை, நாகூர்க் கலம்பகம், ஆரிபு நாயகம், பதாயிக்குக் கலம்பகம், நாகூர்ப் புராணம், கன்ஜுல் கருமாத்து, திருமக்காதிரிபந்தாதி, மதினக் கலம்பகம், பஹறளஷா வசன காவியம், சமுத்திரமாலை, உமறுபாஷாவின் யுத்த சரித்திரம், சீறாப்புராண வசனம், அரபுத் தமிழகராதி, மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவராற்றுப்படை, வித்யா விசாரினி (திங்களிதழ்) பிரபந்தத் திரட்டு, மதுரைக் கோவை, பகுநாத்துக் கலம்பகம், ஆரிபுநாயக வசனகாவியம், சமுத்திர மாலை, தறீக்குல்ஜன்னு—உரை, பிக்ஹுமாலை-உரை, உரை கடிலக நிராகரணம், திருமணிமாலை வசனம், நன்னூல்விளக்கம் பொருத்த விளக்கம்.

## குலாமுகம்மது சாயபு மரைக்காயர் (19-நூ)

நூல்: மீ. அல்லிமரைக்காயர் என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குலோத்துங்க சோழன் (12-நூ)

இவர் தமிழ் நாட்டில் சிறப்புடன் ஆண்ட பிற்கால சோழர்களாகிய விசயலாயன் வழிச் சோழர்களில் ஒருவர்.

தந்தை: விக்கிரமசோழன். இவரை இரண்டாம் குலோத்துங்கன் என்பர்.

இவரையும் இவருடைய தந்தை விக்கிரமனையும், இவருடைய மகன் இராசராசனையும் பற்றி ஒட்டக்கூத்தர் தனித்தனியாக உலாக்கள் பாடியுள்ளார். இம்மூன்று உலாக்களும் சேர்ந்து 'மூவருலா' என்று அழைக்கப்பெறும்.

அவைக்களப்புலவராக விளங்கிய ஒட்டக்கூத்தரிடம் கல்வி பயின்றார். ஒருமுறை இவருடைய அவைக்களத்தில் ஒட்டக்கூத்தர் தம்மை,

'ஆடுங் கடைமணி நாவசையாமல் அகிலமெல்லாம்
நீடுங் குடையைத் தரித்தபிரான்'

என்று பாடிய அளவில் அதற்குமேல் புலவர் பாடாதவாறு குலோத்துங்கன்,

........... ............... இந்நிலத்தில்
பாடும்புலவர் புகழொட்டக்கூத்தன் பதாம் புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென்றே யெனைச் சொல்லுவரே'

என்ற அடிகளைப் பாடித் தன்னுடைய ஆசிரியருக்குச் சிறப்புக் கொடுத்தார் என்பார். இந்நிகழ்ச்சி குலோத்துங்கன் முடிசூடிக் கொள்ளும் காலத்தில் நிகழ்ந்ததென்பர்.

## குவாவங்காஞ்சன் (8 - நூ)

இவர், பெரும்பிடுகு முத்தரையன் சுவரன் மாறனைப்பாடிய பாடல் சாசனங்களில் காணப்படுவதால் இவரது காலம் கி. பி. 8 ஆம் நூற்றாண்டாகும்.

இவரது பெயர் சாசனங்களில் கீழ்க்கூற்றத்துப் பவதாய மங்கலத்து அருளினிலை ஆயின 'குவாவங் காஞ்சன்' எனக் காணப்படுகிறது.

## குழந்தைக் களத்தில் வென்றார் ( )

நூல்: சிவகிரி வெண்பா, பஞ்சாக்ஷர மும்மாலை அந்தாதி.

சிவகிரி வெண்பா (1881) சிவகிரி மலையில் உறையும் முரு

கனுடைய பெருமையைப் புகழ்ந்து கூறுவது;102 செய்யுட்களைக் கொண்டது.

பஞ்சாஷர மும்மாலை அந்தாதி 106 செய்யுட்களைக் கொண்டது. முதல் முப்பத்து நான்கு பாடல்கள் கலித்துறையாகவும், அறுபத்தேழுவரை விருத்தமாகவும், எஞ்சிய பாக்களை யமகமாகவும் அந்தாதித் தொடையில் இயற்றப்பெற்றது. ஒவ்வொரு பாட்டிலும் ‘நமசிவாய’ என்னும் ஐந்தெழுத்தாகிய பஞ்சாட்சரம் இடம் பெற்றுள்ளது.

## குழந்தைக் கவிராயர் (18-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் மிதிலைப்பட்டி.

தந்தை: மங்கைபாகக் கவிராயர்.

வாழ்ந்த காலம்: கி. பி. 18 ஆம் நூற்றுண்டு.

இவருடைய முன்னோர்கள் தொண்டை நாட்டில் உள்ள மாமல்லபுரத்தில் இருந்தவர்கள். முன்னோரில் ஒருவரான சிற்றம்பலக் கவிராயர் என்பவர் வெங்களப்ப நாயக்கர் என்பவர் மீது ஒரு குறவஞ்சி பாடி மிதிலைப் பட்டியை மடப்புறமாகப் பெற்றார். பிறகு அங்கேயே இவர் மரபினர் வாழ்ந்து வருகின்றனர்.

இவரது தந்தையாகிய மங்கைபாகக்கவிராயர் நத்தம் பெருநிலக் கிழாராகிய இம்முடிலிங்கைய நாயகர் மகனார் சொக்கலிங்க நாயக்கர் மீது வருக்கக் கோவை என்னும் நூலைப்பாடி பூசாரிப்பட்டி என்னும் ஊரைப் பெற்றார்.

ஒருமுறை, தாண்டவராயப்பிள்ளை இவருக்கு ஆயிரங்கலம் நெல் நன்கொடை வழங்கியதாகத் தெரிகிறது. இவர் தாண்டவராயப்பிள்ளையின் தமையன் இராமகிருஷ்ணப் பிள்ளையையும், நத்தம் பெருநிலக்கிழாரையும்,புதுக்கோட்டை அரசர் திருமலைத் தொண்டைமானையும் தனிப்பாடல்களால் பாடியுள்ளார்.

ஒருமுறை, இவர் நத்தம் பெருநிலக் கிழாரிடம் சென்று விட்டுத் தம் பல்லக்கில் ஏறி சிங்கம் பிடாரி (சிங்கம்புணரி) என்னும் ஊர் வழியாக வந்தார். அடுத்த ஊருக்குச் செல்ல

எண்ணிய சில அந்தணப் பெண்கள் அப் பல்லக்கைத் தொடர்ந்தனர். பல்லக்குச் சிறிது முந்தவே கள்வர்கள் அந்தணப் பெண்களை வழிமறித்துத் துன்பப்படுத்தி நகைகள் தாலி முதலியவற்றைக் கைப்பற்றினர். துயரம் அடைந்த அப்பெண்டிர் நடந்ததைக் கவிராயரிடம் கூறினர். கவிராயர் அவ்வூரில் உள்ள ஐயனார் மீது 'அண்டர் தொழும்' என்று தொடங்கும் செய்யுளைப் பாடினார். உடனே ஐயனார் அருளால் கள்வர்களுக்குக் கண்பார்வை இல்லாமல் போய்விட்டது என்றும், அவர்கள் அச்சமடைந்து திருடிய நகைகளை அவ்வூர் அதிகாரியிடம் கொடுத்துப் பிழைபொறுக்க வேண்டினர் என்றும் கூறுவர்.

நூல்: மான்விடுதூது, தனிப்பாடல்கள். இது சிவகங்கைச் சமத்தானப் பிரதானியான தாண்டவராயப் பிள்ளை மீது பாடப் பெற்றது.

## குழந்தைச் செட்டியார் (19-நூ)

நூல்: சே. சுந்தர முதலியார் என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குழந்தை சாமிப் பிள்ளை (20-நூ)

நூல்: மு. ஐயாத்துரை பாகவதர் இயற்றிய 'சத்தியவேத சங்கீர்த்தனம்' என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குழந்தை முதலியார் ( )

வாழ்விடம்: குற்றாலம்.

நூல்: இராகவர்ப்பிள்ளைத் தமிழ்.

## குழந்தைவேலு அடிகள் (20-நூ)

இவர், திருச்செந்தூரில் தங்கி முருகப்பெருமானை வழிபட்டு வாழ்ந்தவர். திருவாவடுதுறை ஆதீனத்தில் கல்வி கற்றவர். பலருக்குக் கல்வி கற்பிக்கும் பணியையும் மேற்கொண்டவர்.

நூல்: சண்முகம்பிள்ளை என்பவர் இயற்றிய 'திருவிளையாடற் புராணசங்கிரகம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## குழந்தைவேலுக் கவிராயர் (19-நூ)

ஊர்: புதுச்சேரி.

தந்தை: ரச்சவீரப்பன்.

நூல்: மார்க்கண்டேயபுராணம் (1871).

இந்நூல் பாயிரம் நீங்கலாகப் 10 சருக்கங்களையும் 677 செய்யுட்களையும் கொண்டது. மார்க்கண்டேய முனிவரின் வரலாற்றைக் கூறும் இந்நூலுக்கு வி. கோவிந்தப்பிள்ளை என்பவர் உரை எழுதியுள்ளார்.

## குழந்தைவேலுச் சாமிகள் (20-நூ)

ஊர்: திருவாவடுதுறை.

நூல்: வே. சண்முகம்பிள்ளை இயற்றிய திருவிளையாடற்புராண சங்கிரகம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## குழந்தைவேலுப்பிள்ளை (20-நூ)

ஊர்: விழுப்புரம்.

தந்தை: காத்தப்பெருமாள் பிள்ளை; வேளாளர்.

நூல்: பண்டிதை அசலாம்பிகை அம்மையார் பாடத்தொடங்கிய திருவிடையூர்த் தலபுராணத்தின் இரண்டாவது காண்டத்தைப் பாடி முடித்துள்ளார்.

## குழற்றத்தனார் (சங்ககாலம்)

தத்தன் என்பது இவரது இயற்பெயர். சங்க காலத்தில் பல புலவர்களுக்கு இது இயற்பெயராக இருந்தது. ஆதலின் அவரவர் செய்யும் வெவ்வேறு தொழில் பற்றிய அடைமொழி களால் அவர்கள் பிரித்தறியப் பெற்றனர். குழல் தத்தனார், கணக்காயன் தத்தனார், வண்ணக்கன் தத்தனார் எனவரும் பெயர்கள், தொழிலால் அவர்கள் வேறு பிரித்தறியப் பெற்ற மையை விளக்கும். குழல் என்பது புல்லாங்குழலைக் குறிக்குஞ் சொல்லாக இருத்தல் கூடுமென்று தோன்றுகிறது.

நூல்: குறுந்தொகை 242 ஆம் பாட்டு.

**குளம்பனுர்** (சங்ககாலம்)

ஊர்: குளம்பு.

நூல்: நற்றிணை 288 ஆம் பாட்டு.

**குளம்பாதயனுர்** (சங்ககாலம்)

நூல்: புறநானூறு 253 ஆம் பாட்டு.

**குற்றாலலிங்கம் பிள்ளை** ( )

ஊர்: பாளையங்கோட்டை.

நூல்: சுப்பிரமணியக் கடவுள் பேரிற் செந்திலந்தாதி (1884) இந் நூல் 100 செய்யுட்களைக் கொண்டது. கலித்துறைப் பாக்களை யுடையது.

**குற்றாலலிங்கம் பிள்ளை ஆ** (20-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டத்தில் ஸ்ரீவைகுண்டம் கோட்டத்தில் உள்ள முரப்பநாடு.

நூல்: புண்ணியர் ஆற்றுப்படை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**குறட்டி வரதையன்** ( )

பார்க்க: வரதையன், குறட்டி.

**குறமகள் இளவெயினி** (சங்ககாலம்)

இவர் புறநானூற்றில் ஏறைக்கோனைப் பாடியுள்ளார். ஏறைக்கோனைத் தலைவனுகக் கொண்ட குறமக்களுள் ஒருவராதலின், இளவெயினியார், குறமகள்இளவெயினியார் என குறிக்கப்படுகின்ருர். முதுவெயினியார் அல்லர் என்பது தோன்ற 'இளவெயினி' என்ற பெயர் சிறந்து நிற்கின்றது. நற்றிணைப் புலவர் வரிசையில் இளவெயினனுர். குறமகள் குறி எயினியார்

என்ற பெயர்கள் காணப்படுகின்றன. இவ்விளவெயினியாரே நற்றிணையில் வரும் குறியெயினியாராகலாமென்பதும், புறப் பாட்டு இளமைக் காலத்தும், நற்றிணைப்பாட்டு பிற்காலத்தும் பாடப்பெற்றிருக்கலாமென்பதும் நற்றிணை உரைகாரர் கருத் தாகும்.

நூல்: புறநானூறு 157 ஆம் பாட்டு.

**குறமகள் குறியெயினி** (சங்ககாலம்)

எயினி என்பது இவரது இயற்பெயர். புறநானூற்றில் ஏறைக்கோனைப் பாடிய குறமகள் இளவெயினியாரும் இவரும் ஒருவராக இருக்கலாமென்பது நற்றிணையுரைகாரர் கருத்து.

நூல்: நற்றிணை 357 ஆம் பாட்டு.

**குறியிறையார்** (சங்ககாலம்)

'குறியிறைப் புதல்வர்' என்ற ஒரு தொடரைத் தம் செய்யு ளில் அமைத்துப் பாடியகாரணத்தால் இவர் இப்பெயர்பெற்றார்.

நூல்: குறுந்தொகை 394 ஆம் பாட்டு.

**குறுங்கீரனார்** (சங்ககாலம்)

கீரனார் என்ற பெயர் பெற்ற இருவருள் ஒருவர் நெடிய வராக இருந்தமை பற்றி நெடுங்கீரனார் என்று பெயர் பெற்றார். மற்றொருவர் குறுகிய உருவம் உடையவராக இருந்தமை பற்றி குறுங்கீரனார் எனப்பட்டார்.

நூல்: குறுந்தொகை 382 ஆம் பாட்டு.

**குறுங்குடி மருதனார்** சங்ககாலம்)

ஊர்: குறுங்குடி; இது பாண்டி நாட்டிலுள்ள வைணவத் தலம். இவரது இயற்பெயர் மருதனார்.

நூல்: அகநானூறு 4 குறுந்தொகை 344.

**குறுங்கோழியூர் கிழார்** (சங்ககாலம்)

நூல்: புறநானூறு 17, 20, 22.

**குன்றத்தூரையன்** ( )

நூல்: சிறீவசன பூஷண மீமாம்சா. இந்நூல் மணிப்பிரவாள நடையில் அமைந்தது. சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் ஓலைச் சுவடியாக உள்ளது.

**குன்றம் பூதனார்** (சங்ககாலம்)

இவர் முருகக் கடவுள் பால் பேரன்புடையவர்; தமிழ் மொழியினிடத்து நீங்காத பற்றுக் கொண்டவர். குறிஞ்சித் திணைக்குரிய முதல் கரு உரி என்ற முப்பொருள்களையும் செவ்வனே அமைத்துப் பாடியிருத்தலை நோக்கும் பொழுது இவர் அத்திணையைப் பாடுதலில் வல்லவரென்று தெரிகிறது. குன்றத்தை அழகுறப்பாடியிருத்தலின் இவர் இப்பெயர் பெற்றனர் என்று கருத கிடக்கின்றது.

நூல்: பரிபாடல் 9, 18.

**குன்றன் திருச்சிற்றம்பலமுடையான்** (11-நூ)

இவர் கல்வெட்டினால் அறியப்பெறும் புலவர். கி. பி. 11 ஆம் நூற்றாண்டினர் புதுக்கோட்டையைச் சார்ந்த குளத்தூர்க் கோட்டம் நாங்குப்பட்டி மடத்துக் கோயிலின் பிரகார முகப்பில் ஒரு கல்வெட்டு உள்ளது. அது இராசகேசரி வர்மனான திரி புவன சக்கரவர்த்தி குலோத்துங்க சோழனது (முதலாம் குலோத் துங்கன்) 13-ஆம் ஆட்சி ஆண்டில் வெட்டப்பட்டது. அதில் சோழ நாட்டில் உள்ள உறத்தூர்க் கூற்றத்துப் பையூருடை யான் என்ற தலைவனை, செயங்கொண்ட சோழ மண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்து மருதத்தூரான குன்றன் சிற்றம்பல முடையான் என்ற புலவர் பாடிய செய்தி கூறப் பெற்றுள்ளது. மேலும் அத்தலைவன் தன்னைப் பாடிய இப்புலவனுக்கு இரும் பூதி என்ற சிற்றூரை முற்றூட்டாகக் கொடுத்தான் என்றும் அவ்வூரினைப் புலவர் உறத்தூர்க் கூற்றத்து எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கு நீர்வார்த்தளித்தார் என்றும், இவர்

தொண்டை நாட்டினின்றும் சோழநாட்டில் குடியேறியவர் என்றும் அக்கல் வெட்டால் தெரியவருகிறது. இவர் பாடிய பொருள் நயம் மிக்க வெண்பா ஒன்றும் அக்கல்வெட்டில் காணப்பெறுகிறது.

## குன்றியனார் (சங்ககாலம்)

இவர் மேலைக் கடற்கரைத் தொண்டியைச் சிறப்பித்திருக் கிறபடியால் சேரநாட்டவரென்று தோன்றுகின்றது.

நூல்: அகநானூறு 40, 41. குறுந்தொகை 50, 51, 117, 238 301, 336. நற்றிணை 117, 239,

## குன்றூர் கிழார் மகனார் (சங்ககாலம்)

குன்றூர் என்பது ஒரூர். இவ்வூரினராய குன்றூர் கிழார் பெயர் இன்னதெனத் தெரியவில்லை. இவர், சோழ நாட்டில் போந்தை என்னும் ஊர்க்குரியனாய் விளங்கிய நெடுவேளா-தனால் பரிசு நல்கிச் சிறப்பிக்கப் பெற்றவர்.

நூல்: நற்றிணை, 332, புறநானூறு 338.

## கூகைக் கோழியார் (சங்ககாலம்)

பேராந்தையைக் கூகைக் கோழி என்று சிறப்பித்துரைத்த நயம் பற்றிச் சான்றோர் இவரைக் கூகைக் கோழியார் என வழங்கினர். இதனால் இவருடைய இயற்பெயர் மறைந்து போயிற்று. இவர் பரணர் முதலிய சான்றோரால் மதித்துப் போற்றும் பெருமை பெற்றிருந்தார். ஐயாதி சிறுவெண் தேரை, யார் பாடிய தலைவனையே இவரும் பாடியிருத்தலின் இருவரும் ஒரு காலத்தவர் என்பது விளங்குகிறது.

நூல்: புறநானூறு 364ஆம் பாட்டு.

## கூடலூர் கிழார் (சங்ககாலம்)

ஊர்: மலைநாட்டின்கண்ணதாகிய கூடலூர்; வேளாளர்.

இவர் வான நூலறிவிலும் கணிதத்திலும் வல்லவராகக் கருதப்படுகின்றார். ஐங்குறுநூற்றைத் தொகுத்தவர் இவரே. 'புலத்துறை முற்றிய கூடலூர் கிழார்' என்று ஆன்றோரால் சிறப்பித்துக் கூறப்பெற்றிருத்தலின் இவருடைய பெரும்புலமை நன்கு வெளியாகின்றது.

நூல்: குறுந்தொகை 166, 167. 214. புறநானூறு 229.

**கூடலூர் பல்கண்ணனார்** (சங்ககாலம்)

ஊர்: சோழநாட்டிலுள்ள கூடலூர்.

நூல்: நற்றிணை 200.

**கூபத்துக் குருக்களய்யா** (19-நூ)

ஊர்: திருநெல்வேலி.

நூல்: எட்டயபுரம் கடிகை நமச்சிவாயப்புலவர் இயற்றிய 'வல்லி பரிணயம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**கூவன் மைந்தன்** (சங்ககாலம்)

இராக் காலத்தில் கிணற்றில் விழுந்து விட்ட பசுவின் துயரைக் கண்டு அதனைப் பிறருக்குச் சொல்லும் வண்மையில்லாத ஊமனைத் தன் துயரைப் பிறருக்குச் சொல்லும் வலியின்றி வருத்தும் தலைவிக்கு உவமை கூறியுள்ளார். 'கூவற்குராலரீன் படுதுயர்' என்ற தொடரினால் இவர் கூவன் மைந்தன் எனப் பெயர் பெற்றார்.

நூல்: குறுந்தொகை 224 ஆம் பாட்டு.

**கூழங்கைத் தம்பிரான்** (18-நூ)

ஊர்: காஞ்சிபுரம். வேளாளர்.

வாழ்ந்த காலம்: கி. பி. 18ஆம் நூற்றாண்டு.

தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள திருவத்தூர் மடத்தில்

தம்பிரானாக இருந்து கல்வி கேள்விகளிற் சிறந்து பிறர்க்குப் பாடஞ்சொல்லும் தகுதியினைப்பெற்றார். இவர் சிறந்த முறையில் பாடஞ் சொல்லிக் கொடுத்ததனால் மாணவர்கள் இவர் பால் மிகுந்த அன்புகொண்டனர். இதனால் அம்மடத்திலுள்ள ஏனைத் தம்பிரான்கள் இவர் பால் அழுக்காறு கொண்டனர். இவர்மீது பல குற்றங்களையும் பழியினையும் வீணாகச் சுமத்தினர். இவர் அக் குற்றங்களைச் செய்யவில்லை யென்பதனை மெய்ப்பிக்க வேண்டு மென்றால் பழுக்கக் காய்ச்சிய இரும்பினைத் தன்னுடைய கையில் ஏந்த வேண்டுமென்று அவர்கள் சொல்லினர். தாம் யாதொரு குற்றமும் செய்யவில்லையாகையால் அவ்விரும்பு தன்னை ஏன் சுடப்போகின்றதென்று அத்தம்பிரான்கள் கூறியதனைச் செய்ய இவர் உடன்பட்டுக் கையில் அவ்விரும்பினை ஏந்தினார். இவரு டைய வலக்கை எறிந்து கூழையாகிவிட்டது. அதனால் இவரு டைய இயற்பெயர் யாதென்று தெரியாமல் மறைந்துபோய் கூழங்கைத் தம்பிரான் என்றே அழைக்கப் பெற்றார். பின்னர் இவர் அம்மடத்தினை விடுத்துத் தமிழ் நாட்டில் பல இடங்களுக் கும் சென்று தமிழ் கற்பித்துக் கொண்டு வந்தார்.

பின்னர் யாழ்ப்பாணம் சென்று அங்கு வண்ணார் பண்ணை யில் வாழ்ந்த வைத்தியலிங்கஞ் செட்டியார் என்ற செல்வ ருடைய ஆதரவிலே வாழ்ந்து வந்தார். அவருடைய மக்களுக் கும் பிறருக்கும் தமிழ்க் கல்வியினைக் கற்றுக் கொடுத்தார். இவருடைய ஆழ்ந்த புலமையும், கூர்ந்த அறிவும், பாடஞ் சொல்லிக்கொடுக்கும் ஆற்றலும், ஈழநாடு முழுவதிலும்கொழும்பு வரையிலும் மக்களுக்குத் தெரிய வந்தது. இவர் கொழும்பிலி ருந்த மக்கள் அழைப்பிற்கு ஏற்பப் பலமுறை கொழும்புசென்று அவர்களுக்குத் தமிழறிவு புகட்டி வந்தார். திருவத்தூர் நிகழ்ச்சிக்குப் பின்னர் இவருக்குச் சமயப் பொதுநோக்கு ஏற் பட்டது. கிறித்தவப் பாதிரிமார்களுடன் நெருங்கிப் பழகினார். சமயத் தொடர்பாக அவர்களுடன் விவாதித்தார். அவர்களு டைய வேதமாகிய பைபிளை நன்கு கற்றார். யாழ்ப்பாணத்திலி ருந்த காலத்தில் டச்சு, போர்ச்சுக்கீசிய மொழிகளைக் கற்றுத் தேர்ச்சியடைந்தார். இவரிடம் கல்வி கற்றுச் சிறந்து விளங்கிய மாணவர்களிற்சிலர், யாழ்ப்பாணத்து மாதகல் மயில்வாகனப் புலவர், ஆறுமுகநாவலரின் தந்தை ப. கந்தப்பப்பிள்ளை ஆகி யோராவர். இவர் திருவாரூர் மடத்தில் தம்பிரானாக இருந்தார்

என்றும், பிற்காலத்தில் யாழ்ப்பாணத்தில் கிறித்தவமதத்தினைத் தழுவினர் என்றும் இவருடைய வரலாறு ஒரு நூலிற் காணப் பெறுகின்றது. இது பொருத்தமானதாகத் தோன்றவில்லை. இவர் கி. பி. 1795 இல் யாழ்ப்பாணத்தில் காலமானர்.

நூல்: தேவப்பிரசையின் திருக்கதை, யோசேப்புராணம், நல்லைக் கலிவெண்பா, கூழங்கையார் வண்ணம், நன்னூல் விருத்தியுரை, சித்தி விநாயகர் திருவிரட்டைமணிமாலை, தனிச்செய்யுட்கள். தேவப்பிரசையின் கதை என்ற நூல் கடவுளின் அடியார்களின் வரலாற்றினைக் கூறுவது. இரண்டு தொகுதிகளாக உள்ளது. யோசேப் புராணம் என்ற நூல் 1023 செய்யுட்களால் ஆகியது. கிறித்து பெருமானின் தந்தை யோசேப்பின் வரலாற்றினைக் கூறுவது. தம்பிரானுடைய நெருங்கிய நண்பரான டி.மெல்லோ என்றபாதிரியாருக்கு இந்நூலினை இவர்உரிமையாக்கியுள்ளார். இந்நூல் இப்பொழுது முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை. சில செய்யுட்களே உள்ளன.

**கூற்றங்குமாஞர்** (சங்ககாலம்)

இவர் இயற்பெயர் குமரன் என்பது. கூற்றன் என்பது இவருடைய தந்தையின் பெயர். ஆதலின் இவர் கூற்றங் குமரஞர் என வழங்கப் பெற்ருர்.

நூல்; நற்றிணை 244ஆம் பாட்டு.

**கெய்கப்துல் காதிறு ஆலிம் சாயபு** (செ) ( )

ஊர்: திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள பேட்டை. இவர் மௌலாஞ மௌல்வியாக விளங்கியவர்.

நூல்: ஆபீதின் நற்பதம் ஆறிபீன் அற்புதம் (1903) நேர்வழி விளக்கம், தீண்மணி முழக்கம், மசாலா மறுமொழி விசனம்.

ஆபீதின் நற்பதம் ஆறிபீன் அற்புதம்: இந்நூலில் குர் ஆன் ஓதும் முறை, நோன்புகளின் வகை, மக்களேயும் மனைவி யையும் நடத்தும் முறை, பொய்ச்சத்தியம், பொய்ச்சாட்சி முதலியவை பற்றிய பல செய்திகள் விளக்கமாகக் கூறப் பெற்றுள்ளன.

## கேசவ சுப்பராயச் செட்டியார் (19-நூ)

ஊர்: அட்டமாநகர்.

நூல்: த. செய்யப்ப முதலியார் இயற்றிய மும்மணிமாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கேசவ சுப்பராய முதலியார் (20-நூ)

ஊர்: திருமணம்.

நூல்: கா. இராமசாமி நாயுடு தில்லைக் கோவிந்தராசப் பெருமாள் மீது இயற்றிய இணைமொழியமகமாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கேசவ முதலியார் கி. (19-நூ)

ஊர்: தொண்டை நாட்டில் உள்ள திருத்தொட்டிக்கலை. துளுவ வேளாளர்.

தந்தை: கிருட்டிணசாமி முதலியார்.

நூல்; அறுபத்துநான்கு திருவிளையாடற் சற்குருமாலை.

இந்நூலுள் அறுபத்துநான்கு திருவிளையாடல்களும் கூறப்பட்டுள்ளன.

## கேசவனார் (சங்ககாலம்)

நூல்: பரிபாடல் 14.

இப்பாடல் செவ்வேளைப் பற்றியது. இப்பாடலில் ஆசிரியர் திருப்பரங்குன்றத்திலுள்ள சுனை முதலியவற்றையும் கார்காலத்தையும் வருணித்திருத்தலும் ஆங்காங்கே கூறியுள்ள உவமைகளும் முருகக் கடவுளை முன்னிலையாக்கித் துதித்திருக்கும் அருமையும் பெரிதும் இன்பம் பயப்பன. இசைச் செய்திகள் பல இப்பாடலில் காணப்படுகின்றன. இப்பாடலுக்கு இசையும் இவராலேயே வகுக்கப்பட்டுள்ளது.

**கேபிரியல் ஏ. ( )**

நூல்: சிமிசோன் விலாசம் (1871). இது மொழிபெயர்ப்பு நூல், மில்டன் என்பவர் ஆங்கிலத்தில் எழுதியுள்ள சிமிசோன் வரலாறு பற்றிய நாடகம் இந்நூலுக்கு முதல் நூல் ஆகும். இதுசெய்யுளிலும் உரைநடையிலும் அமைந்துள்ளது. இசைப் பாக்கள் இதில் உள்ளன.

**கையனார் ( )**

நூல்: கையனார் யாப்பு நூல். இந்நூல் இறந்துபட்ட யாப்பு நூல்களில் ஒன்றாகும். இந்நூலின் இலக்கண நூற்பாக்கள் பல யாப்பருங்கல விருத்தியில் கையாளப்பட்டுள்ளன. நச்சினார் கினியரும் இந்நூல் நூற்பாவினை மேற்கோள் காட்டியுள்ளார்.

**கைலாசநாத தேசிகர் ( )**

வாழ்விடம்: பாண்டிய நாட்டில் உள்ள களந்தை.
இவர் புலியூர் மடத்தின் தலைவராக இருந்தவர்.

நூல்: கோமதியம்மன் அந்தாதி. இந்நூல் களந்தைப் பதியில் உள்ள கோமதியம்மன்மீது பாடப்பெற்றது; கட்டளைக் கலித்துறையில் அமைந்தது.

**கைலாசநாத பண்டாரம் (19-நூ)**

ஊர்: திருநெல்வேலியைச் சேர்ந்த திருப்புடை மருதூர்.
*சிவாச்சாரியார்,*

நூல்: விரைத்தலபுராணம் (1873) இந்நூல் விரைமாநகர் எனவும், வீரவளல்லூர் எனவும் வழங்கும் தலம் பற்றியது. இந்நூல் 773 பாடல்களால் ஆகியது; 19 சருக்கங்களைக் கொண்டது.

**கைலாசநாதர்-1. ( )**

நூல்: கைலாசநாதர் சூத்திரம்.

**கைலாசநாதர் 2. ( )**

நூல்: கைலாசநாதர் சதகம். இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் ஓலைச் சுவடியாக உள்ளது.

**கைலாசநாதர் மாணவர் ( )**

நூல்: கைலாசநாதர் தோத்திரம். இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் ஓலைச் சுவடியாக உள்ளது.

**கைலாசப் பிள்ளை (20-நூ)**

ஊர்: திருநெல்வேலி. இவர் பிரமசமாசத்தின் தலைவராக இருந்தவர்.

நூல்: சமரச ஞானதீபம். இந்நூலில் பிரமசமய வரலாறு, பிரம சமயக் கொள்கை முதலிய பல செய்திகள் கூறப்பட்டுள்ளன.

**கைலாசப் பிள்ளை சிற். (20-நூ)**

ஊர்: யாழ்ப்பாணத்தில் நல்லூர்.

தந்தை: திருச்சிற்றம்பலம்.

தாய்: மாணிக்கவல்லி.

வாழ்ந்த காலம் 1857—1916

இவருடைய தந்தை, தாய் ஆகிய இருவருடைய மரபுகளும் நல்ல தமிழ்க் கல்வியுடையவையாகும். இவர் இளமையில் நல்லூர்ச் சம்பந்தம் பிள்ளையிடம் கல்வி கற்றார். பின்னர் செயிண்ட் ஜோன்ஸ் கல்லூரியில் மேற்கல்வி கற்றார். வடமொழியிலும் நல்ல புலமையுடையவர். இவர் ஆங்கிலச் சொற்களையும், வட சொற்களையும் அம்மொழிகளிற் புலமை பெற்றோர் வியக்கும் வண்ணம் செம்மையாக உச்சரிப்பார்.

இவர் முதலில் அரசாங்க அலுவலில் சிலகாலம் இருந்தார். பின் அவ்வேலையை விடுத்துத் தமிழ்நாட்டிற்குச் சென்று அங்கு பல தலங்களுக்கும் சென்ருர், சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களுடன் தொடர்பு கொண்டார். அவர் பல நூல்கள் வெளியிடுவதற்குத் துணையாக இருந்தார். திருவாவடு துறையில் அப்பொழுதிருந்த சுப்பிரமணிய தேசிகர் இவருடைய தமிழ்ப் புலமையினை யறிந்து இவருக்கு 'வித்வான்' என்ற பட்டம் வழங்கினுர். தேசிகரிடம் சிவஞான மாயாடியத் துள் சில பகுதிகளுக்கு விளக்கவுரை கேட்டுத் தெளிந்தார். மூன்று ஆண்டுகள் கழித்து இவர் தாயார் வேண்டுகோளுக் கேற்ப ஈழநாட்டையடைந்து அரசாங்கத்தில் உயர்தர நீதி மன்றத்து விபாஷகராகப் பணிபுரிந்தார். பின்பு யாழ்ப்பாணக் கச்சேரிப் பிரதம முதலியாராகவும் மட்டுக் களப்புக்கச்சேரி முதலியாராகவும் இறுதியில் தேசாதிபதிக்குத் தமிழ் முதலியா ராகவும் பணிபுரிந்தார்.

இவரிடம் பொன். இராமநாதன் தாயுமானசாமி பாடல் கள் முதலிய நூல்களைப் படித்தார். பொன். அருணுசலமும் இவரிடம் சங்க நூல்கள் முதலிய பல தமிழ் நூல்களைப் பாடங் கேட்டார். இவர் தமிழ்ப் பாட்டுக்களை இசையுடன் படிப்பார். அகவற்பாக்களை இவர் படிப்பதிலே ஒரு தனிச் சிறப்புண்டு என்பர்.

இவர் வடதிருமுல்லைவாயில் மும்மணிக்கோவை என்னும் நூலில் அகவற்பாக்களைப் பாடியவர். இந்நூலில் வெண் பாக்கள் சி. தா. அமிர்தலிங்கம் பிள்ளையாலும், கட்டளைக் கலித்துறைகள் திருவேங்கட நாயுடுவாலும் பாடப் பெற்றுள்ளன. சாகுந்தல நாடகத்தில் சில சுலோகங்கள் இவரால் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன. இவருடைய அகவற்பாக்கள் கல்லாடச் செய்யுள்கள் போல இறுக்கமும் பொருளாழமும், குமர குருபரருடைய அகவல்கள் போல ஓசையும் வனப்பும் உடையன. 'காவன் மன்னரைக் கடவுள் காக்கவே' என்ற அரச வாழ்த்தினை ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்த்தவர் இவராவர். இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் ஓர் உறுப்பினராயிருந்தார். பல தனிச் செய்யுள்களும் இவர் பாடியுள்ளார். வெள்ளியந்திருமலைகிழார் என்ற புனைபெயரில் செந்தமிழ்ப் பத்திரிகையில் கவிதைகள் முதலியன எழுதி யுள்ளார்.

## கைலாசபிள்ளை த. (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்தில் உள்ள நல்லூர்.

**தந்தை:** ஞானப்பிரகாசர் மரபில் வந்த தம்பு. இவர் வண்ணார் பண்ணையில் ஆறுமுக நாவலரால் நிறுவப்பட்ட சைவப்பிரகாச வித்தியாசாலையில் கல்வி கற்றார். ம. க. வேற் பிள்ளை ஆறுமுக நாவலர் முதலியோரிடத்தில் தமிழ் நூல்களையும். சமய நூல்களையும் கற்றார். ஆங்கிலத்திலும் நல்ல தேர்ச்சி உடையவர். இவர் பின்னர் சைவப்பிரகாச வித்தியாசாலையின் அதிபர் ஆனார். அவ்வித்தியாசாலைக்கு ஒரு புதிய கட்டிடத்தைக் கட்டினார்; மதுரையில் தமிழ்ச் சங்கம் தோன்றுவதற்கு முன்னர் யாழ்ப்பாணத்தில் பல தமிழ் அறிஞர்களைக் கொண்டு ஒரு சங்கம் நிறுவினார். 'இந்து சாதனம்' என்னும் இதழுக்கு அதன் தொடக்கக் காலத்தில் ஆசிரியராக இருந்தார். சிவஞான சித்தியார்சுபக்கம் இவரால் நன்கு ஆராயபெற்றுத் திருத்த மான பதிப்பாக வெளிவந்துள்ளது ஆறுமுக நாவலருக்குப் பின் சைவ சமயக் கோட்பாடுகளை மறுத்து வெளிவந்த கட்டுரைகளுக்கு மறுப்பு எழுதியுள்ளார்.

**நூல்:** ஆறுமுக நாவலர் சரித்திரம்.

## கைலாயச்சட்டை முனி (      )

**நூல்:** கைலாயச்சட்டை முனி வாதநூல் ஆயிரம்.

## கைலாயப்பரதேசி (19-நூ)

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டத்தில் குற்றாலம் என இந்நாளில் வழங்கும் திருத்துருத்தி. இவர் பலருக்குக் கல்வி கற்பிக்கும் பணியை மேற்கொண்டார்.

**நூல்:** சிவஞான சாரம். இந்நூல் பலபதிகள் மீதும் பாடப் பட்டது. 600க்கு மேற்பட்ட பாடல்களைக் கொண்டது.

## கொக்கோகர் (      )

**நூல்:** மதன நூல்.

## கொங்கண நாயனர் (         )

**நூல்:** வாலைக்கும்மி, இந்நூல் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் ஓலைச்சுவடியாக உள்ளது.

## கொங்கணர் (         )

இவர் பதினெண் சித்தர்களுள் ஒருவர். கொங்குநாட்டி லுள்ள ஊதியூர் மலையில் வாழ்ந்தவர் என்பர். அங்கு இவர் வாழ்ந்தமையால் அம்மலைக்குக் கொங்கணமலை என்று பெயர் வந்தது என்பர்.

இவர் தஞ்சாவூரில் ஒரு சிவலிங்கத்தை அமைத்து வழி பட்டு முத்தியடைந்தாரென்பர். திருவள்ளுவருடைய காலத்தில் இவர் வாழ்ந்தவராகக் கொண்டு ஒருமுறை அவர் வீட்டிற்குப் பிச்சை வாங்கச் சென்றபொழுது அவருடைய மனைவி வாசுகி அம்மையார் சிறிது காலந் தாழ்த்துப் பிச்சை கொண்டு வந்தாரென்னும், இவர் சினங்கொண்டு உற்றுப் பார்க்க 'கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா' என்று கூறினரென்றும், கொங்கணர் முன்பு ஒருமுறை தம்மேல் எச்சமிட்ட கொக்கினை விழித்துப் பார்க்க அது எரிந்த நிகழ்ச்சியை இது குறித்தது என்றும் கூறுவர். இக் கதைக்குப் போதிய சான்றுகளிருப்பதாகத் தெரியவில்லை.

**நூல்:** கொங்கண தேவர் ஐந்நூற்றிரண்டு, கொங்கண தேவர் கலை, கொங்கண நாதர் சூத்திரம், கொங்கணர் கலைஞான சூத்திரம், கொங்கணர் தண்டகபட்சணி நூறு, கொங்கணர் தத்துவ நூல், கொங்கணர் துரிசு குரு முப்பத்தொன்று, கொங்கணர் தலைக்காண்டம், கொங்கணர் நடுக்காண்டம், கொங்கணர் கடைக்கண்டம், கொங்கணர் மூப்பு தீட்சை, கொங்கணர் வாக்கியம், கொங்கணர் தியானம், குணவாகடம், கொங்கணர் திரிகாண்டம், பலதிரட்டு ஐந்நூறு, கொங்கணர் சரக்கு வைப்பு நூறு, கொங்கணர் கற்புவிதி நூறு, கொங்கணர் வைத்தியம் நாற்பத்தைந்து, கொங்கணர் வாலைக்கும்மி.

## கொங்குவேள் (7-நூ)

வே. பெ: கொங்குவேளிர்.

ஊர்: விசயமங்கலம்.

வேளிர் வகுப்பைச் சேர்ந்த சிற்றரசர்; சமணர்.

இவர் மங்கை என்ற ஊரில் பிறந்தார் என்றும், பெருங்கதை என்ற நூலை இயற்றுவதற்கு மூன்று பிறப்புக்கள் எடுத்தார் என்றும், சங்கத்தார் கேட்ட விறுக்களுக்கு இவர் தம் வேலைக்காரி ஒருத்தியைக் கொண்டு மறுமொழி கூறுமாறு செய்தாரென்றும் கொங்குமண்டல சதகம் என்ற நூலிலிருந்து தெரியவருகிறது. மங்கை என்பது விசயமங்கலமேயாகும்.

இந்நூலாசிரியரின் காலம் இன்னது என்பது தெளிவாகத் தெரியவில்லை. சிந்தாமணி ஆசிரியராகிய திருத்தக்கதேவருக்கும் முற்பட்டவர் என்று உ. வே. சாமிநாதையர் கருதுகிருர்.

நூல்: பெருங்கதை. இது கொங்குவேள் மாக்கதை என்றும் வழங்கப்படுகிறது. உதயணன் கதையை உதாயண குமார காவியம் என்ற மற்ருெரு தமிழ் நூலும் எடுத்துரைக்கிறது.

பெருங்கதை என்ற இந்நூலிற்குக் கொங்குவேள் மாக்கதை, உதயணன் கதை என்ற வேறு பெயர்களும் உண்டு. இந்நூல் பைசாசமொழியில் குறி குணட்டியர் என்பவர் இயற்றிய பிருகத்கதா என்னும் நூலை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது என்பர். பிருகத்கதா என்ற சொற்ருெடர் தமிழில் பெருங்கதை என்று பொருள்படும். பிருகத்கதா என்ற இந்நூலில் பல்வேறு கதைகள் உள்ளன என்றும், பைசாச மொழியிலிருந்த நூலை, துர்விநிதன் என்பவன் வடமொழியில் செய்தான் என்றும் மைசூர் மாநிலக் கல்வெட்டு ஒன்று கூறு கிறது. இத் துர்விநிந்தன் கங்க வம்சத்தைச் சேர்ந்தவன்; சமண சமயத்தினன்: 5 அல்லது 6ம் நூற்ருண்டைச் சேர்ந்தவன் ஆவான்.

பெருங்கதை என்ற நூலுக்கு பிருகத்கதா என்ற நூல் முதல் நூலாக அமைந்திருக்க முடியாது என்றும் ஒரு கருத்து உண்டு. ஏனெனில் குணாட்டியரது நூல் சைவ சமயச் சார்புடையது. பெருங்கதை சமண சமயச் சார்புடையது. பைசாச மொழியில் பரந்து கிடந்த பிருகத் கதையை சேஷமேந்திரர் என்ற மகாகவி வடமொழியில் பிருகத் கதாமஞ்சரி என்ற பெயரில் சுருக்கி இயற்றினர் என்றும், அது மிகவும் சுருங்கியிருந்தது கண்டு சோமதேவப் பட்டர் என்ற மகாகவி வடமொழியில் கதாசரித் சாகரம் என்ற பெயரில் ஒரு நூல் எழுதினர் என்றும், இத்தகைய நூல்களின் துணை கொண்டு துர்விநிதன் எழுதிய நூலைத்தழுவி இந்நூல் தோன்றியிருத்தல் கூடும் என்றும் கருதப்படுகிறது.

பெருங்கதை உதயணன் என்னும் அரசனது கதையைக் கூறுகிற ஒரு காப்பியமாகும். உதயணன் குருமரபிற் பிறந்தவன். வந்தவ நாட்டில் உள்ள கௌசாம்பி என்னும் நகரத்தரசனாகிய சதானிகனுக்கு மிருகாபதி என்பவளிடம் பிறந்தவன். சதானிகன் என்பவன் பாண்டவர் காலத்திற்குப் பிறகு அரசாண்டு வந்தான். அவனுடைய பேரனின் மகனாகிய நிசக்குனு என்பவன் காலத்தில அத்தினபுரம் அழிந்து போயிற்று. எனவே அவன் கௌசாம்பி நகரத்தைத் தலை நகராகக் கொண்டு ஆண்டான். அவனுக்குப் 16ஆம் தலைமுறையில் சதானிகன் என்னும் பெயருடைய ஒருவன் இருந்தான். அவன் மகனே இக்கதைத் தலைவனாகிய உதயணன் ஆவான்.

இந்நூல் உஞ்சைக் காண்டம், இலாவன காண்டம், மகத காண்டம், வத்தவ காண்டம், நரவான காண்டம் என்னும் ஐந்து காண்டங்களை உடையது. முதலாவது உஞ்சைக் காண்டத்தில் 31 காதைகள் காணப்படவில்லை. 32-வது காதையின் முற்பகுதியும் காணப்படவில்லை. இடையில் மகத காண்டத்தில் 10ஆம் காதையின் இறுதியில் சில அடிகளும் பதினோராம் காதை முழுவதும், 12ஆம் காதையின் முற்பகுதியும் காணப்படவில்லை. 17 ஆம் காதையின் சில பகுதியும் காணப்படவில்லை. இறுதியான நரவான காண்டத்தில் 9 காதைகள் மட்டுமே உள்ளன. 9 ஆம் காதையின் பிற்பகுதியும் மற்றக் காதைகளும் காணப்படவில்லை.

## கொட்டம்பலவனார் (சங்க காலம்)

இவருடைய பெயர் பற்றி மூன்று கருத்துக்கள் உள. கொட்டம்பலம் என்னும் ஊரினராதல் பற்றி இப்பெயர் பெற்றாரென்றும், கோட்டம்பலம் என்னும் ஊரினராதல் பற்றி இவர் கோட்டம்பலவனார் என்று அழைக்கப் பெற்றுப் பின்னர்க் கொட்டம்பலவனாராயிருத்தல் வேண்டுமென்றும், அம்பலவனென்னும் இயற்பெயருடைய இவருடைய பாடலில் கொட்டு என்ற சொல் வந்துள்ளமையால் அடைமொழியாக இச்சொல் வந்து கொட்டம்பலவனார் ஆயினாரென்றும் கூறுப.

நூல்: நற்றிணை 95.

## கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் ( )

பார்க்க: சிவக்கொழுந்து தேசிகர், கொட்டையூர்.

## கொடிக்கொண்டான் பெரியான் ஆதிச்சதேவன் ( )

பார்க்க: ஆதிச்சதேவன்.

## கொடிஞாழல் மணி பூதனார் ( )

இவர் பெயர் சங்கப்புலவர் வரிசையில் காணப்படவில்லை. திருவள்ளுவ மாலை பாடிய புலவர்களுள் ஒருவராகக் காணப் படுகிறார்.

நூல்: 'அறனறிந்தே மான்ற' என்ற திருவள்ளுவமாலைப் பாடல்.

## கொடிமங்கலத்துவாதுளி நற்சேந்தனார் (சங்க காலம்)

நூல்: அகநானூறு 179, 232.

## கொடுஞ்செங்கண்ணனார் ( )

ஊர்: செயலூர்.

நூல்: திருவள்ளுவமாலையில் 42-வது பாடல்.

**கொத்தாலகான் புலவர் ( )**

ஊர்: வேதாளை.

நூல்: பலுலூன சுகாபிமாலை (1874). இந்நூல் 269 செய்யுட்களைக் கொண்டது. அறிஞர் சகீது அருளும் பாலர் பலலூன் கதையைத் தெரிவிப்பது.

**கொர்நெலியஸ் ஜெ ( )**

நூல்: கிறிஸ்து வேத சங்கிரகம்.

இந்நூல் இரண்டு பகுதிகளாக வெளிவந்துள்ளது. கிறித்தவர்களுக்கான அறவுரைகளையும் கடமைகளையும் கூறும் சொற்பொழிவுகள் அடங்கியுள்ளன.

**கொல்லன் அழிசி (சங்க காலம்)**

கொல்லன் என்பது சாதிபற்றிய பெயர்; இவரது இயற்பெயர் அழிசி என்பது. அழிசி என்னும் பெயர் அழுசி என்றும் வழங்குகிறது.

நூல்: குறுந்தொகை 26, 138, 145, 240.

**கொல்லிக்கண்ணன் (சங்க காலம்)**

இவர் கொல்லி மலையைச் சார்ந்தவர். குட்டுவன் சேரன் உடைய மாந்தை நகரைக் கூறுவதனால் இவர் அவன் காலத்தவராகக் கருதப்படுகிறார்.

நூல்: குறுந்தொகை 34

**கொலையண்ண முதலியார் (19-நூ)**

இவருடைய முழுப்பெயர் விசயராகவ கொல்லையண்ண முதலியார்.

இவர் வடமொழியிலும், தென்மொழியிலும் புலமை உடையவர்.

நூல்: மணவாள மாமுனிகள் வடமொழியில் அருளிச் செய்த எதிராச விம்சதி என்னும் நூலின் தமிழாக்கம்.

**கொள்ளம்பக்கனார் (சங்க காலம்)**

ஊர்: கொள்ளம்.

இவரது இயற்பெர் பக்கனார் என்பது. கொள்ளம் என்னும் ஊர்ப்பெயரொடு சார்த்திக் கொள்ளம்பக்கனார் என வழங்கப் பெற்றார்.

நூல்: நற்றிணை 147.

**கொற்றங்கொற்றனார் (சங்க காலம்)**

ஊர்: மாற்றூர், வேளாளர்.

நூல்: அகநானூறு 54. நற்றிணை 259.

**கொஸ்தான் ( )**

தந்தை: மாந்தையுவான் கொஸ்தான்.

நூல்: பூதத்தம்பி விலாசம்.

**கோகுளமுற்றனார் (சங்க காலம்)**

ஊர்: கோக்குளம்.

நூல்: குறுந்தொகை 98. நற்றிணை 96.

**கோகழி அடிகள் ( )**

பார்க்க: மறைஞான தேசிகர்.

**கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான் (சங்க காலம்)**

நூல்: அகநானூறு 168.

**கோட்டாற்றிளம் பெருமானார் ( )**

பார்க்க: இளம் பெருமானார்.

## கோட்டியூர் நல்லந்தையார் (சங்க காலம்)

ஊர்: பாண்டி நாட்டுத் திருக்கோட்டியூர்.

நூல்: நற்றிணை 211.

## கோடை பாடிய பெரும்பூதனார் (சங்க காலம்)

கோடைக்கானல் என வழங்கும் மலையினைச் சான்றோர் பலரும் வியந்து பாராட்டுமாறு பாடிய சிறப்பால் கோடை பாடிய பெரும்பூதனார் என்று அழைக்கப்பெற்றார்.

நூல்: புறநானூறு 259.

## கோடிக்கரை ஞானியார் (17-நூ)

இவர் தாயுமானவர் காலத்தவர் ஆகையால் 17-ஆம் நூற்றாண்டினர்.

இவர் முதலில் கோடிக்கரைக் காட்டில் தவம் செய்து கொண்டிருந்தார். பிறகு தாயுமானவருடன் சிறிது காலம் இருந்தார்.

நூல்: இராமநாதபுரத்தில் தாயுமானவர் இறந்தபோது அவர் காலமான ஆண்டு, இடம் முதலியவைகளை வைத்து இயற்றிய செய்யுள்.

## கோடீசுவர ஐயர் (          )

பார்க்க: கவிகுஞ்சரபாரதி.

## கோண்மா நெடுங்கோட்டனார் (சங்க காலம்)

நூல்: நற்றிணை 40,

**கோனேரி நாஜே ( )**

நூல்: திருவாய்மொழி வாசகமாலை. இந்நூல் சரசுவதி மகால் கையெழுத்து நூல் நிலையத்தில் ஓலைச்சுவடியாக உள்ளது.

**கோதண்டராமப் பிள்ளை முன்சி (19-நூ)**

நூல்: இராசாராம் கோவிந்தராவ் என்பவர் இயற்றிய ஸ்ரீபக்த லீலாமிர்தம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**கோப்பெருஞ்சிங்கன் (13-நூ)**

சி. பெ: அவனி நாராயணக் காடவப்பெருஞ்சிங்கன், நிருபதுங் கசீயன், திரிபுவனராஜாக்கள் தம்பிரான், மலைவேந்தன்.

இவன் சம்புவராயர்கள் என்றழைக்கப்பெற்ற பல்லவர் மரபில் வந்தவன்; சோழ மன்னனைச் சிறையிலடைத்துவிட்டு 1243 இல் பட்டம் பெற்றான்.

நூல்: கோதாவரி மாவட்டத்தில் இடர்க்கரம்பை என்ற தமிழ்ப் பெயர் பெற்ற திராக்ஷாராமம் என்ற ஊரில் சிதைந்து காணப் பெறும் இரண்டு கல்வெட்டுக்களில் உள்ள தமிழ்ப்பாடல்கள் இவரால் இயற்றப்பட்டவை என்பர்.

**கோப்பெருஞ்சோழன் (சங்க காலம்)**

இவர் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவர்; புலமையுள்ளங் கொண்டவர். பிசிராந்தையார் பொத்தியார் போன்ற புலவர்களைத் தம் உயிர் நண்பர்களாக மதித்தவர், இவர் இறந்தபொழுது பிசிராந்தையாரும் பொத்தியாரும் இவரருகிலிருந்து உயிர் துறந்தனர் என்ற செய்தி இவரோடு அவர்கள் கொண்ட நட்பின் பெருமையைக் காட்டுகிறது.

நூல்: குறுந்தொகை; 20, 53, 129, 147.

புறநானூறு; 214, 215, 216.

**கோபால ஐயங்கார் க.** (20-நூ)

இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள பரம்பக்குடி. தேவகோட்டையில் அச்சகம் ஒன்று நிறுவிப் பல தமிழ் நூல்களை அச்சடித்துள்ளார்.

நூல்: முத்துசாமிப் பிள்ளை என்பவருடைய 'பிரபந்தத் திரட்டு' என்னும் நூலுக்கு வழங்கிய சாற்றுக்கவி.

**கோபால ஐயர் ஆ.** (20-நூ)

ஊர்: ஆலங்குடி. இவர் கோனுபட்டுத் தமிழ்க் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: நவமணிமாலை, காப்புமாலை.

நவமணிமாலை: இந்நூல் கருவூர் ஆனிலைப் பசுபதீசுவரர் பேரில் பாடப்பெற்றது.

காப்புமாலை: ஆண்டிப்பட்டிப் பெருநிலக்கிழார் மெய்த்தாச்சி செட்டியார் மீது பாடப்பெற்றது.

**கோபாலகிருட்டின ஐயர்-1** (20-நூ)

இவர் ஆம்பூர்எனை வழங்கப்பெறும் அன்பூரில் புகைவண்டி நிலையத் தலைவராகப் பணிபுரிந்தவர்.

நூல்: பரமகலியாணி அம்மன் பேரில் ஆசிரிய விருத்தம்.

**கோபாலகிருட்டின ஐயர்-2.** (     )

நூல்: குணசீலன் (1900) இந்நூல் உலகவியல்பினைப் பலவகையில் விரித்து உள்ளவாறு கூறுகிறது. நீதிகள் பலவற்றைச் சொல்லுவது.

## கோபாலகிருட்டின ஐயர். ந (20-நூ)

இவர் ஆங்கிலத்திலும் தேர்ச்சி உடையவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் செயற்குழு உறுப்பினராகவும் அச்சங்கத்தின் தேர்வாளராகவும் பணியாற்றியுள்ளார். திருச்சி தேசியக் கல்லூரியில் தமிழாசிரியராகவும் இருந்தார். 'நச்சினார்க்கினி யன்' விவேகோதயம் ஆகிய இதழ்களின் ஆசிரியராகவும் இருந் துள்ளார்.

நூல்: அரும்பொருட்டிரட்டு. இந்நூல் ஆசிரியர் பாடிய தனிப் பாடல்களின் தொகுப்பு; மூன்று பகுதிகளாக வெளிவந்துள்ளது. முதற்பகுதியில் பல தெய்வு வணக்கப்பாடல்களும், இரங்கற் பாக்களும், வாழ்த்துப்பாக்களும் உள்ளன. இரண்டாவது பகுதியில் பல ஆங்கிலப் புலவர்களின் பாட்டுக்கள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. மூன்றுவது பகுதியில் இயற்கை வரலாறு, நீதிச் செய்திகள் ஆகியவை பற்றிக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

## கோபாலகிருட்டினதாசர் (          )

இவர் இடையர் மரபினர்; வைணவர்; 18 ஆம் நூற்ருண் டிற்கு முற்பட்டவர்.

நூல்: எம்பிரான் சதகம் (1874). இந்நூல் 105 செய்யுட்களைக் கொண்டது, ஒவ்வொரு பாட்டும் எம்பிரானே என்ற தொடரினை இறுதியில் கொண்டு முடிந்துள்ளது. பிற சதகங்கள் போல் இச்சதகம் உலகியல் ஒழுக்கம் பற்றிக் கூருது, திருமாலின் அவதார நிகழ்ச்சிகள், கருணைச் செயல்கள் ஆகியவற்றைக் கூறுகிறது.

## கோபாலகிருட்டினப் பிள்ளை-1 (          )

நூல்: ஆச்சாரிய ஹிருதய சாரசங்கிரகம். இந்நூல் உரைநடை யில் அமைந்தது. நம்மாழ்வார் பிரபந்தங்களின் உட்கருத்துக் களை வெளியிடுவது; அழகிய மணவாளப் பெருமாள் நாயனு ரால் செய்யப்பட்ட 'ஆச்சாரிய ஹிருதயம்' என்னும் நூலுக்குத் தெளிவான உரையாக அமைந்ததே ஆச்சாரிய ஹிருதய சாரசங்கிரகம் என்னும் இந்நூல்

## கோபாலகிருட்டினப் பிள்ளை-2 (20-நூ)

**ஊர்:** திருநீர்மலை. வாழ்விடம் சென்னை.

**நூல்:** பச்சையப்ப முதலியார் சபாமண்டப மாளிகை என்னும் கட்டிடத் திறப்பு விழாவில் பாடிய 64 அடிச் சிந்து.

## கோபாலகிருட்டின பாரதியார் (19-நூ)

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டம் நாகப்பட்டினம் அருகாமையிலுள்ள நரிமணம்.

**தந்தை:** இராமசாமி பாரதி, அந்தணர்.

இவர் முடிகொண்டானில் இருந்தமையால் முடிகொண்டான் பாரதியார் என்றும், ஆனதாண்டவபுரத்திலிருந்தமையால் ஆனதாண்டவபுரம் பாரதியென்றும் அழைக்கப் பெற்றார் மாயூரத்திலிருந்த கோவிந்தசிவம் என்பவரைத் தம் ஞானகுருவாகக் கொண்டு வேதாந்த, யோக நூல்களைக் கற்றார். தமிழிலும் கைவல்ய நவநீதம், தத்துவராயர் பாடுதுறை, தாயுமானவர் பாடல் முதலிய நூற்களில் நல்ல தேர்ச்சியுண்டு. தஞ்சாவூர் மராத்திய மன்னர் பரம்பரைக்கு உறவினராக உள்ள அமரசிம்மரால் ஆதரிக்கப்பெற்றுத் திருவிடைமருதூரில் வாழ்ந்துவந்த இராமதாசர் என்ற இசைப்புலவர் இந்துஸ்தான மார்க்கததில் வல்லவராயிருந்தார், ஏற்கனவே இசையில் புலமை பெற்றிருந்த பாரதியார் அவரிடம் இந்துஸ்தான மார்க்கத்தினைக் கற்றார். மகாராட்டிரம் முதலிய மொழிகளில் உள்ள இசைப்பாக்களின் போக்கினையும் தெரிந்துகொண்டார். அப்பொழுது அமரசிம்மருடைய ஆதரவிலிருந்து வந்த கனம் கிருட்டினையர் என்பவரிடமிருந்து கர்நாடக இசையின் நுணுக்கங்கள் சிலவற்றையும் கீர்த்தனங்கள் சிலவற்றையும் கற்றுக்கொண்டார். இவருக்கு வடமொழியில் நல்ல தேர்ச்சியுண்டு. பிடில் வாசிக்கவும் தெரியும்.

இவர் திருமணம் செய்து கொள்ளாமலே வாழ்நாள் முழுதும் வாழ்ந்தார். வீடுகளிற் பிச்சையேற்று உண்டு சிவவழிபாட்டிலே

காலத்தினைச் செலவிட்டு வந்தார். மாயூரத்தில் வள்ளலார் கோவிலிலுள்ள தட்சிணாமூர்த்திதிருமுன்இவர்தியானம்செய்வது வழக்கம்; இவருக்குத் தில்லையில் உள்ள நடராசப்பெருமானிடத் திலே மாருத அன்புண்டு. ஆண்டுதோறும் நடைபெறும் ஆறு அபிடேகங்களுக்கும் தவருமற் சென்று வருவார். சிதம்பரம் கோயிலில் நிருத்தசபைக்கு அண்மையில் உள்ள நந்தனர் உருவத்திற்கு அருகிலிருந்து இவர் அடிக்கடி பாடுவதுண்டு. இவர் பல ஊர்களுக்கும் சென்று இடையிடையே இசைப் பாட்டுக்கள் விரவிவரச் சிவ கதைகளைச் சொல்லிவந்தார். இதன் மூலம் சிறிது சிறிதாக இவருக்குப் பொருள்சேரத் தொடங்கிற்று; அத்தொகையில் ரூபாய் மூவாயிரத்தினைத் திருவாவடுதுறையில் இருந்த சுப்பிரமணிய தேசிகரிடம் ஒப்படைத்து அறக் கட்டளையினை ஏற்படுத்தினர்.

திருவையாற்றில் வாழ்ந்த தியாகராயசாமிகளைக் காண ஒருமுறை சென்றிருந்தார். அப்பொழுது அவருடைய மாணவர்கள் 'ஆபோகி' என்னும் இராகத்தில் அவரியற்றிய கீர்த்தனம் ஒன்றினைப் பாடினர். அதனைக் கேட்ட பாரதியார் 'சபாபதிக்கு வேறு தெய்வம் சமானமாகுமா' என்ற கீர்த்தனம் ஒன்றினை அந்த இராகத்தில் இயற்றி மறுநாள் தியாகராயசாமி களிடம் பாடிக் காட்டி அவருடைய பாராட்டுதலைப் பெற்றார். தியாகராயசாமிகள் ஐந்துனை இராகங்கள் ஐந்து கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அவை பஞ்சரத்தினக் கீர்த்தனைகள் என்று அழைக்கப்பெறும். அவைகளைப் போல இவர் 'அரஅரசிவ சங்கர கருணாகர' சரணாகதியென்று நம்பிவந்தேன், மறவாமல் எப்படியும் நினைமனமே, பிறவரத வரந்தரும், ஆடிய பாதமேகதி என்னும் ஐந்து கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். இவற்றுள் முதல் நான்கும் முறையே நாட்டை, கௌளை, ஸ்ரீராகம், ஆரபி என்னும் இராகங்களில் அமைந்தவை.

திருமணக் காலங்களில் அக்காலத்தில் தெலுங்கு முதலிய வேறு மொழிகளில் பாட்டுக்கள் பாடிவந்தனர். அக்காலங்களிற் பாடுதற்கேற்றாற்போல் நலுங்கு, லாலி, கும்மி முதலிய வகை களில் இவர் தமிழில் நல்ல இசைப்பாட்டுக்கள் அமைத்துள்ளார்

இவருடைய மாணவர்கள் சிதம்பரம் பொன்னுச்சாமி தீட்சிதர், சிதம்பரம் இராமசாமி ஐயர் முதலிய பலர்; இவர்களில் மாயூரம் இராமசாமி ஐயருடைய வீட்டிலே தான் பெரும் பாலும் பாரதியார் தங்கியிருந்தார்.

இவர் மக்களுள் யாரையும் பாடியதில்லை. ஒரு சமயம் மாயூரம் பகுதியில் கொடிய பஞ்சம் ஏற்பட்டது. மக்கள் மிகவும் துன்புற்ருர்கள். அப்பொழுது மாயூரத்தில முன்சீப்பாகயிருந்த வேதநாயகம் பிள்ளை என்பவர் தாமே பொருளுதவி செய்தும் பலரைக் கொண்டு செய்வித்தும் கஞ்சித்தொட்டிகள் ஏற்படுத்தச் செய்தார்; மக்கள் துயரம் ஒருவாறு குறைந்தது. வேதநாயக பிள்ளையின் இந்த நற்பணியினைக் கண்ட பாரதியார் அவரைப் பற்றி 'நீயே புருவமேரு' என்று தொடங்கும் கீர்த்தனையினைப் பாடினர்.

நூல்: நந்தனர் சரித்திரம், இயற்பகை நாயனர் சரித்திரம், திருநீலகண்ட நாயனர் சரித்திரம், சிதம்பரக்கும்மி. காரைக்கால் அம்மையார் சரித்திரமும் இவராலியற்றப்பெற்றதென்று சிலர் கூறுவர்.

## கோபாலகிருட்டினமாச்சாரியார் வை. மு. (20-நூ)

ஊர்: சென்னை நகரம் திருவல்லிக்கேணி.

தந்தை: பார்த்தசாரதி ஐயங்கார்; வைணவர், வாழ்ந்த காலம் 22—10—1882—26—8—1950.

இவர் வடமொழியையும் தமிழையும் நன்கு கற்றவர்; தம் பாட்டனரான கோபாலகிருட்டினமாச்சாரியாரிடம் கல்விகற்கத் தொடங்கினர். அதன்பின்னர் சீனிவாச அப்பன் ஐயங்கார் கவிபூடணம் அட்டங்கி குமார தாத்தாச்சாரியசாமி, அரசானிப் பாளை சேஷாசாரிய சாமி, தெய்வசிகாமணி இராமாநுசாச் சாரியசாமி, சேந்தலூர் கிருட்டினமார்ச்சாரியசாமி ஆகியோரிடம் பல ஆண்டுகள் மாணவராக இருந்து காவியம், நாடகம் அலங்காரம், வியாகரணம் முதலியவற்றைக்கற்றுத் தேர்ந்தார்.

இவர் பாட நூல்களுக்கு உரை எழுதி வெளியிட்டுள்ள தோடு பல தனி நூல்களுக்கும் உரை எழுதியுள்ளார். இவருடைய ஒன்றுவிட்ட உடன்பிறந்தவராகிய வை. மு. சடகோப ராமாநுசாச்சாரியார் பல நூல்களுக்கும் உரையெழுதும் பணியில் ஈடுப்பட்டிருந்தர். அவரோடு கூட்டாகச் சேர்ந்தே இவர் தமது பணியைத் தொடங்கினர். சடகோப ராமாநுசாச் சாரியார் 1910 ஆம் ஆண்டில் காலமான்பிறகு, அவருடைய போக்கைப் பின்பற்றி இவரும், சே கிருட்டினமாச்சாரியாரும் உரை எழுதும் பணியைத் தொடர்ந்தனர். பிறகு 1920 ஆம் ஆண்டிலிருந்து இவரே தனிமையாக இத்தெண்டில் ஈடுபட்டார். இவருடைய உரை எளிமை, தெளிவு, விரிவுரை இலக்கணக் குறிப்பு, மேற்கோள் குறிப்பு முதலிய அனைத்தும் கொண்டதாக அமைந்துள்ளது.

இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தாரும் அரசினரும் ஒன்றுசேர்ந்து தொகுத்த தமிழ் அகாரதிப் பணியில், தமிழ் வடமொழி ஆகிய இருமொழிக்கும் ஆசிரியராகப் பணிபுரிந்து உள்ளார்.

இவரது அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவில் தமிழ் அறிஞர்கள் பலர் இவருடைய தொண்டைப் பாராட்டித் தமிழ்மாலை ஒன்று சூட்டியுள்ளனர்.

**நூல்:** கம்பராமாயணம், வில்லிபாரதம், அட்டபிரபந்தம் முதலிய நூற்களுக்கு எழுதிய உரை. திருக்குறள் பரிமேலழகர் உரைக்கு விளக்கவுரை, நாலாயிர திவ்வியப் பிரபந்த உரை.

## கோபாலச் செட்டியார் டி. (        )

**நூல்:** பரமஇச்சாஞானதீபிகை, பதிபசுபாச விளக்கம், ஈஸ்வர ராஜ்ய பரிபாலன பிரபாவம், முப்பொருள் உறவு.

## கோபாலசாமி தீட்சிதர் (19-நூ)

**ஊர்:** தில்லை.

**நூல்:** சிதம்பரம் செட்டியார் என்பவர் இயற்றிய 'வெண்பா அந்தாதி' என்னும் நூலைப்பாரட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்

## கோபாலசாமி நாயகர் (19-நூ)

**நூல்:** அபிதானந்தனிச்செய்யுணிகண்டு தெய்வப் பெயர்த் தொகுதி (1878) இதில் 156 செய்யுட்கள் உள்ளன. இந்நூலில் தெய்வப்பெயர்த் தொகுதி மட்டும் உள்ளது. விரைவில் மற்ற தொகுதிகளையும் அச்சிடுவதாக நூலின் முகப்பில் சுட்டப்பெற் றுள்ளது. இந்நூலாசிரியர் பன்னிரண்டு தொகுதிகளையும் கூறுவதாய் நூலின் பாயிரப் பகுதியிலிருந்து தெரியவருகிறது.

## கோபலசாமி நாயுடு—ஜ. வி. (20-நூ)

இவர் தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள சாலியமங்கலம் என்னும் ஊரில் அஞ்சல் நிலையத்தலைவராகப் பணிபுரிந்தவர்.

தஞ்சாவூர் மதுரமுத்து உபாத்தியார் என்பவரிடம் தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்றார்.

**நூல்:** மு. சாம்பசிவனார் இயற்றிய 'சிவக்ஷேத்திர யாத்திரானு கூலம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## கோபாலதாசர் ( )

**நூல்:** கர்மசுலோக விரிவுரை, 'இராமனுச திவ்வியசூரி வைபவ மாலிக பிரகாசிகை', உத்தரஸ்வாதினி, திருப்பல்லாண்டுரை.

## கோபால தேசிகர் ( )

**நூல்:** இலக்கியத்திரயசார. உரை

## கோபால தேசிகர் நா. ( )

இவர், வேமன்ன வழிமுறையினைச் சேர்ந்தவர் ஆவர்.

**நூல்:** மெய்ஞ்ஞானப் புலம்பல். இந்நூல் 1001 கண்ணிகள் அடங்கியதாகும்.

## கோபாலதேசிகாச்சாரியார் உ. வே. (          )

நூல் : நா. ஐயாச்சாமி ஐயர் என்பவர் திருத்தம் செய்து விளக்கத்துடன் வெளியிட்ட திருவெமனேச்சுரத் தலபுராணத்தைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கோபாலப் பிள்ளை (          )

நூல் : வர்த்தவிசயம் – வசனம். இது திருமால் அடியார்களின் வரலாற்றினைக் கூறுவது ; 57 அத்தியாயங்களைக் கொண்டது; 6 தொகுதிகளாக எழுதப்பட்டுள்ளது.

## கோபாலாச்சாரியார் (          )

நூல் : முதற்பயிற்சி இலக்கணம்.

## கோபாலாச்சாரியார் கா. ( 19 -நூ )

இவர் சென்னை கிறித்தவக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

நூல் : பல தனிப்பாடல்கள்.

## கோபாலாச்சாரியார். சே. எஸ்.

நூல் : பர்த்துருஹரி முதலாவது நீதியியல் (1900). இது மொழி பெயர்ப்பு நூல். இந்நூல் பர்த்துருஹரியின் நீதிசதகத்தைப் பின்பற்றியது. திருக்குறள் முதலிய நூற்களுடன் ஒப்புமை காட்டி விளக்கப்பட்டுள்ளது. நூலின் தொடக்கத்தில் பர்த்துருஹரியின் வரலாறு எழுதப்பெற்றுள்ளது. இந்நூல் பர்த்துருஹரி சுலோக வடிவில் செய்த நூலினை அடிப்படையாகக் கொண்டு செய்திகளை விரித்தும், விளக்கியும் செல்கிறது.

## கோமளேசுவர முதலியார் ( )

ஊர் : சேலம்.

நூல் : சச்சிதாநந்த அடிகள் என்பவர் இயற்றிய உபநிஷத உரைக்கும், சொரூப சார விரிவுரைக்கும் தனித்தலியாக வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கோரக்கர் ( )

இவர் பதினென் சித்தர்களுள் ஒருவர்.

நூல் : பதினென் சித்தர் ஞானக் கோவையில் உள்ள பாட்டு, கோரக்கர் வைப்பு.

## கோவர்த்தனர் ( சங்க காலம் )

வே. பெ : கோவதத்தர்.

நூல் : குறுந்தொகை 66, 194.

## கோவிந்த உபாத்தியாயர் ( 19 -நூ )

தமிழ்ப் பள்ளிக்கூடம் ஒன்றின் ஆசிரியர்.

நூல் : திருக்கோவிலூர் ஆறுமுகசாமிகள் என்பவர் எழுதிய நிட்டாநுபூதி என்னும் நூலுக்கு, முத்துக்கிருட்டிணபிரமம் என்பவர் உரை எழுதி கி. பி. 1875 ஆம் ஆண்டில் பதிப்பித்த பொழுது, அப்பதிப்பினைப் பாராட்டி வழங்கிய சாற்றுக்கவி.

## கோவிந்த செட்டியார் ( )

நூல் : உமைநாமகீர்த்தனம் (1886). இந்நூல் 13 செய்யுட்களைக் கொண்டது ; உமையம்மையின் புகழினைக் கூறுவது.

## கோவிந்த செட்டியார் ம. ( 19 -நூ )

நூல் : த. செய்யப்ப முதலியார் என்பவர் இயற்றிய 'மும்மணி மாலை' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கோவிந்தசாமி ஆச்சாரியார் ( 20 -நூ )

ஊர் : கோயம்புத்தூர் மாவட்டம் திருப்பூர்.

நூல் : தென்சேரிகிரிப் பிரபந்தங்கள். இந்நூல் தென்சேரி கிரியில் எழுந்தருளிய கடவுள்மீது பக்திபூண்டு பாடப்பெற்றது.

## கோவிந்தசாமி உபாத்தியாயர் ( )

நூல் : எட்டுக்குடி வேலவர் பதிகம், சிங்காரவேலர் கீர்த்தனம், பழனியாண்டவர் பஞ்சரத்தினம்.

எட்டுக்குடி வேலவர் பதிகம் (1897) 18 செய்யுள்களைக் கொண்டது ; மிக நீண்ட ஆசிரிய விருத்தங்களால் ஆகியது ; இந்நூல் பழனியாண்டவர் பஞ்சரத்னம் என்ற நூலுடன் அச்சிடப் பெற்றுள்ளது.

## கோவிந்தசாமி ஐயர் மு. ( 20 -நூ )

ஊர் : மதுரை,

தந்தை : முத்துச்சுப்பையர்.

இவர் மதுரைக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்த சுப்பராய ஐயர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். மதுரை நகர் செயிண்ட் மேரிஸ் உயர்நிலைப்பள்ளியில் தமிழ் ஆசிரியராகப் பணிபுரிந்துள்ளார்.

நூல் : திருவிளையாடல் அகவற்பா, திருவிளையாடல் வண்ணம், சங்கரவிசயம், மாணிக்கவாசகர் வரலாற்று வெண்பா.

## கோவிந்தசாமி நாடார் கி. ( 20 -நூ )

ஊர் : தன்னிலம் தாலுகாவைச் சேர்ந்த கௌரியம் என்ற சிற்றூர்.

தந்தை : திருவேங்கட நாடார்.

நூல் : கபிலை சரித்திரக் கீர்த்தனை. இந்நூல் பசு ஒன்று, புலிக்கு அறிவுரை கூறி அதனை நல்வழியில் செலுத்திய செய்தியைக் கூறுவது. இவ்வரலாற்றினைப் பலர் வெண்பாவாகவும், விருத்தமாகவும் பாடியுள்ளனர். இவர் இசைப்பாவாகக் பாடியுள்ளார். இவ் இசைப்பாவில் இடையிடையே விருத்தம், சிந்து, உரைநடை முதலியவைகள் விரவி வந்துள்ளன.

## கோவிந்தசாமிப் பிள்ளை, இராம. ( )

நூல் : தருமை சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரியர் ஆற்றுப்படை.

## கோவிந்தசாமிப் பிள்ளை கு ( 20 -நூ )

இவருடைய ஆசிரியர் சாமி ஓம்பிரகாசநாதர் ஆவர்.

நூல் : குருதோத்திர பஞ்சரத்தினம். இந்நூல் ஓம்பிரகாச நாதர் மீது இயற்றப்பெற்றது.

## கோவிந்தசாமிப் பிள்ளை, ச. கு. ( 20 -ஆ )

வாழ்ந்த காலம் : 1903—1941.

இவர் 1920 ஆம் ஆண்டில் பள்ளியிறுதி வகுப்பில் தேர்ச்சியுற்றார். திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரியில் பி. ஏ. ஆனர்சு பட்டம் பெற்றார். சென்னை சட்டசபைப் பிரிவில் சிறிது காலம் பணியாற்றினார். பின்னர்த் தன்னுடைய இறுதிக் காலம் வரை அண்ணாமலைப் பல்கலைக் கழக வரலாற்றுத் துறையில் விரிவுரையாளராகப் பணிபுரிந்தார். கல்வெட்டுக்கள், பண்டைய பட்டயங்கள், சிற்பங்கள், ஓவியங்கள் ஆகியவற்றின் ஆராய்ச்சியில் ஈடுபட்டார். தஞ்சாவூர்ப் பெருவுடையார் கோவிலில்

கருவறையைச் சுற்றியுள்ள சுவர்களில் காணப்பெற்ற நாயக்கர் கால ஓவியங்களுக்கு அடியில் சோழர்கால ஓவியங்களிருப்பதை எடுத்துக் கூறியவர் இவரேயாவர். அதன் பின்னர்த்தான் இந்தியத் தொல்பொருள் பாதுகாப்புத் துறையினர் இவ்வோவி யங்களைப் பாதுகாக்க முற்பட்டனர்.

இவர் வரலாற்றுத் துறை விரிவுரையாளராக இருந்தும் சங்க இலக்கியம் சைவ சித்தாந்த நூல்கள் ஆகியவற்றில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். ஞானியாருடைய அடித்தொண்டராக விளங்கினர். பல்கலைக் கழகத்திம் மாணவர்களோடு சேர்ந்து நாடகங்கள் நடித்ததுண்டு. இலக்கிய ஏடுகளில் பல கட்டுரை கள் வரைந்துள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராகப் பொறுப்பேற்க இருந்த பொழுது தமது 38 ஆம் வயதில் கி. பி. 1941 ஆம் ஆண்டு ஜூன் திங்களில் காலமானர்.

நூல் : இந்திய நாட்டு வரலாறு.

## கோவிந்தசாமிப் பிள்ளை, மு. ( 20 - நூ )

நூல் : ம. அழகர்சாமிப் பிள்ளை என்பவர் இயற்றிய திருநெல்வேலிப் புராண உரைநடை என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கோவிந்தசாமி முதலியார் ( )

நூல் : தசாவதாரத் திருவிளையாடல் சங்கிரகம், விஷ்ணு பகவான் விபவமூர்த்தமாகிய தசாவதாரத் திருவிளையாடல். இந்நூல் தசாவதார வரலாற்றினை எல்லோரும் எளிதாகத் தெரிந்து கொள்ளும் வகையில் கும்மி, சிந்து, மங்களம், நாமாவளி, கண்ணி, கியால்மெட்டு, தனிக் கீர்த்தனங்கள் முதலிய இசைப் பாடல்களால் இயற்றப் பெற்றுள்ளது. 80 பாடல்களைக் கொண்டது.

## கோவிந்தசாமிராசு உ. வே. ( 20 -நூ )

ஊர் : கோயம்புத்தூர்.

நூல் : எங்கள் ஊர், குன்றுடையானும் மக்களும்.

## கோவிந்தசாமிராவ், பி. ஆர். ( )

நூல் : சாவித்திரி நாடகம் (1886). இந்நூல் சத்தியவான் சாவித்திரியின் வரலாற்றினைக் கூறும் நாடகமாகும்.

## கோவிந்தநாராயணப் பிள்ளை, சு. ( 20 -நூ )

ஊர் : திருநெல்வேலி மாவட்டம், ஸ்ரீவைகுண்டம் பிரிவில் உள்ள தெய்வச்சிலைபுரம்.

இவர், தெய்வச்சிலைபுரம் பாலசுந்தரகணேசப் பெருமாளுக்குத் திருக்கோயில் அமைத்து, வழிபாட்டிற்குரிய பொருளும் ஏற்படுத்தி, அக் கடவுளுக்குக் கைத்தொண்டு செய்ததோடு, பாடுதலையும் மேற்கொண்டவர்.

நூல் : முத்தமிழ் அட்சரமாலை. இந்நூலுக்குக் கா. சுப்பிரமணியப் பிள்ளை எழுதிய முகவுரையில் 'இது தமிழின் கண்ணுள்ள முப்பத்துமூன்று எழுத்துக்கள் போல முப்பத்துமூன்று பாடல்கள் அடங்கியதாய் முத்தமிழாகிய ஓங்காரத்தின் எழுத்துச் சொற் பொருள்களை இனிது விளக்குவதாய் அமைந்திருப்பதால் முத்தமிழ் அட்சரமாலை எனப்பெயர் பெற்றது என்று குறிப்பிட்டு நூலாசிரியரைப் பாராட்டியுள்ளசர்,

## கோவிந்தப்பச் செட்டியார், ( 19 -நூ )

ஊர் : கோயம்புத்தூர்.

நூல் : இளையான்கவிராயர் என்பவர் இயற்றிய 'அப்பரமேசர் தலபுராணம்' என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கோவிந்தப் பிள்ளை (          )

ஊர் : அன்னதானப்பட்டி.

நூல் : சுகவனம் அர்த்தநாரீசநாயகர் என்பவர் இயற்றிய கரபுரநாதர் புராணத்து உரையினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கோவிந்தப் பிள்ளை, வி. (          )

ஊர் : திரிசிரபுரம்.

நூல் : மன்னூர்கோயிற் புராணம், மகாவிந்தம்.

மன்னூற்கோயிற் புராணம் (1868) 1004 செய்யுட்களைக் கொண்டது. பாயிரம், நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்புக்களை முதலில் கொண்டு, பின்னர் கோப்பிரளைய அத்தியாயம் முதல் தீர்த்தவைப்ல அத்தியாயம் ஈருக எட்டு அத்தியாயங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இந்நூல் முழுமையும் வடமொழி நூலோடு ஒப்பு நோக்கியவர் தில்லைத்தானம் ஸ்ரீவைகுண்டாசிரிய சாமிகள் என்பவர் என்று தெரியவருகிறது.

மகாவிந்தம் (1869) இராமன் வைகுந்தம்புக்க செய்தியினைக் கூறுவது. இக்கதை இராமாயணத்தின் உத்தர காண்டத்தில் உள்ளது.

## கோவிந்த பட்டர் ( 12 -நூ )

இவர் எம்பெருமானாரின் சிறிய தாயார் மகன். கங்கையில் நீராடியபோது ஒரு லிங்கம் வந்தது. அதனைக் காலத்தீயில் வைத்து சிவலிங்க பூசை செய்தார். இவருடைய மாமன் திருமலைநம்பி. அவரால் இவர் வைணவரானார். இராமானுசர் மாணவராகவும், அவருக்கடுத்த ஆசாரியராகவும் வாழ்ந்தார்.

நூல் : பெரிய திருமொழி தனியன்.

## கோவிந்தபாரதி, கோ. ( 20 -நூ )

ஊர் : பாண்டியநாட்டில் வேம்பத்தூர் ; அந்தணர்.

இவர் சிலேடைப்புலி பிச்சுவையருக்கு மருகர்; சௌந்தர பாரதியிடம் கல்வி கற்றவர்.

நூல் : கூடற்பதிகம்.

## கோவிந்தராசக் கவிராசர், பி. ( 19 -நூ )

வாழ்விடம் : சென்னை நகரில் பிரம்பூர். திருமணம் கேசவ சுப்பராய முதலியார், சோடசாவதானம் தி. க. சுப்பராயச் செட்டியார் ஆகியோரிடம் கல்வி கற்றுப் புலமை பெற்ருர்.

நூல் : திருத்தனிகைச் சிங்காரமாலை, தனிப்பாடல்கள்.

## கோவிந்தராசச் செட்டியார் ( 20 -நூ )

ஊர் : பாலாற்றின் கரையில் உள்ள இராணிப்பேட்டை.

தந்தை : அண்ணுமலைச் செட்டியார்.

இவர் மாணவர் பலருக்குக் கல்வி கற்பிக்கும் பணியை மேற்கொண்டவர்.

நூல் : தனிகை நிரோட்டக யமகவந்தாதி.

## கோவிந்தராசதாசர், பூ. அ. (            )

நூல் : கணேசமூர்த்தியார் என்பவர் இயற்றிய ‘ சற்குருஸ்தவம் ’ என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்,

## கோவிந்தராச பாகவதர் ப. ( 19 -நூ )

ஊர் : வேலூர்.

தந்தை : பள்ளிகொண்டான். இவருடைய ஆசிரியர் புதுச்சேரியில் வாழ்ந்த சோமசுந்தரம் பிள்ளையாவர்.

நூல் : பகவத்தியாக கீர்த்தனம். இது இசை நூல்,

## கோவிந்தராச முதலியார், கா. ர. (20 - நூ)

ஊர் : காஞ்சிபுரம். பெரும்பகுதி சென்னையில் வாழ்ந்தவர்.

தந்தை : அரங்கசாமி முதலியார். தாய் : கமலாம்பாள்.

வாழ்ந்த காலம் : கி. பி. 1874—1959.

தொடக்கத்தில் செங்கல்வராயர் இலவசப் பள்ளியில் கல்வி கற்றார் ; பின்னர் தமிழறிஞர்களாகிய பசுபதி நாயகர், அப்பன் செட்டியார், காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, கோ. வடிவேல் செட்டியார், தி. த, கனகசுந்தரம் பிள்ளை ஆகியோரிடம் தமிழ் நூற்களைக் கற்றுத் தெளிந்தார். திருவள்ளூர் உயர்நிலைப் பள்ளியிலும், முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியிலும் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். சென்னைப் பச்சையப்பன் பள்ளியில் கி. பி. 1910—1922 வரை துணைத் தமிழாசிரிய ராகவும், கி. பி. 1936 இல் வேலையிலிருந்து ஓய்வுபெறும்வரை தலைமைத் தமிழாசிரியராகவும் தொண்டாற்றினார்.

இவர், பல செய்யுள் நூற்களை இயற்றியும். உரைநடை நூற்கள் எழுதியும், பழைய நூற்களுக்குக் குறிப்புரை எழுதிப் பதிப்பித்தும் பெருந்தொண்டாற்றினார். இவர் ஆற்றிய தொண்டினைப் பாராட்டி 22—5—1949 இல் சென்னையில் பொதுமக்கள் இவருக்குப் பொற்கிழி ஒன்று அளித்தார்கள்.

நூல் : அரங்கசாமிப் பாட்டியல் உரை, அரிசமயதீபம் உரை, இனியவை நாற்பது உரை. இன்னா நாற்பது உரை, கார்நாற்பது உரை, சரசுவதியந்தாதி உரை, பன்னிரு பாட்டியல் உரை, செய்யுள் நூற்கள் : ஆழ்வார்கள் உயிர் வருக்கமாலை, சரசுவதி ஒருபா ஒருபஃது, சரசுவதி வெண்பாப் பத்து, சரசுவதி கலிவிருத்தப்பத்து, சரசுவதி வஞ்சிவிருத்தப் பத்து, சரசுவதி சந்திரகலாமாலை, திருவேங்கடப் பதிற்றுப்பத் தந்தாதி, திருமகள் வெண்பாப் பத்து, திருமகள் கலித்துறைப் பத்து, நம்பாடுவார் சரிதம், மாறன் பஞ்சரத்தினம். உரைநடை நூல்கள் : கோவலன் சரிதை, சங்க நூல், இந்திய வீரர், ஆழ்வார் வரலாறு, ஆழ்வார் வழிக் குரவர் வரலாறு.

கண்ணன் வரலாறு, திருப்பாவை ஆராய்ச்சி, அம்பிகாபதியும் அரசிளங்குமரியும் முதலியன. மேலும் இவர் முல்லைப்பாட்டை ஆராய்ந்து ஒரு புத்துரை எழுதியுள்ளார். இவர் யாப்பருங்கலக் காரிகை, நன்னூல், இராமாநுசக் கவிராயர் விருத்தியுரை, இறையனார் அகப்பொருள் உரை, வீரசோழியப் பழையவுரை, நாற்கவிராச நம்பி அகப்பொருள் பழைய உரை, நேமிநாதம், தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி, தொல்காப்பிய எழுத்ததிகாரம் இளம்பூரணம் உரை முதலிய நூல்கள் பலவற்றையும் தெளிந்த குறிப்புரைகளுடன் சிறந்த முறையில் பதிப்பிப்பதற்குப் பெருந்துணை புரிந்துள்ளார்.

## கோவிந்தராச முதலியார், வா. தி. ( 20 -நூ )

இவர் தமிழ்க் கல்வியுடன் ஆங்கில அறிவும் வாய்க்கப் பெற்றவர், சென்னை ஐக்கிய நாணய சங்கப் பதிவு நிலையத்தில் கணக்கராகத் தொழில் புரிந்தவர்.

நூல் : இரத்தின பஞ்சகம். இது 5 பாடல்களால் ஆகிய நூல்; பஞ்சரத்தனம் போல் சிறப்புடையது.

## கோவிந்தராமாநுசதாசர், சே. ( 19 -நூ )

நூல் : அ. சுப்பராயச் செட்டியார் என்பவர் இயற்றிய சுப்பிரமணியர் தோத்திரப்பா என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## கோவூர் கிழார் ( சங்க காலம் )

ஊர் : கோவூர் ; வேளாளர்.

இவர் சோழன் நலங்கிள்ளியாலும் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனாலும் ஆதரிக்கப் பெற்றவர். நளங்கிள்ளி என்பான் ஆவூரை முற்றுகை செய்த காலத்து, உள்ளே அடைந்திருந்த சோழன் நெடுங்கிள்ளியைக் கதவைத் திறந்து கொண்டு வந்து போர் செய்ய வரும்படி பாடியவர். நலங்கிள்ளியிடத்திலிருந்து உறையூரினுட் புகுந்த இளந்தத்தன் என்னும்

புலவனை ஒற்றாக வந்தவன் என்று நினைத்து. நெடுங்கிள்ளி கொல்லப் புகுந்தபொழுது அவனைக் கொல்லாதபடி தடுத்துப் பாடி உய்யக்கொண்டவர். கிள்ளி வளவன், மலையமான் மக்களை யானைக்காலில் வைத்து இடறும்படி கட்டளையிடக் கண்டு, அவனைப்புகழ்ந்துபாடி அம்மக்களைக் கொல்லாமல் விட்டுவிடும்படி செய்த அருளுள்ளம் படைத்த புலவர், இவர் தமக்கு உதவி செய்தவர்களின் குணங்களைப் பாராட்டுதலிலும், வீரச்செயல்களை விளக்குவதிலும் ஆற்றல் வாய்ந்தவர் ; அஞ்சாத நெஞ்சினர்.

நூல் : குறுந்தொகை : 65. நற்றிணை : 393. புறநானூறு: 31, 32, 33, 41, 44, 45, 46, 47, 68, 70, 308, 373, 382, 386. 400.

## கோவேங்கைப் பெருங்கதவனார் ( சங்க காலம் )

நூல் ; குறுந்தொகை 134 ஆம் பாட்டு.

## கோழிக் கொற்றனார் ( சங்க காலம் )

ஊர் : கோழி எனப்படும் உறையூர்.

நூல் : குறுந்தொகை 276 ஆம் பாட்டு.

## கோளியூர் கிழார் மகனார் செழியனார் ( சங்க காலம் )

வேளாளர்.

நூல் : நற்றிணை : 383 ஆம் பாட்டு.

## கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார் ( சங்க காலம் )

ஊர் : மதுரை.
தந்தை : மாடலன்.

இவருடைய இயற்பெயர் குமரனார் என்பது. இவர், தந்தையார் காலத்திற்குப்பின் மதுரையிற் குடியேறி வாழ்ந்தா ராதலின் மதுரைக் குமரனார் எனப்பட்டார். இவருடைய

தந்தை மாடலன். இந்நாளில் புதுக்கோட்டை என வழங்கும் கோனாட்டில் எறிச்சலூரில் வாழ்ந்தவர். எறிச்சலூர் இந்நாளில் எறிச்சி என வழங்குகிறது.

நூல் ; புறநானூறு : 54, 61, 167, 180, 197, 394.

## கோனேரியப்ப முதலியார்

ஊர் : ஆழ்வார் திருநகரி.

இவர் கச்சியப்ப சிவாச்சாரியாரின் மாணவர்.

நூல் : கச்சியப்பர் பாடிய கந்தபுராணத்தின் ஏழாவது காண்டமாகிய 'உபதேச காண்டம்' இவரால் பாடப்பெற்றது. இவர் பாடிய செய்யுள் ஒன்று தனிச் செய்யுள் சிந்தாமணியில் காணப்படுகிறது. இப்பாட்டின் தலைப்பில் இவர் 'தமக்கு அரசனால் விடப்பட்டிருந்த விலங்கு முறியும்படி பாடியது' என்று குறிப்புக் காணப்படுகிறது.

## கோனேரியப்பனையங்கார் (        )

நூல் : சீரங்கநாயகியார் ஊசற்றிருநாமம் (1887). இந்நூல் 17 செய்யுட்களைக் கொண்டது: திருவரங்கத்து ஊசல் திருநாமம் என்னும் நூலுடன் சேர்த்துப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது,

## கௌசிக மகரிஷி (        )

நூல் : கௌசிக சிந்தாமணி.

## கௌபாலசித்தர் (        )

இவர் சித்தர்களில் ஒருவர்,

நூல் : கௌபாலசித்தர் ஆணிக்கோவை. இந்நூல் ஆணிக்கோவை என்றும் வழங்கப்பெறும், இவர் இந்நூலில் சொல்லி உள்ள செய்திகளை, பல தீவுகள், குன்றுகள், மலைகள் முதலான இடங்களில் தக்க ஆசிரியர்களைத் தேடிப்பார்த்துக் கண்டுபிடிக்க முடியாமல் கடைசியாகப் பொதியமலையில் கண்டுபிடித்து / அறிந்து கொண்டதாகத் தெரிகிறது,

## சக்கரபாணி ஆச்சார் (           )

**ஊர் :** கொங்குநாட்டில் ஊஞ்சலூர்,

நூல் : செல்லாண்டி அம்மன் சதகம்.

## சக்கரவர்த்தி நயினுர், அ. ( 20 -நூ )

ஊர் : தென்னுர்க்காடு மாவட்டம் - திண்டிவனம் பகுதி வீடூர்.

தந்தை : அப்பாச்சாமி நயினுர் ;

தாய் : அச்சம்மையார். சைனர்,

வாழ்ந்த காலம் : 17—5—1880 - 12—2—1960.

இவர் வெஸ்லி கல்லூரி. கிறித்தவக் கல்லூரி ஆகியவற்றில் கல்வி பயின்று, 1902 ஆம் ஆண்டில் பி. ஏ., பட்டம் / தத்துவப் பாடத்தில் மாநிலத்தில் முதல்வராகத் தேர்வு பெற்று மில்லர் தங்கப் பதக்கத்தையும் பெற்றுர். 1905 ஆம் ஆண்டில் எம். ஏ. பட்டமும், 1907 ஆம் ஆண்டில் எல். டி. தேர்வும் பெற்றுர். இராவ் பகதூர் என்ற சிறப்புப் பட்டமும் பெற்றுர்.

இவர் 1905 ஆம் ஆண்டில் வெஸ்லி மிஷன் பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் தமது ஆசிரியப் பணியைத் தொடங்கினுர். அடுத்த ஆண்டில் கணக்கதிகாரி அலுவலகத்தில் பணிபுரிந்தார். பின்னர் 1906 - 1909 ஆம் ஆண்டுகளில் சென்னை மாநிலக் கல்லூரியில் தத்துவத்துறைத் துணைப் பேராசிரியராகவும், 1917 - 1929 ஆண்டுகளில் பேராசிரியராகவும் பணியாற்றிய பிறகு இராசமகேந்திரபுரம் கலைக் கல்லூரியில் முதல்வரானுர். பின்னர் கும்பகோணம் கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றி 1938 ஆம் ஆண்டில் ஓய்வு பெற்றுர்.

இவர் தமது கல்விப் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகும் சென்னை அண்ணுமலை ஆந்திரப் பல்கலைக் கழகங்களின், நிருவாகக் குழு உறுப்பினராகவும், திண்டிவனம் செயின் மாணவர் விடுதித் தலைவராகவும், தென்னிந்திய சீவரட்சண சபை உறுப்பினராகவும் சேவை செய்துள்ளார்.

இவர் சைன சமய சித்தாந்தத்தை நன்கு கற்றவர். திரு. வி. கலியாணசுந்தர முதலியாரின் நண்பராக இருந்து அவருக்குச் சைன சமய நுட்பங்களை விளக்கிக் கூறியவர். தமது தந்தையார் எழுதிய மேரு மந்தரபுராண உரையை அச்சிட்டு வெளியிட்டுள்ளார், நீலகேசி என்ற நூலினை சமய திவாகர வாமன முனிவர் எழுதிய உரையுடனும், திருக்குறளைக் கவிராய பண்டிதர் எழுதிய உரையுடனும் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

நூல் : திருக்குறள் – ஆங்கில உரை, பஞ்சாத்திகாயம், சமயசாரம் – ஆங்கில விளக்கவுரை, பஞ்சாத்தகாயம், சமய சாரம் என்பன சமண சமயம் பற்றிய வடமொழி நூல்களாகும்.

## சக்திவேற் பிள்ளை, ஆ. ( 20 -நூ )

ஊர் : தஞ்சாவூர் மாவட்டம் பட்டுக்கோட்டைக்கு அண்மையில் உள்ள தாமரங்கோட்டை.

தந்தை : ஆறுமுகப் பிள்ளை ; வேளாளர்.

இலங்கையிலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்த சி. சாமிநாத பண்டிதரிடம் தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்றார். முருகக் கடவுளிடம் பெரிதும் ஈடுபாடுடையவர்.

இவர் மருங்காபுரி சமத்தானத்தில் சிறிது காலம் புலவராக இருந்தார். பின்னர் பாரதமித்திரன் என்னும் கிழமை இதழின் ஆசிரியராகப் பணியாற்றினார். இவ்விதழில் நாத்திகக் கொள்கைகளை எதிர்த்து ஆத்திகக் கொள்கைகளை வலியுறுத்திக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

நூல் : மந்திரமூர்த்தி விநாயகர் பிள்ளைத் தமிழ்.

## சகசானந்தர் ( 20 -நூ )

வே. பெ : முனுசாமி, சிகாமணி.

ஊர் : வடஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள மேல்புதுப்பாக்கம்.

தந்தை : அண்ணாமலையார். தாய் : அலர்மேலு அம்மாள்.

வாழ்ந்த காலம் : கி. பி. 27-1-1890 - 1959.

இவர் சிறுவயதிலேயே இறை வழிபாட்டில் நாட்டம் கொண்டார். முதலில் தமது ஊரில் இருந்த அமெரிக்கன் ஆர்க்காடு மிஷன் பள்ளியில் சேர்ந்து படித்தார். பின்னர்த் திண்டிவனம் ஆர்க்காடு மிஷன் பள்ளியில் சேர்ந்து உயர்நிலைக் கல்வி கற்ருர். இவர் கல்வித் திறமையாலும் குணநலங்களாலும் பள்ளி அதிகாரிகளின் கவனத்திற்குள்ளாஞர். இவரைக் கிறித்தவராக்கச் செய்த முயற்சியை மறுத்துவிட்டார். பின்னர் இவர் தம் சொந்த ஊருக்குத் திரும்பி சுப்பாநாயுடு என்பவர் வீட்டில் கவலே யோட்டும் வேலேயை மேற்கொண்டார். ஆனல் இவரது உள்ளம் ஞான மார்க்கத்திலேயே ஈடுபட்டது. இந் நிலேயில் நீலமேக அடிகள் என்ற பெரியவரிடம் வேதாந்த நூல் களேக் கற்ருர். இதனல் இவர் இல்லத்தைத் துறந்து காஞ்சீபுரம் சென்ருர். பிறகு நரசிங்கபுரம் என்ற ஊரில் இருந்த தக்கணசாமி என்ற பெரியாரிடமும், கரபாத்திர சிவப்பிரகாச அடிகளாரிடமும் சில மெய்யறிவு நூல்களேப் பயின்ருர். சிவப்பிரகாசர் இவருக்கு சகசாநந்தம் என்று பெயர் சூட்டினர். சகசானந்தர் கல்வி கற்றுக் கொண்டிருக்கும் பொழுது சிவப்பிரகாச அடிகளிடம் வந்து சேர்த்த பலர் அவரைக் கீழ்க்குலத்தவர் என்று வெறுத்தனர், ஆனல் அடிகளார் அவரிடம் வெறுப்புக் கொள்ளாமல் மற்றவரிடமும் அன்புரை கூறித் திருத்தினர். வெறுப்புக் காட்டியருவருள் ஒருவரான முருகேச முதலியார் என்பவரையே சகசாநந்தருக்குத் தருக்க நூல்களேக் கற்பிக்க ஏற்பாடு செய்தார். அவரது அறிவுத் திறத்தைக் கண்ட முருகேச முதலியார் தம் கொள் கைக்கு நாணினர். பின்னர் சிவப்பிரகாச அடிகளின் கட்டளே யின்பேரில் திருவிசைநல்லூர் சின்னேய நாயுடு என்பவரிடம் இலக்கண இலக்கியங்களேக் கற்றுத் தேர்ந்தார்.

சகசானந்தர் சிறந்த சொற்பொழிவாளர், கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் 'கல்வியும் அதன் பயனும் என்னும்' தலேப்பில் நிகழ்த்திய சொற்பொழிவு குறிப்பிடத்தக்கது.

இவர் தமது குருவின் கட்டளைப்படி சிதம்பரம் வந்து நந்தனார் பெயரில் மடம் ஒன்றும், அதன் அருகில் பள்ளி ஒன்றும் ஏற்படுத்தித் தாழ்த்தப்பட்ட மக்களுக்காகத் தொண்டாற்றினார். இப்பள்ளியில் வளர்ச்சிக் கருதிப் பெரும் பொருள் திரட்டி 1921 ஆம் ஆண்டில் விடுதி ஒன்று அமைத்து மாணவர்கள் பலருக்கு உணவளிக்க ஏற்பாடு செய்தார்.

இவர் 1926 ஆம் ஆண்டில் சென்னை சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 30 ஆண்டுகள் உறுப்பினராக இருந்து தொண்டாற்றியுள்ளார். மதுவிலக்கு, தீண்டாமை, கோயில் நுழைவு முதலிய சட்டங்கள் ஏற்பட்டுத் தாழ்த்தப்பட்ட மக்கள் நன்மையடையக் காரணமாய் இருந்தவர்களில் இவரது பங்கு பெரிதாகும். இவர் ஹரிஜன மக்களுக்காகத் தொண்டாற்றியபோது ஏற்பட்ட இன்னல்கள் பல. இவர் வண்டிச் சவாரி செய்வதைக்கூட இப்பகுதியில் இருந்த சில குடியினர் வெறுத்தனர். காந்தியடிகள் சிதம்பரம் வந்தபோதெல்லாம் நந்தனார் கல்விக் கழகம் சென்று இவரது தொண்டைப் பாராட்டியுள்ளார். இவ்வகையில் தொண்டாற்றிய இவர் 1959 ஆம் ஆண்டில் காலமானார்.

நூல் : ஆலயம் என்பது அரிசனங்களுக்கே. தீண்டாமை ஒழிப்பு.

வச்சிர சூசிகை உபநிடதம் என்னும் நூல் இவரால் வெளியிடப்பட்டுள்ளது.

சிதம்பரத்தில் தமக்குத் துணையாக இருந்த பரஞ்சோதி அடிகளாரின் நினைவாக பரஞ்சோதி என்ற இதழையும் நடத்தினார்.

## சகதேவ முதலியார் ( 20 -நூ )

ஊர் : சென்னை திருவள்ளூருக்கு அண்மையில் உள்ள சேலை.

தந்தை : சிங்கார முதலியார்.

வாழ்ந்த காலம் : 1874—1953.

வெஷ்லி மிஷன் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். கிறித்தவ மத குருமார் பலருக்குத் தமிழ் கற்பித்தவர். மணி திருநாவுக்கரசு முதலியார் பாட நூல் எழுதும்போது துணையாக இருந்தவர். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் வெளியிட்ட கழகத் தமிழ்ப்பாட நூல்களுள் சிலவற்றை அமைத்துக் கொடுத்தவர். 28-7-1953-இல் காலமானார்.

நூல்: நல்லொழுக்கப்பாடம், வாஸ்கோடகாமா, பேசாதார் பேச்சு.

**சகநாத நாயுடு அ. ( )**

ஊர்: புதுச்சேரி.

நூல்: கணேசமூர்த்தியார் என்பவர் இயற்றிய சற்குருஸ்தவம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சகநாதையர் ( )**

நூல்: மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை.

**சகலாகம பண்டிதர் ( )**

பார்க்க: அருணந்தி சிவாச்சாரியார்.

**சங்கமுத்துப் பிள்ளை (19–நூ)**

ஊர்: பெருநாழி.

நூல்: இராமலிங்கம் பிள்ளை இயற்றிய 'கந்தபுராண வண்ணம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சங்கயாப்புடையார் ( )**

நூல்: சங்கயாப்பு. இந்நூல் இலக்கண நூல். இந்நூலின் சூத்திரங்கள் பல யாப்பருங்கல விருத்தியில் ஆளப்படுகின்றன.

## சங்கர கவி ( )

பார்க்க: சங்கராச்சாரியார்.

## சங்கர குமார முனிவர் ( )

ஊர்: தருமபுரம்.

நூல்: தருமபுரத் தலபுராணம், சச்சிதானந்த விநாயகர் பிள்ளைத் தமிழ்.

## சங்கரசிந்தாமணிப் புலவர் ( )

ஊர்: மதுரை மாட்டத்தினர்.

இவர் கல்வியில் சிறப்புடையவராகத் திகழ்ந்துள்ளார். ஆனால் இவரியற்றிய நூல்கள் ஏதும் கிடைக்கவில்லை. போடி நாயக்கனூரில் வாழ்ந்த பெருநிலக் கிழார் ஒருவரிடம் தமது பசித்துன்பத்தைப் புலி என்று உருவகித்துப் பாடிய பாடல் ஒன்றே கிடைத்துள்ளது.

நூல்: [1]"பையாடரவணி சொக்கேசர் கூடல் பதியைவிட்டு" என்று தொடங்கும் தனிப்பாடல்.

## சங்கரசுப்பா சாத்திரிகள் (20-ஆ)

ஊர்: வேம்பத்தூர்.

நூல்: மா. அ. செண்பகக் குமாருப்பிள்ளை என்பவர் இயற்றிய சற்குருநாதர் சரித்திரம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சங்கர சுப்பிரமணியக் கவிராயர் ( )

ஊர்: வேம்பத்தூர்; அந்தணர்.

நூல்: திருவனந்தபுரம் பத்மநாபர் பிள்ளைத் தமிழ், பத்மநாபர் மகாரவண்ணம், தலவிலாசம்.

## சங்கர சுப்பிரமணியப் பிள்ளை (          )

ஊர்: இராசவல்லிபுரம்.

நூல்: ஆத்மாநந்த அடிகள் இயற்றிய ஆத்மாநந்த விளக்கம் என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சங்கரதாச சாமிகள் (20-நூ)

ஊர்: இவர் திருநெல்வேலி மாவட்டம் தூத்துக்குடி.

தந்தை: தாமோதரக் கணக்கப்பிள்ளை.

வாழ்ந்த காலம்: கி.பி. 1867-1922.

நாடகத் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவிய இவர் வண்ணச் சரபம் எனவும் முருகதாச சாமிகள் எனவும் பெயர் பெற்ற தண்டபாணி அடிகளிடம் பல நூல்களைப் பாடம் கேட்டுத் தமது தமிழறிவைப் பெருக்கிக் கொண்டார். செய்யுள் இயற்றும் திறமும் பெற்றார்.

இவர், தொடக்கத்தில் சிறிது காலம் தூத்துக்குடியில் கணக்கராக அலுவல் புரிந்தார். பின்னர் நாடகத்துறையில் சிறிது காலம் பணியாற்றினார். அதன்பிறகு பல ஊர்களுக்கும் சென்று துறவியைப் போலச் சுற்றித் திரிந்தார். அப்பொழுது தான் இவர் சாமிகள் என அழைக்கப்பட்டார். இந்நிலையில் இருந்த இவர் மான்பூண்டியா பிள்ளை என்பவரது விருப்பப்படி மீண்டும் நாடகத்துறையில் நுழைந்து பணியாற்றத் தொடங் கினார். இவர் முதலில் நாடக அவைகளில் நடிகர்களை பயிற்று விக்கும் ஆசிரியர் பணியை மேற்கொண்டார். நாடகத்துறை யில் பெயர் பெற்று விளங்கிய சி. கன்னையா, முனுசாமி நாயுடு சி.எஸ் சாமண்ணா, கிட்டப்பா நவாப் டி.எஸ். இராசமாணிக்கம் டி.கே.எஸ்.சகோதரர்கள் ஆகியோரும் இவரிடத்தில் பயிற்சி பெற்றவர்களேயாவர்.

இவர், 'சமரச சன்மார்க்கசபை' என்னும் பெயரில் நாடக அவை ஒன்றினைச் சில ஆண்டுகள் நடத்தினார். இவ் அவை

யில் இருந்த பெரிய நடிகர்கள் சிலர் தங்கள் விருப்பம்போல் செயல்படத் தொடங்கியதால், சங்கரதாசர் சிறுவர்களுக்கு நாடகப் பயிற்சி அளிக்க எண்ணி, பாலமீன ரஞ்சனி சபை தத்துவ மீன லோசனிசபை என்னும் அவைகளைத் தொடங்கிப் பலருக்குப் பயிற்சி அளித்தார்.

நாடகத் தமிழில் நல்ல புலமை பெற்றிருந்த இவர் உரைநடைகளையும், பாட்டுக்களையும் எளிதில் இயற்றுவதில் வல்லவராய்த் திகழ்ந்தவர். இவருடைய உரைநடையும் பாட்டுக்களும் எளிமையும், கருத்தும், எதுகை, மோனை நயமும் அமைந்தவைகளாகும். இவர் ஒருமுறை ஒரே நாள் இரவில் நூற்றுக்கு மேற்பட்ட பாடல்கள், உரை நடைகள் அமைந்த நாடகம் ஒன்றினை இயற்றினார் என்பர். இவரது நாடகப் புலமையைப் பாராட்டி யாழ்ப்பாணம் தமிழ் சங்கத்தினர் 'வலம்புரிச்சங்கு' ஒன்றைப் பரிசளித்துச் சிறப்பித்துள்ளனர்.

இவருடைய புலமைக்குச் சான்றாக நாடக அரங்கேற்ற நிகழ்ச்சி ஒன்றினைக் கூறுவர். இவர் கோவலன் கதையை நாடகமாக்கி மதுரையில் அரங்கேற்றினார். சிலம்பை விற்கக் கோவலன் மதுரைக்குச் செல்லும்போது கண்ணகி அவனைத் தடுக்கிறாள். அப்போது,

"மாபாவியோர் கூடி வாழும் மதுரைக்கு
மன்னா போகாதீர் இன்று"

என்று ஒரு பாடலை அமைத்திருந்தார். அரங்கேற்றத்தில் இப் பாடலைக் கேட்டதும், பார்வையாளர்கள் சங்கரதாசரை மேடைக்குக் கொண்டுவா என்று கூக்குரலிட்டனர். உடனே இவர் மேடைமீது தோன்றி 'ம' என்னும் சொல் திருமகளைக் குறிக்கும், 'பா' என்னும் சொல் கலைமகளைக் குறிக்கும். 'வி' என்னும் சொல் மலைமகளைக் குறிக்கும். எனவே மாபாவியோர் கூடிவாழும் மதுரை என்றால் கல்வி, செல்வம் முதலிய அனைத்து நலமும் அமையப் பெற்றவர்கள் தங்கி வாழுகின்ற மதுரை என்று பொருள்படுமேயன்றித் தீவினையாளர்கள் எப்படிக் கூடி வாழ முடியும் என்று பொருள் விளக்கம் செய்தார்.

உடனே அவையில் கூடியிருந்தவர்கள் கைதட்டி ஆரவாரித்து அவரது புலமையைப் பாராட்டினர்.

இவர் நடிகர்களைப் பயிற்றுவிக்கும் ஆசிரியராக விளங்கியதோடு, தாமே சிறந்ததொரு நடிகராகவும் விளங்கினர். இரணியன், எமன், இராவணன் வேடங்களில் நடிப்பதில் இவர் வல்லவர். இவர் அஞ்சத்தக்க கோலங்களில் நாடக மேடைகளில் தோன்றி நடிக்கும்போது சிலருக்கு உண்மையிலேயே அச்சம் ஏற்படும் என்பர்.

சங்க நூல்களில் பயிற்சி பெற்று, சங்க நூற்கருத்துக்களைத் தம் நாடகங்களில் வெளிப்படுத்தியுள்ள இவர் பல நாடக நூல்களை இயற்றியுள்ளார். நாடகத்துறையில் புகழ்பெற்று விளங்கிய இவர் தனது 55வது வயதில் புதுச்சேரியில் 13—11—1922ஆம் ஆண்டில் காலமானர்.

நூல்: அபிமன்யு சுந்தரி, பார்வதி கல்யாணம், பிரபுலிங்கலீலை, வள்ளி திருமணம், பாதுகா பட்டாபிஷேகம், இலங்கா தகனம்: அல்லி அர்ச்சுன, சிறுத்தொண்டர், சதி அனுசூயா, பவளக்கொடி, சுலோசனசதி, மணிமேகலை, மிருச்சகடி, சீமாந்தனி, சாவித்திரி, கோவலன், பிரகலாதா, ரோமியோவும் சூலியத்தும்.

### சங்கரதாஸ் (20–நூ)

ஊர்: தூத்துக்குடி.

நூல்: அருணசலச் செட்டியார் இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

### சங்கரநமச்சிவாயர் (17–நூ)

ஊர்: திருநெல்வேலி, வேளாளர்

இவர் இலக்கணக் கொத்து சாமிநாத தேசிகரை ஆசிரியராகக் கொண்டு தமிழ் நூல்களைக் கற்ருர். பின்னர் ஊற்றுமலைப் பெருநிலக்கிழார் இருதாயாலய மருதப்பத் தேவரின் அவைக்களப் புலவராக அமர்ந்தார். அவரது

வேண்டுகோளுக்கு ஏற்ப நன்னூலுக்கு விருத்தியுரை எழுதி உள்ளார்.

நூல்: நன்னூல்-விருத்தியுரை.

இவ்வுரையில் தமிழ்நூல்கள் பலமேற்கோள்களாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. உவமைகளும், நீதிகளும் அரிய செய்திகளும் காணப்பெறுகின்றன. வைணவ நூல்களில் நூல் ஆசிரியருக்குள்ள பயிற்சியையும் இவ்வுரை தெரிவிக்கின்றது இவ்வுரை மயிலைநாதர் உரையைப் பின்பற்றியது எனினும் பல இடங்களில் மயிலைநாதருரை மறுக்கப்படுகிறது. சிவஞான முனிவர் தென்மொழி-வடமொழிகளில் கண்ட அறிய இலக்கண முடிவுகளை இவ்வுரையின் இடையிடையே செருகிச் சிறப்பாக்கியுள்ளார்.

## சங்கரநாராயண ஆச்சாரியார் (20-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம்.

நூல்: ஸ்ரீவில்லிபுத்தூர் சூடிக் கொடுத்தாள் பதிகம். சிதம்பர நகர் வேங்கடாசல சுவாமி பதிகம், மடக்குவிருத்தப் பதிகம், தோத்திரப் பதிகம்.

## சங்கரநாராயணக் கவிராயர் ( )

ஊர்: வழுதியூர்.

நூல்: காத்தான் பிள்ளைக் கொச்சகம்.

இந்நூல் சேரைநகர் வணிகர் செந்திகாத்தான் பிள்ளை என்பவர் மீது இயற்றப் பெற்றது.

## சங்கரநாராயணக் கவிராயர், வீ ( )

ஊர்: எட்டயபுரத்தை அடுத்துள்ள சம்புலிங்கபுரம்.

தந்தை: வீரராகவக் கவிராயர்.

நூல்: நாராயணசாமி நாயுடு என்பவர் பாடிய கேமன் முனிவர் வெண்பா அந்தாதி என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சங்கரநாராயண சாத்திரிகள்** ( 19-நூ )

நூல்: குவலாயானந்தம்-மொழிபெயர்ப்பு (1895).

இந்நூல் வடமொழியில் இருந்து தமிழாக்கம் செய்யப் பெற்றுள்ளது. இந்நூலில் முகவூர் மீனாட்சிசுந்தரக் கவிராயர் சுலோகங்களின் மொழிபெயர்ப்புக்கு இசைந்தப்படி செய்த செய்யுட்களும் அமைந்துள்ளன.

**சங்கரநாராயணப் பிள்ளை அ.** (19-நூ)

ஊர்: திருநெல்வேலி.

தந்தை: சுப்பிரமணியப் பிள்ளை.

நூல்: திருத்தொண்டர் ஆநந்தக் களிப்பு.

இந்நூலின் பாடல்கள் இசைப்பாடல்களாகும்.

**சங்கரநாராயணப்பிள்ளை சு.** ( )

நூல்; கோமான்மியம்.

இந்நூல் செய்யுள் நடையில் அமைந்தது; பசுவின்பெருமைக்ளை விளக்கி அதனைப் பாதுகாக்கும் முறைகளை எடுத்துக் கூறுவது; அதனை வழிபடும் முறைகளும் இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

**சங்கரநாராயண பாரதியார் (20-நூ)**

ஊர்; திருநெல்வேலி மாவட்டம்.

நூல்: கன்னியாகுமரி பகவதியம்மன் பதிகம்.

**சங்கரநாராயணர்** ( )

ஊர்: பாண்டிய நாட்டு வேம்பத்தூர்.

நூல்: மதுரைக்கோவை.

இக்கோவையில் 403 செய்யுட்கள் உள்ளன. இந்நூலினை வையாபுரிப்பிள்ளை அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

**சங்கரநாராயணன் ( )**

நூல்: திருப்புத்தூர்ப் புராணம்.

இப்புராணம் பாண்டிய நாட்டுத் திருப்புத்தூர்த் தலத்தின் சிறப்பினைக் கூறுவது. நூல் முற்றுப் பெறவில்லை.

**சங்கர நாவலர் ( )**

தந்தை; சிவசங்கர நாவலர்.

நூல்: கன்னியாகுமரித்தலபுராணம்.

**சங்கரப்பிள்ளை யோன் ( )**

ஊர்: யாழ்ப்பாணம், மாணிப்பாயில் உடுவில்.

நூல்; யாழ்ப்பாணச் சரித்திரம்.

**சங்கரபண்டிதர் (19நூ)**

வே. பெ: நீர்வேலிச் சங்கரபண்டிதர்.

ஊர்; ஈழநாட்டில் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த சுன்னாகம்.

தந்தை: சிவகுருநாதர்; தாய்: தெய்வயானை அம்மையார்: வேளாளர்.

வாழ்ந்த காலம்: கி. பி. 1821-1891.

இவர் சுன்னாகத்தைச் சேர்ந்தவரெனினும நீர்வேலி என்ற இடத்தை இருப்பிடமாகக் கொண்டமையால் நீர்வேலிச் சங்கரபண்டிதர் என அழைக்கப் பெற்றார்.

யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த வடமொழிப் பண்டிதர்களுள் இவரே தலைசிறந்தவர் என்று கூறுவர். இவர் கந்தோரடை அப்பாப்பிள்ளை உபாத்தியாயர் என்பவரிடம் தமிழ் இலக்கண

இலக்கியங்களைக் கற்ருர். வேதாரண்யம் சாமிநாத தேசிகரிடம் வடமொழி வியாகரணம், தருக்கம் காவியம, முதலியவற்றைக் கற்ருர். சமயப் பற்று மிகுதியாகிய நிலையில் முத்துச்சாமி தேசிகர் என்பவரிடம் தீக்கை பெற்றுச் சிவ பூசையினை மேற்கொண்டார். பிறகு சைவ சமய நூல்களைக் கற்றுத் தேர்வு பெற்ருர். பின்னர் இவர்தம் மகன் சிவப் பிரகாச பண்டிதருக்கும் மற்றும் பலருக்கும் தமிழ் நூல்களைக் கற்பித்தார். வடமொழி நூல்களைத் தமிழாக்கம் செய்தும், நூல்கள் பல எழுதியும் சைவ சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் தொண்டாற்றிஞர்.

இவர் கிறித்தவக் குருமார்கள் சமயத் தொண்டு செய்யும் இடங்களுக்குச் சென்று சைவ சமயத் தொண்டாற்றிஞர். கிறித்தவக் குருமார்களைச் சொற்போருக்கழைத்து வாதில் வென்ருர்.

நூல்: கிறித்தவ மத கண்டனம், சைவப்பிரகாசனம், சிரார்த்தவிதி சுத்தசங்கிரகம், சிவதூஷண கண்டனம், அனுட்டவிதி, மிலேச்சமத விகற்பம், சிவபூசையந்தாதி உரை, அகநிர்ணயத் தமிழுரை, சட்சுலோகித்தமிழுரை, சமக்கிருதச் சிவஞான போதத் தமிழுரை, தாதுமாலை.

**சங்கர பாண்டியன் பிள்ளை** (20 நூ)

ஊர்: சங்கரன் கோவிலையடுத்த நகரம்; சைவ வேளாளர்.

நூல்: திருமலையில் எழுந்தருளிய முருகப் பெருமான்மீது 'வெண்பா அந்தாதி, திருமலைக்குமரன் பதிகம், வருகைப் பதிகம்.

**சங்கரம்மாள்** ( )

நூல்: பழமொழித் தாலாட்டு (1894).

**சங்கரமூர்த்திக் கவிராயர்** (18–நூ)

ஊர். இராமநாதபுரம் மாவட்டம், இராசபாளையம்.

தந்தை: மீனாட்சி நாதபிள்ளை; கார்காத்த வேளாளர்.

இவர் இளமைக் காலத்தில் சுப்பம்மாள் என்ற அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார். பின்னர் திருவாவடுதுறை ஆதீனம் சென்று சிவஞான முனிவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

நூல்: கன்னிவாடி சமீன்சோலை, சேற்றூர்பள்ளு, தனிப்பாடல்கள், கன்னிவாடி சமீன்சோலை என்ற நூல் மதுரை மாவட்டம் கன்னிவாடி என்ற ஊரிலிருந்த பெருநிலக் கிழார் அப்பைய நாயக்கர் என்பவர்மீது பாடப்பெற்றது. சேற்றூர்ப்பள்ளு என்ற நுல் இராமலிங்கத் தேவர் என்பவரது வேண்டுக் கோளுக்கு ஏற்ப, சேற்றூர்ப் பெருநிலக்கிழார்மீது பாடப் பெற்றது. இதற்கு நன்கொடையாகச் சில விளைநிலங் களையும் அணிகலன்களையும் அவர் புலவருக்கு அளித்தார்

## சங்கரமூர்த்திக் கோனார் ( )

நூல்: பாகவத அம்மானை இரண்டாம் புத்தகம் (1893).

இந்நூலில் பத்தாவது ஸ்கந்தம் முதல் பன்னிரண்டாவது ஸ்கந்தம் முடிய உள்ள பகுதியுள்ளன.

## சங்கரமூர்த்திப் புலவர் (19-நூ)

ஊர். நல்லூர்.

தந்தை: நல்லதம்பி.

நூல்: மாணிக்கவாசகர் அம்மானை.

இந்நூல் மாணிக்க வாசகர் வரலாற்றினை எடுத்துரைப்பது.

## சங்கரமூர்த்திப் புலவர் வீ ( )

வே. பெ. வீரபாண்டியப்புலவர்.

ஊர்: தூத்துக்குடி.

நூல்: இராமலிங்க சதகம் (1896).

**சங்கரமூர்த்தி முதலியார் ( )**

ஊர்: திருநெல்வேலி.

நூல்: சண்முகம்பிள்ளை வே. என்பவர் இயற்றிய 'திருவிளையாடற் புராண சங்கிரகம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாரயிம்.

**சங்கரராமன் க. ச (20 நூ)**

வாழ்ந்த காலம்: 20—11—1887—26—1—1952.

இவர் எம். ஏ எல். டி. பட்டம் பெற்றவர்.

நூல்: செந்தமிழே கொடுமலையாளம்.

இந்நூலில் இவர் மலையாள மொழி, தமிழ் மொழியில் இருந்து கிளைத்த மொழியோ உடன்பிறந்த மொழியோ அல்ல என்றும் கொடுமலையாளம் என்பது வடமொழிக் கலப்பிற்கு முன்பிருந்த மலையாள மொழியென்றும் அதுவும் தமிழ் மொழியும் ஒன்று என்றும் வாதிக்கின்றார்.

**சங்கரலிங்கத் தேவர் (19-நூ)**

ஊர்: அமுதாபுரம்.

நூல்: ஊற்றுமலைப் பெருநிலக் கிழார்மீது இயற்றிய பாடல்கள்

**சங்கரலிங்க பாரதி ஆ ( )**

தந்தை: ஆதிலே ஆச்சாரியார்; விசுவப் பிரமகுலத்தினர்.

நூல்: கும்பகோணம் சுப்பிரமணியப்பத்தர் என்பவர் மீது பாடிய பாடல்கள்.

**சங்கரலிங்கம் பிள்ளை I (19-நூ)**

நூல்: இராமச்சந்திர வெள்ளைப் மொம்மைய நாயகர் என்பவர் இயற்றிய இதயதீபம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சங்கரலிங்கம் பிள்ளை–2** (19-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் மேலவீரராகவபுரம்.

நூல்: சிவபெருமான் அனுக்கிரகவிதி-நித்திய பாராயணம் (1887) பொருனைமாதாவின் ஸ்தல புராணம், (1895), தாம்பிரவர்ணி ஸ்தல புராணம், மஹாதாம்பிரவர்ணி புராணம் (1886).

சிவபெருமான் அனுக்கிரகவிதி–நித்திய பாராயணம் என்ற நூலில் அகஸ்தியர் தோத்திரம் (22) சொர்ண வயிரமாலை (32) பஞ்சரத்தினவராகி மாலை (31) ஆகியவை அடங்கியுள்ளன.

'பொருனை மாதாவின் ஸ்தலபுராணம்' என்ற நூல் பாட்டும் உரையுமாக உள்ளது. குறுக்குத் துறைப் பதிகமும் இதில் உள்ளது.

மஹாதாம்பிரவர்ணி புராணம், தாம்பிர பரணி ஆற்றின் சிறப்புக்களைக் கூறுவது.

**சங்கரலிங்கம் பிள்ளை அ** ( )

ஊர்: தொண்டை நாட்டில் முத்தூர். சென்னை நகரில் வாழ்ந்திருந்தவர்.

தந்தை: அப்பாவுப்பிள்ளை.

இவர், பி. ஏ. வரையில் ஆங்கிலக் கல்வி கற்றவர். தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சியும் பெற்றவர்.

நூல்: திருவல்லிக்கேணி கலம்பகம் (1898). இந்நூல் சூளையில் வாழ்ந்த பெருமாள் நாயுடு மகனார் நாதமுனி நாயுடு என்பவர் வேண்டுகோளுக்கு ஏற்பத் திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் மீது பாடபெற்றது.

**சங்கரலிங்க முதலியார் எஸ்.** (20-நூ)

நூல்: ஜூபிலி தமிழ்ப்பேரகராதி (1935). இவ்வகராதி நூல் 1386 பக்கங்களைக் கொண்டது.

**சங்கரலிங்க முதலியார் க். பா.** (20-நூ)

தந்தை: பாடகலிங்க முதலியார்; செங்குந்தர்.

நூல்: இரட்டை நாயகர் பதிகம்.

**சங்கரன் முனுசாமி பிள்ளை** (20-நூ)

ஊர்; இலங்கை.

வாழ்ந்த காலம் 1903—1956

இவர் தென்னாப்பிரிக்காவில் தமிழ்ப் பத்திரிகையாளராகவும், நூலாசிரியராகவும் பணியாற்றியுள்ளார். தமிழ்மணி என்ற பத்திரிகையின் ஆசிரியராக இருந்துள்ளார், செந்தமிழ் செல்வி, பிராசமலர் என்ற பத்திரிகைகளில் கல்விப் பகுதி ஆசிரியர் பொறுப்பை ஏற்றிருந்தார். இந்துத் தமிழ் நிலையத்தின் (Hindu Tamil Institute) முதல்வராகத் தொண்டாற்றியுள்ளார்.

நூல்: சரஸ்வதி, பாலர் பாடல், வில்விதுரன்சொல், நண்பரும் பகைவரும், திருநாவுக்கரசர்.

சேக்சுபியர் இயற்றிய லியர்மன்னன், மாக்பெத், சூலியஸ் சீசர் முதலிய நாடகங்களை மேடைக்கேற்றவாறு தமிழாக்கம் செய்து தந்துள்ளார்.

**சங்கரனார்** (          )

நூல்; ஞானசரநூல் சாஸ்திரம் (1883). இந்நூல் பஞ்சபட்சி சாஸ்திரம் என்ற நூலுடன் அச்சிடப்பட்டுள்ளது.

**சங்கரானந்தர்** (          )

நூல்; திருவருள் வெண்பா.

இந்நூல் முற்றுப்பெற்றுள்ளது: உரை உள்ளது: ஆனால் அச்சிடப் பெற்றதாகத் தெரியவில்லை.

**சங்கவருணன் என்னும் நாகரியர் ( )**

இ. பெ: நாகரியர்.

இவர் பெயர் நாகரியார் என்றும் நாகரையர் என்றும் நாகரிகர் என்றும் பலவாறு வழங்கப்படுகிறது. மரபால் பெற்ற புலவர் வரிசையில் இவருடைய பெயரைச் சேர்த்து உள்ளனர். இவரைப் பற்றியோ அல்லது இவரால் பாடப்பட்ட தந்துமாறன் என்பவனைப் பற்றியோ ஒன்றும் தெரிந்திலது. இவர் பாடியய பாடலில் இறந்தவருக்குச் செய்யும் சடங்கு கூறப்பட்டுள்ளது இறந்தவன் பாடைமேற் கிடந்து புலையனால் சுடப்படும் சோற்றைப் புல்லின்மேல் அமர்ந்துண்ணும் சடங்கொன்று கூறப்படுகின்றது.

சங்கவருணன் என்பதற்கு வளைவணன் என்பது தமிழ் என்றும் இப்பெயர் வடமொழியில் சங்கவருணன் என மொழி பெயர்க்கப்பட்டுள்ளது என்றும் கூறுப. வளைவணன் என்றொரு நாகநாட்டரசன் மணிமேகலையிற் காணப்படுகின்றான். இப்புலவர் பெயரும் நாகைரையர் என்று காணப்படுவதால் இவர் நாகநாட்டிற் பிறந்து தமிழகம் அடைந்து தமிழ்ப்புலமை பெற்றுச் சான்றோ-ராயினரென்று உணரலாம். சோழ வேந்தற்குத் திரையனைப் பெற்ற பீலிவளைக்குத் தந்தையாகிய வளைவணன் முடிவில் துறவு பூண்டு சான்றோனாகித் தமிழகம் அடைந்து சான்றோர் குழுவிடை இருந்தான் என்றும், அக்காலத்தே தந்து மாறனைக் கண்டு இப்பாட்டால் அறத்தை வற்புறுத்தினான் என்றும் கோடற்கு இடனுண்டு.

நூல்: புறநானூறு: 360.

**சங்கிலியா பிள்ளை ( )**

நூல்: நீதிநெறி அரிச்சந்திர நாடகம் (1899).

இந்நூல் அரிச்சந்திரன் வாழ்க்கை வரலாறு பற்றிய நாடகம். பெரியாம்பிள்ளை என்பாரும் மூக்க வேளாளரும் ஆடிவருகிற நாடகம் என்பர்; கீர்த்தனை முதலியன விரவி வருவது.

## சங்கு சுப்பிரமணியன் (20-நூ)

இ. பெ: சுப்பிரமணியன்.

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் தேரழுந்தூர்.

தந்தை: சுந்தரம் ஐயர்; தாய்: மீனாட்சி அம்மாள்

பிறந்த நாள்: கி.பி. 18—11—1905.

இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் இடைநிலை வகுப்பு வரை கல்வி பயின்றவர்: ஹனுமான், தினமணி ஆசிரியர் குழுக்களில் பங்கு கொண்டு பணியாற்றியுள்ளார். சுதந்திரச் சங்கு என்ற பத்திரிக்கையில் ஆசியராகப் பணியயாற்றிய காலத்தில் சங்கு என்ற பெயர் இவருக்கு ஏற்பட்டது

இவர் எழுத்துப்பணி, நாட்டுப்பணிகளில் ஈடுபாடு மிக்கவராகத் திகழ்ந்தரர். விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறையில் இருந்தபோது தற்காலப் பொருளாதாரம், உலக சரித்திர நெருக்கடிகள் முதலிய அரசியல் விளக்கங்கள் பற்றி அரசியல் கைதிகளுக்கு வகுப்புகள் நடத்தியுள்ளார். பத்திரிகைகளில் பல சிறுகதைகள், கட்டுரைகள், கவிதைகள் வரைந்து உள்ளார். மகாகவி சுப்பிரமணிய பாரதியாருடன் இரண்டு ஆண்டுகள் கூடவே இருந்து அவரது பாடல்களைப் பாடியுள்ளார். வானொலி நாடகங்களும், திரைப்படங்களுக்கு வசனமும் பசனைப் பாடல்களும் இயற்றியுள்ளார். நாலாயிர திவ்யப் பிரபந்தம், அதற்கான வியாக்கியானங்களான ஈடு' முதலிய நூல்களில் ஆராய்ச்சி மேற்கொண்டுள்ளார்

நூல்: கீதகோவிந்தம்-(தமிழாக்கம்), சம்பிரதாயம், இந்திய ஓம்ரூல் (தமிழாக்கம்), ஆராக்கிய வழி-(தமிழாக்கம்), காந்தி சரிதை (தமிழாக்கம்), பாகவதக்கதைகள்.

'கீதகோவிந்தம்' என்ற நூல் வடமொழியில் ஜயதேவர் என்பவரால் இயற்றப்பெற்ற காப்பியமாகும். சம்பிரதாயம் ஒரு நாடக நூல் இந்திய ஓம்ரூல், ஆரோக்கியவழி, காந்தி சரிதை முதலியன காந்தியப் பிரசார நூல்கள். பாகவதக் கதைகள் தினமணி இதழில் ஓர் ஆண்டு காலம் வெளிவந்தது. இத்தொகுப்பு நூல் இன்னும் அச்சாகவில்லை.

**சச்சிதானந்த சாமிகள் ( )**

ஊர்: தொண்டைநாட்டு ஈசூர். சென்னைக் குயப்பேட்டையில் வாழ்ந்தவர்.

வாழ்ந்த காலம் 1815-1889.

இவர் திருத்தணிகைச் சரவணப்பெருமாளையரிடம் தமிழ் நூல் களைக்கற்றார் புரசை அருணாசல சாமிகளின் அருளைப் பெற்றார்.

நூல்: உத்தமவாதம், எதார்த்தவாதம், சர்வமத சித்தாந்த விளக்க வினாவிடை, சீவகாருணிய விளக்கம், சுவானுபூதி விளக்கம், திருக்கு திரிசிய விவேகம், பிரத்தியட்சாநுபூதி விளக்கம் வேதாந்த இலக்கணம், கைவல்ய நவநீதம், வேதாந்த சூளாமணி, பிரபுலிங்க லீலை, சொரூபசாரம், உபநிடதம் பகவத்கீதை ஆகியவற்றிற்கு விருத்தியுரை.

**சச்சிதானந்த நமச்சிவாயர் (19-நூ)**

ஊர்: ஈழநாட்டு யாழ்ப்பாணத்து நல்லூரைச் சேர்ந்த கொக்குவில்.
நூல்: பல நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சச்சிதானந்தம் பிள்ளை ச. (20 நூ)**

நூல்: துரைசாமி நாயகர் என்பவர் இயற்றிய 'சிலை எழுபது' என்ற நூலின் உரையைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சச்சிதானந்த யோகீசுவரர் (21-நூ)**

வே பெ: குப்புசாமி முதலியார், துளுவவேளாளர்

பிறப்பு: 1864.

இவர் காஞ்சிபுரம் பச்சையப்பன் பள்ளியில் கல்வி கற்றவர்; சென்னை சூளைப் பகுதியில் வணிகராக வாழ்க்கை நடத்தினார். 1912ஆம் ஆண்டில் இவரது மனைவி, பெருந்தேவி அம்மையார் காலமானார். இவரது மனம் அடிக்கடி யோகநெறியில் ஈடு

பட்டமையால் வியாசர்பாடிக்குச் சென்று சிவப்பிரகாச அடிகள் என்னும் பெரியாரிடத்தில் அருளுரைபெற்று சச்சிதாநந்தம் என்று பெயர் பெற்றார்: அன்று முதல் இவர் சச்சிதாநந்த யோகீசுவரர் என்று அழைக்கப் பெற்றார்.

இவர் துறவியாகி முதலில் கடப்பையில் சில ஆண்டுகள் தங்கி 'சீவப்பிரமைக்கிய வேதாந்த ரகசியம், என்ற நூலினை இயற்றினார். பின்னர் மலைகளுக்கு நடுவில் அமைந்த கடி தோட்டை என்ற சிற்றூரில் சில ஆண்டுகள் தங்கியிருந்தார். அதன் பிறகு சென்னை அருகே பஞ்செட்டி என்ற ஊரில் மடம் அமைத்துச் சிலகாலம் தங்கியிருந்தார். இவரது நூல்களைப் படித்த பிறகு பலர் இவரது மாணவர்களாயினர். இவரது மாணவர்கள் பலர் சேர்ந்து பெங்களூரில் மடம் ஒன்று அமைத்தனர். அம்மடத்தில் இவர் சில காலம் தங்கிப் பலருக்குத் திருவருள் புரிந்தார்.

நூல்: சிவப்பிரமைக்கிய வேதாந்த ரகசியம், கிருட்டிணார்ச்சுன உரையாடலாக எழுதப்பட்ட பகவத்கீதை, கபீர்தாசர் வரலாறு, யோகாப்பியாசம் செய்ய வேண்டிய முறைகளைப் போதிக்கும் நூல், மனத்தை நிறுத்தும் நூல், தத்துவ பரிசோதனை, முற் பிறப்பு இப்பிறப்பு வரலாறு, சனன மரண ரகசியம்.

முற்பிறப்பு இப்பிறப்பு வரலாறு என்னும் நூலில், தாம் முற்பிறப்பில் கிறித்தவ சமயப் பாதிரியாக வாழ்ந்திருந்ததாக எழுதியுள்ளார்.

## சசிவர்ணர் ( )

ஊர்: தென்னார்க்காடு மாவட்டம்.

தந்தை: சாந்தசீலன்: தாய்-விரதசீலை.

நூல்: சசிவர்ண போதம்

இந்நூலினைத் தத்துவராயர் இயற்றியதாகவும், வோதிப் பிரகாசர் இயற்றியதாகவும் கூறுவர்.

## சஞ்சீவி நாத சாமிகள் (17-நூ)

நூல்: உலகப்பிரமாண சாஸ்திரம் (1874).

இந்நூலில் வான மண்டல விவரமும், பஞ்சபூதங்களின் இயல்புகளும், உடலியற்கூறுகளும் பற்றிய விஞ்ஞானப் பொருள்கள் அடங்கியுள்ளன. இந்நூல் அண்ட பிண்ட வியாக்கியானம் என்ற நூலுடன் அச்சிடப்பட்டுள்ளது.

**சட்டநாத சாமி ( )**

நூல்; சாதகவெண்பா (1895).

இந்நூல் இலக்கினபாவம் முதலியவற்றைப் பற்றிக் கூறுவது. சாதக நுட்பம் என்னும் சந்திராபரணம் என்ற நூலுடன் சேர்த்துப் பதிப்பிக்கப்பெற்றது.

**சட்டம்பிள்ளை அ நா. ( )**

நூல்; தெகில்லீம் என்ற தெய்வாகம சங்கீதம் (1886).

இந்நூல் எபிரேய மொழியில் ஐந்து பங்கான பாலினமாகவும், தமிழ் மொழியில் வாசக மொழி பெயர்ப்பாகவும் இருந்து வந்ததில், தனித்தியானம், கிரகத் தெய்வாராதனை, பகிரங்கத் தெய்வாராதனை என்ற மூவகைக்கும் உதவியாகப் பாவினமாக்கப் பெற்றது. இந்நூலாசிரியர் பாடிய மற்றும் சில சில்லறைப் பாகங்கள் அநுபந்த கீதமாக இதில் சேர்க்கப் பெற்றிருக்கின்றன.

**சட்டமுனிகள் (18-நூ)**

ஊர்; மதுரை.

திருக்கோவிலூர் ஞானியார் மடத்தினை ஏற்படுத்திய ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளின் மாணவர்.

நூல்; விண்ணூறு கயிலைப் பதிகம்.

**சட்டைநாத வள்ளல் (18-நூ)**

ஊர்: சீர்காழி.

இவர் வடமொழி தென்மொழிகளில் வல்லவராக விளங்கியவர்.

நூல்: சதாசிவரூபம்.

இந்நூல் வாதுளம், காமிகம் என்னும் இரண்டு சைவ ஆகமங்களின் சாரமாகச் செய்யப்பட்டது. சதாசிவனுடைய உருவங்களைப் பற்றிக் கூறுவது. நூலின்கண் 152 பாக்கள் உள்ளன

**சட்டைமுனி ( )**

வே. பெ: கைலாயக் கம்பளிச் சட்டை முனி, கம்பளிச் சட்டைக் கைலாய முனி, சேனியமரபினர். சித்தர்களின் மருத்துவம் சோதிடம் முதலிய நூல்களில் வெறுப்புடையவர். போக முனிவரின் மருத்துவப் புலமையும் ஞானநூற் புலமையும் உடையவர்.

நூல்: கற்பம் நூறு (கற்பவிதி 100) சடாட்சரக்கோவை, சட்டை முனி ஞானம் இருநூறு, சட்டை முனி ஞானம் ஆயிரத்திருநூறு, சரக்கு வைப்பு. ஞானம் நூறு, திரிகாண்டம், நவரத்தின வைப்பு, வாதநிகண்டு, வாதவைப்பு

இவர் பாடிய நூல்கள் பற்றி (Author Intex of Tamil Manuscripts) என்னும் நூல் பின்வருமாறு கூறுகின்றது. சட்டை முனி கற்பங்கள், சட்டை முனி காயகற்பம் (100), சட்டை முனி ஞானம் (100), சட்டை முனி நிகண்டு, சட்டை முனி நூல், சட்டை முனி புராண சூத்திரம், சட்டை முனி சடாட்சரக்கோவை. சட்டை முனி சூத்திரம் (18) (16) (50) (200), சட்டை முனி தர்க்கம், சட்டை முனி வாக்கியம் என்பன.

தஞ்சை சரசுவதி மகால் நூலகப்பட்டியலில் சட்டை முனி பெயரில் பின்வரும் நூல்கள் காணப்படுகின்றன. சட்டை முனி கற்பவிதி, சட்டை முனி ஆயிரம், (வாத காவியம் ஆயிரம்) சட்டை முனி நிகண்டு, ஆயிரத்திருநூறு, சட்டை முனிவர் ஞானம் நூறு என்பன.

**சட்டையப்ப அடிகள் (20-நூ)**

ஊர்: பாண்டிவள நாட்டிலுள்ள செட்டிமார் நாடு.

நூல்: நெஞ்சுவிடு தூது, இந்நூல் இவரது அறிவாசிரியாராகிய சிதம்பர ஞான தேசிகர் மீது பாடப்பெற்றது.

**சடகோப இராமாநுசாச்சாரியார்** (20-நூ)

**ஊர்:** சென்னை திருவல்லிக்கேணி.

**தந்தை:** சீனிவாச அப்பன் ஐயங்கார்.

**தாய்:** ஆண்டாள் அம்மாள்.

**வாழ்ந்த காலம்;** 1871-1910.

கிறித்தவக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் காரப்பங்காடு கோபாலாச்சாரியார், சென்னை அரசாங்கக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் பு. மா. சீனிவாசாச்சாரியார் ஆகியோரிடம் தமிழ் நூல்களைக் கற்றார். தம் தந்தையாரிடமும் சுதரிசனச்சாரியார் என்பவரிடமும் வடமொழி நூல்களைக் கற்றார். சென்னையில் 'சர்ச் ஆப் ஸ்காட்லாந்து மிஷன்' கல்லூரியில் 14 ஆண்டுகளும், கும்பகோணம் அரசினர் கல்லூரியில் 6 ஆண்டுகளும் தமிழாசிரியராக இருந்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் உறுப்பினராக இருந்தார். சே. கிருட்டிணமாச்சசாரியாரைப் பின்பற்றிப் பல்கலைக் கழகப் பாடப்பகுதிக்கு முதன்முதலாக 1888ஆம் ஆண்டு உரை எழுதினார். வை மு. கோபாலகிருட்டிணமாச்சாரியார் இவருடைய மாணவர். ஆறுமுக நாவலரின் நன்னூல் காண்டிகையுரையினை எளிதாக்கி 1900 இல் வெளியிட்டார்.

நூல்: ஆழ்வார்கள் சரித்திரம், பட்டர் வைபவம்.

**சடகோப ஐயங்கார்** (19-நூ)

**ஊர்:** சோழநாட்டு அரியலூர்.

**தந்தை:** ஐயாவையங்கார்.

இவரது தந்தையார் உடையார்பாளையம் அரண்மனைப் புலவராக இருந்தவர். சடகோப ஐயங்கார் தம் தந்தை

யாரிடமே தமிழ் நூல்களைக் கற்றார். பாடஞ்சொல்வதில் பெருவிருப்புடையவராக இருந்த இவர், டாக்டர் உ. வே. சாமிநாத ஐயருக்கு முதன் முதல் அந்தாதி, கலம்பகம் போன்ற நூல்களைக் கற்பித்தார்.

இவர் வைணவர்: ஆனால் பொது நோக்கினர். சிவபெருமான், அம்பிகை, முருகக்கடவுள் முதலிய தெய்வங்களின் மேல் தனிச் செய்யுட்கள் சிலவற்றையும் இசைப்பாடல்கள் பலவற்றையும் இயற்றியுள்ளார்.

நூல்: இராமாயணவண்ணம், இராமாயண சிந்து, சீவப்பிரம ஐக்கிய வரலாறு.

## சடகோப ஐயர்-சேட (20-நூ)

ஊர்: புதுவை.

நூல்: தம் ஆசிரியர் இயற்றிய 'புதுவைக் கலம்பகம்' என்னும் நூலுக்கும், வேறு சில நூல்களுக்கும் வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சடகோபதாசர் (18-நூ)

ஊர்: நாதப்பட்டினம்: கீழையூர்.

நூல்: அரிசமய தீபம்.

இந்நூல் பரமபதச் சருக்கம், ஆதியோகிச் சருக்கம், குலசேகரச் சருக்கம், பதுமைச் சருக்கம், முனிவாகனச் சருக்கம், விப்பிரநாராயணச் சருக்கம், பட்டநாதச் சருக்கம், கோதைச் சருக்கம், பரசாலச் சருக்கம், நாதமுனிச் சருக்கம், யாமுநச் சருக்கம் என்ற சருக்கங்களையுடையது.

## சடகோப நாயுடு (19-நூ)

தந்தை: இராமாநுச நாவலர்.

நூல்; தம் தந்தையார் இயற்றிய 'சுதரிசன கிரிபுராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்,

**சடகோபப் புலவர்** (17-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் ஆழ்வார் திருநகரி.

**நூல்:** குருகூர்ப்பள்ளு (1932), திருக்குருகூர் மாறன் பவனிக்குறம்.
குருகூர்ப்பள்ளு என்ற நூல் பராங்குசப்பள்ளு என்றும் அழைக்கப் பெறும்.

**சடகோபர்** (            )

பார்க்க: நம்மாழ்வார்.

**சடகோபாச்சாரி எம். சி.** (19-நூ)

**நூல்:** மாலதி மாதவம்-(தமிழாக்கம்) (1899).

இந்நூல் பவபூதி என்னும் கவி வடமொழியில் இயற்றிய பிரகரண நாடகமாகிய மாலதி மாதவம் என்னும் நூலின் மொழிபெயர்ப்பு நூலாகும். இந்நூலின் கதை பவபூதியினுல் புதிதாகக் கற்பித்துக் கூறப்பட்டதாகும். இந்நூல், நாடகத்தைக் கதையாக அமைத்துக் கூறுவது.

**சடகோபாச்சாரியார்** (19-நூ)

**நூல்:** நாகானந்தம்-(தமிழாக்கம்) (1900)
இந்நூல் ஹர்ஷகவி இயற்றிய 'நாகானந்தம்' என்னும் நாடகத்தில் வரும் கதையைத் தழுவியதாகும். இது சோமதேவன் என்பவரால் இயற்றப்பட்ட 'கதாஸரித்ஸாகரம்' என்னும் நூலைப் பின்பற்றி மொழிபெயர்க்கப் பெற்றது. இந்துமதம், பௌத்தமதம், என்ற இருமதங்களின் கொள்கைகளும் இந்நூலில் விரவி அமைந்துள்ளன.

**சடகோபாச்சாரியார் (கந்தாடை)** (19-நூ)

**நூல்;** துலாகாவேரிபுராணம்-(தமிழாக்கம்) (1889)
இந்நூல் ஐப்பசித் திங்களில் காவேரியில் நீராடுதலால் உண்டாகும் சிறப்பினைக் குறித்து எழுந்த பல பழங்கதைகளின் தொகுப்பு நூலாகும்.

**சடாட்சர ஆசிரியர் கா. (19-நூ)**

ஊர்: புதுச்சேரி,

நூல். அதிபத்த நாயனார் வரலாறு.

இந்நூல் இசைப்பாடலாக அமைந்துள்ளது.

**சடாட்சர சித்தர் ( )**

நூல்; குரு உபதேசம்.

**சடாட்சர வேலு முதலியார் தி. வ. (20-நூ)**

ஊர்: திருவெண்ணெய் நல்லூர்.

நூல். இராசப்ப நாவலர் இயற்றிய 'திருவெண்ணெய் நல்லூர்க் கலம்பகம்' என்னும் நூலுக்கு வழங்கிய சாற்றுக்கவி.

**சடையன் ( )**

பார்க்க: திருக்குருகைப்பெருமாள் கவிராயர்.

**சடையாண்டிச் செட்டியார் கு. (19 நூ)**

நூல்: த செய்யப்ப முதலியார் இயற்றிய மும்மணிமாலை, சோம சுந்தரம் செட்டியார் இயற்றிய சிவநாமாத்துவிதக் கீர்த்தனம் என்னும் நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முக அடிகள் (19-நூ)**

வாழ்விடம்: திருப்பாதிரிப்புலியூர்.

நூல்; தனிப்பாடல்கள்.

**சண்முகக் கவிராயர் I. (19-நூ)**

ஊர்: க்ஷேகிரி வாசகர் பேரில் பதிகம் (1880).

இந்நூல் திருவேங்கடத் திருமாலைப் புகழும் தோத்திரம் பாமாலையாகும்.

### சண்முகக் கவிராயர் 2. (19-நூ)

ஊர்; தரங்கம்பாடி.

நூல்: இ. சாமுவேல் பிள்ளை இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

### சண்முகக் கவிராயர் இரா (20-நூ)

தந்தை; இராமலிங்க சோதிடர்.

நூல்: புல்வாய் நாயகி அம்மன் பதிகம், திருத்தாண்டகம், பஞ்சரத்தினப் பதிகம், சுப்பிரமணியக் கடவுள் ஆசிரிய விருத்தம், இசைப்பாடல்கள்.

### சண்முகக் கவிராயர் த. ( )

ஊர்: தரங்காபுரம்.

இவர் பாரதச் சொற்பொழிவு செய்வதில் புகழ் பெற்று விளங்கியவர்.

நூல்: நல்லாப்பிள்ளை பாரதம் உரைநடை, விவாக விதி விளக்க வினாவிடை.

இரண்டாவது நூல் திருமணக்காலத்தில் செய்ய வேண்டிய பல சடங்கு முறைகளை விளக்குவது. நூலின் கண் 131 வினாக்களும் விடைகளும் உள்ளன. சைவ வைணவ சுமார்த்த சமூக மக்களுக்கு மிகவும் பயன்படுவது.

### சண்முகச் சட்டம்பியார் சு. (18-நூ)

ஊர்; யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த வட்டுக்கோட்டை அராலி,

தந்தை: சுவாமிநாதர்,
பிறப்பு: 1794.

இவர் இளமையில் தமது தந்தையிடம் கல்வி கற்றுப் பின்பு இருபாலைச் சேனாதிராய முதலியாரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். இவர் முதலில் சைவராக இருந்து பிறகு கிறித்தவரானவர். வட்டுக்கோட்டைச் சாத்திர சாலையில் ஆசிரியராகத் தொண்டாற்றிய பிறகு மிஷனரிமார்களுக்குக் கல்வி கற்பிக்கும் பணியை மேற்கொண்டார்.

நூல்: தனிப்பாடல்கள்.

இப்பாடல்கள் சில்லாலை என்ற ஊரில் வாழ்ந்த மருத்துவர் சந்தியாப்பிள்ளை வேண்டுகோளின்படி கிறித்துவின் தாயாரை வாழ்த்திப் பாடப்பட்டனவாகும்.

**சண்முக சாமிகள் 1 (          )**

இவர் தருமபுர ஆதீனத்திருக்கூட்டத் தம்பிரான்களுள் ஒருவராவார் சிதம்பரம் செந்தமிழ்ச் சங்கத் தலைவராக இருந்து சமயச் சொற்பொழிவுகள் பல நிகழ்த்தியுள்ளார்.

நூல்: திருப்பனந்தாள் சடையப்பர் மாலை, தருமைச் சந்தன தேசிகர் போற்றிக் கலிவெண்பா, தருமை ஞானசம்பந்த தேசிகர் மாலை, செந்தமிழ் இரட்டைமணிமாலை, அகப்பொருள் நவமணிக்கோவை.

**சண்முக சாமிகள் 2 (18-நூ)**

நூல்: தத்துவஞான தீபிகை (1872).

இந்நூல் 35 பகுதிகளையுடையது. முதல் பகுதியும் இறுதிப் பகுதியும் செய்யுளாகவும் ஏனைய பகுதிகள் உரைநடையாகவும் உள்ளன. பாட்டு முதற் குறிப்பகராதி ஈற்றில் உள்ளது.

**சண்முக சாமிகள்–3 (20-நூ)**

ஊர்: தருமபுரம்.

நூல்: சாமிநாத முதலியார் ஐ இயற்றிய சாவித்திரி கதை, மாயூரம் முத்துச்சாமி இயற்றிய தருமைச் சொக்கநாதர்மாலை முதலிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முக சுந்தர நாவலர் ஐ.** (19-நூ)

**நூல்:** பெ. நாராயணசாமி நாயுடு என்பவர் இயற்றிய 'மனுச்சோழச் சக்கரவர்த்தி வாசகப்பா' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்

**சண்முக சுந்தரம் பிள்ளை. க.** (20-நூ)

ஊர்: ஸ்ரீவைகுண்டம் கோட்டம் வல்லநாடு.

தந்தை; கலியாணசுந்தரம் பிள்ளை.

நூல்: புண்ணியராற்றுப்படை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முக சுந்தரம்பிள்ளை. ச.** (20-நூ)

ஊர்: பாண்டி நாட்டில் உள்ள அருப்புக் கோட்டை.

தந்தை: வேலாயுதம் பிள்ளை.

நூல்: தில்லைமாலை, தில்லைப்பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூல்களுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சண்முக சுந்தரம்பிள்ளை (வீணை)** (20-நூ)

நூல்: கி. சுந்தராச்சாரியார் இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முகசுந்தர முதலியார்** (20-நூ)

ஊர்: தொண்டை நாட்டில் வல்லக்கோட்டை.

தந்தை; முத்துச்சாமி முதலியார்; தாய்: சுப்பம்மாள்; துளுவ வேளாளர்.

வாழ்ந்த காலம்: 24—6—1858—4—5—1941.

இவரது பெற்றோர்கள் சென்னை கொண்டித்தோப்புப் பகுதியில் குடியேறியிருந்தனர். எனவே இவர் தொண்டை

மண்டலம் துளுவ வேளாளர் பள்ளியில் சேர்ந்து கல்வி கற்ருர். அங்கு இவர் ஏழாவது வகுப்பு வரையே படித்தார். கல்வியில் நாட்டமின்மையால் பள்ளிப் படிப்பைத் தொடரவில்லே. பின்னர் ஆட்பட்டா சண்முகசுந்தர முதலியார் என்பவரிடம் சிலம்பம் கற்றுத் தேர்ச்சி அடைந்தார். சிலம்பம் சுழற்றுவதில் ஏற்பட்ட சில நிகழ்ச்சிகள் காரணமாக இவர் அவ்வேலேயை விட்டுவிட்டு மீண்டும் கல்வி கற்கத் தொடங்கிஞர். தம் தயாரிடமும், தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் பள்ளியில் தமிழ்ாசிரியராயிருந்த அப்பன் செட்டியார், பூவை கலியாண சுந்தர முதலியார் ஆகியோரிடமும் தமிழ் நூல்கஃளக் கற்கும் விருப்பமுடையவர் ஆனுர். பூவை கலியாண சுந்தர யதீந்திரரிடத்தில் சிவஞானபோதம் முதலிய நூல்கஃளக் கற்ருர். பின்னர்ச் சைவ சமய உண்மைகஃளப் பரப்ப எண்ணி ஆங்காங்கே பல செற்பொழிவுகள் நிகழ்த்திஞர்.

நூல்; தனிப்பாடல்கள்.

## சண்முக சுந்தர முதலியார் (அ) (19-நூ)

ஊர்: கொன்றைமாநகரம்.

தந்தை: அருணசல முதலியார்.

இவர் சென்ஃன சிந்தாதிரிப்பேட்டையில் வாழ்ந்தவர். தமிழ் இலக்கண இலக்கிய நூல்கஃளயும், சைவ சித்தாந்த சாத்திர நூல்கஃளயும் கற்பித்துள்ளார்.

நூல்: சிவஞான சித்தியார் தத்துவப் பிரகாசர் உரை, திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் உரை, சிவஞானபோதம் பாண்டிப் பெருமாள் விருத்தி, சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு. மறை ஞான தேசிகர், சிவாக்ரயோகியர், ஞானப்பிரகாசர், சிவஞான யோகியர், நிரம்பவழகியார், சுப்பிரமணிய தேசிகர் ஆகியோர் எழுதிய உரை முதலிய சைவ சித்தாந்த நூல்கஃளப் பதிப்பித்து ள்ளார்.

**சண்முகஞ்செட்டியார் அ (20-நூ)**

ஊர்: செட்டிநாட்டில் கண்டனூர் புதுவயல். தந்தை: அண்ணாமலைச் செட்டியார்: தனவணிகர்.

பிறந்த ஆண்டு: 1873

இவர் பள்ளிக் கல்வியை முடித்தபிறகு, அறிஞர் ஒருவரிடம் புலமைக்கல்வி பெற்றார். செய்யுள்களை விரைவாகப் பாடவும் பயிற்சி பெற்றார். இவர் முதலில் பர்மா முதலிய வெளிநாடுகளுக்குச் சென்றுபொருள் தேடும் முயற்சியில் ஈடுபட்டார். பின்னர் பக்தி நெறியில் மனங்கொண்டார். இவர் தமது அறுபத்தேழாவது வயதில் காலமானார்.

நூல்: அளகை அட்டப் பிரபந்தம், சித்தி விநாயகர் மாலை, கைலாச நாதர் விநாயகர் அந்தாதி, பழநியாண்டவர் மாலை, கம்பை நான்மணிமாலை, கம்பை முருகன் திருப்புகழ்.

அளகை அட்டப்பிரபந்தம் என்னும் நூல் புதுவயலை அடுத்த அளகை எனப்படும் சிவப்பதியில் எழுந்தருளியுள்ள இறைவன் இறைவியர்மீது இயற்றப் பெற்றது. இந்நூலில் அளகைக் கலிவெண்பா, அளகை வெண்பாமாலை, அளகைச் சிலேடை வெண்பா, அளகை வெண்பாவந்தாதி, அளகைப் பதிற்றுப்பத்தந்தாதி, அளகை அலங்காரம், அளகை உமையந்தாதி, அளகை உமையம்மைபிள்ளைத்தமிழ். ஆகியவை அடங்கியுள்ளன.

**சண்முகஞ் செட்டியார் ஆர் கே. (20-நூ)**

ஊர்: கோயம்புத்தூர்.

தந்தை: கந்தசாமிச் செட்டியார்: தாய்-சீரங்கம்மாள்.

வாழ்ந்த காலம்: 17—10—1892—5—5—1953.

விடுதலை பெற்ற இந்தியாவில் முதல் நிதியமைச்சராக விளங்கிய சன்முகஞ் செட்டியார் முறையே கல்வி பயின்று

பி. ஏ. பி. எல்' பட்டம் பெற்றவர். கே. சி. ஐ. இ: என்னும் பட்டமும் பெற்றுள்ளார். 1948ல் அண்ணுமலைப் பல்கலைக் கழகம் இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. பிரிட்டிஷ் அரசினர் இவருக்குச் சர் பட்டம் வழங்கினர். இவர் வழக்கறிஞராகக் கோயம்புத்தூரில் தொழில் செய்யத் தொடங்கினுர். 1920ஆம் ஆண்டில கோயம்புத்தூர் நகர மன்றத்தின் துணைத்தலைவராகவும் சென்னைச் சட்டசபை உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1923 முதல் 1934ம் ஆண்டு வரை மத்திய சட்டசபை உறுப்பினராகவும் 1931ல் அதன் துணைத்தலைவராகவும் 1933ல் அதன் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சிறப்புடன் பணியாற்றினுர். சுய ராட்சியக் கட்சியில் சேர்ந்து உறுப்பினராகப் பணியாற்றிய பின்னர்க் கட்சிக் கொறடாவாக மாறினுர்.

கல்வி பயின்ற காலத்திலேயே அன்னிபெசண்ட அம்மையாருடன் இவருக்கு நட்பு ஏற்பட்டது. அவருடன் இவர் இங்கிலாந்து சென்று இந்தியப் பிரச்சனைகள் பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்திஞர். 1926ல் ஆஸ்திரேலியாவுக்கு சென்ருர். 1926-30ஆம் ஆண்டு வரை மூன்ருண்டுகள் ஜினிவாவுக்கு சென்ற (எம்ப்ளாயர்ஸ் டெலிகேஷன்) தூதுக் குழுவுக்கு உடன் செல்லும் வாய்ப்புப் பெற்ருர். 1932ல் இந்தியப் பிரதிநிதியாகக் கனடா சென்ருர். 1934ல் நடை பெற்ற தேர்தலில் இவர் தோல்வி அடைந்தார். 1945 முதல் 1941 வரை கொச்சித் திவாஞகி அரும்பணியாற்றினுர். அக்காலத்தில் அரசினர் துறைகளை மக்கள் பிரதிநிதியிடம் ஒப்படைத்துச் சீர்திருத்தங்கள் பல செய்தார். இச்செயலைப் பாராட்டிய கொச்சி மன்னர் இவருக்கு மகாவீரர் என்ற பட்டம் சூட்டி மகிழ்ந்தார். 1945ல் மன்னர் மன்றத்தின் ஆலோசகராகத் தொண்டாற்றிய பின்பு 1947 வரை இந்திய சரக்கு வரிக் கழகத்தின் தலைவராகப் பணி செய்துள்ளார். 1950ல் சென்னைக் கைத் தொழில் முதலீட்டுக் கார்ப்பொரேஷனின் தலைவராஞர். 1951ல் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் கௌரவத் துணைவேந்தர் பதவி ஏற்று மிகுந்த தொண்டுகள் செய்தார். 1955ல் சென்னை மேல்சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1943ல் மேன்மை தங்கிய செட்டி நாட்டரசர் இராசா ஸர் அண்ணுமலைச் செட்டியார் சென்னைத்

தமிழிசைச் சங்கத்தை நிறுவிய போது உடனிருந்து ஒத்துழைத்தார். அரசர் இதன் தலைவராக இருந்தபோது இவர் துணைத்தலைவராகப் பணியாற்றினார். பின்னர் 1948 முதல் 53 வரை ஐந்தாண்டுகள் தமிழிசைச் சங்கத்தின் தலைவராக இருந்து தமிழிசை வளர்ச்சிக்கு அரும்பணியாற்றியுள்ளார். தமிழ்ப் பண்ணாராய்ச்சியில் நிறைந்த பற்றுடையவர். பொருளாதாரத்துறையில் மிகவும் வல்லவர். முத்தமிழ் வளர்ச்சிக்கு இவர் ஆற்றிய பணிகள் பல. கோயம்புத்தூரில் தன் தாயார் சீரங்கம்மாள் பேரில் ஓர் உயர்நிலைப் பள்ளி நிறுவியுள்ளார்.

நூல்: சிலப்பதிகாரம்-புகார்க் காண்டம் உரை. வாழ்க்கைத்துணை நூல், அறிவுக் கட்டுரைகள்.

**சண்முக ஞானியார்** (19-நூ).

இவர் திருக்கோவிலூர் ஞானியார் ஆதினத்தில் இரண்டாவது தலைவராக இருந்தவர். திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்தை ஏற்படுத்தியவர்.

நூல்: முருகர் அந்தாதி, விநாயகர் மாலை, சுப்பிரமணிய பரம்பரப் பதிகம், சிவகுருலீலை.

இந்நூல்களுள் முருகர் அந்தாதி என்னும் நூல் முப்பது பாடல்களால அமைந்தது.

**சண்முகத் தம்பிரான் ஞா.** (20-நூ)

தருமையாதீனத்து அடியார்களில் ஒருவர். சிறிது காலம் திருவையாறப்பர் கோயில் விசாரணைக் கர்த்தராய் இருந்தார்.

நூல்: ஸ்ரீமத் குருஞானசம்பந்த தேசிகர் சரித்திர சார சங்கிரகம் (1922)

**சண்முகத் தாசப்பிள்ளை ச.** ( )

ஊர்: பாண்டிநாடு, கோபாலசமுத்திரம்.

தந்தை; சங்கர சுப்புப் பிள்ளை.

நூல்: ஆறுமுக நயினார்பிள்ளைத் தமிழ், கரிசூழ்ந்த மலகுலத்தூர் அரசடி விநாயகர்மீது பதிகம், கோபால சமுத்திரம் வெள்ளை விநாயகம் பதிகம்.

**சண்முகநாதன் கவிராயர்** (19-நூ)

ஊர்: திருநெல்வேலிக்குக் கிழக்கேயுள்ள அணியாபரண நல்லூர்.

நூல்: ஆறுமுக நயினார் பிள்ளைத் தமிழ், கரிசூழ்ந்த மலகுலத்தூர் அரசடி விநாயகர் மீது பதிகம், கோபால சமுத்திரம் வெள்ளை விநாயகர் பதிகம்,

வாழ்ந்த காலம்: 1830-2—10—1890.

இவரது தந்தையார் சிறந்த தமிழ்ப் புலவராக விளங்கினார். இவர் அவரிடமே தமிழ் நூல்களைக் கற்றுத் தேர்ந்தார். இவர் முதலில் தம் தந்தையாரைப் போலவே முருகக் கடவுளிடம் மிகுந்த பற்றுடையவராக விளங்கினார். ஆனால் திருமணமான பின்பு பாளையங்கோட்டை கிறித்துவப்பள்ளி ஒன்றில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றியபோது, அங்குள்ள ஆசிரியர் சிலரால் மதம் மாற்றப்பட்டுக் கிறித்தவ சமயத்தில் சேர்ந்தார். இவர் தாம் கிறித்தவரானதோடு தம் மனைவியையும் கட்டாய படுத்தி கிறித்தவ மதத்தில் சேரச் செய்தார் என்பர். இவர் கிறித்தவ மதத்தில் சேர்ந்த பிறகு இயேசுதாச கவிராயர் என்று அழைக்கப் பெற்றார்.

இவர் முருகன் அடியவராக இருந்தபோது முருகக்கடவுள் மீது பல பாமாலைகள் பாடி வைத்திருந்தார் என்றும், பின்னாளில் அவை கிழித்தெறியப்பட்டன என்றும் கூறுகின்றனர். கிறித்தவ சமயத்தில் சேர்ந்த பிறகு அச் சமய சார்பாகவே பல நூல்கள் எழுதத் தொடங்கினார்.

நூல்: சைவமகத்துவ கண்டனம், வாக்கிய லட்சணம், இந்துமதத் தோற்றம்.

சைவ மகத்துவ கண்டனம், சைவர் களால் எழுதப் பட்ட சைவமகத்துவம் என்னும் நூலின் கண்டன நூல், வாக்கிய லட்சணம் இலக்கண நூல்.

**சண்முகப் படையாச்சி** ( 20-நூ )

ஊர்; சன்னசி நல்லூர்.

நூல்: அரங்கசாமி ஐயங்கார் என்பவர் இயற்றிய திருவரத்துறைப் புராணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முகம் பிள்ளை 1** (20-நூ)

வே. பெ: சிவநந்த யோகிகள்.

ஊர்; தஞ்சாவூர்.

இவர் மருத்துவராக விளங்கியதோடு முத்தமிழிலும் வல்லவராக விளங்கியதால் கவியரசு என்ற சிறப்புப் பெயரினையும் பெற்றார்.

நூல்: திருமுருக அருட்பாமாலை, என்றும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முகம் பிள்ளை 2** ( 19-நூ )

வே. பெ: திருநெல்வேலிப்புராணிகர்.

ஊர்: திருநெல்வேலி.

நூல்: அ. சங்கரநாராயண பிள்ளை இயற்றிய 'திருத்தொண்டர் ஆனந்தக் களிப்பு' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முகம் பிள்ளை 3** (20-நூ)

ஊர்: சென்னை திருமயிலை.

வாழ்ந்த காலம்: 1858-1905.

இவர் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், கோமளபுரம் இராசகோபாலப் பிள்ளை ஆகியோரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார், மதுரைத் தமிழ்ச் சங்கத்தினர் இவருக்கு மகாவித்துவான் என்ற பட்டம் வழங்கிச் சிறப்பித்தனர்.

இவர் முதலில் தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் பள்ளியிலும், பின்னர் திருமயிலை சென்தோம் கல்லூரியிலும் தமிழாசிரியராகப் பணியாற்றினர். தமிழ்ப் பெரும்புலவர்களாகிய மயிலை சீனி. கோவிந்தராசனர், கா. நமச்சிவாய முதலியார் ஆகியோருக்கு இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்பித்துள்ளார். தமிழ் ஓலைச் சுவடிகளை முதன் முதலில் அச்சுக்குக் கொண்டு வந்தவர்களில் இவரும் ஒருவராவர். மணிமேகலைக் காப்பியத்தை முதன் முதல் அச்சிட்டவர் இவரே. இக்காப்பியம், 1894ம் ஆண்டில் அச்சிடப்பெற்றது.

நூல்; திருமுல்லைவாயிற் புராணம், திருமயிலை உலா, சிற்றிலக்கண விஞவிடை, கந்தபுராண வசனம், காபாலீசுரர் பஞ்சரத்தினம் கற்பகவல்லி மாலை.

கம்பராமாயணம் அயோத்தியா காண்டம், பொன்வண்ணத் தந்தாதி, திருக்கயிலாய ஞானஉலா, திருவாரூர்மும்மணிக் கோவை, பிச்சாடன நவமணிமாலை என்னும் நூல்களுக்கு உரை எழுதியுள்ளார். வித்தியா விநோதினி என்னும் வெளியீட்டை இராமசாமி நாயுடு, வாசுதேவ முதலியார் ஆகியோருடன் சேர்ந்து வெளியிட்டுள்ளார். நன்னூல் விருத்தியுரை, தஞ்சைவாணன் கோவையுரை, மச்சபுராணம், கண்ணுடை வள்ளலார் இயற்றிய மாயாப் பிரலாபம், சிவவாக்கியர் பாடல் முதலியவற்றை அச்சிற் பதிப்பித்து உள்ளார்.

### சண்முகம் பிள்ளை-4 (20-ஜ)

ஊர்: பாளையங்கோட்டை.

நூல்: சடபரதர் சரித்திரம், நாம் குடியிருக்கும் வீடு.

### சண்முகம் பிள்ளை 5 (20-ஜ)

ஊர்; மாயூரம்.

நூல்: தியாகராச தேசிகர், க. என்பவர் இயற்றியபெற்றான் சாம்பான் சரித்திரக் கீர்த்தனை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முகம்பிள்ளை எம். ( )**

நூல்: சிற்றிலக்கணம் (1899).

இந்நூலில் எழுத்து, சொல்பற்றிய இலக்கணங்கள் எளிதில் விளக்கப்பட்டுள்ளன: உரை நடையில் அமைந்தது.

**சண்முகம்பிள்ளை ஐ. (19-நூ)**

நூல்: திருக்குடத்தை ஸ்ரீமங்களாம்பிகை திருவருள் விலாசம் (1890)

இந்நூல் ஸ்ரீமங்களாம்பிகையின் வரலாற்றையும் சிறப்புக் களையும் கூறுவதாகும்.

**சண்முகம் பிள்ளை தி. (19-நூ)**

நூல்: த செய்யப்ப முதலியார் இயற்றிய மும்மணி மாலை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முகம் பிள்ளை வ.சு.** (19-நூ)

ஊர்: தென்னார்க்காடு மாவட்டம் மஞ்சக்குப்பம்.

தந்தை: சுப்பிரமணியப் பிள்ளை.

தாய்: வள்ளியம்மாள்.

வாழ்ந்த காலம்: 3—10—1880—3—3—1941.

இவர் தமிழும் வடமொழியும் கற்றுத் தேர்ந்தவர்: பி. ஏ., பி. எல். பட்டமும் பெற்றவர். இராமநாதபுரம் அரசி தமிழ்த் தேர்வில் முதலாவதாக வெற்றி பெற்றமைக்குத் தங்கப்பதக்கம் பெற்றவர். 1921 முதல் 1935 வரை பல இடங்களில் மாவட்ட முன்சீபாக வேலை பார்த்தவர். தம்

தந்தையாரின் நூல்களை இரண்டாம் பதிப்பாக அச்சிட்டு வெளியிட்டார்.

நூல்: திருவாடானைப் புராணம்-உரைநடை, திருக்குடவாயிற் புராணம்-உரைநடை, கண்டியூர்ப் புராணம்-உரைநடை கோகர்ணத் தல புராணம்-உரைநடை. தணிகை நூற்றெட்டு வெண்பாவந்தாதி, திருக்கழுக்குன்ற உலா. இவற்றுள் திருக்கழுக்குன்ற உலாவினை உ. வே. சாமிநாத ஐயரைக் கொண்டு வெளியிட்டார்.

## சண்முகப் பிள்ளை வே. (          )

ஊர்: பாளையங்கோட்டை.

தந்தை: வேங்கடாசலம்பிள்ளை.

நூல்: திருவிளையாடற்புராண சங்கிரகம்.

## சண்முக முதலியார் 1. (          )

ஊர்: கண்டிப்பாக்கம்.

தந்தை: சுப்பையா முதலியார்.

நூல்: சிவத்தலமாலை.

இந்நூலில் ஒரு சிவப்பதிக்கு ஒரு வெண்பாவாக நூறு சிவப்பதிகட்கு நூறு வெண்பாக்கள் அமைந்துள்ளன.

## சண்முக முதலியார் 2. (          )

ஊர்: தொண்டை நாட்டு மோகூர்.

தந்தை: முனுசாமி முதலியார்.

நூல்: நாதமுனி முதலியார் இயற்றிய திருமயிலைப் புராணத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முக முதலியார் கா. அ.** (19-நூ)

நூல்: நளாயணி வெண்பா (1929).

நளாயணியின் கதையினைக் கூறுவது.

**சண்முகவேலாயுதம் பிள்ளை. வ.** (20-நூ)

ஊர்: அருப்புக்கோட்டை.

தந்தை: வள்ளிநாயகம்பிள்ளை.

நூல்; தம் தந்தையார் இயற்றிய பதிற்றுப் பத்தந்தாதி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முக வேலுக் கவிராயர் சி. ப** (19-நூ)

ஊர்: சிதம்பரம்.

நூல்: ஐயாத்துரை ஞானியார் என்பவர் இயற்றிய தில்லை நடராசர் சதகம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சண்முகனார், அரசன்** (20-நூ)

வே. பெ: அரசன் சண்முகனார்.

ஊர்: சோழவந்தான்.

தந்தை: அரசப்பிள்ளை: தாய்: பார்வதியம்மையார்: சைவ வேளாளர்.

வாழ்ந்த காலம்: 15—9—1868—1915.

இவர் 19ஆம் நூற்றூண்டின் பிற்பகுதியில் புகழ் பெற்று விளங்கிய புலவர்களில் ஒருவர். இளமைக் காலத்தில் இவருக்குப் படிப்பில் நாட்டமில்லாமல் இருந்தது. பின்னர் அரசப்ப பிள்ளையின் நிர்வாகத்தில் இருந்த சோழவந்தான் சின்னி மடத்திற்குத் தலைவராக வந்த சிவப்பிரகாச அடிகளிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றூர். தந்தையார் இறந்த

பின்னர் மதுரை சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். பின்னர் தமிழ்வள்ளல் பாண்டித்துரைத் தேவரின் வேண்டுகோளின்படி மதுரைச் செந்தமிழ்க் கல்லூரியில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். இவரது புலமைச் சிறப்பைத் திருவாவடுதுறை ஆதீனத்தில் பாராட்டிப் பரிசளித்துள்ளனர். தன் காலத்தில் ஈழநாடு சென்று புலமை வளத்தாலும் சொற்பொழிவுச் சிறப்பாலும் அங்குள்ள மக்களைக் கவர்ந்தார். தம் 47ஆம் வயதில் 1915ஆம் ஆண்டில் காலமானார். வாக்கு வளம் பெற்றிருந்த இப்புலவரது நூல்கள் படிப்பதற்கு மிகவும் சுவையுடையன.

நூல்: மாலை மாற்றுமாலை, இன்னிசை இருநூறு, மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை, திருவடிப்பத்து, சிதம்பர விநாயகர் மாலை, தொல்காப்பியச் சண்முகவிருத்தி, திருக்குறட் சண்முக விருத்தி, திருவள்ளுவர் நேரிசை, ஆகுபெயர் அன்மொழித் தொகையாராய்ச்சி, ஏகபாத நூற்றந்தாதி, முருகக் கடவுள் கலம்பகம், இசை நுணுக்கச் சிற்றுரை, மதுரைச் சிலேடை, நவமணிக் காரிகை நிகண்டு, பஞ்சதந்திர வெண்பா.

## சண்முகாச்சாரியார் (19-நூ)

ஊர்: தொண்டைநாட்டுப் பெருநகர்: விசுவகர்மகுலம்.

தந்தை; கந்தப்பாசாரியார்.

இவர் வடமொழி தென்மொழி இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறியவர். விஸ்வ குரு சதகம் என்னும் நூலினை இயற்றியுள்ளார். இந்நூலில் உள்ள ஒவ்வொரு பாடலும் விசுவகுருவே என்னும் முடிவைப் பெறுகின்றது. எடுத்துக் காட்டுப்பாடல்களின் முதற் குறிப்பு நூல் இறுதியில் தரப் பெற்றுள்ளது. இதற்கு நடேஸ்வராச்சாரியார் என்பவர் உரை எழுதியுள்ளார். இந்நூல் 1871ஆம் ஆண்டில் அச்சிடப் பெற்றுள்ளது.

## சண்முகானந்த அடிகள் (20-நூ)

ஊர்: சென்னை

இவர் சுரைக்காய்ச் சாமிகள் என்பவர் மீது பதிகம் பாடியுள்ளார். சித்தர்களுடைய நூல்கள் சிலவற்றையும் வெளிப்படுத்தியுள்ளார்,

நூல்: சுரைக்காய்ச் சாமிகள் வரலாறு. இந்நூல் செய்யுள் வடிவில் அமைந்தது.

**சண்முகானந்த அடிகள் கு. (20-நூ)**

இவர் முருகக் கடவுளிடத்தில் பேரன்புடையவர்.

நூல்: திருவடிப்புகழ்ச்சிமாலே, மருதாசலக் கடவுள்மாலே, சண்முகப் பதிகம், பாரதப் பதிகம், திருவாவினன் குடிப் பதிகம், பழநி சோடசமாலே. குமரக்கடவுள் பதிகம், சென்னேவடிவேலர் பதிகம், திருத்தணிகை ஆறுமுகக் கடவுள் பதிகம், திருப்போரூர் முருகன் தசாங்கப் பதிகம். திருவரங்கமாலே

**சண்முகானந்தபுரிசாமிகள் (20-நூ)**

நூல்: கு. சண்முகானந்த அடிகள் இயற்றிய நூல்களேப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சத்திநாதனர் (சங்க காலம்)**

வே. பெ: சத்திநாகனர்.

இவர் தெய்வத்தாற் பெயர் பெற்றவர்.

நூல்; குறுந். 119.

**சத்திமுற்றப்புலவர்**

ஊர்: சோழநாட்டில் உள்ள சத்திமுற்றம்.

இவர் இலக்கன இலக்கியங்களே வழுவறக் கற்றவர். ஆனல் வறுமை இவரை வாட்டியது. நகர் சோதனேக்குச் சென்ற பாண்டிய மன்னன் நாரைப்பறவைகளேக் கண்டு அவற்றின் வாய்க்கு எதனே உவமையாகக் கூறலாம் என்று கேட்க, புலவர்களால் தக்க உவமை கூற இயலவில்லே.

இந்நிலையில் வறுமையில் சுற்றித் திரிந்த சத்திமுற்றப் புலவர் வானத்தில் பறந்து சென்ற நாரையைப் பார்த்து,

நாராய் நாராய் செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்

என்று பாடினர். அரசன் புலவரின் பாட்டைக் கேட்டுத் தாம் விரும்பிய உவமை கிடைத்து விட்டதற்கு மகிழ்ந்து புலவருக்குப் பரிசளித்தான் என்பர். அன்று முதல் புலவர் அரசனது அவைக்களத்தில் தலைமைப் புலவராகவும் விளங்கினர்.

**சத்தியசந்தர் ( )**

நூல்: செங்குந்தர் தசாங்கம்.

**சத்தியஞான சுப்ரமணிய தேசிகர்** (20-நூ)

இவர் பாண்டிவள நாட்டில் திருநெல்வேலியில் மடாதிபதியாக இருந்தவர்.

நூல்: இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்கு எழுதிய தனிப்பாடல்கள்.

**சத்தியஞானி** (17-நூ)

ஊர்: நாகப்பட்டினம்.

நூல்: நீதிசார அனுபவத்திரட்டு

இந்நூல் மனிதரியல்பு, நீதி இயல்பு என்னும் இரண்டு பிரிவுகளையுடையது. மனிதரியல்பு 48 செய்யுட்களையும் நீதியியல்பு 74 செய்யுட்களையும் கொண்டது. நூலில் பல அறநெறிகள் கூறப்பட்டுள்ளன,

**சத்தியநாதப்பிள்ளை** (18-நூ)

ஊர் தொண்டை நாடு.

நூல்: பேரின்ப மணிமாலை.

**சத்தியமூர்த்தி எஸ்.** (20-நூ)

ஊர்: திருச்சி மாவட்டம் திருமயம். தந்தை: சுந்தரசாத்திரிகள்; தாய்: சுப்புலட்சுமி அம்மாள். வாழ்ந்த காலம்: 17—8—1887 28—3—1943.

இவர் தம் இளமைக் காலத்திலேயே தந்தையை இழந்தார். பின்னர் தம் தாயின் ஆதரவில் புதுக்கோட்டை அரசர் கல்லூரி, சென்னை கிறித்தவக் கல்லூரி ஆகியவற்றில் பயின்று பி. ஏ., பட்டமும், சட்டக் கல்லூரியில் பயின்று பி. எல். பட்டமும் பெற்றார். இவர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போதே அரசியலில் கவனம் செலுத்தினர். 1907-ஆம் ஆண்டில் சென்னைக் கடற்கரையில் விபின் சந்திரபாலர் நிகழ்த்திய சொற்பொழிவு இவரை அரசியலில் ஈடுபடச் செய்தது, அடுத்த ஆண்டில் சென்னையில் நடை பெற்ற காங்கிரசுக் கூட்டத்தில் இவர் தொண்டர் படையில் சேர்ந்து பணியாற்றினர். இவ்வாண்டில் மதுராந்தகத்தில் மாநாடு ஒன்று நடை பெற்றது. இம்மாநாட்டில் தான் இவர் முதன் முதலாகச் சொற்பொழிவாற்றத் தொடங்கினர். பின்னர் 1917ஆம் ஆண்டில் கல்கத்தாவில் காங்கிரசு மாநாடு நடைபெற்ற பொழுது அச்சகச் சட்ட அடக்கு முறையை எதிர்த்துப் பெரிய தொரு சொற்பொழிவு நிகழ்த்தினர். இச்சொற்பொழிவு அனைவரது பாராட்டுதலையும் பெற்றது. 1918ஆம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் சரோசினி தேவியின் தலைமையில் மாநாடு ஒன்று கூடியபோது அன்னிபெசண்ட், சி. பி. இராமசாமி ஐயர் ஆகியோர் மாண்டேகு சீர் திருத்தத்தை வரவேற்க வேண்டும்; போரில் பிரிட்டனுக்கு உதவிசெய்ய வேண்டும் என்று பேசினர். ஆனல் சத்தியமூர்த்தியோ இங்கிலாந்து நமக்கு உரிமை கொடுக்காவிட்டால் நாம் போரில் அதற்கு உதவி செய்யக் கூடாது என்றார்.

இவர் 1920ஆம் ஆண்டில் தமிழ்நாடு முழுவதும் சுற்றுப் பயணம் செய்து விடுதலைப் போராட்டத்தின் அவசியத்தை சொற்பொழிவுகள் வாயிலாக வலியுறுத்தினர். இதனல் நாட்டு மக்கள் மத்தியில் அரசியல் விழிப்புணர்ச்சி ஏற்பட்டது.

இவர் 1919ஆம் ஆண்டில் காங்கிரசு தூதுக் குழுவினரின் ஒருவராக இலண்டன் சென்றார். பின்னர் 1925ஆம் ஆண்டில் மீண்டும் இலண்டனுக்குச் சென்று ஆங்கிலேயர்கள் இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும் என்பதைப் பல இடங்களில் துணிகரமாக எடுத்துரைத்தார். சொற்பொழி வாற்றும் திறத்தால் இவர் இந்திய நாட்டிலும் வெளிநாட்டிலும் நல்ல புகழ் பெற்றார். காங்கிரசின் சார்பாகச் சட்டசபைக்குச் சத்தியமூர்த்தி ஒருவர் மட்டும் போனால் போதுமானது என்று காந்தியடிகளே இவரைப் பாராட்டியுள்ளார்.

இவர் எதையும் துணிந்து கூறும் ஆற்றல் பெற்றவர். சட்டசபைகள், நீதிமன்றங்கள், கல்லூரிகளைப் புறக்கணிக்க வேண்டும் என்ற காந்தியடிகளின் திட்டத்தைத் துணிவுடன் எதிர்த்துப் பேசினார்.

இவர் ஊராளுமன்ற உறுப்பினராகவும் பல்கலைக் கழக உறுப்பினராகவும் இருந்து தொண்டாற்றியுள்ளார். விடுதலைப் போராட்டத்தில் பலமுறை சிறைத்தண்டனை பெற்றுள்ளார். மத்திய சட்டசபைத் தேர்தலில் சர். இராமசாமி முதலியாரை எதிர்த்து வென்றார். 1939ஆம் ஆண்டில் சென்னை நகர மேயராயிருந்து அருப்பணியாற்றியுள்ளார்.

அரசியல் வாழ்வில் தீவிரமாக ஈடுபட்டிருந்த இவர், இலக்கிய வாழ்வினையும் மறந்துவிடவில்லை நாடக வளர்ச்சியில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். நாடகங்கள் எழுதும் பணியோடு தாமும் நடிகராக நடித்துள்ளார். இவர் அரசியல் சொற்பொழிவு களையன்றி, வேதாந்த சித்தாந்தக் கொள்கைகளை விளக்கியும் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். இவர் சிறையில் இருந்தபோது தமது ஒரே மகளான இலக்கிமிக்குப் பல கடிதங்கள் எழுதியுள்ளார். இக்கடிதங்கள் இலக்கியச் சுவை அமைந்தவைகளாகும். இவை தொகுக்கப்பட்டு நூலாக வெளி வந்துள்ளன.

அரசியல் வாழ்வில் அடிக்கடி சிறைக்குச் சென்ற இவர் 1943ஆம் ஆண்டில் சிறையிலிருந்தபோது கடுமையான நோய்க்கு ஆளானார். இந்நிலையில் இவர் பிழைப்பது அரிது என்று கருதி அரசினர் இவரை விடுதலை செய்தனர். விடுதலை பெற்ற இவர் 28—3—1943ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்விலிருந்து விடுதலை பெற்றார்.

**சக்திவேற்பிள்ளை ஆ. ( )**

**ஊர்;** இராமநாதபுரம் மாவட்டம் தேவகோட்டை.

**நூல்:** இறகுசேரி மந்திரமூர்த்தி விநாயகர் பிள்ளைத் தமிழ்.

**சதக்கத்துல்லா–அ ( )**

**ஊர்:** காயற்பட்டணம்.

**நூல்:** தொழுகையடைவு (1875).

இந்நூலில் முதற் காரணமாகிய இசுலாம் ஈமான் இயல்கள் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

**சந்கு முகம்மதப்துல் காதில் காதிர் புலவர் ( )**

**நூல்:** மைமைக் காப்பியம் (1874).

இந்நூல் 140 செய்யுட்களைக் கொண்டது. இஃது குத்துபுல் அகுத்தபாகிய கலறத்து முகியத்தினப்துல் காதிராண்டவர்களின் திருக்காரணங்களினின்றும் ஒன்ருகிய ஷஹாபுத்தீன் உமறவர்-களினவதாரமாகிய மைமைக் காப்பியம் என்னும் நூலினுள் காண்கின்றது.

**சதாசிவ ஐயர் சிவ (20–நூ)**

**ஊர்:** ஈழநாட்டில் யாழ்ப்பாணம்.

**நூல்:** கதிர்காமப் பதிகம்.

**சதாசிவ ஐயர் தி (20-நூ)**

**ஊர்.** யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த சுன்னுகம்.

இவர் கல்கத்தா பல்கலைக் கழகத்திலே எப், ஏ. தேர்வில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்ருர். தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளிலும் தேர்ச்சி பெற்றவர். ஆங்கிலக் கலாசாலையில் ஆசிரியராக பணியாற்றியபின் கல்வித்திணைக்

களத்தில் வித்தியாதரிசியாகவும், பகுதிவித்தியாதரிசியாகவும் பணிபுரிந்தார். யாழ்ப்பாணத்து ஆரிய திராவிட பாஷாபி-விருத்தி சங்கத்தினை இவர் தோற்றுவித்து அதன் செயலாள-ராகவுமிருந்து தொண்டாற்றினர். சுன்னகத்தில் பிராசீன பாடசாலையும் இவர் முயற்சியாலே தோற்றுவிக்கப்பெற்றதே. கலாநிதி என்ற பத்திரிகையும் இவரால் தோற்றுவிக்கப் பெற்றதே.

நூல்: தேவி தோத்திர மஞ்சரி, இருதுசங்கார காவியம், தேவிமானச பூசை அந்தாதி, பெருமாக்கடவைப் பிள்ளையார், இரட்டை மணிமாலை, தமிழ் மொழிப் பயிற்சியும் தேர்ச்சியும். இவர் மேலும் பல நூல்களையும் வெளியிட்டுள்ளார்.

## சதாசிவச் செட்டியார் 1. (19-நூ)

ஊர்: திருச்சி மாவட்டம் உறையூர்.

நூல்; சுப்பராய ஆச்சாரியார் இயற்றிய அகம்புற ஆராய்ச்சி விளக்கம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சாற்றுக் கவிகள்.

## சதாசிவச் செட்டியார் 2. ( )

ஊர்; சென்னையில் உள்ள கயப்பாக்கம்.

தந்தை: இரத்தின செட்டியார், ஆயிரவைசியர்.

1894இல் பி ஏ. பட்டம் பெற்ற இவர் தமிழிலும் வட மொழியிலும் புலமை பெற்றவர். சென்னை சுங்கத்துறையில் பணிப்புரிந்தவர் பின்னர் சைவ சமயத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டு அவ்வேலையை விட்டு விட்டு தக்கோலம் எனப்படும் திருவூறல் சிவப்பதியில் உழவாரத் தொண்டு செய்து வந்தார். 1904இல் சைவ சமய பக்த சனசபை என்னும் ஓர் அமைப்பை நிறுவினர், கந்த கோட்டத் திருக்கோயிலில் நால்வரை எழுந்தருளச் செய்து குடமுழுக்காட்டியவர் திருவாடுதுறை ஆதீனத்திற்கு உரிய திருச்சக்கரப்பள்ளியில் திருப்பணி செய்தவர்.

நூல்: திராவிட வேதத்திரட்டும் தலமான்யச் சுருக்கமும்.

சிவரகசிய மகேதிகாசத்தின் சில பகுதிகளைவடமொழியிலும் முதல் மூன்று அம்சங்களின் பொருளைத் தமிழிலும் வெளியிட்டுள்ளார். அகத்திய முனிவர் திரட்டிய தேவாரத் திரட்டிற்கு விரிவுரை எழுதியவர். ஏழு திருமுறைகளைப் பண்முறைக் கேற்பச் சீர் பிரித்துக் குறிப்புக்கள் எழுதி வெளியிட்டுள்ளார். சேக்கிழார் பிள்ளைத் தமிழ், திருக்கைலாய ஞான உலா ஆகிய நூல்களுக்குக் குறிப்புரை எழுதியுள்ளார். கோவை சி. கே. சுப்பிரமணிய முதலியார், பெரிய புராண விரிவுரை எழுதப் பெரிதும் துணையாக அமைந்தவை இவருடைய பெரியபுராண விரிவுரைகளேயாகும்.

## சதாசிவ தேசிகர் - வை (17-நூ)

வே. பெ: சதாசிவ நாவலர்.

ஊர்: திருவாரூர்.

தந்தை; இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகர்.

காலம்: 17ஆம் நூற்றாண்டின் இறுதி.

இவர் தம் தந்தையாரிடமே கல்வி பயின்றார். பின்னர் பல மாணாக்கர்களுக்குக் கல்வி கற்பித்தார். இலக்கண விளக்கம் நூலுக்கு இவர் தந்தையாரே உரை எழுதினார் என்றும், இவரே உரை எழுதினார் என்றும் இரண்டு கருத்துக்கள் உண்டு,

## சதாசிவ பண்டாரத்தார் - தீ. வை. (20-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் திருப்புறம்பயம்.

தந்தை: வைத்தியலிங்கப்பண்டாரத்தார்: தாய்: மீனாட்சிஅம்மை

வாழ்ந்த காலம்: 15—8—1892—2—1—1960.

கல்வெட்டு ஆராய்ச்சியில் சிறந்து விளங்கிய சதாசிவப் பண்டாரத்தார் முதலில் தமது பிறந்த ஊரிலும் பின்னர் புளியஞ்சேரி உயர்நிலைப் பள்ளியிலும், குடந்தை நகர உயர்நிலைப் பள்ளியிலும் கல்வி கற்றார். இவருடைய தமிழ்

ஆசிரியராகிய பின்னத்தூர் நாராயணசாமி ஐயரே, இவருக்குக் கல்வெட்டு ஆய்வுத் துறையில் தூண்டுதலாக அமைந்தார். முதலில் திருப்புறம்பயக் கோயிலில் சோழமன்னன் முதலாம் ஆதித்தன் முதல் விஜயநகர வேந்தர் காலம் வரையில் ஆட்சி நடத்திய மன்னர்களின் கல்வெட்டுக்களை ஆராயத் தொடங்கினார். கோபி நாதராயர் என்பவர் எழுதிய சோழவழிச் சரித்திரச் சருக்கம் என்னும் நூலும் இவரது ஆராய்ச்சிக்குத் துணை செய்தது. 1914ஆம் ஆண்டில் இவருக்குத் திருமணம் நடைபெற்றது. அது காலை இவர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் திங்கள் வெளியீடான செந்தமிழில் கட்டுரைகள் பல எழுதினார். தொடக்கத்தில் இவர் தஞ்சாவூர் மாவட்டம் பாபநாசத்தில் உள்ள தாலுகா அலுவலகத்தில் எழுத்தர் வேலைக்குச் சென்றார். ஓராண்டுக்குப் பின்னர் கும்பகோணம் வாணாதுறை உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணி யாற்றினார். தமிழ்ப் பொழில் என்ற இதழில் தமது ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதி வந்தார். கரந்தைத்தமிழ்ச் சங்கத்தில் இவர் நிகழ்த்திய கல்லாடமும் அதன் காலமும் என்ற சொற்பொழிவு பலருடைய பாராட்டுதல்களைப் பெற்றது. ஓய்வு நேரங்களில் இவர் கும்பகோணத்தைச் சுற்றியுள்ள ஊர்களுக்குச் சென்று கோயில்களில் உள்ள கல்வெட்டுகளைப் படியெடுத்துப் பத்திரிகைகளில் வெளியிட்டார். இவருடைய கட்டுரைகளை உ. வே. சாமிநாதையர் போன்ற பெருமக்கள் பாராட்டியுள்ளனர். 1942ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலை கழகத் தமிழ் ஆராய்ச்சிப் பகுதியில் தமது பணியைத் தொடங்கினார். 1953ஆம் ஆண்டில் ஓய்வு பெற்றார். 1955ஆம் ஆண்டில் மீண்டும் பல்கலைக் கழகப் பணியைத் தொடங்கினார். இவரது ஆராய்ச்சித் திறனைப் பாராட்டி மதுரைத் திருவள்ளுவர் கழகம் இவருக்குப் பொன்னாடை போர்த்தி ஆராய்ச்சிப் பேரறிஞர் என்ற பட்டத்தை வழங்கியது. சென்னை எழுத்தாளர் சங்கச் சார்பில் சி. சுப்பிரமணியம் கேடயம் வழங்கிச் சிறப்பித்தார். 1959ஆம் ஆண்டில் செம்பியன் மாதேவி கோயில் வரலாற்றை எழுதியதற்காக அந்நூல் வெளியீட்டு விழாவில் இவருக்குச் சிறப்புச் செய்யப்பட்டது. இவர் தமது பிறந்த ஊரான திரும்புறம் பயத்தில் சமயாசிரியார் நால்வருக்கும் குருபூசை நடத்தினார். 1960ஆம் ஆண்டில் காலமானார்.

நூல்: கருணாகரத் தொண்டைமான், பாண்டியர் வரலாறு, முதற்குலோத்துங்க சோழன், பிற்காலச் சோழர் வரலாறு, செம்பியன் மாதேவிச் சிவாலய வரலாறு (13, 14, 15ஆம் நூற்றாண்டு)

**சதாசிவப் பண்டிதர் ( )**

நூல்; திருச்செங்கோட்டுச் சதகம். இந்நூல் 101 செய்யுட்களைக் கொண்டது. செங்கோடை ஆறுமுகன் புகழினைக் கூறுவது

**சதாசிவப் பண்டிதர்-ந. (20–ாா)**

ஊர்: யாழ்ப்பாணத்தில் வண்ணார்பண்ணையில் நாச்சியார் கோயிலடி

தந்தை: நமசிவாயம்; பொற்கொல்லர் மரபினர்.

நூல்: வண்ணையந்தாதி, வண்ணை நகரூஞ்சல், சிங்கை நகரந்தாதி சில சித்திர கவிகளும் இயற்யுள்ளார்,

**சதாசிவப்பிரமம் (20–நூ)**

ஊர்: சோழ வள நாட்டிலுள்ள திரிசிரபுரம்.

நூல்: அமிர்தம் சுந்தரநாதப்பிள்ளை என்பவர் இயற்றியவயலூர் வெண்பா வந்தாதிக்கு வழங்கிய சாற்றுக்கவிகள்.

**சதாசிவப்பிரம யோகீஸ்வரர் ( )**

நூல்; சுகர்கை வல்லியம். இந்நூலில் 111 பாடல்கள் உள்ளன.

இது கைவல்லிய உண்மைகளை விளக்கி உரைப்பதாகும். இந்நூல் ஈசூர் சச்சிதாநந்த சாமிகளால் பார்வையிடப்பட்டு வெளிவந்துள்ளது

**சதாசிவப்பிரமேந்திரர் ( )**

நூல்: அத்துவித மஞ்சரி (1858).

**சதாசிவம் ( )**

இவர் திருவாரூர் தியாகராச குருவின் மாணவர்.

நூல்: அன்பர் போற்றிக் கலிவெண்பா

இந்நூல் பெரியபுராணத்தில் குறிப்பிடப்படும் சிவனடியார்களை வாழ்த்தும் வகையில் அமைந்துள்ளது.

**சதாசிவம், எஸ் (20-ஆ)**

பிறப்பு; 1909.

நூல்: சேரநாடும் செந்தமிழும் (1949), கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை (1948), சேரநாட்டுத் தமிழ்ப் பெருமக்கள் வரலாறு முதல் தொகுதி (1946), இரண்டாம் தொகுதி (1948).

'சேரநாடும் செந்தமிழும்' என்ற நூலில் சேரநாடு ஒரு செந்தமிழ் நாடு என்பதற்கு உரிய சான்றுகள் தரப்பட்டுள்ளன. சேரநாட்டின் இன்றைய நிலை, தென்பகுதியில் உள்ள நாஞ்சில் நாட்டின் வரலாறு ஆகியவையும் விளக்கப்பட்டுள்ளன.

'சேரநாட்டுத் தமிழ்ப் பெருமக்கள் வரலாறு' என்னும் நூல் சேரநாட்டைச் சேர்ந்த ஐந்து தமிழ்ப் பெருமக்களின் வரலாற்றினைக் கூறுவதாகும். இது இரண்டு தொகுதிகளாக வெளிவந்துள்ளது

'கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை என்னும் நூல்' தேசிக விநாயகம் பிள்ளை வாழ்க்கை வரலாற்றினைக் கூறுவதாகும்.

**சதாசிவம்பிள்ளை-1 ( )**

ஊர்: யாழ்ப்பாணம்.

நூல்: பொன்னளந்த பெருமான் சரித்திரம் (1888). இந்நூல் வறுமை நிலையாது என்பது குறித்து அமைந்த கதை நூலாகும்.

**சதாசிவப்பிள்ளை-2 (19-ஆ)**

வே. பெ: ஆணல்.

ஊர்: ஈழநாட்டில் யாழ்ப்பாணம் மாணிப்பாய்.

தந்தை: அருணாசலம்பிள்ளை; தாய்: ஆனந்தப்பிள்ளை.

வாழ்ந்த காலம்: 11—10—1820—20—2—1895.

இவர் மாணிப்பாயிலும் சாவகச் சேரியிலும் உடுவிலிலும் ஆசிரியராகப் பணியாற்றியவர் 1842இல் உடுவில் பெண்கள் பள்ளியில் ஆசிரியரானார். 1854இல் அப்பள்ளியின் தலைமை ஆசிரியரானார். 1857இல் உதயதாரகை பத்திரிக்கையின் ஆசிரியராகி 40 ஆண்டுகள் பணியாற்றினார். 1881 முதல் யாழ்ப்பாணக் கல்லூரியின் தலைமைத் தமிழ்ப் பண்டிதராக விளங்கி 1891இல் ஓய்வு பெற்றார்.

நூல்: இரட்சா பெருமான் திருச்சதகம், மெய்வேதசாரம் நன்னெறிக் கொத்து, இல்லற நொண்டி, கீர்த்தனசங்கிரகம் வெல்லை அந்தாதி, சாதாரண இதிகாசம், வான சாத்திரம், நன்னெறிக் கதாசங்கிரகம், பாவலர் சரித்திர தீபகம்.

குடும்ப தருப்பணம், ஞானவெண்பா- இந்நூல்களைப் பதிப்பித்துள்ளார்

## சதாசிவம் பிள்ளை-3 ( )

நூல்: சீமந்தனி புராணம் (1894).

இந்நூல் சோமவாரப் பெருமை பற்றியது. இந்நோன்பினை ஆற்றிச் சிறப்புற்ற சீமந்தனின் வரலாற்றினை எடுத்துரைப்பது; 800 செய்யுட்களையுடையது.

## சதாசிவம்பிள்ளை—4 (19-நூ)

ஊர்: சோழநாட்டில் பூண்டி; விஞ்சைராயர் வகுப்பினர்.

இவர் தம் இளமைக் காலத்திலேயே திருவாவடுதுறை ஆதீனத்தையடுத்து பழநிக் குமாரத் தம்பிரானிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். நாகபட்டினம் அந்தோனி உயர் நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். நாகை நீலலோசனி என்ற தமிழ் வார இதழின் ஆசிரியராகவும்

இருந்து தொண்டாற்றினார். இவ் இதழுக்கு இராமநாதபுரம் அரசர் சேதுபதியும் மடாதிபதிகளும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களும் பெரும் ஆதரவு நல்கினர். அரசர் சேதுபதி இவருடைய தொண்டைப் பாராட்டிப் பொன்னுடை அளித்துச் சிறப்பித்துள்ளார். இவர் திருமணங்கள், ஆண்டு விழாக்கள், குடமுழுக்கு நிகழ்ச்சிகள் போன்றவற்றில் அவ்வப்போது பாடிய தனிப்பாடல்கள் தனிச் செய்யுட் சிந்தாமணியில் தொகுக்கப்பட்டுள்ளன.

**சதாசிவம்பிள்ளை—செ.** (20-நூ)

ஊர்: நாஞ்சில் நாட்டில் இரவிபுதூர்.

நூல்: மாணிக்கவாசகம் பிள்ளை என்பவர் இயற்றிய திருச்செந்தில் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சதானந்த தாசர் தி. வே.** (19-நூ)

ஊர்: சோழ நாட்டில் ஆச்சாள்புரம்.

இவர் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் மாணவர். சீயாலம் சோமசுந்தரம்பிள்ளை என்பவரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

நூல்: முத்துக்குமாரசாமி பதிகம்.

**சதானந்தர** ( )

இ. பெ: இராசரிஷி.

ஊர்: சோழ நாட்டிலுள்ள பேரளம்.

தந்தை: சொக்கலிங்க நாயனார்.

நூல்: வள்ளுவர் குலமும் அவர் வாய்மொழியும்.

**சந்தியாகுசாமி-ச. ( )**

நூல்; கீதபோதகம் (1892). தேவஸ்தோத்திரக் கீர்த்தனைகள் (1898).

சுரவேற்றுமைகளையும் தாளவேற்றுமைகளையும் மிக எளிதாக அறிந்து நல்ல முறையோடு பாடுவதற்கும் பிடில் வாசிப்பதற்கும் ஏற்ற வகையில் ஆங்கிலேய சுரசாத்திரத்தை ஒப்ப, எச்சு, தக்கு, தீர்க்கம் முதலியவைகட்கு அடையாளங்களி ட்டு இக் கீதபோதகம் வரையப்பட்டிருக்கின்றது. இந்நூல் 14 பக்கங்களைக் கொண்ட உரைநடை நூலாகும்.

தேவஸ்தோத்திரக் கீர்த்தனைகள் என்ற நூல் 104 செய்யுட் களைக் கொண்டது. இது கிறித்தவர்கள் கோயிலிலும் வீடுகளிலும் பாடுதற்குப் பயன்படுமாறு இயற்றப்பெற்றது. 104 கீர்த்தனைப் பகுதிகள் உள.

**சந்திரசேகர உபாத்தியாயர்** (19-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம், மாயூரம்.

இவர் அட்டாவதானப் பயிற்சி மிக்கவர்; பள்ளியமைத்து ஆசிரியராகப் பணியாற்றினர்.

நூல்: கந்தபுராண சதகம்.

**சந்திரசேகரக் கவிராயர்** (19-நூ)

வே. பெ: சந்திரசேகர கவிராச பண்டிதர்.

ஊர்: சோழநாட்டின் தில்லையம்பூர்.

மறைவு: 1883

இவர் திருத்தணிகை விசாகப் பெருமாளையர், சரவணப் பெருமாளையர் ஆகியோரிடம் பயின்றார். சித்தூர் உயர்நிலைப் பள்ளியிலும் பின்னர் கும்பகோணம் கல்லூரியிலும் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றினர். தமது நண்பரான பொன்னு சாமித் தேவரின் விருப்பப்படி தனிப்பாடல்களை ஒன்று திரட்டி

அச்சில் பதிப்பித்துள்ளார். தமிழ் ஓலைச்சுவடிகளை முதன் முதலில் அச்சேற்றிய தமிழ் அறிஞர்களுள் இவர் ஒருவர். தமது ஆசிரியர்கள் இயற்றிய பாலபோத இலக்கணம், நன்னூற் காண்டிகையுரை, ஐந்திலக்கண வினாவிடை முதலிய நூல்களை அச்சிட்டுள்ளார். நன்னூல் விருத்தியுரை, யாப்பருங்கலக் காரிகையுரை, வெண்பாப் பாட்டியல் உரை, செய்யுட்கோவை, பழமொழித் திரட்டு, வச்சனந்தி மாலை, விடப்பிரதினிடத்திரட்டு, அரபத்த நாவலர் இயற்றிய பரத நூல் முதலிய பழைய நூல்களை ஏட்டுச் சுவடியிலிருந்து அச்சில் பதிப்பித்துள்ளார். தண்டியலங்கார மூலத்தையும் அதற்குச் சுப்பிரமணிய தேசிகர் இயற்றிய உரையையும் ஆய்ந்து 1858ஆம் ஆண்டில் அச்சில் பதிப்பித்துள்ளார்.

நூல்: துலங்கானத்தம்மன் பதிகம் திருவாடுதுறை சுப்பிரமணிய தேசிகர் மீது மும்மணிக்கோவை, வருடாதிநூல், பதமஞ்சரி, சோதிட கிரக சிந்தாமணி, திருமயிலைக் கபாலீசர் பதிகம், வரசித்தி விநாயகர் பதிகம், சித்தாந்த விளக்கம்.

திருமயிலைக் கபாலீசர் பதிகம் என்னும் நூல் மயிலாப்பூரில் கோயில் கொண்டருளும் கபாலீச்சுரப் பெருமானைப் புகழ்ந்து உரைக்கும் பதிக இலக்கியமாகும். பதிகத்தின் இறுதியில் நான்கு கட்டளைத்துறைச் செய்யுட்கள் அமைந்துள்ளன; அச்சிடப் பெற்றுள்ளது.

வரசித்தி விநாயகர் பதிகம் என்னும் நூல் கிரீம்பேட்டைச் சுப்பிரமணியசாமி மலையடிவாரத்தில் எழுந்தருளியிருக்கின்ற வரசித்தி விநாயகரைப் பற்றிய பதிகமாகும். இந்நூலில் உள்ள விருத்தங்கள் வரசித்தி கணநாதனே என்று முடிவுறுகின்றன.

## சந்திரசேகரசாமி ( )

நூல்; சர்வவேத சித்தாந்த சாரசங்கிரகம்.

## சந்திரசேகர நாயகர் ( )

நூல்: திருக்கூடலையாற்றுப்புராணம் (1934).

**சந்திரசேகர பண்டிதர்** (19-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் உடுவில்.

தந்தை: அம்பலவாணர்; வேளாளர்.

இவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மூன்று மொழிகளிலும் புலமை பெற்றிருந்தார். வின்சுலோ அகராதி தொகுத்து வெளியிடுவதற்கு உதவிய தமிழ் அறிஞர்களுள் இவரும் ஒருவராவார், இவர் தாமே யாழ்ப்பாண அகராதி என்ற பெயரில் ஓர் அகராதி தொகுத்துள்ளார்: இவ் அகராதி மானுவல் தமிழ் அகராதி (The manual Dictionary of the Tamil Language) என்றும் மானிப்பாய் அகராதி என்றும் அழைக்கப்படுகிறது. இதனை ரெவண்ட் லெவி ஸ்பால்டிங் (Rev. Levi Spaulting) என்பவர் 1842ஆம் ஆண்டில் பதிப்பித்துள்ளார். இவ் அகராதி தமிழ்ச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லாலேயே பொருள் கூறுவதாகும். இவ் அகராதியில் ஏறத்தாழ எல்லாத் தமிழ்ச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. 58500 சொற்களுக்கு இவ் அகராதியில் பொருள் கூறப்பட்டுள்ளது. தமிழுக்குத் தமிழ் அகராதிகளுக்குள் இதுவே முதல் பெரிய அகராதியாகும். இதில் சொற்களேயன்றி அவற்றின் பொருள்களும் அகரவரிசைப் படுத்தப்பட்டுள்ளன. இது நான்கு தொகுதிகளாக வெளி வந்துள்ளது.

**சந்திரசேகர பண்டிதர்-நா.** (19-நூ)

ஊர்: ஈழநாட்டு யாழ்ப்பாணத்து நல்லூர்; அந்தணர்.

தந்தை: நாராயணப்பட்டர்.

இவர் வடமொழியும் தமிழும் கற்றவர்.

நூல்: நல்லூர்க் கந்தசுவாமி மீது கிள்ளை விடு தூது (1786).

**சந்திராமுத கவிஞர்** (18-நூ)

ஊர்: சேற்றூர்.

இவர் பொன்னுயிரம் கவிராயர் என்பவர் சேறைப் புராணம் பாடி அரங்கேற்றிய போது அவரோடு மாறுபாடு கொண்டு பிறகு பாராட்டினர் என்பர்.

நூல்: சேறைப் புராணத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

சந்திரசேகர-செ. ( )

ஊர்: சேலம்.

நூல்: தமிழ் முகம்மதிய மொழி விளக்க ஒக்கபிலேரி (1874)

இந்நூலுக்கு இந்துஸ்தானி ஒக்கபிலேரி என்றும் பெயர் உண்டு. தமிழ்ச் சொற்களுக்கு நேரான இந்துஸ்தானிச் சொற்கள் தரப்பட்டுள்ளன. இது ஒரு சிறிய அகராதி நூல் ஆகும்.

சந்தோஷம்-க. ப ( )

வே.பெ; மகிழ்நன்.

ஊர்: வட ஆர்க்காடு மாவட்டம் வேலூர்.

இவர் வேலூரில் ஷ ர் கீ ன் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர்.

நூல்: மகிழ்நன் ஆராய்ச்சிக் கட்டுரைகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சி

சப்த இருடிகள் ( )

நூல்: சப்த இருடி அநுபோக ஜாதக இரகசியம் (1897), சப்த ரிஷி வாக்கியம் (1893)

அநுபோக ஜாதக ரகசியம் என்னும் நூல் ஏகாம்பர முதலியார் என்பவரது ஏட்டுப்படியையும் அச்சுப்படியையும் கொண்டு ஆராய்ந்து எழுதப்பட்டது. யுகம் ஆண்டு முதலிய கணிதச் செய்திகளையும் கிரகம், இராசி, நட்சத்திரங்கள்

ஆகியவற்றின் விபரங்கள் பலாபலன்கள் ஆகியவற்றையும் உரைப்பது.

### சபாநாயகர் (காலங்கடந்தவராகிய கூத்தப் பெருமாள்) (14-நூ)

நூல்: அடியார்க்கெளியன் என்று தொடங்கும் வெண்பா.

இது 14ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த உமாபதி சிவாச்சாரியாருக்கு எழுதப்பட்டது. இவ்வெண்பாவில் பெற்றுன் சாம்பான் என்பானுக்குத் தீக்கை செய்து அருள வேண்டும் என்று கேட்டுக் கொண்டுள்ளார்.

### சபாபதிச் செட்டியார் (19-நூ)

ஊர்: கும்பகோணம்.

தந்தை: சபாபதிச் செட்டியார்.

இவர் யாழ்ப்பாணம் பூ. முருகேச முதலியாரிடம் கல்வி கற்றுச் செய்யுள் இயற்றும் திறம் பெற்றவர்.

நூல்: யாழ்ப்பாணம் முருகேச பிள்ளை என்பவர் இயற்றிய குடந்தை வெண்பா என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

### சபாபதிச் செட்டியார்–சி. (20–நூ)

நூல்: சிதம்பரம் செட்டியார் அ. என்பவர் இயற்றிய பதிற்றுப் பத்தந்தாதி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

### சபாபதிச் செட்டியார்–தா. (20–நூ)

நூல்: வைத்திலிங்கப் பத்தர் அ. இயற்றிய மங்களேஸ்வரியம் (மொழிபெயர்ப்பு) என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

### சபாபதி சாமிகள் ( )

நூல்; சாதனப்பியாலாநுபவ உபதேசம்.

இந்நூல் 11 பக்கங்கள் கொண்ட செய்யுள் நூல் (1898) இதில் காலையில் செய்யவேண்டிய அனுட்டான விதி பற்றிய அறிவுரைகளும், நீராட்டுபூசை, தியானம், முதலியன வும் கூறப்பட்டுள்ளன.

**சபாபதித் தாயுமானப் பண்டார சந்நிதிகள்—குரு (20—நூ)**

**ஊர்:** அன்னப்பன் பேட்டை. இவர் அன்னப்பன் பேட்டை ஆதீனத் தலைவராக எழுந்தருளியிருந்தவர். சைவ சித்தாந்த நூல்களில் சிறந்த பயிற்சியுடையவர்.

**நூல்:** சாலியமங்கலம் மு சாம்பசிவநாயனார் என்பவர் இயற்றிய சிவஷேத்திர யாத்திராநுகூலம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்

**சபாபதித் தொண்டர் ( )**

**நூல்:** திருச்செந்தூர் நிறை (1876)

இந்நூல் 501 பக்கங்களில் அமைந்த செய்யுள் நூலாகும். திருச்செந்நில் ஆண்டவனைப் பற்றிய துதிப்பாமாலை, திருவாசகத்திற் போல அகவல், விண்ணப்பம், குயிற்பத்து முதலிய பத்துக்கள் ஆகிய பலவகைச்சுவையமைந்த பாடல்கள் இதில் உள்ளன. இந்நூலைப்பற்றி பல புலவர்கள் சாற்றுக் கவிகள் தந்துள்ளனர்.

**சபாபதி நாவலர்—கூ. (19-நூ)**

**ஊர்:** யாழ்ப்பாணத்தில் வடகோவை.

**தந்தை:** சுயம்புநாத பிள்ளை;

**தாய்:** தெய்வயானை.

**வாழ்ந்த காலம்:** 1766–1903.

இவர் செகன்னாதய்யர் என்பவரிடத்தில் முதலில் கல்வி கற்றார். நீர்வேலி சங்கர பண்டிதரிடம் தமிழ், வட மொழி நூல்களைக் கற்றார். ஆறுமுக நாவலர், பொன்னம்பலம்

பிள்ளை ஆகியோரிடத்திலும் சில நூல்களைப் பாடங்கேட்டார். இவர் ஆங்கிலத்திலும் தேர்ச்சி பெற்றார்.

இவர் சிதம்பரத்தில் ஆறுமுக நாவலர் ஏற்படுத்தியிருந்த சைவப்பிரகாச வித்தியாசாலையில் சிலகாலம் ஆசிரியராகப் பணி புரிந்தார். பின்னர்த் திருவாவடுதுறை சென்று அப்பொழுது பதினாருவது பட்டத்தில் உள்ள சுப்பிரமணிய தேசிகரிடம் அருளுரை பெற்றார். இவருடைய தமிழ்ப் புலமையினை அவர் அறிந்து இவரை ஆதீன வித்துவானாக நியமித்தார். இவருடைய நாவண்மையைக் கண்டு நாவலர் என்ற பட்டமும் இவருக்கு வழங்கினார். மதுரையில் உள்ள திருஞானசம்பந்தர் ஆதீனகர்த்தர் இவருக்கு மகாவித்துவான் என்ற பட்டம் வழங்கினார்.

இவர் இராமநாதபுரம் பாஸ்கர சேதுபதியிடத்துச் சென்று அவருடன் சிலகாலம் தங்கியிருந்தார். இவருடைய அறிவாற்றலையும் சொற்பொழிவு செய்யும் ஆற்றலையும் கண்டு சேதுபதி பெருமகிழ்ச்சி அடைந்தார். அவரிடம் விடைபெற்றுக் கொள்ளும்பொழுது அவர் இவருக்கு மூவாயிரம் ரூபாயினை அன்பளிப்பாகக் கொடுத்தார். அத்தொகையினைக் கொண்டு சென்னையில் சித்தாந்த வித்தியானுபாலன யந்திரசாலை என்னும் அச்சகத்தினை இவர் நிறுவினார். ஞானமிர்தம் என்னும் இதழினைத் தம்முடைய அச்சகத்தில் அடித்து வெளியிட்டு நடத்தி வந்தார்.

இவருடைய மாணாக்கர்களில் குறிப்பிடத் தகுந்தவர் மாகறல் கார்த்திகேய முதலியார், திருமயிலை சிங்காரவேல் முதலியார் முதலியோர் ஆவர்.

நூல்: இயேசு மத சங்கற்ப நிராகரணம், சிதம்பர சபாபதிநாத புராணம். சிவகர்ணமிர்தம். பாரததாற்பரிய சங்கிரகம்: இராமாயண தாற்பரிய சங்கிரகம். சதுர்வேத தாற்பரிய சங்கிரகம், திருச்சிற்றம்பல யமக வந்தாதி, திருவிடைமருதூர் பதிற்றுப்பத்தந்தாதி, மாவையந்தாதி, நல்லைச் சுப்பிரமணியக் கடவுள் பதிகம், திராவிடப் பிரகாசிகை, இலக்கண விளக்கப் பதிப்புரை மறுப்பு, வைதிக காவிய தூஷண மறுப்பு; சித்தாந்த மரபு கண்டன கண்டனம், ஞானசூடாமணி,

வதரிநகர் தண்டபாணிக் கடவுள் தோத்திரப் பாமாலை, வட கோவை செல்வவிநாயகர் இரட்டைமணிமாலை.

சிவஞான சாமிகள் இயற்றிய சிவசமவாத உரை மறுப்பு என்னும் நூலினைப் பதிப்பித்துள்ளார்.

**சபாபதிப் பத்தர் (19-நூ)**

ஊர்: சென்னை புதுப்பேட்டை.

நூல்: திருமூர்த்தி நயினர் பாடிய நாலுமந்திரி கதை நாடகத் திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சபாபதிப் பிள்ளை-1 ( )**

நூல்: திருச்சிற்றம்பல யமக வந்தாதி.

**சபாபதிப் பிள்ளை-2 ( )**

ஊர்: கோயம்புத்தூர் மாவட்டம் பொள்ளாச்சி.

நூல்: பொள்ளாச்சி 'நடராசர் தோத்திரப்' பாமாலை.

**சபாபதிப் பிள்ளை-II. ( 20-நூ)**

ஊர்: கும்பகோணம்.

இவர் மீனாட்சிசுந்தரம்பிள்ளை மாணவர், சி. தியாகராசச் செட்டியாரிடம் தமிழ்க் கல்விகற்றுப் புலமை பெற்றார். கோயம் புத்தூர்க் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றினர். புரவிப்பாளையம் சமத்தானப் புலவராகவும் விளங்கினர்.

நூல்: பத்திரகிரியார் புராணம், திருகுடந்தைப் பெரிய நாயகி யம்மை பதிகம், குமரப்பாமாலை, முத்துவிநாயகர் தோத்திரப் பாமாலை. திரும்போரூர் வெண்பாவந்தாதி, திருப்போரூர்க் கலித் துறையந்தாதி, திருப்போரூர்ப் போற்றிக் கலிவெண்பா. திருப் போரூர் அரசம்பலவாணர் பதிகம், சவுடநாயகியம்மை தோத்திரப் பாமாலை, திருஞானசம்பந்த சுவாமிகள் தோத்திரப் பாமாலை, தேவாங்க புராணவுரை, திருப்போரூர் பதிற்றுப்

பத்தந்தாதி, திருப்போரூர்க் கலம்பகம், மரகதவல்லியம்மை திருவருள் விலாசம், உச்சிப்பிள்ளையார் தோத்திரப் பாமாலை சுவாமிமலை அலங்கார பஞ்சகம், திருப்போரூர் புராணவுரை, விசுவநாதர் பதிகம், விசாலாட்சியம்மை பதிகம், கோணியம்மை உயிர்வருக்கமாலை, நடராசர் தோத்திரப்பாமாலை, சுப்பிரமணிய நான்மணிமாலை, பவானிசங்கமேசர் பதிகம், வேதநாயகியம்மை தோத்திரப்பாமாலை, மார்க்கண்டேயர் சரித்திரம், திருவாத வூரடிகள் சரித்திரம். தெய்வயானையம்மையார் திருமணம், வள்ளியம்மையார் திருமணம், சிவஞான முனிவர் சரித்திரம், கோவை கவுடாம்பிகைமாலை.

## சபாபதி முதலியார்-1 (19-நூ)

ஊர்: காஞ்சிபுரம்.

காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளியிலும் சென்னை பச்சையப்பன் கல்லூரியிலும் தமிழாசிரியராக விளங்கியவர்.

இவரிடம் பாடம் கேட்டவர்கள் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, வடலூர் இராமலிங்க சாமிகள், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் ஆகியோர்.

மீனாட்சி சுந்தரம் பிள்ளை வியாசைக் கோவை பாடுவதற்கு பெரிதும் உதவியாக இருந்து பொருள் வாங்கிக் கொடுத்தவர். தண்டபாணி அடிகள் இயற்றிய நூல்கள் சிலவும், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாருடைய திருப்போரூர்ப் புராணமும் இவருடைய தலைமையில் அரங்கேற்றம் செய்யப் பட்டன.

நூல்: சைவசமய விளக்க வினாவிடை, பிரமோத்திர காண்டப் பொழிப்புரை, பெரியபுராண உரை, திருவிளையாடற்புராண உரை, அருணாசல சதகம், திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா, நீதிநெறி விளக்க உரை, கற்பிலக்கண வசனம் திருப்போரூர் அந்தாதி.

இவற்றுள் கற்பிலக்கண வசனம் என்னும் நூலில் 52 இலக்கணம் கற்புடையாருக்குக் கொடுக்கப் பெற்றுள்ளன; காசிகாண்டச் செயயுளிற்கு இணங்கச் செய்யப்பெற்றது என்ப. முருகன் புகழ் கூறும் திருப்போரூர் அந்தாதி 101 கலித் துறைகளைக் கொண்டது.

## சபாபதி முதலியார்-2 (          )

ஊர்: திமிரி.

நூல்: தமிழ் வியாச மஞ்சரி (1897).

இந்நூல் 36 பக்கங்களில் அமைந்த உரைநடை நூலாகும். இது அறுகால் சிறுபறவை வரிசையில் வெளிவருவது. இந் நூலாசிரியர் நற்புத்திபோதம் என்னும் பெயரில் இந்நூலை 1855இல் வெளியிட்டுள்ளார் பின்பு நூலின் பெயர் தமிழ் வியாச மஞ்ரரி என்ற பெயரோடு வெளியிடப்பட்டது. நூலின் பெயரை மாற்றியதேயன்றி நடையையும் சொற்களையும் மாற்றவேயில்லை. உயர்நிலைப் பள்ளி, இடைநிலைப் பள்ளி, சிறுமியர் பள்ளி ஆகியவற்றில் பயில்பவர்களுக்கும் பயன்படக் கூடியது.

## சபாபதி முதலியார்-3 (19-நூ)

ஊர்: சென்னை- - புரசைப்பாக்கம்.

தந்தை: இரிசப்ப முதலியார்;

தாய்: முனியாத்தையம்மாள்.

அட்டாவதானம் செய்யுள் பயிற்சியை அச்சுத உபாத்தியா யரிடத்தில் பெற்றார்.

இவருடைய ஆசிரியர்கள் சென்னைக் கல்விச் சங்கத் தலைமைப் புலவர் தாண்டவராய முதலியார், காஞ்சிபுரம் பெரும்புலவர் சபாபதி முதலியார் மழவை மகாலிங்கையர், இயற்றமிழாசிரியர் விசாகப் பெருமாள் ஐயர், கொட்டையூர்

சிவக்கொழுந்து தேசிகர், புதுவை நயனப்ப முதலியார் ஆகியோர்

பல தனிப் பாடல்களும் பல நூல்களுக்கு உரையும் எழுதியுள்ளார்.

நூல்: திருப்போரூர்ப் புராணம், திருப்போரூர்க் கலம்பகம் திருப்போரூர்அலங்கார பஞ்சகம், திருப்போரூர் யமகவந்தாதி திருப்போரூர் பதிற்றுப்பத்தந்தாதி, திருப்போரூர் வெண்பா மாலை, திருப்போரூர் திரிபந்தாதி, திருப்போரூர் நான்மணி மாலை, திருப்போரூர் இருசொல் யமகமாலை; திருப்போரூர் சதகம், திருப்போரூர் பிரணவாசவ வெண்பாமாலை, திருப்போரூர் சிதம்பர சாமிகள் வரலாறு, திருப்போரூர் சிதம்பர சாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி, திருப்போரூர்ப் புராண உரை நடை, திருத்தணிகை இரட்டைச் சொல் யமகமாலை, புரசை பதிற்றுப்பத்தந்தாதி, புரசை வெண்பாமாலை, புரசை இரட்டைச் சொல் யமகமாலை, திருப்போரூர்க் குறவஞ்சி, திருவொற்றியூர் வடிவுடையம்மை பதிற்றுப்பத்தந்தாதி, வடிவுடையம்மை, தோத்திரச்சந்தமாலை, பழநி வெண்பாமாலை, அருணை வெண்பா மாலை, மயிலை வெண்பாமாலை, காஞ்சி வெண்பாமாலை, காஞ்சிக் குமரக்கோட்டக் கலம்பகம், சென்னைக் கந்தசாமி வெண்பா மாலை, சென்னைக் கந்தசாமி புராணம், திருத்தணிகையாற்றுப் படை உரை, கந்தரநுபூதி விருத்தியுரை, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் உரை.

## சபாபதி முதலியார்–4 (19 நூ)

நூல்: இரகுநாதையர் என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சபாபதி முதலியார் - 5 (19-நூ)

ஊர்; மதுரை.
வாழ்ந்த காலம் 1837-1898,

இவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி என்னும் மும்மொழிகளைக் கற்றிருந்தார். கணித நூலில் வல்லவராகத்

திகழ்ந்தார். அரசாங்கப் பள்ளியில் இருபதிற்கு மேற்பட்ட ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றார். தமது ஓய்வுக் காலத்தில் பல மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். அவ்வாறு இவரிடம் தமிழ் கற்றவர்களுள் பரிதிமாற் கலைஞர் என்ற வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் குறிப்பிடத் தக்கவராவர்.

நூல்: திருப்பரங்கிரிக் குமரன் அந்தாதி, திருக்குளந்தை வடிவேலன் பிள்ளைத்தமிழ், மதுரைமாலை.

இந்நூல்களுள், திருக்குளந்தை வடிவேலன் பிள்ளைத்தமிழ் என்னும் நூல் திருக்குறளந்தை என்று சிறப்பித்துச் சொல்லப் படும் பெரியகுளம் என்ற ஊரில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுள் மீது இயற்றப்பட்டதாகும். 1863 ஆம் ஆண்டில் இயற்றப்பெற்ற இந்நூல் 1896 ஆம் ஆண்டில் அச்சிடப் பெற்றுள்ளது.

திருப்பரங்கிரிக் குமரன் அந்தாதி என்ற நூல் யமகம் பொருந்தியதாக இயற்றப் பெற்றுள்ளது. மதுரைமாலை என்னும் நூல் மதுரைப் பெருமான்மீது இயற்றப்பெற்றது.

## சபாபதி முதலியார்-6 (   )

ஊர்: மாமண்டூர்.

நூல்: நளவிலாசம் (1872).

இந்நூல் 213 பக்கங்களில் அமைந்துள்ள உரைநடையும் செய்யுளும் விரவிய நூலாகும்.

## சபாபதி முதலியார்-7 (   )

ஊர்: வேலம்.

நூல்: திருவொற்றியூர் வடிவுடையம்மைபதிகம் (1867).

இது 10 பாடல்களைக் கொண்டது. இப்பாடல்கள் வடிவுடையம்மையின் மேல் தோத்திரமாக அமைந்துள்ளன. தேவாரப் பதிகம் போன்ற அமைப்பையுடையன.

**சபாபதி முதலியார்—தொ.** (19-நூ)

**நூல்:** முனிதாச சாமிகள் இயற்றிய 'மெய்ஞ்ஞானத் திரட்டு என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சபாபதி முதலியார்—பு வே.** (20-நூ)

**நூல்:** மாணிக்கமுதலியார் க. இயற்றிய சங்கீதசந்திரிகை என்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சபாபதி முதலியார் வெ.** (19-நூ)

**ஊர்:** தஞ்சை மாவட்டம் பூவனூர்.

**நூல்:** திருவாவடுதுறை ஆதினம் சுப்பிரமணியத் தம்பிரான் 'பாடிய 'பூவலூர்ச் சிலேடை வெண்பா' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சபாபதியா பிள்ளை அ** ( )

**நூல்:** துறைசைச் சதாலங்காரம் (1884).

இந்நூல் பத்துச் செய்யுட்களைக் கொண்டு அலங்காரங் களின் பெயர்களைக் கூறுகின்றது.

**சபாரத்தின முதலியார்—குல.** (20-நூ)

**ஊர்:** ஈழநாட்டில் யாழ்ப்பாணத்தில் கொக்குவில்.

**தந்தை:** சபாபதிப்பிள்ளை. வேளாளர். வாழ்ந்த காலம் 1858--1922.

இவர் தொடக்கத்தில் சுயம்புநாதபிள்ளை என்பவரிடம் தமிழ்க் கல்வி பயின்ருர். மத்திய கல்லூரியில் ஆங்கிலம் கற்ருர் வண்ணை பண்ணையிலுள்ள சைவப்பிரகாச வித்தியாசாலையில் ஆறுமுக நாவலரிடத்தில் சமய நூல்களைப் பாடங்கேட்டார். இதனல் இவருக்குச் சமயப்பற்று மிகுதியாக ஏற்பட்டு தமது பத்தொன்பதாவது வயது முதற் கொண்டே சமயத் தொண்டுகளில் ஈடுபட்டார்.

இவர் முதன் முதலில் 1878 ஆம் ஆண்டில் அரசாங்க அலுவலில் எழுத்தாளராக வேலை பார்க்கத் தொடங்கினார். உழைப்பால் உயர்ந்து முல்லைத்தீவு, கொழும்பு, கண்டி, காலி முதலிய இடங்களில் அலுவல் புரிந்தார். யாழ்ப்பாணக் கச்சேரியில் முதலியாராகப் பணி புரிந்தார். 1905 ஆம் ஆண்டில் அரசினர் இவருக்கு முதலியார் பட்டம் அளித்தனர். 1917 ஆம் ஆண்டில் சமாதான நடுவராக இருந்து 1919--ஆம் ஆண்டில் இராசவாசல் முதலியார் என்ற பட்டத்தினைப் பெற்றார். 1921 ஆம் ஆண்டில் அலுவலிருந்து ஓய்வு பெற்றார்.

இவர் தமது 19-ஆவது வயதிலேயே உதயதாரகை பத்திரிகையில் நிரீச்சுரவாதத்தை மறுத்துப் பல கண்டனங்களை எழுதியுள்ளார். அரசாங்க அலுவலில் இருந்தபோது இந்து சாதனம் என்னும் பத்திரிகையில் பல சமயக் கட்டுரைகளை வெளியிட்டார்.

நூல்: ஈச்சுர நிச்சயம். சீவான்மபோதம், இந்துமதத்தின் முக்கியாம்சங்கள், பிரபஞ்ச விசாரம், சரவணபவமாலை, நல்லை நாண்மணிமாலை சைவோத்ரம், பண்டைத் தமிழர்களின் சமயக் கொள்கை, கொக்குவில் சித்திவிநாயகர் இரட்டை மணிமாலை, கொக்குவில் சிவசுப்பிரமணியர் மும்மணிக்கோவை, மறுபிறப் புண்மை.

திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். எஸ்ஸென்சியல் ஆப் ஹிந்துயிசம் (Essential of Hinduism) லைப் ஆப் திருஞானசம்பந்தர் (Life of Thirugnansambanthar) என்பன இவர் எழுதிய ஆங்கில நூல்கள்.

## சபாரத்தின முதலியார்-ச. (20-நூ)

நூல்: பிரபஞ்ச விசாரம் (1918)

இந்நூல் உலகத் தோற்றத்தைப் பற்றி ஆராயும் சமய நூலாகும்.

## சம்பந்த சரணாலயர் (17-நூ)

தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்தவர். திருமலைநாயக்கர் காலத்தில் வாழ்ந்த தருமை மாசிலாமணி தேசிகருக்கும்

குமாரகுருபரருக்கும் பின் 6 ஆவது பட்டத்தில் வீற்றிருந்த திருஞான சம்பந்த தேசிகாது காலத்தவராதலால் இவர் வாழ்ந்த காலம் 17 ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி என்று கருதப்படுகிறது.

இவர் திருஞானசம்பந்த தேசிகரை மெய்யறிவாசிரியராகக் கொண்டு அவரிடத்தில் நிறைந்த அன்பு செலுத்தி, அவரது திருவடிகளையே பற்றுக் கோடாகக் கொண்டு ஒழுகினர். இதனாலேயே சம்பந்த சரணாலயர் என்ற காரணப் பெயர் இவருக்கு ஏற்பட்டது. இவர் பேச்சாற்றலில் வல்லவர்.

நூல்: கந்தபுராணச் சுருக்கம், சிகாரத்னமாலை துதி நூல், இது மைசூர் அரசரின் வேண்டுகோளின்படி செய்யப்பெற்றது.

**சம்பந்தப் புலவர் வே -(19-நூ)**

ஊர்: யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த நல்லூர்.

தந்தை; வேலாயுத முதலியார்.

இவர் ஆறுமுக நாவலருடன் மிகுந்த நட்புக் கொண்டிருந்தார். இருபாலைச் சேனாதிராய முதலியார், சரவணமுத்துப் புலவர் ஆகியோரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். உடுப்பிட்டியைச் சேர்ந்த சிவசம்புப் புலவரும், புன்னாலைக் கட்டுவன் செந்தில் நாதையரும் இவருடைய மாணாக்கர்கள் ஆவார்கள்.

நூல்: கதிர்காம சுவாமி பேரில் பாடிய பலகீர்த்தனங்கள்.

**சம்பந்த முதலியார் ப. (20-நூ)**

சி. பெ: நாடகப் பேராசிரியர்.

ஊர்: பம்மல்.

பிறந்தநாள்: 1-2--1873.

மேனாட்டு முறையையொட்டி தமிழக நாடக மேடையில் மாற்றங்கண்ட இவ்வறிஞர் சென்னைப் பல்கலைக் கழகத்திற்

பயின்று பி. ஏ. பி. எல். பட்டம் பெற்றவர். நீதிபதியாகப் பணியாற்றியவர்.

தமிழக நாடக மேடையைத் தெருக்கூத்தினின்றும் மாற்றி அமைத்தார். பல நாடக நூல்களை எழுதியதோடு தாமே நடித்தும் அவர் இத்துறையில் தொண்டாற்றினர். எழுத்துப் பணியில் சேக்ஸ்பியர் நாடகங்களை மொழியாக்கம் செய்தார். வடமொழி நாடகங்களைத் தழுவியும் புதிய நாடகங்களைப் படைத்தும் நகைச்சுவை மிக்க சமுதாய நாடகங்களை அமைத்தும் பல நாடகங்களை எழுதியுள்ளார்.

நூல்: அமலாதித்யா, புத்த அவதாரம், துவிபாடிய சபாபதி, ஹரிச்சந்திரன், இல்லறமும் துறவறமும், இந்தியனும் ஹிட்லரும், இரண்டு நண்பர்கள், காதலர் கண்கள். கலையோ காதலோ, காளப்பன் கள்ளத்தனம், காலவ ரிஷி, கள்வர் தலைவன், கொடையாளிக்கர்ணன், குறமகள், லீலாவதி, சுலோசன, மகபதி, மாளவிகாக்கி நிமித்ரம், மனோஹரா, மார்க்கண்டேயா, மெய்க்காதல், மூன்று நகைச்சுவை நாடகங்கள். முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும், நல்லதங்காள், நற்குல தெய்வம். ஒன்பது குட்டி நாடகங்கள், ஒரோர் ஒத்திகை, ஓர் விருந்து, பேயல்ல பெண்மணியே, பிரஹசனங்கள், பிராமனனும் சூத்திரனும், பொன் விலங்குகள், பொங்கற்பண்டிகை, புஷ்பவல்லி, ரஜபுத்ரவீரன், ரத்னவளி, சகதேவன் சூழ்ச்சி, சபாபதி, துணுக்குகள், சாரங்கதரன், சதிசுலோசன, சத்ருஜித் ஸிம்ஹள நாதன், சந்திரஹரி, சிறுத்தொண்டர், சுபத்திரா அர்ச்சுன, தாசிப்பெண். தீபாவளி வரிசை, தீயின் சிறுதிவலை, உண்மையான சகோதரன், ஊர்வசியின் சாபம், உத்தமபத்தினி, வள்ளிமணம், வாணிபுர வணிகன், வேதாள உலகம், விடுதிப் புஷ்பங்கள், விஜயரங்கம், விரும்பிய விதமே, யயாதி.

பிறநூல்கள்: ஹாஸியக் கதைகள், ஹாஸ்ய வியாசங்கள் காலக் குறிப்புக்கள், நாடக மேடை நினைவுகள், நாடகத்தமிழ், நடிப்புக் கலையில் தேர்ச்சி பெறுவது எப்படி, பேசும்பட அனுபவங்கள், சிறுகதைகள், சிவாலயச் சிற்பங்கள், சிவாலய உற்சவங்கள், சிவாலயங்கள், இந்தியாவிலும் அப்பாலும்,

சுப்பிரமனிய ஆலயங்கள், தமிழ்பேசும் படக் காட்சி, திட்சிதர் கதைகள், உணவுப் பொருள்களின் குணங்கள்.

## சம்பந்த முனிவர்–1 ( )

வே. பெ: பழுதை--கட்டி சம்பந்த பண்டாரம், சம்பந்த மாமுனிவர் சிற்றம்பல நாடிகளின் மாணவர். காவை அம்பலநாதத் தம்பிரானும் சம்பந்த சரணலயரும் இவருடைய மாணவர்கள்.

நூல்: சிவானந்தமாலை, சிற்றம்பலநாடி தாலாட்டு. சிற்றம்பல நாடி வெண்பா.

சிவானந்தமாலை--சைவ சித்தாந்த உண்மைகளைக் கூறும் 414 வெண்பாக்களையுடையது 'சிற்றம்பலநாடி தாலாட்டு' 63 கன்னிகள் கொண்ட ஒரு சிறுபிரபந்த நூல். சிற்றம்பலநாடி வெண்பா' -- சித்தாந்த சாத்திரக் கருத்துக்களைக் கொண்ட 66 வெண்பாக்களையுடையது. இந்நூல் சிற்றம்பல நாடி மாலை என்றும் வழங்கப்பெறும்.

## சம்பந்த முனிவர்–2 (பிற்காலம்)

நூல்: சம்பந்தப் பாட்டியல் என்னும் வரையறுத்த பாட்டியல். ஆசிரியர், சம்பந்த மாமுனிபாத மலர் நேர் கொண்டிறைஞ்சி இந்நூலைத் தொடங்குதலால் இந்நூலாசிரியர் சம்பந்த முனிவர் அல்லரென்றும், வெண்பாப் பாட்டியலை வச்சணந்தி முனிவர் செய்வித்தது போல சம்பந்த முனிவர் வரையறுத்த பாட்டியலைச் செய்வித்தவராவரென்றும் துணிய இடமுண்டு

## சம்பந்த முனிவர் – 3. (16-நூ)

ஊர்: பாண்டியநாட்டுத் தெற்குப் பகுதியில் உள்ள அளகாபுரி; சைவ வணிகர்.

நிரம்ப அழகிய தேசிகரிடம் கல்வி கற்றுத் துறவியாகி தேசிகருடைய குருவான ஞானப் பிரகாச தேசிகரது உறைவிடமான திருவாரூருக்குச் சென்று தங்கியிருந்தார்.

நூல்: திருவாரூர்ப் புராணம்.

இதற்கு மூலநூல் வடமொழியிலுள்ளது. 108 சருக்கங்களை யும் 2929 செய்யுட்களையுங் கொண்டது.

**சம்பந்தர் (     )**

பார்க்க: திருஞானசம்பந்தர்.

**சம்புநாதன், எம். ஆர். (20-நூ)**

ஊர்: திருச்சி மாவட்டம் மணக்கால்.

பிறப்பு: 23—8—1896.

இவர் ஆங்கிலம், இந்தி, வடமொழி ஆகியவற்றிலும் பயிற்சி உடையவர். ஸகமவேதம், சனவேதம், சத்தியார்த்தப்பிர காசம் என்ற மொழி பெயர்ப்பு நூல்களையும் செய்துள்ளார். 1957 ஆம் ஆண்டில் டோக்கியோவில் நடைபெற்ற உலக எழுத்தாளர் மாநாட்டிலும், 1963 ஆம் ஆண்டில் புதுடெல்லியில் நடைபெற்ற உலகக் கீழ்க்கலை மாநாட்டிலும் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். பம்பாய்த் தமிழ் எழுத்தாளர் சங்க முதற்தலைவராகப் பணியாற்றியவர்.

நூல்: சீனவேதம் அல்லது சகத்தின் சூட்சுமம், கதாரதம், மாஜினி சரித்திரமும் மனிதர் கடமைகளும், திரிமூர்த்தி உண்மை, உபநிஷதக் கதைகள், வேத சப்திரிகை, யஜுர்வேத சதபத பிராமணக்கதைகள். சுவாமி சிரத்தானந்தர், யோகாசனங்கள், யோகாபாடி என்ற ஆங்கில நூல்களையும், யஜுர்வேதம், அதர்வணவேதம், ஸாமவேதம் என்ற மொழிபெயர்ப்பு நூல்களையும் செய்துள்ளார்.

**சம்புவராயன் (14-நூ)**

வே. பெ: ஏகாம்பர நாத சம்புவராயன்.

இவர் தொண்டைமண்டலத்தின் காஞ்சிமா நகரத்தில் அரசாட்சி செய்தவர்.

நூல்: பலதனிப்பாடல்கள்.

**சம்போகநாதர் ( )**

இவர், சம்போகநாதர் வாதசித்தி என்னும் நூலினை இயற்றியுள்ளார்.

**சமதக்கினி—க. ரா. (20—நூ)**

ஊர்: வட ஆர்க்காடு மாவட்டம் கடப்பேரி.

பிறந்த நாள் 14-4-1903.

விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட இவர் வடமொழி, இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளையும் கற்றறிந்தார்.

நூல்: தேசிய கீதங்கள், இந்தியாவில் சோஷலிசம், கனிந்த காதல் அல்லது ததும்பும் தேசபக்தி, லெனின், மார்க்ஸீயம் அல்லது சமூக மாறுதலின் விஞ்ஞானம், நீ ஏன் சோஷலிஸ்ட் ஆக வேண்டும், சோஷலிஸ்ட் கீதங்கள், ஸ்ரீமஹா பக்த விஜயம், திருமுருகாற்றுப்படை விரிவுரை, காமன் மகள், மேக்சந் தேசம்,

**சமயதிவாகர வாமன முனிவர் ( )**

பார்க்க: வாமன முனிவர்-2

**சயங்கொண்டார் (12—நூ)**

சி. பெ: கவிச்சக்கரவர்த்தி.

ஊர்: தஞ்சைமாவட்டம் தீபங்குடி.

இவர் முதற் குலோத்துங்க சோழனின் அவைக்களப் புலவராக விளங்கியவர். சோழனது கலிங்க வெற்றியைப் புகழ்ந்து கலிங்கத்துப்பரணி பாடியவர். உமாபதி, திருமால், நான்முகன், இரவி, பிள்ளையார், நாமகள். உமையவள், ஏழுமாதர் என்போர்க்கு கலிங்கத்துப்பரணியிற் வணக்கம் கூறியிருத்தலின் இவர் சைவ சமயத்தினா

என்று அறியலாம். சிலர் இவரைச்சமண சமயத்தின ரென்றும் கூறுவர்.

நூல்: கலிங்கத்துப்பரணி.

இந்நூல், தக்கயாகப் பரணியில் ஒட்டக்கூத்தரால் தென் தமிழ்த் தெய்வப் பரணி எனப் பாராட்டப் பெற்றசிறப்பினை யுடையது. பரணி என்பது போரில் ஆயிரம் யானையை வென்ற வீரனைப் பாடும் பிரபந்தம். போரினின்றும் மீண்ட தலைமகன்பால் புலவியுற்ற தலைமகளது ஊடலைத் தீர்த்தற் பொருட்டுப் புலவர்கள் வாயிலாதலும், புலவியாற்றிய பின்னர்த் தலைவன் சென்ற காட்டின் கொடுமையையும் தலைவன் வீரத்தையும் அக்காட்டிலுள்ள பேய்கள் காளிக்குச் சொல்வதையும் காளிபேய்கட்குரைப்பதையும் எடுத்தியம்பும் வடிவுடன் பரணி என்பது விளங்கும். இந்நூல் கடவுள் வாழ்த்து முதல் களம் பாடியது வரை பதின்மூன்று பிரிவு களையும் 596 தாழிசைகளையும் உடையது. இந்நூலை அரங் கேற்றிய பொழுது முதற்குலோத்துங்கன் அப்பாடல்களின் சொற்சுவை பொருட்சுவைகளைக் கண்டு வியந்து ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு பொற்றேங்காயை உருட்டிச் சிறப்புச் செய்தான் என்று கூறுவர்.

## சயந்த நூலுடையார் ( )

நூல்: சயந்தம்.

இந்நூல் ஒரு தமிழ் நாடக நூலாகும். இந்நூலைப் பற்றி அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதை 12ஆம் அடி இருவகைக் கூத்து என்பதன் உரையில் சயந்த நூலிலிருந்து ஒரு சூத்திரத்தை மேற்கோள் காட்டியுள்ளார். அடியார்க்கு நல்லார் காலத்தில் சிதைந்து காணப்பட்ட இந்நூல் இப்பொழுது முற்றிலும் மறைந்து விட்டது.

**சயம்பர் (19-நூ)**

ஊர்: ஈழநாட்டு யாழ்ப்பாணத்து சாவகச்சேரி மறவன்புலம்.

இவர் சேனாதிராய முதலியாரிடம் கல்வி கற்றுப் புலமை பெற்றார்.

நூல்: உமாபதிமாலை.

இந்நூல் 30 செய்யுட்களைக் கொண்டது

**சயராம சாமிகள் ( )**

நூல்: கணேச மூர்த்தியார் இயற்றிய சற்குருஸ்தவம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சர்க்கரை அருணாசலப்புலவர் (17-நூ)**

ஊர்: இராமநாதபுரம்,

நூல்: பொன்பற்றிச் செல்வியம்மை யூசல். தேரடிக் கறுப்பன்ன சாமி மீது பாடல் ஒன்று.

**சர்க்கரைக் கருப்பன் செட்டியார் ( )**

ஊர்; செட்டிமார் நாட்டுக் கீழச்சீவற்பட்டி.

தந்தை: முத்தப்பச் செட்டியார்.

நூல்: சில தனிப்பாடல்கள்.

**சர்க்கரைக் கவிராயர் ( )**

நூல்: காரணக்கும்மி (1878).

இந்நூலை இவர் மூத்துசாமிக் கவிராயரோடு சேர்ந்து இயற்றியுள்ளார். இந்நூல் 268 செய்யுட்களைக் கொண்டது. இது காமிலொலி நயினா மூகம்மது சாயபுவின் வரலாறும்

புகழும் பேசும் நூலாகும். பெண்கள் பாடும் கும்மி மெட்டில் அமைந்துள்ளது.

## சர்க்கரைச் செட்டியார்-1. (    )

ஊர்: பழவை.

நூல்: தியாகராசன் கவிராயர் திருவாலங்காட்டுப் புராணத்திற்கு யாத்த உரையினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சர்க்கரைச் செட்டியார் - 2. (    )

ஊர்: பாளையம்.

நூல்: திருப்போரூர் அட்டகம் (1873), திருப்போரூர் வெண்பா மாலை (1873).

திருப்போரூர் அட்டகம் என்னும் நூல் முருகனைச் துதிக்கும் எட்டு விருத்தங்கள் அடங்கிய நூலாகும்.

## சர்க்கரைப் பாரதி (19-நூ)

ஊர்: சிவகங்கையைச் சேர்ந்த வேம்பத்தூர்.

மறைவு: 1893.

இவர் சிலேடைப்புலி பிச்சுவையர் என்னும் மூத்துவேங்கட சுப்பையருக்கு இளையவர்.

நூல்: தென்காசி உலகம்மை பதிகம்.

## சர்க்கரைப் புலவர் - 1. (17-நூ)

சி. பெ: பொன்னெட்டிமாலை சர்க்கரைப் புலவர்.

ஊர்: திருவுத்தரகோசமங்கைக்கு அண்மையிலுள்ள கடாரம்.

தந்தை: சாந்தாப்பிள்ளை, வேளாளர்.

இனிமையாகச் செய்யுள் பாடும் திறத்தால் இவர் சர்க்கரைப்புலவர் என்று பெயர் பெற்றார். இப்பெயர் பெற்ற புலவர் மரபினரில் இவரே முதலாமவர் என்று கருதப்படுகிறது.

இவர், திருவாவடுதுறை ஆதீனத்தில் எட்டாவது பட்டத்தில் சின்னப் பட்டத்தில் அமர்ந்திருந்த சிவக்கொழுந்து தேசிகரை ஆசிரியராகக் கொண்டு இலக்கண இலக்கியங்களையும் சைவ சித்தாந்த நூல்களையும் முறையாகக் கற்றார். பின்னர் விசய ரகுநாத சேதுபதியின் அரசாங்கப் புலவராக அமர்ந்தார். அப்பொழுது இவர் இனிமையாகக் கவிபாடும் ஆற்றல் பெற்றிருந்ததால் சர்க்கரைப் புலவர் என்று சிறப்புப் பெயர் பெற்றார். இவர் இராமாயணச் சொற்பொழிவு செய்வதில் வல்லவராக விளங்கினார். ஒரு முறை விசயரகுநாத சேதுபதியின் அவைக்களத்தில் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருக்கையில் அனுமார் கடலைத் தாண்டியதை மிக விரிவாக எடுத்துக் கூறினார். அவையில் இருப்போர் எப்படித் தாண்டினர் என்று கேட்க, இவர் மெய்மறந்து தாமே தாண்டிக் காட்ட அரசனும் அவையினரும் அதுகண்டு மகிழ்ந்தனர். பின்னர் அரசன் புலவருக்குப் பொன்னால் நெட்டிமாலை செய்து அணிவித்தான். முற்றூட்டாக உழக்குடி என்ற ஊரினையும் கொடுத்தான். இப் புலவர் சேதுபதியைப் பாடி சிறுகம்பையூர், கொந்தவாங்குளம், கோட குடி முதலிய ஊர்களையும் பெற்றார். இவ்வூர்கள் கன்னங்குடிப் பகுதியில் உள்ளன.

நூல்: திருச்செந்தூர் கோவை, வேதாந்த சூடாமணி உரை. இவ்வுரை சித்தாந்தப் பொருள் அமையச் செய்யப்பெற்றது. இவர் நூல்கள் இயற்றியதோடு இரகுநாத சேதுபதி, மைசூர் அரசரையும் தஞ்சை அரசரையும் போரில் வென்ற சிறப்பைக் குறித்துத் தனிப்பாடல்கள் சிலவும் இயற்றியுள்ளார்.

## சர்க்கரைப் புலவர்-2 (18-நூ)

ஊர்: தேவகோட்டைக்கு அருகில் உள்ள சிற்றூர். இவர் சவ்வாதுப் புலவருக்கு மைத்துனர்.

இஸ்லாம் சமயத்தினர்.

நூல்: மதீன்அந்தாதி.

இந்நூல் அராபியாவில் உள்ள மெக்காத் தலத்தைப் பற்றியது.

**சர்க்கரைப் புலவர்-சீ.** (18-நூ)

**ஊர்:** இராமநாதபுரம் மாவட்டம் சிறுகம்பையூர்.

தந்தை: பொன் நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவரின் மகனுரான சீனிப்புலவர்.

இவர் தம் பாட்டனுரிடத்தும் தந்தையாரிடத்தும் தியாக ராச தேசிகர் என்பாரிடத்தும் கல்வி கற்றுப்புலமை பெற்றுர். இராமநாதபுரம், சிவகங்கை அரசவைகளில் அவைப்புலவராக விளங்கினுர். சிவகங்கை அரசவையில் சசிவர்ண பெருவுடையார் தேவர் முன்னிலையில் கம்பராமாயணச் சொற்பொழிவு நிகழ்த் தித் தேளியூர் என்னும் சிற்றுரை முற்றூட்டாகப் பெற்றுர். அந்தஊர் வளமில்லாமல் இருந்ததால் அதனை அமைச்சர் தாண்டவராயப்பிள்ளைக்குச்செய்யுள் மூலம் தெரிவிக்க. அவர் முத்து வடுகநாதத் தேவருக்குத் தெரியப்படுத்தி ஆச்சான்குளம் என்னும் ஊரைக்கொடுக்குமாறு செய்தார். மற்றும் மருதங் குடியில நாற்பது செய் நிலமும், காடாவயல் என்னும் ஊரில் முப்பது செய் நிலமும் பெற்றுர். தஞ்சை அரசர் பிரதாப சிங்கர், மீன்புசல் என்னும் இராசகுமராம்பாள்புரம், சத்திரங் கிராமங்களிலும் மணமேற்குடி சத்திரம் கிராமங்களிலும் மகமை ஏற்படுத்திஞர்.

நூல்: திருப்பத்தூர் வைரவரலங்காரம், திருப்புனவாயிற்பள்ளு, புதுக்கோட்டை தட்சிணுமூர்த்தி மும்மணிக்கோவை, புதுக் கோட்டைத் தொண்டைமான் வண்ணம், வணங்காமுடியார் வண்ணம், திருவாடானைச் சித்திரகவியலங்காரம், கலசங்கார மூர்த்தி வெண்பா வண்ணம், நட்சத்திரமாலை, மண்டலக் கோட்டை வண்டுவனப் பெருமான் ஊசல், தாண்டவராயப் பிள்ளைமீது கோவை.

**சர்க்கரை முத்துக் கருப்பர் புலவர்** (          )

**ஊர்:** இராமநாதபுரம்.

நூல்: வைரவக் கடவுள் பதிகம்.

## சர்க்கரைமுத்து முருகப்புலவர் (18-நூ)

தந்தை: சீனிப்புலவரின் மகனுராகிய இரண்டாவது சர்க்கரைப் புலவர்.

இவர் முத்துராமலிங்க சேதுபதியின் அமைச்சர் முத்திருளப்ப பிள்ளையிடம் பாராட்டுப் பெற்றவர்.

நூல்: மிழலைச் சதகம் இந்நூல் பிரதாப சிம்ம மகாராசர் தஞ்சாவூரை ஆண்டபோது வேங்கடாசலமால் அமைச்சராகவும் மாணிக்கவாசகவேள் சம்பிரதியாகவும் உள்ள நேரத்தில் வெள்ளாற்றுப் பாய்ச்சல் மிழலை நாட்டில் குடியேறி வள்ளல்களாக இருந்த துருவ வேளாள மக்களைச் சிறப்பித்து, அவரது ஏர்வளத்தினைப் பாடியதாகும். இது கம்பர் பாடிய ஏரெழுபது என்ற நூலினைப் பின்பற்றியது. இவர் இந்நூலுடன் பழைய திவாகரம் பன்னிரண்டு தொகுதிக்கும் பொருள் விளக்கம் எழுதியுள்ளார். இவர் முத்திருளப்ப பிள்ளைக்கு எழுதிய சீட்டுக்கவி ஒன்றின் இறுதியில் உள்ள குறிப்பால் உலாமாலை என்ற நூலொன்று இயற்றியதாகவும் தெரிகிறது.

## சர்க்குணம் உவில்பிரேட் ஐயர் (19-நூ)

ஊர்: திருநெல்வேலி வாழையடி முதலூர்.

வாழ்ந்த காலம்: 1810-1879.

இவர் தமிழ், ஆங்கிலம், இலத்தின், கிரீக்கு, எபிரேயம் முதலிய மொழிகளில் பயிற்சி யுடையவர். சில ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

நூல்: தாவீதரசன் அம்மானை, உதிரமகத்துவம், இரத்தினவலி நாடகக்கதை.

## சர்வேசுவர சர்மா (20-நூ)

ஊர்: யாழ்ப்பாணம்

நூல்: துரைச்சாமி முதலியார் வீ. கண்ணப்ப நாயனார்மீது பாடிய கலம்பக நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சரசலோசனசெட்டி** (19--நூ)

ஊர்: திருவெவ்வலூர்.

நூல்: சரசாங்கி.

இது ஒரு தமிழ் நாடக நூல்.

**சரசுவதி அர்மாள் கே** ( 20-நூ )

பிறப்பு: 1900

இவர் சிறுகதை, புதினப் படைப்பாளர்.

நூல்: நிழலும் ஒளியும் (1950), தெய்வத்திற்கு மேல் (1947).

நிழலும் ஒளியும் என்னும் நூல் ஒரு சமூகப் புதினமாகும். தெய்வத்திற்கு மேல் என்னும் நூல் சிறுகதை நூலாகும்.

**சரசுவதி ஐயர்—எஸ்.** ( )

நூல்: சௌக்கியநூல் சுருக்கம் (1894).

இந்நூல் ஆகாயம், நீர், உணவு முதலியன பற்றியுரைப்பது; 32 பக்கங்களைக் கொண்டுள்ளது.

**சரவண உபாத்தியாயர்** (19-நூ)

நூல்: இராசாராம் கோவிந்தராவ் என்பவரால் இயற்றப்பட்ட ஸ்ரீபக்த லீலாமிர்தம் என்ற நூலுக்கு வழங்கிய சாற்றுக்கவி.

**சரவண தேசிகர்** (19-நூ)

ஊர்: காஞ்சீபுரம்; செங்குந்தர்.

வாழ்ந்த காலம்: 18 ஆம் நூற்றண்டின் பிற்பகுதியும் 19 ஆம் நூற்றண்டின் முற்பகுதியும்.

இவர் திருவாவடுதுறை ஆதினத் திராவிட மாபாடிய கர்த்தராகிய சிவஞான சாமிகளிடம் இலக்கண இலக்கியங் களைக் கற்றவர் கச்சியப்ப சாமிகளிடம் மெய்கண்ட சந்தான சாத்திரங்களைக் கற்ருர். சொர்க்கபுரம் தவப்பிரதாப மூர்த்திகளிடம் பஞ்சாக்கர உண்மையுபதேசம் பெற்ருர். இவர் நைட்டிக விரதம் ஏற்று மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்தார். தாம் வழிபட்டு வந்த ஆநந்தருத்திரேசனுக்குக் கோயில் அமைத்து நாள் வழிபாடு சிறப்பாக நடைபெற ஏற்பாடு செய்தார்.

நூல்: ஒருபா உண்மை உபதேசம், வீட்டுநெறி உண்மை, பஞ்சாக்கர அநுபூதி. உபதேச சித்தாந்த விளக்கம், ஒருபா ஒருபது, தேவிகாலோத்தரம்.

**சரவண தேசிகர் சீடர் (          )**

நூல்: சரவண தேசிகர் தோத்திரம், சிவானந்தமாலை.

**சரவணப்பிள்ளை (          )**

நூல்: பழநிமுருகேசர் பதிகம் (1890), மட்டுவார் குழலியம்மை திருப்பதிகம்.

முதல்நூல் பழநிமுருகனைக் குறித்துத் துதியாக அமைந்த பதிகப்பாமாலையாகும். மட்டுவார் குழலியம்மை திருப்பதிகம் திரிசிரபுரத்தில் கோயில் கொண்டுள்ள மட்டுவார் குழலியம் மையைக் குறித்த துதிமாலையாகும்.

**சரவணப் பிள்ளை-கா. (          )**

நூல்: கண்ணப்ப சுவாமிகள் கீர்த்தனம் (1891).

இந்நூல் அறுபத்து மூன்று நாயன்மார்க்களுள் ஒருவரா கிய கண்ணப்பர் வரலாறு கூறுவது, கதைப்பாட்டு நிகழ்த்து

பவர்களுக்கு ஏற்றது, கீர்த்தனைக் கவிதை, கண்ணிகள் முதலிய வற்றால் ஆகியது.

**சரவணப்பிள்ளை-சா. (19-நூ)**

ஊர்: சேலம்; தந்தை: சாமிநாதக் கவிராயர்.

இவர் சேலம் கல்லூரியில் 17 ஆண்டுகள் தமிழ்ப் புலவராகப் பணியாற்றியவர்.

நூல்: விவேகபாநு முதலிய இதழ்களில் வெளியிட்ட கட்டுரைகள்.

**சரவணப்பிள்ளை-பெ. (20-நூ)**

ஊர்: திரிசிரபுரம்.

இவர் புதுக்கோட்டை அரசர் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: தியான பந்தன மாலிகை, இராமாயன சமய உசித கவிதை, மகாவிட்டுணு தசாவதாரப் பதிகம், காந்தசார வெண்பா (1888).

காந்தசார வெண்பா 460 செய்யுட்களைக் கொண்டது; முருகப் பெருமான் வரலாறு உரைக்கும் கந்தபுராணத்தின் சுருக்கமாய் அமைந்தது.

**சரவணப்பெருமாள் ஐயர் (19-நூ)**

ஊர்: திருத்தணிகை.

தந்தை: கந்தப்பையர்; தமையன்; விசாகப்பெருமாள் ஐயர்; வீரசைவர்.

கந்தப்பையரின் இரு மனைவியர்க்கும் மக்கட்பேறு கிடைக்கவில்லை. கந்தப்பையர் முருகன் பக்தியும் மனைவியர் திருப்பதிப் பெருமாள் பக்தியும் கொண்டு விளங்கவே மக்கட் பேறு கிட்டியது. அவர்களே சரவணப் பெருமாள் ஐயரும் விசாகப்பெருமாள் ஐயருமாவர். முருகன் பெயரும் பெருமாள்

பெயரும் இணைய இவர்கள் பெயர் வழங்கப் பெற்றனர். முருகனையே பெருமாளாகப் பாடுவதும் திருப்புகழில் உண்டு.

இயற்றமிழாசிரியர் இராமானுச கவிராயரிடம் கல்வி பயின்றவர்.

நூல்: இயற்றமிழ்ச் சுருக்கம், அணிஇயல் விளக்கம், பூகோள தீபிகை, நான்மணிமாலை, குளத்தூர்ப் புராணம், இலக்கணச் சுருக்க வினவிடை.

உரை எழுதிய நூல்கள்: நைடதத்தில் கைக்கிளைப்படலம் வரை, பிரபுலிங்க லீலையில் மாயை உற்பத்திப் படலம்வரை, நல்வழி, மூதுரை, நன்னெறி, வாக்குண்டாம், கொன்றைவேந்தன், நறுந்தொகை, பழமலையந்தாதி, திருவள்ளுவமாலை, நாலடி நானூறு, திருவெங்கைக்கோவை.

அச்சிட்டு வெளியிட்ட நூல்கள்: திருக்குறள் பரிமேலழகர் உரை, திருவாசகம், திருவிளையாடல், நாலடியார் ஆகியன.

## சரவணப்பெருமாள் கவிராயர் (18-நூ)

வே. பெ: ஆதிசரவணப் பெருமாள் கவிராயர், பெரிய சரவணப் பெருமாள் கவிராயர்.

ஊர்: பாண்டி நாட்டில் பரமக்குடிக்குத் தெற்கேயுள்ள முதுகுளத்தூர்; வேளாளர்

இவர் அட்டாவதானம் செய்வதில் வல்லவராக விளங்கியதால் அட்டாவதானம் ஆதிசரவணப் பெருமாள் கவிராயர் என்று அழைக்கப்பட்டார். இவர் மகன் வயிற்றுப் பேரனும் சரவணப் பெருமாள் கவிராயர் என்ற பெயரில் விளங்கியதால் வேறுபாடு அறிய ஆதிசரவணப் பெருமாள் கவிராயர் என்று அழைத்தனர். வேறு சிலர் இவரைப் பெரியசரவணப் பெருமாள் கவிராயர் என்றும் இவர் பெயரனைச் சிறிய சரவணப் பெருமாள் கவிராயர் என்றும் கூறுவர்.

இவர் முதுகுளத்தூரினர் என்பது தனிச்செய்யுட் சிந்தாமணி தொகுத்த கருப்பையாப் பாவலர் கருத்து. ஆனால்

இவரது பாடல் ஒன்றில் "வையை வளநாடன் உயர் பார்த்திபர்கள் புகழ் நல்லூரன்" என்று காணப்படுவதால் முதுகுளத்தூரினை அடுத்த பார்த்திப நல்லூர் இவரது ஊராகலாம்.

இவர் சிவஞானமுனிவரின் மாணவர்களுள் ஒருவராகிய இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளையிடம் கல்வி பயின்றவர். இவர் விஜயரகுநாதத் தொண்டைமான், காரை இலக்குமணப்பிள்ளை, சென்னை தென்னிந்திய சிங்கபூபன், இரானபூபன், சேதுபதியின் அமைச்சர் முத்திருளப்பபிள்ளை, சிங்கநகர், குமரவேற் பூபன், வயித்தியலிங்கச் செட்டியார், வீர பாண்டிய கட்டபொம்மன் முதலியோருக்கு எழுதிய சீட்டுக் கவிகள் பெருந்தொகை, தனிச் செய்யுட் சிந்தா மணி முதலிய நூல்களிற் காணப்படுகின்றன. கவிராயர் சேதுமுதல் சென்னை வரை ஆங்காங்குள்ள வள்ளல்களால் பாராட்டப்பட்டு பரிசுகளும் பெற்றவர். இவருடை பாடல்களில் இருந்து இவர் யாழ்ப்பாணத்துக்கும் சென்று பரிசு பெற்றவர் என்பது விளங்குகின்றது. வசைமொழிகளைத் தொகுத்துரைப்பதில் காளமேகம் போன்றவர். செருக்குத் தோன்றப் பாடுவதில் நிகரற்றவர். உலக வழக்கில் உள்ள பேச்சு மொழிகளை அமைத்துப் பாடுவதில் திறமையுடையவர். நகைச்சுவை தோன்றக் கற்பனை அமைத்துப் பாடல் இயற்றுவதில் வல்லவர்.

நூல்: சீட்டுக்கவிகள், இராமேச்சுரம் இராமலிங்கேசர்பேரில் பணவிடு தூது, தருமர் அசுவ மேதயாக புராணம், விநாயகம் திருமுக விலாசம்.

இவருடைய பாடல்களிலிருந்து இவர் சேதுபதியின் அமைச்சர் முத்திருளப்பபிள்ளைமீது காதல் பிரபந்தம் ஒன்றும் பாடினார் என்று தெரிகின்றது.

## சரவணப்பெருமாள் கவிராயர்-அ- (19-நூ)

வே. பெ: சிறிய சரவணப் பெருமாள் கவிராயர் துவாத்ரிம்,

தசாவதானம் சரவணப் பெருமாள் கவிராயர்.

தந்தை: அருணாசலக் கவிராயர்.

இவர் அவதானங்கள் செய்வதில் வல்லவராக விளங்கினார் இவர் தம் தந்தையாரிடமே கல்வி கற்றார்; சேது மன்னர்களுடைய அவைக்களப் புலவராக விளங்கினார். இவர் காலத்தில் முத்துராமலிங்க சேதுபதி மன்னர் ஆட்சிபுரிந்தார். புலவரும் புரவலரும் பேச வேண்டிய செய்திகளைச் செய்யுள் வடிவிலேயே பேசிக் கொள்வது பழக்கம். அரசரின் வினா முன்னிரண்டு அடிகளிலும் புலவரின் மறுமொழி பின்னிரண்டு அடிகளிலும் கவிதையாக அமையும். முத்துராமலிங்க சேதுபதி புலவரை எப்பொழுதும் பெருமை தோன்றவே விளித்துக் கூறுவார்.

இவர் அட்டநாக பந்தம், நடுவெழுத் தலங்காரம், சமுத்திர வருணனை முதலிய கவிதைகளைப் பாடுவதிலும் வல்லவராக விளங்கினார். இவர் அவ்வப்போது எட்டயபுரம் ஊற்றுமலை முதலிய சமஸ்தானங்களுக்குச் சென்றும் பாடிப் பரிசு பெற்றுள்ளார். இவர் காலத்தில் சேற்றூரில் புலவர்களாக விளங்கிய இராமசாமிக் கவிராயர், கந்தசாமிக் கவிராயர் ஆகியோரையும் பாராட்டிப் பாடியுள்ளார். 1888 ஆம் ஆண்டில் காலமானார்.

நூல்: மதுரைச் சிலேடை வெண்பா, குன்றக்குடிச் சிலேடை வெண்பா, கந்தவருக்கச் சந்த வெண்பா, திருச்சுழியல் ஓரெழுத்தந்தாதி, மதுரை யமக வந்தாதி, கழுகுமலை ஓரெழுத்தந்தாதி, பனசைத் திரிபந்தாதி, கயற்கன்னிமாலை, புவனேந்திரன் அம்மானை,

## சரவணப்பெருமாள் படையாட்சி (20-நூ)

வே. பெ: மசயப்பெருமாள் கவுண்டர்.

ஊர்: கொங்குவளநாட்டில் வேப்பிலைப்பட்டி.

நூல்: பழநி பதிற்றுப்பத்தந்தாதி.

**சரவணப்பெருமாள் பிள்ளை** (19-நூ)

ஊர்: இராமநாதபுரம்.

நூல்: திருச்செங்கோடு மாதிமாருடைய பரமன் மீது பாடியப் பதிகம்.

**சரவணபவானந்தம் பிள்ளை** (20-நூ)

ஊர்: சென்னை, வேளாளர்,

தந்தை: முத்துச்சாமிப்பிள்ளை; தாய்; சந்திரமதி.

மறைவு: 20-5-1932.

இவர் இளமையில் நன்கு கல்வி கற்றார். சட்ட நூல்களைத் தாமே நன்கு கற்றுச் சட்டப் பேரறிஞராக விளங்கினார். எப். எல்., பி. எல். சட்டத் தேர்வுகளுக்குரிய முப்பது நூல்களை ஆராய்ந்து எழுதிப் பதிப்பித்துள்ளார்.

இவர் காவல்துறை ஆணையாளரால் நகர் காவற்படை விசாரணைச் செயலாளராக நியமனம் செய்யப்பட்டு அவ்வேலையைத் திறம்படச் செய்து புகழ் பெற்றார். 1904 ஆம் ஆண்டு முதல் 1912 ஆம் ஆண்டுவரை சென்னைநகரக் குற்றச் செய்தி விசாரணையில் பகுதித் தலைவராகப் பணி புரிந்துள்ளார். வேல்ஸ் இளவரசர் 1906 ஆம் ஆண்டில் சென்னைக்கு வருகை தந்தபோது இவர் அவருக்கு மெய்க் காப்பாளராக இருந்து செயலாற்றி மன்னரிடம் விருதுப் பதக்கம் பெற்றுள்ளார். தமது அலுவலில் படிப்படியாக உயர்ந்து 1918 ஆம் ஆண்டில் காவற்றுறைத் துணை ஆணையர் பதவியை அடைந்தார். இவரது தொண்டுகளுக்காக 1922 ஆம் ஆண்டில் சாகீர் பட்டம் பெற்றார்.

இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தின் திராவிடவாசக சங்கத் தலைவராகவும், திராவிடச் சொற்றொடர் ஆக்கச் சங்கத்தின் உறுப்பினராகவும், தென்னிந்திய ஆராய்ச்சிக் கழகத்தின் துணைத்தலைவராகவுமிருந்து பணியாற்றியுள்ளார். இவர் தமது பணிகளோடு நிலையானதமிழ்ப் பணிகள் பல

செய்தவர். பவானந்தர் கழகம் என்ற அமைப்பு இவரால் ஏற்படுத்தப்பட்டது.இவ்வமைப்பின் வாயிலாக அச்சிடப் பெருமல் இருந்த தமிழ் இலக்கண இலக்கிய நூல்கள் பல அச்சிட்டு வெளியிடப்பட்டன. தக்க நூல்கள் தேடித் தொகுக்கப் பட்டு ஆராய்ந்து பதிப்பிக்கப்பட்டன. இதன் பொருட்டு இவர் ஓலைச்சுவடிகளையும் அச்சான தமிழ் நூல்களையும் முப்பது ஆண்டுகளாகத் தொகுத்தார்.

இவர் தொல்காப்பியப் பொருளதிகாரம், யாப்பருங்கல விருத்தியுரை, இறையனார் அகப்பொருள் உரை, பேரகத்தியத் திரட்டு, நன்னூற் காண்டிகையுரை முதலியவற்றைத் தம் பொருளைச் செலவிட்டு வெளியிட்டுள்ளார். நாடக நூல்கள் பல இயற்றியுள்ளார். சில நூல்களை மொழி ஆக்கம் செய்து உள்ளார். திருவாசகம், திருக்கோவையார் முதலிய நூல்களைப் பதிப்பித்துள்ளார்.

**சரவணமுத்துப் பிள்ளை ( )**

நூல்: அனந்தபத்மநாப சுவாமி விரத மான்மியம் மூலமும் உரையும் (மொழிபெயர்ப்பு).

**சரவணமுத்துப் பிள்ளை-அ. (20-நூ)**

ஊர்: இலங்கையில் மட்டக்களப்பு.

தந்தை: அருணகிரியார்.

வாழ்ந்த காலம்: 1882–1929.

இவர் இளமையிற் கல்வியில் நாட்டம் கொள்ளவில்லை. அதனால் இந்து வாலிப சங்கத்தினர் நடத்திய படிப்பகத்தில் படிப்பகக் காப்பாளராகப் பணியாற்றினர். அப்போது சுவாமி விபுலானந்தரை அடுத்துத் தமிழ் நூல்களைக் கற்றுப் புலமை பெற்றார். அரசாங்க அலுவலில் எழுத்தர் பணியினை மேற் கொண்டார். சந்தப்பாக்கள், உரைநடை, சிலேடை, கண்டனங் கள் எழுதுவதில் வல்லவராகத் திகழ்ந்தார். நாடகங்கள் இயற்றித் தாமியற்றிய நாடகங்கள் ஒன்றிரண்டில் நடித்தும் உள்ளார்.

நூல்: மாமாங்கப் பிள்ளையார் பதிகம், கதிர்வேலவர் தோத்திர மாலை, சனிவெண்பா, இலங்காதகனம், பாதுகா பட்டாபி ஷேகம், வனவாசம் முதலியன. இவற்றுள் இறுதி மூன்று நூல்களும் நாடக நூல்கள்.

**சரவணமுத்துப் பிள்ளை—க.** (19-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் உளரொடு என்னும் ஊர். பிற்காலத்தில் நல்லூரில் வாழ்ந்தவர்.

தந்தை: சுப்பிரமணியப்பிள்ளை.

புன்னாலைக் கட்டுவன் ச. கதிர்காம ஐயர், சுன்னாகம் முருகேச பண்டிதர் ஆகியோரிடம் இவர் பாடங் கேட்டார். ஆங்கிலப் புலமையும் உண்டு. தென்கோவை பண்டிதர் ச. கந்தையா பிள்ளை, சேர் அம்பலவாணன், கனகசபைப் பிள்ளை முதலியோர் இவரிடம் பாடம் கேட்டனர். இலங்கையிலும் தமிழ்நாட்டிலும் சைவ சமயச் சொற்பொழிவுகள் பல நிகழ்த்தி யுள்ளார்.

நூல்: சைவ உதயபனு, இராமநாதபுரம் பாஸ்கர சேதுபதி மீது பிரபந்தம். சைவ உதயபானு சமய இதழாகும்.

**சரவணமுத்துப் பிள்ளை—தி. த.** (19-நூ)

ஊர்: இலங்கை திருக்கோணமலை.

தந்தை: தம்பிமுத்து; உடன்பிறந்தார்: தமிழ்ப்புலவர் தி. த. கனகசுந்தரம் பிள்ளை.

இவர் ஆங்கிலத்தில் பி. ஏ. பட்டம் பெற்றவர். இளமை யிலேயே மண்ணுலக வாழ்வினை நீத்தார்.

நூல்: தத்தைவிடு தூது, முத்துக்குமாரசாமி இரட்டைமணிமாலை, மோகனங்கி, மோகனங்கி யென்பது இலங்கையில் தோன்றிய இரண்டாவது புதினமாகும்.

**சரவணமுத்துப் புலவர்** (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம் நல்லூர்: வேளாளர்.

**தந்தை:** மனப்புலி முதலியார்.

**வாழ்ந்த காலம்:** (1802-1845).

இவர் இருபாலைச் சேனாதிராய முதலியாரிடம் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களைக் கற்றார். ஆறுமுக நாவலர் இவருடைய மாணவர் என்பது குறிப்பிடத்தக்கது. இவர் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்ததோடு யாழ்ப்பாணம் வட மாநிலத்தில் டயிக் என்ற துரையிடம் பல ஆண்டுகள் உடையார் என்னும் பெயருடைய அலுவலில் இருந்தார்.

இவர் சென்னையில் வாழ்ந்த களத்தூர் வேதகிரி முதலியாருடன் இலக்கண இலக்கியம் பற்றி வாதம் செய்து உதய தாரகை என்ற பத்திரிகையில் அது தொடர்பான கட்டுரைகளை எழுதியுள்ளார்.

**நூல்:** வேதாந்த சுயஞ்சோதி, ஆத்மபோதப் பிரகாசிகை, நெல்லை வேலவர் உலா, பல தனிப்பாடல்கள்.

**சல்லியங்குமரனார்** (சங்க காலம்)

**வே. பெ:** உறையூர்ச் சல்லியங்குமரனார்.

சல்லியன் புதல்வனான குமரனார் என்று பொருள் கொள்ளலாம். இவர் தாம் பாடிய செய்யுளில் கிள்ளி வளவனையும், அம்பல் என்னும் ஊரையும், சோழநாட்டு அரிசிலாற்றையும் குறிப்பிடுவதனால் கிள்ளிவளவன் காலத்தவராவார் எனக் கொள்ளலாம்.

**நூல்:** நற். 141.

**சரவணமுதலியார்-அ. மு.** (20-நூ)

**சி. பெ.** பெருஞ்சொல் விளக்கனார்.

ஊர்; சோழநாட்டில் கல்லணைக்கண்மையிலுள்ள அரசங்குடி; வேளாளர்.

தந்தை: முத்துசாமி முதலியார்; தாய்: சீதையம்மை.

வாழ்ந்த காலம்: 1887-1950

இவர் எடுத்த பொருளை விளங்கச் சொல்லும். திறம் பெற்றமையால் பெருஞ்சொல் விளக்கனார் என்று அழைக்கப் பெற்றார். பதினைந்து வயது வரை கல்வியில் கருத்துச் செலுத்தாமல் இருந்தார். பின்னர் வேங்கடாசல அடிகள் என்னும் பெரியாரிடம் நன்னூல், நைடதம் முதலிய நூல்களைக் கற்றார். தக்கவர்கள் வாயிலாகச் சைவ சித்தாந்த நூல்களையும் கற்றார். சிவதீக்கை பெற்று சிவபூசை மேற்கொண்டார். 1906ஆம் ஆண்டில் சிவகாமி அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார்:

இவர் கல்வி கற்றபின்பு செட்டி நாட்டில் கீழைச்சீவற்பட்டி என்ற ஊரில் மீனாட்சி சுந்தரேச வித்தியாசாலையில் சில ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணி ஆற்றினார். பின்னர் சில ஆண்டுகள் 'சிவநேசன்' என்ற இதழின் ஆசிரியராக இருந்தார். உயர்நிலைப்பள்ளி ஆசிரியராகவும் பணி புரிந்துள்ளார். இவர் பெரியபுராணத்தில் நன்கு பயிற்சி பெற்றவர் பெரியபுராணம் தொடர்பாக மேற்கொண்ட ஆராய்ச்சிகளுக்காகப் பரிசுகள் பல பெற்றுள்ளார். தமிழ்நாட்டில் பல இடங்களில் பெரியபுராணச் சொற்பொழிவுகள் பல நிகழ்த்தியுள்ளார். ந.மு. வேங்கடசாமி நாட்டார் திருவிளையாடற் புராணத்திற்கு உரை எழுதிய பொழுது பதவுரை முதலியவை எழுதித் துணைபுரிந்துள்ளார்.

நூல்: சீவகநம்பி. இது உரைநடை நூல்,

**சல்லியமுனி ( )**

நூல்: சல்லியம் (1892). இந்நூல் 98 செய்யுட்களையுடையது.

**சலசலோசனா (20-நூ)**

ஊர்: சென்னை.

தந்தை: இராமசாமிச் செட்டியார். தாய்: பூங்காவனத்தம்மையார் இவர் கிறித்தவக் கல்லூரியில் உவல்லியம் மில்லர்த் துறையிடம் ஆங்கிலமும் சூரியநாராயணசாத்திரியாரிடம் தமிழும் கற்று எம்.ஏ., பட்டம் பெற்றார். கல்லூரித் தேர்வுகளில் முதன்மையாகத் தேர்வு பெற்றுப் பல பரிசுகளும் பெற்றுள்ளார். இளமையிலேயே செய்யுள் இயற்றும் திறம் பெற்றார். இவருடைய கவிதைகள் எளிமையும் இனிமையும் பொருள் நுட்பமும் நிறைந்தவை.

நூல்: திருவெவ்வளூர் யானைமுகக் கடவுள் செந்தமிழ்ப் பதிகம், சரசாங்கி. இவற்றுள் சரசாங்கி என்னும் நூல் சம்பலைன் (Cymbeline) என்னும் ஆங்கில நூலின் தமிழாக்கமாகும். இது ஒரு நாடக நூல்.

## சவ்வாதுப் புலவர்–1 (19-நூ)

இ. பெ: முகைதீன்.

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் பரமக்குடியை அடுத்த எமனேசுவரம்.

இவர் இராமநாதபுரம் சமத்தானத்தில் ரகுநாத சேதுபதி ஆட்சி புரிந்த காலத்தில் சமத்தானப் புலவராக விளங்கியவர். திருவனந்தபுரம், புதுக்கோட்டை அரசவைகளுக்குச் சென்றும் தமது புலமையை வெளிப்படுத்தியுள்ளார். புதுச்சேரிக்குச் சென்று ஆனந்தரங்கம் பிள்ளையின் மீது செய்யுட்கள் பாடிப் பரிசு பெற்றுள்ளார்.

நூல்: சந்திரசேகர வண்ணம், இராசராசேசுவரி பஞ்சரத்தினம் முகைதீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழ். சந்திரசேகர வண்ணம் என்ற நூல் சந்திரசேகரப் பிள்ளை என்ற வள்ளலைப் பாராட்டுவது. இராசராசேசுவரி பஞ்சரத்தினம் என்ற நூல், சேதுபதி மன்னர் வைசூரி நோய் கண்டு வருத்தினபோது அம்பிகைமீது இயற்றப்பெற்றது. இதனால் நோய் நீக்கப் பெற்ற மன்னர் சுவாத்தன் என்ற சிற்றூரை இவருக்கு முற்றூட்டாக வழங்கினார். இந்நூலினைப் பாடியவர் இப்பெயர் கொண்ட சைவ சமயத்தினர் என்றும் கூறுவர்.

**சவ்வாதுப் புலவர்–2 ( )**

நூல்: கொடுமளூர் சுப்பிரமணியர் பதிகம்.

கொடுமளூர் முருகனைக் குறித்துப் பாடப் பெற்ற 11 பாடல்களைக் கொண்டது.

**சவக்காரப் பிள்ளை ( )**

நூல்: சவக்காரப் பிள்ளை இரகசியம்

**சவரிராயலு நாயகர் (19-நூ)**

ஊர்: புதுச்சேரி, கிறித்தவர்.

இவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் தமிழ் நூல்களைப் பாடங் கேட்டார். தமது ஆசிரியர் மீது நீங்காத அன்பு கொண்டார். அவ்வப்போது ஆசிரியருக்குப் பொருளுதவி நல்கினார். ஒருமுறை பிள்ளை அவர்களின் மகன் திருமணச் செலவிற்குப் பெருந்தொகை நல்கினார். இதனைப் பாராட்டிப் பிள்ளை அவர்கள் இவர்மீது சவராயலு நாயகர் மாலை என்னும் நூலினை இயற்றியுள்ளார்:

நூல்: ஞானோபதேசப் பேரின்பக்கும்மி (1890). இந்நூல் இத்தாலிய மொழியில் பாடப்பெற்றிருந்த ஞானோபதேசங்களைத் தமிழில் கும்மிப் பாடல்களாக மொழிபெயர்த்ததாகும். 380 செய்யுட்கள் உள்ளன,

**சவரிநாத முதலியார் (20-நூ)**

நூல்: ஆரோக்கிய நாயகர் இயற்றிய தேம்பாவணி கீர்த்தனை. என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சவரிமுத்துப் பிள்ளை – (20–நூ)**

நூல்: ஐயாத்துரைப் பாகவதர் மு. இயற்றிய சத்திய வேத சங்கீர்த்தனம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சவரிராயப் பிள்ளை** (பண்டிதர்) (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் வடக்கன்குளம்.

**தந்தை:** தேவசகாயம்: **தாய்:** ஞானப்பிரகாசிதையம்மை.

**வாழ்ந்த காலம்:** 1—9—1859 — 24—8—1923.

இவர் செபஸ்தியான் பிள்ளை என்பவரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். கொல்லத்தில் ஒரு கத்தோலிக்கக் குருமடத்தில் இரண்டாண்டுகள் லத்தீன் மொழியினைப் பயின்று தேர்வு பெற்றார். பின்னர் வடமொழியையும் ஆங்கிலத்தையும் கற்றார். மேனாட்டார் இவருக்கு எம். ஆர். ஏ. எஸ். என்ற பட்டத்தை வழங்கியுள்ளனர். 1880-ஆம் ஆண்டில் தூத்துக்குடி சவேரியர் தொடக்கப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றத் தொடங்கிப் படிப்படியாக உயர்ந்து 1894ஆம் ஆண்டில் திருச்சிராப்பள்ளி அர்ச் சூசையப்பர் கல்லூரியில் விரிவுரையாள ராகப் பணி ஏற்றார். மூன்று ஆண்டுகளில் தலைமைத் தமிழ்ப் பேராசிரியரானார். இப் பணியில் இவர் 20 ஆண்டுகள் தொண்டாற்றினார். ஆசிரியராக இருந்தபோது உழவர்கள் சங்கம் என்ற பெயரில் சங்கம் ஒன்றை நிறுவி அவர்கள் நன்மைக்காக உழைத்தார். தமிழ்த்தொன்மை ஆராய்ச்சிக் கழகம் என்ற பெயரில் ஒரு கழகத்தினை நிறுவி அதன் சார்பாக தமிழர் பழமைத் தேட்டன் (Tamilian Antiquary) என்ற தமிழ் ஆங்கில இதழை வெளியிட்டார். ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை என்பவர் பதிப்பித்த சித்தாந்த தீபிகையில் அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல எழுதியுள்ளார். மதிப்புரைகளின் மதிப்புரை (Review of Review) என்ற ஆங்கில வெளியீட்டில் தமிழின் சிறப்பைப் பற்றி பல கருத்துரைகள் வழங்கியுள்ளார். மதுரைத் தமிழ்ச் சங்க உறுப்பினராகவும், பொதுச் செயலாள ராகவுமிருந்து சங்க முன்னேற்றம் கருதிப் பெரும்பணியாற்றி யுள்ளார்.

**நூல்:** பகார்த்த விலாசம். இது ஒரு நாடக நூல்.

**சவரிராயன் ஏசுதாசன்** (20-நூ)

பிறப்பு: 1882.

நூல்: என் சுயசரிதை. (1940)

**சவியேர் ஹென்றி லெயோன்** (19-நூ)

வே. பெ; சவியேர் ஹென்றி லெயோன் சிங்கராய பரத பண்டிதக் கவிராயர்,

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் மணில்பார்; கிறித்தவர்; பரதவர் குலம்.

தூத்துக்குடியைச் சேர்ந்த தொன்கபிரியேல் வாஸ்கோ மேஸ் என்ற வலேஞர் தலைவரால் ஆதரிக்கப் பெற்றவர். எட்டயபுரம் அரசர், தஞ்சாவூர் அரசர் சரபோஜியின் அமைச்சர் ஆகியோரால் போற்றப் பெற்றவர். பின்னர் யாழ்ப்பாணம் சென்று ஆபிரகாம் என்பவருடன் தங்கியிருந்தார்.

நூல்' பிலிப்பு ரேட்ரிகோ முத்துக்கிருஷ்ணர் மீது குறவஞ்சி, தூத்துக்குடி பணியமாத பேரில் பதிகம்.

பிலிப்பு ரேட்ரிகோ முத்துக்கிருஷ்ணர் மீது குறவஞ்சி, யாழ்ப்பாணத்தில் கச்சேரி முதலியாராக விளங்கி இவரை ஆதரித்த பிலிப்பு ரேட்ரிகோ முத்துக் கிருஷ்ணர் மீது பாடப் பெற்ற குறவஞ்சியாகும்.

தூத்துக்குடி பணியமாதா பேரில் பதிகம் - அன்னை மரியின் புகழினைக் கூறும் 10 செய்யுட்களையுடையது.

**சவூரிப் புலவர்** ( )

ஊர்: கொங்கு நாட்டில் கணுவக்கரை ரோமன் கத்தோலிக்க கிறித்தவ வகுப்பினர்.

இவர் தமிழ்ப் புலவர்களிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்; செய்யுள் பாடும் திறம் பெற்றார். இவர் அறம் பாடுவதில் வல்லவர் என்று கருதப்பட்டார். இவருடைய புலமைத் திறத்திற்கு ஊரார் இவருக்குத் தானிய உதவி

அளித்துவந்தனர். ஒருமுறை இவருக்கும் ஊராருக்கும் பகைமை ஏற்பட்டு இத்தானிய உதவி நிறுத்தப்பட்டது. இதனால் கோபமடைந்த இவர் மூன்றாண்டுகள் இவ்வூரில் மழை பெய்யாமல் செய்துவிட்டதாகவும் பின்னர் ஊர்மக்கள் இவரிடம் கேட்டுக்கொண்டதற்கு இணங்க இவர் "பங்குனியாம் திங்கள் தனில் இருபத்தைந்தில் பரமசுகன் கவுரிபோல் பரிவுபேச" என்று தொடங்கும் பாடலைப் பாடப் பெருமழை பொழிந்தது என்று கூறுவர். இதனால் நிறுத்தப் பட்ட தானிய நன்கொடை மீண்டும் வழங்கப்பட்டது.

**சவேரிமுத்தாப்பிள்ளை** (19-நூ)

**ஊர்:** சென்னை. சென்னை கதிட்ரல் கல்விச் சாலையில் ஆசிரியராகப் பணிபுரிந்தவர்.

**நூல்:** மும்மணிமாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சவேரியப்ப உபாத்தியாயர்** (19-நூ)

**ஊர்:** நெல்லித்தோப்பு.

**நூல்:** ஆராக்கிய நாயகர் என்பவர் இயற்றிய தேம்பாவணிக் கீர்த்தனை என்னும் நூலைப்பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சவேரியா பிச்சைக் கொரேய்ரா** ( )

**ஊர்:** வைப்பாறு சிப்பி குளம்.

**தந்தை:** சுவக்கீனுக் கொரேய்ரா கொம்பஞ்ஞு அடப்பனார்.

இவர் சிறந்த புலவராகவும் சமயச் சொற்பொழிவாள ராகவும் விளங்கினார்.

**நூல்:** பரதகுலப் பாண்டியர் பழமை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சற்குணர்** (20-நூ)

**வே. பெ,** தருமராச சற்குணர்.

ஊர்: சென்னை.

தந்தை: சாமுவேல் சற்குணர்; தாய்: ஞானப்பூ அம்மாள்.

பிறந்த நாள்: 7—5—1877.

இவர் இளமையில் தம் தந்தையாரிடம் கல்வி கற்றார். பின்னர் கிறித்தவக் கல்லூரியில் சேர்ந்து கல்வி பயின்று பி.ஏ. பட்டம் பெற்றார். இக் கல்லூரியில் இவர் மறைமலை அடிகள், வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் ஆகியோரிடம் தமிழ் பயின்றார். கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் தமிழில் முதல்வராகத் தேறி சேதுபதியின் பொற்பதக்கத்தைப் பெற்றார். மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்விலும் முதற் பரிசு பெற்றார்.

இவர் பட்டம் பெற்ற பின்பு சென்னை ஊரிஸ் உயர்நிலைப் பள்ளியில் 1905-ஆம் ஆண்டில் ஆசிரியராகச் சேர்ந்து ஒன்பது ஆண்டுகள் தொண்டாற்றினார். பின்னர் 1914ஆம் ஆண்டில் சென்னை திருப்பவுற் கலாசாலையில் கா. நமச்சிவாய முதலியாரைத் தொடர்ந்து தமிழாசிரியரானார். பிறகு 1928ஆம் ஆண்டில் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகச் சேர்ந்து பணியாற்றினார். சங்க இலக்கியத்தில் மிகுந்த விருப்பங் கொண்டவர்.

நூல்- இலக்கண ஆக்கம்,

**சற்குரு சாமிகள்** (20: நூ)

நூல்: சொருபஞான சங்கிரகத் திரட்டு.

**சாக்கிய குருநாதன்** (      )

பார்க்க: உதீசித்தேவர்.

**சாக்கியர்** (      )

நூல்: சிதம்பர அகவல்.

இந்நூல் தில்லையில் கோயில் கொண்டுள்ள நடராசப் பெருமான் மீது பாடப்பெற்றது.

**சாகலாசனார்** (சங்க காலம்)

வே. பெ: *சாகலனார், சாகலேயன்.*

சாகலன் என்பது ஊரின் பெயர் எனக்கொள்ள இடமுண்டு. வடநாட்டுத் துறவியின் பெயர்கள் சாகலேயர் என்று காணப் படுகின்றது. மக்களிடம் அத்துறவிகள் பெற்ற செல்வாக்கினால் அவர்கள் பெயர்களைத் தாமும் இட்டுக் கொண்டனர் எனக் கருத இடமுண்டு.

நூல்: அகம் 16, 270.

**சாகுமுகமத் அப்துல் காதிர்** ( )

தந்தை: ஷைக் முகம்மது ஹவீவத்துல்காதிர் ஷாகன் ஷா ஆலிம் சாகிப்.

நூல்: முரீது விளக்கம் என்னும் இரத்தினச் சுருக்கம்.

**சாகுல் அமீது இபின்மீரான் சாயபு** ( )

வே, பெ: அமீதுப்புலவர்.

ஊர்: மேலப்பாளையம் அத்தியடி.

நூல்: முகையல்தீன் ஆண்டவர்கள் கந்தூரி அலங்கார ரயில் வழிநடைச் சிந்து.

இந்நூல் கந்தூரிக்குப் புகைவண்டி வழியாகச் செல்வதை யும் மேலப்பாளையத்தினைச் சேர்ந்த முகையல் தீனையும் பற்றிப் பாடப்பெற்றதாகும்.

**சாங்கு சித்தசிவலிங்க நாயனார்** (19-நூ)

வே. பெ: சிவலிங்கனார்.

ஊர்: சென்னைக்கு அண்மையில் உள்ள பிருங்கிமலை;

தந்தை: அரங்கையர்; தாய்: குன்னம்மாள்.

இவர் குழந்தைப் பருவத்திலேயே நூல்கள் பலவற்றையும் கற்றார். பின்னர் 20 ஆண்டுகளுக்குள் தத்துவ விசாரம் புரிந்து எங்கும் நிறைந்துள்ள பிரமத்தை அறியப் பேரவாக் கொண்டு பித்தனைப் போல் அலைந்தார். இறுதியில் ஒழிவி லொடுக்கம் என்ற நூலில் இவரது மனம் ஈடுபட்டது. இந் நூலினை இயற்றிய கண்ணுடைய வள்ளலார் என்ற பெரியவரைத் தமது ஞானாசிரியராகக் கொண்டார்.

நூல்: பூரணானந்தோதயம்.

இந்நூலில் இவர் தமது ஆசிரியரைக் குறித்தும் மற்றும் சரியை கிரியை முதலிய நெறிகளைக் குறித்தும் தமது சுவாநு பூதியில் உதித்தவாறு பாடியுள்ளார்.

## சாங்கோபாங்கர் (17-நூ)

வே. பெ; சாங்கோபாங்கநாத சுவாமிகள்.

இவர் வடசொற்கள் மிகுதியும் கலந்துவர உரைநடை நூல்கள் எழுதினார், சிங்களத்திலும் பாலிச் சொற்களை மிகுதியும் கலந்து எழுதினர் என்ப,

நூல்; சுகிந்ததர்ப்பணம், அற்புதவரலாறு, தருமஉத்திலாமஞான உணர்ச்சி, அவிசேஷ விரித்துரை, புராந்திம பஞ்சிம காண்டம், திரைவிருத்தம், ஆனந்தக் களிப்பு, சிந்துபதம், சத்திய வேதாகம சங்ஷேபம், போத்ரத்துக்கேய-தமிழ் சிங்கள அகராதி.

இவற்றுள் சத்திய வேதாகம சங்ஷேபம் என்னும் நூல் வினாவும் மறுமொழியுமாய் கிறித்துவ சமய போதனைகளைக் கூறுவது. எளிதிற் புரிந்து கொள்ளுமாறு இயற்றப்பெற்றது. ஓராண்டில் வரும் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையிலும், கோயில்களில் பயன்படுத்தும் பொருட்டு 54 பிரிவாகச் செய்யப்பட்டுள்ளது. அநாதியுகம் ஒவ்வொரு யுகமும் பல சருக்கங்களாகவும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது.

**சாத்தந்தையார்** (சங்க காலம்)

இ. பெ: சாத்தன் தந்தை என்பது சாத்தந்தை என்றாயிற்று. (தொல். எழு. 341) இனிச் சாத்தன் தந்தை சாத்தந்தையார் என்று வந்தது என்று கூறினுல் இவரது இயற்பெயர் யாது என்பது தெரிந்திலது. சிலர் இவர் பதினென்கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்றாகிய திணைமொழிஐம்பது என்னும் நூலின் ஆசிரியர் கண்ணன் சேந்தனாரின் தந்தையார் என்பர். முக் காவல் நாட்டு ஆமூர் மல்லனைப் போரில் கொன்ற சோழன் தித்தன் மகன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியின் வீரச் செயலைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

நூல்; நற்றிணை 26. புறம் 80, 81, 82, 287,

**சாத்தனார்–1** (          )

வே. பெ: செயிர்காவிரியார் மகனார் சாத்தனார்.

நூல்: திருவள்ளுவமாலையில் 41ஆம் பாடலைப் பாடியவர்.

**சாத்தனார்–2** (சங்க காலம்)

இ. பெ: சாத்தன்.

ஆர் என்பது சிறப்புக்குரிய அடைமொழியாகும். இப் பெயருடைய புலவர்கள் பலர் இருந்திருக்கின்றனர். அவர்களில் இவர் யாவர் என்பது தெரிந்திலது. இவர் தெய்வத்தாற் பெயர் பெற்றவர்.

நூல்: குறுந். 1.

குறுந்தொகை 349ஆம் பாடலைப் பாடியவரும் சாத்தனார் என்ற பெயருடையவரேயாவர்.

**சாத்தாங்குட்டிப்பிள்ளை** (20-நூ)

ஊர்: நாஞ்சில் நாட்டில் தெங்கம்புதூர்.

இவர் நாகர்கோயில் செயின்ட்பிரான்சிஸ் வி. எச். பள்ளியில் தமிழ் முனிஷியாகப் பணிபுரிந்தவர்.

நூல்: பறக்கை மாணிக்கவாசகம்பிள்ளை இயற்றிய திருச்செந்திற் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சாத்திரம் ஐயர் (19-ஆ)

இவர் சைவர் எனினும் சமணசமய நூல்களையும் இலக்கண இலக்கியங்களையும் கற்றுப் புலவராக விளங்கினர்.

நூல்; சமண சமய சித்தாந்தம்.

## சாதுரத்தின சற்குரு (19-ஆ)

ஊர்: சென்னை.

தந்தை; சிவசங்கர செட்டியார்; தாய்; முனியம்மையார்; வைசியர்.
வாழ்ந்த காலம்: 1848-1901.

இவர் பள்ளிக் கல்வியை முடித்தபின்னர் திருவொற்றியூர் கிருஷ்ணனந்த அடிகளிடம் தொடர்பு கொண்டார். சமாதி நெறியிற் பயிற்சி பெற்றார். ஈசூர் சச்சிதானந்த அடிகள் என்னும் பெரியாரிடத்தில் 16 ஆண்டுகள் வேதாந்த நூல்களைக் கற்றார். கோடகநல்லூர் சுந்தர அடிகளிடமும் நெருங்கிப் பழகியவர். இல்லறத்தில் இருந்து கொண்டே வாணிகம் முதலியவற்றை மேற்கொண்டு வேதாந்தியாகத் திகழ்ந்தனர்.

இவர் ஆரிய சனப் பிரியன் என்ற இதழின் ஆசிரியர். சின்னைய நாயகர் என்பவர் இவரைப் புகழ்ந்து இரத்தின சற்குரு தோத்திர மஞ்சரி என்னும் நூலை இயற்றியுள்ளார்.

இவர் சிறந்த தமிழ் நூல்களை வெளியிடுவதற்காகவே ரிப்பன் அச்சுக்கூடம் என்னும் அச்சகத்தை நிறுவினர் இவர் வாழ்ந்த காலம் வேதாந்திகளுக்கும் சித்தாந்திகளுக்கும் இடையே போராட்டம் நிகழ்ந்த காலம். இந்நிலையில் இவர் வேதாந்தக் கருத்துக்களை வலியுறுத்தும் வகையில் பல நூல்களை இயற்றியுள்ளார்.

நூல்: தத்துவார்தம் சங்கராச்சாரியார் அவதாரமகிமை, வேதாந்த சங்கை நிவாரணம், அத்வைத தூடன பரிகாரம் பதி பசு பாச வாதம், துவித சைவரே மாயாவாதிகள், மாய்ாவாத சைவ சண்ட மாருதம், முடிவுரைச் சூருவளி, துவித் துவித வாதம், துவித சைவ மறுப்பு, வேதவாத திரஷ்காரம், திருமந்திர விசாரணை, சீவான்மாவின் பரிணமம், வேதாந்த தீபிகை, முதற் குறள் வாத சாத தூடணி.

இந்நூல்கள் அனைத்தும் கண்டன நூல்கள். இவையனைத் தும் இந்நாளில் துவைத சைவ கண்டனம் என்னும் பெயரில் விளங்குகின்றன.

## சாந்த கவிராயர் (18-நூ)

ஊர்: பிறசை.

நூல் இரங்கேச வெண்பா.

இந்நூலுக்கு நீதி சூடாமணி என்ற பெயரும் உண்டு. திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள அரங்கநாதரைவிளித்துப் பாடப்பெற்றது; 133 வெண்பாக்கள். திருக்குறள் 133 அதிகாரங் களில் ஓரதிகாரத்துக்கு ஒரு குறளாக எடுத்து அக்குறள் அடிகளை ஈற்றில் அமைத்து அக்குறள் கூறும் கருத்தினை விளக்கும் கதையினை முன்னிரண்டடிகளில் அமைத்துப் பாடப் பெற்றது.

## சாந்தப்பக் கவிராயர்-கு (20-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் சின்ன நட்டாத்தி.

தந்தை: அட்டாவதானி குமாரசாமிக் கவிராயர்.

நூல்: இளையபெருமாள் பிள்ளை இயற்றிய விட்டிலாபுரத் தல புராணத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சாந்தலிங்கக் கவிராயர் (18-நூ)

ஊர்: சோழநாட்டைச் சேர்ந்த தண்டலை.

இவரும் படிக்காசுப் புலவரும் ஒருவரே என்றும் படிக்காசுப் புலவர் துறவு பெற்றுத் தம்பிரானாக விளங்கியதால் அவருடைய இல்லறப் பெயரே சாந்தலிங்கக் கவிராயர் என்றும் சிலர் கருதுகின்றனர். ஆனால் இது எவ்வளவு தூரத் திற்குண்மை என்பது தெரியவில்லை.

நூல்; தண்டலையார் சதகம். இந்நூல் பழமொழி விளக்கம் என்றும் வழங்கப் பெறுகின்றது. இந்நூலினைப் படிக்காசுப் புலவர் இயற்றினார் என்றும் கருதுவர். சோழநாட்டில் தண்டலை நீணெறி என்னும் தலத்தில் எழுந்தருளிய சிவபெருமானை முன்னிலைப் படுத்தி இறுதியடிதோறும் ஒவ்வொரு பழமொழி யினை அமைத்துப் பாடப்பெற்றது. 100 விருத்தங்களை யுடையது. அறத்துப் பால், பொருட்பால், காமத்துப்பால் எனப் பகுக்கப்பட்டது.

## சாந்தலிங்க சாமிகள் (18-நூ)

வே. பெ; சாந்தலிங்க அடிகள்.

ஊர்: தொண்டை நாட்டினர். திருத்துறையூரைச் சேர்ந்தவர் என்றும் திருமழிசையைச் சேர்ந்தவர் என்றும் இரண்டு கருத்துக்கள் உண்டு.

இவர் துறைசை ஆதீனத்தில் இருந்த சிவப்பிரகாச அடிகளி டம் அறிவுரை பெற்று மெய்யறிவு பெற்றார். பேரூர் என்னும் மேலைச் சிதம்பரத்தை அடைந்து அங்கு மடம் ஒன்று நிறுவி வாழ்ந்து வந்தார். சிவப்பிரகாச சாமிகளின் தங்கை யான ஞானம்பிகை அம்மையாரை மணந்தார் என்றும் கூறுவர். இவர் வெளிநிலையில் இல்லற வாழ்க்கையினராய்க் காணப் பட்டாலும் தூய துறவொழுக்கம் உடையவராகவே இருந்து வந்தார்.

நூல்: வைராக்கிய தீபம், வைராக்கிய சதகம், அவிரோத வுந்தியார், கொலைமறுத்தல், நெஞ்சுவிடு தூது, வீரா கமம் (தமிழாக்கம்).

"வைராக்கிய தீபம்" புறத்துறவே அகப்பற்றையும் வாசனையையும் கெடுத்து மெய்ஞ்ஞானம் அடைவதற்கும் ஏதுவாகும் என்று கூறுவது. 100 செய்யுட்களைக் கொண்டது.

"அவிரோத வுந்தியார்" வீட்டு நெறியை விளக்குவது; 100 செய்யுட்களைக் கொண்டது; எடுத்துக் காட்டுப் பாடல்கள் 530 உள்ளன.

"கொலை மறுத்தல்" வைராக்கிய சதகம், வைராக்கியதீபம், அவிரோத வுந்தியார் என்ற நூல்களுடன் சேர்த்துப் பதிப்பிக்கப்பட்டது.

வீராகமம்: வீரசைவத்தின் உண்மையாகிய குரு, லிங்க சங்கமங்களின் பெருமையைக் கூறுவது; 110 செய்யுட்களை யுடையது. இவரது நூல்களுக்குத் திருப்போரூர்ச் சிதம்பர சாமிகள் உரை எழுதியுள்ளார்.

## சாந்துப் புலவர் (18-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் உள்ள திருப்புனவாயிலை அடுத்த சிறுகம்பையூர்.

**தந்தை:** இரண்டாவது சர்க்கரைப் புலவர், வேளாளர்.

மருதுபாண்டியர் மீது இவரது தந்தையார், அட்டநாக பந்தம் என்னும் ஓவியச் செய்யுள் ஒன்று பாடினர். அச் செய்யுளின் கீழே இவர், சிறிய அட்டநாக பந்தம் ஒன்றினை இயற்றியிருந்தார். இதன் வழியாக மருதுபாண்டியருக்கு மிக வேண்டியவராகி அமைச்சரைப் போல விளங்கினர்.

**நூல்:** மயூரகிரிக்கோவை.

மருதுபாண்டியன் தன் நோய் நீங்கப் பேரருள் செய்த குன்றக்குடி முருகன்மீது கோவை பாடுமாறு வேண்டியதற் கிணங்க இந்நூல் இயற்றப்பெற்றது.

இது தவிர வேறு பல நூல்களையும் தனிப்பாடல்களையும் இயற்றியுள்ளார்.

## சாம்பசிவக் கவிராயர் (*19-நூ*)

ஊர்: சென்னை

நூல்: அகிலாண்டேஸ்வரியம்மன் பதிகம், அகத்தீசுவரர் பதிகம்

## சாம்பசிவ நாயனர், மு. (*20-நூ*)

ஊர்: சோழ நாட்டில் சாலியமங்கலம்.

தந்தை: முத்துச்சாமி நாயனர்.

நூல்: சிவக்ஷேத்திர யாத்திராநுகூலம். இது உரை நடை அமைப்பினது.

## சாம்பசிவப் பிள்ளை—மா. (*20-நூ*)

ஊர்: திருச்சிராப்பள்ளி.

தந்தை: மாசிலாமணிப் பிள்ளை.

நூல்: திருநான்மறை விளக்க ஆராய்ச்சி, திருப்பெருந்துறை விளக்கம், திருமலைச் சருக்க ஆராய்ச்சி, சிவஞானபோத முதனூலாராய்ச்சி, திருக்குறளின் திருவுள்ளக் கருத்து, இராமனும் இராவணனும், மூவா நான்மறைச் சொற்றொடராராய்ச்சி, சைவசித்தாந்த வரலாற்றாராய்ச்சி, கோகழிப் பெயருண்மை, மெய்கண்ட சாத்திர முன்னுரை யாராய்ச்சி, வேதமும் சைவத் திருமுறைகளும், திருவாசக விரிவுரையிற் காணப்படும் பிற ஆசங்கைகளும் ஆராய்ச்சியும்.

திருநான்மறை விளக்க ஆராய்ச்சி என்ற நூல் கா. சுப்பிரமணிய பிள்ளை எழுதிய திருநான்மறை விளக்கம் என்ற ஆராய்ச்சிக் கட்டுரையை மறுத்து எழுதப்பெற்றது.

## சாம்பசிவம் பிள்ளை ( )

நூல்: நூதனப்பிரதி சிறுத்தொண்ட நாடகம்.

இந்நூல் சிறுத்தொண்டரின் கதையினை நாடக வடிவிற் கூறுவது; கீர்த்தனம் கவிதை உரைநடை ஆகியவைகள் கலந்துவர அமைந்தது.

## சாம்பமூர்த்தி ஐயர் (20-நூ)

ஊர்: தஞ்சை மாவட்டம் மாயூரத்தைச் சேர்ந்த கூறைநாடு.

நூல்: க. தியாகராச தேசிகர் இயற்றிய பெற்ருன் சாம்பான் சரித்திரக் கீர்த்தனை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சாமாசாத்திரி ( )

நூல்: பஞ்சநத மான்மியம் என்கிற திருவையாற்றுப் புராணம்.

இந்நூல் உரைநடை அமைப்பினது. திருவையாற்றின் புராணச் சிறப்பைக் கூறுவது; 37 அத்தியாயங்களைக் கொண்டது ஐப்பியேச்சுர மான்மியமும் இதனோடு உள்ளது. இந்த மான்மியம் 9 அத்தியாயங்களைக் கொண்டது. வடமொழியில் இருந்து சாமா சாத்திரி மொழி பெயர்த்ததைத் தென்மொழியில் திருந்திய வசனமாகச் செய்தவர் கந்தசாமி உபாத்தியாயர்.

## சாமாசூரிய நாராயண பாரதியார் ( )

இவர் சிலேடைப் புலி பிச்சுவையரின் தந்தை ஆவர்.

நூல்: தனிப்பாடல்.

இவரது ஊர் விளம்பியாண்டில் பஞ்சத்தால் வாடியபோது “கானூர் முதலாகக் கல்லூருணி விளைய” என்று தொடங்கிப் பாடினுர்.

## சாமாவையர் ( )

வே. பெ: ஆண்டியப்பக் கவிராயர்.

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் வேம்பத்தூர்.

இவர் சிவகங்கைப் பிரிவில் உள்ள வேம்பத்தூர்க் கவிராச பண்டிதர் வழிமுறையினர்.

நூல்: கங்காவிலாசம்.

இந்நூல் திருவனந்தபுரத்தில் இருந்த ஆயிலியம் திருநாள் அரசர்மீது பாடப் பெற்றது.

## சாமி ஐயங்கார் ( )

ஊர்: புதுக்கோட்டை.

இவர் வடமொழி தென்மொழிகளில் வல்லவர். இலக்கண இலக்கிய நூல்கள், காலக்கணித நூல்கள் முதலியவற்றை நன்கு கற்றவர்.

நூல்: கணண விளக்கம், வைகானசாச்சாரியார் அந்தாதி, காரையூர் சுந்தரராசப் பெருமாள் பதிற்றுப்பத்தந்தாதி, இரட்டை மணிமாலை,

## சாமி ஐயர் தேசிகர்–சு. (20-நூ)

நூல்: அ. சிதம்பரஞ் செட்டியார் ஆனைமுகக் கடவுள் மீது பாடிய பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்,

## சாமி ஐயர் –1 ( )

ஊர்; புதுக்கோட்டை.

நூல்; இந்தியன்பீனல் கோட் என்கிற இந்தியர்கள் தண்டநீதி சாத்திரம் (1874).

இது ஒரு மொழி பெயர்ப்பு நூல், இது குற்றவிசாரனை பற்றிய சட்டதிட்டங்கள் அடங்கிய நூல்.

## சாமி ஐயர் –2 (20–நூ)

ஊர்: மைலாட்டூர்.

பிறப்பு: 1894.

நூல்: மிருதங்க பாடமுறை (1946).

**சாமி ஓம்பிரகாசநாதர்** (20-நூ)

ஊர்: வடஆற்காடு மாவட்டம் இராயவேலூர்.

தந்தை: கோபாலசாமி; தாய்: அமராவதி அம்மையார்.

இவர் சென்னை நகரில் கல்வி கற்றார். துறவிகள் சிலரிடம் அறிவுநூல் பயிற்சி பெற்றார். மைசூர் மன்னரது அரண்மனையில் சிறிது காலம் எழுத்தராகப் பணியாற்றிய பிறகு உலக வாழ்க்கையில் வெறுப்புக்கொண்டு துறவியானார். உதக மண்டலத்தில் ஆசிரமம் ஒன்று ஏற்படுத்திப் பலருக்கு அறிவுரை வழங்கினார்.

நூல்: சத்சம்பாஷினி.

**சாமிக்கண்ணுப்பிள்ளை** (20-நூ)

ஊர்: கோமனூர். தந்தை: ஞானப்பிரகாசப்பிள்ளை. வாழ்ந்த காலம்; 1865-1925,

இவர் நாகப்பட்டினம் செயின்ட் சோசப் கல்லூரியில் கற்றவர். 1878-ஆம் ஆண்டில் மெட்ரிகுலேசன் தேர்வில் மாநிலத்தில் மூன்றாவது இடம் பெற்றுத் தேர்வு பெற்றார். எப். ஏ. தேர்வில் மாநிலத்தில் முதல் மாணவராகவும், பி. ஏ. தேர்வில் இரண்டாவது மாணவராகவும் தேர்வு பெற்றார். பின்னர் தாமாகவே முயன்று கற்று எம். ஏ. பட்டமும் பெற்றார். இவருக்கு வடமொழி, இந்தி, குஜராத்தி, மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளிலும் பயிற்சி உண்டு. இவர் ஒரு சிறந்த விஞ்ஞானியுமாவார். வானநூல், இந்தியக் காலவரன்முறை ஆகியவற்றில் மிகுந்த விருப்பம் செலுத்தினார். சுருக்கெழுத்துக்கான திருத்தங்களை ஆராய்ந்து வெளியிட்டு உள்ளார். காலக்கணிதத்திலும் வல்லவராகத் திகழ்ந்தார்.

இவர் 1887-ஆம் ஆண்டில் இரத்தினம் அம்மையாரை மணந்து கொண்டார். இவ்வம்மையார் காலமானதும்

1896-ஆம் ஆண்டில் அன்னம்மை என்னும் அம்மையாரை மணந்துக்கொண்டார். இவர் கல்வி கற்றதும், தாம் கற்ற கல்லூரியிலேயே ஆசிரியராகப் பணிபுரிந்தார். பின்னர் சென்னைப் பல்கலைக் கழகத்தினர் தொகுத்து வெளியிட்ட தமிழ் லெக்சிகன் செப்பமாக வெளிவருதற்குத் துணை செய்தார். ஆசிரியத் தொழிலை விடுத்த பின்பு சென்னை ஆட்சி மன்றத்தில் அலுவல் புரிந்தார். பிறகு துணைக் கலெக்டராகவும் 1906-ஆம் ஆண்டில் வருவாய்த்துறைச் செயலாளராகவும் பணிபுரிந்தார். இதற்கிடையே இவர் வழக்கறிஞர் பட்டமும் பெற்றார். இவரது சேவையைப் பாராட்டி அரசினர் இவருக்கு இராவ் பகதூர், திவான்பகதூர் என்னும் பட்டங்களை வழங்கினர்.

இவர் 1903ஆம் ஆண்டில் மேல் நாட்டிற்குச் சென்று திரும்பியதும் மாவட்டக் கலெக்டராகப் பணிபுரிந்துள்ளார். 1920ஆம் ஆண்டில் அலுவலிலிருந்து ஓய்வு பெற்றார். இவர் சென்னையில் கூட்டுறவு இயக்கம் வேரூன்ற அரும்பாடுபட்டுள்ளார். பாராளுமன்றத்தின் தன்மையினை அறிந்துவர அரசினரால் இவர் ஐரோப்பா நாட்டிற்கு அனுப்பி வைக்கப் பட்டார்.

இவர் அங்கு சென்று வந்ததன் பயனாகச் சென்னை சட்டசபை பலவழிகளிலும் முன்னேற்றம் அடைந்தது என்பர். இவர் 1925ஆம் ஆண்டில் ஆட்சி மன்றத்தலைவராகத் தேர்ந்து எடுக்கப்பெற்றார்: ஆனால் சில திங்களே அப்பதவியிலிருந்து 1925ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 10ஆம் நாள் காலமானார்.

இவர் தமது அலுவல்களுக்கிடையே ஓய்வு கிடைத்த போதெல்லாம் இலக்கியத் தொண்டாற்றியுள்ளார். இந்தியப் பழமையாளன் என்னும் வெளியீட்டில் பாண்டியர் காலம் புத்தர் பிறந்த நாள், குலோத்துங்க சோழன் காலம் ஆகியவற்றை வெளியிட்டுள்ளார். இவர் ஆராய்ச்சியில் வல்லவர். பரிபாடல் என்னும் நூல் கி. பி. 634ல் இயற்றப் பெற்றது என்பது இவரது முடிபாகும். சிலப்பதிகாரம், சிந்தாமணி ஆகிய நூல்களுக்கும் காலவரையறை செய்து உள்ளார். இவர் தம்முடைய நண்பர் அருளானந்தம்

என்பவரோடு சேர்ந்து நினைவு மறை என்னும் நூலினை இயற்றியுள்ளார்.

நூல்: தமிழ் இலக்கியத்தின் காலவரையறை, தமிழ்க்கல் வெட்டுக்கள்,

**சாமிகவி காளருத்திரர் ( )**

இவர் வேம்பத்தூர்ப் புலவர்களில் ஒருவர். சேது வேந்தரால் ஆதரிக்கப் பெற்றவர்.

நூல்: அழகப் பிள்ளைத் தமிழ்.

**சாமிகுப்புச்சாமி தே. அ. (20-நூ)**

ஊர்: சென்னை.

தந்தை: அங்கப்பர்.

நூல்: குருஸ்தவம் போத விளக்கம்.

**சாமிதாசப்பிள்ளை ( )**

நூல்: அய்யாப்பிள்ளையின் மெய்யான சரிதம் (1891).

இந்நூல் உரைநடையும் செய்யுளும் விரவி அமைந்தது இது ஈகையில் தழைத்து நாகையில் வாழ்ந்த அய்யாப்பிள்ளை என்னும் கிறித்தவப் பெரியாரின் உண்மை வரலாற்றைக் கூறுவது.

**சாமிநாத ஆச்சாரி-1 ( )**

ஊர்: நாஞ்சில் நாட்டில் கோட்டாறு.

நூல்; தா. மாணிக்கவாசகம் பிள்ளை இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமிநாத ஆச்சாரி-2 (19-நூ)**

ஊர்: தஞ்சாவூர்.

இவர் இலக்கியப் பயிற்சியும் இசைப்பயிற்சியும் உடையவர்.

நூல்: கோவிந்தராச பாகவதர் இயற்றிய பகவத்தியானகீர்த்தனம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமிநாதக் கவிராயர் -1 (18-நூ)**

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் ஆழ்வார் குறிச்சி.

நூல்; சிவசைலப்பள்ளு.

இந்நூல் திருச்சியில் ஆட்சிபுரிந்த நாயக்க அரசரின் கீழ் ஒரு பகுதியின் தலைவராக விளங்கிய ஆறை அழகப்ப முதலியார் மீது பாடப்பெற்றது.

**சாமிநாதக்கவிராயர்-2 (18-நூ)**

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் கல்லிடைக்குறிச்சி; வேளாளர்.

நூல்: பொதிகை நிகண்டு, சாமிநாதம்.

பொதிகை நிகண்டு-முதற்பகுதி ஆசிரிய விருத்தத்தாலும் இரண்டாவது பகுதி சூத்திரயாப்பிலே வருக்கம் என்ற முறையிலும் அமைக்கப் பெற்றுள்ளது.

'சாமிநாதம்' – ஐந்திலக்கணம் கூறுவது. இந்நூலிற்கு விருத்தியுரை ஒன்று உள்ளது. திருவாடுதுறையாதீனச் சுப்பிரமணிய தேசிகர் விருப்பப்படி இயற்றப் பெற்ற இந்நூலில் திருநெல்வேலி மாவட்டச் சொற்கள் மிகுதியாக உள்ளன.

**சாமிநாதச் செட்டியார் ( )**

ஊர்; ஏனங்குடிப் புத்தகம்; வேளாளர்.

இவர் வேதாந்த நூல்களிற் பயிற்சியுடையவர். தமது மகளுக்கு ஏற்பட்ட மேகரோக நோயினைத் தீர்ப்பதற்காக திருவாரூர் மடப்புரம் வந்து தக்ஷிணாமூர்த்தி அடிகளுக்கு

வழிபாடு செய்தார். அப்பொழுது சாமிகள் மீது பதிகம் ஒன்று பாடியுள்ளார். இதனால் ஒரே இரவில் நோய் நீங்கி நலமுண்டாயிற்றென்பர்.

**சாமிநாதத் தம்பிரான் ( )**

ஊர்: மதுரை.

நூல்: இராமலிங்கக் கவிராயர் என்பவர் மதுரையிற் செய்த அட்டாவதானத்தினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமிநாத தாசர் ( )**

நூல்: திருவேரக மான்மிய சங்கிரகம்.

இது உரைநடை நூல். வடமொழியில் சூரியபுராணமான பிரமகைவிவர்த்த புராணத்தில் உள்ளது 16 சருக்கங்களைக் கொண்டது. இதன் பிற்சேர்க்கையாக மீனாட்சி சுந்தரேசர் வரலாறு, கண்கொடுத்த விநாயகர் வரலாறு என்பன உள. இவ்வூர் பற்றிய தோத்திரத்திரட்டும் இதில் உள்ளது.

**சாமிநாத தாசர்—வே. ( )**

நூல்; சாமிநாததாசர் திருப்பாடற்றிரட்டு.

இது செய்யுள் நூல். இதில் தணிகைமலையில் எழுந்தருளிய சிவசுப்பிரமணியர் பேரில் கீர்த்தனங்கள், வழித்துணையாங் குப்பம் சுப்பிரமணியர் பேரில் கீர்த்தனம், அகவல், அருள்ஞானத் திருப்பதிகம், அருட்கண்ணி, நெஞ்சொடு முறையீட்டுக்கண்ணி ஆகியவை அடங்கியுள்ளன.

**சாமிநாத தேசிகர்—I (17-நூ)**

வே. பெ; ஈசான தேசிகர்.

ஊர்; திருநெல்வேலி; வேளாளர்.

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்தவர். கசீந்திரம் மடத்தில் சின்னப் பண்டாரமாயிருந்த மாசிலாமணி

தேசிகரிடம் சன்னியாசம் பெற்றுக் குட்டித் தம்பிரானாக விளங்கினார், மயிலேறும் பெருமாள் பிள்ளையிடம் தமிழ் நூல்களைக் கற்றுத் தேர்ந்தார். செப்பறையில் வாழ்ந்த கனக சபாபதிக் குருக்களிடம் வடமொழி நூல்களைக் கற்றார். திருவாவடுதுறை ஆதீனத்தில் தங்கிருந்த பொழுது இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகரின் உறவு இவருக்குக் கிடைத்தது. திருவாவடுதுறை ஆதீனத்தலைவராய மாசிலாமணி தேசிகர் பொறுப்பேற்றதும் இவர் திருநெல்வேலிக்குச் சென்றார். அப்போது சின்னப்பட்டத்தில் ஒருவர் இருந்ததனால் இவரை ஞானாசிரியராகச் செய்ய இயலவில்லை. ஆதலால் இவருக்குச் சங்காபிடேகம் செய்து ஈசான தேசிகர் எனப்பட்டம் சூட்டித் திருநெல்வேலியில் ஈசான மடத்தில் தலைவராக்கினர்; அப்போது இவர் சங்கரநமச்சிவாயப்புலவர் முதலியோருக்குத் தமிழும் சித்தாந்தமும் கற்பித்தார். பின்னர்ச்சிவத்தல யாத்திரை மேற்கொண்டு திருவண்ணாமலை சென்றார்; முத்தியடைந்தார்.

**நூல்;** *திருச்செந்திற்கலம்பகம், இலக்கணக்கொத்து; தசகாரியம்*

திருச்செந்திற் கலம்பகம்; இது திருச்செந்திலாண்டவன் மீது பாடப்பட்டது. திருச்செந்திலாண்டவன் சந்நிதியில் பூசையின் போது இன்னும் ஓதப்படுகின்றது. இலக்கணக் கொத்து: சொல்லிலக்கணம் பற்றிக் கூறும்சிறந்த ஆராய்ச்சி நூல்; நூலாசிரியர்களும் உரையாசிரியர்களும் கூறாது விட்ட விதிகளையும் பல்வேறு இடங்களில் கூறிய விதிகளையும் தொகுத்து ஆராய்ந்து வகைப்படுத்தி இந்நூலில் தந்துள்ளார். இந்நூலில் பல நுட்பமான இலக்கண விதிகளையறியலாம். வடமொழிப் பற்றுடையவராதலால் இந்நூல் பெரும்பாலும் வடமொழி இலக்கணத்தினை உட்கொண்டு அமைந்துள்ளது. பிரயோக விவேக ஆசிரியரை அடியொற்றிச் செல்கின்றார். ஆனால் அவர் கூறுவதுபோல இலக்கணக் குறியீடுகளையும் பிறவற்றையும் வடமொழி இயல்பின்படி தமிழாக்கித் தருகின்றார். இந்நூல் இவ்வகையில் சேனாவரையர் கருத்தினைத் தழுவிச் செல்லுகின்றது. இந்நூல் வேற்றுமையியல் வினையியல், ஒழிபியல் என்ற மூன்று இயல்களால் அமைந்துள்ளது. தற்சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றும், பாயிர நுற்பாக்கள் இரண்டும் 132 நுற்பாக்களும் உள்ளன. தசகாரியம்; இது பண்டார சாத்திரம் என்ற தொகுதியில் அடங்கிய

ஒரு ஞானமார்க்க நூலாகும். இந்நூலுக்குத் திருவண்ணாமலை யார் தச்காரியம் என்ற பெயரும் உண்டு.

**சாமிநாத தேசிகர் - 2 (18-நூ)**

**ஊர்:** துறைமங்கலம்.

**தந்தை:** கருணைச் சிவப்பிரகாச ஐயர், வீரசைவர்.

**நூல்:** பழமலைக் கோவை.

இந்நூல் 1760 இல் அரங்கேற்றப்பட்டது. விருத்தாசலம் என்ற பழமலையில் எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பெற்றது.

**சாமிநாத தேசிகர் – 3. ( )**

**நூல்:** குங்குமவன தலபுராண வசனம் (1927).

**சாமிநாத தேசிகர்-சி (19--நூ)**

இவர் மீனாட்சி சுந்தரம்பிள்ளையின் மாணவர். திருவனந்த புரம் பல்கலைக் கழகத்தில் ஆசிரியராகப் பணியாற்றியவர்.

**நூல்:** அரித்துவார மங்கலம் ப. சோமசுந்தர தேசிகர் என்பவர் இயற்றிய சிவாலாய மான்மியக் கோவை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமிநாத தேசிகர்–சு,**

இவர் திருக்கயிலாய பரம்பரை திருவாரூர்ச் சித்தாந்த சைவாசாரியார் கூட்டத்தைச் சேர்ந்தவர்.

**நூல்:** சந்தானுசாரிய சாரணசங்கிரகம்.

**சாமிநாத தேசிகர்–பொ. ( )**

**நூல்:** அரியலூர்ப் பாலசுப்பிரமணிய சுவாமி பதிகம் (1927).

## சாமிநாததேசிகர்–வ. சு. (19-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் திருவாரூர்

நூல்: தொ சுப்பாமுதலியார் இயற்றிய 'திருவாரூர்த் தியாகேசர் மாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சாமிநாத பண்டிதர் (20-நூ)

ஊர்: ஈழநாட்டில் யாழ்ப்பாணம்

நூல்: சைவ நூற்சார சங்கிரகம்

சிவஞானமாபாடியத்தையும் தேவாரங்களையும் அச்சிட்டுள்ளார்.

## சாமிநாத பண்டிதர் –சி (19–நூ)

ஊர்: யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணையில் கந்தர் மடம்.

தந்தை: சின்னத்தம்பி.

இவர் பொன்னம்பலம் பிள்ளையிடம் கல்வி கற்றார். அவர் புராணச் சொற்பொழிவுகள் செய்யும் காலங்களில் இவர் புராணங்களில் உள்ள செய்யுட்களைப் படிப்பார். இதனால் இத்துறையில் பயிற்சி பெற்றுச் செட்டி நாட்டில் பல இடங்களில் புராணச் சொற் பொழிவுகள் பல நிகழ்த்தியுள்ளார். திருவாவடுதுறை ஆதீனத்தோடும் இவருக்குத் தொடர்புண்டு. ஓர் அச்சகம்நிறுவி அதன் மூலம் பல நூல்களை இவர் பதிப்பித்துள்ளார்.

நூல்: திராவிடப்பிரகாசிகைக்கு வழங்கிய சிறப்புச் செய்யுள், பல தனிப்பாடல்கள்.

## சாமிநாதபிள்ளை-1. ( )

ஊர்: ஆரைமாநகர்.

நூல்: பெருகுவயல் என்னும் ஊரில் எழுந்தருளிய இரணபெலி முருகன் பேரில் காதல்.

**சாமிநாத பிள்ளை–2. ( )**

ஊர்: திருப்போரையடுத்த கணக்கன்பாயனூர்.

நூல்: படைவேட்டம்மை துதி, சாமலையம்மன் பதிகம், வீரபத்திர சுவாமி பதிகம்.

**சாமிநாத பிள்ளை·3.** (20--நூ)

இவர் கோயம்புத்தூரில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்; இந்து சமயத்தினராக இருந்து கிறித்தவராக மாறியவர்.
நூல்:பிள்ளை விடு தூது.

இந்நூல் கந்தசாமி முதலியார் இயற்றிய கிள்ளைவிடு தூது என்னும் நூலுக்கு மறுப்பாக எழுதப்பெற்றது. பிறகு மறுப்புக்கு மேல் மறுப்புகள்தோன்றின.

**சாமிநாத பிள்ளை–4 ( )**

நூல்: பாலபோதினி, விநாயகபுராண சங்கிரகம், உபாசனுகாண்டம்
பால போதினி: நீதிகளையும் கணக்கு வாய்பாடுகளையும் கொண்டது. விநாயகபுராண சங்கிரகம், உபாசனு காண்டம், இனியா காண்டம் என்னும் இரண்டு காண்டங்களையும் 29 படலங்களையும் 1360 செய்யுட்களையுங் கொண்டது.

**சாமிநாத பிள்ளை–அ** (19-நூ)

நூல்: சிதம்பராலயத் திருப்பணிச் சிந்தை.

இது நாட்டுக் கோட்டைச் செட்டியாரால் சிதம்பரம் கோயில் புதுப்பிக்கப் பெற்றது குறித்துப் பாடப்பெற்து.

**சாமிநாத பிள்ளை–உ. ரா.** (20-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் உமையாள்புரம்.

தந்தை: இராமசாமிப் பிள்ளை; வேளாளர்.

வாழ்ந்த காலம்: 1884-1958.

இவர் இளமைக் காலத்தில், சிற்றிலக்கியங்களைக் கற்றார். பின்னர் தக்க ஆசிரியர்களைக் கொண்டு நைடதம், பெரிய புராணம் முதலியஇலக்கியங்களையும் தொல்காப்பியம் முதலான இலக்கணங்களையும் கற்றுத் தேர்ந்தார். கோயிலூர் மடத்தில் தலைவராக இருந்த அண்ணாமலை ஞானதேசிகர் என்பவரோடு தங்கி வேதாந்த நூல்களைக் கற்றார். பின்னர்ச் செட்டிநாட்டில் பலருக்கு இலக்கண இலக்கியங்களைக் கற்பித்தார். சிவநேசன் இதழில் துணையாசிரியராக இருந்து சிவநெறி விளக்கக் கட்டுரைகள் பல எழுதியுள்ளார். யதார்த்தவசனி என்னும் பத்திரிகையில் ஆசிரியராகவும் இருந்துள்ளார்.

நூல்: நெல்லைநாயகி நிரோட்டகமாலை, திருவேரக முருகன் வண்ணமஞ்சரி, கட்டுரைத் திரட்டு.

**சாமிநாதபிள்ளை—ச (19-நூ)**

ஊர்; பாண்டிச்சேரி.

தந்தை: சவரிமுத்து; கிறித்தவர்.

இவர் எல்லீஸ் துரைக்கு ஆசிரியர்.

நூல்: ஏசுநாதர் பிள்ளைத்தமிழ், ஞானதிக்கராயர் காப்பியம், நரசைக் கலம்பகம், சாமிநாதன் பிள்ளைத்தமிழ்.

**சாமிநாதபிள்ளை சிவ. அ. (20-நூ)**

ஊர்: தஞ்சாவூர் மாவட்டத்தில் வேதியர்புரம்.

தந்தை: அருணாசலம்பிள்ளை. நூல்: வேளாளசூளாமணி.

**சாமிநாதபிள்ளை டி. ஜி ( )**

நூல்: சுகாதார விளக்கம். சௌக்கிய நூல் சுருக்கம்.

**சாமிநாத பிள்ளை-நா** (19-நூ)

ஊர்: தொண்டை நாட்டில் பையனூர்.

தந்தை: தானப்ப பிள்ளை.

நூல்: திருப்போரூர் முருகக் கடவுள்மீது கலம்பகம்.

**சாமிநாத பிள்ளை-தெ.** ( )

நூல்: திருத்தொண்டர் போற்றிக் கலிவெண்பா.

இந்நூல் சேக்கிழார் பெரியபுராணத்துள் உரைத்த அடியார்களின் பெருமைகளைச் சுருங்கக் கூறும் நூல். திருநெல்வேலி வித்துவான் அழகிய சொக்கநாதபிள்ளை இந்நூலுக்குச் சாற்றுக்கவிகள் பாடியுள்ளார்.

**சாமிநாதபிள்ளை-பி** (19-நூ)

ஊர்: திருநெல்வேலி சிந்துபூந்துறை.

தந்தை: பிச்சையாபிள்ளை.

நூல்: விநாயகபுராண சங்கிரகம், பாலபோதினி.

**சாமிநாத பிள்ளை பி எல்.** ( )

நூல்: சொரூபதரிசனம் (1898).

இது 326 செய்யுட்களைக் கொண்டது. முதற்கண் சில துதிகவிகள் உள. பின்னர் சொரூப தரிசனம் பற்றிய உண்மை விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இறுதிப் பகுதியாகிய முத்திவழி, பேதவுண்மை யென்பன முறையே ஆத்திசூடி, கொன்றை வேந்தன் முறையில் உள்ளன.

**சாமிநாத பிள்ளை-மு.** (19-நூ)

தந்தை: முத்துக்கருப்ப பிள்ளை.

நூல்: வேலாயுதக் கண்ணி.

**சாமிநாத பிள்ளை-வ.** (20-நூ)

**நூல்:** ப. நமச்சிவாயப்பிள்ளை இயற்றிய பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமிநாத பிள்ளை வி -1** (20-நூ)

**ஊர்:** கருந்திட்டைக்குடி.

**தந்தை:** விசுவலிங்க பிள்ளை.

இவர் பள்ளியில் பத்தாவது வகுப்புவரை படித்தபின்னர் தன் தந்தையாரிடத்தும் தஞ்சாவூரில் இருந்த தமிழ்ப் புலவர்களிடத்தும் தமிழ்நூல்களைக் கற்றார். வடார்க்காடு மாவட்டத்தில் பல ஆண்டுகள் தமிழாசிரியராகத் தொண்டு செய்துள்ளார்.

இவர் இல்வாழ்க்கையில் ஈடுபடாமல் துறவியைப் போலவே காலம் கழித்தார். தேவாரம் திருவாசகம் ஓதுதலும் கோயில்களுக்குச் சென்று இறைவழிபாடு செய்வதும் மாணவர்களுக்குத் தமிழ் கற்பிப்பதும் இவருடைய தொழிலாக இருந்தது. இவர் தமிழ்ப் பாடல்களை இசையுடன் பாட வல்லவர்.

**நூல்:** திருவோத்தூர் இளமுலையம்பிகை அந்தாதி, பக்திப் புனுவல்கள், தனிப்பாடல்கள்.

**சாமிநாதபிள்ளை வி.-2.** (          )

**நூல்:** கலியபொருமாள் மாலை, திருநாகை நான்மணிமாலை, திருவேரகமாலை, கலியபெருமாள் மாலை; திருமால் மீது பாடிய துதிப்பாடல்கள், திருநாகை நான்மணி மாலை; நாகப் பட்டணத்துக் காயாரோகணப் பெருமாள்மீது பாடியது. திருவேரகமாலை முருகன் மீது பாடிய துதிப்பாடல்கள்.

**சாமிநாத பிள்ளை-வி. எ.** (19-நூ)

**ஊர்:** திருச்சி.

**நூல்:** அட்சரேந்திரவிளக்கம் (1889).

**சாமிநாத பிள்ளை வே அ.** (20--நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் வேதியர்புரம்.

தந்தை: அருணாசல பிள்ளை.

நூல்: வேளாள சூளாமணி.

**சாமிநாதப் புலவர்-1** ( )

ஊர்: இராமநாதபுரம்.

நூல்: சர்க்கரைப்புலவர் இயற்றிய வேதாந்தசூடாமணி நூல் உரையினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமிநாதப் புலவர்-2.** ( )

ஊர்: கொங்குநாட்டில் விசயமங்கலம்.

நூல்: தனிப்பாடல்கள்.

**சாமிநாத மாதவராயர் மு.** (18-நூ)

ஊர்: சோழநாட்டில் திருக்களர்.

தந்தை: முருகமாதவராயர்.

இவர் தில்லையம்பதியில் தக்க அறிஞர்களிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம் முதலிய நூல்களை நன்கு ஆராய்ந்தவர். குருசுப்பையா சுவாமிகள் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றவர்.

திருக்களரில் பள்ளிக்கூடம் ஒன்றமைத்துச் சிறுவர்களுக்கு நீதி நூற்களையும் பிரபந்தங்களையும் கற்பித்தார். திருஞானசம்பந்தருடைய பாடல் பெற்ற தலமான திருக்களர் கோயில் திருப்பணியும் இவர்தம் முயற்சியாலேயே முடிவு

பெற்றது. இத்திருப்பணி முடிந்தாலும் தரும கர்த்தாக்களாலும் கோயில் பணியாட்களாலும் அக்கோயிலுக்குக் குறைபாடுகள் சில ஏற்பட்டதால் மனம் வருந்தித்திருக்களர் விளக்கம் என்னும் நூலினை எழுதி வெளியிட்டார். இதனால் பலருடைய பகைமைக்கு ஆளானார். திருவிடைவாசல் தேவாரப் பாடல் பெற்ற தலத்தை வெளிப்படுத்தியவரும் இவரேயென்பர். அங்கு மறைந்து காணப்பட்ட தேவாரத்தைப் படிசெய்து அச்சிட்டு வெளிப்படுத்தினார். இவர் கல்வெட்டுக்களையும் செப்பேடுகளையும் ஆய்ந்தறிவதில் வல்லவர். தேவாரப் பாடல்கள், தலங்கள் அனைத்தையும் வழிபட்டவர். தாம் சென்ற கோயில்களின் சிறப்புக்களையும் அவற்றுக்குச் செல்லும் வழிகளையும் திருப்பணி செய்தவர்களுடைய விவரங்களையும் திரட்டி நூல் ஒன்று செய்தார். ஆனால் இந் நூல் வெளிவரவில்லை.

நூல்: கோட்டூர்ப்புராணம், திருக்களர் வீரசேகரஞான தேசிகர் சரித்திரம், களப்பாழ் கஜேந்திரவரதர் புராணம், களப்பாழ் சிவப்பதி விளக்கம், திருவிடும்பவனம் சிவப்பதி விளக்கம், பசு மகிமை, விபூதி மகிமை, உருத்திராக்க மகிமை, பஞ்சாக்கர மகிமை, சூரியகுலக்கள்ளர் சரித்திரம், குரு சுப்பையா சுவாமிகள் வரலாறு.

**சாமிநாத முதலியார் ஐ. (19-நூ)**

இவர் வித்துவான் தியாகராசச் செட்டியாரின் மாணவர்; உ. வே. சாமிநாதையருடன் பயின்றவர்.

நூல்: சாவித்திரி வெண்பா, குடந்தைத்தல புராண வசனம்

**சாமிநாத முனிவர்-1. ( )**

வே. பெ: சாத்திரம் சாமிநாத முனிவர்.

இவர் இலக்கண இலக்கியங்களிலும் சைவ சித்தாந்த நூல்களிலும் வல்லவர்.

நூல்: திருவாவடுதுறைப் புராணம், திருப்பெருந்துறைப் புராணம், திருப்பெருந்துறைக் கலம்பகம்.

**சாமிநாத. முனிவர்-2 ( )**

**நூல்:** துறைசைப் புராணம்.

**சாமிநாதர். அ. (19-நூ)**

**ஊர்:** யாழ்ப்பாணம், மாணிப்பாய்.

கோயிலில் கந்தபுராணச் சொற்பொழிவு நிகழ்த்தும் பொழுது இவர் படிப்பது வழக்கம். அவ்வாறு படிக்குங்கால் ஒருநாள் இசையிற் பிழை நேர்ந்தது. சொற்பொழிவாற்றுப வர் கடுமையாகக் கடிந்து கொண்டார். அதனால் இவர் தமிழ் நாட்டிற்கு வந்து இசைப்புலமை பெற்றுச் சென்றார்.

**நூல்:** தருமபுத்திர நாடகம், இராமநாடகம்.

**சாமிநாதர். மு. ( )**

**ஊர்:** ஈழநாட்டு மட்டக்களப்பு

**தந்தை:** முத்துக்குமாரர்.

இவர் இலக்கண இலக்கியங்களிலும் காலக் கணிதத்திலும் வல்லவர்.

**நூல்:** பணசை வீரியம்மன் பதிகம் (1935).

**சாமிநாதன். சீ (19--நூ)**

**ஊர்:** புதுக்கோட்டை.

**பிறந்தநாள்:** 3-12--1896.

இவர் சென்னை, ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகங்களில் பயின்றவர். வழக்குரைஞராகவும் ஆசிரியராகவும் பத்திரிக்கை யாளராகவும் பணியாற்றியவர்.

**நூல்:** கட்டைவண்டி, World Teachers on Education.

### சாமிநாதையர்-1 (      )

நூல்: தசகாரியம்.

### சாமிநாதையர்-2 (20-நூ)

ஊர்: மதுரை.

நூல்: சுப்பிரமணியர் என்பவர் இயற்றிய சாவித்திரி நாடகத்தினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

### சாமிநாதையர்-3 (19--நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம், மாயூரம்.

நூல்: பெ. நாராயண சாமிநாயுடு இயற்றிய மனுச்சோழ சக்கர வர்த்தி வாசகப்பா என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

### சாமிநாதையர்-4 (      )

ஊர்; மழவை.

இவர் சிலேடைப் பாக்கள் இயற்றுவதிலும் அட்டாவதானம் செய்வதிலும் வல்லவர்.

நூல் சிவோச்சீவன சன்மார்க்கப் பிரகடனம், சிறுவாச்சியூர் மதுராம்பிகைபதிகம், ஆறுமுகன் பதிகம்.

### சாமிநாதையர் உ. வே. (20-நூ)

ஊர்: தஞ்சை மாவட்டம் உத்தமதானபுரம்.

தந்தை: வேங்கடசுப்பையர்; தாய்: சரசுவதியம்மாள்.

வாழ்ந்த காலம்: 19-2-1855-28-4-1942.

சங்க நூல்களையும் பழந்தமிழ்க் காவியங்களையும் ஏட்டிலிருந்து அச்சேற்றித் தமிழ் உலகில் மறுமலர்ச்சியைத்

தோற்றுவித்தவர் சாமிநாதையர். இவரைத் தமிழ்த் தாத்தா என்று தமிழகம் அன்புடன் அழைக்கின்றது. தமிழறிஞராக விளங்கிய இவர் இளமையில் தம் தந்தையார் இடத்திலும் அரியலூர்ச் சடகோபையங்கார், செங்கணம் விருத்தாசல ரெட்டியார் ஆகியோரிடத்திலும் கல்வி கற்றார். பின்னர் 1870ஆம் ஆண்டில் திரிசிரபுரம் சென்று திருவாவடுதுறை ஆதீன மாவித்துவானாக விளங்கிய மீனாட்சிசுந்தரம்பிள்ளை யிடம் ஆறாண்டுகள் பாடங் கேட்டார். பிள்ளையின் மறைவு க்குப்பின் திருவாவடுதுறை ஆதீனகர்த்தராகிய சுப்பிரமணிய தேசிகரிடமே பாடங் கேட்டார். மாணவர்கட்குப் பாடம் சொல்லும் பணியையும் தொடங்கினார். கும்பகோணம் அரசினர் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றிய வித்து வான் தியாகராசச் செட்டியாருக்குப்பின் 1880 பிப்பிரவரித் திங்கள் முதல் இவர் தமிழாசிரியர் பணியை மேற்கொண்டார். தம் திறமையால் பிறத்துறைப் பேராசிரியர்களோடு ஒத்த மதிப்புப் பெற்றார். இக்காலத்தில் இவருக்குக் கும்ப கோணத்தில் மாவட்ட நீதிபதியாக இருந்த சேலம் இராம சாமி முதலியாருக்குச் *சீவகசிந்தாமணியைப்* பாடம் சொல்லும் வாய்ப்புக் கிடைத்தது. அவரிடம் இருந்த சிந்தாமணி ஓலைச் சுவடியையே ஐயரவர்கள் முதன் முதல் அச்சேற்றினார் பழைய நூல்களைப் பதிப்பிக்கும் பணியில் இதுவே முதற் தொண்டாகும். இந்நூலைப் பதிப்பிக்கும் போது சிந்தமாணி யை ஆராய்ந்துடன் சைனப் புலவர்களிடம் சைன சமய உண்மையைத் தெரிந்துகொண்டார். பின்னர் 1887இல் *சீவகசிந்தாமணியை* நச்சினார்க்கினியர் உரையோடு வெளி யிட்டார். இது முதல் ஏட்டுச்சுவடிகளைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டார். இப்பணியின் விளைவாகப் பத்துப் பாட்டு, சிலப்பதிகாரம். புறநானூறு, மணிமேகலை என்பன அச்சேறின. பின்னர் ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் வெளிவந்தன. பெருங்கதையும் வெளியிடப்பெற்றது. இலக் கண வரிசையில் புறப்பொருள் வெண்பாமாலை, நன்னூல் மயிலைநாதருரை' நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரை 'தமிழ் நெறி விளக்கம் என்பனவற்றை வெளியிட்டார். பெரும்' பற்றப்புலியூர் நம்பி இயற்றிய திருவிளையாடற்புராணம் *திருக்காளத்திப்புராணம், தணிகைப்புராணம்,* மத்தியார்ச்சுன

மான்மியம் முதலிய புராணங்களையும், கோவை, உலா, கலம்பகம், பிள்ளைத்தமிழ், இரட்டைமணிமாலை' மும்மணிக் கோவை, பரணி, அந்தாதி, குறவஞ்சி முதலிய பிரபந்தங் களையும் குறிப்புரையுடன் வெளியிட்டார். கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம், குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு முதலியனவும் இவரால் அச்சிடப்பெற்றன, தமிழ் நூல்களை அச்சேற்றும்போது பல ஏடுகளோடும் ஒப்பிட்டுப் பிழைகளைத் திருத்தி, சிதைந்த இடங்களை பன்னூற் பயிற்சி யாலூகித்து வெளியிடுவது இவரது வழக்கம். ஒவ்வோர் பதிப்பிலும் முகவுரை, ஆசிரியர் வரலாறு, நூலைப் பற்றிய குறிப்பு, பிற செய்திகள் காணப்படும். அடிக்குறிப்பில் பல நூல்களின் ஒப்புமைப் பகுதிகள் இடம் பெறும். நூலின் இறுதியில் சொல்லகராதி, பொருளகாரதி இருக்கும். எனவே இவரது பதிப்புக்களுக்குத் தமிழுலகில் அன்றும்இன்றும் சிறப்புண்டு.

கும்பகோணம் கல்லூரியில் பணியாற்றிய பின்பு 1903ஆம் ஆண்டில் சென்னை அரசினர் கல்லூரித் தமிழாசிரியர் பொறுப் பை ஏற்றார். 1919 வரை பணியாற்றி ஒய்வு பெற்றார். அதன் பின்னர் 1924-27ம் ஆண்டுகளில் சிதம்பரம் மீனாட்சி கல்லூரி யில் தமிழ்த்துறைத் தலைவராக இருந்தார். இவர் கல்லூரிப் பேராசிரியராக விளங்கியதோடு வீட்டிலும் மாணவர்கள் பலருக்குப் பாடம் சொன்னார். இவ்வாறு பாடம் கேட்டவர் களுள் மகாபாரதத்தைத் தமிழில் மொழிபெயர்த்த ம. வி. இராமாநுசாச்சாரியார், திருப்பனந்தாள் காசிமடத்தலைவர் சொக்கலிங்கத் தம்பிரான், காவடிச்சிந்து அண்ணாமலை ரெட்டி யார், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், இ. வை. அநந்த ராமையர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

இவரதுதமிழ்த் தொண்டைப் பாராட்டு வகையில் அர சினர் 1906ஆம் ஆண்டில் மகாமகோபாத்தியாய என்ற பட்டத்தை அளித்தனர். 1917ம் ஆண்டில் பாரத தர்ம மண்டலத்தார் திராவிட வித்யாபூஷணம் என்ற பட்டத்தை யும் 1925ஆம் ஆண்டில் சங்கராச்சாரிய சுவாமிகள் 'தாக்ஷிணா தீய கலாநிதி' என்ற பட்டத்தையும் வழங்கினர் 1932ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகம் இவருக்கு 'டாக்டர்'

பட்டம் அளித்துச் சிறப்பித்தது. 1936ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 6ஆம் நாள் இவரது 80வது ஆண்டு நிறைவு விழாச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இவர் இறுதிக் காலம் வரை நூல்களைப் பதிப்பித்தல், கட்டுரைகள் எழுதுதல் ஆகிய பணிகளை மேற்கொண்டார். தமது 82ஆவது வயதில், குறுந்தொகைக்கு விரிவான உரையெழுதிப் பதிப்பித்தார் 1942இல் உலகப் பெரும்போர் நிகழ்ந்தபோது குடும்பத்தோடு திருக்கழுக்குன்றம் சென்றார். அங்கே ஏப்ரல் திங்கள் 28ஆம் நாள் காலமானார். இவரது பணிகளுக்குச் சிறப்புச் செய்யும் வகையில் 1948ஆம் ஆண்டில் மாநிலக் கல்லூரியில் இவரது உருவச்சிலை யொன்று நிறுவப்பெற்றுள்ளது.

நூல்: மீனாட்சிசுந்தரம்பிள்ளை சரித்திரம், தியாகராசச் செட்டியார் சரித்திரம், என் சரித்திரம், கோபாலகிருஷ்ண பாரதியார் சரித்திரம், மகாவைத்தியநாதையர் வாழ்க்கை வரலாறு, கனம் கிருஷ்ணையர், நான் கண்டதும் கேட்டதும், பழையதும் புதியதும், நல்லுரைக்கோவை, நினைவு மஞ்சரி, சங்க காலத் தமிழும் பிற்காலத் தமிழும், சிலப்பதிகாரக் கதைச்சுருக்கம், மணிமேகலைக் கதைச்சுருக்கம், உதயணன் கதைச்சுருக்கம்

என் சரித்திரம்: ஐயரவர்களின் வாழ்க்கை வரலாற்று நூலாகும் இவ்வரலாறு ஆனந்த விகடன் இதழில் வாரந்தோறும் எழுதப்பெற்றது. 122 அத்தியாயங்கள் வெளிவந்தன. ஆனால் நூல் முற்றுப்பெறவில்லை.

**சாமிநாதையர் சி. மு. (19-நூ)**

நூல்: க. ரா. சிவசிதம்பர முதலியார் இயற்றிய கரையேறவிட்ட நகர்ப்புராணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமிநாதையர் சி வி (20-நூ)**

ஊர்: திருவையாறு.

வாழ்ந்த காலம்: 1863--1930.

இவர் 1885இல் சுதேசமித்திரன் இதழில் துணையாசிரியராகப் பணியாற்றினார். பின்னர் அதன் தலைமையாசிரியரானார். பல அறிஞர்களின் துணைகொண்டு விவேகசிந்தாமணி என்னும் திங்கள் இதழினைத் தொடங்கி நடத்தி வந்தார், இவ்விதழ் கி. பி. 1920ஆம் ஆண்டுவரை 12 ஆண்டுகள் செம்மையாக நடைபெற்று வந்தது.

நூல்: கொல்லர்ட் சரித்திரம், இந்நூல் துணிக்கடையில் வேலைக்கமர்ந்த ஒருவர் தம் முயற்சியினால் முதலமைச்சரான கதையைச் சொல்வது. விவேகசிந்தாமணியில் இருந்து எடுத்து கி. பி. 1897இல் அச்சிடப் பெற்றது.

**சாமிநாதையர், வே.** (19-நூ)

நூல்: சேவு. பழ. பழநியப்ப அய்யா இயற்றிய தோத்திரப் பாமாலை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமிநாயகர்** (20-நூ)

ஊர்: சென்னை, திருவல்லிக்கேணி.

இவர் வேதாந்த நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர்.

நூல்: அறிவறியாமை யாதார விளக்கம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமிப்பொன்னுப் பிள்ளை** (19--நூ)

நூல்: நாகலிங்க அடிகள் முத்தாம்பிகை மீது பாடிய அந்தாதி நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமியடியான் உபாத்தியாயர்** (        )

ஊர்: பேய்க்குளம்.

நூல்: மெய்ஞ்ஞானப்பிள்ளைத் தமிழ் (1870).

இது கிறித்துவின் மேற் பாடப்பெற்றது.

**சாமியடியான் பேறு பெற்றன் ஐயர்** ( )

**நூல்:** இம்மானுவேல்மாலை, செபவிருத்தப்பா.

**சாமியா பிள்ளை** (20-நூ)

**நூல்:** பா. கி. வன்னியப்பிள்ளையின் நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமுக்குட்டி ஐயர்** (19-நூ)

**ஊர்:** செந்நெற்குடி.

**நூல்:** சி. வாலசுப்பிரமணிய ஐயரின் நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சாமுண்டி தேவநாயகர்** (12--நூ)

இவர் புறப்பொருள் இலக்கணத்தையுணர்த்தும் புறப்பொருள் வெண்பாமாலை என்னும் நூலுக்கு உரைவரைந்தவர். ஜெயங்கொண்ட சோழமண்டலத்து மேற்காநாட்டு மாக்றலூர் கிழார் என்ற அடைமொழிகள் இவரது பெயரின் முன்சேர்ந்துள்ளன. இவரைப் பற்றிய வரலாறு ஏதும் தெரியவில்லை. இவரது உரையில்,

> "உலவா வூக்கமோடு உள்ளியது முடிக்கும்
> புலவர் ஆற்றுப்படை புத்தேட்கும் உரித்தே"

என்ற பன்னிரு பாட்டியல் 320 ஆம் நூற்பாவை மேற்கோள் காட்டுகின்றார். எனவே இவர் வாழ்ந்த காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி எனக் கருதப்படுகின்றது.

புறப்பொருள் வெண்பாமாலையினை இயற்றியவர் ஐயனாரிதனார் என்பவர். இவர் சேர அரசமரபைச் சேர்ந்தவர். புறப்பொருள் திணைகளை விளக்கும் நூற்பாக்கள் இயற்றிக் கொளுக்களைச்செய்து அவற்றிற்கு ஏற்ற இலக்கியங்களையும் தாமே படைத்துள்ளார். உரையாசிரியராகிய சாமுண்டி தேவநாயகர் நூற்பா, கொளு, மேற்கோள்பாடல்கள் ஆகியவற்றிற்கு உரை இயற்றியுள்ளார். சொல்கிடந்தவாறே இவர் பதவுரையாகப்

பொருள் எழுதுகின்ருர். எழுவாய், பயனிலை செயப்படுபொருள் தேடி, கொண்டு கூட்டிப்பொருள் எழுதுவதில்லை. வடசொற்கள் இவரது உரையில் மிகுதியாக இடம் பெறுகின்றன. பேச்சு மொழிச் சொற்களும் இடம் பெறுகின்றன. இவர் இவ் உரையில் தமது பல்கலைப் புலமையையும் வெளிப்படுத்துகின்ருர்.

நூல்: புறப்பொருள் வெண்பாமாலை உரை.

## சாமு நயினுலெப்பை ( )

ஊர்: காயற்பட்டினம்.

நூல்: அதபுமாலை, குரர்ன் குறத்தைக் கொண்டுண்டாகிய முனுஜாத்து.

## சாமு வேலையா ஞா. ( )

நூல்: ஒருசந்திநாள் தியானப் புத்தகம், கதாமலர்க்கூடை, சத்திய வேத பாயிரம், சுவிசேஷ கீர்த்தனைகள், பாலர் பூச்சரம்.

முதலாவது நூல் ஒரு சந்தி நாட்கள் என்றும் தபசு நாட்கள் என்றும் பெயர் வழங்கும் நாற்பது நாட்களில் இரட்சகரின் பரிசுத்தப் பாடுகளைத் தியானிப்பதற்காக எழுதப் பெற்றது.

இரண்டாவது நூல் கிறித்தவர்கள் தெரிந்துகொள்ள வேண்டிய கதைகளின் தொகுதியாகும்.

பிறமொழிகளில் இருந்து இக்கதைகள் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன. இக்கதைகள் தரங்கம் பாடிக் கிறித்தவ சங்கத்தினர் வெளியிட்ட இதழிலும் பஞ்சாங்கங்களிலும் வெளியிடப் பெற்றது. சத்திய வேதபாயிரம் என்னும் நூல் சத்திய வேத புத்தகத்தைத் தமிழ் நாட்டுக் கிறித்தவர்கள் நேசித்து வாசித்துத் தழைத்தோங்குதற்குத் துணைக்கருவியாகவுள்ளது.

பாலர் பூச்சரம் என்னும் நூல் சிறுவர் சிறுமியர்கட்கு ஏற்ற கதைகளைக்கொண்டது. பெரும்பாலும் இதில் கிறித்தவக் கதைகளே யுள்ளன. சுவிசேஷக் கீர்த்தனைகள் என்னும் நூல் பசனைக்கீதம் முதலிய பல இசைப்பாடல்களைக் கொண்டது.

**சாமுவேல் சற்குணர் ( )**

**நூல்:** திராவிடச் சத்திரியர்.

இந்நூல் நிருதி நூல்கள் கூறும் நான்கு சாதிகளுள் இரண்டாவதான திராவிடச் சத்திரியரைப் பற்றிய குறிப்புக்களைப் பல நூல்களின் ஆதாரங்களுடன் தெரிவிப்பது.

**சாமுவேல் பவுல் ஐயர்** (19-நூ)

**வாழ்ந்த காலம்:** 1844-1906.

இவர் ஆசிரியராகவும் சமயபோதகராகவும் பணியாற்றியவர். 1890 முதல் நற்போதகம் என்ற இதழை நடத்தி வந்தார்.

**நூல்:** பரதேசியின் மோட்சப் பிரயாணம் (மொழி ஆக்கம்)

**சாமுவேல் பிள்ளை தி.** (19-நூ)

**தந்தை:** தாண்டவராயபிள்ளை. இவர் சோழிய வேளாளகுலத்தினைச் சேர்ந்த சைவ சமயத்தினராக இருந்து கிறித்தவ சமயத்தைத் தழுவியவர்.

**நூல்:** தொல்காப்பியம்-நன்னூல். இந்நூல் தொல்காப்பியத்திற்கும் நன்னூலுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்குவது.

**சாமுவேல் பிள்ளை. தா.** ( )

**நூல்:** வேதாகம மாலை (1898).

இந்நூல் திவ்வியவேதாகமக் கட்டுரைக் கலித்துறை மாலை யென்றும் ;வழங்கப்படுகின்றது.

**சாமுவேல் யோவான் ஐயர் ( )**

நூல்: பரதீசு உத்தியான நாசம்.

இந்நூல் ஜான்மில்டனின் ஆங்கிலச் செய்யுள் நூலினின்றும் மொழிபெயர்க்கப் பெற்றது.

**சாமுனு லெப்பை ( )**

ஊர்: காயற்பட்டினம்.

நூல்: இருஷாது நாமா (1902).

**சாயிற்முகியித்தீன் சுல்தான்பின்ளை ஆலிம் சாஹபு ( )**

நூல்: அரபு மொழியில் பெயர் பெற்ற இறுசாதுல் இபாத் என் னும் நூலின் மொழி பெயர்ப்பு.

**சார்ஜெண்ட். இ ( )**

ஊர்: பாளையங்கோட்டை.

நூல்: தத்துவசாஸ்திரம் அல்லது ஜகத்தில் விளங்கிய பலவகைத் தோற்றங்களுடைய பிரகிருதிப் பிரமாணங்களை விளக்கிய நூல் (1871). இது நான்கு பகுதிகளாகப் பகுக்கப்பட்டு, முதற்பகுதியில் பொதுப் பிரமாணங்கள் ஜகத்தின் சலனத் தோற்றம் என்பனவும், இரண்டாவதில் யாத்திரீகத்தைக் குறித்தும், மூன்ருவதில் ஜல பதார்த்தங்களின் தன்மை, ஆகாயத் தோற்றம், சலிலசாலனம், சப்த சாஸ்திரம் என்பன பற்றியும், நான்காவதில் உஷ்ணம், ஒளி, மின்தாது, காந்தம் என்பவை பற்றியும் விளக்கியுள்ளது. நூலின் முதலில் பொருள் அட்டவணையும் இறுதியில் தற்பரீட்சை வினுக்களும் அமையப்பெற்றுள்ளன.

### சாலிவாடீசுர ஓதுவார் (19-நூ)

ஊர்: திருநெல்வேலி.

இவர் கல்விச் சங்கம் அமைத்துப் பலருக்குத் தமிழ்க் கல்வியைக் கற்பித்தவர்; பல நூல்களை ஆராந்து வெளி யிட்டவர்.

நூல்: பல நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

### சானகிராம ஐயர் நா ( )

ஊர்: உறையூர்.

தந்தை: நாராயணசாமி ஐயர்.

நூல்: அமிர்தம் சுந்தரநாதப்பிள்ளை இயற்றிய ஆதிவயலூர் வெண்பா அந்தாதி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

### சிக்கந்தர் முகையதீன்புலவர் த. இ. (19-நூ)

ஊர்: பாண்டிவள நாட்டில் கடலாடி. தமிழ் இலக்கண இலக்கி யங்களைக் கற்றுத் தேர்ந்தவர்.

நூல்: இராமலிங்கம்பிள்ளை இயற்றிய கந்தபுராண வண்ணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்,

### சிகண்டி ( )

நூல்: இசை நுணுக்கம்.

அநாகுலன் என்னும் பாண்டியனுக்கும் தேவ உலகத்து மகள் திலோத்தமைக்கும் பிறந்த சார குமாரன் இசை அறி தற்காகச் செய்யப் பெற்றது என்பர். அடியார்க்கு நல்லார் இந்நூலில் இருந்து சில வெண்பாக்களைச் சிலப்பதிகார உரையில் சில மேற்கோள்களாகக் காட்டியுள்ளார். இந்நூல் கடைச் சங்க நூல்களில் ஒன்றே யென்று இறையனார் களவியலுரை குறிப்பிடுகின்றது.

**சிங்கக் கவிப்புலவர்** ( )

நூல்: பதம்.

**சிங்கார சேகரர்** ( )

நூல்: மாபாரதம் (வழி நூல்).

பிற்காலத்தில் எழுதப்பெற்ற பரதசேனாபதியம் என்ற நூலின் ஆசிரியர் மேற்கண்ட நுற்பாயிரத்தின் 63 வது சூத்திரத்தில் இந்நூலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இது மறைந்து போன தமிழ் நூல்களில் ஒன்ருகும்.

**சிங்கார வேலவேந்திரப்பிள்ளை** ( )

நூல்: அநுபந்த அராபிக்கதை (1880). (மொழிபெயர்ப்பு.)

இந்நூல் 1001 அராபிக்கதையின் தொடர்பாக உள்ள கதைகளைக் கூறுகின்றது. அராபி மொழியில் இருந்து பிரஞ்சு ஆங்கில மொழிகளில் மொழிபெயர்க்கப் பெற்றது. இது தமிழில் வரும் முதல் மொழிபெயர்ப்பு. இதில் அடங்கியுள்ள கதைகளின் அட்டவணை நூல் இறுதியில் தரப்பெற்றிருக்கிறது.

**சிங்காரவடிவேல் வன்னியமுண்டார்** (19-நூ)

ஊர்: கச்சமங்கலம்.

இவர் வேதாந்தம், சித்தாந்தம், தருக்கம், இலக்கணம், சங்க நூல்கள் முதலிய எல்லா வற்றிற்லும் வல்லவர்.

நூல்: திருக்கச்சமாலை, உயிர்வருக்கமாலை, இரட்டைமணிமாலை, திருப்பழநி வெண்பாமாலை, திருமுருகாற்றுப்படை வெண்பா, அகிலாண்ட நாயகி பதிகம், திருவானைக்கா வந்தாதி.

**சிங்கார வேலுப்பிள்ளை. ப** (19--நூ)

நூல்: இராமைய அடிகள் இயற்றிய நாகூர்ப் புராணத் தமிழ் மொழி பெர்ப்பு நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சிங்கார வேலு முதலியார் ( )

நூல்: ஞானசித்த சுவாமிகள்மீது சிங்காரப் பதிகம் (1894), பாளையம் சர்க்கரைச் செட்டியார் சரமகவி (1873).

ஞானசித்த சுவாமிகள்மீது சிங்காரப் பதிகம் என்னும் நூல் 16 பக்கங்களில் அமைந்த செய்யுள் நூலாகும். இந்நூல் பாண்டி நாட்டில் திருக்குருகூரிலே ஞானசித்தர் என்னும் திருநாமம் பெற்றுக் குழந்தைப் பருவத்தில் பல அற்புதம் விளைத்து இளமையில் துறவு பூண்டு பொதிகையில் உலாவிய சாமிகளின் சிறப்பு முதலியவற்றைக் கூறித் துதிப்பதாகும்.

பாளையம் சர்க்கரைச் செட்டியார் சரமகவி என்னும் நூல் திருப்போரூர் அட்டகம் என்னும் நூலுடன் சேர்த்து அச்சிடப் பட்டது.

## சிங்காரவேலு முதலியார் ஆ (20-நூ)

ஊர்: செங்கற்பட்டு மாவட்டம். பொன்விளைந்த களத்தூருக்கு அருகில் உள்ள ஆலூர்.

தந்தை: வரதப்ப முதலியார்; தாய்-பொன்னம்மாள்.

இவர் சென்னைக் கோமளேசுவரன் பேட்டை இராசகோ பாலப் பிள்ளையிடம் தமிழ் நூல்களைக் கற்றுத் தேர்ச்சி பெற்றுப் பச்சைப்பன் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றினர் ஓய்வு பெற்ற பின் சென்னைப் பல்கலைக் கழகத்தார் வெளி யிட்ட தமிழ் லெக்சிகன் குழுவில் பணிபுரிந்தார்.

நூல்: அபிதான சிந்தாமணி, பட்டினத்தார் பாடல்கள் விருத் தியுரை.

அபிதானசிந்தாமணி நூலுக்காகப் பதினைந்தாண்டுகள் உழைத்தார். பல அறிஞர்கள் வாயிலாகவும் பல தமிழ் வட மொழி நூல்களின் துணைக்கொண்டும் பல அரிய செய்திகளைச் சேகரித்தார். இந்நூல் சிறப்புப் பெயர்களைப் பற்றிய விளக்கங்களைக் கொண்டது. பொதுக்கலைக் களஞ்சியம் போன்றது. பாண்டித்துரைத் தேவரின் பொருள் உதவியினால்

வெளியிடப்பற்றது. 1910-1934, ஆகிய ஆண்டுகளில் இரண்டு பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. முதற் பதிப்பினைக் காட்டிலும் இரண்டாவது பதிப்பில் செய்திகள் அதிகம் சேர்க் கப்பட்டுள்ளன.

**சிங்காரவேலு முதலியார், கி. (        )**

நூல்: திருப்போரூர் மாலை.

இந்நூல் 102 வெண்பாக்களைக் கொண்டது.

**சிங்காரவேலு முதலியார் கூ. வே. (        )**

ஊர்: சென்னை நுங்கம்பாக்கம்.

நூல்: வடபழநி யாண்டவர் மீது மும்மணிமாலை, திருக்குருகூர் ஞானசித்த சாமிகள் சிங்காரப் பதிகங்கள், திருமணவூர்த். தோத்திரப்பதிகங்கள்.

**சிங்காரவேலு முதலியார் ப (20--நூ)**

இவர் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர்.

நூல்: திருப்பெரும்பேற்று முருகன் பிள்ளைத் தமிழ், தலத்துதிகள் எச்சரிச்கை, திருவூசல், திருப்பள்ளியெழுச்சி.

**சிங்காரவேலு முதலியார் மா. (19-நூ)**

ஊர்: சென்னை கிருட்டிணாம்பேட்டை.

தந்தை: மாரியப்ப முதலியார்.

இவர் தக்க அறிஞர்பால் கல்வி கற்றுத் தமிழில் புலமை பெற்றார். முருகப்பெருமானிடம் பேரன்பு கொண்டவர். திருப்போரூருக்கு அடிக்கடி சென்று முருகனைப் போற்றி வழி படுவதைக் கடமையாகக் கொண்டவர்.

நூல்: திருப்போரூர் இன்னிசைப்பா .அங்கப்பத்து, அச்சப்பத்து, அடிமைப்பத்து, அநுபூதிப்பத்து, ஆநந்தக்களிப்பு, ஆநந்தப்புகழ்ச்சி உண்மை நெறிப்புகழ்ச்சி, ஊசல், எச்சரிக்கை, எந்தாய்ப்பத்து,

கருநாட்பத்து, காட்சி, கிளிப்பத்து, குயில்பத்து, சீர்பாதப்பத்து, சேவற்பத்து, தாலாட்டு, திருப்பல்லாண்டு, திருப்பள்ளி யெழுச்சி, திருவருட்புகழ்ச்சி, நமக்காரப் பத்து, நாமாவளி நெஞ்சுவிடுதூது, மயிற்பத்து, வேற்பத்து.

**சிங்காரவேற்பிள்ளை. ப.** (20-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் மூவலூர்.

இவர் தஞ்சாவூர் மாவட்டம் குற்றாலம் உயர்நிலைப்பள்ளி யில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை எழுதிய திருத்துருத் திப் புராணத்திற்கு உரைநடை, குறிப்புரை, திருநாகேச்சுரத் தலபுராணம் உரைநடை.

**சித்தநாதையர்** (19-நூ)

ஊர்: பவளப்பாடி.

நூல்: சிவாநந்த கணேசர் புராணம்.

**சித்தமக் கவிராயர்.** (19-நூ)

ஊர்: பாண்டியநாட்டு வாலசுப்பிரமணியபுரம்.

இவர் குமாரமுத்துச் சடையீஸ்வரர் என்ற ஆசிரியரிடம் கல்வி கற்றார்.

நூல்: கந்தபுராண வண்ணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சித்தர்** ( )

இவர் இயற்பெயர் தெரியவில்லை. சித்துக்கள் செய்த மையால் சித்தர் என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

நூல்: சித்தரந்தாதி.

இந்நூல் திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள அகிலாண்ட நாயகிமீது பாடப்பட்டது. நூல் முழுவதும் கிடைக்கவில்லை, 22 செய்யுட்களே கிடைத்துள்ளன.

**சித்தர் சிவப்பிரகாசர்.** (17-நூ)

வே. பெ: துறையூர்ச் சிவப்பிரகாசர்.

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம்.

இவர் திருச்செங்கோட்டில் கொடிமரத்திலிருந்த இடபம் கடலை தின்னவும், தீவட்டி எண்ணெயில்லாமல் எரியவும் நாகந்தீண்டி இறந்தவன் எழவும், குட்டரோகி தன்னிடம் திருநீறு பெற்ற அளவிலே நோய்நீங்கி நல்லுடம்பு பெறவும் அரசன் ஒருவனுக்குக் கொலைப்பாவத்தால் வந்த தீங்கு நீங்கவும் செய்த சித்தராதலின் சித்தர் சிவப்பிரகாசர் எனப்பட்டார். இவர் திருவாவடுதுறை ஆதீனத்தின் தலைவராகிய நமச்சிவாய மூர்த்தியிடம் தீட்சைபெற்றுச் சைவ சமயத்தைப் பரப்பும் பெரும்பணியில் ஈடுபட்டிருந்தார். தில்லை நடராசப் பெருமானது நித்தியப்படி பூசை முதலாயின விசயநகர அரசர்களது காரிய கர்த்தர்களால் தடைப்பட்ட போது இவர் வீரசைவருக்குரிய இலிங்கதாரணம் செய்துகொண்டு வேலூருக்குச் சென்று, அமைச்சராகவும் பிரதிநிதியாகவும் இருந்து அரசாட்சி நடத்தி வந்த இலிங்கமநாயகரைக் கண்டு தில்லை நடராசப்பெருமானுக்குப் பூசை நாடோறும் முட்டின்றி நடக்கக் கட்டளைபிறப்பிக்க வேண்டுமென்று வேண்டினார். இலிங்க நாயகரும் நடராசப்பெருமானுக்கு நித்தியபூசையும் கட்டளையும் முட்டின்றி நடக்க வழி செயதார். இலிங்கம நாயகரால் திருவண்ணமலையில் இவருக்காக் அமைக்கப்பட்ட மடத்திலும் இலிங்க துரையால் இவருக்கென்று அமைக்கப்பட்ட துறையூர் மடத்திலும் தங்கியிருந்து சைவப்பணி புரிந்தார். துறையூர் மடத்திலிருந்து தொண்டு புரிந்தமையால் துறையூர்ச் சிவப்பிராசர் எனவும் பெயர் வழங்குவதாயிற்று

நூல்: திருக்கழுக்குன்ற மாலை, அத்துவித வெண்பா, கணபாஷி ரத்தினமாலை, சதகத்திரயம், அனுபவ சட்ஸ்தலம், திருவாலந்துறைச் சிந்து.

அத்துவிதவெண்பா: இது 218 வெண்பாக்கள் கொண்டது. இந் நூலுக்கு நன்னூற் சிவப்பிரகாச சுவாமிகள் உரை இயற்றி யிருக்கின்றார்.

**சித்தரங்கம் பிள்ளை** (20--நூ)

ஊர்: சுஞ்சுவாடி.

நூல்: தனிப்பாடல்கள்.

**சித்தகுரியார்** (        )

நூல்: சாருந்தகணேசர் புராணம்.

**சித்தாந்த அநுபூதியார்** (        )

நூல்: சித்தாந்த மரபட்டவணை (1888).

இந்நூல் ஆன்மா முதலிய தத்துவங்களை உரைப்பது.

**சித்தானந்த சாமி** (        )

நூல்: சிதானந்தகீதை.

**சித்திரபுத்திர பிள்ளை தி. செ** (19-நூ)

ஊர்: திருநெல்வேலி.

தந்தை: செந்தில்நாயகம்பிள்ளை.

இவர் வண்ணச் சரபம் தண்டபாணி அடிகளின் உடன் பிறப்பாளர்.

நூல்: பதிகங்கள், தண்டபாணி அடிகளின் திருவாமாத்தூர்ப் புராணத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சித்துப் புலவர்** (        )

ஊர்: யாழ்ப்பாணத்தில் சுன்னாகம் உடுவில்.

இவர் புலமையோடு விடமருத்துவத்திலும் பயிற்சி பெற்றவர்.

நூல்: பதிகங்கள், ஊஞ்சல்கள், தனிப்பாடல்கள்.

**சித்பவானந்த சாமிகள் (      )**

நூல்: திருக்கைலாசகிரி யாத்திரை.

**சிதம்பர அடிகள்–1 (19-நூ)**

ஊர்: குமாரபாளையம்.

நூல்: தே. ர. அரங்கநாத கவிராயர் இயற்றிய அர்ச்சுணன் தீர்த்த யாத்திரை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிதம்பர அடிகள்–2 (18-நூ)**

ஊர்: மதுரை.

இவர் திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனத்தில் எழுந்தருளியிருந்தார். அந்நாளில் பிழைமலிந்து வழங்கி வந்த சிதம்பர புராணம் என்னும் நூலினைச் செப்பம் செய்து திருந்திய முறையில் வெளியிட்டார். இவர் மெய்ஞ்ஞானச் செல்வராகவும் திருந்திய நல்லொழுக்கம் அமைந்தவராகவும் கொண்ட கோலத்திற்குத் தக்க நடக்கையுடையவராகவும் விளங்கியபடியால் இவரைஅனைவரும் போற்றிப் பாராட்டினர். சிதம்பரம் இராமலிங்க அடிகள் என்னும் வடலூர் வள்ளலார் இந்நூலுக்கு அகவற்பாவால் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

**சிதம்பர அடிகள் (செப்பறை)–3 (20-நூ)**

ஊர்: யாழ்ப்பாணம்.

தமிழ் நாட்டில் செப்பறையில் இருந்தமையால் இவருக்குச் செப்பறைச் சாமிகள் என்ற பெயர் ஏற்பட்டது திருநெல்வேலியில் சில காலம் தங்கியிருந்தார். சிதம்பரத்திற்கு வந்து செழுங்கழுநீர்ப்பிள்ளையார் கோயில் தெருவில் மடம் ஒன்று அமைத்து அதற்கு 'சிவஞானத் திருத்தளி' என்று

பெயரிட்டு அதில் தங்கிவந்தார். இவருக்கு ஞான ஆசிரியர் திட்டைக்கு அடுத்த அன்னிப்பன் பேட்டையில் உள்ள தாயுமான அடிகளாவார்.

நூல்: திருநாவுக்கரசர் திருவிருத்தம், சிவப்பிரகாசம் ஆகியவற்றிற்கு உரை, தொல்காப்பியச் சண்முக விருத்தி மறுப்பு.

**சிதம்பர உபாத்தியாயர்** (19-நூ)

வே. பெ: சிதம்பர பண்டாரம்.

இவர் சென்னை கல்விச் சங்கத்தின் தலைமைத் தமிழாசிரியராக இருந்து சேவை செய்தவர்.

நூல்: வால்மீகி இராமாயணம்--உத்தரகாண்டம் (மொழிபெயர்ப்பு).

**சிதம்பரக் கவிராயர்** (18-நூ)

ஊர்: திருநெல்வேலி.

தந்தை: சங்கரமூர்த்திப்பிள்ளை.

நூல்: உசிதசூடாமணி.

இந்நூல் 1903ஆம் ஆண்டில் உரைக்குறிப்பு முதலியவற்றோடு அச்சிடப்பட்டது.

**சிதம்பரக் குருக்களையா** (19--நூ)

ஊர்: சேற்றூர்,

நூல்: சங்கர நாரயாணசாமி கோயிற்புராணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிதம்பர கிருட்டிண ஐயர்** (20-நூ)

ஊர்: கன்னியாகுமரி.

நூல்; திருவேங்கடபுரம் சங்கரநாராயண பாரதியார் இயற்றிய கன்னியாகுமரி பகவதியம்மன் பதிகம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிதம்பர சாத்திரி –ம (       )**

நூல்: மதுரை ஜில்லா பூமி சாஸ்திரம்; இது மதுரை மாவட்டத்தின் நில அமைப்பு, மலை ஆறுகளின் விவரம், ஒவ்வொரு கோட்டத்திலும் அமைந்துள்ள முக்கிய ஊர்கள் முதலிய விவரங்களை விளக்குவதாகும்.

**சிதம்பர சாமிகள்** (17-நூ)

வே. பெ: சிதம்பரக் கவிராயர்.
ஊர்: திருப்போரூர்.

இவர் குமாரதேவசாமிகளிடம் அருளுரையும் அறிவு விளக்கமும் பெற்றவர். குமரதேவர் விருத்தாசலம் மணிமுத்தாற்றங்கரையில் அரசமரநிழலில் அமர்ந்து நிட்டைபுரிந்தவர். அவிநாசி சாந்தலிங்க அடிகளாரை ஆசிரியராகக் கொண்டார். குமாரதேவர் இவருக்கு வீர விசேஷம், வீர நிராபரம் முதலிய 21 தீட்சைகளையும் வீரசைவ விதிப்படி அருள் புரிந்து ஞானச் சமாதி கூட்டுவித்தார்.

அங்கயற்கண்ணம்மையின் திருவருளின்படி திருப்போரூர் முருகன் கோயில் திருப்பணிகளை மேற்கொண்டார். இவர் தம்முடைய அருள் தன்மையால் பலரது பிணிகளைத் தீர்த்து அவர்கள் அளித்த காணிக்கைப் பொருளைக் கொண்டு இத் திருப்பணியைச் செய்தார். இவருக்குப் பின்னர் இவர்பால் அருள்பெற்ற சிவசங்கர அடிகள் இத் திருப்பணிகளைத் தொடர்ந்து மேற்கொண்டார்.

நூல்: உபதேசஉண்மைக் கட்டளை, உபதேச உண்மை, கிளிப்பத்து தண்டபாணி சாமிகள் பேரில் பதிகம், திருப்போரூர் ஆறுமுக சாமி அலங்காரப் பதிகமும் கீர்த்தனையும், வேதகிரீசுவரர், பதிகம், திருப்போரூர்ச் சந்நிதிமுறை, தோத்திரமாலை, பஞ்சாதிகார விளக்கம், பாகவதத்திரட்டு, பிரபோதசந்தி ரோதயத்

திரட்டு, வாசிட்டத்திரட்டு, சூதசங்கிதைத் திரட்டு, மீனாட்சியம்மை அநுக்கிரகார்த்தக் கலிவெண்பா, குமார தேவர் நெஞ்சுவிடு தூது, குமாரதேவர் பதிகம், குயிற்பத்து, சரவண தேசிகர் கலித்துறை, சரவணதேசிகர்மாலை, சரவணதேசிகர் இரட்டைமணிமாலை, சரவணஞானியார் ஒருபா ஒருபஃது, சரவண சற்குரு மாலை. இந்நூல்களுடன் கொலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கியதீபம், அவிரோத உந்தியார் ஒழிவிலொடுக்கம் ஆகிய நூல்களுக்கும் உரை எழுதியுள்ளார்.

**சிதம்பரசாமிகள் சி.** (19-நூ)

**ஊர்:** பழமலை.

இவர் குழந்தைவேல் சாமி என்ற பெரியவரிடத்தில் அருளுரை பெற்றவர். பல சிவாலயத் திருப்பணிகளைச் செய்தவர்.

**நூல்:** தண்டபாணிப் பதிகம், தோத்திரமாலை.

**சிதம்பரசாமி பாண்டியர்** (20-நூ)

**நூல்:** அருளானந்த அடிகளின் நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிதம்பரஞ் செட்டியார்** (       )

**ஊர்:** தேவிகோட்டை.

**தந்தை:** மாயாண்டி செட்டியார்.

**நூல்;** திருக்காராயிற் புராணத்தின் உரைநடை.

**சிதம்பரஞ் செட்டியார் அ** (20-நூ)

**ஊர்:** திருச்சி மாவட்டம், பூவாளூர்.

இவர் திரிசிரபுரம் தியாகராசச் செட்டியாரிடம் கல்வி கற்றவர்.

நூல்: விநாயகர் பதிற்றுப்பத்தந்தாதி.

**சிதம்பரஞ் செட்டியார் அரு** (19-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம், சண்முகநாதபுரம்.

தந்தை: அருணாசலம் செட்டியார்; தனவணிகர் மரபினர்.

நூல்: குன்றககுடி முருகர் காவடிச் சிந்து.

**சிதம்பர ஞான தேசிகர்** (19--நூ)

ஊர்: பாண்டியநாட்டு தேவிகோட்டை.

இவர் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையால் பாராட்டப் பெற்றவர். இளம் பருவத்திலேயே துறவு பூண்டு அறிவு நூல்களைக் கற்று உண்மை ஞானம் கைவரப்பெற்றவர். கோயிலூர் மடத்தின் தலைவராக அமர்ந்து மெய்யன்பர் பலருக்கு அறிவு நூல்களைக் கற்பித்துள்ளார். கைவல்ய நவநீதம், பகவத்கீதை முதலியவற்றிக்குஉரை எழுதிய பொன்னம்பல அடிகளின் ஆசிரியர் என்பது குறிப்பிடத்தக்கது.

இவர் கோயிலூர் கொற்றவாளீசர் கோயில் திருப்பணியையும் செய்து முடித்தவர். திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையைக் கொண்டு 'கோயிலூர் புராணம்' பாடச் செய்தார்.

நூல்; இலட்சணவிருத்தி, (தமிழாக்கம்).

**சிதம்பர ஞானியார்** (    )

நூல்: சிதம்பர ஞானியார் பாட்டு.

இந்நூல் ஞானத்தின் வரலாற்றினை 300 செய்யுட்களில் எடுத்துரைப்பது.

**சிதம்பரத் தம்பிரான்** (    )

நூல்: சிவஞானத் தெளிவு, உபதேசத்திரயம்.

**சிதம்பரத் தொண்டைமான் (19-நூ)**

ஊர்: திருநெல்வேலி. இவர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமானின் பாட்டனார்.

நூல்: நெல்லைப்பள்ளு.

**சிதம்பர தத்துவ லிங்கையன் ( )**

நூல்: பொய்யாமொழி ஈசர் குறவஞ்சி.

**சிதம்பரதாண்டவ மதுரகவிராயர் ( )**

ஊர்: பாண்டி நாட்டில் கருவை நல்லூர். சைவ வேளாளர்.

நூல்: மாந்தைப்பள்ளு

**சிதம்பர தாண்டவராய முதலியார் ( )**

ஊர்: கொங்குநாட்டுத் தொண்டாமுத்தூர்.

நூல்: பட்டீஸ்வரக்கோவை, திருப்பேரூர் சிதையறுத்தான் வண்ணம், பேரூர் மரகதமஞ்சரி.

**சிதம்பர நாத கவி ( )**

வே. பெ: சிதம்பரநாதபூபதி.

நூல்: சங்கரவிலாசம், திருமழபாடி புராணம்.

முதலாவது நூல் சிவபெருமானுயை திருவிளையாடல்களைக் கூறுவது.

**சிதம்பரநாத கவிராயர் அ ( )**

ஊர்: பாண்டியநாட்டில் கல்லிடை நகர்.

தந்தை: அம்பலவாணன் கவிராசர்.

நூல்: அதிவீரராமபாண்டியர் இயற்றிய கூர்மபுராணத்திற்கு உரை.

## சிதம்பரநாத கவிராயன் ( )

ஊர்: கல்லிடைக்குறிச்சி.

நூல்: திருநெல்லை மும்மணிக்கோவை, திருவுருமாமாலை பதிற்றுப் பத்தந்தாதி.

இவற்றுள் முதல் நூல் திருநெல்வேலியில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான்மீது பாடப்பட்டது.

## சிதம்பரநாதச் செட்டியார் அ. (20-நூ)

ஊர்: தஞ்சை மாவட்டம், கும்பகோணம்.

தந்தை: அமிர்தலிங்கம் செட்டியார்.

பிறப்பு: 3-4-1907

இவர் அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் எம். ஏ. பட்டம் பெற்றுத் தமிழ்ச் செய்யுள் வரலாறு குறித்து ஆராய்ச்சி செய்து முதன் முதலாக டாக்டர் பட்டம் பெற்றார். சென்னைப்பல்கலைக் கழக டாக்டர் போர் தங்கப்பதக்கத்தையும் தருமை ஆதீனத்தாரால் செந்தமிழ்க் காவலர் என்ற சிறப்புப் பட்டத்தையும் பெற்றார்.

அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைப் பேராசிரியராகவும் சிலதிங்கள் தற்காலிகத் துணைவேந்தராகவும் பணியாற்றினார். அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றியபோது இலங்கை, மலாயா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்குச் சென்று தமிழ் மொழி, இலக்கியம், பண்பாடு ஆகியவை பற்றிச் சொற்பொழிவாற்றித் திரும்பினார். இலண்டன் மாநகருக்குச் சென்று பிரித்தானியப் பல்கலைக் கழகங்களின் நடைமுறைகளை நேரிற் கண்டறிந்து வந்தார்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆங்கிலம்-தமிழ் அகராதிக்குழுவிற்குத் தலைவராக விளங்கினார். செந்தமிழ்ச் செல்வி இதழாசிரியர் குழுவிற்கும் தலைவராக இருந்தார். சென்னை மேல் சட்ட மன்ற உறுப்பினராகவும் திகழ்ந்தார். சென்னை மாநிலத் தமிழாசிரியர் கழகத் தலைவராக இருந்து தமிழுக்கும் தமிழாசிரியர்களுக்கும் ஆக்கமான பணிகளைப் புரிந்தார்.

பின்னர் மதுரைக்குச் சென்று மதுரைத் தியாகராசர் கல்லூரி முதல்வராகப் பதவியேற்றுத் தம். இறுதிவரைத் தொண்டாற்றினர்.

நூல்: முன்பனிக்காலம், உழைப்பால் உயர்ந்த ஒருவர், இளங் கோவின் இன்கவி, தமிழோசை.

**சிதம்பரநாத சாமிகள்** (20-நூ)

நூல்: க. தியாகராச தேசிகர் இயற்றிய பெற்றான் சாம்பான் சரித்திரக் கீர்த்தனை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிதம்பரநாதத் தம்பிரான்** (19--நூ)

ஊர்: பாண்டி நாட்டில் வள்ளிமாநகரம். தந்தை: சுப்பிரமணிய பிள்ளை; தாய் முத்தம்மாள். பிறந்த ஆண்டு 1849.

இவர் திருவாவடுதுறை ஆதினம் பதினான்காவது பட்டம் சுப்பிரமணிய தேசிகரிடம் தீட்சை பெற்றார்.

நூல்: திரியுகங்கண்ட தேவிமாலை.

**சிதம்பரநாத தேசிகர் வை.** (17--நூ)

ஊர்: திருவாரூர்.

தந்தை; இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகர்.

இவர் தம் தந்தையாரிடம் தமிழ், வடமொழி நூல்களையும் ஆகம நூல்களையும் கற்றார்.

நூல்: தசகாரியம், வில்லிவாக்கப் புராணம், பதி பசு பாச பனுவல் உரை, சிவஞானசித்தியார் பொழிப்புரை.

இலக்கண விருத்தி எனும் நூலினையும் இவர் எழுதினர் என்பர்,

## சிதம்பரநாத முதலியார் (20--நூ)

ஊர்; கழாங்காடு.

நூல்: சி. திருமலையப்ப முதலியார் இயற்றிய சிவத்தோத்திரந் தாதி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சிதம்பரநாத முதலியார் அ. ( )

ஊர்: கொடுவூர்.

நூல்: அரசிலியந்தாதி (1929).

இந்நூல் அரசிலி என்னும் சைவத்தலத்தின் பெருமையைக் கூறுவது.

## சிதம்பரநாத முதலியார் டி. கே. (20-நூ)

வே. பெ: ரஸிகமணி,

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் தென்காசியையடுத்த களங்காடு.

தந்தை: தீர்த்தாரப்ப முதலியார்.

வாழ்ந்த காலம்: 1882--1954.

இவர் ஸ்ரீவில்லிபுத்தூரில் தாய்மாமன் வீட்டில் பிறந்தவர். திருக்குற்றாலத்தில் நெடுங் காலம் வாழ்ந்தவர்.

இவர் 1905இல் பி. ஏ. பட்டம் பெற்று சட்டப் பயிற்சிக்குப் பின்னர் 1915இல் திருநெல்வேலியில் வழக்கறிஞராகத் தொழில் செய்யத் தொடங்கினார். வழக்கறிஞர் தொழிலில் பெரிதும் இவர் உள்ளம் ஈடுபட்டதாகத் தெரியவில்லை. சில காலம் இந்து சமய அறக் கட்டளையின் ஆணையாளராகப் பணியாற்றினார். 1927 முதல் 1930 வரை சென்னை மேலவையில் ஜஸ்டிஸ் கட்சி உறுப்பினராகப் பொறுப்பேற்றிருந்தார்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் தமிழின் சுவையையும் பெருமையையும் கற்றோர்க்கும் பொதுமக்கட்கும்

உணர்த்திக் காட்டியவர்களில் இவரும் குறிப்பிடத் தக்கவர் ஆவர். தமிழின் இனிமையை எந்தச் சூழலில் எந்த வட்டாரத்தில் உணர்த்திக் காட்டினால் அதன் தகைமை உயருமோ அங்கே உணர்த்திக் காட்டினார். அந்த வட்டாரத்தின் ஒத்துழைப்பையும் ஆற்றலையும் பெறக்கூடிய திறமையும், சொல் வன்மையும் அவரிடத்தில் இருந்தன. கல்வியாலும் செல்வத்தாலும் அதிகாரத்தாலும் மேம்பட்டிருந்ததோர் இவர்தம் இலக்கியச் சாதனைகட்குப் பக்க பலமாக நின்றனர். அரசியல் அறிஞர்கள், பத்திரிகை ஆசிரியர்கள், அரசியல் அலுவலர்கள் ஆணையாளர்கள் முதலியோர்களுக்கும் தமிழின் சுவையையும், அதன் உயர்ந்த தரத்தையும் உணர்த்திக்காட்டியதன் மூலம் தமிழ்க் கவிதை மாடத்தின் அருகே உயர்ந்த வட்டாரத்து மக்களைக் கொண்டுவந்தார். தமிழை உயர்த்துவதற்குரிய ஆர்வம் வெறும் சொல்லளவில் நில்லாமல் செயலளவில் பலசாதனைகள் உருவாக அது வழிவகுத்தது. அரிய கவிதைகளைக் கண்டறிவது எப்படி? அவற்றைச் சுவைப்பது எப்படி? என்பதனை ஓர் இயக்கம் போலத் தமிழ் நாட்டில் நடத்திக் காட்டினார்.

கம்பன் ஒரு மகாகவி என்பதை அழுத்தம் திருத்தமாகப் பொதுமக்களுக்கு எடுத்துரைத்தார். பொதுமக்கள் சுவைக்கக் கூடிய எளிய முறையில் கம்பஇராமாயணத்தைத் தொடர்ந்து கல்கியில் 'கம்பர் தரும் காட்சி' என்ற தலைப்பில் எழுதிவந்தார். அது மூன்று பகுதிகளாகப் பின்னர் புத்தக உருவம் பெற்றது. கம்பர் திறத்தை விளக்கிக் கம்பர் யார்? என்ற நூல் ஒன்று எழுதினார். இதயஒலி என்ற புத்தகத்தில் இவருடைய கட்டுரைகள் பல அடங்கியுள்ளன.

இவருடைய சில கொள்கைகள் தமிழின் இலக்கணக் கட்டுக்கோப்பையும் அடிப்படையையும் தகர்த்துவிடுமோ என்று கற்றறிந்த பண்டிதர்கள் அஞ்சினர். தமிழ் இலக்கணப் புணர்ச்சி விதிகளைச் செல்லுபடிஆகாதன என இவர் கடுமையாகச் சாடியது சிறிதும் பொருத்த முடையதன்று.

## சிதம்பரநாத முனிவர்-1 (18-நூ)

இவர் தருமபுரத்தில் பத்தாவது ஞானசிரியராக இருந்த சிவஞான தேசிகரிடம் அருளுரை பெற்றவர். சீர்காழித் திருத்தோணியப்பர் கோவில் காரியங்களை நடத்தும் கட்டளைத் தம்பிரான் பொறுப்பும் இவரிடம் ஒப்படைக்கப்பட்டது. இந் நாளில் இவருடன் பயின்றவரும் இராம நாடகம் பாடியவருமாகிய அருணைசலக் கவிராயர் சீர்காழிக்கு வந்தார். இவரால் ஓரளவுபாடி முடிக்கப்பட்டிருந்த சீர்காழிப் பள்ளு என்னும் நூல் அவரால் ஓரிரவில் பாடிமுடிக்கப் பெற்றது என்பர்.

நூல்: திருப்பதிகமாலை, நித்தியகன்மநெறி, சீர்காழிப்பள்ளு.

திருப்பதிகமாலை சிவஞானதேசிகர் மேற்பாடப் பெற்றது. நித்தியகன்மநெறி, திருக்கடவூர்க் கட்டளைத் தம்பிரான் பஞ்சாக்கர முனிவர் கேட்டுக் கொண்டதற்கேற்பப் பாடப்பட்டது

## சிதம்பரநாத முனிவர்-2 ( )

தந்தை: மணிகண்ட முதலியார்.

நூல்: சிவப்பிரகாசம் உரை.

## சிதம்பரநாத முனிவர்-3 (இலக்கணம்) (18-நூ)

இவர் மாதவச் சிவஞான யோகிகளின் மாணவர். இலக்கணத்தில் வல்லவராதலின் இலக்கணம் சிதம்பரநாத முனிவர் என்று பாராட்டப் பெற்றவர்.

நூல்: திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்.

இப்புராணம் பாயிரம் உட்பட 19 சருக்கங்களையுடையது.

## சிதம்பரநாதன் ( )

ஊர்: அதிவீரராமன் பட்டினம், வணிகர் குலம்.

இவர் துறைசை மாணிக்கக் கூத்தரின் மாணுக்கர்.

நூல்: சித்திரபுத்திரர் அம்மானை.

இந்நூல் ஆன்மாக்கள் செய்யும் புண்ணிய பாவங்களை இயமனுக்கு உணர்த்தும் சித்திரபுத்திரனின் வரலாற்றைக் கூறுவது.

**சிதம்பரநாதன்—க (20-நூ)**

ஊர்: ஈழநாட்டில் தொல்புரம்.

இவர் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றியவர். வழக்கறிஞராகவும் இருந்துள்ளார்,

நூல்: கதிரைமலைக்கந்தன் பிள்ளைத் தமிழ், தனிப்பாடல்கள்.

**சிதம்பரபாரதி (19-நூ)**

வே. பெ: சின்னச்சாமி பாரதியார். சிதம்பர அடிகள்.

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம், சிவகங்கைப் பகுதி மழவாபுரி.

தந்தை: சுப்பிரமணிய பாரதியார்; அந்தணர்.

இவர் தம் தந்தையாரிடமும் பிற அறிஞர்களிடமும் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழையும் கற்ருர். அவ்வப் போது இராமநாதபுரம், புதுக்கோட்டை, சிவகங்கை ஆகிய இடங்களுக்குச் சென்று தமது புலமையைக் காட்டிப் பரிசு பெற்று வந்தார். யமகம், சிலேடை, சந்தம் அமைத்துப் பாடுவதில் வல்லவர்.

நூல்: பெரியபுராணக் கீர்த்தனை, உருக்குமணி கல்யாணம், குன்றக்குடிக்குமரன் வண்ணம், துருவசரித்திரம், குசேல சரித்திரம், அம்பரீடசரித்திரம், ஞானனத்தப் பேரின்பக் கீர்த்தனை, மதுரை மீனுட்சியம்மை பல்சந்தக் கும்மி, திருக்கோகர்ணம் பிரகதாம்பாள் பலசந்தக்கும்மி, மயூரகிரிநாதர் வண்ணம்,

**சிதம்பரபுன்னைவனநாத முதலியார்** (20-நூ).

**நூல்:** வ. ஞா. கணேச பண்டிதர் இயற்றிய நன்னெறித் தாலாட்டு என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிதம்பரஞ் செட்டியார் வெ. ஆ சி.மா.** (20-நூ)

வாழ்ந்த காலம் 1873--1948.

நூல்: தில்லைக் கற்பகவிநாயகர் தோத்திரம் எழுபது, தில்லைக் கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி

**சிதம்பரம் பிள்ளை-1** ( )

ஊர்: சேலம்.

தந்தை: விசுவலிங்கம்பிள்ளை.

நூல்: கைலாசநாதர் சதகம் (1878).

இந்நூல் உலகியல் அறங்களைத் தொகுத்துக் கூறுவது. ஒவ்வொரு செய்யுளும் கங்கைபுனைஈசனே மங்கை மகிழ் நேசனே கைலயங்கிரிவாசனே என்னும் முடிபினையுடையது.

**சிதம்பரம்பிள்ளை-2** (19-நூ)

ஊர்: யாழ்ப்ப ணம் தெல்லிப்பிழை.

நூல்: ஆரோக்கியநாயகர் என்பவர் இயற்றிய தேம்பாவணிக் கீர்த்தனை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிதம்பரம் பிள்ளை-3** (19-நூ)

ஊர்: மதுரை.

இவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையின் தந்தை யார் ஆவர். 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தவர்.

இவர் கல்வி கேள்விகளில் சிறந்து செய்யுள் இயற்றும் திறம் மிக்கவராக விளங்கினார். இவரது முன்னோர் மீனாட்சி கோவில் திருப்பணியில் ஈடுபட்டிருந்தனர். இவரும் இப்பணியில் சிறிது காலம் ஈடுபட்டுப் பின்னர் பல ஊர்களுக்கும் சென்று கல்வி கற்பிக்கும் பணியை மேற் கொண்டார்.

சோழநாட்டில் முதலில் எண்ணெய்க் கிராமம் என்ற சிற்றூரில் தமிழ் கற்பித்தார். பின்னர் அதவத்தூர் என்ற சிற்றூரில் பள்ளி அமைத்துப் பாடம் கற்பித்தார். இங்கு இருக்கும்போதுதான் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை 1815ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 15 ஆம் நாள் இவருக்கு மகனாகப் பிறந்தார். சிதம்பரம்பிள்ளை மற்ற மாணவர்களுடன் தம் மகனையும் இருக்கச் செய்து பல தமிழ் நூல்களைக் கற்பித்தார். மாணவர்களுக்குப் பாடஞ் சொல்லும் பயிற்சியையும் அளித்தார். வாக்குப் பலிதம் உடையவராகக் கருதப்பட்ட இவர் 1830 ஆம் ஆண்டில் காலமானார்.

நூல்: தனிப்பாடல்கள்.

**சிதம்பரம் பிள்ளை-4 ( )**

ஊர்: மாவடி.

நூல்: காந்திமதியம்மை பேரில் ஆசிரிய விருத்தம் (1883); கௌரி கல்யாணம் (1883); சுந்தரசுவாமிகள் அஷ்டபந்தனக் கவி (1895).

**சிதம்பரம்பிள்ளை ச. ( )**

ஊர்: ஊற்றுக்குழி.

தந்தை: சங்கரமூர்த்திப்பிள்ளை.

இவர் ஊற்றுக்குழிச் சமஸ்தானப் புலவராக விளங்கியவர்.

நூல்: உசிதசூடாமணி; இது ஒரு நிகண்டு நூல்.

**சிதம்பரம்பிள்ளை-ப. (20-நூ)**

ஊர்: நாகர்கோவில்.

தந்தை பழநியாபிள்ளை; வேளாளர்.

இவர் ஆங்கிலம், மலையாளம் ஆகிய மொழிகளில் வல்லவர்; பி. ஏ., பி. எல்., பட்டம் பெற்று வழக்கறிஞராக இருந்தார். திருவிதாங்கூர் சட்டசபை உறுப்பினராக இருந்து எதிர்க்கட்சித் தலைவராகப் பணியாற்றினர். நாகர்கோவில் நகராண்மைக் கழகத்தலைவராகவும் தொண்டாற்றியுள்ளார். திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தொடங்கப் பெற்ற காலம் முதல் அதில் பங்கு பெற்றிருந்தார். அதன் தலைவராகப் பத்தாண்டுகள் செயலாற்றினர். சொற்பொழிவாற்றும் திறம் படைத்தவர்.

நூல்: கோவில் நுழைவுரிமை, திராவிடன் ஆரியன்.

முதல் நூல் கோவில் நுழைவுச் சட்டம் வருவதற்கு முன்பே எழுதப்பெற்றது தீண்டத் தகாதவர்கள் என்று கருதப் பெற்றவர்களும் கோவிலினுள்ளே செல்ல வேண்டும் என வலியுறுத்துவது. மேலும் ரிபோல்ட் என்னும் ஆங்கிலக் கிழமை இதழில் பல கட்டுரைகள் எழுதினர். தமிழ் இதழ்களிலும் கட்டுரைகள் வரைந்துள்ளார்.

**சிதம்பரம்பிள்ளை-மு (19--நூ)**

வே. பெ: உவில்லியம் நெவின்சு.

ஊர்: யாழ்ப்பாணத்தில் சங்கவேலி.

தந்தை: முத்துக்குமாரபிள்ளை; வேளாளர்.

இவர் இலக்கணம் இலக்கியம் தருக்கம் கணிதம் முதலியவற்றில் வல்லவர். யாழ்ப்பாணம் நடுத்தரக் கல்லூரியில் நீண்ட காலம் ஆசிரியராகத் தொண்டாற்றியுள்ளார். தமிழிலும் ஆங்கிலத்திலும் செய்யுள் இயற்றும் திறமுடையவர் தமிழ்ச் சந்தங்களைத் தழுவி ஆங்கிலச் செய்யுட்களை இயற்றிப்

பொது மேடைகளில் படித்துக் காட்டியுள்ளார். தமிழ் எண்களில் ஒரு புதுவகையான ஆராய்ச்சியை நடத்திஞர்.

ஒன்பது என்ற சொல்லுக்குப் பதிலாக அதே பொருளுடைய தொண்டு என்னும் சொல்லைப் பயன்படுத்த விரும்பிஞர். ஆனல் இவரது ஆராய்ச்சி தமிழ் இலக்கண வரம்புக்குள் அமையாமையால் நிலைபெறவில்லை.

நூல்; ஆங்கிலத் தமிழ் அகரவரிசை, இலக்கிய சங்கிரகம், தமிழ் வியாகரணம், நியாய இலக்கணம், தனிப்பாடல்.

ஆங்கிலத் தமிழ் அகர வரிசை என்னும் நூல் ஆங்கிலச் சொற்களுக்கு ஒப்பான தமிழ்ச் சொற்களை ஆராய்ந்து, கற்பவர்கள் நன்கு உணரும் வகையில் அகரவரிசையில் தொகுக்கப் பட்டது.

இலக்கிய சங்கிரகம் என்னும் நூல் பாரதம், இராமாயணம் முதலிய நூல்களில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சில செய்யுட்களின் திரட்டாகும்.

தமிழ் வியாகரணம்: இலக்கண விதிகள் சில ஒன்று படுத்தப்பட்டதாகும். நியாய இலக்கணம்: ஆங்கிலத் தருக்க சாதிகள் சிலவற்றைத் தமிழாக்கம் செய்து பாட்டும் உரையுமாகச் செய்யப்பட்டது.

**சிதம்பரம்பிள்ளை வ. உ. (20-நூ)**

வே. பெ: கப்பலோட்டிய தமிழன்.

ஊர்: திருநெல்வேலி மாவட்டம், ஒட்டப்பிடாரம்.

தந்தை: உலகநாதபிள்ளை; தாய்: பரமாயி அம்மாள்.

ஒட்டப் பிடாரத்தில் இருந்து இவர் தம் தந்தையார் தொழில் காரணமாக எட்டயபுரம் சென்று குடியேறிஞர். அங்கு அமைந்திருந்த சிற்றரசில் தொடர்பு கொண்டு வழக்கறிஞராகப் பணியாற்றிஞர். சிதம்பரஞரோடு உடன் பிறந்தவர்கள் அறுவர். இவர் முதலில் திருநெல்வேலி இந்து உயர்நிலைப்

பள்ளியிலும் தூத்துக்குடி சேவியர் உயர்நிலைப் பள்ளியிலும் பயின்று தேர்ச்சி யடைந்தார். கல்லூரியில் மேற்படிப்பைத் தொடராமல் சில காலம் ஒட்டப்பிடாரம் தாலுகா அலுவல கத்தில் எழுத்தராகப் பணிமேற்கொண்டார். அச்சிறுபணி இவர்தம் உள்ள விரிவுக்கு ஏற்றதாக இல்லாமையால் அக் கடமையில் பற்றின்றி அதனைவிடுத்துத் திருச்சிக்கு வந்து மேற்படிப்பையும் பின்னர்ச் சட்டக்கல்வியையும் பயின்று வழக் கறிஞராகப் பணியாற்றும் தகுதி பெற்றார். 1900ஆம் ஆண்டு முதல் தூத்துக்குடியில் வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டு திறம்படச் செயல்படத் தொடங்கினர், மிகக் குறுகிய காலத் தில் தம் தொழில் திறமையைப் புலப்படுத்திக் காட்டினார். இவர் தந்தையும் இதே தொழில் செய்தமையால், இத்தொழி லில் இவர் நாட்டம் சென்றது. தந்தையும் மைந்தரும் வெவ் வேறு கட்சிக்காக அறமன்றத்தில் வழக்காடிய செய்தியும் இவரைப் பற்றி எழுதப்பெறும் வரலாறுகளில் காணப்பெறு கின்றது.

ஐந்து ஆண்டுகள் வெற்றிகரமாகத் தொழில் நடத்திய இவர் விடுதலைக் கிளர்ச்சிகளில் மெல்ல ஈடுபட்டார். கட்டப் பொம்மனை ஆங்கிலேயர்கள் சிறைப்படுத்தி அவ்வப்போது கொடுமைப்படுத்திய நிகழ்ச்சிகள் இவர்தம் சுதந்திர உணர் வை மேலும் மேலும் கிளர்ந்து எழச் செய்தன. தொழிலுக் காகச் சென்னை வந்த இவர் சுதந்திர இயக்கத்தில் ஈடுபட்டிரு ந்த பலரோடு கலந்து உறவாடினார். நாட்டுக்காகத் தம் நலன் அனைத்தையும் துறந்து சுதந்திர இயக்கத்தில் உறுதி யுடன் பங்கு கொண்டார். சென்னையில் கவிஞர் சுப்பிரமணிய பாரதியின் சந்திப்பு, அவரது குறிக்கோளை ஊக்குவிப்பதாக இருந்தது. வடநாட்டுத்தலைவர்களில் சுதந்திர இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்த திலகர், லாலாலஜபதிராய் போன் றோரைச் சந்தித்தார். திலகரின் அன்பிற்கும் நம்பிக்கைக்கும் உரியவரானார். வங்காளப் பிரச்சனைபற்றி 1905இல் எழுந்த கிளர்ச்சியில் பங்கு கொள்ள நேரடியாகச் சென்றார். இவரும் இவர்தம் தமிழ் நாட்டு நண்பர்களும் தீவிர வாதிகளையே ஆதரித்தனர். மிதவாதிகளை வன்மையுடன் எதிர்த்து நின்ற னர். சிதம்பரம்பிள்ளையின் நாட்டுப்பற்று அவர்தம் எல்லா முயற்சிகளிலும் ஊடுருவி நின்றது. தூத்துக்குடி கடல்

வாணிகத்துறையில் ஆங்கிலேயர்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தைப் பெற்றிருந்தனர். இந்தக் கடல் வாணிகத்திலும் கப்பல்போக்கு வரத்து முதலியவற்றிலும் பாரத நாட்டுமக்களும் உரிய இடத்தையும் பங்கையும் பெற வேண்டும் என்ற அவாவைத் தீவிரமாகப் பல இன்னல்களுக்கிடையே ஏற்படுத்தினார். அடிமைப்பட்டுக் கிடந்த பாரத நாட்டில் சுதந்திர உணர்வைக் கிளர்ந்து எழச் செய்த வகையில் அரசியல் முறையிலும் கப்பல் வாணிகம், தன்னாட்டுப் பொருள்களைப் பயன்படுத்தத் தூண்டும் சுதேசி இயக்கம் ஆகியவற்றில் தீவிரமாகப் பங்குகொண்டதன் மூலம், பொருளாதாரத் துறையிலும் வெள்ளையர்ஆதிக்கத்தை நேருக்கு நேர் எதிர்க்க வேண்டியவரானார். திருநெல்வேலி வட்டாரத்தில் வாழ்ந்த கிறித்தவர்கள் மறைமுகமாக ஆங்கிலேயர் பிடியில் சிக்கி இருந்ததால் இவர்தம் முயற்சிகளும செயலாற்றலும் இந்துக்களையும் கிறித்தவர் அல்லாதாரையும் சார்ந்தே எழுச்சி பெற வேண்டியன ஆயின.

சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் என்ற கப்பல் போக்குவரத்து நிறுவனத்தைத் தொடங்கினார். அதற்குப் பல பங்குகளைச் சேர்த்தார் கப்பல் வாங்கிக் கடல் போக்குவரத்து நிறுவனத்தை ஏற்படுத்தினார். பம்பாயில் நாட்டுப் பற்றுடைய செல்வர்களின் உதவி யோடு இரண்டு கப்பல்களை வாங்கினார். பம்பாயிலிருந்து இரண்டு கப்பல்களும் தூத்துக்குடி வந்து சேர்ந்ததும், அவற்றோடு சில வாடகைக் கப்பல்களையும் இணைத்துக் கொண்டார். இந்நிறுவனம் உருவாக உதவியவர்களில் பாண்டித்துரைத் தேவரும் குறிப்பிடத்தக்கவர் ஓர் இலட்சம் ரூபாய் அவரால் இந்நிறுவனத்தின் மூலதனப் பங்காகக் கொடுக்கப் பெற்றது. இதனை ஒரு வாணிக முயற்சியாக மட்டும் கருதுவதற்கில்லை. துணிகரமான தேசீய முயற்சியாகவும் எல்லாவலகையிலும் வலிமை பெற்றிருந்த வெள்ளையரை எதிர்த்து நிற்கும் போராட்ட முனைப்பாகவும் கருதிப் பார்க்க வேண்டும். இந்தப் பின்னணியோடு பார்க்கும்போதுதான் சிதம்பரனார் வலிமை மிக்க ஆற்றல்களை எதிர்த்து மீள முடியாமல் அந்தச் சுதந்திர வேள்வியில் எவ்வாறு தன்னை ஆகுதியாகப் பெய்து தியாக உருவம் பெற்றிருக்கின்றார் என்பது தெரியும்.

திருநெல்வேலி மாவட்டத்தில் ஆட்சியாளராக இருந்த ஆஷ் என்னும் வெள்ளையர், பொதுக்கூட்டங்களில் சிதம்பரனார் கலந்து கொள்ள முடியாமல் தடுத்தும், திருநெல்வேலியில் இருந்து வெளியேறுமாறு ஆணையிட்டும் பலப்பல இன்னல் களுக்கு ஆளாக்கினார். ஆஷ் துரையின் பிடிவாதமும் தன் முனைப் பும் சிதம்பரனாரின் தனிப்பட்ட வாழ்வை அழிக்கமுடிந்ததே தவிர விடுதலை வேட்கையை மேலும் மேலும் கிளர்ந்து எழச் செய்யவே உதவின. முதலில் நாற்பதாண்டுகள் சிறைதண்டனை பெற்ற இவருக்காக இவர்தம் மனைவியார் செய்துகொண்ட வேண்டுகோள் உயர் அற மன்றத்தால் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப் பெற்றது வெள்ளையர்களில் நல்லவர் பலர் இவர் தம் முயற்சியை அநுதாப நோக்கோடு சீர்தூக்கி உய்திகள் காண முற்பட்டனர். அன்றைய சூழ்நிலையில் விடுதலை இயக் கத்தை அடக்கி அழிக்கும் வெள்ளை அதிகாரிகளின் பண்பும் அறமும் செல்லுபடியாகவில்லை. ஆறு ஆண்டுகள் கொடிய சிறைத் தண்டனையை அநுபவித்த சிதம்பரனார் மீண்டார். மீண்டபின் வறுமையின் இறுக்கமானபிடிக்குள் அகப்பட்டுத் தடுமாறிய இவருக்குத் திலகர் போன்ற நாட்டுப்பற்றுடைய பெருமக்கள் அவ்வப்போது பொருள் உதவி செய்தனர். பிற ருடைய உதவிபெற்று வாழ்வை நடத்தும் இழிவைஅவர் வேண்டாததால் மீண்டும் வழக்கறிஞர் தொழிலைத் தொட ங்க விரும்பினார். அதற்கு அப்பொழுது உயர் அறமன்ற நடுவர்களுள் ஒருவராகிய வாலஸ் என்னும் வெள்ளையர் மிக வும் உதவினார் அவருடைய உதவியை நினைந்து தன் மகன் ஒருவனுக்கு வாலேஸ்வரன் என்ற பெயரையும் அவர் சூட்டினார்.

நூல்: வலிமைக்கு மார்க்கம், சாந்திக்கு மார்க்கம், அகமே புறம் மெய்யறம், மெய்யறிவு.,

இவற்றுள் முதல் மூன்றும் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்களாகும். மெய்யறம் என்பது இவர்தம் வாழ்வைப் பற்றியது. மெய்யறிவு என்பது செய்யுட்களாலாகியது.

இவர் பழைய ஏடுகளைத் நோக்கித் தமிழ் நூற்களைப் பதிப் பிக்கும் பணியிலும் ஈடுபட்டார். இன்னிலை, திருக்குறள் மணக் குடவர் உரையையும் பதிப்பித்தார். தொல்காப்பியம் பொரு ளதிகாரத்தையும் எழுத்ததிகாரத்தையும் ஏட்டுப் பிரதிகளை

ஒப்புநோக்கியும் ஏடு பார்த்து எழுதி வைந்திருந்தோரின் கையெழுத்துப் படிகளை ஒப்பு நோக்கியும், பதிப்பிக்கும் முயற்சியைத் தொடங்கினார். இம் முயற்சிக்குப் பேராசியரியர் வையாபுரிப்பிள்ளையின் உதவியும் கிடைத்தது தொல்காப்பியத்தை அச்சியற்றிப் பார்த்தபின் (1936) இறந்தார். கோவையில் இருந்து வெளிவந்த விவேகபாநு இதழிலும் பினாங்கில் இருந்து வெளிவந்த இந்துநேசன் இதழிலும் இவர் அவ்வப்போது எழுதிய கட்டுரைகளும் குறிப்பிடத் தக்கன.

## சிதம்பரம்பிள்ளை வி. ( )

ஊர்: சேலம்.

தந்தை: விசுவலிங்கம்.

நூல்: கைலாசநாதர் சதகம்.

## சிதம்பரம்பிள்ளை-வே (20-நூ)

ஊர்: யாழ்ப்பாணம் பருத்தித்துறை மேலைப்புலோலி.

இவர் தம்முடைய பதின்மூன்றும் வயதிலேயே கண்பார்வையினை இழந்தார். இருப்பினும் தம்முடைய விடாமுயற்சியாலும் கல்வி வேட்கையாலும் பிற நூல்களைப் படிக்கும்போது கேட்டும், பிறருக்கு மற்றவர்கள் பாடஞ்சொல்லுவதனைக் கேட்டும்தமிழிற் புலமையும் பாக்கள் இயற்றும் வன்மையும் பெற்றார்.

நூல்: கந்தபுராணம் சூரபன்மன் வதைப்படலம் உரை

கந்தபுராணத்தில் தெய்வயானை திருமணப்படலத்திற்கும் திருவானைக்காப்புராணத்திற்கும் இவர் உரை எழுதியுள்ளார் எனறும் கூறுவர்.

உரை எழுதுவதற்கு நல்லூர்ப் பொன்னம்பலம் பிள்ளையின் உரைக்குறிப்பும் க. முருகேசம்பிள்ளையின் அரும்பதக் குறிப்பும் சுப்பிரமணிய சாத்திரிகளின் குறிப்பும் துணைபுரிந்தன என்பர்.

**சிதம்பரம்பிள்ளை வே. ஆ** (19-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் பருத்தித்துறை.

தந்தை: ஆறுமுகம்பிள்ளை.

இவர் ஆங்கிலமும் தமிழும் நன்கு கற்றவர்.

நூல்: பழமொழித் தீபிகை

**சிதம்பர முதலியார்—1** ( )

நூல்: ஞானவெண்பா.

இந்நூல் சைவ சமய தத்துவங்களைக் கூறுவது.

**சிதம்பர முதலியார்—2** (18-நூ)

ஊர்: தண்டலம்.

நூல்: இராமானுசம்பிள்ளையென்பவர் இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சிதம்பர முதலியார்—சி** (20-நூ)

ஊர்: சென்னை சிந்தாதிரிப்பேட்டை.

நூல்: அப்பாவுப்புலவர் என்பவர் இயற்றிய நெஞ்சறிவுறுத்தல் என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிதம்பர முனிவர்—1** ( )

ஊர்: காஞ்சிபுரம்

இவர் மாதவச் சிவஞானமுனிவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தார்.

நூல்: க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழ், காஞ்சி காமாட்சியம்மை பிள்ளைத் தமிழ்.

**சிதம்பர முனிவர்-2 ( )**

ஊர்: மதுரை.

நூல்: சிதம்பர புராணம்.

இந்நூல் தில்லைநடராசர் கோவிலின் சிறப்பினையுரைப்பது. உமாபதி சிவம் பாடிய கோயிற் புராணம் என்னும் நூல் இருக்கவும் வேருக நான் இதனையியற்றியுள்ளேன் என்று கூறுகின்ருர்.

**சிதம்பரரேவண சித்தர் ( )**

பார்க்க: இரேவணசித்தர்.

**சிதம்பரவாணர் ( )**

நூல்: கைலாசநாதர் சதகம்.

**சிதம்பரனூர் (20-நூ)**

வே. பெ: துடிசைகிழார்.

ஊர்: கோயம்புத்தூர்க் கருகிலுள்ள துடியலூர்.

தந்தை: அர்த்தநாரீசுர முதலியார்.

இவர் தமிழ்நாட்டில் ஊர்காவற்றுறையிற் பணி ஏற்றுச் சர்க்கிள் இன்ஸ்பெக்டராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர் அரசாங்க அலுவல்களிலும் பிற துறைகளிலும் பணியாற்றித் தமிழ் வளர்ச்சியில் கருத்தூன்றியவர்களில் இவரும் குறிப்பிடத் தககவர். சைவ சமயத்தின்பால் அழுத்தமான பற்றுடைய வராய் இருந்தமையால் அச்சமயச் சாபுடைய பல நூல்களை ஆக்கி உதவினர். சைவ சமய வினு விடையென இரு பகுதிகளாகச் சைவ சமயத்தை அறிய விரும்பு வார்க்கு அறிமுக நூல்கள் எழுதினர்.

நூல்: சைவ சமய வினுவிடை, தமிழ் வினுவிடை, சிவபூசை விளக்கம், உருத்திராக்க விளக்கம், விபூதி விளக்கம், திருமந்திரம்

குறிப்புரை, ஆனைந்து, சேரர் வரலாறு, தமிழ்ச் சங்கங்களின் வரலாறு, துடிசைப்புராணம்.

## சிதம்பரனூர் (சாமி) (20-ஆம்)

ஊர்: சோழநாட்டில் திருப்பனந்தாள் அருகில் உள்ள சிறுகடம்பூர்.

தந்தை: சாமிநாத உடையார். தாய: கமலம்பாள்.

வாழ்ந்த காலம்: 1900-1961.

சிறுவயதில் மாயூரம் அருகில் உள்ள கடகம் என்னும் ஊரில் கல்வி கற்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டதும், பள்ளியை விட்டுத் தாமாகவே தமிழ் நூல்களைக் கற்கத் தொடங்கினுர். சிறுவயதில் தாயை இழந்தார். சிறுவயதில ஏற்பட்ட அறிஞர்களின் தொடர்பால் மதுரை சென்று தமிழ்ச் சங்கத்தில் கல்வி கற்கத் தொடங்கினுர். அங்குத் தலைமையாசிரியராக இருந்த திருநாராயண ஐயங்கார் இவரின் ஆர்வத்தைக் கண்டு இவரை நன்னிலைக்குக் கொண்டு வந்தார். 1942இல் புலவர் தேர்வில் இரண்டாவதாகத் தேறினுர். பின்னர்க் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் ஆசிரியராக அமர்ந்தார். அதன் பின்னர் மாவட்டக் கழக உயர்நிலைப்பள்ளியில் வேலை பார்க்கத் தொடங்கி இராசாமடம், ஒரத்தநாடு, பட்டுக்கோட்டை, திருவாரூர், பாபநாசம் முதலிய இடங்களில் 17 ஆண்டுகள் பணி புரிந்தார். அறிவுக்கொடி என்னும் இதழை நடத்தி வந்தார். ஆசிரியத் தொழிலை விடுத்துத் தாமே நூல்களை எழுதி வெளியிடத் தொடங்கினுர். தமிழ்ப் பாடப் புத்தகங்கள் பலவற்றை வெளியிட்டார். சிலகாலம் ஈரோட்டில் பகுத்தறிவு இதழாசிரியர் கூட்டத்தில் ஒருவராக இருந்து பணிபுரிந்தார். பின்பு முன்னேற்றம் அச்சகத்தை ஏற்படுத்தினுர். 1930இல் சிவகாமு அம்மையைக் கலப்புமணம் செய்தார். 1948இல சென்னைக்கு வந்து லோகோபகாரியில் ஆசிரியாரகச் சில திங்கள் பணி செயதாா. விடுதலையில் ஓராண்டு ஆசிரியராகப் பணிபுரிந்தார் தமிழ் எழுத்தாளர் சங்கத்தில் தொடக்கம் முதல் இறுதிவரை துணைத்தலைவராய் இருந்தார். சென்னை மகா சபையின் மூன்று அறங்காவலர்களில் இவர் ஒருவர். சமாதான இயக்கம், சீன

இந்திய நட்புறவுக் கழகம், சோவியத் நண்பர்கள் சங்கம் முதலிய அமைப்புகளிற் பணியாற்றினர். 17-1-61இல் காலமானர்.

நூல்: பெண்மகள் பெருமை, பெரியார் வாழ்க்கை வரலாறு, உமர் கையம் கவிதை மொழிபெயர்ப்பு, புதிய தமிழகம், வள்ளலார் காட்டிய வழிகள், வள்ளுவர் காட்டிய வைதீகம், கம்பன், கண்ட தமிழகம், தொல்காப்பியத் தமிழர், பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும், எட்டுத் தொகையும் தமிழர் பண்பாடும் பதினென்கீழ்க் கணக்கும் தமிழர் வாழ்வும், சிலப்பதிகாரத் தமிழகம், மணிமேகலை காட்டும் மனித வாழ்வு, முன்சீப் வேத நாயகம் பிள்ளை, இலக்கியச்சோலை, பழந்தமிழர் அரசியல், நாலடியார் உரை, தேவாரத் திருமொழிகள், ஆழ்வார்கள் அருள்மொழி, வள்ளுவர் தமிழகம், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், அனந்த விளக்கு, சிதம்பனுர் சீர்திருத்தப்பாடல் கள்.

## சிதானந்த சாமி ( )

நூல்: சிதாநந்த கீதை.

## சிந்துக்களஞ்சியப் புலவர் ( )

இவர் சிந்துப் பாடல்களைக் கணக்கின்றியும் விரைவகாவும் பாடியமையால் இப் பெயரைப் பெற்ருர். நாடெங்கும் சென்று ஆங்காங்குள்ள புலவர்களைக் கண்டு அவர்களோடு சிந்துப்பாடல்கள் பாடி வெற்றி கொண்டு, அவர்களிடம் இருந்து திறைப்பொருளைப் பெற்று வாழ்ந்தார். வசைகவி யாண்டர்ன் கவிராயர் என்பர் இவரை அடக்கினுர் என்பது தெரிகிறது.

## சிந்நயச் செட்டியார் வீர லெ (18-நூ)

ஊர்; தேவிகோட்டை.

நூல்: சு. சாமிநாத தேசிகர் இயற்றிய சந்தன சாரிய புராண சங்கிரகத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிந்நய நாயர் ( )**

ஊர்: திருவிசைநல்லூர்.

புராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவதில் வல்லவர்.

நூல்: திருக்கூவப்புராணம்-உரைநடை (1910).

துறைமங்கலம் சிவப்பிரகாச சாமிகள் இயற்றியதிருக் கூவப்புராணம் என்னும் நூலினை உரைநடையில் இயற்றி யுள்ளார்.

**சிந்மராய பரத பண்டிதர்** (19-நூ)

ஊர்: மணப்பாடு.

தந்தை: அன்னப்பூப் பண்டிதர்; கிறித்தவர்.
நூல்: பரதகுல பாண்டியர் பழமை.

**சியாமா சாத்திரிகள்** (19--நூ)

வே. பெ: வேங்கடசுப்பிரமணியம், சியாமாகிருட்டிணன்.

ஊர்: திருவாரூர்.

வாழ்ந்த காலம்: 26-4-1762—6-2-1827.

இவர் கர்நாடக இசையில் புகழ் மிக்கவர். இளமையிலே யே வடமொழியிலும் தெலுங்கிலும் தேர்வு பெற்றார். முதலில் தம் மாமாவிடத்திலும், பின்னர் சங்கீத சாமிகள் என்ற துறவி யிடத்திலும் இசைப்பயிற்சி பெற்றார். அதன் பின்னர் ஆதியப்பையர் என்பவரிடம் இசை பயின்று சிறந்த புலமை பெற்றார்.

இவர் வடமொழி தெலுங்கு மொழிகளில் 300 சிறந்த உருப்படிகள் இயற்றியுள்ளார். தமிழிலும் உருப்படிகள் இயற்றியுள்ளார்: இவர் அடிக்கடி திருவையாற்றுக்குச் சென்று தாம் இயற்றிய உருப்படிகளைத் தியாகராச சுவாமி களிடம் பாடிக் காட்டுவர் என்பர்.

சாத்திரிகளின் முன்னோர்கள் காஞ்சிபுரத்தில் பங்காரு காமாட்சி அம்மனுக்குப் பூசை செய்தவர்கள். இவர்கள் அங்கு ஏற்பட்ட அரசியல் குழப்பத்தால் காமாட்சியம்மனின் விக்கிரகத்தோடு 1556ஆம் ஆண்டில் காஞ்சீபுரத்தை விட்டுப் புறப்பட்டு ஊர் ஊராகச் சென்று இறுதியில் 1781ஆம் ஆண்டில் தஞ்சாவூரில் வந்து நிலைத்தனர். தஞ்சை மன்னனின் ஆதரவில் பங்காரு காமாட்சிக்கு ஆலயமும் கட்டப்பட்டது இம்மரபில் வந்தமையால் தான் இவருடைய பாடல்களில் பெரும்பான்மையானவை காமாட்சியம்மனைப் பற்றியதாக அமைந்துள்ளன. திருவையாறு திருவானைக்கா முதலிய தலங்களில் உள்ள அம்மனையும் பாடியுள்ளார்.

நூல்: மதுரை மீனாட்சியம்மன் பேரில் நவரத்தினமாலிகை.

**சிராமலைக்கோவை ஆசிரியர் (18-நூ)**

ஊர்; சோழநாட்டில் திரிசரகிரி.

நூல்: சிராமலைக்கோவை.

**சிலேடைப்புலி பிச்சுவையர் ( )**

பார்க்க: பிச்சுவையர்.

**சிவக்கொழுந்து கவிராயர் ( )**

நூல்: மும்மணிக்கோவை.

**சிவக்கொழுந்து தேசிகர்–1 ( )**

நூல்: சிவநெறிப் பிரகாசம்.

இந்நூல் 216 செய்யுட்களைக் கொண்டது.

**சிவக்கொழுந்து தேசிகர்–2 (19-நூ)**

வே. பெ: சிவக்கொழுந்துப் பண்டாரம்.

ஊர்: கும்பகோணத்திற்கருகிலுள்ள கொட்டையூர்.

இவர் தஞ்சாவூரையாண்ட மகாராட்டிர மன்னரான சரபோஜி அரசரின் (1798-1832) அவைக்களப் புலவர். மாணவர்கட்குத் தமிழ் கற்பிப்பதையும், நூல்கள் இயற்று வதையும் தம் பணியாக்க் கொண்டார். இவர் பல தனிப் பாடல்களைப் பாடியுள்ளார். அவை எளிய நடையில் அமைந் தவை. சொல்லணிகளும், தற்குறிப்பேற்றமும் முரணும் இப் பாட்டுக்களில் மிகுந்திருக்கும். ஒரு பொருளில் பல பெயர் களைக் கொண்டு பல செய்திகளை அறிய அமைப்பதில் இவர் வல்லவர். இவரது புலமை நலம் எங்கும் பரவியிருந்தமையால் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாரால் நிறுவப்பட்ட கல்விச் சங்கத்தில் தாண்டவராயருடன் துணையாசிரியராகப் பணியாற் றினர். அப்போது திருவாசகத்தைச் செம்மையான பதிப்பாக வெளியிட்டார்.

நூல்: கோடீசுரக்கோவை, கோடீசுரஉலா (கொட்டையூர் உலா) திருவிடைமருதூர்ப் புராணம், ஆச்சாள்புரத்தல புராணம், பெருவுடையார் உலா, சரபேந்திரபூபாலகுறவஞ்சி நாடகம், சரபேந்திரர் வைத்திய முறைகள், சரபேந்திரர் சன்னிரோக சிகிச்சைகள், சரபேந்திரர் வைத்தியம்.

## சிவகடாட்சம்மாள் ( )

இவர் சிதம்பரத்தில் மௌனசாமிகளிடத்திலும் அம் மடத்தில் உள்ள அடியார்களிடத்திலும் பேரன்பு கொண்டவர். அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியாரிடத்தில் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுச் சிறந்த புலமை பெற்றவர்.

நூல்: தனிப்பாடல்கள்.

## சிவகாமசுந்தர தீட்சிதர் (20-நூ)

ஊர்; சிதம்பரம்; தில்லைவாழந்தண மரபினர்,

நூல்; கிருஷ்ணமூர்த்தி ஐயர் இயற்றிய மகாபாரத சதகத்திற்கு வழங்கிய நல்லுரை.

**சிவகாமி நாதப்பிள்ளை ( )**

ஊர்: எட்டையபுரம்.

தந்தை: ஆண்டியப்பபிள்ளை. இவர் ஐந்திலக்கணங்களையும் நன்கு கற்றுத் தேர்ந்த படியினால் ஐந்திலக்கணசாகரம் என்று எல்லோராலும் பாராட்டப்பட்டவர்.

நூல்: கழுகாசலக் கோவை.

**சிவகுருநாத ஆச்சாரி-செ. ( )**

ஊர்: சென்னை.

தந்தை: சடகோபக் கவிராயர்.

நூல்: வீரபாரதியார் இய்ற்றிய திருப்போரூர் சிவசுப்பிரமணியக் கடவுள் இரட்டை ஆசிரியப் பதிகத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவகுருநாத ஐயர் (19-நூ)**

ஊர்: கும்பகோணம்.

நூல்: இராமசாமி முதலியார்-சுப்பு. என்பவர் இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவகுருநாதப்பிள்ளை-ந. (20-நூ)**

ஊர்: பாண்டியநாட்டு எட்டையபுரம்.

தந்தை: நமச்சிவாயப்பிள்ளை; தாய்: மகாலட்சுமிஅம்மாள்.

வாழ்ந்தகாலம்: 1873--1953.

இவர் நாற்பதாண்டுகளுக்குமேல் சைவசித்தாந்தம் கற்பிக்கும் பணியை மேற் கொண்டிருந்தார். சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார் சித்தாந்தப் பேராசிரியர் என்னும் பட்டத்

தை வழங்கினார். இவர் 1892ஆம் ஆண்டில் தூத்துக்குடியில் சைவப்பிரகாசம் பிரஸ் என்ற அச்சகத்தைத் தொடங்கி 1944 ஆம் ஆண்டு வரை அதன் செயலாளராகப் பணியாற்றினார். 1899 ஆம் ஆண்டு முதல் தூத்துக்குடி சைவசித்தாந்த சபையில் உறுப்பினராக இருந்தார். சைவத்தைப் பரப்ப வேண்டும் என்ற ஆர்வத்தால் சைவப் பேரவை உள்ள இடங்கள் அனைத்திற்கும் சென்று சைவசித்தாந்த விரிவுரைகள் பல நிகழ்த்தியுள்ளார்.

நூல்: சிவஞானசித்தியார் ஆராய்ச்சி. (1949).

**சிவசங்கர தீட்சிதர்** (     )

நூல்: சிவசங்கர தீட்சிதர் கீர்த்தனம்.

இதில் சபாநாதரைத் துதிக்கும் கீர்த்தனைகளும் இராக தாள அமைப்புக்களும் உள்ளன.

**சிவசங்கர தேசிகர்** (19--நூ)

நூல்: குமாரசாமி முதலியார் இயற்றியதிருப்பத்தூர் புராணத்திற்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சிவசங்கரப் பண்டிதர் கா. சி.** (     )

வே. பெ: பழநி அமுதகவி.

ஊர்: சென்னை, திருவேட்டீசுவரன்பேட்டை.

நூல்: சிவமலை சந்நிதி முறை என்னும் சுப்பிரமணிய பசனை பாடிய உதவிப்பொறியாளர் ஏ. எஸ். விசுவநாதையரின் வரலாற்றுப் பாடல்கள். அது 43 பாடல்களைக் கொண்டது.

**சிவசங்கரப் பாண்டியர் ஜி. ஆர்** (     )

நூல்: ஆர்யதர்ம போதினி.

இதில் நூறு சுலோகங்கள் கிரந்த லிபியில் கொடுக்கப் பட்டு அவற்றிற்குத் தமிழ் உரை விளக்கமும் தரப்பெற்றிருக் கிறது.

**சிவசண்முகம் பிள்ளை** (20-நூ)

ஊர்: ஏகை.

நூல்: தண்டிராஜா நாடகம் (1916), சம்பூர்ண மகாபாரதம் (1928)

**சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரியார்** ( )

பார்க்க: ஞானியார் அடிகள்.

**சிவசம்புலவர்** (19--நூ)

ஊர் யாழ்ப்பாணம் உடுப்பிட்டி.

தந்தை: அருளம்பல முதலியார்.

வாழ்ந்த காலம்: 1830-1910.

இவர் நல்லூர்ச் சரவணமுக்துப் புலவர், நல்லூர்சம்பந்தப் புலவர் ஆகியோரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்ருர். கவிபாடும் திறமை பற்றி ஆறுமுக நாவலர் இவரு க்குப் புலவர் என்னும் பட்டத்தினை வழங்கினர். ஈழநாட்டில் மிகுதியான பிரபந்தங்களைப் பாடியவர் இவரே என்பர்.

நூல்: மறைசையந்தாதி--உரை, யாப்பருங்கலக் காரிகை--உரை, கந்தபுராணம் வள்ளியம்மை திருமணப் படலம்--உரை, மயில்வாகனவம்சவைபவம், பாற்கர சேதுபதி கல்லாடக் கலித் துறை, பாற்கரசேதுபதி நான்மணிமாலை, பாற்கர சேதுபதி இரட்டைமணிமாலை, பாண்டித்துரைத் தேவர் நான்மணிமாலை, கந்தவனநாதர் பதிகம், கந்தவனநாதர் ஆசிரிய விருத்தம், பருத்தித்துறை விநாயகர் ஊஞ்சல் எச்சரிக்கை, பராக்கு, மங்களம், வல்லிபுரநாதர் கலிவெண்பா, செந்தில் யமகவந்தாதி திருவேரக அந்தாதி, எட்டுக்குடிப் பிரபந்தம், புலோலிநான் மணிமாலை, திருச்செந்திற்றிருவந்தாதி.

**சிவசாமி சேர்வை-பி. (          )**

நூல்: தருமைசுப்பிரமணிய தேசிகர்மீது பதிகம்.

**சிவசாமி முதலியார் (          )**

நூல்: அரிச்சந்திர நாடகம்.

**சிவசிதம்பர உபாத்தியாயர் க. ரா. (          )**

நூல்: பொன்னுத்துரை ஐயர் இயற்றிய தையல்நாயகி அந்தாதி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவசிதம்பர ஐயர் கா.** (20-நூ)

ஊர்: யாழ்பாணம் காரைத்தீவு.
தந்தை: கார்த்திகேயப்புலவர்.

நூல்: கந்தபுராணம்--மகேந்திர காண்ட உரை.

**சிவசிதம்பரம் பிள்ளை அ** (20-நூ)

ஊர்: சதுரங்கப்பட்டினம்.
தந்தை: அருணாசலம்பிள்ளை.

இவர் தமிழ், மலையாளம், வடமொழி ஆகிய மும்மொழிகளையும் கற்றவர்.

நூல்: ஒன்பானென்பது என்னும் அறநூல் திரட்டு.

**சிவசிதம்பரம் பிள்ளை க ரா** (19-நூ)

நூல்: நாராயணசாமி நாயுடு, பெ. என்பவர் இயற்றிய மனுச்சோழச் சக்கரவர்த்தி வாசகப்பா என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவசிதம்பர முதலியார் க. ரா.** (19--நூ)

ஊர்: திருப்பாதிரிப்புலியூர். வேளாளர்.

இவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

நூல்: கறையேறவிட்ட நகர்ப்புராணம்.

பதிற்றுப்பத்தந்தாதி, திருக்காட்சிநாதர் தரிசனம்பிகையார் சம்மேளன மாலை.

**சிவசுந்தரசாமிகள் ( )**

நூல்: சிவானந்த போதகம்.

**சிவசுப்பிரமணிய ஐயர் நா. ( )**

நூல்: சுப்பிரமணியர் தோத்திர விருத்தம்.

இந்நூல் முருகப் பெருமானின் சிறப்புக்களைக் கூறுவது; முருகன் திருப்பெயர்கள் பலவும் பொதிந்துள்ளன.

**சிவசுப்பிரமணியக் கவிராயர் (19--நூ)**

ஊர்: திருநெல்வேலி மாவட்டம், கல்லிடைக்குறிச்சி.

தந்தை: சாமிநாதக் கவிராயர்.

நூல்: நாமதீப நிகண்டு, பூவைப் புராணம்.

முதல் நூல் வெண்பா யாப்பில் அமைந்தது. பெயர்ச்சொற்களுக்குப் பொருளை விளக்குவது. ஏறத்தாழ 1200 சொற்களுக்குப் பொருள் கூறுவது. இந்நிகண்டுதான் மற்ற நிகண்டுகளைக் காட்டிலும் காலத்தால் பிற்பட்டது. இந்நிகண்டினைத் திருவையாபுரிப் பிள்ளை பதிப்பித்துள்ளார்.

**சிவசுப்பிரமணியக் குருக்கள் (19-நூ)**

ஊர்: யாழ்ப்பாணம் வட்டுக்கோட்டை.

இவர் உவில்லியம் நெவின்சு, சிதம்பரம் பிள்ளை ஆகியோரிடம் நன்னூல் முதலிய நூற்களைப் பாடம் கேட்டார்.

நூல்: இலங்கை மான்மியம்.

**சிவசுப்பிரமணிய சிவாச்சாரியார்** (20--நூ)

ஊர்: ஈழநாட்டில் வட்டுக்கோட்டை.

தந்தை: நாகராசக் குருக்கள்.

நூல்: ஏகாதசிப் புராணம், கந்தசட்டிப் புராணம், திருத்தென் கோயிற் புராணம்.

**சிவசுப்பிரமணிய தேசிகர்** (19-நூ)

ஊர்: மதுரை.

இவர் விருத்தாசலத்தில் வாழ்ந்த வேளைச்சேரி சிவசிதம்பர தேசிகருடைய அருளுரை பெற்றவர்.

நூல்: சுபோதசிகாமணி. கழநிவாசல் திருவருணாசல தேசிகர் பிள்ளைத் தமிழ், அழகாபுரி உமையவள் ஆனந்தப்பிள்ளைத் தமிழ், மரகத முத்துமாணிக்கத் திருப்புகழ், இராயூபுரம் பதிற்றுப்பத்தந்தாதி, சிவசிதம்பரதேசிகர் சரணப்பதிகம்.

**சிவசுப்பிரமணியப்பிள்ளை** (20-நூ)

ஊர்: நெல்லையப்பர் கோவில்.

நூல்: வ. நா. காமாட்சிநாதன் செட்டியார் பாடியுள்ளபாடல் களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவசூரியப்பிள்ளை** (20-நூ)

ஊர்: ஆனைமலை.

தந்தை: ஆதிநாராயணப்பிள்ளை, தாய்: நாச்சியார் அம்மாள்.

இவர் ஆனைமலைத் தலைமைக் கணக்கு முத்துவீரப்பப் பிள்ளையிடம் பல நூல்களைப் பாடங் கேட்டார். போடிப்பட்டி அருணாசல அடிகளிடம் வேதாந்த நூல்களை ஓதியுணர்ந்தார். பள்ளி இறுதி வகுப்புத் தேர்ச்சியும் பெற்றார். மாவட்டக்

கழக உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றினர். ஆனைமலையில் உள்ள கூத்தப்பிரான் திருக்கோயில் முதலான கோயில்களில் திருப்பணிகளை நிறைவேற்றியுள்ளார்.

நூல்: பழநித்திருவருட்பாசுர அந்தாதி, மசானி அம்மன் தோத்திரம், மாரியம்மன் தோத்திரம், பிள்ளையார் பதிகம், உண்ணுமலை அந்தாதி, சோமேசர் சௌந்தரிய நாயகி பதிகம், நரசிம்ம தண்டபாணி பதிகம், சபாநாதர் பதிகம், வேனீஸ் வணிக வெண்பா, அன்னிபெசன்ட் அம்மை, காந்தியடிகள்அந்தாதி.

**சிவஞான அடிகள் (19-நூ)**

ஊர்: திருக்கழுக்குன்றம்.

நூல்: வி. சுந்தரமுதலியார் இயற்றிய சிவநாம சங்கீர்த்தனம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவஞான ஐயர் (20-நூ)**

ஊர்: காஞ்சிபுரம்.

நூல்; இராமாநந்த சாமிகள் இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்,

**சிவஞானக் கருணலயன் ( )**

நூல்: போப்பு வேதவிகற்பம்.

**சிவஞானக் குருக்கள் (19--நூ)**

ஊர்: திருசிரபுரம்.

இவர் பள்ளிக்கூடத்தில் கணக்காயராகத் தொழில் புரிந்தவர்.

நூல்: சுப்பிரமணியர் அட்டகம், கொரட்டிச் சண்முகன் பதிகம்.

**சிவஞானச் செட்டியார் பெ. மு. (20--நூ)**

ஊர்: சென்னை.

தந்தை: முருகப்பச் செட்டியார்.

நூல்: வரசித்தி விநாயாகர் தோத்திரம். இசைப்பாடல்.

**சிவஞான சாமிகள் (        )**

இவர் தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்தவர்.

நூல்: தக்ஷிணாமூர்த்தி பதிகம் (1882). இந்நூல் தக்ஷிணாமூர்த்தி யாய் அறமுரைக்கும் அண்ணலைப் புகழும் பக்திப் பாமாலை.

**சிவஞானத் திருந்தளி சிதம்பரசாமி (20-நூ)**

ஊர்: சிதம்பரம்.

நூல்: சோழவந்தான் அரசஞ் சண்முகனார் எழுதிய தொல்காப்பியப் பாயிர விருத்திக்கு மறுப்பு.

**சிவஞான தேசிகர்-1 (        )**

ஊர்: கொடுமுடி.

நூல்: சேலூர்ப் புராணம்.

**சிவஞான தேசிகர்-2 (18-நூ)**

இவர் தருமபுரம் ஆதீனம் பத்தாவது பட்டத்து ஞானாசிரியர் என்று கருதுவர்.

இவர் விண்வெளியாகச் சென்ற சித்தர் ஒருவரை வரவழைத்துச் சித்துக்களும் செருக்குத் தருவன என்பதையுணர்த்தி அவர்மீது அருள் செலுத்தினார். தந்தைக்கு வீட்டுலகம் அடைவிக்க விரும்பிய புதல்வன் ஒருவனின் விழைவை நிறைவு செய்தார் என்றும் கூறுப. இவர் தென்னாட்டிலும் வடநாட்டிலும் பல சிவப்பதிகளுக்குச் சென்று ஆங்காங்குள்ள இறைவனைத் துதித்துப் பல அருட்பாக்களைப் பாடியுள்ளார்.

நூல்: செல்வமுத்துக்குமாரசாமி திருவருட்பா, ஆபத்துத் தாரண மாலை, சிதம்பரநாதர் பதிகம் தட்சிணாமூர்த்தித் திருவருட்பா,

அசபாநடனப் பதிகம், துண்டி இராச கணபதி திருவருட்பா விசுவநாதர் திருவருட்பா, அன்னபூரணி திருவருட்பா, கேதாரநாதர் திருவருட்பா,கேதார கௌரியம்மை திருவருட்பா விருத்தாகாளேசுவரர் திருவருட்பா, காசி காலபைரவர் திருவருட்பா, கதிர்காம வேலவர் திருவருட்பா, பாகீரதி அம்மை திருவருட்பா, தாரகப்பத்து சைவ சிரார்த்தவிதி.

**சிவஞானப்பரன் பிள்ளை ( )**

நூல்: திருக்குடந்தைப் புராணம்.

**சிவஞானபாலைய சாமிகள்** (17-நூ)

துறைமங்கலம் சிவபிரகாச சுவாமிகள் இவரை ஆசிரியராகக் கொண்டு பல பிரபந்தங்கள் பாடியுள்ளார்.

நூல்: துதி பஞ்சகம், பாராயணத் திருவருட்பா.

**சிவஞானப்பிள்ளை** (20-நூ)

ஊர்: இராமநாதபுரம்.

நூல்: ரா. சண்முகக் கவிராயரின் பாடல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவஞானப்பிள்ளை-சே.** (20-நூ)

ஊர்: சென்னை மயிலாப்பூர்.

தந்தை: வெள்ளியம்பல உபாத்தியாயர்.

வாழ்ந்த காலம்: 1871--1933.

இவர் தமது தந்தையார் இடத்திலும் திருமயிலைவித்துவான் சண்முகம்பிள்ளையிடத்திலும் காஞ்சீபுரம் மகாவித்துவான் இராமசாமி நாயுடுவிடத்திலும் பாடம் கேட்டார்.

நூல்: கந்தபுராணச் சுருக்கம், தேவார ஆசிரியர் வரலாறு, பெரிய புராணக் கதைகள்.

**சிவஞானம்பிள்ளை-பொ.** (19-நூ)

ஊர்; பாண்டியநாட்டு ஆற்றங்கரைச் சமத்தானம்.

நூல்: ஊடற் கலிவெண்பா.

**சிவஞான முனிவர்** (18-நூ)

வே. பெ: முக்காள லிங்கர்.

சி. பெ: சிவஞானயோகி, சிவஞான சுவாமி, மாதவச் செல்வர், முனிவர்.

ஊர்: தென்பாண்டி நாட்டில் விக்கிரசிங்கபுரம்.

தந்தை: ஆநந்தக் கூத்தர்; தாய்; மயிலம்மை, சைவ வேளாளர்

சைவமும் தமிழும் தளபுக்கத் தொண்டாற்றிய சிவஞான முனிவருக்கு இளமையில் பெற்றோர் இட்ட பெயர் முக்காள லிங்கர். சுசீந்திரம் ஈசான மடத்தில் வேலப்ப தேசிகரிடம் சமய அறிவும், தமிழ்ப்புலமையும் பெற்றார். தீக்கைப் பெயராகச் சிவஞானம் என்ற பெயர் சூட்டப் பெற்றார். தமிழ் இலக்கண நூல்களுக்கும் சைவ சமய சாத்திரங்களுக்கும் சிறந்த உரைகண்ட இவரைத் தமிழறிஞர் கா. சுப்பிரமணியபிள்ளை உரைமன்னர் என்று பாராட்டியுள்ளார். தமிழகமெங்கும் பயணம் செய்து சைவ சமயத்தைப் பரப்பினார். திருவாவடுதுறையிலும், காஞ்சிநகரிலும் தங்கியிருந்தபோது பல உரைகளையும் மறுப்பு நூல்களையும் இயற்றினார். இவ்விரு இடங்களிலும் இவர்பால் கற்ற மாணவர்கள் பலர். இவர்களில் திருத்தணிகைக் கச்சியப்ப முனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

வடமொழி தென்மொழி ஆகிய இருமொழிப் புலமை பெற்ற சிவஞானமுனிவர் இருமொழிக்குமுள்ள வேறுபாடுகளை நன்கு அறிந்தவர். இருமொழி இலக்கணங்களையும் ஒப்பிட்டுநோக்கி வடமொழி இலக்கணத்தில் இல்லாத தமிழ் மொழிக்கேயுரிய இலக்கணக் கொள்கைகளைத் தெளிவுபடுத்தியுள்ளார். இவர்

தமிழ் இலக்கண உலகிற்குச் செய்த பெருந்தொண்டுகளில் சிறந்தது நன்னூலுக்கு விருத்தியுரை இயற்றியதேயாகும். தொல்காப்பியர் பாயிரம், முதற்சூத்திரம் ஆகியவற்றிற்குச் சிவஞானமுனிவர் விரிவான ஆராய்ச்சியுரைகள் இயற்றி யுள்ளார். இவர் தமக்கு மாறுபட்ட கருத்தை எவர் கூறினும் அஞ்சாது மறுக்கும் இயல்புடையவர். தொல்காப்பிய உரை யாசிரியர்களில் சேனாவரையரையும் இளம்பூரணரையும் பாராட்டுகின்ற இவர் நச்சினார்க்கினியரை "யாம்பிடித்ததே சாதிப்போம் என்னும் செருக்கால் மயங்குபவர்" என்று புறக் கணிக்கின்றார். இவர் உரை எழுதும்போது தமக்கு முன்பு வாழ்ந்த சான்றோர்களைப் பின்பற்றியும் உரையெழுதும் இயல் புடையவர். இலக்கணத்துள் ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் உள்ள வேறுபாடுகளை மிக விரிவாக ஆராய்ந் துள்ளார்.

நூல்: உரைநூல்: தொல்காப்பியச் சூத்திர விருத்தி, நன்னூல் விருத்தியுரை, சிவஞானபாடியம், சிவஞானபோதச் சிற்றுரை சிவஞான சித்தியார் (பக்கம்) பொழிப்புரை, கம்பராமாயண முதற்செய்யுள் சங்கோத்தரவிருத்தி.

மறுப்பு நூல்: இலக்கண விளக்கச் சூறாவளி, சித்தாந்த மரபு கண்டன கண்டனம், சிவசமவாதவுரை மறுப்பு, எடுத்து என்னும் சொல்லுக்கு இட்ட வயிரக்குப்பாயம். தொல்காப்பியச் சூத்திர விருத்தி: தொல்காப்பியப் பாயிரம், முதற்சூத்திரம் ஆகிய இரண்டிற்கும் எழுதப்பட்ட ஆராய்ச்சியுரை. இந்நூல் இவர் எழுப்பும் ஐயம், தடைவிடைகள் மறுக்கும் முறை ஆகியவை அனைவரும் மதிக்கத்தக்கன.

நன்னூல் விருத்தியுரை: சங்கர நமச்சிவாயர் நன்னூலுக்கு விருத்தி யுரை எழுதியுள்ளார். இவ்வுரையில் சில இடங்களில் விளக்க மில்லாமல் இருப்பதையறிந்து சிவஞானமுனிவர் திருத்தி விரிவாக்கி யுள்ளார்.

சிவஞானபாடியம்: மெய்கண்டார் இயற்றிய சிவஞான போதத் திற்கு வரையப்பட்ட பேருரையாகும். இது சைவசித்தாந்தப் பொருளைத் தமிழில் இனிது விளக்கவல்லது. சாமிகளின்

இலக்கணப் புலமை மாட்சியையும் ஆராய்ச்சித் திறனையும் இதில் காணலாம்.

சிவஞானசித்தியார் சுபக்கவுரை: இவ்வுரை அரிய ஆராய்ச்சிக் குறிப்புக்களைக் கொண்டது. சுபக்கக்காப்புச் செய்யுளில் மும் மதம் என்பதற்கு முனிவர் கூறியுள்ளஉரை மிகவும் சிறப் பானது.

கம்பராமாயண முதற் செய்யுள் சங்கோத்தர விருத்தி: கம்பரா மாயணத்தின் முதற் செய்யுளாகிய 'நாடியபொருள்' என்று தொடங்கும் செய்யுள், இலக்கணப்படி பல குற்றங்களை உடையது என்று கூறியுள்ளார், இப்பாடல் கம்பர் பாடல் அன்று என்றும் கூறியுள்ளார்.

இலக்கண விளக்கச் சூருவளி: திருவாரூர் வைத்தியநாத தேசிகர் எழுதிய இலக்கண விளக்கம் என்னும் நூலிலுள்ள குற்றங்களை எடுத்துக் காட்டி மறுப்பது. எழுத்ததிகாரம் சொல்லதிகாரத்தில் எண்பதுக்கு மேற்பட்ட இடங்களை எடுத்துக் கூறி மறுக்கின்றார். மிகைபடக் கூறல், குன்றக் கூறல், மாறுகொளக் கூறல் என்ற குற்றங்களையும் கூறி மறுக்கின்றார்.

சித்தாந்த மரபுக் கண்டனகண்டனம்: துறைசை ஆதினத்தார் ஒருவர் சித்தாந்த மரபு அல்லது மரபு அட்டவணை என்ற ஒரு நூலை இயற்றினார். இந்நூலுக்குக் கண்டன நூலாகத் தருமை ஆதீனத்தார் சித்தாந்த மரபு கண்டனம் என்ற நூலினை இயற்றினர். இக்கண்டன நூலில் மறுக்கத் தகாத சிலவற்றை எடுத்து மறுப்பதே சித்தாந்த மரபுக் கண்டன கண்டனம் ஆகும்.

சிவசமவாதவுரை மறுப்பு: திருவண்ணாமலை ஆதீனத்தைச் சேர்ந்த ஞானப்பிரகாசர் சிவஞான சித்தியாருக்கு எழுதிய உரைகளில் தமக்குப் பிழை என்று தோன்றியவற்றிற்கு எழுதப்பட்ட மறுப்பு நூல் எழுத்து என்னும் சொல்லுக்கு இட்ட வயிரக்குப் பாயம்.

என்னை இப்பவத்திற்கு சேராவகை எழுத்து என்னும் சிவஞான சித்தியார் திருவிருத்தத்துள் எடுத்து என்னும் சொல்லிற்கு

ஞானப்பிரகாசர் "சமனுந்தம் பாசக் கூட்டம் கூடாதவகை சின்மாத்திர சுத்த கேவலமாகச் சேடிக்கப்பண்ணி" என்று பொருள் கூறினர். இவ்வாறு பொருள் கூறுவது பொருந்தாது என்பதற்கு இந்நூலில் பல காரணங்கள் காட்டி மறுக்கப்பட்டுள்ளது.

**சிவஞானயோகிகள்** (20–நூ)

**ஊர்:** கோயம்புத்தூர் மாவட்டம் அவிநாசி.

**தந்தை:** இராமசாமிப்பிள்ளை. **தாய்:** கிருட்டிணம்மையார்.

தமிழும் ஆங்கிலமும் கற்ற இவர் உதகமண்டலத்தை அடுத்த வெல்லிங்கடன் என்னும் ஊரில் வணிகர் ஒருவரிடம் பணியாற்றி வந்தபொழுது சச்சிதாநந்த அடிகளின் தொடர்பு ஏற்பட்டது. அவரிடமிருந்து சித்த மருத்துவத்தினையும் யோகப் பயிற்சியினையும் கற்றார். பழநி மாம்பழக்கவிச் சிங்க நாவலரிடம் தமிழ் நூல்களைக் கற்றார். எட்டையபுரம் குருநாதக் கலைஞரிடம் வடமொழி நூல்களைப் பயின்றார். சைவசித்தாந்த சண்ட மாருதம் சோமசுந்தர நாயகரிடம் சைவசித்தாந்த நூல்களைக் கற்றுத் தெளிந்தார்.

விருதுநகரில் மருத்துவச்சாலை ஒன்றை நிறுவினர். அவ்வூர்ப் பழுதடைந்த சிவன் கோயிலினைப் பிடியரிசித் திட்டத்தின் வழி செப்பனிட்டுக் கட்டி முடித்தார். நாட்டுக் கோட்டைச் செட்டியார்களிடம் பொருள் திரட்டிப் பல திருபபணிகள் செய்தார். சுப்பிரமணிய பாரதியாருக்கு 'பாராதி' என்ற பட்டத்தினைக் கொடுத்தவார்- இவரே கோவில்பட்டியில் சித்தவைத்தியசாலை, திராவிடர் கழகம் ஆகிய இவற்றை அமைத்துத் தொண்டு செய்தார்.

**நூல்கள்:** செப்பறைவெண்பா, நெல்லையந்தாதியமாலை, திருச்செந்திற் சிலேடை வெண்பா, பதஞ்சலியோக சூத்திர மொழி பெயர்ப்பு, பிரமசூத்திர மொழிபெயர்ப்பு, தமிழ் மொழியும், சிவநெறியும், தமிழர் தொன்மை அகவல், வேதாகம உண்மை, கீதாமிர்த மஞ்சரி, சிவஞான விளக்கம், சுவேதாசுவதர உபநிடத மொழிபெயர்ப்பு, தமிழும் மருத்துவமும், தமிழக

வொழுக்கம் என்னும் மக்கட் சட்டம், கோயில்பட்டிப் புராணம் தேவோபாசனுதீபம், விபூதி உருத்திராக்க தாரண நிருபணம் சிவகலைப் புராணம்.

பதஞ்சலியோக சூத்திரம் 200 செய்யுட்களையுடையது.
பிரமசூத்திரம்-555 அடிகளையுடையது.
கோயிற்புராணம்-18 சருக்கங்களையுடையது.
தமிழகவொழுக்கம்-4000 பாடல்களையுடையது.

ஆபிரகாம் பண்டிதர் எழுதிய கருணாமிர்த சாகரம் என்னும் நூலிற்கு 250 அடிகளில் பாயிரம் வழங்கியுள்ளார்.

## சிவஞான வள்ளல்—1 (18-நூ)

ஊர்: சீர்காழி.

ஞாஞசிரியர்; சுயம்பிரகாச அடிகளார்; வள்ளலார் மடத்தினைச் சேர்ந்தவர்.

நூல்: சத்தியஞான போதம், பதிபசுபாச விளக்கம், சித்தாந்த தெரிசனம், உபதேசமாலை, சிவஞானப் பிரகாச வெண்பா, ஞானவிளக்கம், அத்துவிதக்கலிவெண்பா, அதிரகசியம், சிவாகமக்கச்சிமாலை, கர்ணாமிருதம், சுருதிசார விளக்கம், சிந்தனைவெண்பா, நிரயவந்தாதி, அறுபத்து நாலு சங்கை, தசவழங்குச் சிந்தனை, குருமரபு சிந்தனை அநுபவ சிந்திரிகை, திருமுகப் பாசுரம், அதிகவரம்பிள்ளை அட்டவணை, மரபு அட்டவணை.

## சிவஞான வள்ளல்—2. ( )

நூல்: கச்சிமாலை.

இந்நூல் காஞ்சிபுரம் ஏகாம்பரப் பெருமான்மீது பாடிய நூறு பாடல்களைக் கொண்டது.

## சிவஞானி கருணையன் ( )

நூல்: போப்புவேத விவகாரம்.

**சிவனுமுதலியார்** (20-நூ)

நூல்: சங்கரநயினார் கோயில் அலங்காரச் சிந்து என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சிவத்தியானனந்த மகரிஷி** (20-நூ)

ஊர்: சென்னை, இராயப்பேட்டை.

நூல்: வேதமொழி பெயர்ப்பு, சத்தநிபாதக் கோவை.

**சிவதாணுக் கவிராயர்** (20-நூ)

ஊர்: தாமரைக் குளம்.

நூல்: மாணிக்கவாசகம்பிள்ளை, தா. என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சிவப்பிரகாச அடிகள், கரபாத்திரம்** (20-நூ)

ஊர்: செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள திருப்போரூர்.

தந்தை: முத்துச்சாமிப் பத்தர். தாய்: செங்கமலத்தம்மாள்; வீரசைவர்.

வாழ்ந்த காலம்: 1874-1918.

இவர் காளத்தி ஆசிரியரிடமும், சுப்பராயப் பத்தரிடமும் கல்வி கற்றார். பின்னர் சென்னையில் வெற்றிலை வணிகத்தில் ஈடுபடுத்தப் பெற்றார். ஆனால் இவருடைய உள்ளம் வேதாந்த நூற்களைக் கற்றலிலும் யோகப் பயிற்சி செய்வதிலுமே சென்றது. சென்னையில் வாழ்ந்த சாது இரத்தினசெட்டியாரிடம் வேதாந்த நூற்களைக் கற்றார்; யோகப் பயிற்சியிலும் தேர்ச்சி பெற்றார். இந்நிலையில் இவருடைய தாயார் முதலியோர் இவர் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தனர். இவர் அதற்கு மறுத்துரைத்துத் துறவறத்தினை மேற்கொண்டார். இவர் தம்முடைய கைகளையே பாத்திரமாகக் கொண்டு வீடுகளில் பிச்சையேற்று உண்பார். அதனால் இவர் பெயரோடு

, கரபாத்திரம்'' என்ற சொல்லும் சேர்க்கப் பெறலாயிற்று. இவர் பல இடங்களிலும் அறிதுயில் என்னும் யோகத்தில் இருக்கலானார். இவரிடம் மக்கள் பெருந்திரளாக வந்து அன்பு கொள்ளலாயினர். அவர்கள் இவருக்கு வியாசர் பாடியில் இடம் வாங்கி இருக்கை அமைத்துக் கொடுத்தனர். சென்னையில் சூளையில் ஆநந்தாசிரம சாது மகா சங்கம் என்னும் சங்கம் ஒன்றினை அமைத்து அதன் வாயிலாகத் தொண்டு புரிந்து வந்தார். இவருடைய மாணவர்களில் குறிப்பிடத்தகுந்தவர் சிதம்பரத்தினைச் சேர்ந்த சகசாநந்தர் ஆவர்.

நூல்; மகாவாக்கிய இரகசியம், ஞானசாதக சகாயம், வேதாந்த மனன சிந்தாமணி. முதல் இரண்டு நூல்களும் வேதாந்தத்தைப் பற்றிக் கூறுவது. மூன்றாவது நூல் வேதாந்த வீட்டு நெறிக்குப் பயன்படும் பாடல்களை நூல்களிலிருந்து திரட்டிக் கொடுக்கப் பெற்றது.

## சிவப்பிரகாச உபாத்தியாயர் (20.- நூ)

வே. பெ: அத்துவிதபண்டிதர்.

ஊர்: இராமாநுசபுரம்.

தந்தை: தாண்டவராயர்.

பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம்பிள்ளையிடம் கல்வி கற்றார்.

நூல்: திருக்குடந்தைப் பதிற்றுப் பத்தந்தாதிக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## சிவப்பிரகாச ஐயர்–1 (20- நூ)

ஊர்: ஐயம்பேட்டை.

நூல்: எல்லப்ப முதலியார் பாடிய புராணத்திற்குச் சிறப்புப் பாயிரம்.

**சிவப்பிரகாச ஐயர்-2** (20-நூ)

ஊர்: காஞ்சிபுரம்.

நூல்: இராமநந்தசாமிகள் (நிச்சல) என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சிவப்பிரகாச ஐயர்-தி. வி.** ( )

புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரிடம் மாணவராகி இலக்கிய இலக்கணங்களைக் கற்றுத் தேர்ந்தார். தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார்.

நூல்; செகராவு முதலியார் என்பவர் இயற்றிய பொன்னுச்சாமி உலா என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சிவப்பிரகாசக் குருக்கள்-ந.** (20-நூ)

பிறப்பு: 1904.

நூல்: சமய தீக்ஷிதர் அநுட்டான விதி, வெள்ளி விழாப் புகழ்ச்சி மாலை. சமயதீக்ஷிதர் அநுட்டானவிதி என்னும் நூல் சைவ அநுட்டான விதியைக் கூறுவது- வெள்ளிவிழாப் புகழ்ச்சி மாலை என்னும் நூல் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் முடி சூட்டிய 25ஆம் ஆண்டில் பாடப்பெற்றது.

**சிவப்பிரகாசர் சிவன்** ( )

நூல்: அத்துவித வெண்பா.

இந்நூல் சிவ-அத்துவிதம் பற்றிய 410 வெண்பாக்களைக் கொண்டது.

**சிவப்பிரகாச சாமிகள் (துறைமங்கலம்)** (17-நூ)

ஊர்: காஞ்சிபுரம்.

தந்தை: குமாரசாமி தேசிகர்.

சிவப்பிரகாச சுவாமிகள் கற்பனைக் களஞ்சியம் எனப்புகழ் பெற்றவர்; வீரசைவ மரபினர். தந்தையார் இறந்தவுடன் தம்பியருடன் திருவண்ணாமலைக்குச் சென்றார். அங்கே இருந்த குரு தேவர் என்னும் பெரியாரிடம் தமிழ் பயின்றார். பின்னர்த் துறைமங்கலம் சென்று அண்ணாமலைரெட்டியார் கட்டித் தந்த மடத்தில் வாழ்ந்து வந்தார். இதனால் துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகள் என்று அழைக்கப்பெற்றார். பின்னர் இலக்கணப் பயிற்சி பெற விரும்பித் திருநெல்வேலி சென்று வெள்ளியம்பலத் தம்பிரானிடம் இலக்கணம் பயின்றார். வெள்ளியம்பலத் தம்பிரானை இகழ்ந்து கொண்டிருந்த போலிப்புலவர் ஒருவரைத் திருச்செந்தூரில் போட்டியில் வென்றார். பின்பு திருவெங்கை சென்று அங்கு அண்ணாமலை ரெட்டியார் கட்டிக் கொடுத்த மடத்தில் வாழ்ந்து வந்தார். அண்ணாமலை ரெட்டியாரோடு சிதம்பரம் சென்று கூத்தப்பிரானை வழிபட்டுப் பின் காஞ்சி நகரைநோக்கி வருகையில் வழியில் சாந்தலிங்க சுவாகமிளைக் கண்டார். மூவரும் பொம்மைய பாளையம் சென்று சிவஞான பாலைய தேசிகரைக் கண்டனர். அவரைத் தமது குருவாக ஏற்றுக் கொண்டு அவர் மீது சில பிரபந்தங்களைப் பாடினார். பின்பு காஞ்சிநகர் சென்று அங்குச் சிலகாலம் தங்கியபின்னர்த் தமது ஆசிரியரான சிவஞான பாலையை ஞானதேசிதரை வந்து கண்டு அவர்கட்டளைப்படி விருத்தாசலம் சென்று வழிபட்டார்; சிவஞானபாலைய சுவாமிகள் மறைந்தமை கேட்டு வருந்தினார். அடுத்து உடன் பிறந்தாரான கருணைப் பிரகாசரும் இறந்துவிட்டார். சிவப் பிரகாசர் திரு வெங்கை சென்று சிறிது காலம் தங்கினர். அதன்பின் நல்லாற்றூர் சென்று தமதுமுப்பத்திரண்டாம் ஆண்டில் மறைந்தார்.

நூல்: சோணசைலமாலை, திருச்செந்தூர் நிரோட்டக யமகவந்தாதி, திருவெங்கைக்கோவை, திருவெங்கைக் கலம்பகம், நால்வர் நான்மணி மாலை, தருக்க பரிபாடை, சதமணி மாலை, சிவஞான தேசிகர் தாலாட்டு, சிவஞான தேசிகர் நெஞ்சு விடு தூது, சிவஞானதேசிகர் திருப்பள்ளி எழுச்சி, சிவஞான தேசிகர் பிள்ளைத் தமிழ், சிவஞானதேசிகர் கலம்பகம், கூவத்தலபுராணம், பிரபுலிங்க லீலை, வேதாந்த சூடாமணி, சித்தாந்த சிகாமணி, பழமலையந்தாதி, பிட்சாடண நவமணிமாலை, பெரியநாயகி திருவிருத்தம், திருக்காளத்திப்புராணம், ஏசுமத நிராகரணம்.

நால்வர் நான்மணி மாலை: சைவசித்தாந்த சமயத்தலைவர்களது பெருமையை விளக்குவது.

தருக்க பரிபாடை: வடமொழி மொழிபெயர்ப்பு. நூலாசிரியரின் வடமொழித் தேர்ச்சியை நன்கு காட்டுவது.

திருச்செந்தூர் நிரோட்டக யமகவந்தாதி: திருச் செந்தூரில் ஒரு போலிப் புலவரைப் போட்டியில் வெல்வதற்காகப் பாடப் பட்டது; 30 செய்யுட்களைக்கொண்டது.

ஏசுமத நிராகரணம்: ஒரு கண்டன நூலாகும்.

திருக்காளத்திப் புராணம்: முற்பகுதியை இவரது தம்பி கருணைப் பிரகாசரும் இடைப்பகுதியை இவரும் இறுதிப்பகுதியை இன்னொரு தம்பியரான வேலையசுவாமிகளும் பாடினர்.

பிரபுலிங்க லீலை: இது ஒரு தலைசிறந்த கற்பனை நூல். சிவபிரான் அல்லம தேவராக வந்து மாயையை வென்ற கதையைக் கூறுவது. இந்நூல் 25 கதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது; முதல் 24 கதிகளும் ஆன்ம தத்துவம் 24 ஐயும் விளக்குவது; இறுதியில் உள்ள ஒருகதி முத்தி தத்துவத்தை விளக்குவதாகும். கற்பனைகளின் இருப்பிடமான இந்நூல் தத்துவங்களையும் நன்கு விளக்கிக் காட்டுவதாகும்.

சோணசைலமாலை: திருவண்ணாமலையை வலம்வந்து முடிவதற்குள் பாடப்பெற்றதாகும்.

நன்னெறி: ஒரு நீதி நூல்; 40 வெண்பாக்களைக் கொண்டது.

## சிவப்பிரகாச தேசிகர் (      )

பார்க்க: ஞானக்கூத்தர்-1

## சிவப்பிரகாசப் பண்டிதர் (20-நூ)

ஊர்: ஈழநாட்டில் யாழ்ப்பாணத்திலுள்ள நீர்வேலி.

தந்தை: சங்கரபண்டிதர்.

வாழ்ந்த காலம்: 1864-1916.

இவர்தம் தந்தையாரிடமே வடமொழி நூல்களையும் தமிழ் நூல்களையும் கற்றுப் பெரும்புலமை எய்தினர்.

நூல்: பாலாமிர்தம் பாலபாடம், திருச்செந்தூர்ப்புராணவுரை, சிவானந்தலகரித் தமிழுரை.

**சிவப்பிரகாசப்பிள்ளை-சா. (19-நூ)**

ஊர்: பாண்டிச்சேரி.

தந்தை: சாமிப்பிள்ளை.

நூல்: நளச்சக்கரவர்த்தி வாசகப்பா. இந்நூல் நளனுடைய கதையினை நாடக முறையிற் கூறுவது.

**சிவப்பிரகாசம் பிள்ளை-மு. (20-நூ)**

ஊர்: சிதம்பரத்திற்கு மேற்கேயுள்ள இடையன்பாற்சொரி. தந்தை: முத்துச்சாமிப்பிள்ளை.

தாயார்: சொர்ணம்மாள்; வேளாளர். வாழ்ந்த காலம் 1875-1948.

இவர் தமிழும் ஆங்கிலமும் கற்றவர். தத்துவத்தை விருப்பப் பாடமாக எடுத்து பி. ஏ. தேர்வுபெற்றவர். இளமையிலேயே இவரது உள்ளத்தில் தத்துவ விசாரம் அரும்பியது. அறிவு நூல்களைப் பயின்று உண்மைப் பொருளை உணர வேண்டும் என்ற ஆர்வமும் மிகுதியாயிற்று. தக்க பருவத்தில் திருமணம் முடிக்கப் பெற்ற இவர் தென் ஆர்க்காடு மாவட்டத் தலைவர் அலுவலகத்தில் வருமானவரித் துறையில் பணிபுரிந்தார். சமயங்கிடைத்த பொழுதெல்லாம் தத்துவ விசாரமும் செய்தார். நானார் என்ற எண்ணமும் அடிக்கடி இவரது உள்ளத்தில் எழுந்தது.

ஒருமுறை இவர் 1902ஆம் ஆண்டில் தமது அலுவலின் பொருட்டுத் திருவண்ணாமலைக்குச் சென்றபோது இரமண முனிவரின் தவக்கோலத்தைக் காணும் வாய்ப்பினைப் பெற்றார்.

இரமணரிடம் நான்யார் என்பதை விளக்கியருளும்படி கேட்டார். அவர் மௌன நிலைமையில் இருந்ததால் எழுத்து மூலம் அதன் பொருளை இவருக்கு உணர்த்தியருளினர். அதனல் இவருக்கு மெய்யறிவு கிட்டியது. அன்றுமுதல் அடிக்கடி திருவண்ணுமலை சென்று இரமண முனிவரைக் கண்டு வழிபடும் வழக்கத்தை மேற்கொண்டார்.

நூல்; இரமண சரித அகவல், நானூர், இரமண சற்குருமாலை, இரமண தேவமாலை, இரமண பாதமாலை, விசார சங்கிரகம், உள்ளது நாற்பது-உரை.

**சிவப்பிரகாசர்--1 (20-நூ)**

ஊர்: திருமழிசை.

நூல்: வருண தருப்பணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவப்பிரகாசர் 2 (15-நூ)**

சிவப்பிரகாசர் பலர் இருந்தமையால் இவரை வேறு பிரித்துக் காட்ட இவர் மதுரைச் சிவப்பிரகாசர் என வழங்கப் பெற்றுர். இவர் மதுரை ஞானப்பிரகாச முனிவருடைய மாணவர்.

நூல்: இருபா இருபது, சிவப்பிரகாசம் என்ற சித்தாந்த சாத்திரங்களுக்குப் பேருரை.

இருபா இருபது உரை: இந்நூல் உரையின் தொடக்கத்தில் நூலுக்கு வரலாறும் அதன் பின்னர் உரைவரலாறும் எழுதி யுள்ளார். இவர் உரை செய்த காலம் சகம் 1410 என்பதால் கி. பி. 1488 என்று அறிகின்றோம். இந்த உரை அச்சாக வில்லை.

சிவப்பிரகாச உரை: இது ஒரு சிறந்த விருத்தியுரையாகும். வடமொழியில் சிவஞான போதத்திற்குச் சிவாக்கிரயோகிகள் செய்த சிவாக்கிர பாடியமும் சிவஞான சுவாமிகள் தமிழில் செய்த சிவஞான பாடியமும் காலத்தால் இப்பேருரைக்குப்

பிந்தியவை. இவர் உரையின் சிறப்பு, ஆராய்ச்சித் துறையில் அவர் கூறுகின்ற ஒவ்வொரு விளக்கத்திற்கும் உரிய ஆதாரங்களைப் பண்டை நூல்களிலிருந்து எடுத்துக் காட்டுவதே யாகும். இவர் தம் உரையிடைப் பல்வேறு நூல்களைக் குறிப்பிடுவதால் இவர் காலத்திற்கு முன்பிருந்த இலக்கிய நிலையை நாம் தெரிந்துகொள்ள முடிகிறது. இவ்வுரை சித்தாந்த உண்மைகளைத் தெரிவிக்கும் அரிய கருவூலமாகவும் உள்ளது.

**சிவப்பிரகாசனார் (      )**

வே. பெ: தில்லைச்சிற்றம்பலவர்.

ஊர்: திருவாவடுதுறை.

இவர் சைவ சித்தாந்த நூல்களில் பெரும்புலமை பெற்றவர்.

நூல்: உய்யவந்த தேவனார் இயற்றிய திருவுந்தியார் என்னும் நூலுக்குச் செய்த உரை.

**சிவப்பிரகாசனார் (சுகவனம்)** (20--நூ)

ஊர்: சேலம் மாவட்டம் வலசையூர் பண்ணியப்பட்டி.

தந்தை: ப. கு. சின்னையபிள்ளை. தாய்: இராய. அரங்கம்மாள். பிறந்தநாள். 14-8-1900.

இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வுக்குப் பயின்று 1919 ஆம் ஆண்டில் பால பண்டிதர் பட்டமும், 1921 ஆம் ஆண்டில் பண்டிதர் பட்டமும் பெற்றவர். தம் தந்தையார் நடத்திய கிராமப்பள்ளியிலும், தருமபுரி கழக உயர்நிலைப் பள்ளியிலும், தமிழ், ஆங்கிலக் கல்வியினைக் கற்றார். தம் தமையனாரிடம் மேலும் ஆங்கிலப் புலமை பெற்றார். சேலம் அரசினர் போதனாமுறைப் பாடசாலையில் 1916--19 ஆம் ஆண்டுகளில் ஆசிரியப் பயிற்சி பெற்றார். சிதம்பரம் மீனாட்சி ஓரியண்டல் கல்லூரியில் 1926 ஆம் ஆண்டில் பண்டிதர் போதனா முறைப் பயிற்சி பெற்றார்.

இவர் சேலம் மாவட்டம் உயர்நிலைப் பள்ளிகளில் 1921 ஆம் ஆண்டு முதல் 1956 ஆம் ஆண்டுவரை தமிழாசிரியராகப் பணி புரிந்துள்ளார். பின்னர் சென்னை வேப்பேரிலூர்து மகளிர் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினுர். இவர் தமது தமிழ்ப் பணியுடன் தமிழ்--சமயம் குறித்து ஆங்காங்கே பல சிறப்புச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். தம் குலத்தவர் நன்மை கருதி 1926 ஆம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் கருணிகர் முதல் மாகாண மாநாட்டினைக் கூட்டினுர். அதற்குமுன் 1924 ஆம் ஆண்டு தொடங்கி கருணிகமித்திரன் திங்கள் இதழினைத் தொடங்கி நடத்தி வந்தார். சென்னை மாகாணக் கருணிகர் சங்கம், மாடம்பாக்கம் வாசுதேவபிள்ளை அறநிலையம் ஆகியவற்றில் உரிமைகொண்டு தம்குல மாணவர் பலருக்கு பள்ளி, கல்லூரியில் சம்பளச் சலுகை அளித்துள்ளார். கோடம்பாக்கத்தில் வள்ளலார் மாணவர் இல்லம் நிறுவியுள்ளார். 1916ஆம் ஆண்டில் சென்னையில் திருவருட்பா மாநாட்டினைக் கூட்டினுர்.

நூல்: கபிலவாசகம், ஜவஹர் சரிதை, குட்டிக்குறள்—திருக்குறள் நூற்பா, உடல்நலம், பெண்மனம், ஜைனதருமம், வடலூர் அடிகளார் வரலாறு.

**சிவபாதசுந்தரம். சு. (20--நூ)**

ஊர்: ஈழநாட்டில் யாழ்பாணத்தைச் சேர்ந்த புலோலியூர்.

தந்தை: சுப்பிரமணியம்பிள்ளை. தாய். வள்ளியம்மை அம்மையார். வாழ்ந்த காலம் 1878--1953.

இவர் சென்னைப்பல்கலைக்கழகத்தில் பயின்று பி. ஏ. பட்டம் பெற்றுர். வ. குமாரசாமிப் புலவர், வ. கணபதிப்பிள்ளை, பார்வதி அம்மையார் ஆசியோரிடம் தமிழும் வடமொழியும் கற்றுர். தொடக்கத்தில் யாழ்ப்பாணத்தில் உறவினர் ஒருவருடைய பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றினுர். பின்னர், திரிகோணமலை செயின்ட் சோசப் பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பணிபுரிந்தார். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு செல்லப்பா என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட விக்டோரியா கல்லூரியின் முதல் தலைமை ஆசிரியராகச் சிறிது காலம்

பணியாற்றினார். அதன் பிறகு அக் கல்லூரியின் தலைமைப் பதவியை ஏற்று 1933 ஆம் ஆண்டுவரை பணிபுரிந்தார். கல்வி கற்பிப்பதில் மாணவர்கள், பெற்றோர்கள் நன்மதிப்பைப் பெற்றார்.

1939 ஆம் ஆண்டில் இலங்கைக் கல்வி முறையினைத் திருத்தி அமைப்பதற்காக நிறுவப்பட்ட ஆணைக்குழுவில் உறுப்பினராக நியமிக்கப்பட்டுச் செயலாற்றினார். அமைதியான வாழ்க்கையினை விரும்பிய இவர் கந்தவனம் என்னும் முருகன் கோயிலுக்கு அண்மையிலே ஒரு திருமடத்தினை நிறுவி அங்கு வாழ்ந்து வந்தார் திருக்கேதீசரக்கோயிற் திருப்பணிக் குழுவின் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். இவரது நோக்கம் சைவப்பணியிலேயே ஈடுபட்டிருந்தது. கிறித்தவர்கள் சைவ சமயத்தினை இகழ்ந்துரைப்பதையும், சைவர்களை மதம் மாற்றுவதையும் கண்டித்து வந்தார். கோயில்களில் உயிர்ப் பலியிடுவதைக் கண்டித்தார். சைவப் பாடசாலைகள் தொடங்கு வதில் மிகுந்த விருப்பம் கொண்டிருந்தார்.

**நூல்:** சைவசமயத்தின் பெருமை, ஆசிரியப் பயிற்சிமுறை, சைவ போதம், திருவருட்பயன் விளக்கவுரை, சைவக்கிரியை விளக்கம், கந்தபுராண விளக்கம், திருவாசகமணிகள், திருப் பெருவடிவம், அளவை நூல், அகநூல், சைவசமய சாரம் தருக்கநூல்.

**ஆங்கில நூல்:** சைவாஸ்கூல் ஆப் இந்துயிசம் (Saiva School of, Hinduism) எஸ்ஸென்சியல்ஸ் ஆப் லாஜிக் (Essential of Logic) குளோரிஸ் ஆப் சைவிஸம் (Glories of Saivism).

**சிவபுரம் பிள்ளை (          )**

இவர் திருவாவடுதுறையில் அம்பலவாண தேசிகரிடம் கல்வி கற்றுத் தேர்ந்தவர்.

**நூல்:** தோத்திரப்பதிகம். இந்நூல் அவரது ஆசிரியர் மீது பாடப் பெற்றது.

**சிவமுத்து** (20-நூ)

ஊர்: சென்னை, மயிலாப்பூர்.

பிறப்பு: 14-1-1892.

இவர் சென்னை மாணவர்மன்றத் தலைவராக இருந்து தமிழுக்காற்றிய அரும்பணிகள் பல. நித்திலக் குவியல் என்ற திங்கள் இதழின் ஆசிரியராகவும் பணிபுரிந்துள்ளார். இவரது தமிழ்ப் பணிகளைப் பாராட்டி தமிழ் நெறிக்காவலர் என்ற சிறப்புப் பட்டத்தினை வழங்கியுள்ளனர். இவரது நூல்களுள் முத்துப்பாடல்கள் என்ற நூல் இந்திய அரசினரின் பரிசினைப் பெற்றது. தங்க நாணயம், நாராயணன் என்ற இரண்டு நூல்களும் தெலுங்கு மொழியிலும் வெளிவந்துள்ளன.

நூல்: முத்துப்பாடல்கள், தங்க நாணயம், நல்ல எறும்பு, முத்துக் கதைகள் (1959), சிவஞானம் (1960).

**சிவயோக அடிகள்** (19-நூ)

வே. பெ: அப்பாவு. ஊர்: வடலூருக்கு அண்மையில் உள்ள கெங்கைகொண்டான் குப்பம்.

தந்தை: விருபாக்க ஐயர். தாய்: சுப்பம்மையார்; வீரசைவர். மறைவு 1885.

இவர் தமிழ், தெலுங்கு, வடமொழிகளைக் கற்று உணர்ந்தவர், காலக்கணிதத்திலும் புலமை பெற்றவர். ஞானவாசிட்டம் என்னும் நூலினை நன்கு ஆய்ந்து அறிந்தவர்.

அறிவுநூல்களை ஆராய்ந்து அறிந்த இவர் முருகக்கடவுளிடத்தில் பேரன்பு கொண்டவராகத் திகழ்ந்தார். பெற்றோர்களுடைய வேண்டுகோளுக்கிணங்க விருபாக்கம்மாள் என்னும் அம்மையாரைத் திருமணம் செய்துகொண்டு இல்வாழ்க்கையை மேற்கொண்டார்.

இவர் விழப்பண்ணம் என்னும் ஊரில் இருந்த மடத்தில் தங்கி மக்களுக்கு அறிவுரை நல்கினர். இம்மடத்திற்குப்

பொன்னேரி சுந்தரம்பிள்ளை என்பவரை அழைத்துச் சிலருக்குக் கல்வி கற்பிக்கச் செய்தார். இச் சுந்தரம்பிள்ளை வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகளாரின் தமையனார் சபாபதிப் பிள்ளைக்கு மருமகனாவர். இதனால் சபாபதிப்பிள்ளையும் இம்மடத்திற்கு வந்து செல்லும் தொடர்பு ஏற்பட்டது. சபாபதிப்பிள்ளை சிவயோக அடிகளின் விருப்பத்திற்கு ஏற்ப இம்மடத்தில் கந்தபுராணச் சொற்பொழிவு நிகழ்த்தினார். இடையில் சபாபதிப்பிள்ளைக்குக் காய்ச்சல் ஏற்பட்டதால் இராமலிங்க அடிகளே இங்கு வந்து அச்சொற்பொழிவினை நிறைவு செய்ததாகக் கூறுவர்.

சிவயோக அடிகள் பின்னர் கங்கைகொண்டான் குப்பம் மடத்தில் ஆறு திங்கள் வரை இருந்து தவம் மேற்கொண்டார். பிறகு காசி முதலிய இடங்களுக்குத் தல யாத்திரை சென்று திரும்பினார். முருகக் கடவுளின் திருச்சபையினை அமைத்து சமயக்கொடிகளை நாட்டி வழிபாடு செய்து அன்பர்களின் எண்ணங்களை நிறைவேற்றினார்.

இவர் தமது அன்பர்கள் எழுதிவைக்கும் விருப்பங்களுக்குச் செய்யுள் வடிவில் மறுமொழி தெரிவிக்கும் பழக்கமுடையவர். ஒரு முறை சென்னை மாநில அமைச்சராக விளங்கிய திவான் பகதூர் சுப்பராயலு ரெட்டிகாரு என்பவர், இவரைக் கண்டு போற்ற எண்ணி இவர் தங்கியிருந்த இடத்திற்கு வந்தார். அமைச்சரின் விருப்பத்தை அடிகளார் தமது காலக் கணிதப் புலமையால் முன்னதாகவே தெரிந்து சில செய்யுட்களை எழுதி வைத்திருந்து அமைச்சர் வந்தபோது கொடுத்ததாகவும் அதனால் அவர் வியப்படைந்த தாகவும் கூறுவர்.

நூல்: உமாதேவியின் மீது அருள்வாக்கியம்.

இவர் மீது அன்பர்கள் சிலர் தோத்திரம் முதலியன இயற்றியுள்ளனர்.

**சிவயோக நாவலர் (          )**

நூல்: மாயா விவரணம்..

இந்நூல் மணிப்பிரவாள நடையில் உள்ளது.

**சிவராசபிள்ளை கே. என்.** (20-நூ)

**ஊர்:** கன்னியாகுமரி மாவட்டம், நாகர்கோயில்

இவர் தென்மொழி, வடமொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளிலும் புலமையாளர்; பி. ஏ. பட்டம் பெற்றவர். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சிப் பகுதியில் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளைக்கு முன் பேராசிரியராகப் பணியாற்றியவர்.

**நூல்:** உந்து என்னும் இடைச்சொற் பிரயோகம் அல்லது புறநானூற்றின் பழமை (1929). அகத்தியர், மேகமாலை, The chronology of the Tamils.

**சிவராமச்செட்டியார்** ( )

**ஊர்:** சிதம்பரம்.

**நூல்:** திரிசிரபுரம் அப்பாவுப் புலவர் இயற்றிய கோயிலூர் முத்துராமலிங்க ஞானதேசிகர் மீது நெஞ்சறிவுறுத்தல் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சிவராமப்பிள்ளை-பா.** ( )

**ஊர்:** பாண்டிவள நாட்டில் திருநெல்வேலி. தந்தை: பால் வண்ணப்பிள்ளை.

**நூல்:** இரமணை இரட்டைமணிமாலை.

**சிவராம முதலியார்-கு.** (19-நூ)

**நூல்:** திருத்தொண்டர் ஆனந்தக் களிப்பு என்னும் இசைப் பாடலுக்குச் சிறப்புப் பாயிரம்.

**சிவராமலிங்க அடிகள்** (20- நூ)

**வே. பெ:** சிவராமன். தொண்டை நாட்டில் இராயவேலூர். சைவ வேளாள முதலியார்.

வாழ்ந்த காலம்: 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி; 20ஆம் நூற்றாண்டின் முற்பகுதி.

இவர் பள்ளியில் தமிழும் ஆங்கிலமும் கற்றதோடு, தக்க அறிஞர்களைக்கொண்டு தமிழ் நூல்களைக் கற்றுப் புலமை பெற்றார்; வடமொழியினையும் கற்றுணர்ந்தார்.

இளமையிலேயே இவரது உள்ளம் துறவறத்தை நாடியது. இவரது மனப்போக்கினைக் கவனித்த இவரது தாய் தந்தையர் இவரை இல்லறத்தில் ஆழ்த்த நினைத்தனர். ஆனால் இவரோ அவர்களது ஏற்பாட்டிற்கு முன்பே வீட்டை விட்டு வெளியேறிப் பல சிவத்தலங்களுக்குச் சென்று இறை வழிபாடு செய்தார். திருநெல்வேலிக்கு அருகில் உள்ள வல்லநாடு என்னும் இடத்திலிருந்த அறிவானந்த அடிகளாரைப் போற்றி அவரது திருவருளைப் பெற்றார். இவர் தம்முடைய ஆசிரியருடன் வட நாட்டில் உள்ள சிவத்தலங்களுக்குச் சென்றார். அப்பயணம் முடிந்து திரும்பியதும் உடனுறைவார் சிலருடன் அறிவு நூல்களை ஆராய்ந்தார். பின்னர் சென்னைக்குச் சென்று வீர. சுப்பைய ஞானதேசிகர் என்னும் பெரியாரோடு சில காலம் தங்கி ஞானநூல்களை ஆராய்ந்தார். சாந்தலிங்க அடிகளாரின் திருமடத்தலைவராகயிருந்த மாணிக்க அடிகளாரோடு தங்கிச் சங்கங்கள் பல ஏற்படுத்தி அவைகளில் சொற்பொழிவுகள் நிகழ்த்தி மக்களை நல்வழிப்படுத்தினார். இவர் தமது இறுதிக் காலத்தில் சென்னையில் இருந்து ஞான வாசிட்டம் என்னும் நூலைப் பலருக்கும் கற்பித்தார், 1934ஆம் ஆண்டில் வீடுபேறு அடைந்தார். இவரிடத்தில் கல்வி கற்ற மாணவர்கள் பலர் ஆவர். அவர்கள் இவரது வரலாற்றினை ஒரு நூலாக எழுதி வெளியிட்டுள்ளனர்.

நூல்: சிவமகிழ்நஸ்தோத்திரம் உரை; வேறு சில நூல்களுக்கும் இவர் உரை எழுதியுள்ளதாகத் தெரிகிறது.

சிவராமலிங்கசுந்தர முதலியார்- ஐ. நே. ( )

நூல்: சிவராமலிங்கசுந்தரம். இது 32 பக்கங்களுடன் கூடிய உரைநடை நூலாகும். இதில் பல நூல்களினின்றும் சாரமான பகுதிகள் எடுத்து ஒருங்கு தொகுக்கப் பெற்றுள்ளன.

**சிவராமலிங்கம்** (19-நூ)

ஊர்: செம்பொன்மாரி.

நூல்: திருவருள்மாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவராமலிங்கம் பிள்ளை-1** ( )

நூல்: சீகண்டேச்சுரமாலை.

**சிவராமலிங்கம்பிள்ளை- 2** (20-நூ)

வாழ்விடம்: திருவாங்கூரில் குலசேகரபுரம்.

வே. பெ: முருகேசக் கவிராயர்.

நூல்: ஆய்க்குடி முருகன்மீது பிள்ளைத் தமிழ், சமதக்கினீ சுரர்பதிகம்.

**சிவராமலிங்கம்பிள்ளை—இ. ச.** (20-நூ)

ஊர்: பாண்டிவள நாட்டில் இலவை. தந்தை: சங்கரலிங்கம்பிள்ளை

நூல்: சிலையெழுபது உரை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவராயர்** ( )

நூல்: பிர்ம்ம ஞானச் சுருக்கம் (1893). இது 82 பக்கமுள்ள உரைநடைநூல். இந்துத் தத்துவ விவேகம் பற்பல நூல் களினின்றும் ஆராய்ந்தெடுத்துத் தெளிவான தமிழ் நடையில் எழுதப்பெற்றதாகும்.

**சிவ வாக்கியர் (இடைக்காலம்)**

தமிழ்நாட்டில் வாழ்ந்த யோக சித்தர்களுள் இவர்தலை சிறந்தவராகக் கருதப்படுகின்றனர்.

இவர் பிறக்கும் பொழுதே சிவ சிவ என்று சொல்லிப் பிறந்ததாலும் சிவ சிவ என்னும் மொழியினையே எக்காலத்திலும் கூறிக் கொண்டிருந்ததாலும் சிவவாக்கியர் என அழைக்கப்பெற்ருர். இவரைத் தாயுமான அடிகள் வியந்து பாடியுள்ளார். இவரை, 10 அல்லது 11 ஆவது நூற்ருண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் பட்டினத்தடிகளும் குறிப்பிட்டுள்ளார். ஆதலால் அவர்களது காலத்திற்கு முற்பட்டவராதல் வேண்டும். இவர்சைவராக இருந்து பின்பு திருமழிசையாழ்வாராக மாறியவர் என்ற ஒரு கருத்தும் உண்டு. இவரது பாடல்களுக்கும் திருமழிசையாழ்வார் பாடல்களுக்கும் உள்ள ஒற்றுமை பற்றியே இக்கருத்து எழுந்துள்ளது.

நூல்: சிவவாக்கியர் பாடல்கள், நாடிப்பரீட்சை 35. இவரது நூல்களில் வடசொற் கலப்பு மிகுதி.

**சிவாக்கிரயோகிகள்** (15-நூ)

வே. பெ: சிவக்கொழுந்து தேசிகர்; அந்தணர்.

இவர் தஞ்சையிலும் திருவீழிமிழலையிலும் தனிமடம் அமைத்துக் கொண்டு சைவ சித்தாந்தத்திலும் தத்துவ ஆராய்ச்சியிலும் ஈடுபட்டுப் பல நூல்கள் எழுதியவர். வடமொழி தென்மொழி ஆகிய இருமொழிகளிலும் புலமை நலம் பெற்றிருந்தமையால் அவர்தம் காலத்தில் ஆன்மீக நெறியாளர் சிலர் தூற்றவும் சிலர் வாழ்த்தவும் வாழ்ந்தவர்.

சூரியனூர் கோயில் ஆதீனத் தலைவராகிய சிவக்கொழுந்து தேசிகரே இவருக்குச் சிவாக்கிரயோகிகள் என்ற தீட்சா நாமத்தைச் சூட்டினூர். அக்கிரம் என்ற வடசொல்லுக்குக் கொழுந்து என்பது பொருள். அந்தணராகவும் வடமொழி வல்லுநராகவும் இருந்ததால் சிவாக்கிர யோகிகள் என்ற பெயரே பெரிதும் வழக்கில் நின்றுநிலவுவதாயிற்று. சூரியனூர் கோயிலின் ஆதீனத்தலைவரின் தூண்டுதலாலும் ஊக்க உரைகளாலும் சைவ சமய ஆராய்ச்சியிலும் சைவ சித்தாந்தத்திலும் ஆழ்ந்த புலமை நலம் பெற்ருர். இவர்தம் சிவநெறிப் பிரகாசம் என்ற தமிழ்ச் செய்யுள் நூலுக்கு உரை எழுதிய நந்தி சிவாக்கிர யோகிகளே பின்னர் சூரியனூர் கோயிலின் தலைமைப் பொறுப்பை ஏற்றவராவர். தஞ்சை

மன்னர் சூரியனார் கோயில் ஆதீனத்திற்கு எழுந்தருளிய போது அங்கிருந்த சிவாக்கிர யோகிகளின் புலமை நலத்தைக் கேள்வியுற்றுத் தஞ்சையில் தங்குமாறு கேட்டுக்கொண்டார். தனிமடம் அமைத்துக் கொள்ளவும் வசதிகள் செய்து கொடுத்தார்.

ஆன்மீகத்தையும் அமைதியையும் நாடிய யோகிகளுக்குத் தஞ்சை ஒரு சோதனைக்களம் ஆயிற்று. வைணவ சமய அன்பர்கள் பலர் மணவாள மாமுனிகளின் தலைமையிற் கூடிப் புலமைப் போருக்கு ஆயத்தமாகும்படி அழைத்தனர். வைணவ சமயத்தை எதிர்த்துச் சைவ சமயத்தின் தனிச் சிறப்புக்களை நிறுவிக் காட்ட வேண்டுமென்பது அரசன் விருப்பமாகவும் இருந்தது. 18 நாட்கள் நடந்த புலமைப் போரில் யோகிகளே வெற்றி பெற்றார். அதுகண்டு பொறாத வைணவர்கள் இவர் தங்கியிருந்த மடத்துக்குத் தீ வைக்கவும் தொடங்கினர். யோகிகள் பின்னர்த் திருவீழிமிழலையில் தங்கித் தொண்டுகள் பல புரிந்து இறையடி சேர்ந்தார்.

இவர் வடமொழி நூல்கள் சிலவற்றைத் தமிழாக்கம், செய்து உதவினார். சிவஞான சித்தியார் சுபக்கத்திற்குச் சிறந்த விரிவுரை எழுதியுள்ளார். வடமொழி சிவஞான போதத்திற்கு 12000. கிரந்தமுடைய ஒரு பேருரை எழுதினார்.

**நூல்:** சிவநெறிப்பிரகாசம், சைவபரிபாடை, தத்துவ தரிசனம், சித்தாந்த தீபிகை, வேதாந்த தீபிகை, சிவஞானசித்தியார் சுபக்கம், பரபக்கம் உரை, கிரியாதீபிகை, சைவ சந்நியாச பத்ததி, சிவஞானபோதப் பேருரை, சர்வஞானோத்தரம் தமிழுரை, தேவிகாலோத்தரம் தமிழுரை, சுருதி சூக்திமாலை தமிழுரை.

**சிவானந்த அடிகள் ( )**

**ஊர்:** அரிமளம்.

**நூல்:** ஆத்துமாநந்த அடிகள் என்பவர் இயற்றிய ஆத்துமாநந்த விளக்கம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சிவானந்தசாகர யோகீசுவரர் (20-நூ)

வே. பெ; கிருட்டினமூர்த்தி.

ஊர்: நாகப்பட்டிணம்.

தந்தை: அண்ணுவையர்.

இவர் இளமையில் தன் தந்தையை இழந்தார். தமது தமயன் சுப்பராயர் என்பவரிடத்தில் தமிழ் நூல்களைக் கற்ருர். மெட்ரிக் தேர்வும் ஆசிரியப் பயிற்சித் தேர்வும் பெற்றவர். 1898ஆம் ஆண்டு முதல் சென்னை நகரில் ஆரியன் உயர்நிலைப் பள்ளியில் பதினைந்து ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றியுள்ளார். 'பிரம்மவித்தியா' ஆரியசனப் பிரியன் என்ற இதழ்களில் துணையாசிரியராகப் பணியாற்றிப் பல கட்டுரைகள் வரைந்துள்ளார்.

இவர் தமது மனைவியிறந்த பிறகு வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டு துறவு பூண்டு பொதிய மலையில் சில ஆண்டுகள் தங்கி யோக நிலையை மேற்கொண்டார். அது முதல் இவர் சிவாநந்த சாகர யோகீசுவரர் என்று அழைக்கப் பெற்ருர். சில ஆண்டுகள் இவ்வாறிருந்த இவர் மீண்டும் இல்லத்தை அடைந்து தமது புதல்விகளுடன் திருச்சிராப் பள்ளியில் தங்கியிருந்தார்.

நூல்: திருச்செந்தில் வெண்பா அந்தாதி, நடுக்காவேரிப் பதிற்றுப்பத்தந்தாதி.

இவற்றுள் இரண்டாவது நூல் நடுக்காவேரியுள் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைக் குறித்து இயற்றப் பெற்றதாகும்; 100 செய்யுட்கள்.

## சிவானந்த சாமிகள் (20-நூ)

நூல்: இராமாநந்த சாமிகள் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சிவானந்த சாமிகள் திரு. (19-நூ)

இவர் கோமிலூர் சிதம்பரஞான தேசிகரின் மாணவர்.

நூல்: நாநாஜீவ வாதக் கட்டளை, தெட்சணாமூர்த்தி சுவாமிகள் சரித்திரம், சிதம்பர தேசிகர் தோத்திரம், சிதம்பர தேசிகர் பதிகம்.

**சிவானந்த சிவாச்சாரிய சாமிகள்** (20-நூ)

நூல்: புண்ணியராற்றுப்படை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சிவானந்த தேசிகர்-1** (18-நூ)

ஊர்: தஞ்சை.

நூல்: சைவசித்தாந்த சாரம், சித்தாந்த நிச்சயம்.

**சிவானந்த தேசிகர்-2** ( )

ஊர்: தருமபுரம்.

நூல்: காசித்துண்டி விநாயகர் பதிகம்.

**சிவானந்த முனிவர்** ( )

இவர் தருமபுர ஆதீனத்தில் எட்டாவது பட்டத்தில் எழுந்தருளிய திருச்சிற்றம்பல தேசிகர் காலத்தில் வாழ்ந்தவர்.

நூல். சம்பிரதாய தீபம், சிவாநந்த போத சாரம், சிவானந்த மாலை.

**சிவானந்தயதீந்திரர்** (19-நூ)

வே. பெ: கலியபெருமாள்.

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் திருமறைக்காட்டிற்கு அருகிலுள்ள ஆயக்காரன்புலம்.

தந்தை: சாமித்தேவர். தாய்: மதுரம்மாள். அகமுடையார் குலம்.

இவர் இராமையா அடிகளிடம் தமிழ் இலக்கணங்களையும் சமய நூல்களையும் கற்றார். பின்னர் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களால் பேணப்பெற்ற கோவிலூர் மடத்தின் தலைவர் வீரசேகர ஞானதேசிகரிடம் தத்துவ நூல்களைக் கற்றுத்

தேர்ந்தார். காசியில் வடமொழியில் உள்ள வேதம், வேதாகம ங்கள் ஆகியவற்றைக் கற்ருர்.

சென்னை ப. இராமசாமிப் பிள்ளையின் வேண்டுகோளுக் கிணங்கி வடமொழி வேதங்களை மொழிபெயர்த்தார்.

நூல்: கோயிலூர் நான்மணிமாலை, வீரசேகர புராணம், சங்கர திக்குவிசயம், இராமலிங்க சாமிகள் திருவுள்ளம், தாயுமானவர் நன்னிலைத் தீர்ப்பு, சைவத்தெளிவு, அத்வைதத்தீர்ப்பு, சிவஞானபோத சாரம், திருவொற்றியூர் மான்மியம், சூரபாத்திர சிவப்பிரகாச சாமிகள் வரலாறு, வேலூர் தோலா சாமிகள் வரலாறு, திருமண விளக்கம், கிருட்டிஞேபநிடதம்.

மொழிபெயர்த்த நூல்கள்: வச்சிரசூசிகை உபநிடதம், சாமவேத மொழிபெயர்ப்பு, எசுர்வேத மொழி பெயர்ப்பு, இருக்குவேத ருத்திரி, சாமவேத ருத்திரி.

**சிவானந்தன்** (19-நா)

வே. பெ: சங்கர கிங்கர சரண சேகரன் சிவானந்தன்.

நூல்: அகோரந்தாதி.

இந்நூல் நாஞஜீவ வாதக் கட்டளையை விளக்குவது; 105 செய்யுட்கள்.

**சிவானந்தையர் - ச.** (19-நா)

ஊர்: யாழ்ப்பாணம் பன்னுலை.

தந்தை: சபாபதி ஐயர்.

இவர் சுன்னுகம் குமாரசுவாமிப் புலவரின் மாணவர்; தமிழும் வடமொழியும் தெரிந்தவர். சிதம்பரத்தில் தமிழாசிரி யராகப் பணியாற்றினுர்.

நூல்: புலியூர்ப் புராணம், புலியூரந்தாதி, சனிதுதி, நம்பியகப் பொருள்-உரை, நியாய போதினி (மொழியாக்கம்), பதகிருத்

தியம் (மொழியாக்கம்), அன்னம்பட்டியம் (மொழியாக்கம்) நீலகண்டியம் (மொழியாக்கம்).

**சிவானுபூதிச் செல்வர்** (20-நூ)

நூல்: பேரானந்த சித்தியார் (1908).

**சிற்றம்பல உபாத்தியாயர்** (19-நூ)

ஊர்: கொங்கு நாட்டினர்.

நூல்: திருச்செங்கோட்டுத்தல புராண உரை.

**சிற்றம்பலக் கவிராயர்** (20-நூ)

இவர்: மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் மரபினர்.

நூல்: புதுக்கோட்டைப் பகுதி பெரியகள்ளுவயல் கலங்கப்புலிக் கறுப்பண்ணசாமி பேரில் சந்தக் கலிவெண்பா, ஆசிரிய விருத்தம், மூவரையன் விறலிவிடு தூது.

**சிற்றம்பல சாமிகள்** ( )

நூல்: சிற்றம்பல சாமிகள் வாக்கியம்.

**சிற்றம்பல தேசிகர்** ( )

ஊர்: திருமறைக்காடு

நூல்: திருவாடானை என்னும் திருப்பதிமான்மியம்.

**சிற்றம்பல நாடிகள்** (14-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் வைத்தீஸ்வரன் கோயில்; சீர்காழியைச் சேர்ந்தவர் என்றும் கூறுவர். வேளாளர்.

இவர் இளமையிலேயே துறவறத்தில் நாட்டம் கொண்டு கங்கை மெய்கண்டார் என்பவரிடம் அருளுரைபெற்றார். அவர் வீடு பேறடைந்த பின்னர் இவர் ஆசிரியராக இருந்து

மாணவர்கட்கு அருளுரை வழங்கினர். இவருடைய உள்ளம், திருச்சிற்றம்பலவனுடைய திருவருளையே நினைந்து நின்றமையால் சிற்றம்பல நாடிகள் என்று அழைக்கப் பெற்றார்.

இவரிடம் அருளுரை பெற்றவர்களுள் சம்பந்த முனிவர், தத்துவப் பிரகாசர், தத்துவநாதர் போன்றோர் குறிப்பிடத்-தக்கவராவர்.

நூல்: துகளறு போதம், சிவப்பிரகாசக் கருத்து, செல்காலத் திரங்கல், வருங்காலத் திரங்கல், நிகழ்காலத் திரங்கல், திருப்-புன் முறுவல், ஞானப்பஃறொடை, சிற்றம்பல நாடி கட்டளை.

திருச்செந்தூர் அகவல் என்ற நூல் இவரால் இயற்றப் பெற்றது என்ற கருத்தும் உண்டு. துகளறு போதம் என்னும் நூலினை மெய்கண்ட சாத்திரம் பதினான்கினுள் ஒன்றாகக் கொண்டவரும் உண்டு. எவ்வாறாயினும் இது அப்பதினான்கு நூற்களோடு ஒருங்கு வைத்து எண்ணுதற்குறிய தகுதி வாய்ந்தது. சிவஞானமுனிவர் போன்றோரால் மேற்கோளாக எடுத்தாளப்பெறும் பெருமையுடையது. இந்நூலில் காப்புச் செய்யுள் ஒன்றும் 100 வெண்பாக்களும் இறுதியில் நூற் பொருள் கூறும் இரண்டு பிற்கால வெண்பாக்களும் உள்ளன. மேலும் சிறப்புப் பாயிர அகவலும் நூற்பொருளும் செய்யுளின் தொகையும் கூறும் அகவலும் இடம் பெற்றுள்ளன. ஆன் மாவிடத்திலுள்ள துகளாகிய தொல்லைமலம் அறுதற்கு ஏதுவாகிய துகளறுபோதமாகச்சிவஞானத்தை விளைவிக்கும் நூல் இது ஆகையினாலே துகளறு போதம் என்ற பெயரினைப் பெற்றது. சிவப்பிரகாசக் கருத்து என்னும் நூல் ஆசிரியப் பாவாலமைந்தது; 64 அடிகளைக் கொண்டது. இதில் சிவப் பிரகாசப் பாடல்களுக்கு அடிவரவும் அதிகார அடைவும் கூறப் பெற்றுள்ளது. திருப்புன்முறுவல் என்னும் நூல் பதினொறு விருத்தங்களாலாயது ஒவ்வொரு செய்யுளும் 'எனும் குனியோ எம்மான் திருப்புன்முறுவலே என்ற மகுடத்தோடு முடிவது. செல்காலத்திரங்கல் என்ற நூல் 54 கண்ணிகளா லாயது. குருவை வழி பட்டு அவனருள் பெருமல் வீணே கழிந்த நாட்களைக் கூறுவது. நிகழ்காலத்திரங்கல் என்ற நூல் 50 கண்ணிகளைக் கொண்டது. எதிரே குருநாதராய்

எழுந்தருளிய தேசிகனைப் பார்க்கும் படி பிறரை அழைப்பது. வருங்காலத்திரங்கல் என்பதில் 49 கண்ணிகள் உள. ஞானப்பஃறொடை என்ற நூல் இப்பொழுது கிடைக்கவில்லை. சிவப்பிரகாசம் என்னும் நூலிற்கு உரை வரைந்த மதுரைச் சிவப்பிரகாசர் இந்நூலின் பெயரினைக் குறிப்பிடுகின்றார். சிற்றம்பல நாடி கட்டளை என்னும் நூல் கட்டளை நூல்களில் காலத்தால் முந்தியது. சாத்திர உண்மைகளில் குறிப்பிட்ட ஒரு பகுதியினை மாத்திரம் எடுத்துக்கொண்டு அதை அளவு படுத்தி உரை நடையில் கூறுவது கட்டளை நூல் எனப்பெறும்.

சிற்றம்பல நாடிகள் கலித்துறை, சிற்றம்பல நாடிகள் தாலாட்டு, சிற்றம்பலநாடிகள் வெண்பா முதலியன இவருடைய மாணவர்கள் எழுதிய நூல்களாகும். சிலர் தவறாக இந்நூல்களும் சிற்றம்பல நாடிகளால் எழுதப் பெற்றவை என்றனர்.

## சிற்றம்பல நாடிகள் சீடர் (15-நூ)

நூல்: சிற்றம்பல நாடியார் கலித்துறை, சிற்றம்பல நாடியார் தாலாட்டு, சிற்றம்பல நாடியார் திரிகாலத்திரங்கல், துகளறு போதக் கட்டளை.

## சிற்றம்பலப்புலவர் (18-நூ)

ஊர்: ஈழநாட்டு மாதகல், வேளாளர்.

இவர் திருமறைக் காட்டில் வாழ்ந்த பஞ்சலக்கணக் கணபதி ஐயர் என்பவரை ஆசிரியராகக் கொண்டு தமிழ் நூல்களைக் கற்றார்.

நூல்: கண்டி அரசன்மீது கிள்ளைவிடு தூது.

இந்நூலினை இவர் அரங்கேற்றச் சென்ற போது அவ்வரசன் ஆங்கிலேயரால் சிறைப்படுத்தப்பட்டான் என்ற செய்தியைக் கேட்டு வருந்தித் திரும்பிவிட்டார் என்பர்.

**சிற்றம்பல முதலியார்** (19-நூ)

வே. பெ: சோதிடக்களஞ்சியம் சிற்றம்பல முதலியார்.

நூல்: வி. சுந்தரமுதலியார் இயற்றிய சிவநாம சங்கீர்த்தனம் என்னும் இசைநூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சிற்றம்பலவறிஞன்** ( )

ஊர்; திருச்செங்கோட்டுப் புராணவுரை.

திருச்செங்கோட்டுப் புராணம் கவிராச பண்டிதரால் இயற்றப் பெற்றது.

**சிற்றம்பலவையா** ( )

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் சிறுகம்பையூர்.

தந்தை: சுப்பிரமணியபிள்ளை.

நூல்: மருதூர்ப் புராணம்.

**சிறிய காரி ரத்தினக் கவிராயர்** ( )

பார்க்க: இரத்தினக் கவிராயர்-2

**சிறியவார்ச்சகன்பிள்ளை** ( )

நூல்: ஆத்மசமர்ப்பணம்.

**சிற்சயிலேசர்** ( )

நூல். உபதேச ரத்தினமாலை வியாக்கியானம்.

**சிறுகாக்கை பாடினியார்** ( )

இவர் சங்ககாலத்தில் வாழ்ந்த காக்கைபாடினியார். நச்செள்ளையார், காக்கைபாடினியம் என்னும் நூலினை எழுதிய காக்கைபாடினியார் ஆகியோரினும் வேருவர் இவரைத்.

தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர் அவர்க்கு (க்காக்கைபாடினியார்க்கு) இளையரான சிறுகாக்கை பாடினியார் என்று குறிப்பிடுகின்ருர். இவருடைய நூற்பா ஒன்றிலிருந்து இவர், தமிழ் நாட்டிற்குக் கடல் தென் எல்லையாகிய காலத்தில் வாழ்ந்தாரெனத் தெரிகின்றது.

நூல்: சிறுகாக்கை பாடினியம். இந்நூல் மறைந்துபோன தமிழ் நூல்களுள் ஒன்று; யாப்பிலக்கணத்தைக் கூறுவது தொல்காப்பியம், காக்கைபாடினியம், யாப்பருங்கலம் ஆகிய இலக்கண நூல்களினின்றும் இது சில சில இடங்களில் வேறுபடுகின்றது. இதனுடைய நூற்பாக்கள் யாப்பருங்கல விருத்தி உரையில் மேற்கோள்களாகக் காட்டப் பெற்றுள்ளன.

## சிறுமோலிகனர் (சங்க காலம்)

இவரைப் பற்றிய செய்திகள் யாதும் கிடைத்திலது; குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார்.

நூல்: நற். 61.

## சிறுவெண்டேரையார் (சங்க காலம்)

வே. பெ: ஐயாதிச் சிறுவெண்டேரையார்.

இவரைப் பற்றிய செய்திகள் விளக்கமாகக் கிடைத்திலது. கயமனராற் பாடப்பட்ட தலைவனே இவராலும் பாடப் பட்டிருத்தலின் இவரும் கயமனரும் ஒரு காலத்தவராவர்.

நூல்: புறம் 362.

## சிறைக்குடி ஆந்தையார் (சங்க காலம்)

இ. பெ: ஆந்தையார்.

ஆதன் தந்தை ஆந்தைஎனவரும்; ஆர் என்பது சிறப்பு விகுதி; சிறைக்குடி என்பது ஊரின் பெயராகும். எனவே இவர் ஊரொடு தொடர்ந்த பெயர் கொண்டவர்.

நூல்: குறுந். 56, 57, 62, 132, 168, 222, 273, 300. நற். 16.

**சின்மயானந்த அடிகள்** (20-நூ)

இவர் காவிரிப்பூம் பட்டினத்தில் சிவராச யோக மடத்தில் இருந்தவர்.

நூல்: பக்திப் பாடல்கள்.

**சின்மயானந்த சாமிகள்** (20-நூ)

ஊர்: காஞ்சீபுரம்.

நூல்; இராமானந்த சுவாமிகள் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சின்மயானந்தர் சீடர்** ( )

நூல்: நர்தப்பத்து.

**சின்ன ஆலிம் அப்பா** ( )

வே. பெ; மீராலெப்பை.

ஊர்: யாழ்ப்பாணம் மட்டக்கிளப்பினைச்சார்ந்த மருதமுனை.

தந்தை: இப்ராகிம் லெப்பை.

இவர் அரபு மொழியிலும் தேர்ச்சி பெற்றவர். இந்தியாவுக்கு வருகை தந்து இஸ்லாமிய சமயக் கல்வி பயின்று ஆலிம் (பேரறிஞர்) ஆகிச் சமயத் தொண்டு புரிந்து வந்தார்.

நூல்: ஞானரை வென்ருன்.,

**சின்ன இபுராகிம் மொகியதீன்** ( )

ஊர்: யாழ்ப்பாணத்தில் மன்னார் பகுதி.

இவர் அட்டாவதானம் செய்வதில் வல்லவர்.

நூல்: தனிப்பாடல்கள்.

**சின்னக்கவுண்டர்** ( )

இவர் மகாவித்துவான் என்று அழைக்கப்பட்டார்.

**நூல்:** உண்ணுமுலையம்மன் சதகம்.

**சின்னக்குட்டிப்புலவர்** (18-நூ)

**ஊர்:** ஈழநாட்டில் யாழ்ப்பாணம் தெல்லிப் பழை.

இவர் மாதகல் சிற்றம்பலப் புலவரிடம் கல்வி பயின்றவர். தெல்லிப்பழையில் செல்வராக விளங்கிய கனகநாயக முதலியார் ஆதரவில் வாழ்ந்தார். அவர் மகனுகிய கந்தப்ப முதலியாருக்குக் கல்வி கற்பித்ததுடன் பிற்காலத்திலும் ஆதரவாக இருந்துவந்தார்.

**நூல்:** கனகதண்டிகைக் கனகராயன்பள்ளு, கந்தப்ப முதலியார் மீது பாடிய தனிப்பாடல்கள். இவற்றுள் முதல் நூலினைத் தெல்லிபழை வழக்கறிஞர் வ. குமாரசாமிப் பிள்ளை விளக்கக் குறிப்புக்களுடன் 1932ஆம் ஆண்டில் அச்சிட்டுள்ளார்.

**சின்னச் சரவணப் பெருமாள் கவிராயர்** (19-நூ)

இவர் இராமநாதபுரம் அரசர் பாற்கர சேதுபதியின் அரண்மனைப் புலவராக இருந்தவர். பெரிய சரவணப் பெருமாள் கவிராயருக்குப் பேரர்.

**நூல்:** திருச்சுழியலந்தாதி, புவனேந்திரனம்மானை, கயற்கண்ணி மாலை, கந்தவருக்கச் சந்த வெண்பா, குன்றக்குடிச் சிலேடை வெண்பா.

**சின்னசாமி ஐயங்கார்** ( )

**ஊர்:** முகிலார்.

**நூல்:** திவ்ய தேசப்ரபாவசிந்தாமணி (1871), நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் எழுந்தருளியிருக்கும் எப்பெருமான் திருப் புகழை விருத்தமாகவும் கீர்த்தனையாகவும் ஆசிரியர் இந்

நூலில் பாடியுள்ளார். இறுதியில் புராணத் தலங்களாகிய இராசமன்னார்கோவில் முதலியன பற்றியும் அதே முறையில் விருத்தமும் கீர்த்தனமுமாகப் பாடியுள்ளார்.

**சின்னச்சாமிக் கவிராயர்** (19-நூ)

நூல்: இராமசர்மிக் கவிராயர் (மதுரை) என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சின்னச்சாமிச் சாத்திரியார்** (19--நூ)

ஊர்: குத்தனூர். வைணவர்.

நூல்: அம்பரீஷ சரித்திரம், இராமதாஸ் சரித்திரக் கீர்த்தனைகள் குசேலமாமுனி சரித்திரக் கீர்த்தனைகள், ததிபாண்ட சரித்திரக் கீர்த்தனைகள், சுபத்திரை கலியான சரித்திரக் கீர்த்தனங்கள், பகந் நாம சங்கீர்த்தனம், உருக்குமாங்கத சரித்திரக் கீர்த் தனங்கள், ஹிரிராம சங்கீர்த்தனம்.

**சின்னச்சாமிச் செட்டியார்** ( )

ஊர்: அங்குச் செட்டிப்பாளையம்.

நூல்: பூரணானந்த அடிகள் இயற்றிய சிவயோகசாரம் என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சின்னச்சாமிப் பண்டிதர்** ( )

ஊர்; செவலைப்பொறை.

நூல்: கடவுள்மாலை. இது கிறித்துபெருமானின் கருணையை வியந்துபாடும் கீர்த்தனைப் பாடல்களின் தொகுதியாகும். இதற்குப் பல புலவர்கள் சாற்றுக்கவி அளித்துள்ளனர்.

**சின்னச்சாமிப் பிள்ளை–1** (19--நூ)

ஊர்: சென்னை,

இவர் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரின் மாணவர்.

நூல்: தனிப்பாடல்கள். இவை இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவரிடம் புத்தகங்கள் கேட்டுப் பாடிய பாடல்கள்.

**சின்னச்சாமிப்பிள்ளை-2** (19--நூ)

ஊர்: திருவாரூர்.

இவர் புரசை அட்டாவதானம் சபாபதிமுதலியாரின் மாணவர்.

நூல்; ஞானசித்த புராணம்.

**சின்னச்சாமிப்பிள்ளை-3** (19-நூ)

ஊர்: புரசை.

நூல்: மும்மணிமாலையென்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சின்னச்சாமிப்பிள்ளை-௪** (20-நூ)

ஊர்: பெருநகர். தந்தை: கந்தசாமிப்பிள்ளை. தாய்; கமலம்மாள் சரட்டுக் கருணிகர் குலம்.

வாழ்ந்த காலம்: 1882-1945.

இவர் இவருடைய தந்தையாரிடமும் அவ்வூர்த்தில்லை முதலியாரிடமும் பாடங்கேட்டார்.

நூல்: முருகப்பிரான் புகழ்க் கீர்த்தனங்கள், பிரமநகர் செங்கழுநீர் விநாயகர் பஞ்சரத்தினம், வாலாசாநகர் வீரகாளியம்மன் பதிகம்.

**சின்னச்சாமி முதலியார்** (20-நூ)

இவர் எம். ஏ., பட்டம் பெற்றவர். சென்னை அரசாங்கச் செயலகத்தில் சூப்பரின்டெண்டாகப் பணியாற்றினர்.

தியாகையரின் மாணவர்களான உமையாள்புரம் கிருட்டிண பாகவதர், சுந்தரபாகவதர் ஆகியோரிடமிருந்து தியாகையரின் கீர்த்தனைகளைக் கற்றுக் கொண்டார். மேனாட்டவருக்குக் கருநாடக இசையின் சிறப்பை எடுத்து காட்டுவதற்காகத் தியாகையரின் கீர்த்தனைகளையும், மற்றஇசைப்புலவர்களின் உருப்படிகளையும் மேனாட்டு இசைக் குறியீட்டு முறையில் எழுதி அச்சிட்டுள்ளார். முதலில் சஞ்சிகைகளில் வெளிவந்த உருப்படிகளை ஒன்றாகத் தொகுத்து 1892ஆம் ஆண்டில் ஒரு நூலாக வெளியிட்டுள்ளார். இந்நூலில் நாட்டுப்பாடல்கள் சிலவும் அடங்கியுள்ளன. இந்நூலில் கருநாடக இசை இலக்கணத்தைக் குறித்து ஆங்கிலத்தில் நீண்ட கட்டுரை ஒன்று எழுதியுள்ளார். மேல் நாட்டவர்கள் இந்திய நாட்டு இசையின் உயர்வை அறிவதற்கு இந்நூல் பெரிதும் உதவு வதாகும்.

இவர் சுப்பராம தீட்சிதர் என்பவர் சங்கீத சம்பிரதாய பிரதர்சனி என்னும் நூலை இயற்றத் தூண்டுகோலாக இருந்தார். மேனாட்டு இசைக்குறியீட்டு முறையில் இவரால் எழுதப்பட்ட இசையேடுகள் பல இன்னும் வெளியாகாமல் உள்ளன.

**சின்னத்தம்பி-நா. (19--நூ)**

**ஊர்:** யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த உடுப்பிட்டியில் தனக்காரக் குறிச்சி.

**தந்தை:** தாமோதரம்பிள்ளை.

**வாழ்ந்த காலம்:** 1830--1878.

இவர் தியாகராச பண்டிதரிடம் கல்வி கற்றவர்; கணித சோதிட நூல்களில் வல்லவர். வாழ்நாள் முழுவதும் பிரமச்சரியாகவே இருந்து ஆசிரியராகப் பணியாற்றிச் சைவத்திற்கும் தமிழிற்கும் தொண்டாற்றியவர்.

**நூல்:** நிலஅளவைச் சூத்திரம், சோதிடச் சுருக்கம், மதனவல்லி விலாசம், இராமவிலாசம், சிவதோத்திரக் கீர்த்தனை, புதுச்

சந்நிதி முருகன் பதிகம், விக்னேசுரர் பதிகம். வீரபத்திரர் ஊஞ்சல், வீரமாகாளியம்மன் பதிகம், வீரபத்திரர் சதகம், வீர பத்திரர் பதிகம்.

**சின்னத்தம்பி உபாத்தியாயர்-க. (20-நூ)**

ஈழவள நாட்டில் அல்வாய் தெற்குச் சைவப்பிரகாச வித்தியாசாலையில் ஆசிரியராகப் பணிபுரிந்தவர்.

நூல்: பல நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சின்னத்தம்பி ஐயர் ( )**

ஊர்: பாலக்காட்டுச்சேரி (கொப்பம்).

நூல்: நாலுமந்திரிகும்மி; இந்நூல் 243 செய்யுட்களையுடையது. இது நாலுமந்திரியின் கதையைப் பொருளாகக் கொண்ட கும்மி நூல். கும்மிப்பாட்டின் இசையமைதி பொருந்திய பாடல்களில் கதை செல்கிறது.

**சின்னத்தம்பி நாட்டார்-பு. சி. ( )**

ஊர்: பாண்டிச்சேரி. தந்தை: இருசப்ப உபாத்தியாயர்.

நூல்: பருவதராஜபுராணச் சுருக்கம் (1875). இந்நூல் 167 செய்யுட்களைக்கொண்டது. பருவதகுல செம்படவரின் மேன்மையினையும் அவர்கள் குல வரலாற்றினையும் கூறுவது. நூலின் இறுதியில் இக்குலத்தாரைப் பற்றிய செய்திகள் வினாவும் விடையுமாகத் தரப்பெற்றுள்ளன.

**சின்னத்தம்பிப் பத்தர் (20-நூ)**

நூல்: பூரணாநந்த அடிகள் இயற்றிய சிவயோகசாரம் என்னும் நூலிற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சின்னத்தம்பிப் பிள்ளை-தொ. து. ( )**

நூல்: சிவக்ஷேத்திர மான்மிய சங்கிரகம் (1882). இது உரை நடை நூலாகும். சிவத்தலங்களைப் பற்றிச் சுருக்கமான

விவரங்கள் அமைந்த நூல். தலங்களுக்குச் செல்லும் வழியினைப் புலப்படுத்தும் படம் ஒன்றும் அமைந்துள்ளது.

**சின்னத்தம்பிப்பிள்ளை—ம க ( )**

நூல்: இல்லற ஒழுக்கம், இல்லற ஒழுக்கமும் சதாகாலத்திரியாங்கமும்.

**சின்னத்தம்பிப் புலவர்—சி. (18--நூ)**

ஊர்: யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த இணுவில்.

தந்தை: சிதம்பரநாதர்.

இவர் ஒல்லாந்த அரசினரிடம் சாதனம் எழுதும்வேலையில் இருந்தார். அவ்வேலையில் ஏற்பட்ட ஒரு சிறு தவறு காரணமாக அரசினர் இவரைச் சிறைப்படுத்தினர். அப்போது இவர் தம்முடைய வழிபடு தெய்வமாகிய சிவகாமசுந்தரி அம்மை மீது ஒரு பதிகம் பாடினார். காவலர்கள் இவர்பால் இரக்கம் கொண்டு இவரை விடுதலை செய்தனர்.

நூல்: கயிலாயநாதன்மீது பஞ்சவர்ணத்தூது, நொண்டி நாடகம், அநிருத்திரநாடகம், கோவலன் நாடகம், இணுவில் சிவகாமி அம்மைமீது திருவூசல், இரட்டைமணிமாலை, சதகம், இளந்தாரிப் புராணம்.

இவற்றுள் முதல் நூல் ஒல்லாந்த அமைச்சர் மகனாகிய கயிலாயநாதன்மீது பாடப்பெற்றது.

**சின்னத்தம்பிப் புலவர்—வி. (18-நூ)**

ஊர்: யாழ்ப்பாணம் நல்லூர்.

தந்தை: வில்வராய முதலியார்.

இவர் சிறுவராக இருந்தபோதே கவிபாடும் ஆற்றல் பெற்றார். கல்வியில் மனம் செலுத்தாமையால் தந்தையாரால் கடியப் பெற்றார். ஆயினும் தந்தையார் விட்டுச் சென்ற

பாடலைப் பாடி முடித்தும் புலவர் குழுவிற் கம்பராமாயணச் செய்யுளுக்கு உரைவிளக்கம் கூறியும் பாராட்டுப் பெற்றார். யாழ்ப்பாண தேச வளமைச் சட்டத்தினைத் திருத்தியமைக்கப் பாடுபட்டவர்களில் இவரும் ஒருவர்.

**நூல்:** மறைசை அந்தாதி, கல்வளையந்தாதி, கரவை வேலன் கோவை, பருளைப்பள்ளு.

இவர் தம் நூல்களுக்கு அறிஞர்கள் உரைவகுத்துள்ளனர். கோவை நூலின் பாட்டுடைத் தலைவராகிய வேலாயுதம் பிள்ளை ஒவ்வொரு செய்யுளுக்கும் பொற்றேங்காய் தந்து சிறப்பித்தார என்பர்.

**சின்னத்தம்பியாப்பிள்ளை** (19--நூ)

**நூல்:** நாராயணசாமி நாயகர் என்பவர் இயற்றிய திருக்கண்ண புரப்புராணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சின்னப்ப நாயக்கர்** (        )

**வே. பெ:** வேலச் சின்னோவையன்.

**ஊர்:** பழநி.

இவர் பாலசமுத்திரத்தில் இருந்த விசுவகோபால துரை யால் ஆதரிக்கப் பெற்றவர்.

**நூல்:** பழநிப்பிள்ளைத் தமிழ்.

இந்நூலினை டாக்டர். வே. சாமிநாதையர் பதிப்பித் துள்ளார், 1954ஆம் ஆண்டில் வந்த பதிப்பு இந்நூலின் ஆசிரியர் பழநிப் பெருநிலக்கிழார் விசயகிரி வேலசின்னோ வையன் என்கின்றது. அவர்களுக்கு நாயக்கர் என்கின்ற பட்டம் உண்டு. எனவே இரு பெயர்களும் ஒருவரையே குறிப்பதாகக் கொள்ள வேண்டியுள்ளது..

**சின்னப்பாபிள்ளை—சி. வை. ( )**

ஊர்: யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த சிறுப்பிட்டி. சி. வை. தாமோதரம்பிள்ளை இவருடைய உடன் பிறந்தவர்.

நூல்: வீரசிங்கன் கதை, இரத்தினபவானி, விசயசீலம்.

இந்நூல்கள் அனைத்தும் புதினங்கள்.

**சின்னப்பாவு முதலியார் (19--நூ)**

வாழ்விடம்: நாகப்பட்டினத்தையடுத்த சிற்றூரில் வாழ்ந்தவர்.

நூல்: திருஞானக்கீர்த்தனைத் திரட்டு, வேளாங்கண்ணி வழிநடைப் பதம்.

இந்நூல்களுள் முதல் நூல் ஏசுக்கிறித்துவை வாழ்த்திப் பரவும் இசைப்பாடல்களாலாகியது. இரண்டாவது நூல் நாகப்பட்டினத்தையடுத்த வேளாங்கண்ணி மாதாவைக் கண்டு வணங்கச் செல்லும் பத்தர்கள் வழிநடைப் பதமாகப் பாடிச் செல்லும் பாடல்களையுடையது. பத்துப் பாடல்கள் உள்ளன

**சின்னப்பாவு முதலியார்—ச. (19--நூ)**

தந்தை: சடையப்ப முதலியார்.

இவர் சென்னையில் தமிழாசிரியரர்கப் பணியாற்றியவர்.

நூல்: திருவொற்றியூர்த்தலபுராண உரைநடை.

**சின்னமெய்யப்ப ஐயா (19--நூ)**

ஊர்: காரைக்குடி

நூல்: சதாவதானம் பாலசுப்பிரமணிய ஐயர் இயற்றிய கண்டனூர் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், சுந்தரேசம் பதிகம் என்னும் நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சின்னவப்புலவர்** (20-நூ)

ஊர்: யாழ்ப்பாணம் மட்டக் கிளப்பினைச் சார்ந்த செட்டிபாளையம்.

தந்தை: கணபதிப்பிள்ளை சட்டம்பியார்.

வாழ்ந்த காலம்; 1877-1926.

நூல்: மழைவேண்டிக் கந்தையன் பேரில் பாடிய காவடிப்பாட்டு, அம்பாரைக் கொலனி, இலங்கைச் சுதந்திரம்.

**சின்னவீரப்பச் செட்டியார்** (19-நூ)

ஊர்: அகரம்.

நூல்: சென்னை ஏகாவலி அம்மன் பேரில் கீர்த்தனை, பழனி யாண்டவர் கீர்த்தனை, ஆநந்தக் களிப்பு, பாலசுப்பிரமணியர் பேரில் பாமாலை விருத்தம்.

**சின்னுரெட்டியார்-மு.** (19-நூ)

ஊர்: உரத்தூர்.

தந்தை: முத்துக்குமரப்ப ரெட்டியார்.

நூல்: திருவாமாத்தூர்ப் புராணத்துக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சின்னையச் செட்டியார்-நா.** (20-நூ)

ஊர்: சேலம் மாவட்டம் பெண்ணாகரம்

தந்தை: நாகைய செட்டியார்; தாய்-மாறக்கம்மாள்.

பிறந்தநாள்: 1-9-1905.

இவர் பள்ளியில் 8ஆம் வகுப்பு வரை படித்தவர். ஆங்கில மொழிப் பயிற்சியும் உடையவர். டாக்டர் பி. வரதராசலு நாயுடு சென்னையில் நடத்திய தமிழ் நாடு நாழிதழில் பணியாற்றியுள்ளார். 1927ஆம் ஆண்டு

முதல் கைம்பெண் மரணம், கலப்பு மணம், தீண்டாமை ஒழிப்பு முதலிய சமூக சீர்திருத்தப் பணிகளில் ஈடுபட்டார். யோக சாதனை, யோகாசனப் பயிற்சி முதலியனவும் அளித்தார். இவை பற்றிய கருத்துக்களை விளக்கி பத்மசோதி என்ற இதழிலும் பிற இதழ்களிலும் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

நூல்: ஆன்மஞானம் அல்லது அவசிய அறிவு, உண்மை ஒளி அல்லது உலக ஒழுக்கம், இன்பம் தரும் இயற்கை வழி.

**சின்னையச்செட்டியார் வீர. லெ. (19-- நூ)**

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் தேவகோட்டை; நாட்டுக் கோட்டை நகரத்தார். இவர் வன்றொண்டச்செட்டியாரின் மாணவர்.

நூல்: அருணைச்சிலேடை வெண்பாமாலை, சிலம்பைப் பதிற்றுப் பத்தந்தாதி, தேவைத்திரிபந்தாதி, மதுரை மீனாட்சியம்மை பதிகம், மயின்மலைப்பிள்ளைத் தமிழ்.

தேவை-இராமேசுவரத்தைக் குறிக்கும். அவ்வூர் இறைவனைப் புகழ்ந்து கூறுவது தேவைத் திரிபந்தாதி. இவ்வைந்து நூல்களும் ஒன்றாக்ச் சேர்ந்து 1885 இல் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

**சின்னைய தேசிகர் ( )**

ஊர்: பொய்கைப்பாக்கம்.

நூல்: மயிலாசலத்தந்தாதி.

**சின்னைய நாயகர் (20-நூ)**

ஊர்; தொண்டை நாட்டில் திருவிசை நல்லூர்.

இவர் சாதுஇரத்தின சற்குருவின் வேதாந்த சபையில் தொண்டு செய்தவர்.

நூல்: பகவத்கீதை (தமிழ்) 665 செய்யுட்கள்.

**சின்னையன்** ( )

சோலையப்பக் கவிராயரின் மாணவர்.

நூல்: பாகவத வசனம், சாரங்கதரன் கதை, திருச்செந்தில் அந்தாதி.

திருச்செந்தில் அந்தாதியில் 36 முதல் 100 வரை இவரால் பாடப்பெற்றது. முதலில் அமைந்த பாடல்கள் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளின் பெயரில் உள்ளன.

**சின்னையா முதலியார்** (19-நூ)

ஊர்; அரிகரபாடி.

இவர் ஈசூர் சச்சிதானந்த அடிகளிடம் வேதாந்த நூல்களைக் கற்றார்.

நூல்: இடருன்னுவோர்க் கறிவுறுத்தல், சுந்தர ராஜப் பெருமாள் கீர்த்தனம், சுப்பிரமணியக் கடவுள் நவரெத்தினம், தாயாதி துன்பசாரம், துன்பமின்றி வாழ அறிவுறுத்தல், விவேகானந்த சுவாமிகள் தோத்திரமாலை.

**சீகன் பால்கு ஐயர்** (18-நூ)

ஊர்; ஜெர்மனி நாட்டு சக்சோனியா.

வாழ்ந்த காலம்: 1683-1719.

தமிழ் மொழியில் முதன் முதலாகப் புத்தகங்களை அச்சிட்டவர் இவரேயாவர். இவர் ஆலிப்பட்டணத்தில் உள்ள பல்கலைக் கழகத்தில் உயர் கல்வி கற்றார். தஞ்சாவூரையடுத்த தரங்கம் பாடியில் வணிகம் செய்த டேனிஷ்காரார்களுக்கும் மற்றுமுள்ள தமிழர்களுக்கும் சமய போதனை செய்வதற்காக டென்மார்க் அரசன் நான்காம் பிரடெரிக் என்பவரால் தமிழ் நாட்டுக்கு அனுப்பப்பட்டவர்.

இவர் தம்முடைய நண்பராகிய பிளீச்செள என்வருடன் தரங்கம்பாடிக்கு வந்தார். அங்கிருந்த டேனிஷ்கரரர்களுக்கு

ஜெர்மனி நாட்டைச் சேர்ந்த இவரைப் பிடிக்கவில்லை. அதனால் இவருக்குப் பல தொல்லைகள் ஏற்பட்டன. ஆனாலும் இவர் தளர்ச்சியடையவில்லை. சமயத்தொண்டுக்குத் தமிழ் மொழியைப் படிப்பது அவசியமாயிருந்தது

இவர் திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியராக இருந்த எல்லப்ப உபாத்தியாயரிடம் தமிழ் கற்றார். பனை ஓலைகளில் எழுதப் பெற்றிருந்த பாடல்களைக் கற்கவும் பயிற்சி பெற்றார். ஓலைச் சுவடிகள் பலவற்றைத் தொகுத்துத் தமிழ் நூல் நிலையம் ஒன்றும் ஏற்படுத்தினார். நாடோறும் அச்சுவடிகளைப் படித்ததுடன் பிறரைப் படிக்கச் சொல்லியும் கேட்டார்.

இவர் தரங்கம்பாடியிலும் மற்ற இடங்களிலும் மாதா கோயில்களைக் கட்டிப் பலரைக் கிறித்தவசமயத்தில் சேர்த்தார். சிறுவர்கட்குப் பள்ளிக்கூடங்கள் சிலவற்றை ஏற்படுத்தினார். கிறித்தவ சமய நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்தார். பின்னர் இவர் நாட்டிற்குத் திரும்பியபோது டென்மார்க் நாட்டு மன்னர் இவரது சமயப் பணிகளைப் போற்றி இவரைத் தரங்கம்பாடி மிஷனுக்குத் தலைவராக்கினார். இவருடைய காலத்தில் தமிழ் மொழியில் அச்சிடப்பட்ட நூல்களேயில்லை. பாடநூல்களையும் சமயநூல்களையும் அச்சிட அச்சுப்பொறி உதவியாக இருக்கும் என்றெண்ணி இங்கிலாந்தில் உள்ள கிறித்தவ அறிவு விளக்கச் சங்கத்திற்கும் ஜெர்மனியில் உள்ள தன் நண்பர்கட்கும் எழுதி அச்சுப் பொறியினையும் தமிழ் அச்செழுத்துக்களையும் அச்சிடும் தாளினையும் பெற்று 1713ஆம் ஆண்டில் முதன் முதல் சில தமிழ் நூல்களை அச்சிட்டு வெளியிட்டார்.

நூல்: தமிழ்-இலத்தீன் இலக்கணம், தமிழ்-இலத்தீன் அகராதி.

## சீகாழித் தாண்டவராயர் ( )

ஊர்; சீர்காழி. திருவாரூரில் இருந்த குருசாமியடிகள் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றுச் சைவ சித்தாந்த நூல்களிலும் பிற நூல்களிலும் சிறந்த புலமை அடைந்து திகழ்ந்தார்.

நூல்: திருவாசக விரிவுரை.

## சீர்காழி வள்ளல் ( )

பார்க்க: கண்ணுடைய வள்ளல்.

## சீத்தலைச் சாத்தனார் (சங்க காலம்)

இ. பெ: சாத்தன்.

ஊர்: *சீத்தலை.*

ஆர் என்னும் சிறப்பு விகுதி பெற்றுச் சாத்தனார் எனப் பட்டார். *சீத்தலை* என்பது செந்தலை, கழாத்தலை வடதலை குளித்தலை என்பன போல ஒரு ஊரின் பெயராகும். சாத்தனார் என்பது தெய்வத்தின் பெயர் தலின் தெய்வத்தோடு தொடர்ந்த பெயராகக் கொள்ளலாம். இவர் சங்க நூல்களில் குற்றம் காணும் தோறும் எழுத்தாணியால் குத்திக் கொள்வது வழக்கம் எனவும் அதனால் சீழ் பிடித்துக் கொண்டிருக்குமாதலால் *சீத்தலைச்* சாத்தனார் எனப்பட்டார் எனவும் பெயர்க் காரணம் கூறுவர். இவர்கள் கூற்றுக்கு ஆதாரமாகத் திருவள்ளுவ மாலையில் மருத்துவன் தாமோதரனார் கூறிய ''வள்ளுவர் முப்பாலாற்றலைக்குத்துத் தீர்வு சாததற்கு'' என்னும் தொடரை எடுத்துக் காட்டுவர். தொல்காப்பிய உரையிலே சினைமுதற் பெயருக்குச் *சீத்தலைச்* சாத்தனார் என்னும் பெயரை இளம் பூரணர் உதாரணம் காட்டுவதும் ஓர் ஆதாரம் என்பர்; இது பொருந்தாது. தலைக்குத்து என்பது தலைவலி எனவும் பொருள் தருவது உலகியலில் காணப்படுமாதலானும் மனவருத்தம் அடைவர் என்பதே பொருள் ஆகும். *சீத்தலையிற்* பிறந்து மதுரைக்கு வந்து அங்கே கூலவாணிகம் செய்து வந்தமையால் இவர் மதுரைக் கூலவாணிகன் *சீத்தலைச்* சாத்தனார் எனவும் கூலவாணிகன் சாத்தனார் எனவும் வழங்கப்பட்டார். இவரும் கடைச்சங்கப் புலவர்களில் இருந்த நக்கீரர், கபிலர், பரணர் என்பார் போலப் புகழ்பெற்றவராவார். இளங்கோவடிகள் இவரைத் தண்டமிழ்ச் சாத்தன், தண்டமிழ் ஆசான் சாத்தன், நன்னூற் புலவன் என்று பலவாறு பாராட்டுதலால் இப் புலவரின் சிறப்பு விளங்கும். இவரைப் பௌத்த மதத்தினர் என்பர். சிலப்பதிகாரத்தின் தொடர்ச்சியாகிய மணிமேகலையை இவர் பாடினார். பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனைப் பாடினவரும் இவரேயாவர்.

நூல்: அகம் 53 134 229 306 320.
குறுந்; 154, நற், 36, 127, 339, புறம்: 59.

**சீத்தலையார்** ( )

நூல்: இவர் செய்த பாட்டியற் சூத்திரங்கள் பன்னிரு பாட்டியலின் பகுதி எனக் கொள்ளப்படும்.

**சீதக்காதி நொண்டி ஆசிரியர்** (17-நூ)

இப்புலவரின் இயற்பெயர் தெரியவில்லை.

நூல்: சீதக்காதி நொண்டி நூல்.

இந்நூல் சீதக்காதியார் மீது பாடப்பெற்றது; இதில் 220 பாடல்கள் உள்ளன.

**சீதாராமதாசர்** ( )

ஊர்: பாகை.

நூல்: இராமாநுச சரிதை.

இந்நூல் 1215 செய்யுட்களைக் கொண்டது.

**சீதாராமையங்கார்** (20-நூ)

ஊர்; நாட்டரசன்கோட்டை.

நூல்: கல்யாணசுந்தரம்பிள்ளை யென்பவர் நாட்டரசன் கோட்டை கண்ணப்ப செட்டியார்மீது இயற்றிய 'காதல்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சீனிச்சர்க்கரைப் புலவர்** (19-நூ)

ஊர்: இராமநாதபுரம்.

தந்தை: இராமநாதபுரம் சமஸ்தானப் புலவராக விளங்கிய சர்க்கரைப் புலவர்.

உடன்பிறந்தவர்: மயூரகிரிக் கோவை பாடிய சாந்துப் புலவர்.

இவர் இராமநாதபுரம் சேதுபதியின் அரசவைப் புலவர்.

நூல். புகையிலை விடு தூது.

59 கண்ணிகளால் சிலேடை நயந்தோன்ற அமைந்த இந்நூல், ஒரு தலைவி புகையிலையினை முருகக் கடவுளிடம் தூதுவிடுவதாகப் பாடப்பெற்றுள்ளது; 53 கண்ணிகள் புகையிலையினைப்பற்றியன.

திருச்செந்தூர்ப்பரணி என்னும் நூலும் இவரால் பாடப் பெற்றது என்று கூறுப.

## சீனிப்புலவர் (18-நூ)

*தந்தை: சர்க்கரைப்புலவர்.*

நூல்: திருச்செந்தூர்ப் பரணி, துறைசைக் கலம்பகம். திருச் செந்தூர்க் கோவை.

வேதாந்த சூடாமணி, சித்தாந்த உரை என்ற நூல்களையும் இவர் செய்தார் என்றும் கூறுவர்.

## சீனிவாச ஆறுமுகம் பிள்ளை (19-நூ)

ஊர்; புதுச்சேரி.

நூல்: புருடோத்தம பிள்ளை வெளியிட்ட காரைக்காலம்மையார் புராணம் மூலமும் அரும்பொருள் உவமைச் செய்யுட்டிரட்டும் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சீனிவாச உபாத்தியாயர் (19-நூ)

ஊர் கஞ்சம்.

நூல்: பிறைசை அருணசல சாமிகள் இயற்றிய வேதாந்த சூடா மணி யுரையைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சீனிவாச ஐயங்கார்-1 (20-நூ)

வே. பெ: மதுரகவி *சீநிவாசய்யங்கார்.*

ஊர்: மதுரை மாவட்டம் பெரிய குளத்தையடுத்த அநுமந்தன்பட்டி.

நூல்: வடமொழியில் உள்ள கோதாஸ்துதி யென்னும் நூலின் தமிழாக்கம்.

**சீனிவாச ஐயங்கார்–2** (20-நூ)

ஊர்: கும்பகோணம்.

இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் கல்வி பயின்றவர். கும்பகோணம் நேடிவ் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: திருக்கூடலையாற்றூர் மும்மணிக்கோவை, திருக்குடந்தை மான்மியம், கோல்டு ஸ்மித் வரலாறு.

**சீனிவாச ஐயங்கார்–3** (19-நூ)

ஊர்: கோயம்புத்தூர்.

நூல்: கிருட்டிணமாச்சாரியார் பி. ஆர். என்பவர் சதாசிவ முதலியார் மீது பாடிய இரட்டை மணிமாலை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சீனிவாச ஐயங்கார்–எம்** (20-நூ)

நூல்: தமிழ்க் கட்டுரைகள். (Tamil Studies) (1914)

இந்நூல் ஓர் ஆராய்ச்சி நூல். வடநாட்டு நாகர்கள் மங்கோலியர் என்றும், தென்னாட்டு நாகர்கள் தமிழர் கட்கு முன்னால் இந்நாட்டில் வாழ்ந்தவர் என்றும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது.

**சீனிவாச ஐயங்கார்-எஸ்** (20-நூ)

நூல்; பண்டைத் தமிழரசர் (1925).

**சீனிவாச ஐயங்கார்–கே.** (20-நூ)

வாழ்ந்த காலம்: 1897-1953.

நூல்: அபயப்ரதராஜ விஜயம், நாராயண ஸூக்தவியாக்யானம், பலதாரமணம், புருஷ ஸூக்த வியாக்யானம்.

**சீனிவாச ஐயங்கார்—தி. செ.** (20-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் திருப்புல்லாணி. தந்தை; செல்வம் ஐயங்கார். வாழ்ந்த காலம்: 8 5-1876—9-12-1951

சேதுபதி மன்னரின் உதவி பெற்றுக் கல்வி கற்றவர்; பி. ஏ. பயின்றவர்; பாண்டித்துரைத் தேவரின் உதவியில் தமிழில் புலமை பெற்றவர். சட்டத் தேர்விலும் வெற்றி பெற்றுத் தம் உறவினர் கோபால ஐயங்காரிடம் வழக்கறிஞர் பயிற்சி பெற்றவர், வழக்கறிஞர் தொழிலில் பெருமையும் புகழும் பொருளும் பெற்றார். பாண்டித்துரைத் தேவரால் நிறுவப்பெற்ற தமிழ்ச் சங்க வளர்ச்சியில் பெரிதும் ஈடுபாடு கொண்டு பணியாற்றியவர். இராமநாதபுரம் கோட்ட ஆட்சிக் குழு, மாவட்ட ஆட்சிக்குழு ஆகியவற்றிலும் தொண்டாற்றினர். மதுரை வழக்கறிஞர் சங்கத் தலைவராகவும், கலைக்கழகத்தின் தலைவராகவும் பொறுப்பேற்றிருந்தார். 1920ஆம் ஆண்டு முதல் 1940ஆம் ஆண்டு வரை மூன்று முறை சென்னை சட்டசபை உறுப்பினராக இருந்துள்ளார். இவர் புலமை பெற்றிருந்ததோடு சிறந்த புரவலராகவும் விளங்கினர். மதுரைத் தமிழ்ச்சங்க மாணவர்களுக்கு உடை வழங்கிய தோடு, அக்கல்லூரியில் பயில வரும் மாணவர் சிலருக்குப் பொருளுதவிசெய்தார். தம்பால் வந்த புலவர்கள் பலருக்குப் பொருள் வழங்கிச் சிறப்புச் செய்துள்ளார். இதனால் இவர் மீது சித்திரகவிகளும், தனிப்பாடல்களும், நான்மணிமாலை, இரட்டைமணிமாலை, உலா முதலிய நூல்களும் இயற்றப் பெற்றுள்ளன.

நூல்: திருப்புல்லாணி மான்மியம்

வடமொழியில் உள்ள திருப்புல்லாணி மான்மியம் நூலினைத் தமிழில் உரைநடையாக மொழிபெயர்த்து அச்சிட்டு வெளியிட்டுள்ளார். கம்பராமாயணம், திருக்குறள் முதலிய நூல்கள் குறித்துச் சொற்பொழிவுகள் பல நிகழ்த்தியுள்ளார். பத்திரிகைகளில் மதிப்புரைகள் சிலவும் எழுதியுள்ளார்.

**சீனிவாச ஐயங்கார் பி. டி (20-நூ)**

இவர் முதலில் சென்னைப் பல்கலைக் கழகத்திலும், பின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் தமிழ் ஆராய்ச்சித் துறையில் பணியாற்றியவர்.

நூல்: தமிழர் வரலாறு தொடர்பாக ஆங்கில மொழியில் பல ஆராய்ச்சி நூல்கள், கற்கால இந்தியா, (Stone Age in India-1926), தமிழர் வரலாறு (History of Tamil 1929) ஆரியருக்கு முந்திய தமிழர் பண்பாடு (Pre Aryan Tamil Culture-1930) பூர்வீக இந்தியாவில்மக்கள் வாழ்க்கை (Life in ancient India in the age of the mantras 1912) இந்திய தத்துவ ஞானத்தின் சுருக்க வரலாறு (Onttines of Indian Philosophy 1909) பல்லவர் வரலாறு.

**சீனிவாச ஐயங்கார் வி. (20-நூ)**

நூல்: சங்கீதானுபவஸார சங்கிரகம்

**சீனிவாச ஐயர் ( )**

நூல்: இலக்குமிகாந்த சதகம்.

**சீனிவாச ஐயர் எஸ் (19-நூ)**

பிறப்பு: 1888.

நூல்: சில சோழ மன்னர்கள் (1940)

**சீனிவாசக நாடார் (19-நூ)**

ஊர்: அருப்புக்கோட்டை.

நூல்; தாமோதரம்பிள்ளை க. என்பவர் இயற்றிய சிருக்குளம் விநாயகர் அந்தாதி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சீனிவாசகர்** (19-நூ)

ஊர்; இராமநாதபுரம்

நூல்: சதிராட்டத்திற்குரிய பாடல்கள்.

**சீனிவாசகர்-1** (       )

நூல்: சீயர் ஈடுபாடு (குணதர்ப்பணம்)

**சீனிவாசகர்-2.** (       )

ஊர்: திருமலை

நூல்: பிரபந்த நிர்வாகம்

**சீனிவாச சண்முகப்பிள்ளை** (19-நூ)

நூல்: நாராயணசாமி நாயுடு பெ. என்பவர் இயற்றிய மனுச் சோழச் சக்கிரவர்த்தி வாசகப்பா என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சீனிவாச சாந்திரியார் வ. ச.** (20-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணம் அருகேயுள்ள வலங்கைமாள்.

தந்தை: சங்கர நாரயண சாத்திரியார்; தாய் பாலாம்பாள்

வாழ்ந்த காலம்; 22-9-1869 -1946

மகாகனம் சீனிவாச சாத்திரியார் என்று அழைக்கப்பட்ட இவர் அரசியலில் ஈடுபட்டுப் பெருந்தொண்டாற்றினர். இவர் ஆங்கிலத்தில் பெரும் புலமை பெற்றுத் திகழ்ந்ததோடு தமிழார்வம் மிக்கவராகவும் விளங்கினர். 1883ஆம் ஆண்டில் மெட்றிகுலேஷன் தேர்வில்வெற்றி பெற்ற இவர், 1887ஆம் ஆண்டில் பி.ஏ, தேர்வில் முதல் வகுப்புப் பெற்று மாநிலத்தில் இரண்டாவதாகத் தேறினர். வடமொழியில் மாநிலத்தில் முதன் மையாகத் தேறி, கொடேவரித் தங்கப் பதக்கத்தைப் பெற்றார்.

பி.ஏ. தேர்வு பெற்று மாயூரம் நகரசபைஉயர்நிலைப் பள்ளியில் ஆசிரியப்பணி ஏற்றார். 1891ஆம் ஆண்டில் சைதாப்பேட்டை ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்தார். 1893ஆம் ஆண்டில் சேலம் நகராட்சிக் கல்லூரியில் துணை ஆங்கில ஆசிரியரானார். பிறகு சென்னை பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி. திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப்பள்ளி ஆகியவற்றிலும் அலுவல் புரிந்தார்.

சாத்திரியார் ஆசிரியத்தொழில் புரிந்தபோதே பொது நலப்பணியிலும் நாட்டஞ் செலுத்தினார். இதன் விளைவாகச் சென்னை திருவல்லிக்கேணியில் கூட்டுறவுப் பண்டகசாலை ஒன்றை நிறுவினார். அதே ஆண்டில் சென்னை ஆசிரியர் சங்கத்தை ஏற்படுத்தினார். சிறந்த சொற்பொழிவாளராகத் திகழ்ந்த இவர் இளமைமணத்தின்கேடுகளை யாவரும் உணருமாறு எடுத்துரைத்தார். இது குறித்து ஆங்கிலத்தில் ஒரு நூலும் எழுதினார். 1907ஆம் ஆண்டில் கோபாலகிருட்டிண கோகலே ஏற்படுத்திய இந்திய ஊழியர் சங்கத்தில் உறுப்பினரானார். 1908இல் சென்னை தேசிய காங்கிரசு மாநாட்டில் வரவேற்புக்குழுச் செயலாளராக இருந்தார். 1913ஆம் ஆண்டில் சென்னை சட்டசபை உறுப்பினராக நியமிக்கப் பெற்றார். அப்போது இளமைமணத்தடைச் சட்டத்தைக் கொண்டு வந்தார். 1915ஆம் ஆண்டில் கோபால கிருட்டிண கோகலே இறந்தவுடன் இந்திய ஊழியர் சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். 1916ஆம் ஆண்டில் பிரிட்டீஷ் கொடியின் கீழ் இந்தியாவிற்குச் சுயாட்சி என்னும் ஆங்கில நூலை இயற்றினார். இவர் சென்னை சட்டசபை உறுப்பினர்களால் அரசப் பிரதிநிதி சபைக்குத் தெரிந்தெடுக்கப்பட்டார். இவ்வாறு பல ஆண்டுகள் பொதுநலப் பணி ஆற்றிய பிறகு 1935ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பதவியை ஏற்றார்.

நூல்: என் வாழ்க்கையின் அம்சங்கள், மீண்டும் வாழ்ந்தால்.

இவை சாத்திரியாருடைய வரலாற்றினைக் கூறுவன. பத்திரிகைகளில் கட்டுரைகளாக வந்து நூல் வடிவம் பெற்றன.

**சீனிவாச தாசர்** (19-நூ)

ஊர்: திரிசிரபுரம்

நூல்: திருமூர்த்தி நாயனுர் என்பவர் இயற்றிய நாலுமந்திரி கதை என்னும் நாடக நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சீனிவாச தாசன்** ( )

நூல்; விண்ணப்பப் பத்திரிகை

**சீனிவாச தாத தேசிகர்** ( )

நூல்; துரோண பர்வ தாத்பரிய சந்திரிகை

**சீனிவாசதாதாச்சாரிய சாமிகள்** (19–நூ)

ஊர்: திருமுட்டத்தைச் சேர்ந்த பரூர்

நூல்: பூவராகரந்தாதி, வேதநாரயணன் போற்றிமாலே

**சீனிவாச தேசிகன்** ( )

நூல்: யதிந்திரப் பிரவணஸ்வரூப விஞ்ஞான விகாச தர்ப்பணம்

**சீனிவாச நாடார்** ( )

ஊர்: அம்பாசமுத்திரப் பிரிவில் கீழக்கடையம்

தந்தை: சிவனுபாண்டியனுர்.

நூல்; முருகேச சதகம்; இது தோரணமலே முருகக் கடவுள்மீது பாடப்பொற்றது.

**சீனிவாச பாரதி சாமிகள்** (19-நூ)

ஊர்: திருத்தலேயூர்; அந்தணர்.

நூல்: திருத்தலேயூர் தலபுராணம்

இது 409 செய்யுட்கள் கொண்டது.

**சீனிவாசப்பிள்ளை கே. எஸ். (20-நூ)**

ஊர்: திருச்சி அரியலூருக்கு அருகில் உள்ள கொளூர்.

தந்தை: சிவசிதம்பரம்பிள்ளை; கார்காத்த வேளாளர்.

இவர் தமிழ்ச் சான்றோர்களின் காலத்தை வரையறுத்து தமிழ் இலக்கிய வரலாற்றை முறைப்படுத்திய சிலருள் குறிப்பிடத்தக்கவர். திருச்சி மாவட்டத் தலைவரின் அலுவலகத்தில் சாதாரண எழுத்தராகத் தம் வாழ்வைத் தொடங்கி இடையருத முயற்சியால் செல்வ வளத்தையும் புகழையும் தேடிக் கொண்டார். தாமே பயின்று பட்டத் தேர்வுகள் எழுதிப்பட்டம் பெற்றார். வழக்கறிஞர் தொழிலுக்குப் பயின்று நாகப்பட்டினத்தில் வழக்கறிஞராகத் தொழில் தொடங்கினர். கரந்தைத் தமிழ்க் கல்லூரியின் வழியாக இடையருத தமிழ்ப் பணியாற்றித் தமிழுலகுக்கு அறிமுகமாகிய தமிழவேள் உமாமகேஸ்வரம்பிள்ளை இவரிடம் தொடக்கநிலை வழக்கறிஞராகப் பயிற்சி பெற்றவர். இவரது தமிழ் ஆராய்ச்சி முயற்சிக்குக் குடந்தைக்கல்லூரித் தமிழாசிரியர் தியாகராசச் செட்டியாரும் உமாமகேசுவரம்பிள்ளையும் காரணமாக இருந்தனர். ஆங்கிலக் கல்வியின் செழுமை இவர்தம் தமிழாராய்ச்சிக்குத் தக்க உரமாகவும் உண்மைகளைக் காய்தல் உவத்தல் இன்றி வெளியிடவும் உதவிற்று. தமிழ் இலக்கிய வரலாற்றை முழுமை பெற எழுதி முடிக்கப் பெரிதும் முயன்றார். கல்வெட்டு ஆராய்ச்சியின் முடிவுகளைக் கொண்டு தமிழ்ப் புலவர்களின் காலங்களை அறுதியிட இவர் செய்த ஆய்வுகள் குறிப்பிடத்தக்கன. தமிழ் வரலாறு என்ற தலைப்பில் அவை இரு பகுதிகளாக 1922இல் வெளிவந்தன. பிற்பகுதி வெளியாகவில்லை.

இவர் நாகப்பட்டினத்தில் வழக்கறிஞராக இருந்தபோது நகராண்மைத் தலைமைப் பொறுப்பு இவரை மூன்று முறை வந்தடைந்தது. தஞ்சைச் சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தின் முக்கியத்துவத்தையுணர்ந்து அது தஞ்சையிலே நிலை கொள்ளுமாறு முயன்றவர்களுள் ஒருவர். அதன் நூல்

நிலையப் பட்டியலைத் தயாரித்த உலகநாதம்பிள்ளைக்கு அவ்வப்போது வழிகாட்டிப் பட்டியலைச் செவ்விய முறையில் நெறிப்படுத்தியவரும் இவரே.

நூல்: தமிழ் வரலாறு.

**சீனிவாச முதலியார் ஏ. ஆர். (20-நா)**

ஊர்: ஆனைமலை

நூல்: ரோமியோ ஜூலியத் (மொழியாக்கம்)

**சீனிவாசா ( )**

நூல்; பரவஸ்துவைபவம்

**சீனிவாச ரங்கநாதசாமி ( )**

நூல்: நான்முகன் திருவந்தாதி உரை. இவ்வுரை நூல் நான் முகன் திருவந்தாதி வியாக்யானம் என்று வழங்கப்படுகிறது. இவ்வுரை கையெழுத்துப்படியாக உள்ளது; முற்றுப் பெற்றுள்ளது.

**சீனிவாச ராகவாச்சாரியார்-1 ( )**

நூல்: இராமாயண விசேடார்த்தங்கள்

**சீனிவாச ராகவாச்சாரியார்-2 (19-நா)**

சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தார். வடமொழியிலும் தேர்ச்சி பெற்றவர். உத்தரராமாயணம், விட்டுணுபுராணம், தசகுமாரசரிதம் ஆகியவற்றை வட மொழியிலிருந்து மொழி பெயர்த்துள்ளார்,

நூல்: கதாசங்கிரகம், தண்டியலங்கார சாரம்.

**ஸ்ரீனிவாச ராகவாச்சாரியார் சி. ஆர். (  )**

நூல்: பெஞ்சமின் பிராங்ளின் சரித்திரம் (1912)

**ஸ்ரீனிவாசலு நாயுடு பி. (  )**

நூல்: ஞானசூரியோதயம் என்னும் வேதாந்த இரகசியார்த்த வினாவிடை (1929) இந்நூலுக்கு கே. வடிவேலுச் செட்டியாரின் முகவுரையுள்ளது.

**ஸ்ரீனிவாசன்-1 (  )**

நூல்: கம்பஇராமாயண வசனம்

**ஸ்ரீனிவாசன்-2 (  )**

நூல்: கோவலவெண்பா

இது புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டமாகிய மூன்று பிரிவுகளையுடையது

**ஸ்ரீனிவாசன் எம். சி. (20-நூ)**

ஊர்: சென்னை

பிறந்தநாள்: 5-9-1908

இவர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் எம். ஏ. பி. எல். பட்டம் பெற்றவர்; வழக்குரைஞர்.

நூல்: மந்தாகினி (1937) அன்னப்படகு (1949) நீர்வீழ்ச்சி (1950) இவையனைத்தும் புதினங்கள்.

**ஸ்ரீனிவாசன் எம். பி (20-நூ)**

பிறந்த ஆண்டு; 1905

இவர் சுதேசமித்திரன் நாளிதழில் துணையாசிரியர்

நூல்: இராஜாஜி வாழ்க்கை வரலாறு

**சீனிவாசன் சி. ஆர்.** (20-நூ)

ஊர்: தஞ்சைமாவட்டம் கண்டரமாணிக்கம்.

வாழ்ந்த காலம்: 1889-1962.

இவர் 1909இல் சென்னை இராசதானிக் கல்லூரியில் பி. ஏ. பட்டம் பெற்றார். 1915இல் சுதேசமித்திரன் அலுவலகத்தில் மேலாளராகப் பணி புரிந்தார். 1928இல் சுதேசமித்திரன் நாளிதழுக்கு ஆசிரியரானார். பின்பு சுதேமித்திரனின் ஆட்சிப் பொறுப்பாளராகி இறுதிவரை பணி புரிந்தார். அனைத்திந்திய இதழாசிரியர்கள் சங்கத்தின் தலைவராக இருந்து அரும் பணிகள் செய்துள்ளார். 1957இல் ஏ பி, சி. லிமிடெட்டின் தலைவராய் இருந்தார். இந்தியப் பத்திரிகையாளர் குழுவில் தொடக்கக் காலத்தில் உறுப்பினராக இருந்துள்ளார். 1956இல் அனைத்துலகப் பத்திரிகையாளர் குழுவின் இந்திய தேசீயக் குழுத் தலைவராகப் பொறுப்பேற்றார். 1957இல் அமெரிக்காவுக்குச் சென்று இந்தியப் பத்திரிகாசிரியர் கூட்டத்திற்குத் தலைவராய் இருந்தார். அமெரிக்காவில் நடைபெற்ற இம்பீரியல் பிரஸ் மகாநாட்டுக்குச் சென்றார்.

பத்திரிகைத் தொழிலைத் தவிர தொழில் வாணிகம், வங்கி ஆகிய துறைகளிலும் இவருக்கு மிகுந்த நாட்டம் இருந்தது பாரி கம்பெனி, டெக்கான் சுகர் அப் காரி கம்பெனி, இர் லோஸ்கர் எலக்ட்ரிக் கம்பெனி, இந்திய ஸ்டீல் ரோலிங் மில்ஸ் ஆகியவற்றிற்குத் தலைவராய் இருந்துள்ளார். 1937இல் ரிசர்வ் பாங்கு மத்திய குழு ஆட்சியாளராய் இருந்தார். திருவல்லிக்கேணி தேசீயப் பெண்கள் உயர்நிலைப்பள்ளி நிர்வாகக் குழுவின் தலைவராக இருந்துள்ளார். 1962ஆம் ஆண்டு சனவரித்திங்களில் காலமானார்

நூல்: தீர்க்க தரிசிகளின் சரித்திரக் கொத்து (1925), தராசு.

தீர்க்க தரிசிகளின் சரித்திரக் கொத்து என்பது சங்கரர், இராமானுசர், மத்வர், கௌதம புத்தர், குருநானக், மகாவீரர்,

மகமத் நபி ஆகியவர்களின் வரலாறுகளைக் கூறுவது. தராசு என்பது தென்னிந்தியப் பெருமக்களின் தொண்டுகளை விளக்குவது.

**சீநிவாசாச்சாரி—டி. ஏ. (20-நூ)**

பிறந்த ஆண்டு : 1899

இவர் திருவாவடுதுறை ஆதீன வித்துவானவார்.

நூல்: மயிலாசலமாலை, ஞாயிறு வாழ்த்து, பாடாண்பாட்டு, பன் மலர்ப் பொய்கை, ஸ்ரீகுமாரதேவர் சரிதம், ஸ்ரீநமச்சிவாய மூர்த்தி ஆற்றுப்படை, வைராக்கிய தோத்திரப் பிற்பகுதிப் பொழிப்பு.

மயிலாசலமாலை திருமயிலம் முருகனைப் போற்றுவது. ஞாயிறு வாழ்த்து ஞாயிற்றினை வாழ்த்துவது; சங்கச் செய்யுள் போல அமைந்தது. பாடாண் பாட்டு தொல்காப்பியப் புறப் பொருள் பாடாண்டிணை இலக்கண முறையில் பொம்மைய பாளையம் மடம் ஆதி குருமூர்த்திகள் ஸ்ரீசிவஞான சுவாமிகள் மீது பாடப்பெற்றது. 'பன்மலர்ப்பொய்கை' என்ற நூல் சிலப்பதிகாரம், கம்பராமாயணம் பற்றிய ஆய்வுக்கட்டுரைகளைக் கொண்டது. குமாரதேவர் சரிதம், விருத்தாசல மடத்தைச் சேர்ந்த குமாரதேவரின் வரலாற்றினை எடுத்துரைப்பது, ஸ்ரீநமச்சிவாய மூர்த்தி ஆற்றுப்படை, திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவிய நமச்சிவாய சுவாமிகளைப் பற்றிய ஆற்றுப் படை நூல், வைராக்கிய தோத்திரப் பிற்பகுதிப் பொழிப்பு சாந்தலிங்க சாமிகள் இயற்றிய வைராக்கிய தோத்திரம் என்ற நூலின் பொழிப்புரை நூலாகும்.

**சீநிவாசாச்சாரிய தனயர் ( )**

நூல்: இரகசியத்திரசாரவுரை.

**சீநிவாசாச்சாரியார்—1 ( )**

நூல்; திருவாய்மொழி ஸ்வாபதேச நிர்வாகம்.

**சீநிவாசாச்சாரியார்–2** (19-நூ)

இவர் வேலூரில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: பிரகலாதாழ்வான் சரிதை, மன்பதை யாற்றுப்படை, திருக்கச்சித் தேப்பெருமாள் அந்தாதி, மார்க்கண்டேய சரிதம், விசயத் தவசியும் சிவவேடனும், இடைக்காடர் சரித்திரம், திருவள்ளுவர் சரித்திரம், தசரத ராம சரித்திரம், நம்பாடுவான் சரித்திரம்.

இந்நூல்களுள் மன்பதை யாற்றுப்படை என்ற நூல் திருவரங்கப்பெருமாள் மீது இயற்றப் பெற்றது.

**சீநிவாசாச்சாரியார்–3** ( )

நூல்: போஜராஜ சரித்திரம் (1899).

இந்நூல் வடமொழி நூலின் மொழிபெயர்ப்பாகும். முதனுவில் கண்டவாறன்றிக் காலத்துக்கேற்றவண்ணம் சிலவற்றை நீக்கியும், மாற்றியும், கூட்டியும், சந்தி பிரித்தும் சிற்சில இடங்களின் முதனுவில் உள்ள சுலோகங்களின் பொருள்களை மிகப் பொருத்தமுறத் தமிழ்ப்பாக்களாகச் செய்தும் இம்மொழி பெயர்ப்பு உரைநடையில் அமைந்துள்ளது.

**சீநிவாசாச்சாரியார்– 4** (19–நூ)

நூல்: அநந்தாச்சாரியார் இயற்றிய 'சடகோபன் சந்திரகலா மாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சீநிவாசாச்சாரியார் 5 (கரிசன்கல்)**

நூல்: பாகவத வசனம், பாரத வசனம், விட்டுணு புராண வசனம் பகவத்கீதை உரை.

**சீநிவாசாச்சாரியார்–6** ( )

ஊர்: குன்னத்தூர்.

நூல்: அட்டஸ்லோகியுரை.

**சீநிவாசாச்சாரியார்-7 (சிற்பாசியம்)**

நூல்: ஆகார நியம வியாக்கியானம், இராக சாத்திரய சார வியாக்கியானம், பிரபந்த நிர்வாகம்.

**சீநிவாசாச்சாரியார்-8 (திருநம்பிவழி)**

நூல்: திவ்ய சூரி கதார்த்த வர்ணம்.

**சீநிவாசாச்சாரியார்-9 (பாரத்துவாச)**

நூல்: இரகசியத்திரயசாரவுரை.

**சீநிவாசாச்சாரியார்-எஸ். ஜி. (19-நூ)**

வே. பெ: கொனஸ்டை.
பிறந்த ஆண்டு: 1882.

நூல்: கொனஸ்டையின் கதைகள்.
இந்நூல் இரண்டு பகுதிகளாக வெளிவந்துள்ளது. முதல் பகுதியில் 14 சிறுகதைகளும் இரண்டாவது பகுதியில் 13 சிறுகதைகளும் உள்ளன.

**சீபட்டர் (13-நூ)**

நூல்: பகவத்கீதை. இது வடமொழி மூலத்தினையுடையது.

**சீரங்கசிறீமான் ( )**

நூல்; இரகசியத் திரய சாரார்த்தம்.

**சீரங்காச்சாரியார் (20-நூ)**

நூல்: ஆறுமுக் நாயகர் கா. என்பவர் இயற்றிய வருணதருப்பணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சீரங்காச்சாரியார்-தி. கோ (20-நூ)**

ஊர்: சென்னை; வைணவர்.

இவர் வைணவ நூல்களில் மிகுந்த பயிற்சியுடையவர்; சனப்பிரியன் என்ற பெயருடைய திங்களிதழ் ஒன்றையும் நடத்தினார்.

நூல்: ஆசாரியர்கள் சரித்திரம்.

**சீவர்த்தமான தேவர் (   )**

பார்க்க: தோலாமொழித் தேவர்.

**சீவரத்தினக் கவிராயர் (   )**

வே. பெ: சைய்யிது மீராலெப்பை.

தந்தை: சைய்யிது முகம்மது.

நூல்: மனையலங்காரம், மதீனக்கலம்பகம், வாள்விருத்தம், பரி விருத்தம், யானைவிருத்தம்.

**சீவலமாற பாண்டியர் (   )**

நூல்: சங்கரநாராயண சாமி கோயிற் புராணம்.

இது திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சங்கர நாராயண சாமி கோயிலைப் பற்றிய புராணம். 13 சருக்கங்களில் 504 செய்யுட்களைக் கொண்டது. 13 சருக்கங்களில் முன்னைய ஆறும் புளியங்குடி முத்துவீரக் கவிராயராலும் பின்னுள்ள ஏழும் *சீவலமாற* பாண்டியராலும் இயற்றப் பெற்றன.

**சுகாத்தியர்** (19-நூ)

இவர் கிறித்தவ சமயத் தொண்டிற்காக மேனாட்டில் இருந்து வந்தவர். சமயப் பயிற்சிக்காகத் தமிழ் மொழியைக் கற்றார். திருக்குறளில் எதுகை மோனை சரிவர அமையவில்லை யென்று பல திருத்தங்கள் செய்தார். எடுத்துக்காட்டாக முதலாவது குறளினை,

அகர முதல வெழுத்தெல்லா மாதி
முகர முதற்றே யுலகு

என்று திருத்தினர். இது போன்று பல குறள்களையும் திருத்தி அவைகளுக்குத் தாமேயுரையும் எழுதி நூலாக அச்சிட்டு வெளியிட்டார். புலவர்கள் இதனைக் கேள்வியுற்று வருந்தினர். இவர், தாம் திருக்குறளைத் திருத்தி வெளியிட்டிருக்கின்ற செய்தியைப் பாண்டித்துரைத் தேவரிடம் சொன்னர். அவருடைய மனம் வேதனைப்பட்டது. அவர் நூல் வெளியிடுவதற்கு ஏற்பட்ட செலவினை இவரிடம் கொடுத்துப் படிகள் எல்லாவற்றையும் வாங்கித் தீக்கிரையாக்கினர். அது முதல் இவர் இது போன்ற பணிகளில், ஈடுபடுவதில்லையென்பர்.

நூல்: முப்பொருட்போதம்.

இந்நூல் திருத்தந்தை சரிதம், திருமேய்ப்பான் சரிதம், திருநல்லான் சரிதம் என்ற மூன்று பகுதிகளைக்கொண்டது. ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு உட்பிரிவுண்டு.

**சுடலைமுத்துப்பிள்ளை** (20-நூ)

ஊர்; பூதப்பாண்டி.

நூல்: மாணிக்கவாசகம்பிள்ளை தா. என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சுந்தர அடிகள்** (19-நூ)

ஊர்: திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள கங்கைகொண்டான்.

தந்தை: எக்லேசுவர சிவன். தாய்-காமாட்சியம்மையார்; அந்தணர்.

வாழ்ந்த காலம்: 1831 - 1878.

இவர் மனேன்மணீயம் நூலாசிரியர் சுந்தரம்பிள்ளையின் ஞானசிரியராக அமைந்து அருளுரை வழங்கியவர்.

இளமையிலேயே தாய்தந்தையரை இழந்தவர்; மாமன் வேங்கடசுப்பையரின் ஆதரவில் வளர்ந்தவர்; இருயின கனபாடிகள் என்னும் பெரியாரிடத்தில் மறை நூல்கள் இலக்கணம் தர்க்கம் முதலியவற்றையும் வீரவநல்லூர் சுந்தரசாத்திரிகளிடம் வேதாந்த நூல்களையும் கற்ருர். மறைநூல்களைக் கற்ற பின்பு இல்லற ஒழுக்கத்தை ஏற்க எண்ணி சானகி என்ற அம்மையாரை மணந்தார். மணவாழ்விற்குப் பின்பு விசுவேசுவர சாத்திரிகள் என்னும் பெரியாரை அடைந்து மெய்யறிவு கைவரப்பெற்ருர். அடியார் கூட்டத்துடன் பல சிவப்பதிகளுக்கும் சென்ருர். இவருக்குச் சிவபெருமானின் பெருமையை விளக்கும் சூதசம்கிதை என்னும் நூலிடத்து மிகுந்த பற்றுண்டு. நாடோறும் இதனைப் பாராயணம் செய்ததுடன் பல இடங்கிளில் சொற்பொழிவும் நிகழ்த்திஞர். சுத்தமல்லியென்ற இடத்தில் சொற்பொழிவு நிகழ்த்துகையில் பூணூலையும் குடுமியையும் களைந் தெறிந்து துறவு வாழ்க்கையை மேற்கொண்டார். இவர் தமது வாழ்வில் பல அற்புதங்களை நிகழ்த்திஞர்.

இவர் பல இடங்களிம் சுற்றித் திரிந்து இறுதியில் தமது அடியார்கள் பலர் இருந்த புதுக்கோட்டை மாவட்டம் அரிமளம் என்ற ஊருக்கு வந்து 1878ஆம் ஆண்டில் மறைந்தார். அங்கு இவரது உடல் சமாதியில் வைத்து வழிபாடு நடைபெற்று வருகின்றது.

**நூல்:** மகாவாக்கியச் சுருக்கம், சம்பிரதாயப் பிரகரணம், மஞேநாசமார்க்கம், சுவாநு பூதி ரசாயனம், சுவாநுபவ ரசமஞ்சரி,

இந்நூல்களுள் சுவாநு பூதி என்னும் நூலில் உலகத்தின் தோற்றம், ஆசிரிய மாணவ முறைமை, மெய்யறிவு பெறுதற்குரிய வழிகள், சுவாநுபவத்தில் வரும் சச்சிதானந்தத்தின் நிருபணம், துவைதம் விசிஷ்டாத்வைதம், வேதாந்தத்திற்கும் சைவ சிந்தாந்தத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

**சுந்தர அடிகள்–2 (      )**

நூல்: இராமாநந்தப் பிரதாபம், தனிப் பதிகங்கள்.

**சுந்தர ஆச்சாரி (      )**

நூல்: அப்பூதியடிகள் நாயனூர் சரித்திரக் கீர்த்தனை 1895.

இந்நூல் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராகிய அப்பூதியடிகளின் வரலாற்றினை கீர்த்தனைக் கவிதைகளில் தருவது; கதா காலட்சேபம் செய்வாருக்கு ஏற்றது.

**சுந்தரகவிராயர் (19 நூ)**

நூல்: பல அகத்துறைப்பாடல்கள்.

**சுந்தரசாமிகள் (      )**

ஊர்: சென்னிகுளம்.

இவர் சென்னிகுளம் மடாதிபதிகளாவர்.

நூல்: சங்கரநாரயண ஆச்சாரியார் என்பவர் பதிகங்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தர சிவாச்சாரிய சாமிகள் (      )**

நூல்: சிவாதிக்ய ரத்நாவளி (முதற்பாகம்) (1875). இது நன்மதி விளக்கம் என்ற நூலிற்கு மறுப்பாக வரையப் பெற்றது; சிவனே பரம்பொருள் என்ற கொள்கையை வலியுறுத்துவது; இரட்ன டயரின் தெய்வீக உலாவினின்றும் சிவனது மேன்மையைத் தெரிவிக்கும் கண்ணிகள் பிற்சேர்க்கையாக உள்ளன. இது 174 பக்கங்களிலமைந்த தொரு உரைநடை நூல்.

**சுந்தரஞ் செட்டியார் (20-நூ)**

ஊர்: சேலம் செவ்வாய்ப்பேட்டை.

நூல்: அர்த்தநாரீச நாயகர் சு. என்பவர் இயற்றிய கரபுரநாதர் புராணப் மொழிப்புரையைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரஞ் செட்டியார் கோ** (20 நூ)

ஊர்: இராமநாதபுரம்.

நூல்: சண்முகக் கவிராயர் ரா. என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரஞ் செட்டியார் ம மு.** (20-நூ)

ஊர்: மதுரை மாவட்டம் திருமங்கலத்தில் உள்ள பேரையூர்.

நூல்: வைசிய குல விளக்கம்.

இந்நூல் உரை நடையாலானது.

**சுந்தரத்தேவா மு.** (19-நூ)

நூல்: இளையான் கவிராயர் இயற்றிய அப்பரமேசர் தலபுராணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரதாசக் கவிராயர்** ( )

நூல்: இரனியாசுரன் கதை (1890).

இந்நூல் இரனியாசுரன் கதையை அம்மானைப் பாடல்களால் பாடுவது; கதைப்போக்கிற்கு இயைபுடைய தலைப்புகள் இடையிடையே அமைந்துள்ளன.

**சுந்தரதாசப் பாண்டியா** (19-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் சேற்றூர்.

தந்தை: முத்துச்சாமித்துரை.

மறைவு: 1895.

இவர் புலவராகவும் புரவலராகவும் விளங்கியவர், முகவை இராமசாமிக் கவிராயரிடம் தமிழ் நூல்களைக் கற்றார். தம் தந்தையாருக்குப் பின்பு நாட்டுரிமையினை மேற்கொண்டார். தமது ஆசிரியரையும் மற்றும் பல புலவர்களையும் ஆதரித்தார்.

இராமசாமிக் கவிராயரும் கல்போது பிச்சுவையரும் இவரைப் பாராட்டியுள்ளனர்.

நூல்: சிவபெருமான் மீது வழிபாட்டுப் பாடல்கள், இராமவர்மா மீது வண்ணம்.

இராமவர்மா இவரது காலத்தில் திருவநந்தபுரத்தில் அரசராக இருந்தவர். அவர் மீது பாடப்பட்டதே இவ்வண்ணம்.

**சுந்தரதேசிகர்** (19-நூ)

நூல்: திருக்கோவையாருண்மை.

**சுந்தரநாதப்பிள்ளை** (20-நூ)

ஊர்: திருச்சி.

நூல்: ஆதிவயலூர் வெண்பாவந்தாதி.

**சுந்தரநாதன்** (        )

நூல்: திரிசிரமலைக்கோவை.

**சுந்தரப்புலவர்** (20-நூ)

ஊர்: கொங்குநாடு ஏரகாம்பட்டி.

தந்தை: பழநி நாவலர்.

நூல்: கந்தமாலை.

**சுந்தரபாண்டியன் ஓதுவார்** (20-நூ)

மறைவு: 1940.

நூல்: திருவருண்மாலை.

இந்நூல் திருக்குடந்தை முருகக்கடவுள் மீது பாடப் பெற்றது. செங்கோன் தரைச்செலவு, மூவடி முப்பது ஆகிய நூல்களைப் பதிப்பித்தவரும் இவரே.

**சுந்தரம் எம்.** (20-நூ)

பிறப்பு: 1901.

நூல்: ஆநந்தரகஸ்யம் அல்லது யோகாசனப் பயிற்சி, அன்னையின் திருவடிமலர், ஆரோக்கிய உணவு, ஜெய்சிவாஜி, கந்தன்புகழ், பரமரர்த்தமநாம சங்கீர்த்தன பஜனுவளி, இராச யோகம், சாந்தியோகம், சந்தியா காயத்திரி, ஜெபயோகம், சுந்தர யோகசிகிச்சை, சூரிய நமரஸ்காரம், வலிவும் வனப்பும்.

**சுந்தரம் ஜே. ஜி.** (20-நூ)

பிறப்பு: 1884.

நூல்: ஆகாயவீரன் (1926), இளஞ்செழியன் (1951), தமிழ்த் தொண்டன் (1948).

ஆகாயவீரன் என்னும் நூல் புதினமாகும். இளஞ்செழியன் என்னும் நூல் வரலாற்று அடிப்படையில் அமைந்தது. தமிழ்த் தொண்டன் என்ற நூல் வீரமாமுனிவரின் வாழ்க்கை தமிழ்த்தொண்டு ஆகியன குறித்து எழுதப்பெற்ற நூலாகும்.

**சுந்தரம் ஐயர்** ( )

ஊர்: விசுவநாதபுரம்.

நூல்: கோவிந்தசாமி நாட்டார் தி என்பவர் இயற்றிய நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரம் ஐயர் சி.** (20 நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் மழவராயனேந்தல்.

தந்தை: சிதம்பரபாரதி; அந்தணர்.

இவர் அட்டாவதானம் செய்வதில் வல்லவர். இவர் உடன் பிறந்தார் சுப்பராமையர். இவரும் இவருடைய உடன் பிறந்தாரும் இவருடைய தந்தையாரும் சேர்ந்து பெரிய புராணத்தை இசைப்பாடல்களாகப் பாடியுள்ளனர், இந்நூல்

வெண்பா, கலித்துறை விருத்தம் முதலிய பலவகைப் பாக்களை உடையது.

நூல்: பெரியபுராணம்-இசைப்பாடல்கள்.

**சுந்தரம்பிள்ளை ( )**

நூல்: மீனாட்சியம்மை நாடகம் (1889).

இந்நூல் மீனாட்சியம்மை பாண்டியனுடைய மகளாக வந்து ஆட்சி புரிந்த புராண வரலாற்றினை நாடகமாகக் கூறுவது.

**சுந்தரம்பிள்ளை உ.** (19-நூ)

நூல்: வயலூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி.

**சுந்தரம்பிள்ளை பெ.** (19-நூ)

ஊர்: சேரநாட்டுத் திருவிதாங்கூரைச் சேர்ந்த ஆலப்புழை.

தந்தை: பெருமாள் பிள்ளை, தாய் - மாடத்தி.
வாழ்ந்த காலம்: 1855-1897.

இவர் மனோன்மணீயம் என்னும் தமிழ் நாடக நூலால் தமிழுலகிற்கு நன்கு அறிமுகமானவர். ஆலப்புழைப் பள்ளியில் கல்வி கற்றார். தமது பன்னிரண்டாம் வயதில் தமிழில் சிறந்த பயிற்சி பெற்றார். பின்னர் ஆங்கிலப் பள்ளியில் சேர்ந்து ஆங்கிலம் கற்றார். திருவனந்தபுரம் அரசர் கல்லூரியிற் சேர்ந்து உயர்நிலைக்கல்வி பயின்றார். பத்தாவது வகுப்பில் முதல் மாணவராகத் தேறினார். அதனால் மாதம் எட்டு ரூபா அரசினர் உதவி பெற்றார். பின்னர் பி. ஏ. வகுப்பிற்கு வரலாற்று நூலும் அறிவு நூலும் கற்பிக்கும் ஆசிரியராக அமர்ந்தார். 21ஆம் வயதில் சிவகாமி என்னும் அம்மையை மணந்தார். பின்னர்த் திருநெல்வேலி ஆங்கிலத் தமிழ்க் கல்விச் சாலையின் தலைமைத் தமிழாசிரியரானார். இக்காலத்தில் கோடகநல்லூர் சுந்தர அடிகளிடம் மாணவனாகிச் சமய நூல்கள் பலவற்றையும் கற்றுணர்ந்தார். 1879ஆம் ஆண்டில் திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் நூல ஆசிரியரானார்.

1880இல் எம். ஏ. தேர்வில் வெற்றி பெற்ருர். சுந்தரம்பிள்ளையின் கல்விப் பெருமையையுணர்ந்த விசாகந் திருநாள் அரசர் அவருக்கு தமது அரண்மனையில் உயர்ந்த பதவி கொடுத்தார். அவ்வேலை அவருக்குப் பிடிக்காததால் மீண்டும் அரசர் கல்லூரித் தலைவரானுர். 1884ஆம் ஆண்டு பல அறிஞர்களோடு சேர்ந்து சைவப்பிரகாச சபையை ஏற்படுத்தினுர். இலண்டனில் உள்ள வரலாற்றுராய்ச்சிக் கழகத்தினர் இவருக்கு எப். ஆர். கெச். எஸ். என்னும் சிறப்புப் பட்டத்தை வழங்கினர். ஆரியா தொடர்பான ஆராய்ச்சிக் கழகத்தினர் எம் ஆர். ஏ. எஸ் என்ற பட்டத்தையும் தென்னிந்திய வரலாற்றுராய்ச்சியின் திறமையைக் கண்ட சென்னை அரசியலார் இராவ்பகதூர் என்னும் பட்டத்தையும் வழங்கினர். 1891ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழக உறுப்பினராகித் தமிழ் வரலாறு, அறிவு நூல் முதலியவற்றிற்குத் தேர்வாளராக இருந்தார் 26-4-1897இல் காலமானுர்.

நூல்: மனோன்மணீயம் (1891). ஞானசம்பந்தர் கால ஆராய்ச்சி (ஆங்கிலக் கட்டுரைகள்). மனோன்மணீயம்- "The secret way" என்னும் ஆங்கிலக் கவிதையைத் தழுவி எழுதப்பட்ட நாடக நூல். இவர் தமது குருவான கோடகநல்லூர் சுந்தர அடிகளை அந்நூலில் சுந்தர முனிவர் என்னும் பெயரில் அரசகுருவாக அமைத்துள்ளார். இந்நூல் தமிழுக்குப் புது முறையில் வழி காட்டியாக அமைந்திருப்பதுடன் இவருடைய தமிழ்ப் பற்றையும் திறமையையும் நன்கு அறிவிக்கின்றது. தமிழில் நாடக நூல் இல்லையென்னும் நிறையை நிறைவாக்கியது.

**சுந்தரம்பிள்ளை பொ. (20-நூ)**

ஊர்: பொன்னேரி.

இவர் இராமலிங்க அடிகளின் தமயனுருடைய மருகர்; அடிகளிடம் பேரன்பு கொண்டவர்.

நூல்: இராமலிங்க அடிகள் மீது தோத்திரப் பாடல்கள், பிள்ளைத் தமிழ்.

**சுந்தரம்பிள்ளை மு. ( )**

ஊர்: மதுரை அருகில் உள்ள சோலைக்குறிச்சி.

தந்தை: முத்துப்பிள்ளை.

நூல்: மெய்ஞ்ஞானம்.

இந்நூலில் தாயுமானவர் பாடல்களின் பொருள்கள் பல காணப்பெறுகின்றன.

**சுந்தரமாணிக்க யோகீசுவரர் ஈ (20-நூ)**

ஊர்: சென்னை.
நூல்: உண்மைஞான விளக்கம் (1929).

இது திருவாதவூரடிகள் அருளிய திருவாசகத்திற்கு எழுதிய உரையாகும். யோகமார்க்கப் பொருளை விளக்குவது.

**சுந்தர முதலியார் கா மு. ( )**

நூல்: காந்தி சபதம்.

**சுந்தர முதலியார் சே (19-நூ)**

ஊர்: சேலம்.

இவர் சேலம் நீதிமன்றத்தில் எழுத்தராகப் பணியாற்றியவர்.

நூல்: திருப்போரூர்ப் பதிகம், திருத்தணிகை நிரோட்டகப்பதிகம், சிவமலைப் பதிகம், திருப்பரங்கிரிப் பதிகம், பணகிரிப் பதிகம் திருப்பழநி வண்ணக் கொச்சகப் பதிகம், திருச்செந்திற் பதிகம், விராலிமலைப் பதிகம், சென்னிமலைப் பதிகம், வட்டமலைப் பதிகம், திருச்செங்கோட்டுப் பதிகம், அடைக்கலப் பதிகம், திருப்பழனி அலங்கார பஞ்சகம், திருச்செங்கோட்டுக் கலம்பகம்.

## சுந்தர முதலியார். முத்து (20-நூ)

ஊர்: தொண்டைநாட்டிலுள்ள காமக்கூர்,

தந்தை: முத்துச்சாமி முதலியார். தாய்-இரத்தினும்பாள். வாழ்ந்த காலம். 1873-1941.

இவர் ஆரணி கந்தசாமியுடையார், செல்லக்குட்டி ஆச்சாரியார், சிவசண்முகமெய்ஞ்ஞான சிவாச்சாரியார், காமக்கூர்வட்டக் கோட்டாட்சித் தலைவர் சுந்தரராமையர் ஆகியோரிடம் தமிழ் கற்றுப் புலமை பெற்றார். இவரது புலமை நலத்தைப் பாராட்டித் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் தலைமையில் 'மாப்பேராசிரியர்' என்னும் பட்டமும், பணமுடிப்பும் வழங்கப் பெற்றது.

இவர் ஆரணி தேசீயப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி புரிந்தார். பொதுவாகத் தமிழ் கற்க விரும்புவோர்கள் அனைவருக்கும் தமிழ்க் கல்வியை அளித்தார். கம்ப ராமாயணத்தில் உள்ள நீதிச் செய்யுட்களைத் திரட்டிக் கம்ப இராமாயண நீதிக்கவித்திரட்டு என்னும் பெயரில் ஒரு தனி நூலாக வெளியிட்டுள்ளார். இவர் இறுதிக் காலத்தில் வேனிற் கட்டி நோயால் பாதிக்கப் பெற்று 6-6-1941ஆம் ஆண்டில் காலமானார்.

நூல்: இலக்கணக்கோவை, மகாத்மா காந்தி சதகம்.

இலக்கணக்கோவை யென்னும் நூல் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களில் சொல்லப் பெறாத இலக்கணங்களையெல்லாம் தொகுத்துச் செய்யப் பெற்றது.

## சுந்தரமுதலியார் வி. (20-நூ)

ஊர்: சென்னை திருமயிலை.

இவர் இலக்கிய இலக்கணப் பயிற்சியோடு இசைப் பயிற்சியிலும் வல்லவர்.

நூல்: சிவநாமசங்கீர்த்தனம், திருவொற்றியூர் வடிவாம்பிகை

தேவாரம், சுந்தராம்பிகை பதிகம், திருச்செந்தூர் சிவசுப்பிரமணியர் பதிகம், கொழும்பு கதிரேசன் பஞ்ச ரத்தினது திருவள்ளுவ நாயனார் வருகைப் பஞ்சகம், திருவள்ளுவ தேவர் தியானுட்டகம், ஆண்டவர் குப்பம் முருகக் கடவுள் ஆநந்தக் களிப்பு, சென்னைக் கந்தர் திருவிழாக்கொம்மி.

விவேக ஆனந்தக் களிப்பு என்னும் நூல் இவரும் அப்பாசாமி முதலியாரும் சேர்ந்து பாடிய நூலாகும்.

**சுந்தரமூர்த்திக்கவிராயர் ( )**

ஊர்: இராசபாளையம்.

நூல்: சேற்றூர்ப்பள்ளு.

**சுந்தரமூர்த்தி பௌராணிகர் (20-நூ)**

ஊர்: திருநெல்வேலி வண்ணார்பேட்டை.

நூல்: பல நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரங்கள்.

**சுந்தரமூர்த்தி முதலியார் கா. (19-நூ)**

ஊர்: காஞ்சிபுரம்.

இவர் சைவ நூற் பயிற்சி உடையவர். திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், திருவருட்பயன், போற்றிப் பஃறொடை, உண்மை நெறி விளக்கம் முதலிய சைவசித்தாந்த நூல்களை ஆராய்ந்து பதிப்பித்துள்ளார்.

**சுந்தரர் (8-நூ)**

வே. பெ: நம்பிஆரூரர், வன்றொண்டர், நம்பி, நாவலூராளி.

ஊர்: திருமுனைப்பாடிநாடு, திருநாவலூர்.

தந்தை: சடையனார்; தாய்-இசைஞானியார்; அந்தணர்.

சைவ சமய குரவர் நால்வருள் ஒருவராகிய சுந்தரர் வாழ்ந்த காலம் பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உண்டு. இவர் பாடலால், காடவர்கோன் கழற்சிங்கன் என்ற பல்லவ அரசனும் கழறிற்றறிவார் என்னும் சேர அரசரும் ஏயர்கோன் கோட்புலி பெருமிழலைக் குறும்பர் நரசிங்க முனையரையர், என்ற சிற்றரசர்களும் இவரது காலத்தில் வாழ்ந்ததாக அறியப்படுகின்றனர். கடல்சூழ்ந்த உலகெல்லாம் காக்கின்ற பெருமான் காடவர் கோன் கழற்சிங்கன் எனச் சுந்தரரால் பாராட்டப் பெறுகின்ற சிவபத்தியுடையவனுன பல்லவ மன்னன் யார் எனத் துணிந்தால் சுந்தரர் காலம் தெளிவுபெறும். கழற்சிங்கன் என்பவன் 2ம் நரசிங்கவர்மன் என்பது கா. சு. பிள்ளை, பண்டாரத்தார், ஔவை சு. துரைசாமிப்பிள்ளையவர்கள் ஆகியோர் கருத்தாகும் டி. ஏ. கோபிநாதராவ், சீனிவாசப்பிள்ளையென்பவர்கள் மண்ணுலகம் காவல்பூண்ட உரிமையால் பல்லவர்க்குத் திறைகொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும் பெருமையார் என்னும் திருப்பாட்டின் தொடரைக் காட்டி பல்லவர் ஆட்சி தளர்ச்சியுற்றதை இவ்வடிகள் குறிக்கின்றதென்றும் அது தந்திவர்மன் காலம் (780-830) என்றும் கூறுவர். ஆனல் பண்டாரத்தார் இவ்வடிகள் அப்பொருளைத் தராது பல்லவர்கட்கு எதிரிகளாயினரைத் தண்டிப்பதைக் குறிக்கும் என மறுப்பர். இனி டாக்டர் மீனுட்சி கழற்சிங்கன் 3ஆம் நந்திவர்மன் எனவும் அவன் 840-865 வரை ஆண்டான் ஆதலின் சுந்தரர் காலம் 9ம் நூற்றுண்டின்முற்பகுதி என்பர். ஔவை, சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் 3ஆம் நந்திவர்மனுக்குச் சிங்கன் என்ற பெயர் கிடையாது என மறுப்பார். பல்லவ அரசர்களுள் சிங்கன் என்னும் பெயருடையார் இருவர். முதல் நரசிங்கவர்மனும் 2ஆம் நரசிங்கவன்மனுமாவர். இவ்விருவருள் முதல் நரசிங்கவர்மன் வாதாபி கொண்ட பல்லவ மன்னன் ஆதலின் பரஞ்சோதியார் காலத்தவன் ஆவான். பரஞ்சோதியார் காலத்தவரான திருஞானசம்பந்தர் காலத்தில் முதல் நரசிங்கவர்மன் இருந்தவன் ஆதலின் ஞானசம்பந்தருக்குப் பிற்பட்டவரான சுந்தரர் குறிப்பிடுவது 2ஆம் நரசிங்கவர்மனையேயாகும் 2ஆம் நரசிங்கவர்மன் ஆட்சிக்காலம் 680-710 எனவே அவன் காலத்து நம்பியாரூரர் காலமும் 7ம் நூற்றுண்டின் இறுதியும் 8ஆம் நூற்றுண்டின் தொடக்கமும்

ஆகும்.

சுந்தரர் கைலேயில் உமாதேவியாரின் சேடிமார் அநிந்திதை, கமலினி என்பவர்களைக் கண்டு காதல் கொண்ட காரணத்தினால் இறைவன் ஆணைப்படி பூமியிற் பிறந்தருளினார். நரசிங்க முனையரால் வளர்க்கப் பெற்று கல்வி, கேள்விகளிற் சிறந்த அறிஞரானார். திருமணம் நடை பெறும் சமயத்தில் இறைவனால் தடுத்தாட் கொள்ளப்பட்டார். இறைவன் பித்தா என அடி யெடுத்துக் கொடுக்க பித்தா பிறை சூடி என்று தொடங்கும் தேவாரப் பதிகத்தைப் பாடினார். பின்னர் தலந்தோறும் சென்று தேவாரம் பாடி வழிபட்டார். திருவதிகைக்கருகில் இறைவனால் திருவடி சூட்டப்பெற்றார் திருவாரூரில் பரவையார் என்னும் பெயருடன் பிறந்திருந்த கமலினியைக் கண்டு மணஞ் செய்தார். திருவாரூரில் திருத்தொண்டத் தொகைபாடியபின் குண்டையூர் சென்று இறைவனருளால் மலையளவு நெல்லைப் பெற்றார். பின்னர் அதனை அவனருளால் திருவாரூரிற் கொண்டு சேர்த்தார். திருப்புகலூரில் செங்கற்களைப் பொன்னாக்கியருளப் பெற்றார். திருப்பனையூரில் இறைவன் நடனதரிசனம் பெற்றார். திருமுதுகுன்றத்தில் இறைவன் கொடுத்த பன்னீராயிரம் பொன்னை அங்கேயுள்ள மணிமுத்தா நதியில் இட்டுத் திருவாரூர்க் குளத்தில் எடுத்தனர். திருவொற்றியூரில் சங்கிலியார் என்னும் பெயருடன் பிறந்திருந்த அநிந்திதையை மணந்தார். சங்கிலியாரை விட்டுப் பிரியேன் எனச் சத்தியம் செய்தார். பின்னர்ச் சத்தியம் தவறிப் பிரிந்தமையால் திருவொற்றியூர் எல்லையைக்கடந்ததும் இருகண் பார்வையும் இழந்தார். திருவெண்பாக்கத்தில் இறைவனால் ஊன்றுகோலும்பெற்றார். காஞ்சீபுரத்தில் இடக்கண் பார்வையும் திருவாரூரில் வலக்கண்பார்வையும் பெற்றார். சங்கிலியாரை மணந்த செய்தியைக் கேட்டுப் பரவையார் ஊடல் கொண்டார். சுந்தரருக்காக இறைவன் இருமுறை தூது சென்று ஊடலைத் தணித்தனர் கலிக்காம நாயனார் இறைவனைத் தூதாக அனுப்பியது தவறு எனச் சுந்தரர்பால் வெறுப்புக் கொண்டார். பின் இறைவன் அருளால் இருவரும் நட்பாயினர். திருவாரூரில் தம்முடன் நட்புக்கொள்ள விரும்பி வந்த சேரநாட்டரசரான சேரமான் பெருமாள் நாயனாருடன் காவிரி யாற்றை ஒருபுறம் நிற்கச்

செய்தார். திருவையாற்றை ஒருபுறம் நிற்கச் செய்தார். திருவையாற்றைத் தரிசித்து மலைநாட்டை அடைந்தனர். சேரமான் பெருமாள் நாயனார் கொடுத்த பொருள்களைப் பூதகணங்கள் வேடர்களாகவந்து பறித்தனர். திருமுருகன் பூண்டியில் மீண்டும் அவற்றைப் பெற்றார். அவிநாசியில் சில ஆண்டுகளுக்கு முன் முதலையுண்ட குழந்தையை வரவழைத்துக் கொடுத்தார். பின்னர் மலைநாடு சென்று திருவஞ்சைக் களத்தில் வெறுத்தேன் மனை வாழ்க்கையை என்னும் பதிகம் பாடி இறைவன் அனுப்பிய வெள்ளை யானைமீது ஏறித் தமது 18ஆம் வயதில் சுவாதி நாளில் கைலையை அடைந்தருளினார்.

நூல்: தேவாரம் 7ஆம் திருமுறை. இவர் பாடல் திருப்பாட்டு எனவும் வழங்கப்பெறும். 7ஆம் திருமுறையில் இப்போதுள்ளன 1036 பாடல்கள் மட்டுமேயாம். இவை 100 பதிகங்களாக உள்ளன. இவற்றிலும் சிற்சில பாடல்கள் இல்லை. கிடைத்தவற்றில் சில இடைச்செருகல் என அறிஞர் கூறுவர். பண் முறையில் சுந்தரர் தேவாரம் வரிசைப்படுத்தப்பட்டுள்ளது. இப்பாடல்களில் இயற்கைக் காட்சிகள் நிறைந்துள்ளமையைக் காணலாம். இவர் பாடிய பதிகம் மொத்தம் 38000 என்பது திருமுறைகண்ட புராணத்தால தெரிகிறது.

**சுந்தரராகவ ராசு** (20-நூ)

ஊர்: இராமநாதபுரம்.

நூல்: இராசசிங்க மங்கலம் முத்துச்சாமிப்பிள்ளை இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்

**சுந்தர ராகவன் கே** (20-நூ)

நூல்: மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதஐயர், மஹான் மணி ஐயர்.

**சுந்தரராசு ஐயங்கார் ஏ.** (20 நூ)

இராமநாதபுரம் எஸ். பி. சி. உயர்நிலைப்பள்ளியில் இருந்தவர்.

நூல்: முத்துச்சாமிப்பிள்ளை இயற்றிய பிரபந்தத் திரட்டு என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரராச ஐயர்** (20-நூ)

ஊர்: மதுரை.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உதவிச் செயலாளராக இருந்தவர்.

நூல்: செந்தமிழ்ச் சிறப்பு. இந்நூல் தமிழ் நாட்டுப் பெரியார்களைப்பாராட்டி அமைந்த வெண்பாக்களைக் கொண்டது.

**சுந்தரராச நாயுடு பழ. மு.** (20-நூ)

நூல்: பெரியசாமி சேர்வை. வெ. என்பவர் இயற்றிய கீர்த்திரச மஞ்சரி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

**சுந்தரராசம் ஐயங்கார்** (19-நூ)

இவர் திருவரங்கம் பெருமாள் கோயிற் புலவராக இருந்தவர். கத்தூரி திலகம் சுந்தரராசம் ஐயங்கார் என்று அழைக்கப் பெற்றார்.

நூல்: இராசயோகானந்த வேங்கட பிரபந்நசாமி இயற்றிய பிரமோற்சவதத்துவ தீபிகை க்ஷேத்திர காண்டம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரராசு பாண்டியர்** (19-நூ)

ஊர்: பாண்டியநாடு, சேற்றூர்.

நூல்: பல தல யாத்திரைப் பாடல்கள்; திருவிழாவுக்குரிய பாடல்கள்.

**சுந்தரராமன் வே. ரா.** (20-நூ)

ஊர்: தென்னார்க்காடு மாவட்டம் ஐயந்தூர்.

பிறந்தநாள்: 9-8-1905.

இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பயின்று எம். ஏ. பட்டம் பெற்றவர்.

**நூல்;** புகழ்பூத்த தமிழர் (1950).

இந்நூல் இரண்டு தொகுதிகளாக வெளிவந்துள்ளது.

**சுந்தரராமாநுசதாசர்** (19-நூ)

**நூல்:** புதுச்சேரி இராமாநுச நாவலர் இயற்றிய சுதரிசன கிரிப் புராணம் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரராமாநுசப்பிள்ளை** (19-நூ)

**ஊர்:** சென்னை புரசவாக்கம்.

இவர் அட்டாவதானம் வீராசாமிச் செட்டியாரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றவர்.

**நூல்:** இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவர்க்கு எழுதிய பாடல்கள்.

**சுந்தரலிங்க தேசிகர்** (20-நூ)

**தந்தை:** நமச்சிவாய தேசிகர்.

இவர் தருமபுர ஆதீனப் புலவராக இருந்தவர்.

**நூல்:** தியாகராசர் அருள் விளையாடற்சிந்து. இந்நூல் திருவாரூர்த் தியாகராசப் பெருமான் மீது பாடப் பெற்றது.

**சுந்தரலிங்கம்பிள்ளை** (19-நூ)

இவர் மதுரை திருஞானசம்பந்த சாமிகள் ஆதீனத்தைச் சேர்ந்தவர்.

**நூல்:** கந்தசாமிப்பிள்ளை, இ. என்பவர் விநாயகர், சுப்பிரமணியர், சோமசுந்தரேசுவரர், மீனாட்சியம்மை ஆகிய கடவுளர் மீது இயற்றிய இசைப்பாடல் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுந்தரலிங்க முனிவர் (17-நூ)

திருவாவடுதுறை ஆதீனம் திருச்சிற்றம்பல ஞான தேசிகருடைய மாணவர்.

நூல்: திருப்பெருந்துறைப் புராணம். இந்நூல் 59 சருக்கங்களையும் 2071 செய்யுட்களையும் கொண்டது.

## சுந்தராச்சாரியார்–1 ( )

ஊர்: திருக்கோட்டியூர்.

நூல்: சீதா விஜய வசனம் (மொழியாக்கம்). இது 44 பக்கங்களில் அமைந்த உரைநடை நூல். வடமொழி வாசிஷ்டோத்தர ராமாயணத்திலிருந்து திருக்கோட்டியூர் சுந்தராச்சாரியராலே மொழிபெயர்க்கப்பட்டது. இஃது ஆரியர் அகத்தியர் முத்தமிழ்க் கோவை வரிசையைச் சார்ந்தது.

## சுந்தராச்சாரியார்–2 ( )

ஊர்: நடாதூர்.

நூல்: ஸ்ரீரங்க மகத்துவம்.

## சுந்தராச்சாரியார் கி. (20-நூ)

ஊர். சென்னை.

தந்தை: கிருட்டிண ஆச்சாரியார்.

நூல்; கலைவாணி சதகம், சரசுவதி பஞ்சரத்தினம்,

## சுந்தரானந்தர் ( )

போகரின் மாணுக்கர் என்று கூறுப.

நூல்: சுந்தராநந்தர் தாண்டகம், சுந்தராநந்தர் தீட்சாவிதி, சுந்தராநந்தர் ஞானம், சுந்தராநந்தர் பூஜாவிதி, சுந்தராநந்தர் விநோத சூத்திரம், ஆயுள்வேத பொது லக்ஷணம், சுந்தாரூடமும் சுப சாஸ்திரமும்.

**சுந்தரானந்தர் மு. (19-நூ)**

முத்துக்கிருட்டிண பிரமத்தின் அடியாராயிருந்து அவரிடம் வேதாந்த நூல்களை ஓதியுணர்ந்து அருளுரை பெற்றுப் புலமைத்திறம் வாய்ந்து விளங்கினர்.

நூல்: தம்முடைய ஆசிரியராகிய முத்துக் கிருட்டிண பிரமம் இயற்றிய சுருதிசாரம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரேச ஐயர் நா. (20-நூ)**

ஊர்; மதுரை.

நூல்: மீனுட்சிசுந்தரக் கவிராயர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரேச பாரதியார் சு. ( )**

ஊர்: திருவாரூர்.

நூல்: சாமிநாத தேசிகர். சு. இயற்றிய சந்தான சாரிய புராண சங்கிரகம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுந்தரேச வாண்டையார், வை (20-நூ)**

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் மாயூரத்தைச் சேர்ந்த சோத்தமங்கலம்.

தந்தை: வைத்தியலிங்க வாண்டையார்; தாய்: சிவகங்கை ஆயாள்.

பிறப்பு: 15-12-1899.

இவர் சிதம்பரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளியில் பள்ளி இறுதித் தேர்வு வரை பயின்ருர். பின்னர் தாமே முயன்று கற்று வித்துவான் தேர்வு பெற்ருர். திருவையாற்றில் 18 ஆண்டுகள் தொடக்கப்பள்ளி ஆசிரியராகவும் குற்ருலம் உயர்நிலைப்பள்ளியிலும், திருப்

பனந்தாள் தமிழ்க்கல்லூரியிலும் தமிழாசிரியராகப் பணி யாற்றியுள்ளார். அண்ணுமலைப் பல்கலைக் கழகக் கம்ப ராமாயணப் பதிப்புப் பணியிலும், இப்பல்கலைக் கழகத்தின் மொழியல் துறையில் கல்வெட்டுச் சொல்லாராய்ச்சிப் பணியிலும் பங்கேற்றுப் பணிபுரிந்துள்ளார்.

இவருக்குத் திருப்புறம்பயத்தில் திருமணம் நிகழ்ந்தது. இவ்வுறவால் இவர் அவ்வூருக்கு அடிக்கடி சென்று வரும் வாய்ப்புப் பெற்ருர். இந்நிலையில் கல்வெட்டு ஆராய்ச்சிப் பேரறிஞர் சதாசிவப் பண்டாரத்தாரின் நட்பு இவருக்குக் கிடைத்தது. இதனுல் கல்வெட்டு ஆராய்ச்சித்துறையில் இவர் ஈடுபாடு கொண்டார். கல்வெட்டுத் தொடர்பாகத் தமிழ்ப் பொழில், செந்தமிழ், செந்தமிழ்ச் செல்வி, ஞானசம் பந்தம் முதலிய இதழ்களில் பல கட்டுரைகள் எழுதினுர். இத்துறையில் இவர் ஆற்றிய தொண்டினைப் பாராட்டும் வகையில் தருமபுர ஆதீனத்தார் கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர் என்ற பட்டத்தை இவருக்கு வழங்கிச் சிறப்பித் துள்ளனர். பி. ஸ்ரீ. ஆச்சாரியார் தலைமையில் நடைபெற்ற கல்வெட்டு ஆராச்சிப் பிரிவில் துணைவராகச் சேர்ந்து பாண்டியர் காலச் செப்பேடுகள் அச்சாகத் துணைபுரிந்துள்ளார். தருமபுரம் ஆதீனத்தார் வெளியிட்ட திருமுறைப் பதிப்பில் தலவரலாற்றுக் குறிப்புக்களை எழுதியுள்ளார்.

நூல்: திருக்கொட்டையூர் கோடீச்சுரத்தலமான்மியம், அப்பர் ஐம்மணிமாலை, கொட்டையூர்ப் பதிகம், திருவுசாத்தானக் கல்லெழுத்துகள், முப்பது கல்வெட்டுகள் (விளக்கவுரை) திருக்குறள் பரிமேலழகர் உரை-இலக்கணக் குறிப்புகள்.

## சுந்திரவர்மன் ( )

இவன் நந்தியின் தம்பியாவான். நந்திக் கலம்பகம் என்ற நூல் யாரால் பாடப் பெற்றது என்பது தெரியவில்லை. ஆனுல் இச் சுந்திரவர்மன் இந்நூலைப் பாடியிருக்காலம் என்ற ஒரு கருத்து உண்டு.

நூல்: நந்திக்கலம்பகம்.

இது தெள்ளாறு எறிந்த நந்திவர்மன்மீது பாடப்பெற்றது.

**சுந்தரேசசர்மா டி. (20-நூ)**

**ஊர்:** தஞ்சை மாவட்டம், மன்னார்குடி.

**நூல்:** அழகனின் காதல் (1950), பொதுப்பாடல்கள் (1952), தியாகராச சரிதம் (1937), இராமாமிர்த தரங்கிணி (1938), சிருங்கார சேகர பாணு, (1938), பிரேமாவிசய சரிதம் (1943) நளினி சரிதம் (1948).

**அழகனின் காதல்** கதைநூல்

தியாகராச சரிதம், இராமாமிர்த தரங்கினி இவை இரண்டும் வடமொழியில் எழுதப் பட்ட செய்யுள் நூல்கள். சிருங்கார சேகரபாணு, பிரேமாவிசய சரிதம் இவை இரண்டும் வடமொழியில் எழுதப்பெற்ற நாடகங்கள்.

**நளினி சரிதம்** இது வடமொழியில் எழுதப்பெற்ற செய்யுள் நூல்.

**சுப்பராமஐயர்-1 (19-நூ)**

**ஊர்:** உடையார்பாளையம் கோட்டம் திருக்குன்றம்.

**தந்தை:** இராமசாமி ஐயர்.

**வாழ்ந்தகாலம்:** 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.

இவர் இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் சிறந்த புலவராக விளங்கினார். கபித்தலம் இராமபத்திர மூப்பனாருடைய சிறந்த குணங்களைப் பாராட்டிக் குறவஞ்சி நாடகம் ஒன்று இயற்றியுள்ளார். வைத்தீசுவரன் கோயிலில் எழுந்தருளியுள்ள முத்துக் குமரனையே நாயகனாகக் கொண்டு பதங்களை இயற்றியுள்ளார்.

**சுப்பராம ஐயர்-2 ( )**

**ஊர்:** பிச்சாண்டார் கோயில்.

**நூல்;** முத்துக்குமாரசுவாமி பேரில் பதம் (1876). இது வேளூர் மூத்துக்குமார சாமியின் பேரில் பாடப்பெற்றது. பல்வேறு

பாவங்களில் இவை அமைந்துள்ளன.

## சுப்பிரம ஐயர்-3 (19-நூ)

ஊர்: சிவகங்கையைச் சேர்ந்த மழவாபுரம். இவரை இருநூறவ தானம் என்று கூறுகிறார்கள்.

நூல்: பழனி வெண்பா என்னும் நூலுக்கு வழங்கிய சாற்றுக்கவி.

## சுப்பிரமையர்-4 (20-நூ)

ஊர்: மதுரை. மதுரைக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர்.

நூல்: சங்கர விசயம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பிரம தீட்சிதர் (19-நூ)

இவர் முத்துச்சாமி தீட்சிதருடைய தம்பி பாலுச்சாமி தீட்சிதரின் தத்துப்புத்திரர்.

வாழ்ந்த காலம்: 1839-1906.

இவர் தமிழ், தெலுங்கு, வடமொழி ஆகியவற்றில் தேர்ச்சி உடையவர் தமது 17வது வயதிலேயே வர்ணம், சுரஜதி முதலானவை உண்டாக்கி மதிப்புப் பெற்றார். வீணைவாசிப்பதில் வல்லவராகத் திகழ்ந்தார்.

பாலுச்சாமி தீட்சிதர் காலமான பின்பு எட்டையபுரம் அவைக்களப் புலவராக நியமனம் பெற்றார். கடவுளைக் குறித்துப் பல கீர்த்தனைகள் இயற்றியுள்ளார். தான வர்ணங்களும், பத வர்ணங்களும் இயற்றுவதில் இவருக்குத் தனிப்பட்ட சிறப்புண்டு. எட்டயபுரம் அரசர் பேரில் இவர் பல வர்ணங்களை இயற்றியுள்ளார். அவைகளில் ஸ்ரீகா என்று தொடங்கும் அடாணு வர்ணம் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும்

நூல்: *சங்கீத சம்பிரதாய பிரதர்சனி.*

இந்நூல் ஒரு சிறந்த இசையிலக்கண-இலக்கிய நூல்.

இந்நூலுக்கு முன்பிருந்த இசைநூல்களின் கருத்துக்கள் இதில் வடித்துத் தரப்பட்டுள்ளன. இந்நூலில் பல இசைப் புலவர்களின் உருப்படிகள் சுரசாகித்தியத்துடன் கொடுக்கப்பட்டுள்ளது. சமக்குறிகளுடன் உருப்படிகளை முதன் முதலில் அச்சிட்டவர் சிலரேயாவர். இவர் ஏறத்தாழ 100 கிருதிகள் இயற்றியுள்ளார்.

## சுப்பராய அடிகள் (19-நூ)

சி. பெ: பஞ்சலட்சண வித்துவான். சித்தியானந்த அடிகள் என்னும் பெரியார்பால் இலக்கண இலக்கியங்களையும் வேதாந்த நூல்களையும் கற்றவர்.

நூல்: அருணாசல ஞானதேசிகர் பிள்ளைத்தமிழ்.

## சுப்பராய ஆச்சாரியார் (19-நூ)

ஊர்: தண்டறை.

நூல்: அகம்புற ஆராய்ச்சி விளக்கம், அறிவறியாமை ஆதார விளக்கம்.

## சுப்பராய உபாத்தியாயர் (19-நூ)

ஊர்: தொண்டைமண்டலத்தில் கந்தமங்கலம்.

தந்தை: சின்னையநாயகர். இலக்கண நூலில் இவர் மிகுந்த தேர்ச்சியுடையவர்.

திருப்போரூர் முருகர் அந்தாதி.

## சுப்பராய ஐயர்-1 ( )

ஊர்: குன்றத்தூர்.

நூல்: திருப்பதி வெங்கடேஸ்சுவரர் தேர் வண்டிக்கால் சரித்திரக் கீர்த்தனம். இந்நூல் திருப்பதி வேங்கடேஸ்வரரின் தேர் வண்டியின் சிறப்பினைக் கூறுவது.

## சுப்பராய ஐயர்-2 (20-நூ)

செந்நெற்குடி.

நூல்: அரியக்குடி அரங்கநாதச் செட்டியார் இயற்றிய வால்மீகி இராமாயண சருக்கார்த்த சங்கிரகம் என்னும் நூலினைப்பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பராய ஐயர் பா. (20-நூ)

நூல்: கோவிந்தசாமி ஐயர் மு. இயற்றிய 'திருவிளையாடல் அகவற்பா, திருவிளையாடல் வண்ணம், சங்கர விஜயம் ஆகிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பராயக் கவுண்டர் (19-நூ)

ஊர்: சேலம்.

நூல்: இளையான் கவிராயர் இயற்றிய அப்பரமேசர் தல புராணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பராயச் செட்டியார்-1 (19-நூ)

அட்டாவதானப் பயிற்சி உடையவர்.

நூல்: நாகமுத்துப் புலவர் இயற்றிய தாயுமானவர் பதிற்றுப் பத்தந்தாதி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பராயச் செட்டியார்-2 ( )

ஊர்: திரிசிரபுரம்.

தந்தை: வீரராகவச் செட்டியார். சென்னை அரசாங்க நார்மல் பாடசாலைத் தமிழ்ப் புலவராக இருந்தார்.

இவர், பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம், கம்பராமாயணம் அயோத்தியா காண்டம், காஞ்சிப் புராணம், புலியூர் வெண்பா என்பவற்றுக்கு உரை எழுதி அச்சிற் பதிப்பித்துள்ளார். பதினோராந் திருமுறை முழு

வதையும் பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து முதன் முதலாக 1869இல் அச்சிட்டவர். மற்றும் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இயற்றிய மாயூரப் புராணத்தையும் நாகைக் காரோணப் புராணத்தையும் காங்கேயன் உரிச்சொல் நிகண்டு. சிதம்பர சுவாமி இயற்றிய திருப்போரூர் சந்நிதிமுறை என்ற நூல்களையும் அச்சிட்டார்.

நூல்: விரிஞ்சேகர் சதகம், சந்தனபுரிஎன வழங்கும் எயினனூர் ஆதிபுரத்தலபுராணம்.

**சுப்பராயச் செட்டியார் அ. (19-நூ)**

ஊர்: தொண்டை மண்டலத்தில் ஆதமாநகர்.

தந்தை: அருணாசலச்செட்டியார்.

நூல்: தோத்திரப்பா. சுந்தரவிநாயகர் தியான மஞ்சரி, சூரபத்மன் விலாசம், இடும்பன் கவசம், கடம்பன் கவசம்.

**சுப்பராயச் செட்டியார் சா (20-நூ)**

நூல்: சிவசிதம்பரம்பிள்ளை அ. தொகுத்த ஒன்பானொன்பது என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பராயச் செட்டியார் த க. ( )**

நூல்: ஆதிபுர தலபுராணம் (1896); திருவதிகை வீரட்டானம் பெரியநாயகியம்மன் பிள்ளைத் தமிழ்.

இந்நூல் சந்தானபுரி என்று வழங்கும் ஆதிபுரத் தல புராணமாகும். கச்சி சாத்திரியார் என்பவர் வடமொழி மூலத்திலிருந்து மொழி பெயர்த்து உதவினார். அ. சாமிநாத பிள்ளை என்பவர் எழுதிய சுருக்கமான வசனமும் நூலின் முதற்கண் அமைந்துள்ளது.

**சுப்பராயச் செட்டியார் நா. (20-நூ)**

நூல்: திம்மப்ப அந்தணனார் இயற்றிய திருவேங்கட மும்மணிக் கோவை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பராயச் செட்டியார் தி. க. (19-நூ)

நூல்: இராமசாமிமுதலியார்-சுப்பு இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பராயச் செட்டியார் பொ. மு. ( )

நூல்: சென்னை அட்டமாநகரம் பாளைபத்தம்மை பதிகம் (1884), இது குந்தளாம்பிகையம்மை பஞ்சரத்தினம் என்ற நூலுடன் இணைத்து அச்சிடப்பட்டுள்ளது. இது பாளையத்தம்மையின் புகழ் பேசும் பதிகப்பாமாலை. இது, வாழ்த்துப் பாடல் ஒன்று நீங்கலாகப் 11 பாடல்களைக் கொண்டுள்ளது.

## சுப்பராய சாத்திரி சி. (19-நூ)

வாழ்ந்த காலம் 1803-1862.

இவர் உடையார் பாளையம் பெருநிலக்கிழார் யுவரங்க பூபதியால் ஆதரிக்கப்பெற்றவர். தமிழ், தெலுங்கு, வடமொழிகளில் பயிற்சியுடைவர். முதலில் தம் தந்தையார் இடத்திலும். பின்னர்த் தியாகய்யரிடத்திலும் இசை பயின்றார். சாரிந்தா இசைக் கருவியைப் பயிற்சி செய்து அதில் பலரும் பாராட்டும் வகையில் இசை நிகழ்ச்சிகளை நடத்தினர். இவர் பல கிருதிகளையும் சுரஜதிகளையும் இயற்றியுள்ளார். இவருடைய உருப்படிகள் இராகச் செறிவுடனும் இசை-அணிகளுடனும் விளங்குகின்றன. இவர் பெரும்பாலும் அம்பிகைமீதே பாடினர்.

## சுப்பராய சாமிகள் (19-நூ)

ஊர்: சிதம்பரம்.

நூல்: விருத்தாசலம் குமாரதேவர் திருத்தாலாட்டு, திருப்புலீச்சர மான்மிய சங்கிரகம்.

## சுப்பராயதாசர் (19-நூ)

ஊர்: சென்னை.

நூல்; திருமூர்த்தி நயினர் இயற்றிய நாலு மந்திரி கதை என்னும் நாடக நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பராய நாயகர் நூ (19-நூ)**

ஊர்: சென்னை. கிறித்தவக் கல்லூரியில் தமிழாசியராகப் பணி புரிந்தவர்.

நூல்: கந்தபுராணப் பொழிப்புரை.

**சுப்பராய நாயகர் பூ (19-நூ)**

நூல்: நாராயணசாமி நாயகர் இயற்றிய திருக்கழுக்குன்ற அந்தாதி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பராயப்பண்டாரம் (19-நூ)**

ஊர்: திருத்தணிகை.

நூல்: முருகேச முதலியார் தெ. இயற்றிய சிவத்தலமானமியச் சுருக்கம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பராயப்பத்தர் (19-நூ)**

ஊர்; மதுரை.

நூல்: இராமச்சந்திர வெள்ளை பொம்மைய நாயகர் இயற்றிய 'இதயதீபம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பராயப்பிள்ளை ( )**

நூல்: திருவேரக நான்மணி மாலை.

**சுப்பராயப்பிள்ளை-கா. (19-நூ)**

தரங்கம்பாடி மிஷன் உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழ்ப் புலவராக இருந்தவர்; ஐயாச்சாமிப்பிள்ளை இயற்றிய தில்லைய் மக வந்தாதி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## சுப்பராயப்பிள்ளை மு. (19-நூ)

ஊர்: தூத்துக்குடி.

நூல்: சுப்பிரமணிய சுவாமி பசனைக் கீர்த்தனை, திருச்செந்திற் குமரேசர் பதிகம், திருச்செந்திற் குமரேசர் அந்தாதி, திருச் செந்திற் வெண்பா, கப்பற்சிந்து.

திருச்செந்திற் குமரேசர் அந்தாதி என்ற நூல் 101 கலித்துறைகளையுடையது; திருச்செந்திற் முருகன் சீர்பாடுவது.

## சுப்பராயப் புலவர் ( )

நூல்: விருந்தீசுரர் சதகம்.

## சுப்பராயப் புலவர் பு. மு. ( )

நூல்: சம்பரர் மான்மியக் கீர்த்தனை. இந்நூல் 102 செய்யுட்களை உடையது. திருவனந்தபுரம் கேரளாதிபதி பூசத்தம்பிரான் அருளால் பாடல் பெற்றது.

## சுப்பராய முதலியார்-1 ( )

நூல்; நாட்டுச் செல்வரை ஒட்டாண்டி யாக்கும் மால்காட்டும் மங்கையர் சிந்து, ஜோதி நாடகம்,

முதல் நூல் விலைமாதரின் இயல்புகளை எடுத்துரைத்து அவர்களின் தொடர்பினைத் தள்ளுமாறு அறிவுரை கூறும் வகையில் அமைந்தது.

## சுப்பராய முதலியார்-2 ( )

நூல்: மெய்ஞ்ஞான ரத்னம்.

## சுப்பராய முதலியார்-3 ( )

ஊர்: தண்டலம்.

நூல்: சாவல் பாட்டு, தியாகராசர் பேரில் தேவாரப் பதிகம்,

சுராபாண்டியன் மரபில் தோன்றிய சான்றோர் நான் மணிமாலை.

## சுப்பராய முதலியார்-4 ( )

**ஊர்:** திருவேற்காடு.

**நூல்;** தமிழ் விளக்கம். இந்நூல் ஆங்கிலக் கிழக்கிந்திய அரசாங்கத்தாரின் பரிசு பெற்ற முதல் உரைநடை இலக்கண நூலாகும்.

## சுப்பராய முதலியார்-5 (19-நூ)

**ஊர்:** புன்னைப் பாக்கம்.

**நூல்:** இராமாநுசம்பிள்ளை இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்,

## சுப்பராய முதலியார்-6 ( )

**ஊர்:** வேலூர்.

**நூல்;** இவரும் முத்திராமக் கவிராயரும் பாரதத்தை நாடகமாகப் பாடியுள்ளனர். இந்நூலில் 900க்கு மேற்பட்ட இசைப் பாடல்கள் அடங்கியுள்ளன.

## சுப்பராய முதலியார் க. (19-நூ)

**நூல்:** அருணாசலக் குருக்கள் இயற்றிய சோடச கணபதி மாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## சுப்பராய முதலியார் த. ( )

**நூல்;** சதுர்த்தி விரத சரித்திர சங்கிரகம், விநாயக தோத்திரத் திரட்டு. இரண்டாவது நூலில் விநாயக கவசம், மூத்த நாயனார் இரட்டை மணிமாலை, மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை, விநாயகர் திருவிரட்டை மணிமாலை, விநாயகக் கடவுள் தனி விருத்தம், வல்லபை கணேசர் பிரசாதமாலை என்னும் பிரபந்தங்கள் அமைந்துள்ளன; இது நூறு செய்யுட்களைக் கொண்டது.

**சுப்பராய முதலியார்-தே. (19-நூ)**

**ஊர்:** சென்னையில் தேனாம்பேட்டை. சதாசிவப்பிரமேந்திர யோகீசுரர் என்பவரை ஞானாசிரியராகக் கொண்டவர்.

**நூல்:** திருமயிலைக் கபாலீசர் இரட்டை மணிமாலை. திருக்கழுக் குன்றம் பெண்ணி நல்லாளம்மன் பதிகம், திருமயிலைக், கபாலீசர் நான்மணிக்கோவை, கற்பக வல்லியம்மன் பதிகம் திருக்கழுக்குன்றம் வேதகிரீஸ்வரர் பதிகம்.

முதலாவது நூல் 20 செய்யுட்களைக் கொண்டது. இரண்டாவது நூல் 11 செய்யுட்களாலாயது; திருக்கழுக்-குன்றப் பெருமான் புகழினைப் பாடுவது. மூன்ருவது நூலில் 15 செய்யுட்கள் உள்ளன; திருக்கழுக்குன்றத்தில் உள்ள பெண்ணின் நல்லாள் அம்மனைக் குறித்துப் பாடப்பெற்றது.

**சுப்பராயர், கோ. சி. ( )**

**நூல்:** இராயராண்ட வேலநகர் ஜலப்பிரளைய ஏலப்பாட்டு (1884). இது வேலூரில் நிகழ்ந்த பெருவெள்ள நிகழ்ச்சி பற்றிக் கூறும் இசைப்பாட்டு.

**சுப்பராயலு நாயக்கர் ந. வ. ( )**

**ஊர்:** தரங்கமாநகரம்.

**நூல்:** உவமைச்சொல் அகராதி, மகாபாரதமென்னும் இதிகாசத்தில் முதலாவது ஆதிபர்வம், மகாபாரதமென்னும் இதிகாசத்தில் இரண்டாவது சபாபர்வம்.

இவற்றுள் முதல் நூலை இவ்வாசிரியர் பல பிரதிகளைக் கொண்டு ஆய்ந்து புதியன சிலவற்றைச் சேர்த்துப் படைத்துள்ளார். இதில் உலக வசனங்களாகிய பழமொழிகள் அகராதி வரிசையில் தரப் பெற்றுள்ளன.

இரண்டாவது நூல் தமிழிலுள்ள பாரத நூல்களையும் வியாசரின் வடமொழி முதல் நூலையும் நோக்கிச் சுருக்கமான முறையில் இயற்றப் பெற்றது.

மூன்றாவது நூலில் சபாபர்வத்தின் பொருளட்டவணையை முகப்பில் தந்துள்ளார். சபைநிர்மாண கதை முதல் பாண்டவர் வனவாசம் புக்க கதை ஈறாக 24 அத்தியாயங்கள் உள.

**சுப்பராயலு நாயகர்** (19-நூ)

ஊர்: காரைக்கால் பகுதி, கோட்டுச்சேரி.

நூல்: திருப்பனந்தாள் காசிமடத்தலைவர் சாமிநாத சாமிகள் மீது பாடிய பல செய்யுட்கள்.

**சுப்பராயலு நாயுடு** (          )

ஊர்: திருவெவ்வுளூர்.

தந்தை: மதுராவயல் சேஷாசலநாயுடு.

நூல்: திருவெவ்வுளூர் வீரராகவப் பெருமாள் மீது அந்தாதி.

**சுப்பராயலு ரவுத்து** (20-நூ)

ஊர்: ஈரோடு.

நூல்: திம்மப்ப அந்தணாளர் இயற்றிய திருவேங்கட மும்மணிக் கோவையினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பராய முதலியார்-தொ** (19-நூ)

ஊர்: திருப்பணிப்பேட்டை.

நூல்: திருவாரூர்த்தியாகேசர் மாலை, திருப்பணிப்பேட்டைச் சுந்தரேசர் திருத்தொண்டர் மாலை, கண்கொடுத்த வனிதம் நயனவரதர் மாலை.

**சுப்பிரதீபக் கவிராயர்** (18-நூ)

ஊர்: மதுரையைச் சேர்ந்த திருமங்கலம் கோட்டத்தில் உள்ள சிற்றூர்.

வாழ்விடம்: திருவரங்கம்: கம்மாள குலத்தினர்.

இவர் அட்டாவதானப் பயிற்சியுடையவர். வீரமா முனிவருக்குத் தமிழ் கற்பித்தவர். அவரது முயற்சியால் இவர் நாளடைவில் கிறித்தவராக மாறினர்.

நூல்: கூளப்பநாயக்கன் காதல், விறலி விடு தூது, பெரிய நாகேந்திரன் காதல்.

கூளப்பநாயகன் காதல் என்னும் நூல் கூளப்ப நாயக்கன் மீது பாடப்பட்ட காதல் பிரபந்தமாகும் கூளப்பநாயக்கன் என்பவர் மதுரை மாவட்டம், நிலக்கோட்டைக் கோட்டம் தவபுரி எனப்படும் பெஞ்சையென்னும் ஊரிலிருந்த ஒரு நிலக் கிழார். இவர் புலவர் பாடும் புகழ் படைத்தவர். விறலிவிடு தூது என்பது கூளப்பநாயக்கன் என்னும் வள்ளல் மீது காதல் கொண்ட ஒரு பெண் தன் விறலியைத் தூதுபோய் மீள்க என அவன்பால் விடுத்ததைக் கூறுவது.

## சுப்பிரமணிய உடையார் வே. ( )

நூல்: இராமசாமிப்பிள்ளை, கா. இயற்றிய சோதிடசிகாமணி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பிரமணிய உபாத்தியார்; ( )

நூல்: மாதரொழுக்கம்.

உரைநடையிலான இந்நூலில், நீதி நூல்களையும் உலகியலையும் தழுவி மாதர் ஒழுக வேண்டும் என்று கூறியுள்ளார்.

## சுப்பிரமணிய ஐயர்–1 ( )

சி. பெ: கவீசுரர்.

ஊர்: கோயமுத்தூர்.

நூல்: மீனாட்சியம்மை ஊஞ்சல்.

## சுப்பிரமணிய ஐயர்–2 (20-நூ)

ஊர்: திருவேட்டீசுரன்பேட்டை. இவர் பள்ளி ஆசிரியராகப்

பணி புரிந்தவர்.

நூல்: நடராச தத்துவம், இடும்பியன் தந்திரம்.

## சுப்பிரமணிய ஐயர்–3 (19-நூ)

ஊர்: தேவகோட்டை.

நூல்: தேவை பிள்ளைத் தமிழ். தேவகோட்டையில் திருக்கோயில் கொண்டுள்ள முருகன் மீது பாடப்பட்டதாகும்.

## சுப்பிரமணிய ஐயர்–4 (19-நூ)

ஊர்: தஞ்சாவூர், அந்தணர்.

இவர் அட்டாவதானம், தசாவதானம், சோடசாவதானம் பயிற்சி பெற்று இறுதியில் சதாவதானியாகத் திகழ்ந்தார். அவதானம் செய்யும் காலத்தில் சில தனிப் பாடல்கள் இயற்றியுள்ளார். சித்திரகவிகள் இயற்றுவதிலும் வல்லவர். பல புலவர்கள் இயற்றிய நூல்களுக்கும் சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளார். சென்னையில் வித்திய வர்த்தினி என்னும் அச்சுக்கூடத்தினை அமைத்து நூல்கள் பலவற்றையும் வெளியிட்டுள்ளார். இவர் பாடிய தனிப் பாடல்கள் பல பாடற்றிரட்டு என்னும் பெயரில் வெளி வந்துள்ளது.

நூல்: பலபாடற்றிரட்டு, காளையார் கோயிற் புராணம், கோட்டூர்ப் புராணம், இலுப்பைக் குடிப்புராணம், மாற்றூர்ப் புராணம், உப்பூர்ப் புராணம், திருமருகர் புராணம், திருவேடகப் புராணம், கோவைமுத்து விநாயகர் இரட்டை மணிமாலை, தேவைப் பிள்ளைத் தமிழ், கோயிலூர்ப் பிள்ளைத் தமிழ், மாணிக்கவாசகர் நான்மணிமாலை, புதுவைப் படிக்காசு நாதர் இரட்டை மணிமாலை, அட்டைசுவரியமாலை, சிருங்கேரி மடாலயச் சாரதாபீட சங்கராச்சாரிய சுவாமிகள் தோத்திர நமசிவாய பஞ்சகம், பருவவருணனைக் கலம்பகம், இலக்குமிபுரஸ்தல புராணம், நடராச தயாநிதி மாலை, நடராச குஞ்சிதபாதப் பதிகம்.

சுப்பிரமணிய ஐயர்-5 (19-நூ)

வே. பெ: பட்டணம் சுப்பிரமணிய ஐயர்.

தந்தை: பரதம்வைத்தியநாதையர்.

வாழ்ந்த காலம்: 1845-1902.

நூல்: பலகிருதிகள், தில்லானுக்கள், புதினங்கள்,

சுப்பிரமணிய ஐயர், எம் என் (20-நூ)

பிறப்பு: 1886.

இவர் வரலாற்றுத் துறையிலும் மற்றும் பல துறைகளிலும் பல நூல்களை இயற்றியுள்ளார்.

நூல்: அப்துல்கபார்கான், ஐரிஸ்வீரத்தலைவர் டி. வேலரா, ஐசுவரிய சக்கரம், அன்னை கஸ்தூரிபாய், ஆரிய சரித்திரம், ஆறுமுகநாவலரும் சிஷிர்குமார் கோஷும், அறுபத்து மூவர் மகிமை, பாலகங்காதர திலகர், பாலகருடன். பாலகதா மஞ்சரி, பாலர்தேச சரித்திரம், பாலர்கதா பூஷணம், பாலர் கதைகள், பாலர் கதைப்பாடல்கள், பாலஸ்காந்தம் பாரதஜோதி, பாரத வீரர், பாரதியும் லஜபதியும், சிதம்பரம் பிள்ளையும் பாலகங்காதர திலகரும், காங்கிரஸ் சரித்திரம், காங்கிரஸ் பொன் விழா மலர், காந்தி காந்தம், காந்தி கதைகள், காந்தி திருவாசகம், இந்தியக் கடன்சுமை, இந்தியாவும் சுய ஆட்சியும், இந்து தேச சரித்திரம், இன்பரசக் கதைகள், ராஜாமணி-மாரன், இராஜ புத்திர விஜயம், ராஜேந்திரப்பிரசாத், இதர தேசங்களில் ஒத்துழையாமை, ஜெயபிரகாஷ் நாராயண், கம்யூனிஸ்டுகள் சாதித்ததென்ன? கான்பூர் கலகம், கன்னியர்வீரம், கற்பரசி, கதாபோதம், கதைவிளக்கம், கிராம நிர்மாணம், கிருஷ்ணகுமாரி, லாலா லஜபதிராய், மஹாதேவ ரானடே, மஹாத்மா காந்தி ஜீவிய சரித்திரம், மக்கள் ராஜ்ஜியம், மன்மதவிலாஸம், நமது சுதந்திர வரலாறு, நம்மவரின் பண்பாடு. நன்றி மறவாக் கந்தசாமி, நேதாஜி, நீலி பராக்கிரமம், நீதி க்தா மஞ்சரி, ஒப்பந்தக்கூலி முறை, பாலிகை

கதாபூஷணம், பண்டித மதன மோகன மாளவியா, பாரத நாட்டின் நிலைமை, பட்டேல் சோதரர், பிரதாப சிம்மன், பொன்கொள்ளை, சடையப்ப வள்ளல், சக்கரவர்த்திகள்சரிதை, சரித்திரக் கதைகள், சரித்திர தீபம், சர்தார் பகத்சிங், சர்தார் படேல், சத்தியாக்கிரகப் போர்வீரர் சரித்திரம், சிவாஜி, சிவராத்திரி மான்மியம், ஸ்ரீ ஜான்ஸிராணி, ஸ்ரீவிநாயக சாவர்க்கார், சூரபாநு, சுதந்திர சரித்திரம், சுயராஜ்யப்போர், சுவாமி ராம தீர்த்தர், தளவாய்த் தாத்தா அரிய நாயக முதலியார், தமிழகத்தின் மாண்பு, தமிழர் சிறப்பு, தஞ்சை நாயக்கர், தேசஜோதி, திருக்குறள் நீதிக்கதைகள், தேசமஉறா புருஷர், வாள்வீரகேசரி, வஸந்தசேனை, விஜயலட்சுமிபண்டிட், விகடக் களஞ்சியம், வீரமாதர், வீரபத்தினிமார், வீரப்பெரு மக்கள், வீரரின் பண்பு, வீரசிங்க அமரசிம்மன், வீரவிலாசம்.

**சுப்பிரமணிய ஐயர் க. (19-நூ)**

**ஊர்:** திருக்கோகர்னம்.

**நூல்:** திருக்கோகர்ன அந்தாதி. இந்நூல் 100 கட்டளைக் கலித் துறைகளைக் கொண்டது.

**சுப்பிரமணிய ஐயர் கோ கி (19-நூ)**

**நூல்:** நீதியனுபவக்கும்மி (1885) இது 101 செய்யுட்களைக் கொண்டது.

**சுப்பிரமணிய ஐயர்-1**

**ஊர்:** பழங்கா. இவர் வழக்கறிஞர் தொழில் புரிந்தவர்.

**நூல்:** பதிவிரத பாரம்பரியம்.

இந்நூல் சாவித்திரி கதைகளை நாடக அமைப்பிற் கூறுவது. ஏழுயினை அங்கங்களையும் அவ்வங்கங்களில் 23 வெண்பாக் களையும் 10 கலித்துறைகளையும் 69 விருத்தங்களையும் கொண்டுள்ளது.

**சுப்பிரமணிய ஐயர் சு 2 ( )**

**ஊர்:** மழவராயனேந்தல்.

நூல்: திருவிளையாடற்கீர்த்தனை. மீனாட்சியம்மன் கோயிலில் அரங்கேற்றப் பெற்ற இந்நூல் 800க்கு மேற்பட்ட பாடல்களைக் கொண்டது.

நூல்: செல்வ விருத்தி விளக்கம் (1915). இது பொருளாதாரம் பற்றிய உரைநடை நூலாகும்.

**சுப்பிரமணிய ஐயர் பி. (19-நூ)**

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் கோட்டையூர்.

தந்தை: மீனாட்சி சுந்தரம் ஐயர்.

இவர் சுப்பராயர் என்பவரிடத்திலும் செந்நெற்குடி வீம கவிராயரிடத்திலும் தமிழ் நூல்களைக் கற்றார். செய்யுள் இயற்றும் திறம் பெற்ற பிறகு மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்தார். கம்பராமாயணத்தை அடியொற்றி வெண் பாக்களாகப் பாடவேண்டும் என்பது இவருடைய விருப்பமாக இருந்தது. இதனால் பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம் என்னும் ஆறு காண்டங்களையும் 9379 பாடல்களாகப் பாடிமுடித்துள்ளார். இந்நூலைக் க. வீ. அழ மு. இராமநாதன் செட்டியார் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

நூல்: துர்க்காம்பாள் பதிகம்.

**சுப்பிரமணிய ஐயர் ரா. (20-நூ)**

ஊர்: வையை; அந்தணர்.

தஞ்சாவூரில் உள்ள செயிண்ட் பீட்டரீஸ் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இருந்தவர்.

நூல்: தனிப்பாடல்கள்.

**சுப்பிரமணிய ஐயர், வ. வே. (20 நூ)**

ஊர்: திருச்சிராப்பள்ளியைச் சேர்ந்த வரகனேரி.

இவர் பன்னிரண்டாம் வயதில் மாநிலத்திலேயே முதலாவதாக மெட்ரிகுலேஷன் தேர்வில் தேர்ச்சியுற்ருர். பதினெட்டாம் வயதில் பி. ஏ. பட்டம் பெற்று, 1901இல் சட்டத் தேர்வில் தேர்ச்சியுற்று வழக்கறிஞரானுர். இவர். 1907இல் பாரிஸ்டராவதற்காக இலண்டன் சென்ருர். இலண்டனில் இவர் தீவிரப் புரட்சிக்காரராக மாறினுர். பாரிஸ்டர் தேர்வில் தேறியபின் பிரிட்டீஷ் ஒற்றர்களிடம் அகப்படாமல் தப்பிப் பிரான்சுக்குச் சென்று அங்கிருந்து புதுச்சேரி வந்தடைந்தார். அங்கே நாட்டு விடுதலைக்குப் புரட்சி நடத்தி வந்ததோடு இலக்கியத் துறையிலும் பணி புரிந்து வந்தார். 1920இல் இந்திய அரசாங்கம் அரசியல் குற்றவாளிகளுக்குப் பொதுமன்னிப்புத் தந்தபடியால் இவர் சென்னைக்குச்சென்று 'தேசபக்தன்' என்ற நாளிதழுக்கு ஆசிரியரானுர். சில திங்களுக்குப் பின் அவ்வேலையை விட்டு விலகினுர். 1922இல் சேரமாதேவியில் தமிழ்க் குருகுலம் ஏற்படுத்தி மாணவர்களுக்குக் குருகுலக் கல்வி புகட்டினுர். 1925ஜூன் திங்கள் 3ஆம் தேதி மாணவர்களுடன் பாபநாசநீர் வீழ்ச்சிக்குச் சென்ருர். பாபநாசம் கல்யாண தீர்த்த அருவியில் தவறி விழுந்திட்ட தம்மகள் சுபத்திரையைக் காக்க முயன்ற போது தாமும் தவறி விழுந்து காலமானுர்.

நூல்: திருக்குறள் (ஆங்கில மொழிபெயர்ப்பு), குறுந்தொகை (ஆங்கில மொழிபெயர்ப்பு), கரிபால்டி, நெப்போலியன், சந்திரகுப்த சக்கரவர்த்தி, புக்கர்வாஷிங்டன், (இவர்களுடைய வாழ்க்கை வரலாறு) தன்னம்பிக்கை, மங்கையர்க்கரசியின் காதல் முதலிய கதைகள், இராமாயண ஆராய்ச்சி (ஆங்கிலம்)

தன்னம்பிக்கை: அமெரிக்க அறிஞர்எமர்சன் எழுதிய தன்னம்பிக்கை என்ற நூலின் தமிழாக்கம்.

## சுப்பிரமணியக் கவிராயர்-1. ( )

வே. பெ: சுப்பிரமணியப்புலவர், ஆண்டு கொண்டான் கவிராயர்

ஊர்: சிவகெங்கை; ஆண்டு கொண்டான் என்னும் ஊர்.

இவர் விரைவாகச் செய்யுள் இயற்றும் வல்லமையுடையவர்.

நூல்: பிரசங்கரத்னுகரம்.

## சுப்பிரமணியக் கவிராயர்-2. (          )

ஊர்: பாண்டிநாட்டினர். சூரங்குடி, சாத்தூர் முதலிய இடங்களில் வாழ்ந்தவர்.

நூல்: இரவண சமுத்திரம் மீனும்பிகை பதிகம், திருப்பரங்குன்றம் முருகக் கடவுள் பதிகம், கழுகுமலை முருகக் கடவுள் பதிகம்.

## சுப்பிரமணியக் கவிராயர் 3 (19-நூ)

ஊர்: திருக்கடலூர்.

நூல்: திருக்கடலூர் உலா, திருக்கடலூர்ப் புராணம், திருநள்ளாற்றுப் புராணம், மயிலைக்கோவை, மயிலையந்தாதி, திருக்கடலூர் உலா 458 கண்ணிகளையுடையது.

## சுப்பிரமணியக் கவிராயர்-4 (          )

சோடசாவதானம் செய்வதில் வல்லவர்.

நூல்: கருநாடு தகராதிபன் உத்திராபதி என்பவர் மகன் வெங்கடரங்கமால் என்பவருக்கு அனுப்பிய சீட்டுக்கவி.

## சுப்பிரமணியக் கவிராயர், ஆ (          )

ஊர்: ஆண்டு கொண்டான்.

வடமொழி, தென்மொழிப்புலமை நிறைந்தவர்; இசைப் பதங்கள் பாடுதலில் வல்லவர்.

நூல்: திருமணக் குறவஞ்சி. இந்நூல் சேதுபதியின் அமைச்சர் கோட்டைச் சாமித்தேவர் மீது பாடிப் பரிசு பெற்றதாகும்.

## சுப்பிரமணியக் கவிராயர், சே. ரா. (20-நூ)

ஊர்: முகவூர்.

தந்தை: இராமசாமிக் கவிராயர்.

இவர் இளமைக்கல்வியைக் கற்று முடித்தபின் திருவாவடுதுறை ஆதீனத்தையடைந்து அங்குச் சந்நிதானமாக இருந்த நமசிவாய தேசிகரிடம் முறையாகக் கற்றுப் பெரும் புலமை எய்தினர். இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்த எண்ணற்ற ஓலைச் சுவடிகளை ஆராய்ந்து சரியான பாடத்தை முடிவு செய்து பல நூல்களை அச்சிற் பதிப்பித்தார். இவர் மாணவர்களுக்கு இலக்கண இலக்கியங்களையும் சைவ சித்தாந்த நூல்களையும் கற்பித்தே தம் வாணாளைக் கழித்தார்.

நூல்: தனிப்பாடல்கள்.

இவர் பாடல்கள் தனிச் செய்யுட் சிந்தாமணியில் சேர்ந்துள்ளன.

**சுப்பிரமணியக் கவிராயர் மு. ராசு ( )**

தந்தை: சேற்றூர் இராமசாமிக் கவிராயர்.

இவர் அம்பலவான தேசிகர் காலத்தில் திருவாவடுதுறை ஆதீனப் புலவராக விளங்கினர்; சிறந்த நினைவாற்றல் உள்ளவர்.

நூல்: செப்பறைப் பிள்ளைத் தமிழ். ஞானமிர்தம் என்னும் நூலைப் பதிப்பித்தார்.

**சுப்பிரமணியக் கவிராயர் மெ. சொ. (20-நூ)**

இவர் திரிகூடராசப்பக் கவிராயரின் வழிமுறையில் தோன்றியவர். திருநெல்வேலியில் உள்ள இந்துக் கல்லூரியில் விரிவுரையாளராக விளங்கியிருந்தவர்.

நூல்: அப்பாச்சாமி முதலியார் என்பவர் இயற்றிய 'சுத்தாத்துவித சைவசித்தாந்த பரபோதம்'. என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பிரமணிய குரு (          )**

நூல்: அபரோட்சான்மானுபூதி தீபிகை.

**சுப்பிரமணியச் செட்டியார் (          )**

நூல்: மூவர் முப்பது.

**சுப்பிரமணியச் செட்டியார் பெ. (          )**

நூல்: அரிச்சந்திரன் கொம்மி (1975).

இந்நூல் அரிச்சந்திரன் கதையினைக் கும்மிப்பாட்டில் தருவது.

**சுப்பிரமணியச் செட்டியார், ம (19-நூ).**

ஊர்: கோயம்புத்தூர் மாவட்டம் திருப்பூர்.

இவர் சேற்றூர் அ. கணபதிக் கவிராயரிடம் தமிழ் நூல்களைக் கற்றார்.

நூல்: பரமாநுபூதி.

**சுப்பிரமணிய சர்மா தெ. ரா. (          )**

நூல்: திருமலைநாயக்கர் சரித்திரம். இந்நூல் திருமலைநாயக்கரது வரலாற்றுச் சுருக்கமாகும். இந்நூலின் 5ஆவது பதிப்பு 1929ஆம் ஆண்டில் அச்சிடப்பெற்றுள்ளது.

**சுப்பிரமணிய சாத்திரிகள் (19-நூ)**

ஊர்: பாண்டிய நாட்டில் வீரகேரளம்புதூர்.

நூல்: ஊற்றுமலைப் பெருநிலக்கிழார் இருதயலாய மருதப்பத் தேவர் மீது பாடிய பாடல்கள்.

**சுப்பிரமணிய சாத்திரிகள் ச. (20-நூ)**

ஊர்: யாழ்ப்பாணத்தினைச்சேர்ந்த தென்புலோலியில் தும்பளை.

தந்தை: சபாபதி ஐயர்.

வாழ்ந்த காலம் 1875-1950.

இவர் இவருடைய பாட்டனார் மகாதேவக் குருக்களிடமும் தாய்மாமன் முத்துக்குமாரசாமிக் குருக்களிடமும் தமிழ், வடமொழி நூற்களைக் கற்றார். மேலைப்புலோலியிலுள்ள சைவ வித்யாசாலையில் ஆசிரியராகப் பணியாற்றினார்.

இவர் தம் தம்பியினுடைய துணைகொண்டு ஓர் அச்சகத்தினை நிறுவி வடமொழி, சோதிட நூற்களை வெளியிட்டார். செம்மை செய்யப்பெற்ற வாக்கியப் பஞ்சாங்கத்தினை ஆண்டு தோறும் உரியகாலத்தில் வெளியிட்டார். இவர் கந்த புராணத்தில் உற்பத்தி காண்டம், அசுரகாண்டம், மஹேந்திர காண்டம், யுத்தகாண்டத்தில் ஒரு பகுதி ஆகியவற்றிற்கு உரை வரைந்துள்ளார். மேலும் நீதிவெண்பா, கந்தரனுபூதி ஆகிய நூல்களுக்கு உரை எழுதியுள்ளார். சொற்பொருள்-விளக்கம் என்னும் தமிழகராதியினையும் வெளியிட்டுள்ளார். ஏகாதசிப்புராணக் குறிப்பு என்ற நூலினையும் எழுதியுள்ளார்.

## சுப்பிரமணிய சாமிகள்–1 ( )

ஊர்: கோயம்புத்தூர்.

நூல்: இரத்னசலக் குமரகுரு சுவாமி பதிகம். இது 11 செய்யுட்களையுடையது. 'ரத்னசலக் குமர குருபூரண வடிவேலனே' என முடியும் ஆசிரிய விருத்தத்தாலாகிய துதிப்பாக்கள் அடங்கியுள்ளன.

## சுப்பிரமணிய சாமிகள்–2 ( )

வாழ்விடம்: சிதம்பரம்.

நூல்: ஆத்ம விளக்கம் (1886); ஞானனந்த தீபம் (1886).

ஆத்மவிளக்கம்: காட்சி, பிரமாணம், அனுமானம் முதலிய எட்டுப் பிரமானங்களைப் பற்றி விவரித்துரைப்பது.

ஞானனந்த தீபம்: இது தஞ்சை நேஷனல் அச்சுக்கூடத்திற் பதிப்

பிக்கப்பெற்றது. காமம், குரோதம் முதலியவற்றின் இயல் புரைப்பது.

## சுப்பிரமணிய சாமிகள்-3. (19-நூ)

ஊர். திருவாவடுதுறை, நூல்: சுப்பிரமணியர் விருத்தம்.

இது 12 பக்கங்களிலமைந்த செய்யுளாலாயது. சுப்பிரமணிய சுவாமிகள்பேரில் தோத்திரப் பாமாலை, 'சதுர் மறைகளே தந்த பரம குருவாய் வந்த சரவணபவானந்தனே' என்னும் முடிவைப் பெற்றுள்ள விருத்தங்களைக் கொண்டது.

## சுப்பிரமணிய சிவா (20- நூ)

ஊர்: மதுரை மாவட்டம், வத்தலக்குண்டு.

தந்தை: ராஜம் ஐயர்; தாய்: நாகம்மாள்.

வாழ்ந்த காலம்: 14—10—1884——23—7—1925.

தமது வாழ்நாள் முழுமையும் நாட்டுவிடுதலைக்கும் நாட்டுப்பணிக்கும் செலவழித்த சுப்பிரமணிய சிவா முதலில் மதுரையிலும் பின்னர்க்கோயம்புத்துரிலும் கல்வி கற்றார். 1899இல் திருமணம் செய்து கொண்டார். திருவனந்தபுரம் கொட்டாரக்கரை சுவாமி சதானந்தரிடம் யோகமும் ஞானமும் பயின்று வந்தார். 1921இல் இராமநாதபுரம் மாவட்டம் காரைக்குடியில் இளைஞர்களுடன் சேர்ந்து ஸ்ரீபாரதாசிரமம் நடத்தி வந்தார். சுவாமி சதானந்தர் இவரை அரசியலை விட்டு விலகும்படி கூறியும் இவர் விடுதலையே வீடுபேறு என்று கூறி விலகாதிருந்தார். 1911இல் ஞானபானு, பிரபஞ்ச மித்திரன். இந்திய தேசாந்திரி என்னும் பத்திரிகைகளை நடத்தினார். இவர் அரசியலில் கொண்ட ஆர்வத்தால் அந்நியஆட்சியை ஒழிக்கப் பிரசாரம் தொடங்கினார். திருவனந்தபுரம் சமஸ்தானத்தார் இவரைஅங்கிருந்து வெளியேறஆணையிட்டனர். அதனால் திருநெல்வேலி சென்றார். 1906இல் தூத்துக்குடியில் கப்பலோட்டியசிதம்பரம் பிள்ளைக்குத் துணையாக வேலை செய்தமையால் 1908இல் சிறையில்

அடைக்கப்பட்டார். ஆருண்டுகள் கடுங்காவல் தண்டனை பெற்று வெளிவந்ததும், 1912—1920 வரை பத்திரிகைகளில் எழுதியும், புத்தகங்கள் வெளியிட்டும் தம் வாழ்க்கையை நடத்தி வந்தார். தமிழகம் முழுதும் மகாகவி பாரதியார் பாடல்களைப்பாடி மக்களை வீறுகொண்டெழும்படி செய்தார். தேசபந்து சித்தரஞ்சன தாசரைக் கொண்டு 1923இல் பாரத மாதா கோயிலுக்கு அடிக்கல் ஒன்று நாட்டினர். 23—7—25 இல் பாப்பாரப்பட்டியில் காலமானர்.

நூல்: ஞானபானு, பிரபஞ்சமித்திரன், இந்திய தேசாந்திரி; இவையனைத்தும் இதழ்களாகும்.

**சுப்பிரமணிய சிவாச்சாரியார்** (20-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்திலுள்ள வட்டுக்கோட்டை.

நூல்: சிவராத்திரிப் புராணம். இந்நூல் 6 சருக்கங்களையும் 301 பாடல்களையும் கொண்டது.

**சுப்பிரமணியத் தம்பிரான்** (          )

திருவாவடுதுறையாதீனத் தம்பிரான்களுள் ஒருவர்.

நூல்: பூவனூர்ச்சிலேடை வெண்பா.

**சுப்பிரமணிய தாசு** (20-நூ)

ஊர்: நாஞ்சில் நாட்டில் திருப்பதிசாரம்.

தந்தை: பசுங்கிளித் தேவர்; தாய்: ஆச்சியம்மாள்.

இவர் மற்போரில் வல்லவர்; உழவுத் தொழிலை மேற்கொண்டவர்; வடசேரி இராமசுப்பு ஆசாரியரிடம் வேதாந்த, இலக்கண, இலக்கிய நூல்களைக் கற்றார். நாகர்கோயில் மார்க்கண்டேயர்பால் திருக்குறள் பயின்றார். கோட்டாறு சதாவதானி செய்குத்தம்பிப் பாவலரிடம் திருக்குறள் அவதானப் பயிற்சி பெற்றார்.

நூல்: வள்ளுவர் வகுத்த அரசியல், திருக்குறளும் காந்தியடிகளும்.

**சுப்பிரமணிய தீட்சிதர்** (17-நூ)

ஊர்: ஆழ்வார் திருநகரி என்னும் திருக்குருகூர்.

இவர் தமது இளமைப் பருவத்திலேயே வடமொழி, தமிழ்மொழி என்னும் இரு மொழிகளையும் கற்றுத் தேர்ந்தார். வடமொழி, தென்மொழி என்ற இரண்டின் இலக்கணமும் ஒருபுடை ஒப்புமையுடையதென்றுணர்த்தி வடமொழி இலக்கணத்தைத் தமிழ் மொழியில் புகுத்தினார்

நூல்: பிரயோக விவேகம்.

வடமொழியிலிருந்து தமிழில் வழங்கும் இலக்கணப் பாகுபாடுகள் இன்னவையென்பதும், தமிழுக்கே உரியன இன்னவென்பதும், இரண்டிற்கும் பொதுவாக உள்ளன இவையென்பதும் தக்க ஆதாரங்களுடன் இந்நூலுட் காட்டப்பட்டுள்ளன. இது கலித்துறையில் அமைந்த 51 பாக்களை உடையது. இது காரகபடலம், சமாசபடலம், தத்தித படலம், திங்ஙப்படலம் என்ற நான்கு படலங்களைக் கொண்டது. இந் நூலிற்கு இவரே உரை எழுதியுள்ளார்.

**சுப்பிரமணிய துரை** (20-நூ)

இவர் பொம்மன் ஊமைத்துரை மரபு வழியினர்.

நூல்: ஞானசித்தர் மும்மணிக்கோவை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பிரமணிய தேசிகர்** (19-நூ)

வே. பெ: குற்றாலலிங்கர்.

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் திருக்குற்றாலத்திற்கு அண்மையில் உள்ள மேலகரம்.

தந்தை: சுப்பிரமணியக் கவிராசர்; சைவவேளாளர்.

இவர் திரிகூடராசப்பக் கவிராயரின் மரபு வழியினர். திருவாவடுதுறை ஆதீனத்தின் கிளைமடமாகிய கல்லிடைக் குறிச்சி தணிகை மடத்தில் இருந்த இலக்கணம் அம்பல வாணத் தம்பிரானிடத்திலும் தாண்டவராயத் தம்பிரா-னிடத்திலும் தமிழ் நூல்களைக் கற்றார். ஆதீன வட மொழிப் புலவர் வேதாந்த சாத்திரிகளிடம் வடமொழியினைக் கற்றார். இவரது புலமை அறிந்த திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் அம்பலவான தேசிகர் இவருக்குச் சைவதீட்சை செயது, தமது சின்னப்பட்டமாக அமர்த்திக் கொண்டார். தீட்சைப் பெயரே சுப்பிரமணிய தேசிகர் என்பது.

பின்னர் முறைப்படி திருவாவடுதுறை ஆதீனத்தின் பதினாருவது தலைவராகப் பட்டம் பெற்றார். நமச்சிவாய தேசிகர் என்பவரைத் தமது சின்னபட்டமாக அமர்த்திக் கொண்டார். முதுபெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர் களை ஆதீனத்தின் மகாவித்துவானாக்கினார். ஆறுமுக நாவலருக்கு 'நாவலர்' பட்டத்தை வழங்கியவர் இவரே-யாவர்.

காசிவாசி இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகளின் வேண்டுகோளின்படி தமது ஆதீனவித்துவான் குமாரசுவாமித் தம்பிரானை (1880-1894) திருப்பனந்தாள் காசிமடத்து அதிபராகக் கொடுத்து மகிழ்ந்தார். ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளைக் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதினத் தலைவராக 1888இல் அனுப்பினார் முத்துக்குமார தேசிகரை 1888இல் சூரியனார் கோயில் பண்டார சந்நிதிகளாக நியமித்து அனுப்பினார்.

நூல்: சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த பொழிப்புரையைத் தழுவி எழுதிய பதவுரை.

சுப்பிரமணிய தேசிகர் பொ. கரு. (20-நூ)

ஊர்: பூவுற்றகுடி.

நூல்: இராமாயண அம்மானை. இவ் அம்மானை பாலகாண்டம் ஒன்றுக்கு மட்டுமே உள்ளது.

**சுப்பிரமணிய தேசிகர் மு. (20-நூ)**

ஊர்: திருமறைக்காடு.

நூல்: சுப்பிரமணிய சிவாச்சாரியார் இயற்றிய சிவராத்திரி புராணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பிரமணியப் பட்டாரகர் (20-நூ)**

ஊர்: மறைக்காடு.

நூல்: நமச்சிவாயப்பிள்ளை இயற்றிய பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பிரமணியப் பண்டிதர் ( )**

நூல்: தணிகைமலைக் கண்ணி.

**சுப்பிரமணியப் பண்டிதர் மு. (19-நூ)**

ஊர்: சிதம்பரம்.

வாழ்ந்த காலம்: 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.

இவர் மருத்துவத்திலும் தமிழ்ப் புலமையிலும் சிறந்து விளங்கினார்.

நூல்: பதார்த்தகுண சிந்தாமணி, தைலவருக்கசிந்தாமணி, தைலவருக்கச் சுருக்கம். சிறீகந்த பண்டிதர் வடமொழியில் இயற்றிய சிவரட்சாமிர்தம் என்னும் வடமொழி நூலை, தமிழாக்கம் செய்துள்ளார்.

**சுப்பிரமணியப்பத்தர் ந. (20-நூ)**

ஊர்: தில்லையாடி.

நூல்: சிதம்பரம் நடராசச் செட்டியார் இயற்றிய ஆறுமுகக் கடவுள் பதிகங்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பிரமணியப்பிள்ளை-1.** (20-நூ)

ஊர்; கடுவாய்க்கரை தென்புத்தூர்.

நூல்: கோவிந்தசாமி நாடார் தி. இயற்றிய கபிலை சரித்திரக் கீர்த்தனை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பிரமணியப்பிள்ளை 2.** (19-நூ)

ஊர்: சென்னை.

சோடசாவதானம் சுப்பராயச் செட்டியாரிடம் பாடங் கேட்டார்.

நூல்: இராமநாதபுரம் பொன்னுசாமித் தேவர்மீது பாடிய பாடல்கள்.

**சுப்பிரமணியப்பிள்ளை -3** (17-நூ)

ஊர்: தாமோதரபுரம்.

நூல்: பெரியசுப்பாரெட்டியார் இயற்றிய அன்னதானமகத்துவ புராணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்

**சுப்பிரமணியப்பிள்ளை-4** ( )

ஊர்: திருநெல்வேலிப் பேட்டை.

நூல்: வாசுதேவ நல்லூர் சிந்தாமணி நாதர்மாலை, திருக்குற்றாலநாதர் பதிகம், சங்கரநயினார் கோயில் பதிகம், சங்கர நயினார் கோயில் கும்மி.

**சுப்பிரமணியப்பிள்ளை-5** ( )

ஊர்: பாளையங்கோட்டை.

நூல்: சைவநெறித் தெளிவு, செல்வவொழுக்கம்.

**சுப்பிரமணியப்பிள்ளை கா. (20-நூ)**

சி. பெ: எம். எல். பிள்ளை.

ஊர்: திருநெல்வேலி.

தந்தை: காந்திமதிநாதப்பிள்ளை; தாய்- மீனாட்சியம்மையார்.

வாழ்ந்த காலம்: 5-11-1888--30-4-1945.

இவர் தம் குலத்தில் முதலாவதாக எம். எல். பட்டம் பெற்றமையால் எம். எல். பிள்ளை என்ற சிறப்புப் பெயருடன் அழைக்கப்பட்டார். சிறுவயது முதலே சிவபூஜையில் பதிந்த உள்ளம் உடையவராகையால் பூஜைப்பிள்ளை யென்றும் அழைக்கப்பட்டார். தமிழ்த் தொண்டிலும் சமூகத்தொண்டிலும் மேம்பட்டு விளங்கிய பிள்ளையவர்கள் 1913ஆம் ஆண்டில் ஆங்கிலத்திலும் 1914ஆம் ஆண்டில் தமிழிலும் பட்டம் பெற்றவர். 1917ஆம் ஆண்டில் எம். எல். பட்டமும் பெற்றார்

தமிழுலகில் பேராசிரியராகத் திகழ்ந்த பிள்ளையவர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் நடத்திய தமிழ்த் தேர்வில் முதற் பரிசு பெற்றார். சென்னை இராசதானிக் கல்லூரியில் தமிழ் ஆராய்ச்சிக் கட்டுரைகளுக்கான பவல் மோர்க்கெட்டுப் பரிசு இவருக்குக் கிடைத்தது, 1920ஆம் ஆண்டு கல்கத்தா பல்கலைக் கழகத்தில தாகூர் சட்டப் பொழிவுகள் என்ற வரிசையில் குற்றங்களின் நெறிமுறைகள் என்னும் பொருள் குறித்து உரை நிகழ்த்தி பதினாயிரம் ரூபாய் பரிசு பெற்றுச் சிறப்புப் பெற்றார். 1940இல் சென்னையில் நடைபெற்ற ஏழாவது மாகாணத் தமிழர் மாநாட்டில் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார் இவருக்குப் பல்கலைப் புலவர் என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தனர்.

இவர் 1919ஆம் ஆண்டு முதல் 1927ஆம் ஆண்டு வரை சென்னை சட்டக்கல்லூரிப் பேராசிரியராகவும் 1929-30, 1940-44

ஆம் ஆண்டுகளில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசியராகவும் தமிழ்க் கலைக்குழுத் தலைவராகவும் பணி ஆற்றினர்.

தமிழ்ப் புலவராகவும் சட்டப் பேரறிஞராகவும் விளங்கிய இவர் சமூக நலத் தொண்டிலும் ஈடுபட்டார். 1932-37ஆம் ஆண்டுகளில் திருநெல்வேலி நகராட்சி உறுப்பினராகத் தொண்டாற்றினர். நெல்லையப்பர் கோயிலில் அறங்காவலராக இருந்து பல திருந்தங்களைச் செய்துள்ளார்.

மெய்கண்ட சாத்திரமாநாடு, கொங்கு மண்டல சமரச சன் மார்க்க சங்கமாநாடு போன்ற பல மாநாடுகளிலும் சவை சித்தாந்த சபையின் 38ஆவது 56ஆவது பேரவைகளிலும் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்து மூன்றுண்டுகள் அதன் தலைவராக இருந்தார். 1917 ஆம் ஆண்டு சைவசித்தாந்த சமாசத்தின் அமைச்சராக இருந்தார்: சில ஆண்டுகள் திருநெல்வேலி மாவட்டக் கழக உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார். 1922-23ஆம் ஆண்டில் சென்னை அரசாங்கம் அமைந்த கலைச் சொல்லாக்கக் குழுவிலும், பின்பு சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் அமைத்த கலைச் சொல்லாக்கக் கழகத்திலும் உறுப்பினர் ாாக இருந்து உதவி புரிந்தார். சென்னையில் நண்பர் சங்கம் என்ற அமைப்பும் திருமயிலையில் திருவள்ளுவர் கழகத்தையும் அமைத்துப் பணி புரிந்தார். திருநெல்வேலியில் இருந்த காலத்தில் சங்கங்கள் அமைத்துப் பணிபுரிந்தார்

நூல்: தமிழிலக்கிய வரலாறு, பழந்தமிழர் நாகரிகம், திருவாசகப் பொழிப்புரை, திருக்குறட் பொழிப்புரை, தனிப்பாடல் திரட்டுரை, திருமுருகாற்றுப்படை உரைநடை, கந்தர் கலி. வெண்பா, உரைநடை, சர் சி. பி. ராய், திருஞானசம்பந்தர் வரலாறு, திருநாவுக்கரசர் வ்ரலாறு, சுந்தர மூர்த்தி சுவாமிகள் வரலாறு மாணிக்கவாசக சுவாமிக்ள் வரலாறு, சேக்கிழார் வரலாறும் பெரியபுராண ஆராச்சியும், தாயுமானவர் வரலாறும் நூலாராய்ச்சியும், பட்டினத் தடிகள் வரலாறும் நூலாரய்ச்சியும், குமரகுருபர அடிகள் வரலாறு, சிவஞான முனிவர் வரலாறும் நூலாராய்ச்சியும், மெய்கண்டாரும் சிவஞானபோதமும்,

உலகப் பெருமக்கள் வரலாறு, அறிவு விளக்க வாசகம் திருஞானசம்பந்தர் தேவார இயற்கைப் பேரழகு, மொழி நூற் கொள்கையும் தமிழ் மொழியமைப்பும், இறையனார் அகப் பொருளாராய்ச்சி, செகப்பிரியர் வரலாறும் நாடகக் கதைகளும், இந்து சமயங்களின் சுருக்க வரலாறு, திரு நான்மறை விளக்கம், சைவசித்தாந்த உண்மை வரலாறு, சைவச் சடங்கு விளக்கம், மெய்கண்ட நூல்களின் உரைநடை தமிழர் சமயம், சிவஞானபோதப் பொழிப்புரை, தியானமும் வாழ்க்கையுயர்வும், கடவுளும் வாழ்க்கை நலமும், உலக நன்மையே ஒருவன் வாழ்வு, மக்கள் வாழக்கைத் தத்துவம், வாழ்க்கை இன்பம், உடல்நூல், நோய் நீக்கம், வானநூல், சிவப்பிரகாசம் (ஆங்கில மொழி பெயர்ப்பு) நீதிநெறி விளக்கம் (ஆங்கில மொழிபெயர்ப்பு) இந்து சமயங்களின் சுருக்கவரலாறு, பொருட்சட்டம், பதிவுவிதி, குற்றச்சட்டம், இந்தியத்தண்டனைத் தொகுதி, குற்றங்களின் நெறிமுறைகள், சந்தஞசாரியார் சரித்திரம், சைவசித்தாந்த இயற்கைத் தத்துவம் (ஆங்கிலம்).

## சுப்பிரமணியப்பிள்ளை கோ (20-நூ)

ஊர்; திருநெல்வேலி மாவட்டம், சிந்துபூந்துறை.

தந்தை: கோமதிநாயகம்பிள்ளை; தாய்: உலகம்மாள்; வேளாளர்

பிறப்பு: 7-10-1906.

சிறந்த சொற்பொழிஞராகத் திகழ்ந்த பேராசிரியர் சுப்ரமணியப்பிள்ளை திருநெல்வேலி இந்துக் கல்லூரி உயர்நிலை பள்ளியில் பள்ளிப்படிப்பை முடித்து, பாளையம்கோட்டை புனித சவேரியர் கல்லூரியில் சேர்ந்து 1928 ஆம் ஆண்டில் பி. ஏ. பட்டம் பெற்றார். பின்னர் சென்னை சட்டக் கல்லூரியில் பயின்று பி. எல். பட்டம் பெற்றார். வழக்குரைஞராக ஏழாண்டுகள் பணியாற்றிய பேராசிரியர் தமிழின்பால் ஆர்வங்-கொண்டு தாமே முயன்று படித்து 1939ஆம் ஆண்டில் தமிழில் எம். ஏ. பட்டம் பெற்றார். அடுத்த ஆண்டில் வித்துவான் தேர்விலும் முதல்வராகச் தேர்வு பெற்றார். 1939 ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைகழகத்தில் தமிழ்

ஆராய்ச்சி மாணவராகச் சேர்ந்தார். தமிழ் இலக்கியத்தில் வரலாற்றுச் செய்திகள் என்ற தலைப்பில் ஆய்வினை மேற்கொண்டார். கம்பராமாயணம், தேவாரம், திருவாசகம் போன்ற பக்திப் பனுவல்களில் இவருக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. இவை குறித்து இவராற்றிய சொற்பொழிவுகள் உளம் கவர்வன.

புலமை நலம் பெற்ற பேராசிரியர் 1941 ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 28ஆம் நாள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளராகப் பணியேற்றார். 1952 ஆம் ஆண்டில் தமிழ் ஆராய்ச்சித்துறையின் தலைமைப் பொறுப்பினை ஏற்றார். இக்காலத்தில் தான் கம்பராமாயண ஆராய்ச்சிப் பதிப்புத் திட்டம் மேற்கொள்ளப்பட்டது. சங்க இலக்கிய வரலாறு, 13, 14, 15ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு, இலக்கிய வரலாறு (தொல்காப்பியம்) வைணவ சமண புத்தமத இலக்கிய வரலாறு முதலியன வெளியிடப்பட்டன. சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளைக்குப் பின்னர் கம்பராமாயணப் பதிப்புக் குழுவின் தலைவராக நியமிக்கப்பட்டு கம்பராமாயண ஆராய்ச்சிப்பதிப்பினைக் கொண்டு வந்தார்.

பல்கலைக் கழகப் பேராசிரியராக விளங்கிய இவர் மொழி ஆக்கப் பணியிலும் ஈடுபட்டார். திருக்கோவையார் பாடல்களை குமரகுருபரன் இதழில் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து வெளியிட்டார். பாடல்ன் மூலத்திற்கு உரையாசிரியர் கூறுகின்ற விளக்கங்களையும் உட்படுத்தி இருநூறு பாடல்களை மொழியாக்கம் செய்தார். இவற்றுள் இருபது பாக்களே அச்சேறின. ஆங்கிலக் கவிதைகளைத் தமிலும் மொழியாக்கம் செய்தார். பூஞ்சோலை என்ற கவிதை நூல் இவ்வகையில் வெளிவந்ததாகும்.

இவரது பணிகளைப் பாராட்டும் வகையில் 'செந்தமிழ்ச் செல்வர், என்ற சிறப்புப் பட்டம் இவருக்கு வழங்கப்பெற்றது. இவரது சமயப் பணியினைப் பாராட்டி மதுரை திருஞான சம்பந்த ஆதீனத்தார் சைவப்பேராசிரியர் என்ற சிறப்புப் பட்டத்தை வழங்கினர். தூத்துக்குடி சைவ சிந்தாந்த சபையினர் சித்தாந்தச் செந்நாவலர் என்ற பட்டத்தை வழங்கினர்.

நூல்; புதுமணப்பரிசு, வெண்ணிலவில்; எத்தன் ஏகாம்பரம், துள்ளி வருகுது வேல், முத்தமிழ் முழக்கம், தமிழ் உள்ளம், கவியின்பம், அப்பர் விருந்து, வள்ளுவர் விருந்து, மாணிக்கவிருந்து, இளங்கோவிருந்து, சைவ சித்தாந்த அறிமுகமும் வரலாறும், மரவழிபாடும் நாகவணக்கமும், பழந்தமிழர் வாழ்வில் சகுணங்களும் நம்பிக்கைகளும், வாலி வதை.

**சுப்பிரமணியப்பிள்ளை ச. ( )**

நூல்: காந்திமதிமாலை, அரியநாயகி அம்மன் ஆசிரிய விருத்தம், செந்தில் ஷண்முகர்மாலை, திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் தோத்திரம், திருத்தொண்டர் செந்துறை, திருவுருமாமலைச் சுப்பிரமணியர் ஆனந்தக்களிப்பு, திருவுருமாமலைச் சுப்பிரமணியர் பதிகம், நெல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி நெல்லையப்பர் பதிகம்.

காந்திமதிமாலை என்ற நூல் மற்றைய எட்டு நூல்களுடன் சேர்த்துஒன்ருகப் பதிப்பிக்கப் பட்டுள்ளது.

இது வாழ்த்துப்பா ஒன்றைத் தவிர 30 செய்யுட்களைக் கொண்டது; காந்திமதியம்மையின் புகழ் பேசும் சிறு பிரபந்தம்.

**சுப்பிரமணியப்பிள்ளை தி. செ. (20 நூ)**

ஊர்: திருநெல்வேலிக்கு அருகேயுள்ள மேலப்பாளையம்.

தந்தை: செல்லம்பிள்ளை; தாய்: பேச்சியம்மையார்.

வாழ்ந்த காலம்: 1855-1919.

இவர் தமது சிறுவயதிலேயே தாயை இழந்தார். மேலப் பாளையத்தில் தம் பாட்டனர் இல்லத்தில் தங்கி, தமிழ் கற்ருர். பிறகு அங்கிருந்த ஆங்கிலேயர் கல்விக் கூடத்தில் ஆங்கிலமும் பயின்று தமது பதினருவது வயதில் பள்ளி இறுதித் தேர்வில் வெற்றி பெற்ருர். பின்னர் தாம் கல்வி கற்ற பள்ளியிலேயே கீழ்வகுப்பு ஆசிரியராகப் பணியாற்றினர்.

பிறகு சிங்கம்பட்டி இளவரசருக்குத்தனி ஆசிரியராக இருந்து கல்வி கற்பித்தார். சிங்கம்பட்டியில் இருந்தபோது தாமாகவே கல்வி கற்று எப். ஏ. தேர்வில் வெற்றி பெற்றார். பிறகு வழக்குரைஞர் வேலைக்குப் பயின்று பட்டம் பெற்று வழக்கறிஞரானார்.

இவர் வழக்கறிஞராகத் திறமையாகத் தொழில் புரிந்தார். உண்மையான வழக்குகளை நடத்தவே இவர் உடன்படுவார் என்றும், பொய்வழக்குகளை நடத்த உடன்படமாட்டார் என்றும் கூறுவர்.

வழக்குரைஞராக இருந்த இவர் தமிழ் மொழியிடத்தில் மிகுந்த பற்றுடையவராக இருந்தார். இவர் அழகிய சொக்கநாதப்பிள்ளை என்னும் தமிழ்ப்புலவருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். இருவரும் இலக்கண, இலக்கியங்குறித்தும் செய்யுள் நயங்குறித்தும் உரையாடுவது வழக்கம். இருவரும்போட்டி போட்டுக் கொண்டு புது செய்யுட்களையும் இயற்றுவர் அழகிய. சொக்கநாதப் பிள்ளையின் தமிழ் நூல்கள் சில வெளி வருவதற்கு இவர் உறுதுணையாக இருந்துள்ளார்.

நூல்; தனிப்பாடல்கள்.

சுப்பிரமணியப்பிள்ளை தி. வா.

நூல்: மருதாசலக் கடவுள் இரட்டை ஆசிரிய விருத்தம், மருதாசலக் கடவுள் பதிகங்கள். இதில் மருதாசலக் கடவுள் அந்தாதி, மருதாசலக் கடவுள் தேவாரப் பதிகம் என்பவை அடங்கியுள்ளன. இது 98 செய்யுட்களைக் கொண்ட நூல்.

சுப்பிரமணிய பிள்ளை, தெ. (19-நூ)

ஊர்: மதுரை. தந்தை: தெய்வசிகாமணிப்பிள்ளை.

நூல்: வாணவீர மதுரைத்தலபுராணம். வானவீர மதுரை என்பது மானமதுரையாகும். இப்புராணம் 12 சருக்கங் களையும் 513 பாடல்களையும் கொண்டது.

## சுப்பிரமணியப்பிள்ளை மு (1) (19-நூ)

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் முதுகுளத்தூர்.

இவர் புலமை பெற்றிருந்ததோடு மருத்துவத்திலும் தேர்ச்சி பெற்றிருந்தார்.

நூல்: பஞ்சதந்திரம், நாலுமந்திரிகதை, வீரகுமார நாடகம், விடநிக்கிரக சிந்தாமணி.

## சுப்பிரமணியப்பிள்ளை மு (2) (18-நூ)

ஊர்: திருநெல்வேலிக்கு அருகேயுள்ள ஒரு சிற்றூர்.

வாழ்ந்த காலம்: 1784-1806.

இவர் திருவுருமாமலையில் இருந்த புலவர் ஒருவரிடம் தமிழ் நூல்களைக் கற்றார்.

நூல்: வீரபாண்டியச் செல்வியம்மன் திருவிருத்தம், வீரபாண்டியச் செல்வியம்மன் தாலாட்டு, முப்பிடாரியம்மன் ஆசிரிய விருத்தம், கோவிந்த லட்சுமியம்மன் விருத்தம்.

## சுப்பிரமணியப்பிள்ளை ரா. சு. (20-நூ)

ஊர்: திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள இராசவல்லிபுரம்.

தந்தை: சாமிநாதப்பிள்ளை, தாய்: நித்திய கல்யாணிஅம்மையார் கார்காத்த வேளாளர்.

இவர் தம் தந்தையாரிடம் தமிழ் நூல்களைக் கற்றார். ஆங்கில மொழியில் கல்வி பயின்று பி. ஏ. பட்டம் பெற்றவர். சைவசித்தாந்த சாத்திரங்களைக் கற்றுத் தேர்ந்தார்.

நூல்: புண்ணியராற்றுப்படை, கங்காளவேடன்கும்மி, அன்பின் வழிப்பாக்கள், சத்திவிநாயகர் வணக்கம், செந்தூர் கலி விருத்தம், திருச்செந்தூர்த் திருத்தசாங்கம், அலைவாய்ப் பெருமானிடம் ஆற்றுப்படைத்தூது, ஆண்டருளப்பாடியது,

சனீஸ்வரன் அணுகாதிருக்கச் சாற்றியது, ஏழாவது எட்டுவர்டு மகுடாபிடேக வெண்பா, மகுடாபிடேக சம்பந்த வைபவம்,- ஐந்தாவது சார்ச் மகுடாபிடேக வாழ்த்து, இராசப்பிரதிநிதி வரவேற்பு வாழ்த்து, வீரைக்கும்பாபிடேகச் செய்யுள், சீவலப்பேரி விநாயகர் கும்பாபிடேகச் செய்யுள், பெட்லண்ட் பிரபு விண்ணப்பச் செய்யுள், திருக்குற்ருலவெண்பா, செல்வ மல்கச் சேவித்தல், திருவுருமாமலைப் பதிகம், திருநெல்லைப் பதிகம், காந்திமதியம்மையார் பதிகம், சிளாக்குளம் விநாயகர் கும்பாபிடேகச் செய்யுள், திருப்புடை மருதூர்க் கோமதியம்மாள் அபயம், கருவூர்ச் சித்தர் மானூர்க் காட்சிச் செய்யுள், நீரிறக்கம் நீங்கப்பாடியது, கடன்தீரப் பாடியது, செப்பறைச் சிற்பாருயிர்ப்பா, சேறை இரட்டை மணிமாலை, விநாயகர் இரட்டை மணிமாலை, சரசுவதி மும்மணிமாலை, அருள் செய்யப் பாடிய பல விகற்பப்பா, தைப்பனுவல், செந்திற் செவ்வேள் பின் முடுகு வெண்பா, திருப்பணி நயினர் திகழ்பாமாலை, நெல்லையம்பதியில் நிலவுறும் நிலைமை, பத்துக்கொன்ருய்ப் பாடியது, சேறைப் பதிகம், செந்தில் அறுமுகனை நோக்கிச் சொன்னது, அகிலாண்ட நயினர் திகழ்பாமாலை, அகிலாண்ட அக்னீசுவரர் குறுந் தொகை,அம்பாள் அருளைவியந்து சொன்னது. இராசை இரட்டை மணி மாலை, இராசைப்பாவாமடை, மழையட்டகம், பேரனை வேண்டிப் பிரார்த்தித்த பதிகம் பிரார்த்தனைப் படியருளியதற்காக வியந்துருகியது, பாவாணர்கட்கனுப்பிய பதில் பாடல்கள்.

இந்நூல்களுள் புண்ணியராற்றுப்படை என்ற நூல் மிகச் சிறந்த நூலாகும். இந்நூலில் சில வழிபாட்டுச் செய்திகள் தக்க ஆதாரங்களுடன் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. 93 நூல்களிலிருந்து மேற்கோள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

**சுப்பிரமணியப்பிள்ளை வ. த. (19-நூ)**

**ஊர்:** செங்கற்பட்டு மாவட்டத்தில் செங்கற்பட்டு.

**தந்தை:** தணிகாசலம் பிள்ளை: **தாய்:** இலக்குமி அம்மாள்.

வாழ்ந்த காலம்; 11—12—1846——17—4—1909

இவர் 1867ஆம் ஆண்டில் எப். ஏ., தேர்வு பெற்றார். ஆசிரியராகவும் கணக்கப் பிள்ளையாகவும் பணியாற்றிய பிறகு 1870ஆம் ஆண்டில் மஞ்சக்குப்பத்தில் தென்னார்க்காடு மாவட்ட நீதி மன்றத்தில் எழுத்தாளர். அதன் பிறகு தலைமை எழுத்தராக உயர்வு பெற்று இறுதியில் மாவட்ட முன்சீப்பாக பணியாற்றினர். முருகக் கடவுளிடம் பேரன்பு கொண்டிருந்த இவர் திருப்புகழ் ஏடுகளைத் தேடி மூன்று பகுதிகளாக அச்சிட்டுள்ளார். பிரமோத்திர காண்டத்தை உரைநடையில் வெளியிட்டுள்ளார்.

நூல்: திருத்தருப்பூண்டித் தல புராணம் உரைநடை, மாறு மதுரைத் தல புராணம்உரைநடை, திருநீடூர்த்தல புராணம் உரைநடை, சிவத்தல மஞ்சரி.

## சுப்பிரமணியப்பிள்ளை ஜெ. பி. வி. (     )

நூல்: கிறிஸ்து மதாபாச தரிசினி (1876). இந்நூல் 16 பக்கங்களிலமைந்த உரைநடை நூலாகும். இதன் முதனூல் ஆசிரியர் பெயர்தெரியவில்லை. ஆங்கில முதனூலிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. கிறித்துமத மறுப்பாயுள்ளது. ஏசு கிறிஸ்து யாவர்? என்னும் வினவை முதற்கண் எழுப்பி, தேவ தத்துவம் பொருந்திய கிறித்து ஒருவர் இருந்தார் என்பது கற்பனைக் கதை என்று முடிக்கின்றார்.

## சுப்பிரமணியப்பிள்ளை ஜே. (     )

நூல்: இலக்கண வினவிடைத் திரட்டு (1887).

இதில் இடைநிலைப் பள்ளித் தேர்வுக்குரிய இலக்கண வினக்களும் அவற்றிற்குரிய விடைகளும் ஒருங்கு திரட்டப் பட்டுள்ளன. 80 பக்கங்கொண்ட உரைநடை நூலாகும்.

## சுப்பிரமணியப் புலவர் ( )

இவர் சிவகெங்கைப் பெருநிலக் கிழாருடைய அவைக்களப்புலவராக இருந்தார்.

நூல்: பிரசங்கரத்திஞகரம்.

## சுப்பிரமணியப் புலவர், இ (19-நூ)

நூல்: ஊற்றுமலைப் பெருநிலக்கிழார் மருதப்பத் தேவர்மீது பாடிய தனிப்பாடல்கள்.

## சுப்பிரமணியப் புலவர், ச (19-நூ).

ஊர்: காஞ்சிபுரம். தந்தை: சண்முகக் கவிராயர்.
இவர் தம் தந்தையாரிடம் தமிழ் நூல்களைக் கற்ருர்.

நூல்: பொன்விநாயகர் மாலை.

## சுப்பிரமணிய பாரதி-அ வரகவி (20-நூ)

ஊர்: சென்னை.

இவர் எளிதாகச் செய்யுளியற்றும் ஆற்றல் பெற்றிருந்தமையிஞல் வரகவி என்றழைக்கப் பெற்ருர் பாலவிநோதினி என்ற பத்திரிக்கையை நடத்திஞர்.

நூல்: சுயம்பிரகாசவிசயம்.

## சுப்பிரமணிய பாரதி, க. (19-நூ)

இவர் இராமநாதபுரம் சமத்தானப் புலவராக இருந்தவர்
நூல்: திருமருதூர் நாகநாதர் பதிகம்.

## சுப்பிரமணிய பாரதியார் (19-நூ)

ஊர்: மதுரைக்கு அண்மையில் உள்ள மழவராயனேந்தல்.

தந்தை: சொக்கைய தீட்சிதர்; அந்தணர்.

இவர் வடமொழிப் புலமை மிக்கவர்; அவதானப் பயிற்சி பெற்றிருந்தவர்; சிவகங்கை, இராமநாதபுரம் அரசர்களிடம் செய்யுட்கள் இயற்றிப் பல்லக்கு முதலிய விருதுகளைப் பெற்றவர்.

**நூல்:** திருவிளையாடற் கீர்த்தனை, குன்றை முருகன் பிள்ளைத்தமிழ், இலக்குமித் தலபுராணச் செய்யுள், கூடல் திருவிளையாடல் யமகவந்தாதி, திருவிளையாடல் சுந்தரமாலைச் சந்தவிருத்தம், திருமெய்யம் ஈசுவரன் கோயில் தலபுராணக் கீர்த்தனை, திருமெய்யம் விஷ்ணுகோயில் தலபுராணக் கீர்த்தனை, முத்துக் கருப்பாசாரியவர்கள் பேரில் தங்கச் சிந்து.

திருவிளையாடற் கீர்த்தனை:- 1852இல் மதுரையில் அரங்கேற்றம் செய்யப்பெற்றது.

**சுப்பிரமணிய பாரதியார், சி. (20-நூ)**

வே பெ: பாரதியார்

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம், எட்டையபுரம்.

தாய்: இலக்குமி அம்மாள்; தந்தை: சின்னசாமி ஐயர்

வாழ்ந்தகாலம்: 11—12—1882——12—9—1921

இவருடைய செல்லப்பெயர் சுப்பையா. இவர் ஏழாம் வயதிலேயே கவிபாடும் திறமை பெற்றார்; தம் பதினோராம் வயதில் புலவர்கள் கூடிய அவையில் அவர்கள் கொடுத்த ஈற்றடிகளைக் கொண்டு பாக்களைப் புனைந்து அவர்களை வியப்பித்த காரணத்தால் பாரதியார் என்ற பட்டத்தைப் பெற்றார். 1897ஆம் ஆண்டில் செல்லம்மாள் என்னும் ஏழு வயதுச் சிறுமியை மணந்தார்.

பாரதியார் காசிக்குச் சென்று தம் பள்ளிக் கல்வியைத் தொடர்ந்தார்; அங்கே வடமொழியும் இந்தியும் பயின்றார். அங்குதான் அரசியலில் முதன் முதலாக இவருக்கு ஊக்கம் ஏற்பட்டது. 1902இல் எட்டயபுரத்திற்குத் திரும்பி வந்தார் மதுரைச் சேதுபதி உயர்நிலைப்பள்ளியில் மூன்று திங்கள் பணிபுரிந்தார். 1906இல் கல்கத்தாவில் நடந்த காங்கிரசில் கலந்து கொண்டார்.

1907 ஏப்பிரல் திங்களில் 'இந்தியா' என்னும் இதழைத் தொடங்கினார். இக்காலத்தில் வ. உ. சிதம்பரனார் இவருக்கு நெருங்கிய நண்பரானார். பாரதியாரும் சிதம்பரனாரும் திலகரின் கொள்கைகளை வேகமாகப் பரப்பினர். சிதம்பரனாருக்கு ஆங்கில அரசாங்கம் இரட்டை ஆயுள் தண்டனையும் திலகருக்கு ஆறாண்டுக் கடுங்காவல் தண்டனையும் விதித்தது. இதனால் நாடெங்கும் கொந்தளிப்புண்டாயிற்று. பாரதியார் வீரச்சுவை மிகுந்த கட்டுரைகள், தலையங்கங்கள் ஆகியவற்றின் வாயிலாக விடுதலை வேட்கையைத் தூண்டி வந்தார். பத்திரிகைகளை ஒடுக்கவேண்டுமென்று அரசாங்கம் 1908ஆம் ஆண்டில் ஒரு புதிய சட்டத்தை இயற்றியது. பாரதியார், நாட்டுப்பணியைத் தொடர்ந்து செய்ய இடையூறில்லாமல் இருக்கும் பொருட்டுப் புதுவைக்குச் சென்று தங்கினார். அரவிந்தரும் வ. வே. சு. ஐயரும் அங்கு வந்து சேர்ந்ததால் பாரதியார் அவர்களுடன் சேர்ந்து அரசியற் துறையிலும் கலைத்துறையிலும் புரட்சிகரமான முறைகளில் வேலை செய்யத் தொடங்கினார். இவர் 1908 அக்டோபர் முதல் 1918 ஆம் ஆண்டுவரை புதுவையில் தங்கித் தமிழின் மறுமலர்ச்சிக்குப் பெருந் தொண்டு புரிந்தார்.

1918 நவம்பர் 20இல் இவர் புதுவையை விட்டுப் பிரிட்டிஷ் எல்லையில் அடிவைத்தார். உடனே கைது செய்யப் பட்டுக் கடலூர்ச் சிறையில் வைக்கப்பெற்றார். ஒருமாதத்திற்குள்ளேயே சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு விடுதலை செய்யப்பெற்றார்.

1920இல் பாரதியார் சென்னைக்கு வந்து சுதேசமித்திரனில் வேலைக்கு அமர்ந்தார். இவர் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலுக்குச் சென்றபோது அங்கிருந்த யானைக்குச் சிற்றுண்டி அளித்தார்; அது அவரைத் தூக்கி எறிந்துவிட்டது. அதனால் உடல்நலக்குறைவுற்ற பாரதியார் 11—9—1921 இல் மறைந்தார்.

**நூல்:** தேசியப் பாடல்கள், தோத்திரப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள், பல்வகைப் பாடல்கள், தனிப்பாடல்கள், சுயசரிதை, கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம், குயில்பாட்டு, வசன கவிதை.

பாரதியார் தேசியப் பாடல்களில் அவர்காலவீழ்ச்சி நிலையையும் விடுதலைப் போரில் ஈடுபட்ட பிறநாடுகளின் நிலையையும் பாடியிருக்கின்றார்.

தோத்திரப்பாடல்கள்: இதில் விநாயகர் நான்மணி மாலை முதல் அல்லா ஈருக எழுபத்தெட்டு தோத்திரப்பாடல்கள் உள்ளன.

வேதாந்தப் பாடல்கள்: இதில்அச்சமில்லை என்பது முதற் கற்பனையூர் என்பது இறுதியாக இருபத்தைந்து பாடல்கள் உள்ளன. இவை சமயங்களுக்கிடையே சகோதர உணர்ச்சியை ஊட்டுகின்றன.

பல்வகைப்பாடல்கள்: இதில் புதிய ஆத்தி சூடி முதல் புதிய கோணங்கிவரை பதிமூருபாடல்கள் உள்ளன. பாப்பாப் பாட்டு, புதுமைப்பெண், பெண்விடுதலை முதலியவை இதனுள் இடம் பெறுகின்றன.

தனிப்பாடல்கள்: இதில் காலைப் பொழுதுமுதல் வேல்ஸ் இளவரசருக்கு நல்வரவு என்பது ஈருக இருபத்து நான்கு கவிதைகள் உள்ளன. மழை, அழகுத் தெய்வம், தாயுமானவர் வாழ்த்து, உ. வே. சாமிநாதையர் வாழ்த்து ஆகியவை இடம் பெற்றுள்ளன.

சுயசரிதை: இதில் பாரதியாரின் சுயசரிதையும் பாரதி அறு-பத்தாறு என்ற தலைப்பில் மரணத்தை வெல்லும் வழி, கடவுள் எங்கே இருக்கிருர், விடுதலைக் காதல், சர்வமத சமரசம் முதலிய கவிதைகளும் இடம் பெற்றுள்ளன.

கண்ணன் பாட்டு: இது இருபத்து மூன்று பாடல்கள் அடங்கிய ஒரு தொகுதி. இது முதன் முதல் 1917இல் வெளிவந்தது. பாரதியார் கண்ணனைத் தாய், தந்தை, அரசன், ஆண்டாள், ஆசிரியன், குலதெய்வம், மாணவன், சேவகன் ஆகிய நிலை களில் வைத்துப் பாடியிருக்கிருர். காதலனுக வைத்துப் பாடியிருப்பது போல் காதலியாகவும் கொண்டு பாடியுள்ளார். இப்பாடல்களில் சில இசைத் தமிழ்ப் பாடல்களாக விளங்கு கின்றன.

பாஞ்சாலி சபதம்: மகாபாரதத்திலிருந்து ஒரு சிறந்த பகுதியைத் தேர்ந்து எடுத்து இதிகாசப் பண்புடன் தேசவிடுதலையைப்

பொருளாகக் கொண்டு இந்நூலை இயற்றியுள்ளார். ஐந்து சருக்கங்களில் இந்நூல் அமைந்திருக்கின்றது. துகிலுரித்தற் சருக்கத்தில் உரிமையிழந்து தவிக்கும் பாரத அன்னையை நினைவூட்டி, சபதச் சருக்கத்தில் அன்னையின் விடுதலையைச் சுட்டிக் காட்டுகிறார்.

குயில்பாட்டு: இது எல்லாவகைகளிலும் தனிப்பட்டு நிற்கும் காவியமாகும். இது 1923இல் வெளிவந்தது. மிருகங்களையும் பறவைகளையும் கதா பாத்திரங்களாகவும் மாயமந்திரத்தையும் மறுபிறவியையும் கருவிகளாகவுங்கொண்டு கதையை வளர விட்டிருக்கின்றார். இந்நூல் கவிஞரது கற்பனைப் போக்கிலுள்ள புரட்சிகரமான புதுமையைக் காட்டுகின்றது. இக்காதல் நாடகத்தில் ஒன்பான் சுவையும் இடம் பெற்றுள்ளன.

வசன கவிதை: பாரதியார் இதிலும் தம் புலமைத் திறமையை வெளியிட்டுள்ளார். சின்னஞ்சிறு மணிமொழிகளும் கவர்ச்சி மிக்க சொற்றொடர்களும் இவ் வசன கவிதையில் காணப்படு கின்றன. பாரதியாரின் முழுப் பெருமையையும் உணர்ந்து கொள்ள இவருடைய வசன கவிதையும் துணை செய்கின்றது. ஞானரதம் என்னும் உரைநடைப் பகுதியில் ஆழ்ந்த உணர்ச்சிகளும் அற்புதக் கற்பனைகளும் சிறுசிறு வாக்கியங்களில் காணப்படுகின்றன. பாரதியாரின் கட்டுரைகள் அடிசன், கோல்டுஸ்மித் முதலான சிறந்த ஆங்கிலக் கட்டுரையாளர்களின் நடையையும் சொற்கலைத் திறனையும் நினைவூட்டுகின்றன. இவர் உரைநடையிலும் மொழிபெயர்ப்புக்களிலுங் கூடத் தமிழின் மறுமலர்ச்சிக்கு உதவும் புதுமையும் எளிமையும் வாய்ந்த நடையை உருவாக்கியிருக்கின்றார். பாரதியார் ஆங்கிலத்திலும் நன்றாக எழுதக்கூடியவர் என்பதற்கு 1987இல் பாரதி பிரசுராலயம் வெளியிட்டிருக்கும் 'அக்கினி முதலான கவிதைகள், மொழிபெயர்ப்புக்கள், கட்டுரைகள், வேறு வசனத் துணுக்குகள், என்ற ஆங்கிலப் புத்தகம் சான்றாகும்.

## சுப்பிரமணியம் செட்டியார் ஸா. சி. (20-நூ)

ஊர்: கார்க்கூர்.

இவர் கவிராச பண்டிதர் திம்மப்ப அந்தணனர் என்பவரிடம் பாடங்கேட்டார்; சேலம் முதலிய ஊர்களிலுள்ள உயர்நிலைப்பள்ளிகளில் பணியாற்றினர்.

நூல்: கார்க்கூர் சங்கர சதகம். இச்சதகத்தில் பழமொழிகள், அறவுரைகள் முதலியன அடங்கியுள்ளன.

**சுப்பிரமணிய முதலியார் க. (          )**

நூல்: விநாயகர் பதிகம் (1900). இது எண்சீர் ஆசிரிய விருத்தம் பத்துக் கொண்ட துதிமாலை.

**சுப்பிரமணிய முதலியார் சி. கே (20-நூ)**

சி. பெ: சிவக்கவிமணி.

ஊர்: கோயமுத்தூர்.

தந்தை: கந்தசாமி முதலியார்; தாய்-வடிவம்மை.

வாழ்ந்த காலம்: 20—2—1878——24—1—1961.

சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தாரால் சிவக்கவிமணி என்ற சிறப்புப் பெயரினைப் பெற்ற இவர் கோவைக் கல்லூரியிற் சேர்ந்து ஆங்கிலமும் தமிழும் பயின்றார். தமிழ்க் கல்வியில் மிகுந்த பற்றுண்டாகி 1894ஆம் ஆண்டில் தமிழை முறையே கற்றார் 1897ஆம் ஆண்டில் எப். ஏ. தேர்வில் வெற்றி பெற்றார். பின்னர் சென்னையை அடைந்து அரசாங்கக் கல்லூரியிற் சேர்ந்து தத்துவ நூல் பாடம் கற்கத் தொடங்கினர். 1898இல் திருமணம் நிகழ்ந்தது. 1899 டிசம்பரில் பி. ஏ. பட்டத் தேர்வில்வெற்றி பெற்றார். அத் தேர்வில் தமிழகத்தின் முதன் மாணவராகத் தேர்ந்து தங்கப் பதக்கம் பரிசும் பெற்றார். பின்னர்ச்சட்டக் கல்வி பயின்று 1903ஆம் ஆண்டில் தேர்வு பெற்றுக் கோவையில் வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டார். 1902-21இல் கோவையில் இந்து தேவத்தானத்தில் உறுப்பினராகவும் பின் செயலாளராகவும் இருந்து பணியாற்றினர். பேரூர்க்கோயிலின் வருவாயைப் பல்வழிகளிலும் பெருக்கினர். பல குடமுழுக்குகளைச் செய்து

வைத்தார். அடியவர்க்குணவிடுதல், திருத்தொண்டர் திரு நாட்களைக் கொண்டாடுதல், சிவவழிபாடு செய்தல், தமிழ் நாட்டுச் சிவன்கோயில்களுக்குச் சிவப்பதிப்பயணம் செய்தல், சைவ நூல்களை ஆராய்ச்சி செய்தல், திருமுறை ஓதுதல், ஓது-வித்தல், சைவ ஒழுக்கத்தைப் பரப்புதல் முதலிய தொண்டுகளை விடாது செய்து வந்தார். சைவப்பிரசங்கசாலை என்னும் ஒரு நிலையத்தை ஏற்படுத்தினர். கிழமைக்கு ஒரு முறை சைவச் சொற்பொழிவுகள் நடத்தினர். 1929ஆம் ஆண்டு சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியாரோடு சேர்ந்து கோவைத் தமிழ்ச் சங்கத்திற்குக் கட்டிட வசதி ஏற்படுத்தினர். 1922 இல் நகரசபை உறுப்பினர் தேர்தலில் வெற்றி பெற்று 1935 வரை நகரசபை உறுப்பினராக இருந்தார். நகரசபையின் துணைத்தலைவராக இருந்து தொண்டாற்றியுள்ளார். 1922இல் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு உறுப்பினராகத் தேர்ந்-தெடுக்கப்பட்டார். நாட்டுப்பள்ளிகள் மன்றத்திற்கும் தேர்ந் தெடுக்கப்பட்டார். 1926லும் 1929லும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் மொழியின் ஆணையாளராக இருந்தார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேரகராதி ஒன்றைத் தொகுப்பதற்கு ஏற்பட்ட ஆராய்ச்சிக்குழுவில் இவரும் ஒருவராக இருந்தார். பல ஊர்களுக்கும் சென்று அருமையான சொற்பொழிவுகளைச் செய்திருக்கின்றார் இவருடைய உடல் திடம் இல்லாமையால் அடிக்கடி நோய் கொண்டிருந்தார். இல்லறத்திலேயே அகத்துறவு மேற்கொள்ள விரும்பி மதுரைத் திருஞான சம்பந்தர் திருமடத்தின் வாயிலாகத் துறவு நெறியைப் பெற்றுக்கொண்டார். முதுமை காரணத-தால் அதிகம் நடமாட முடியாத நிலையில் இருந்த இவர் 1961 சனவரித் திங்கள் 24ஆம் நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

நூல்கள்: சேக்கிழார், திருத்தொண்டர் புராணம், திருப்போரூர்க் கிள்ளை விடு தூது, மரகதவள்ளியம்மைமாலை, பச்சை நாயகி யம்மை ஆசிரிய விருத்தம், பச்சைநாயகியம்மையூசல், மருதாசலபதி உயிர் வருக்கமாலை, திருஞானசமபநதர் வெண்பாமாலை, திருநாவுக்கரசர் வெண்பாமாலை, கருவூர்த்தல புராண உரைநடை, பேரூர்புராண உரைநடை, அவிநாசிப் புராணஉரைநடை, பவானி கூடற்புராண உரைநட,

மாணிக்கவாசகர் அல்லது நீத்தார் பெருமை, அவிநாசிக் கருணாம்பிகை பிள்ளைத்தமிழ், கருவூர்த் தேவர் வரலாறு, சித்தாந்தம், செந்தமிழ்ச் செல்வி, கொங்குமலர் முதலிய திங்கள் வெளியீடுகளில் எழுதிய பல கட்டுரைகள்.

சேக்கிழார்: சென்னைப் பல்கலைக் கழகத்தில் செய்த மூன்றுசொற்பொழிவுகளின் தொகுப்பு.

மாணிக்கவாசகர் அல்லது நீத்தார்பெருமை: திருக்குறளிலே நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்தில் உள்ள ஒவ்வொரு குறளுக்கும் மாணிக்கவாசகப் பெருமானுடைய வாழ்வில் ஒவ்வொரு பகுதி எடுத்துக்காட்டாகக் கொண்டு எழுதப்பட்ட நூலாகும்.

திருத்தொண்டர் புராணம் உரை: கோவையில் மூன்றுண்டுகள் கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் பெரியபுராணச் சொற்பொழிவு செய்த பொழுது இந்நூலாசிரியர் அவரருகே யமர்ந்து செய்யுட்களைப் படித்து வந்தமையால் அப்போது குறித்து வைத்த குறிப்புக்களையும் சாதசிவச்செட்டியாரிடம் கேட்டறிந்த ஆராய்ச்சி முடிபுகளையும், தாமே கண்டறிந்த முடிபுகளையும் சேர்த்து 1934இல் இந்நூல் உரையை எழுதத் தொடங்கினர். இந்நூலுரை எழுதுவதற்குச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் ஆயிரம்வெண்பொற்காசுகளை அளித்தனர். பெரியபுராணத்தில் பழைய படிகளை யெல்லாம் தொகுத்தும் பாடபேதங்களையெல்லாம் உணர்ந்தும் இந்நூலாசிரியர் உரையை மிகத் தெளிவாக எழுதியுள்ளமையைக் காணலாம். குறிப்புலரைகள், விரிவுரைகள், நயம், உட்குறிப்பு, அருமைப் பாடுகள், மேற்கோள்கள், அணிகள் யாவும் இந்நூலுரையுட் காணலாம். இவர் கருத்தேயன்றிப் பிற பெரியாரின் கருத்துக் களையும் வரலாற்றுக குறிப்புக்களையும், ஆராய்ச்சிகளையும், கல்வெட்டுக்குறிப்புக்களையும், விவரப் படங்களையும், தலக்குறிப்புக்களையும் காணலாம். பெரியபுராணத்தை விளக்கு வதற்கு என்னென்ன சிறப்புக்கள் தேவையோ அவை யெல்லாம்இந்நூல் கொண்டுள்ளது. முதலில் சிறு சிறு பகுதிகளாக வெளிவந்து பன்னிரண்டு ஆண்டுகளில் இந்நூல் முழுமையும் அச்சாகி வெளி வந்துள்ளது.

## சுப்பிரமணிய முதலியார் தி. ந. (20-நூ)

ஊர்: திருவெண்ணெய் நல்லூர்; செங்குந்தர். பஞ்சலட்சண சரபம்இராசப்ப நாவலரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்ருர். பின்னர் பலமாணவர்களுக்குத் தமிழ் நூல்களைக் கற்பித்தார்.

நூல்: திருவெண்ணெய் நல்லூர்க் கலம்பகம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பிரமணிய முதலியார், நல். ( )

நூல்: இராமதத்வ தீபிகையினது ஆபாச விளக்கம் (8889) பிரஹ்மதரிசினி (1890). இவற்றுள் முன்னையது இராமதத்வதீபிகை எனச் சிற்ருத்துக்காடு சீனிவாசாச்சாரியார் எழுதிய நூலின் குறைகளை எடுத்துக் கூறுவது; இது 105 பக்கங்களைக் கொண்டதொரு உரைநடை நூலாகும்.

அடுத்தது 22 பக்கங்களில் உள்ளது; பெங்களூர் பிரமக் ஞானபோதினி என்னும் துணைப் பத்திரிகையினது மறுப்பாக வெளிவந்தது.

## சுப்பிரமணிய முதலியார் வெ ப (20-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் தென்காசிக்கோட்ட வெள்ளக்கால்.

தந்தை: பழனியப்ப முதலியார்; வேளாள மரபு.

வாழ்ந்த காலம்: 14—8—1857 — 12—10—1946.

இளமையில் திருநெல்வேலி மிஷன் பள்ளியில் கல்வி கற்ருர். 1876இல் மெட்ரிகுலேஷன் தேர்வில் தேறிச் சென்னைக் கிறிஸ்துவக் கல்லூரியிற் சேர்ந்தார். உடல்நலக் குறைவால் படிப்பைச் சிறிது காலம் விட்டார். பின்னர் 1880இல் வேளாண்மைக் கல்லூரியில் நான்காண்டுகள் கற்றுப் பட்டம் பெற்ருர். சென்னைக் கால்நடை இலாகாவில் பணி புரிந்தார். முப்பதாண்டுகள் பணி செய்து 1915இல் ஒய்வு கொண்டார்.

திருநெல்வேலித் தாலுகா, மாவட்டக் கழகங்களில் உறுப்பினராகவும் தலைவராகவும் இருந்தார். தென்காசி பெஞ்சு நீதி மன்றத்தில் தலைவராக இருந்தார். ராவ்சாகிப் பட்டமும் பெற்றுள்ளார். தமிழ் இலக்கியத் தொண்டு செய்தவர்களில் இவரும் குறிப்பிடத்தக்க ஒருவர். தமது 90ஆம் வயதில் காலமானார்.

நூல்; கோம்பி விருத்தம், அகலிகை வெண்பா, சர்வசனசெபம், கம்பராமாயணசாரம், ஸ்பென்ஷர் எழுதிய கல்வி என்னும் நூலின் முற்பகுதியின் தமிழ் மொழி பெயர்ப்பு, நெல்லைச் சிலேடை வெண்பா, மில்டன் எழுதிய சுவர்க்க நீக்கம் (Paradise Lost) என்னும் நூலின் முதற்பகுதியின் தமிழ்மொழி பெயர்ப்பு, இந்து தேசத்துக் கால்நடைக் காரர் புஸ்தகம்.

**சுப்பிரமணிய முனிவர் (18-நூ)**

வே. பெ: தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர்,

இவர் சிவஞான முனிவரின் மாணவர்; திருவாவடுதுறையில் நெடுங்காலம் வாழ்ந்தவர்.

நூல்: திருத்தணிகைத் திருவிருத்தம், துறைசைக்கோவை கலைசைக்கோவை: கலைசைச்சிலேடை வெண்பா, சிதம்பரேசர் வண்ணம், திருக்குற்றாலச் சித்தித் திருவிருத்தம், பழநிமுருகக் கடவுள் பஞ்சரத்தினமாலை, திருச்சிற்றம்பல தேசிகர் மீது சிந்து, பஞ்சரத்தினமாலை, தணிகைவிருத்தம், சுப்பிரமணியர் விருத்தம், கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை, அம்பலவாண தேசிகர்மீது ஆனந்தக்களிப்பு, பூவனூர்ச் சிலேடை வெண்பா.

**சுப்பிரமணியர் ( )**

நூல்: அஷ்டவக்ரகீதை தமிழாக்கம்.

**சுப்பிராய சாமிகள் ( )**

நூல்: குமாரதேவர் தாலாட்டு.

**சுப்புச் செட்டியார் ( )**

நூல்: அப்பர் சுவாமிகள் திவ்விய சரித்திரக் கீர்த்தனைகள்.

**சுப்பைய சாமி சி.** (20-நூ).

வாழ்விடம்: திருவண்ணாமலை ஈசானிய மடம்.

சிதம்பரம் பொன்னம்பல சாமி மடம் சிதம்பரசாமிகளிடம் அருளுரை பெற்றவர், வடமொழிப் பயிற்சி பெற்றவர்.

1956இல் காலமானார்.

நூல்: வேதசார சமுத்தரணம் என்னுந் தோடக வுரை, சிவமகிமை விரிவுரை, கோயிலூர்ச் குசுமாஞ்சரி, தருக்கசங்கிரக அன்னம் பட்டீய தெளிபொருள் விரிவுரை, ஈசானிய ஞானதேசிகர் சரித்திரம், புருடார்த்தப் பிரகரணம், சிவபுரி புராணம், வன்னியகுல விளககம், வல்லாள மகாராசன் சரித்திர விளக்கம், ஆன்மானான்ம விவேகம், சக்கந்தி கைலாசகணபதி ஆலய துதி, விடயாநந்த விளக்கம்.

**சுப்பைய சாமிகள் வீர ( )**

நூல்: இராமசாமிகள் நா. இயற்றிய வேதாந்தப்பிரதீபம் என்ற நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பைய தேசிகர், ( )**

ஊர்: சோழநாட்டில் பொய்கைப்பாக்கம்.

நூல்: காரோணர் மாலை, நீலயதாட்சியம்மன் நவரத்தின மகுடம், ஆரூட நவநீதம், தும்மற்காதல், பஞ்சபட்சி சுருக்கம், பல்லி நூல் சுருக்கம்.

**சுப்பையர் அ ( )**

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் ஆறுமுக மங்கலம். முருகக் கடவுளிடத்தில் மிகுந்த பக்தியுடையவர்.

நூல்: பத்திரசக்கீர்த்தனை.

**சுப்பையன் மே. (          )**

ஊர்: யாழ்ப்பாணத்தில் உள்ள காரைத்தீவு.

தந்தை; மேருகிரி ஐயர்.

இசைப்புலமையுடைய இவர் வடமொழியிலும் தெலுங்கிலும் தேர்ச்சி பெற்றவர்.

நூல்: நல்லைநாயக நான்மணிமாலை, காரைக்குறவஞ்சி.

**சுப்பையன் (          )**

நூல்: சுவாமிமலைப்புராணம். இப்புராணம் திருவேரகம் என்ற சாமிமலையின் சிறப்பைக் கூறுவது. 8 படலங்களையும் 365 செய்யுட்களையும் கொண்டது.

**சுப்பையா ஐயர் (20-நூ)**

நூல்: திருவானைக்கா பதிற்றுப்பத்தந்தாதி.

**சுப்பையா நாயுடு (19-நூ)**

நூல்: மதுரை ராமசாமிக் கவிராயர் சோமசுந்தரக் கடவுள் மீது இயற்றிய தெய்வசிகாமணி மாலை, அங்கயற்கண்ணியம்மை மீது இயற்றிய கண்மணிமாலை என்னும் நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுப்பையாப் பிள்ளை (19-நூ)**

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் முதுகுளத்தூர்.

நூல்: பொந்தம்புள்ளி என்ற ஊரினைச் சேர்ந்த இராமலிங்கம் பிள்ளை என்பவர் இயற்றிய கந்த புராண வண்ணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சுப்பையாப்பிள்ளை து. (20-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஆலங்காடு;

தந்தை: துரைசாமிப்பிள்ளை; வேளாளர்.

நூல்: வீரபத்தினி. இந்நூல் சிலப்பதிகாரக்காப்பியத்தின்சுருக்கமாக விளங்குவதாகும்.

## சுப்பையாப்பிள்ளை ரா. (20-நூ)

சி. பெ: மதுரகவி.

ஊர்: முதுகுளத்தூர்.

தந்தை: இராமசாமிப்பிள்ளை.

நூல்: புவனேந்திர காவியம். இந்நூல் 53 படலங்களையும் 3099 பாடல்களையும் கொண்டது.

## சுப்பையப் புலவர் ( )

ஊர்: யாழ்ப்பாணம், வண்ணார் பண்ணை.

இவர் கிறித்துவ சமயத்தைத் தழுவியவர். வேடிக்கையாகச் செய்யுளியற்றுந் திறம் கைவரப்பெற்றவராக இருந்தார்.

நூல்: கனகி புராணம்.

இது வண்ணை வைத்தீசுவரன் கோயிலில் வாழ்ந்த நடனமாதொருத்திமேல் நானூறு விருத்தங்களமையப் பாடப் பெற்ற நூல். சில செய்யுட்களே இப்பொழுது வழங்குகின்றன.

## சுயம்பிரகாச அடிகள் (19-நூ)

வே. பெ: கிருட்டிணசாமி.

ஊர்: சோழநாட்டின் உள்ள திருமழபாடி.

**தந்தை: சுப்பராயப்பிள்ளை; தாய்: ஆத்தம்மாள். மறைவு 1897. இவரது இயற் பெயர் கிருட்டிணசாமி என்பதாகும்.**

இல்லறம் ஏற்றுத் துறவியான பின்பு இவர் சுயம்பிரகாச அடிகள் என அழைக்கப்பட்டார். இவர் தக்க அறிஞர்கள் பால் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் சமயக் கல்வியையும் கற்றுப் புலமை பெற்றார்.

இவர் தமது இளமைப் பருவத்திலேயே பலரது வேண்டு கோளுக்கு இணங்கக் கல்விக் கூடம் ஒன்றினை நிறுவிச் சிறுவர் கள் பலருக்குக் கல்வி கற்பித்தார்.

திருக்கோவிலுக்குச் சென்று இறைவழிபாடு செய்யும் நற்பழக்கத்தை மேற்கொண்டிருந்த இவர், நாளடைவில் இல்லறத்தைத் துறந்தார். இளமையிலேயே இவரது உள்ளம் துறவறத்தையே நாடியது. ஆனாலும் பெற்றோர் மணம் செய்து கொள்ள வேண்டும் என்று கட்டாயப்படுத்தியமையால் இவர் உடன்பட்டார். மதுரைக்கு அருகேயுள்ள கடம்பங்குளம் என்னும் சிற்றூரில் பிறந்த அம்மையார் ஒருவரை இவர் மணம் செய்துகொண்டார். இல்லறத்தை மேற்கொண்ட இவர் ஆன்ம ஞானத்திலேயே ஈடுபட்டு வந்தார். ஒருநாள் ஞான ஆசிரியர் ஒருவர் தென்திசையிலிருந்து இவர் இருக்கு மிடம் வந்து, அறிவு நூல்களைப் பயின்று ஆன்ம ஞானத்தைப் பெருக்க வேண்டும், இன்றேல் வீடு பேற்றிற்காம் வழி விளங்கமாட்டாது என்று கூறி மெய்யறிவு நூல் ஒன்றையும் கொடுத்துச் சென்றார். அன்று முதல் இவர் இல்லறத்தைத் துறக்க எண்ணினார்.

வேதாந்த நூல்களை ஆராய்ச்சி செய்த இவர், மெய்யறிவு விளக்கம்பெறும் பொருட்டு பல சிவப் பதிகளுக்குச் சென்றார். திருவண்ணாமலைக்குச் செல்லும் வழியில் திருக்கோவலூரில், இவர் பிச்சைகேட்டும் உணவுகிடைக்காமையால் உண்ணா முலையம்மையே கிழக்கோலத்தோடு வந்து இவருக்கு உணவு அளித்ததாகச் சொல்லப் படுகிறது. பின்னர் திருவண்ணாமலை யை அடைந்த இவர் உண்ணாமுலையம்மையையும், அருணைசலப் பெருமானையும் வழிபட்டு 'ஆதிநடுவந்தமின்றி அரியவற்றுங் காண்பரிய' என்று தொடங்கும் பக்திப் புனுவல்களைப் பாடிக்

களித்தார். தில்லைத் தலத்தில் தங்கியிருந்தபோது, 'முன்னஞ் சிவகங்கை மூழ்கிப் பலியணிந்துன்' என்று தொடங்கும் பக்திப் பனுவலைப் பாடியுள்ளார். பின்னர்த் திருநெய்த்தானம் மருத நாயக ஐயர் என்பவரிடம் ஞானவாசிட்டம் என்னும் நூலைப் பாடம் கேட்டுத் தம்முடைய உண்மை அறிவை உணர்ந்தார். அதனால் இவருக்குப் பேரின்ப நிலை உண்டாகியது என்பர்.

நூல்: மதுரைச் சுந்தரேசர் நட்டராகப் பதிகம், மீனாட்சியம்மன் பதிகம், மீனாட்சியம்மன் இசைப்பாடல், நாநாசீவவாதக் கட்டளை உரை.

## சுயம்பிரகாச திருப்பதி சாமிகள் (20-நூ)

வே. பெ: திருப்பதிசாமி, போதகுரு, ஞானதேசிகன்.

ஊர்: கொங்கு நாட்டில் கருவூரை அடுத்த அரவாக்குறிச்சி.

தந்தை: சுப்பிரமணியர்; தாய்: வெள்ளையம்மை.

வாழ்ந்த காலம்: 1873-1937.

இவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகியவற்றைக் கற்றுத் தேர்ந்தார். தென் நாட்டிலும் வட நாட்டிலும் பயணஞ்செய்து துறவு நிலையை மேற்கொண்டார்.

நூல்; பழமொழிப் போதம் உத்திசாகரம், தட்சணாமூர்த்தி தோத்திரம், வித்தியாகீதை, பத்திநெறி, திருநாமமாலை முத்திநெறி, சிவசூத்திர விமர்சனி, மாதர் விடயம், சதாசிவப் பிரமதோத்திரம், தேவி தோத்திரம், விவேக சித்திரம், தத்தாத்திரேயர் தோத்திரம், மாரியம்மன் தாலாட்டு, சகுந்தலா அல்லது காதல் வெற்றி.

## சுரேந்திரநாத் ஒகலி ஆரியா (20-நூ)

இவர் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை

சென்றவர். சிறையில் இருக்கும் போது தமிழ் நூல்களைக் கற்று எழுதும் ஆற்றல் பெற்றவர்.

நூல்: நடராஜ தரிசனம்.

**சுல்தான் அப்துல் காதிர்மரக்காயர் ( )**

ஊர்: பறங்கிப்பேட்டை.

தந்தை: காதிரசனு மரக்காயர்.

நூல்: முகியித்தீன் ஆண்டவர் மீது பாடிய முனுசாத்து சதகம்.

**சுல்தான் சாயபு ( )**

ஊர்: நாகூர்.

நூல்: தற்சாத்துமாலை (1874).

**சுல்தான் முகியித்தீன் மு. கு. (20-நூ)**

ஊர்; கீழக்கரை.

இவர் ம. வு. ம. செய்யிது முகம்மது அலியார் என்பவரிடம் இலக்கண, இலக்கியங்களைக் கற்றார். பின்னர் பல மாணவர்களுக்குத் தமிழ்நூல்களைக் கற்பித்துள்ளார்.

நூல்: தம் மாணவர் மு. க. அ அப்துல் மசீது என்பார் இயற்றிய 'ஆசாரக்கோவை, என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சுல்தான் முகயதீன் ராவுத்தர் ( )**

நூல்: நாகூர் வழிநடை விளக்கத்தொடர் (1898). இந்நூல் நாகூர் வழிநடைச் சிந்து என்ற நூலுடன் பதிப்பிக்கப் பெற்றது; 18 செய்யுட்களைக் கொண்டது. நாகூருக்குச் சென்று நாகூர் ஆண்டவனைத் தொழுவதையும் அங்குள்ள சிறப்புக்கள் முதலியவற்றையும் பற்றிக் கூறுவது.

**சுலைமான் லெப்பை மு. ( )**

ஊர்: யாழ்ப்பாணம். நூல்; மு. க. அ. அப்துல் மசீதுப்புலவரி யற்றிய ஆசாரக்கோவை நூலிற்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்

**சுவர்ணன் நாரண பட்டாதித்தன் ( )**

இவர் ஸ்ரீஇராஜ ராஜ விஜயம் என்னும் பெயருள்ள நூல் ஒன்றை இயற்றியதாக திருப்பூந்துருத்திச் சாசனம் ஒன்றால் அறிகின்றோம். ஆனால் இந்நூல் வடமொழி நூலா, தமிழ் மொழி நூலா என்பது தெரியவில்லை. நூலும் கிடைக்கப் பெறவில்லை.

**சுவாம்பிள்ளைப்புலவர் (19-நூ)**

ஊர்: ஈழநாட்டில் பண்டத்தரிப்புக் கோயிற் பற்றிலுள்ள வினான் என்ற சிற்றூர். தந்தை: பேதுருப்பிள்ளை. வாழ்ந்த காலம் 1784—1844.

நூல்: கடவுண்மணிமாலை, வெல்லைமணி மாலை க்ணக்கதிகாரம்.

இவரியற்றிய கணக்கதிகாரம் என்ற நூல் காரிநாயனார் இயற்றிய கணக்கதிகாரம் என்ற நூலினும் வேறானது. உரிச்சொல் திவாக்ரம், நிகண்டு முதலிய நூல்களைக் காப்புச் செய்யுட்களை மாற்றி கிறித்துவின் மேலாக்கிப் பதிப் பித்துள்ளார்.

**சுவேதாரணிய சாத்திரி (20-நூ)**

வாழ்விடம்: பெங்களூர்.

இவர் பி. ஏ. எல். டி. பட்டம் பெற்றவர். பள்ளிக் கூடங்களில் துணை ஆய்வாளராகப் பணியாற்றியுள்ளார். இவர் அவ்வப்போது பதிகம், மாலை, முதலியவைகளும் பல தனிப்பாடல்களும் இயற்றியுள்ளார். இவை ஒன்றாகத் தொகுத்து அச்சிடப்பட்டுள்ளன. இந்நூலில் சுவேதாரணிய பதிகம், திருவெண்காட்டு தேசிசை, சரசுவதியந்தாதி, ஓவியப்

பாடல்கள், புலவராற்றுப்படை, நடராஜர் மாலை, பல சிவத் தலங்களில் பாடிய பதிகங்கள் ஆகியவை அடங்கியுள்ளன.

நூல்: தனிப்பாடல்.

**சூடாமணிப் புலவர் ( )**

நூல்: வைசிய புராணம் (1874)

இந்நூல் 43 சருக்கங்களையும் 840 செய்யுட்களையும் கொண்டது. வைசியர்களின் சிறப்புக்களைக் கூறுவது. இதற்குக் கோ. இராசகோபால் பிள்ளை உரை வரைந்துள்ளார்.

**சூடிக்கொடுத்த நாச்சியார் ( )**

பார்க்க: ஆண்டாள்.

**சூரியநாராயண சாத்திரி வை ( )**

நூல்: உலக சரித்திரம் (1922)

இந்நூல் உலக வரலாற்றினைக் கூறுவதாகும்.

**சூரியநாராயண சாத்திரியார் வி. கோ. (20–நூ)**

வே. பெ: பரிதிமாற் கலைஞர்.

ஊர்: பாண்டி நாட்டில் மதுரையையடுத்த விளாச்சேரி.

தந்தை: கோவிந்தசிவனார்.

வாழ்ந்த காலம்: 6-7-1870—2-11-1903.

முதலில் திண்ணைப்பள்ளியில் கல்வி கற்ற இவர், தம் தந்தையாரிடம் வடமொழியையும் மதுரைச் சபாபதி முதலியாரிடம் தமிழையும் கற்று இளமையிலேயே தமிழ் ஆங்கிலம், வடமொழி யென்ற மும்மொழிகளிற் சிறந்து விளங்கினார். 1890இல் சென்னைப் பல்கலைக் கழகத்தாரின் இடைநிலை வகுப்புத் தேர்வில் முதல்வராகத் தேர்ந்து சேதுபதி

மன்னரின் உதவி ஊதியத்தைப் பெற்றார். 1892இல் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் பி. ஏ. யிலும் வேதாந்த தத்துவக் கலையிலும் முதல்வராகத் தேறிப் பாஸ்கர சேதுபதியின் பொற்பதக்கத்தைப் பெற்றார். சி. வி. தாமோதரம்பிள்ளையவர்கள் கொடுத்த ஆங்கிலப் பாடலைத் தமிழாக்கம் செய்த திறனுக்காக அவரால் திராவிட சாத்திரி என்னும் பட்டம் கொடுக்கப் பெற்றார். கிறித்துவக் கல்லூரியின் தலைவரான மில்லர் இவருக்கு அக்கல்லூரியிலேயே தத்துவக்கலையாசிரியர் பதவியைக் கொடுத்தார். இவர் அதனை விரும்பாது தமிழாசிரியரானார். இரண்டாண்டுகளில் அக்கல்லூரியின் தலைமைத் தமிழாசிரியராக உயர்வு பெற்றார். சென்னைப் பல்கலைக் கழகத்தார் உள்நாட்டு மொழியைப்பாடப் பகுதியில், இருந்து நீக்க முயன்றபோது இவரும் பூரணலிங்கம்பிள்ளையுமாகச் சேர்ந்து தமிழ் கற்றோர் வீடுகள் தோறும் சென்று ஆதரவு திரட்டி அம்முயற்சியினைத் தடுத்தனர். இவரும் பூரணலிங்கம்பிள்ளையுமாகச் சேர்ந்து ஞானபோதினி என்ற இதழை வெளியிட்டனர். இவரது தனிப்பாசுரத் தொகையினை ஜி. யு. போப் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். கல்லூரி நேரம் தவிர வீட்டிலும் பலருக்குத்தமிழ் பயிற்றுவித்தார். இவருக்கு இறுதியில் இருமல் நோய் கண்டு 1903ஆம் ஆண்டு காலமானார்.

நூல்: தனிப்பாசுரத்தொகை, பாவலர் விருந்து, சித்திரக்கவி விளக்கம், ரூபாவதி, கலாவதி, மானவிஜயம், மணியசிவனார் சரித்திரம், மாலாபஞ்சகம், மதிவாணன், முத்திராராட்சசம் (மொழிபெயர்ப்பு), நாடகவியல், தமிழ் மொழியின் வரலாறு, தமிழப் புலவர் சரித்திரம், தமிழ் வியாசங்கள், புத்தசரித்திரம், புத்ததருமம், புத்தசங்கம், புத்த சரித்திரம், புத்த தருமம், புத்தசங்கம் மணிமேகலையிற் காணப்படும் புத்தமதக் கொள்கைகளை விளக்குவன.

## சூரியநாராயணன் செட்டியார் ( )

நூல் பொ. மீ. இராமலிங்கக் கவிராயர் மதுரையில் செய்த அட்டாவதானத்தைச் சிறப்பித்து வழங்கிய செய்யுள்.

## தூரியமூர்த்தி தேசிகர் (        )

இவர் இலக்கணவிளக்கம் நூலாசிரியர் வைத்தியநாத நாவலரின் மரபில் வந்தவர் ஆவர்.

நூல்: 'தேவி நிதியங்கொடுக்குஞ் செல்வரைப் பார்த்தெள்ளவும்' என்று தொடங்கும் வெண்பா' இது சீனிவாச முதலியார் என்பவரது பெருமையைக் குறித்தது.

## தூரியமூர்த்திப்பிள்ளை சு (20-நூ)

நூல்: சுப்பிரமணியபிள்ளை ரா. சு. என்பவர் இயற்றிய புண்ணிய ராற்றுப்படை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## தூரியானந்தர் (        )

இவர் சித்தர்களில் ஒருவர் எனச் சிலரால் கருதப் பெறுகின்றார்.

நூல், சூரியானந்தர் சூத்திரம்.

## தூலியன்வின்சோன் (20-நூ)

இவர் பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த தமிழறிஞர். இவரது தந்தையார் காரைக்காலில் நீதிமன்ற நடுவராகப் பணி யாற்றியவர். தம்முடைய தந்தையார் தாய் நாட்டிற்குத் திரும்பிச் சென்றபோது இவரும் அவருடன் சென்றுவிட்டார்; ஆனாலும் அங்கு சென்று பல தமிழ் நூல்களைப் பயின்று தமது தமிழறிவைப் பெருக்கிக் கொண்டார்.

இவர் பாரிசுப் பல்கலைக் கழகத்தில் கீழைநாட்டு மொழி களின் ஆசிரியராகப் பணியாற்றியவர். தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாத ஐயரிடம் மிகுந்த தொடர்பு கொண்டி ருந்தார். சாமிநாதையர் சீவகசிந்தாமணியைப் பதிப்பித்த போது அதனைப் பாராட்டி இவர் தமிழில் கடிதம் எழுதி யுள்ளார். தமிழ் மொழியில் வெளிவராத நூல்களை வெளியிட வேண்டும் என்றும் அவரை ஊக்குவித்துள்ளார்.

சீவகசிந்தாமணிச் சுருக்கம், திருக்குறள் தமிழ் இலக்கணச் சுருக்கம் என்னும் நூல்களைப் பிரெஞ்சு மொழியில் வெளியிட்டுள்ளார்.

**செகநாதப்பிள்ளை (பேறை) (19-நூ)**

ஊர்: செங்கற்பட்டு.

இவர் பூவை கலியாணசுந்தர முதலியாருக்கு ஆசிரியர். சதாவதானம் செய்யும் ஆற்றல் உடையவர்.

நூல்: பல தனிப்பாட்டல்கள்.

**செகராசசேகர மன்னர் (17-நூ)**

ஊர்: ஈழநாட்டில் யாழ்பாணத்து நல்லூர்.

தந்தை: கனகசூரிய சிங்கையாரிய மன்னர் தம்பி பரராச சேகர மன்னர்.

இவர் புலவராகவும் புரவலராகவும் விளங்கினர். இவர் புலவர்கள் பலரை ஆதரித்தார். யாழ்ப்பாணத்தில் தமிழ்ச் சங்கம் ஒன்றினை நிறுவித் தமிழ் வளர்த்தார். அழிவுற்ற சரசுவதி மகாலயம் என்னும் நிலையத்தினைப் புதுப்பித்து நடத்தி வந்தார். தமிழ் நாட்டிலிருந்து பலவகை நூல்களை வரவழைத்துப் பாதுகாத்தார். பள்ளிகள் பல வைத்து நடத்தினர்.

இந்நூல் பண்டிதராசர் என்னும் புலவரியற்றிய தக்ஷிண கைலாசபுராணம் என்ற நூலிலிருந்து வேறானது. சோமஐயர் என்பவர் இவர் பெயரில் செகராசசேகரமாலை என்னும் காலங்கணித நூலினை இயற்றியுள்ளார். செகராசசேகரம் பரராசசேகரம், அங்காதிபதம் ஆகிய மருத்துவ நூல்கள் இவர் காலத்தில் தொகுக்கப் பெற்றனவாகும். இம் மருத்துவ நூல்களை ஏழாலை மருத்துவர் ஐ. பொன்னையா என்பவர் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

## செகராவு முதலியார் ஏ. எஸ். (20-நூ)

ஊர்: சென்னை நகரில் இராயபுரம்.

இவர் செயின்ட் மேரீஸ் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

நூல்; பொன்னுச்சாமி உலா. இந்நூல் 555 கண்ணிகளை உடையது. இது தண்டையார்ப் பேட்டையில் இருந்த பொன்னுச்சாமிக் கிராமணி மீது இயற்றப் பெற்றது.

## செகவீரபாண்டியன் (20-நூ)

சி. பெ: கவிராசபண்டிதர் செகவீரபாண்டியன்.

ஊர்: திருநெல்வேலி மாவட்டம், ஒட்டநத்தம்.

பிறந்தநாள்: 12—3—1886.

நூல்: அகத்திய முனிவர் கல்வி நிலை, மாசிலாமணிமாலை, பாஞ்சாலங்குறிச்சி வீரசரித்திரம், புலவர் உலகம், கம்பன் கலை நிலை, திருக்குறட் குமரேச வெண்பா மூலமும் உரையும், தமிழர் வீரம், தருமதீபிகை, வீரபாண்டியம், இந்தியத் தாய் நிலை, ஆங்கிலத்தில் லைட் ஆப் வர்ச்சூ (Light of Vritue).

## செங்கமல சாமிகள் (20-நூ)

இவர் சாட்சிநாத சாமிகள் என்பவருடைய மாணவர்.

நூல்: தோத்திரப்பாமாலை (1879) இந்நூல் 46 செய்யுட்களைக் கொண்டது. இந்நூலில் சற்குருநாதன் வாழ்த்து, சற்குரு தோத்திரம், இராகாதி பதிமூன்றன் விடயம், தட்சணாமூர்த்தி தோத்திரம் முதலிய நூற்கள் அடங்கியுள்ளன. இந்நூலின் இறுதியில் 101 செய்யுட்களாலாய இரத்தினகிரிமாலை என்னும் பிரபந்தம் அமைந்துள்ளது.

## செங்கல்வராயப் பிள்ளை வ. சு. (20-நூ)

ஊர்: தென்னார்க்காடு மாவட்டம் கடலூர் மஞ்சக்குப்பம்.

தந்தை: வ. த. சுப்பிரமணிய பிள்ளை; தாய்-தாயம்மை.

பிறந்தநாள்: 15—8—1883

இவர் எம். ஏ பட்டம் பெற்றவர். தணிகைமணி, இராவ் சாகிப், ராவ்பகதூர் ஆகிய சிறப்புப் பட்டங்களைப் பெற்றுள்ளார் பி. ஏ. தேர்வில் மாநிலத்தில் முதல் மாணவராகத் தேர்வு பெற்று சேதுபதி தங்கப் பதக்கத்தையும் பல்கலைக் கழகத் தங்கப் பதக்கத்தையும் பெற்றுள்ளார்.

சென்னைப்பதிவுத்துறைக் கண்காணிப்பு மேலாளர் அலுவலகத்தில் 1905ஆம் ஆண்டு முதல் 1936ஆம் ஆண்டு வரை பணியாற்றியுள்ளார். இவ்வலுவலகத்தில் எழுத்தராகப் பணியாற்றத் தொடங்கிய இவர் துணைப்பதிவாளராகவும் மாவட்டப் பதிவாளராகவும் உயர்வு பெற்று இறுதியில் 1931ஆம் ஆண்டு முதல் 1938ஆம் ஆண்டு வரை கண்காணிப்பு மேலாளரின் தனித்துணையாளராக பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார்

இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார் திருச்சுழியல துணைமாலையம்மை பிள்ளைத் தமிழ், சுந்தரவிலாசம், உபதேசகாண்டம் என்னும் நூல்களை ஓலைச்சுவடிகளில் இருந்து படி செய்து வெளியிட்டுள்ளார். திருததணிகையில் அருணகிரிநாதர் நவவீரர்கள் சிலைகளுக்குப் பித்தளை விமானம செய்வித்துள்ளார். சென்னையில் கச்சாலீசுவரர் கோயிலுக்குச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் எழுந்தருள வெள்ளையானை வாகனமும் சேரமான் பெருமாள் விக்கிரகமும் செய்து கொடுத்துள்ளார். செந்தமிழ்ச் செல்வி, திருப்புகழ் அமிர்தம் போன்ற இதழ்களில் பல கட்டுரைகள் எழுதியுள்ளார்.

நூல்: ஹிஸ்டரி ஆப் டமில் புரோஸ் லிட்டரேச்சர் (History of Tamil Prose Literature) காசி மகாத்மியம் அல்லது சிம்ஹத்துவசன் கதை, மதுரைச்சொக்கநாயகர் அறுபத்து நான்கு திருவிளையாடல், காலனைக் கட்டியடக்கிய கடோர சித்தன்கதை, வ. த. சுப்பிரமணியபிள்ளை சரித்திரமும் அவர் இயற்றிய தனிப்பாடல்களும், தணிகை நாயகன்மாலை

தணிகை ஆண்டவன் மாலை, திருத்தணிகைக் கலிவெண்பா, தணிகை மூப்பூ, வடகதிர் காம முருகர் அந்தாதி, அறுபத்து மூவர் துதிப்பா, திருமந்திர ஆராய்ச்சி, திருத்தணிகைப் பிள்ளைத் தமிழ், திருமூலநாதரும் அருணகிரிநாதரும், திரு முல்லைவாயில் வைணவத் தேவிமீது எச்சரிக்கை-லாலி ஊஞ்சல் ஓடம்-மங்களம், அட்டபுட்ப அட்டமாலை, குமரன் தவக்குறட் பாவும் கன்னிக் குமரியும், சம்பந்தர் பிள்ளைத் தமிழ். சுந்தர மூர்த்தி சுவாமிகள் சரித்திரச்சுருக்கம், தேவி அநுபூதி அலங்-காரம், வேல்பாட்டு, மயில்பாட்டு, சேவல் பாட்டு, மனோன் மணிப்பூசைச் சோடச விருத்தம், முருகரும் தமிழும், சுந்தர் கதி எழுபது, சுந்தர் கழல்நாற்பது, அருணகிரி நாதர் வரலாறும் நூலாராய்ச்சியும், தணிகைப் புராணச் சுருக்கம், முருகவேல் பன்னிருதிமுறை, தேவார ஒளி நெறி (சம்பந்தர்), தேவார ஒளிநெறிக்கட்டுரை (சம்பந்தர்), தேவார ஒளி நெறி (அப்பர்) தேவார ஒளி நெறி (சுந்தரர்).

ஹிஸ்டரி ஆப் டமில் புரோஸ் லிட்டரேச்சர் (History of Tamil Prose Liter ture): இந்நூல் தமிழ் உரைநடை இலக்கியம் பற்றிய வரலாறாகும். காசிமகாத்மியம் அல்லது சிம்ஹதீது வசன் கதை: இந்நூல் உரைநடையில் அமைந்தது மலையாள மொழியில் இராமாநுச எழுத்தச்சன் எழுதிய சிவபுராணம் என்னும் நூலில் இருந்து எடுத்துத் தமிழில் எழுதப்பட்டது.

மதுரைச் சொக்கநாயகர் அறுபத்து நான்கு திரு விளையாடல்: இந்நூல அறுபத்து நான்கு வகை விருத்தப் பாக்களால் பாடப்பட்டது.

கணவனைக் கட்டியடக்கிய-கடோரசித்தன் கதை: இந் நூல் உரைநடையில் அமைந்தது.

தணிகை மூப்பூ: இந்நூல் தணிகாசல நாதர் பல்லாண்டு, தணிகைப் பதிகம், தணிகைத் தசாங்கம் என்ற மூன்று பகுதி களைக் கொண்டது.

வடகதிர்காம முருகர் அந்தாதி: கட்டளைக் கலித்துறையில்

முப்பது செய்யுட்களால் அமைந்தது. சென்னைத் தம்புச் செட்டித்தெரு காளிகோயில் முருகன்மீது இயற்றப்பட்டது.

அறுபத்து மூவர் துதிப்பா: உரைநடைக் குறிப்புடன் கூடியது. அறுபத்து மூன்று வகை விருத்தப் பாக்களால் அமைந்தது.

திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ்: பருவத்துக்கு ஒரு பாடலாக பத்துப் பாடல்களில் அமைந்தது. தேவி அநுபூதி அலங்காரம் திருமுல்லைவாயிலில் உள்ள வைணவத்தேவி மீது பாடப்பட்டது

முருகவேள் பன்னிருதிருமுறை: அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் - கந்தரலங்காரம் - கந்தர் அநுபூதி, கந்தரந்தாதி திருவகுப்பு ஆகியவற்றிற்கு உரையும் குறிப்பும் எழுதி ஆறு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளது.

தேவார ஒளி நெறி: மூவர் தேவாரம் பற்றிய விளக்க நூல்; இந்நூலில் தேவாரம் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

## செங்கல்வராய முதலியார் ( )

நூல்: வியாகுல மாதாவின் பேரில் தேவாரம்.

இந்நூல் 8 செய்யுட்களைக் கொண்டது. வியாகுல மரியே தோத்திரம் என்னும் முடிவைக் கொண்ட பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இந்நூல் அர்ச் மாதாவின் பேரில் வியாகுலம் காதல் என்னும் நூலுடன் சேர்த்து வெளியிடப்பெற்றுள்ளது.

## செங்கல்வராய முதலியார் ஆ. (20-நூ)

ஊர்; காஞ்சிபுரம்.

இவர் தருக்க வேதாந்த போதகாசிரியர் என அழைக்கப் பெற்றார்; குடியேற்றம் நகரசபை உயர்நிலைப்பள்ளியில தமிழாசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

நூல்: வேதாந்த நூல்கள் சிலவற்றை ஆராய்ந்து வெளியிட்-டுள்ளார். நாநாசீவவாதக் கட்டளை என்ற நூலுக்கு இலகு போதினி என்னும் உரையினையும் சசிவன்ன போதம் என்ற

நூலுக்குத் தத்துவப் பிரகாசிகை என்னும் உரையினையும் எழுதியுள்ளார்.

**செங்கல்வராய முதலியார் பூ. (    )**

ஊர்: சென்னையில் பூவிருந்தவல்லி.

பொன்மலைச் சாமிகளிடம் அருளுரை பெற்றவர்.

நூல்: திருக்குருகூர் ஞானசித்தர் இயற்றிய நூலிற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**செங்கல்வராய ராசா, கோ. (    )**

நூல்: ஆத்மபோதாமிர்தரசம் (1870). இது 76 பக்கங்களில் அமைந்ததொரு உரைநடைநூல்.

**செங்கண்ணனார் (சங்க காலம்)**

வே. பெ: மதுரைச்செங்கண்ணனார்.

செங்கண்ணனார் என்பதைக் காரணப் பெயர் எனக் கொள்ளின் இவர் உறுப்பாற் பெயர் பெற்றவரர்வார். மதுரைச் செங்கண்ணனார் என்னும் பெயரைக் கொண்டு பார்க்கும் போது இவர் மதுரையில் வாழ்ந்தவர் என்று கொள்ள வேண்டும்.

நூல்: அகம் 39, நற்றிணை 122.

**செங்குன்றூர் கிழார் (    )**

நூல்: திருவள்ளுவமாலையில் "புலவர் திருவள்ளுவரன்றி" என்று தொடங்கும் பாடல்.

**செஞ்சடை வேதிக தேசிகர் (    )**

நூல்: திருப்பனந்தாள் தலபுராணம் (1944).

இந்நூல் 18 சருக்கங்களையும் 599 செய்யுட்களையும் கொண்டது.

**செட்டியார், பி எஸ். (20-நூ)**

நூல்: தஞ்சாவூர் மாவட்டம் நன்னிலம்.

தந்தை: பாவாடைச் செட்டியார்; தாய்; கமலத்தம்மாள்.

சாது கோ. வடிவேலுச் செட்டியாரிடமும் கா. நமச்சிவாய முதலியாரிடமும் பாடங்கேட்டவர். சென்னை. தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் உயர்நிலைப் பள்ளியிலும் கலவல கண்ணன் செட்டியார் உயர்நிலைப் பள்ளியிலும் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர். இலங்கை, மலேயா ஆகிய வெளி நாடுகளுக்குச் சென்று சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். திருமழிசை ஆழ்வார், காளமேகப் புலவர் தாயுமானவர் ஆகிய திரைப்படங்களை வெளியிட்டவர்.

நூல்: அறிஞர் ஆர். கே. எஸ், அறிவுலக வீரர், சிறிய வயதிலே பெரிய மனிதர்கள், தியாக உள்ளம், திருவருள்.

அயலவர் கண்ட இந்தியா, காப்பியக் காட்சிகள், என்ற இரண்டு நூல்களையும் பதிப்பித்துள்ளார்.

**செண்பகக் குமாருபிள்ளை மா. அ (20-நூ)**

ஊர்: திருநெல்வேலிப் பகுதியில் உள்ள மாருந்தை.

தந்தை: அருணாசலம்பிள்ளை.

இவர் திருவாவடுதுறை ஆதீனம் பூசைச் சுப்பிரமணியத் தம்பிரான் என்பவரிடம் தமிழ் நூல்களைக் கற்றார்.

நூல்: சற்குருநாதர் சரித்திரம். இந்நூல் 211 பாடல்களை உடையது.

**செண்பகக் குற்றலக் கவிராயர் ( )**

இவர் மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயரின் வழி முறையினர். திருவாவடுதுறை ஆதீனப்புலவராக இருந்தவர்.

நூல்: பல தனிப்பாடல்கள்.

**செண்பகமன்னர் ( )**

நூல்; சிறீ கிருட்டிணனேசல்.

**சென்னையார் காவலன் ( )**

நூல்: சென்னைஞானப் பிரகாசர் பிள்ளைத்தமிழ்.

**செந்திநாத ஐயர் காசிவாசி (20-நூ)**

ஊர்: ஈழநாட்டில் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த ஏழாலை.

தந்தை: சிந்நயஐயர்.

வாழ்ந்த காலம்: 1848-1924

இவர் தம் மாமனார் கதிர்காம ஐயரிடமும், சம்பந்தப் புலவரிடமும் தமிழும் வடமொழியும் கற்றார். திருவனந்த புரத்தில் இருந்த சுப்பா சாத்திரி என்பவரிடமும் அனந்த கிருட்டிண சாத்திரியென்பவரிடமும் காவியம், தருக்கம், வியாகரணம் முதலியவற்றைக் கற்றார். யாழ்ப்பாணம் மத்திய கல்லூரியிற் சேர்ந்து ஆங்கிலம் கற்றார்.

இவர் முதலில் வண்ணார்பண்ணையில் நிறுவப்பட்ட சைவ வித்தியாசாலையில் ஆறாண்டுகளும் ஆங்கில வித்தியாசாலையில் ஓராண்டும் ஆசிரியராகப் பணியாற்றினார். 1882ஆம் ஆண்டில் இந்தியாவில் திருநெல்வேலிச் சைவப் பாடசாலையில் ஆசிரியராகப் பணியாற்றினர். 1883ல் திருநெல்வேலி முன்சீப் சுப்பிரமணியப்பிள்ளை நடத்திய அஜனமனோரஞ்சனிப் பத்திரிகையில் துணையாசிரியராகப் பணியாற்றினார். 1888ஆம் ஆண்டில் அமிர்தபோதினி என்ற வார வெளியீட்டைத் தொடங்கினார். 1888ஆம் ஆண்டு தொடங்கி 1898ஆம் ஆண்டு வரை காசியில் வாழ்ந்தார். ஆதலால் காசிவாசி என்று அழைக்கப்பட்டார். 1902ஆம் ஆண்டில் திருப்பரங்குன்றத்தில் வைதீக சுத்தாத்துவித சைவ சித்தாந்த வித்தியாசாலை என்ற பள்ளியினைத் தொடங்கி நடத்தினார். இராமலிங்க அடிகளாரை எதிர்த்து நடைபெற்ற அருட்பா மருட்பா சொற்போரில் நா. கதிரைவேற்பிள்ளைக்குத் துணையாக இருந்து உதவினார்.

நூல்: கந்தபுராண நவநீதம், ஞானரத்தினவளி, சைவவேதாந்தம், தத்துவவிளக்கம், மூலமும் உரையும், சிவஞானபோத வசனலங்கார தீபம், வஜ்ரடங்கம், வஜ்ரதண்டம், சான் ஷத்திரிய பிரசண்ட மாருதம், ஞானபோதவிளக்கச் சூருவளி, சிவனும் தேவனு என்னும் தீயநாவுக்கு ஆப்பு, வீரபத்தி-ராஸ்திரம், விவிலிய குஞ்சித கண்டன திக்காரம், விவிலிய குஞ்சித குறிப்பு, தாந்திரிய துண்ட கண்டன கண்டம், மகா உக்கிர வீரபத்திராஸ்திரம், வைதிக சுத்தாத்துவித சைவ சித்தாத்தப் படம், வைதிக சுத்தாத்துவித சைவ சித்தாந்த தத்துவப்பட வினவிடை, ஸ்ரீசீகாழிப் பெருவாழ்வின் சீவ காருண்ய மாட்சி, நீலகண்ட பாஷ்யத் தமிழ் மொழி பெயர்ப்பு.

## செந்தில் நாயக அடிகள் (20-நூ)

ஊர்: திருவாமாத்தூர்.

தந்தை; வண்ணச்சரபம் தண்டபாணி அடிகள்.

தாய்: சுந்தரத்தம்மையார்.

வாழ்ந்த காலம்: 1884-1942.

இவர் தம் தந்தையிடமே கல்வி கற்றுத் தமிழில் செய்யுள் இயற்றும் வன்மை பெற்ருர். இளம் வயதிலேயே தம் தந்தை எழுதிய ஏட்டுச் சுவடிகளைப் படிக்கும் ஆற்றலும் பெற்ருர். இவர் தம் தந்தை அமைத்த மடத்திலேயே தங்கியிருந்தார்.

நூல்: தண்டபாணியடிகள் புராணம், தண்டபாணியடிகள் புராண உரைநடை, கௌமாரத் திருவந்தாதி, கௌமாரபுராணம், அழகிய நாதமாலை, முருகன் கட்டளைக் கலித்துறையந்தாதி, சித்தி விநாயகர் பதிகம், திருப்புகழ்ப் பதிகம், இராமாந்தப் பிரதாபசிந்து, மயிலம் முருகக் கடவுள் நவரத்தினத் திருப்புகழ், ஆமாத்தூர் முருகன் வண்ண மஞ்சரி, இராமாநந்த சுவாமிகள் வரலாறு.

## செந்தில் நாயகம்பிள்ளை தி. மு. (20-நூ)

நூல்: கலியாணசுந்தரக் கவுண்டர் என்பவர் இயற்றிய கந்தன் சித்திர பந்தனமாலை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## செந்திலவேலு முதலியார் (20-நூ)

ஊர்: சென்னை திருமயிலை.

நூல்: கனகசபைப்பிள்ளை கூ. என்பவர் இயற்றிய வருண சிந்தாமணி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## செம்பியனார் (சங்க காலம்)

செம்பியர் என்பது சோழர் குடிப்பெயர். எனவே இவர் சோழர் மன்னர் மரபைச் சேர்ந்தவர் என்று கருத இடமுண்டு. இனிப் பழங்கால மன்னர்களின் குடிப்பெயர்கள் சிறப்புப் பெயர்களாகப் பிற்காலப் புலவர்களுக்கு வழங்கப்பட்டதும் உண்டு என்பது நல்வழுதியார் முதலிய பெயர்களால் தெரிகின்றது.

நூல்: நற்றிணை 102

## செம்புலப் பெயல் நீரார் (சங்க காலம்)

செம்புலப் பெயல்நீர் என்னும் சொற்றொடரைத் தாம் பாடிய பாடலில் அமைத்துப் பாடியதால், இவ்வுவமையின் சிறப்பினால் இத்தொடரோடு உயர்வுப் பன்மையைக் குறிக்கும் ஆர் என்னும் விகுதியும் சேர்ந்து செம்புலப் பெயல் நீரார் என்பது இவருக்குப் பெயராயிற்று.

நூல்: குறுந் 40.

## செம்புலிப்பெரியசாமித் தேவர் (19-நூ)

ஊர்: பாண்டிய நாட்டில் சொக்கம்பட்டி.

நூல்: ஊற்றுமலை இருதயாலய மருதப்பத் தேவர் மீதும் மற்றும் பலர் மீதும் பாடிய சில தனிப் பாடல்கள்.

## செய்கப்துல் காதிர்-1 ( )

ஊர்: கீழக்கரை.

**நூல்:** தவத்திரு கதீது விசலம், தவத்திரு என்னும் வெள்ளாட்டி மசாலா மறுமொழி விசலம், அறிவுமாலை, உகூதுமாலை, கக்கீகத்துமாலை, தரீக்கத்துமாலை, திக்றுமாலை, தௌகீதுமாலை பகரிபத்து மாலை, பயானுத்தீன்மாலை, பன்னிரண்டுமாலை, பிக்றுமாலை, ஹிதாயத்து இன்னிசை.

**செய்கப்தூல் காதிர்-2 ( )**

**ஊர்:** தென்காசி.

**நூல்:** முனஜாத்து (1880), இந்நூல் முஹாறபத்துல்லகீன் என்ற நூலுடன் அச்சிடப்பெற்றது. இந்நூல் இபுலீசு என்கிற அரசனுடன் ஈமான் என்கிற சுல்தான் படை செய்து வெற்றி பெற்ற வரலாறு உரைப்பது; 24 பக்கங்களிலமைந்ததொரு உரைநடை நூல்.

**செய்கப்தூல் காதிர் செ. ( )**

**ஊர்:** திருநெல்வேலிப் பேட்டை.

**நூல்:** அஹ்க்காமும் இஸ்லாம் (1899), ஆபிதீனற்புதம், ஆறிபீனற்புதம் என்னும் கறிகத்துல அவுலியா (1895), ஈமானுண்மை இசுலா நன்மை என்னும் ஹக்கீகத்துல் இஸ்லாம் (1898), நேர்வழி விளக்கத்தின் மணிமுழக்கம் (1887).

இவற்றுள் முதல்நூல் ஈமானின் பயன் தொழுகை முதலியன பற்றி உரைப்பது.

**செய்கப்தூல் காதிர் ம. ( )**

**நூல்:** ஷெய்குத் தம்பி ஞானியார் சாயபு பேரில்தோத்திரப் பதிகம் (1898).

இது ஞானியார் சாகிபு பொலியுல்லா மெய்ஞ்ஞானத் திருப்பாடற்றிரட்டு என்ற நூலுடன் அமைந்துள்ளது. இந் நூல் 382 பக்கங்களில் உள்ள செய்யுள் நூல்.

## செய்கப்துல் காதிர் நயினார் ( )

நூல்: திருமணிமாலை. (1878). இது 2044 செய்யுளுடன் வாழத்துச் செய்யுள் ஒன்றும் சேர்ந்தது. எல்லா உலகங்களையும் உயிர்களையும் படைத்தாளும் வல்லநாயகன் கருணைத் தோழராகிய நபி இபுருகீம் கலீலுல்லா அவர்களுடைய இயற்கையும் செயற்கையுமாகிய திருமணிமாலை என்று நூலினுள் தலைப்பு உள்ளது. இதில் முதலாவது செயற்கையங் காண்டம் அடங்கியுள்ளது. 31 படலங்கள் உள்ளன.

## செய்கப்துல் காதிர் நயினார்-ஹு ( )

வே. பெ: செய்கப்துல்லாகாதிர் ஆலிம்புலவர், செய்கப்துல்காதிர் நயினார் ஆலிம் புலவர்

ஊர்; காயற்பட்டணம்.

தந்தை: ஹபீபு முகம்மது.

நூல்: இன்னிசை, காத்தம் மாலை, புத்தூகுஸ்சாம் வசன காவியம், முனாஜாத்துக்கள், சாம்குதீபு நாயகம், காரணப் புராணம், மக்காக்கி கலம்பகம் தோத்திரமாலை, மதீதான் சாகிபு பாடலுக்கு ஒருபா ஒருபது, வாயுறை வாழ்த்து.

## செய்கப்துல்லா ( )

நூல்: செய்கு அப்துல்லா ஒலிறகி ஷதுல்லா அவர்களின் கதை தோகைமாலை நபிமார்களைக் கொண்டுண்டாகிய முனாஜாத்து (1874). பீருசாஅம்மாள் கதீது (1874), மீருன் மாலை, சாலத்துல் அறுக்கான்மாலை (1879). தொழுகைமாலை (1888), நாலிமாமாலை (1871).

## செய்கு ஆலிப் புலவர் ( )

பார்க்க: ஆலிப்புலவர்.

## செய்குத்தம்பி ( )

நூல்; ஞான ஆனந்த கழிப்பு(1881). இது ஞானப்புகழ்ச்சி என்ற

நூலுடன் சேர்த்து அச்சிடப்பெற்றது.

**செய்குத்தம்பிப் பாவலர் (20-நூ)**

ஊர்: நாகர்கோயிலையடுத்த இலங்கடை.

தந்தை: பக்கீர்மீரான் சாகிப்.

வாழ்ந்த காலம்: 1872-1950.

சதாவதானி செய்குத் தம்பிப் பாவலர் என்று சிறப்பாக அழைக்கப்பட்ட இவர் இளமைக் காலத்தில் சங்கர நாராயணப்புலவரிடம் கல்வி கற்றுத் தேர்ச்சி பெற்றார். தமது 16ஆம் வயதிலேயே செய்யுட்கள் இயற்றத் தொடங்கிப் பாவலர் என்ற பட்டம் பெற்றார். சிறந்த சொல்லாற்றல் மிக்க இவர் தமது 19ஆம் ஆண்டில் சென்னை சென்று பார்த்தசாரதி நாயுடு பதிப்பகத்தில் தங்கி தமிழ் நூல்களை ஆராய்ந்து வெளியிடும் பணியை மேற்கொண்டார். சீறாப் புராணத்தைப் பிழையறப் பதிப்பித்து வெளியிட்டார். 1907ஆம் ஆண்டில் சென்னை விக்டோரியா மண்டபத்தில் இவர் சதாவதானம் செய்து காட்டினார். அதன்பின்னர்த் தமது ஊருக்குச் சென்று பலருக்கும் பாடம் சொல்லும் தொழிலை மேற்கொண்டார்.

நூல்: ஷம்சுத்தாசீன்கோவை, கல்வத்துநாயகம், இன்னிசைப் பாமாலை, திருநாகூர்த் திருவந்தாதி, திருக்கோட்டாற்றுப் பதிற்றுப்பத்தந்தாதி, சீறாப்புராணம் உரை.

**செய்கு நயினா மரைக்காயர், (19-நூ)**

சி. பெ. கவிச்சாகரம்,

நூல்: காதிரசனா மரைக்காயர் என்பவர் இயற்றிய சீறாப்புராண நபி அவதாரப் படலம் உரையாகிய உரைகள் திலகம் என்னும் விரிவுரை நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**செய்குபீர் முகம்மது ( )**

நூல்: தீதாறுமாலை (1873).

முதலிலுள்ள ஒரு செய்யுட்குப்பின் 469 கண்ணிகள் கொண்டது தீர்த்தாறு பற்றிய சமய உண்மையை விளக்குவது; உடலறிஞானங்கள் பற்றிய உண்மையினைக் கூறுவது.

## செய்கு முகம்மது ( )

ஊர்: இலங்கையின் தென்பகுதியில் உள்ள வேர்விலே.

நூல்: தந்தை செய்கு முஸ்தபா வலியுல்லா எழுதிய மீஸான்மாலை என்னும் நூலிற்கு எழுதிய உரை.

## செய்கு முகம்மது அப்துல் சலாம் சாயபு (20-நூ)

ஊர்; கோட்டாறு.

தந்தை: மெய்ஞ்ஞான குரு ஆரிபுபில்லா செய்கு முகம்மது மூகியித்தீன் சாயபு.

இவர் தம் தந்தையாரிடமே சமய நூல்களைக் கற்றார்.

நூல்: மெய்ஞ்ஞான வினாவிடை.

இந்நூல் இசுலாமிய சமய உண்மைகள் பலவற்றை விளக்குவது.

## செய்கு முகம்மது காதிர் மீராலெப்பை (20-நூ)

வாழ்ந்த காலம்: 1866-1930.

நூல்: குருவருளானந்தக் காட்சி. நூலாசிரியர் தனித்திருந்து தவம் செய்தபோது கண்ட காட்சிகள் பற்றிய செய்திகள் செய்யுள் நடையில் இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

## செய்கு முஸ்தபா வலியுல்லா ( )

ஊர்: இலங்கையில் தென் பகுதியில் உள்ள வேர்விலே.

தந்தை: பவா ஆதம்.

நூல்: மீஸான்மாலை, மெய்ஞ்ஞானத் தூது.

இந்நூல் இஸ்லாமிய சமயத்தின் கொள்கைகளை எடுத்து உரைப்பது. இந்நூலிற்கு இவருடைய மகன் செய்கு முகம்மது உரை எழுதியுள்ளார்.

**செய்தக்காதிப் புலவர் ( )**

நூல்: அபூஷகமாமலை (1874). 333 செய்யுட்களுள்ளன. உமறுவின் பாலரது கதை; இதனை அபூஷகமாகதை என்றும் ஆசிரியர் கூறுகிறார்.

**செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தன் (சங்க காலம்)**

இ. பெ: சாத்தன்.

பெருஞ்சாத்தன் என்பது இவரது புலமையைக் கருதி இடப்பட்ட பெயரெனக் கொள்ள இடமுண்டு. யானைமீது இருந்து பறையறைந்து அரசாங்கத்தில் நடைபெறும் விழா முதலிய செய்திகளைத் தெரிவிக்கும் கருமத் தலைவர் வள்ளுவர் எனப்படுவர். எனவே இவருக்கு இப்பெயர் தொழிலால் வந்த பெயராகும்.

நூல்: குறுந். 228.

**செய்யப்ப முதலியார் த. (19-நூ)**

ஊர்: சென்னை; தந்தை: தம்பு முதலியார்.

இவர் சொர்க்கபுர ஆதீனம் இராமலிங்கத் தம்பிரானிடம் கல்வி கற்றவர். சென்னை மேரி ராணி கல்லூரியில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். வெற்றிக் கொடியோன் என்னும் பத்திரிகையினை நடத்தியுள்ளார்.

நூல்: மும்மணிமாலை.

இந்நூல் கொடை வள்ளல் மதுரைப் பிள்ளை என்பவர் மீது பாடப்பட்டது.

## செய்யப்ப முதலியா பு . ந. (        )

நூல்: தமிழ் வித்தியார்த்தி விளக்கம் (1894).

இந்நூல் பள்ளி, கல்லூரிகளில் பயிலும் மாணவர்களுக்குப் பயன்படுவது. பல இலக்கிய இலக்கணச் செய்திகளைத் தெளிவாக விளக்கும் 94 பக்கங்களுள்ள உரைநடை நூல்.

## செய்யிது அபூபக்கர் புலவர் (        )

ஊர்: கோட்டாறு

நூல்: அபாயெஸீதுல் புஸ்தாமி (1874), இபுல்சுநாமா (1874)

இவற்றுள் முன்னையது அரபு மொழியிலுள்ள 80 மசாலாவை அறிவுறுத்துவது: 100 செய்யுட்களையுடையது.

அடுத்தது 632 கண்ணிகளால் அமைந்தது; இபுல்சுவின் வரலாறு உரைப்பது; அம்மானைப் பாடல் முறையில் அமைந்துள்ளது.

## செய்யிது அபூபக்கர்ப் புலவர் ந. (        )

ஊர்: காலங்குடியிருப்பு; தந்தை: நல்ல ராவுத்தப் புலவர்.

நூல்: இசைப்பாடல்கள்.

## செய்யிது அன்பியா சாயபு (        )

ஊர்: திருநெல்வேலி மாவட்டத்தில் தென்காசி வடகரை.

நூல்: நபி சல்லல்லாகு அலைஇவசல்லம் அவர்கள் பேரில் பிள்ளைத் தமிழ் (1874).

இந்நூல் 103 செய்யுட்களையுடையது; நபிநாயகம் மேற்பாடப் பெற்ற பிள்ளைத்தமிழ்; காப்புப் பருவம் முதல் 10 பருவங்களையுடையது.

## செயியிது மீராப் புலவர் ( )

நூல்: பப்பரத்தியாரம்மானே (1874) இது 48 பக்கங்களுள்ள செய்யுள் நூல். அஜாத் அலியுல்லா அவர்கள் மணம் புரிந்த பப்பரத்தியாரம்மானே என்றும் பெயர் காண்கின்றது. அலியார் என்பவர் சென்று எமனது நாட்டில் பப்பரத்தியாரை மணம் முடித்த கதையைக் கூறுவது. அம்மானேப்பாடல் முறையில் கதை செல்கிறது. கதையின் போக்கைப் புலப்படுத்தும் தலைப்புக்கள் இடையிடையே தரப்பட்டுள்ளன.

## செய்யிது முகம்மது ( )

நூல்: கதியாமாலே (1881), சதூறுல்முசுலிமின் (1874) தர்க்கத்துல் இசுலாம் (1870).

முதலாவது நூல் 33 செய்யுட்களைக் கொண்டது. இரண்டாவது நூல் இசுலாம் சமய ஒழுகலாறு பற்றிக் கூறுவது. மூன்ருவது நூல் அரபு மொழியிலுள்ள கித்தாப்களைத் தமிழில் மொழி பெயர்த்துக்கூறுவது. இஸ்லாம் சமயத் தொடர்பான ஒழுகலாறுகள் கூறப்பெற்றுள்ளன. அல்லாகு ஆலாவின் துதி முதலாக 70 பகுதிகளையுடையது.

## செய்யிது முகம்மதுப் புலவர் செ ( )

சி. பெ: மதுரகவி.

ஊர்: மதுரை. தந்தை: செய்குமீரான். முதலில் ஐயம் பேட்டை என்னும் ஊரில் பள்ளியொன்றமைத்துச் சிறுவர்களுக்குப் பாடஞ்சொன்ஞர். பின்னர் அதிவீரராம பட்டிணம் மக்கள் விருப்பத்திற்கிணங்க அங்கு சென்ருர்.

நூல்: அலிநாமா, மகாயாரத அம்மானே, நூறு நாமா, சாந்தியாசுவமகம்.

## செய்யிது முகம்மதுப் புலவர் ந ( )

ஊர்: கோட்டாறு.

நூல்: அபாயெசிதுல்புஸ்தாமி. இந்நூல் 100 செய்யுட்களைக் கொண்டது.

**செய்யிது முகம்மது மக்தூம் (    )**

நூல்: *திருப்பதப் புஸ்தகம் (1894), இது 27 பக்கங்களிலமைந்த-தொரு செய்யுள் நூல்.*

**செய்யிது முகியித்தீன் கவிராயர் (    )**

ஊர்: *திருநெல்வேலியைச் சேர்ந்த மேலப்பாளையம். தந்தை: முகம்மதுசைன் புலவர்.*

இவர் இளமையிலேயே தக்க தமிழறிஞர்கள்பால் தமிழ் இலக்கண, இலக்கிய நூல்களைக் கற்றார். புரவலர்களை நாடித் தமது புலமையை வெளிப்படுத்திப் பரிசு பெற்று வாழ்ந்தார். ஒரு முறை இவர் திருவனந்தபுரம் மன்னருடன் நட்புக்-கொண்டு பல நாள் மன்னருடன் தங்கியிருந்தார். நாளடைவில் இவருக்கும் மன்னருக்கும் பகையுண்டாகி மன்னர் இவரைக் கழுவிலேற்றுமாறு கட்டளையிட, இவர் அங்கிருந்து வெளியேறித் திருநெல்வேலிக்கு வந்து சேர்ந்தார் என்பர்.

திருநெல்வேலி மக்கள் இவரை மதியாமல் இருந்தபோது, பச்சைமரம் ஒன்றை இரண்டாகப் பிளக்கச்செய்து இவர் தமது பெருமையை வெளிப்படுத்தினார் என்பர்.

நூல்: நவநீதபுஞ்சகம். இந்நூலில் பதிகம், றசூல்லா பேரில் முனாஜாத்து, முகியித்தீன் ஆண்டவர் பிள்ளைத்தமிழ், முகியித்தீன் ஆண்டவர் திருப்புகழ், நபிநாயகத்தின் பேரில் மாணிக்க மாலை முதலியன அடங்கியுள்ளன.

**செய்யுளியலுடையார் (    )**

இந்நூலாசிரியரின் இயற்பெயர் தெரியவில்லை. யாப்பருங்கலக் காரிகை உரையிலும் இவர் செய்யுளியலுடையார் என்றே அழைக்கப் பெறுகின்றார். இவருடைய நூலிலிருந்து மேற்கோட் சூத்திரங்கள் யாப்பருங்கல விருத்தியிலும் யாப்பருங்கலக் காரிகை உரையிலும் கொடுக்கப் பெற்றுள்ளன

**செயங்கொண்ட மாமுனி ( )**

நூல்: ஆதிநாதன் வளமடல்.

**செயராம சாமிகள் (20-ஆ)**

ஊர்: சென்னை.

இவர் சாது நாராயண தேசிகர் என்னும் பெரியாரிடம் வேதாந்த நூல்களைக் கற்றார்.

நூல்: தம்முடைய ஆசிரியர் இயற்றிய அநுபவாநந்த தீபிகை முதல் திருமுறை. இரண்டாந் திருமுறை முதலிய நூல்களுக்கு எழுதிய உரை.

**செயராமச் செட்டியார், ஏ என். ( )**

ஊர்: தொண்டை நாட்டில் இராயவேலூர். பரிபாக்கம் முனியப்ப அடிகளிடம் கல்வி கற்றார்.

நூல்: நானுநுபவரசம். இந்நூல் 354 வெண்பாக்களாலாயது.

**செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார் (சங்க காலம்)**

இ. பெ: கொற்றன்

உயர்வுப் பன்மையைக் குறிக்கும் ஆர் என்னும் விகுதி பெற்றுக் கொற்றனார் எனப் பெயர் பெற்றார். செயலூர் என்பது இவர் ஊர். இளம் பொன் என்பதனால் இவர் பொன் வாணிகர் எனவும் சாத்தன் கொற்றனார் என்பதனால் தந்தையார் சாத்தன் என்பதும் தெரிகின்றது.

**செயலூர் கொடுஞ் செங்கண்ணனார் ( )**

நூல்: திருவள்ளுவமாலையில் 42ஆவது பாடல்.

**செயவீர மார்த்தாண்ட தேவன் ( )**

நூல்: பஞ்சதந்திரக் கதைகள். இந்நூல் செய்யுள் நடையால் அமைந்தது.

## செயிற்றியனர் (        )

நூல்: செயிற்றியம். சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார், அரும்பத உரையாசிரியர், இளம்பூரணர், பேராசிரியர், யாப்பருங்கல விருத்தி உரைகாரர் ஆகிய உரையாசிரியர்கள் தங்கள் உரைகளில் இந்நூலின் சில பகுதிகளை மேற்கோள் காட்டியுள்ளனர். இவர்கள் காலத்தில் சிதைந்து காணப் பட்ட இந்நூல் இப்பொழுது மறைந்துபோன தமிழ் நூலாகி விட்டது.

## செல்லக்குட்டிப்பிள்ளை (19-நூ)

சி. பெ. வரகவி.

ஊர்: ஆதம்பாக்கம்.

இவர் தமது ஊரில் பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துப் பிள்ளைகளுக்குக் கல்வி கற்பித்தார்.

நூல்: சாங்கு சித்த சிவலிங்க நாயனர் என்பவர் இயற்றிய 'பூரணநந்தோதயம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## செல்லப்ப சாமிகள், மௌன (20-நூ)

இவர் சிதம்பரம் மௌன தேசிகர் ஆதீனத்தில் ஆறுவது பட்டத்து ஆசிரியராக எழுந்தருளியிருந்தவர்.

நூல்: திருவாரூர்ச் சிவாநந்த சாமிகள் இயற்றிய நா நாசிவவாதக் கட்டளை வியாக்கியானம் என்னும் நூலுக்குவழங்கிய சிறப்புப் பாயிரம்.

## செல்லப்பாபிள்ளை நா. (        )

ஊர்: யாழ்ப்பாணம்.

இயர் வஞ்சிமாநகர் என்னும் நூலினை எழுதிய பொன்னம் பலம் பிள்ளையின் உடன்பிறந்தவர்; திருவனந்தபுரத்தில் நீதித்துறையில் அரசாங்கப் பணிபுரிந்தார். யாழ்ப்பாண

சைவபரிபாலன சபையினை நிறுவியவருள் இவரும் ஒருவர். ஆங்கில இந்து சாதன பத்திரிகையின் முதல் ஆசிரிய ராகப் பணியாற்றியுள்ளார்.

**செல்லப்பிள்ளை ( )**

நூல்: சிதம்பரக் குறவஞ்சி.

**செல்லம் ஐயர், மோ. ஸ்ரீ** (20-நூ)

ஊர்: சேலம் மாவட்டம் மோகனூர். தந்தை: டி. சீநிவாச சர்மா.

பிறந்தநாள்: 8-3-1905.

இவர் எம். ஏ., எல். டி. பட்டம் பெற்றவர். 20 ஆண்டுகள் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றிய பிறகு 20 ஆண்டுகளாகக் கலைமகள் அலுவலகத்தில் துணைஆசிரியராகப் பணியாற்றிய வர். சென்னை வானொலியில் சமய, இலக்கியச் சொற்பொழிவு கள் பல நிகழ்த்தியுள்ளார்.

நூல்: நல்லநிலம் (1950), சமய மறுமலர்ச்சி (1956), விவேகானந் தர் தத்துவப் பிரசங்கங்கள் (1957), ரமண பகவான் (1950).

நல்ல நிலம் என்னும் நூல் ஒரு புதினமாகும். 'குட் எர்த்' (Good Earth) என்ற நூலின் தமிழாக்கமாகும்.

சமய மறுமலர்ச்சி என்னும் நூல் டாக்டர் இராதா கிருஷ்ணனின் ரிகவரி ஆப் பெயித் (Recovery of Faith) என்ற நூலின் தமிழாக்கமாகும்.

விவேகானந்தர் தத்துவப் பிரசங்கங்கள் என்னும் நூலும் தமிழாக்கம் செய்யப்பட்டதேயாகும்.

ரமணபகவான் என்னும் நூல் இரமணரின் வாழ்க்கை வரலாற்றினை எடுத்துரைப்பதாகும்.

**செல்லம்மாள்** (20-நூ)

ஊர்: திருநெல்வேலியைச் சேர்ந்த பாட்டப்பத்து.

நூல்: வேதாந்த சித்தாந்த சமரசக் கீர்த்தனை.

இந்நூலில் நூற்றுக்கு மேற்பட்ட இசைப்பாடல்கள் அடங்கியுள்ளன. அமர்நீதி வரலாறு, சோமயாசி வரலாறு திருநீலகண்டர் வரலாறு, மார்க்கண்டேயர் வரலாறு ஆகியவைகளும் இசைப்பாடல்களும் அமைந்துள்ளன.

## செல்லம்மாள் பாரதி (20-நூ)

ஊர்: திருநெல்வேலி மாவட்டம், கீழ்க்கடையம்.

வாழ்ந்த காலம்: 1889–1955.

இவர் 1897ஆம் ஆண்டில் வரகவி சி. சுப்பிரமணிய பாரதியாரை மணஞ்செய்து கொண்டார்.

நூல்: பாரதியார் சரித்திரம்.

இது சுப்பிரமணிய பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுவது

## செல்லூர்க் கோசிகன் கண்ணனார் (சங்க காலம்)

இ. பெ: கண்ணன்.

வே. பெ: செல்லூர்க் கோசங்கண்ணனார்.

ஆர் என்னும் சிறப்பு விகுதி பெற்றுக் கண்ணனார் எனப் பட்டார். செல்லூர் என்பது சோழநாட்டின் கீழைக் கடற் கரையில் உள்ளது. இவர் தந்தை கோசிகன் என்றோ, இவர் கோசிக கோத்திர அந்தணர் என்றோ கொள்ளலாம்.

நூல்: அகம் 66.

## செல்லையா (20-நூ)

ஊர்: இலங்கை யாழ்ப்பாணத்தில் உள்ள வண்ணார் பண்ணை.

தந்தை: வைத்தியலிங்கம்; தாய்-சின்னியம்மாள்.

இவர் தமிழ்க் கல்வியுடன் ஆங்கிலமும் கற்றார். ஆறுமுக நாவலர் மருகர். ந. ச. பொன்னம்பலம்பிள்ளையிடம் சில நூல்களைப் பாடம் கேட்டுள்ளார். பின்னர் எட்டு ஆண்டுகள் இந்தியாவில் சுற்றுப் பயணம் செய்து தமது கல்வி அறிவைப் பெருக்கிக் கொண்டார். 1925ஆம் ஆண்டு முதல் 1931ஆம் ஆண்டு வரை மலேயா நாட்டில் ஈப்போ என்னும் நகரில் உள்ள திருவள்ளுவர் கலாசாலையில் தலைமையாசிரியராகப் பணியாற்றினார். பின்னர் இலங்கைக்கு வந்து பலருக்கும் தமிழ் கற்பித்தார். தம் வருவாயின் பெரும் பகுதியை நல்ல நூல்களை வாங்கித் தொகுப்பதில் பெரிதும் செலவிட்டார். ஈழகேசரி, தமிழ் நேசன் முதலிய பத்திரிகைகளில் இலக்கியம், சமயம், ஆராய்ச்சிக் கட்டுரைகள் பலவற்றை இயற்றியுள்ளார். காலக்கணிதத்தில் வல்லுநராகத் திகழ்ந்த இவர் எதிர்கால நிகழ்ச்சிகளை முன்னதாகவே கூறிப் பல நன்கொடைகள் பெற்றுள்ளார்.

நூல்: நல்லைச் சண்முக மாலை, ஈப்போ தண்ணீர் மலைவடிவேலர் மும்மணிக்கோவை, வண்ணைத் திருமகள் இரட்டை மணிமாலை, வண்ணைத் திருமகள் பதிகம், அரிநாம தோத்திரம், வண்ணை வேங்கடேசப் பெருமாள் ஊஞ்சல், ஊஞ்சல் பதிகம், நல்லைச் சுப்பிரமணியர் திருவிருத்தம், வடிவேலர் ஊஞ்சல் பதிகம், வடிவேலர் திருவருட் பத்து, மதுவிலக்குப் பாட்டு, ஒழுக்க மஞ்சரி, காந்தி இயன்மொழி வாழ்த்து, மதுமானிடக்கும்மி, பழமைப் பனுவல், ஐம்பானைந்து, கதிரை நான்மணிமாலை, இரமண மகரிஷி பஞ்ச ரத்தினம், நாவலர் பதிகம், ஆத்மானுபவ தீபிகை, திருமால் அவதார நாமாவளி, பாவலர் பாடல், ஆராய்ச்சிக் கட்டுரைகள்.

**செல்லையா ந.** (20-நூ)

ஊர்: ஈழநாட்டில் யாழ்ப்பாணம்.

நூல்: செய்கு முகம்மது அப்துல் சாயபு என்பவர் இயற்றிய மெஞ்ஞான வினவிடை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## செல்லையா மு ( )

ஊர்: யாழ்ப்பாணத்தில் பருத்தித் துறைக்கு அடுத்த அல்வாய்.

இவர் தமிழாசிரியராகப் பணியாற்றினூர். பழைய மரபினைப் பின்பற்றிக் கவிதைகள் புனைவதில் வல்லவர். ஈழ கேசரி என்னும் வார இதழில் அது தொடங்கப் பெற்ற காலத்திலிருந்தே அனுசூயா என்னும் புனை பெயரில் நகைச் சுவை கலந்த கட்டுரைகள் எழுதி வந்தார்.

நூல்: புதிய வண்டு விடு தூது, வளர்பிறை, குமாரவேள் பதிகம்.

இலங்கை வானொலித் துறையினர் நடத்திய கவிதைப் போட்டியில் புதிய வண்டு விடு தூது என்னும் நூல் முதற் பரிசினைப் பெற்றது.

## செல்லையா ஜே வி (20-நூ)

ஊர்; யாழ்ப்பாணத்தைச் சார்ந்த வட்டுக்கோட்டை.

இவர் யாழ்ப்பாணக் கல்லூரியில் ஆங்கில இலக்கிய விரிவுரையாளராகப் பணியாற்றினூர். 1921இல் வாலிபர் மாநாட்டு முதல் ஆண்டுத் தலைவராகத் தெரிந்து எடுக்கப் பட்டார்.

நூல்: பத்துப்பாட்டு (ஆங்கில மொழி பெயர்ப்பு)

## செல்லையா பிள்ளை, சி. ( )

ஊர்: யாழ்ப்பாணத்தைச் சார்ந்த அச்சுவேலி. தந்தை: சின்னத்தம்பி.

இவர் யாழ்ப்பாணத்திலுள்ள கந்தவனக்கோயிலின் ஆதீனகர்த்தராக இருந்து கோயிற் பணிகள் செம்மையுற நடைபெறச் செய்தார். பெரியபுராணம், கந்தபுராணங்களுக்குக் கோயில்களில் விரிவுரையாற்றிச் சொற்பொழிவு செய்வார்.

நூல்: துகளறுபோதம், பெரியபுராணத்தில் சில செய்யுள்கள் ஆகியவற்றிற்கு எழுதிய உரை.

## செல்லையாச் செட்டியார் வை. (20-நூ)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் ஆலங்காடு; சைவ வேளாளர்.

இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வில் வெற்றி பெற்றார். செந்தமிழ்ப் பானு என்னும் திங்கள் வெளியீட்டைச் சிறிது காலம் நடாத்தியுள்ளார்.

நூல்: மிளகாய்ச் சுவாமிபுராணம், மாதவச்சிவஞான சுவாமிகள் பிள்ளைத்தமிழ்.

## செல்வக்கண்ணுக் கவிராயர் (    )

ஊர்: தென்னூர்.

நூல்: றசூலுல்லா பேரில் புகழ்ப்பாமாலை (1873).

இது 31 பக்கங்களிலமைந்த செய்யுள் நூல். பெரும் பான்மை கீர்த்தனைக் கவிகளும் சிறுபான்மை வெண்பா கொச்சகம், கலித்துறை, விருத்தம் முதலியனவும் இடம் பெற்றுள்ளன.

## செல்வக்கணபதி செட்டியார் (    )

ஊர்: பூவாளூர்.

நூல்: சிதம்பரச் செட்டியார் அ. என்பவர் இயற்றிய ஆனைமுகக் கடவுள் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## செல்வக்குமாருக் கவுண்டர் பூ. ம (20-நூ)

நூல்: சுந்தராச்சாரியார் கி. என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## செல்வக்கேசவராய முதலியார் தி (20-நூ)

ஊர்: சென்னைக்கு அருகிலுள்ள திருமணம். தந்தை: கேசவ சுப்பராய முதலியார். தாய்: பாக்கியம் அம்மையார்.

வாழ்ந்த காலம் 1864-1921

இவர் பச்சையப்பன் கல்லூரியில் பயின்று பி. ஏ. பட்டத்தைப் பெற்றார். தமிழில் எம். ஏ. பட்டத்தை முதன் முதலாகப் பெற்றவர். இவரே. இவர் வேதவல்லி என்னும் பெண்ணைத் திருமணஞ் செய்து கொண்டார். இவர் தம் மக்கட்குப் பரிமேலழகர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் என்று பெயர்கள் இட்டார். தமிழ்த் தொண்டு செய்ய வேண்டுமென்று இவர் உள்ளம் விரும்பியதால் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணி புரிந்தார். இவர் ஊதியக்குறைவைப் பொருட்படுத்தாமல் தமிழ்ப்பணி புரிதலையே தம் கடமையாகக் கொண்டார். ஒவ்வொருவரும் பல மொழிகளைக் கற்றுப் பன்மொழிப் புலவர்களாக விளங்க வேண்டுமென்று தம் மாணவர்களுக்கு அறிவுறுத்தினார். பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை முதலியோர் இவரிடம் கல்வி கற்றவர்களிற் சிலர் ஆவர் இவர் பாடஞ் சொல்லுதலிலும் சொற்பொழிவு-ஆற்றுவதிலும் வல்லவர். இவர் உரைநடை நூல்கள் பல எழுதி உரைநடை வளர்ச்சிக்குத் துணைபுரிந்தார். இவர் தமிழ் ஆராய்ச்சியிலும் பேருக்கம் காட்டினார். தமிழ் மொழியின் முதன்மையையும் பெருமையையும் உலகிற்கு நன்கு எடுத்துக் காட்டினார். இவருடைய தமிழ்நடை பொருட் செறிவுடையது; பழமொழிகள் நிறைந்தது.

நூல்; கம்பநாடர் (1902), தமிழ் (1904). தமிழ் வியாசங்கள், வியாசமஞ்சரி, அக்பர், கண்ணகி கதை, அபிநவக்கதைகள், திருவள்ளுவர் (1904) ராபின்சன் குருசோ, மாதவ கோவிந்த ரானடே, பஞ்சலட்சணம். பதிப்பித்த நூல்கள்; ஆசாரக்கோவை, பழமொழி, அறநெறிச்சாரம், முதுமொழிக்காஞ்சி.

## செல்வ தேவராசப் பிள்ளை (19-நூ)

ஊர்: சென்னை.

நூல்: செய்யப்ப முதலியார், த. என்பவர் மதுரைப் பிள்ளை என்பவர் மீது இயற்றிய 'மும்மணிமாலை' என்னும் நூலினைப்பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## செல்வநாத முதலியார் (20-நூ)

நூல்: ஐயாத்துரை பாகவதர் மு என்பவர் இயற்றிய 'சத்தியவேத

சங்கீர்த்தனம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**செல்வப் பெருமாள் கவிராய பண்டிதர், கா.** (20-நூ)

ஊர்: சென்னை. இவர் காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியார் கல்விச் சாலையில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: காஞ்சிபுரம் சபாபதி முதலியார் அச்சிட்டு வெளியிட்ட பெரியபுராணத்தைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**செல்வராசுச் செட்டியார்** (20-நூ)

நூல்: சேசுநாதர் அம்மானை.

**செல்வராசு ரெட்டியார்** (19-நூ)

நூல்: ஆரோக்கியநாயகர் இயற்றிய தேம்பாவணிக் கீர்த்தனை நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**செவ்வந்திநாத தேசிகர்** (20-நூ)

ஊர்: யாழ்ப்பாணத்தில் கரணவாய்.

தந்தை: திருஞானசம்பந்த தேசிகர்;

தாய். சிவபாக்கிய அம்மையார்.

நமச்சிவாய தேசிகர், மகாவித்துவான் சி. கணேச ஐயர் ஆகியோரிடம் தமிழ் கற்றவர். வேதவிசாரதத் வி. சிதம்பர சாத்திரிகளிடம் வடமொழி கற்றவர்.

நூல்: மாவை கந்தசாமி பேரில் மும்மணி மாலை, நல்லூர்க் கந்தசாமி பேரில் கோவை, தமிழ் மொழியாராய்ச்சி.

சின்னத்தம்பிப் புலவர் இயற்றிய கரவை வேலன் கோவையினைச் செப்பமிட்டுக் கொடுத்தார். உடுப்பிட்டி சிவசம்புப் புலவரின் பிரபந்தங்களைத் தொகுத்து அச்சேற்றினர்.

## செவ்வைச் சூடுவார் (16-நூ)

வே. பெ: மாதவபண்டிதர்.

ஊர்: இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள வேம்பற்றூர்; அந்தணர்; வைணவர்.

இவர் வடமொழி தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் வல்லவர்.

நூல்: வடமொழியிலிருந்த பாகவத புராணத்தின் தமிழாக்கம். இந்நூல் விண்டு பாகவதம் என்றும் 'பாகவத புராணம்' என்றும் அழைக்கப்பெறும். இந்நூல் 12 கந்தங்களையும் 155 அத்தியாயங்களையும் 4970 விருத்தங்களையும் கொண்டது.

அச்சிடப்பெற்ற இப்பாகவதத்தில் இதன் ஆசிரியர் ஆரியப்பப் புலவர் என்று காணப்பெறுகின்றது. செவ்வைச் சூடுவாரே இந்நூலின் ஆசிரியர் என்பது இந்நூலின் பாயிரத்தால் தெரியவரும்.

## செவத்த மரைக்காயர் ( )

தந்தை: தம்பி சாயபு மரக்காயர்.

இவர் நாகூர் தர்க்காவின் புலவர் ஆவர்.

நூல்: மக்கா கோவை.

இந்நூல் நபிகள் நாயகத்தின் பெயரில் இயற்றப் பெற்றது. இந்நூலினைத் தவிர வேறுகோவைகளும், கலம்பகம், பிள்ளைத்தமிழ், அந்தாதி, மாலை முதலிய பிரபந்தங்களும் இயற்றியுள்ளார்.

## செவத்த மரைக்காயர் மு (19-நூ)

நூல்: செய்யப்ப முதலியார் த. என்பவர் மதுரைப்பிள்ளை மீது இயற்றிய மும்மணிமாலை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சென்னகேசவ உபாத்தியாயர்** (19-நூ)

நூல்: இராமாநுசக் கவிராயர் இயற்றிய நன்னூல் விருத்தியுரைக்கு வழங்கிய சாற்றுக்கவி.

**சென்னகேசவலு நாயுடு ஆ. மே.** (20-நூ)

ஊர்: சென்னை சிந்தாதிரிப்பேட்டை.

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பணியாற்றிய பூ. கிருட்டிணசாமி முதலியாரிடம் தமிழ் நூல்களைக் கற்றார்.

நூல்: அநுமான் அந்தாதி.

**சென்னபசவையர்** (19-நூ)

ஊர்: வேலூர்.

நூல்: முத்துசாமிப் புலவர் என்பவர் இயற்றிய வீரட்டேசுரர் பாமாலை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சென்ன மல்லையர்** (18-நூ)

வாழ்விடம்: சிதம்பரம்; வீரசைவர்.

நூல்: சிவ சிவ வெண்பா. இந்நூல் 133 வெண்பாக்களாலாகியது; திருக்குறளிலுள்ள அதிகாரங்கள் 133லும் அதிகாரத்திற்கு ஒன்றாக 133 குறள்களையும் முன்னிரண்டடிகளிற் கூறி, பின்னிரண்டடிகளில் ஒவ்வொரு கதையை எடுத்துக்காட்டாகச் சுருங்கக் கூறி விளங்க வைத்ததாகும். சிவசிவ என்னும் முன்னிலை ஒவ்வொரு வெண்பாவிலும் அமைத்துக் கூறப்பட்டுள்ளது.

**சேக்கிழார்** (12-நூ)

வே. பெ: அருண்மொழித் தேவர்.

ஊர்: தொண்டை நாட்டிலுள்ள குன்றத்தூர், வேளாளர்.

அருண்மொழித் தேவர் என்ற இவர், தம்முடைய பெருமை யினால் தாம் பிறந்த மரபை விளக்கியமையால் சேக்கிழார் என்ற குடிப் பெயரே இவருடைய பெயராக நிலைத்தது. இவர் முறையாகக் கல்வி பயின்று கல்வி கேள்விகளிலும் ஒழுக்கத்திலும் ஆட்சித்திறத்திலும் சிறந்து விளங்கினார்.

சோழநாட்டை ஆண்ட அனபாய சோழன் இவரைத் தனது முதலமைச்சராக ஆக்கினான்.

இவருடைய திறமை பற்றியும் இவர் தொண்டை நாட்டிலிருந்து வந்தமை பற்றியும் இவருக்கு உத்தமசோழப் பல்லவன் என்ற சிறப்புப் பட்டத்தைத் தந்தான். அனபாய சோழன், சிவ புண்ணியம் பயக்கத்தக்க சிறப்புடைய அடியார் வரலாறுகளைப் பத்திச் சுவை ததும்பப் பெருங்காப்பியமாகப் பாடித்தர வேண்டும் என வேண்டிக் கொண்டதற்கிணங்கித் திருதொண்டர் புராணம் பாடினார். இந்நூல் உலகெலாம் என இறைவனால் அடி எடுத்துக் கொடுக்கப் பெற்ற சிறப்பினை உடையது. இந்நூல் தில்லையில் அரங்கேற்றப் பெற்ற-பொழுது சோழன் அவருக்குத் தொண்டர் சீர்பரவுவார் என்ற பட்டமும் அளித்தான். இது திருமுறைத் தொகுப்பினுள் பன்னிரண்டாவதாக அமைந்துள்ளது.

**நூல்.** திருத்தொண்டர் புராணம்.

இந்நூல் இரண்டு காண்டங்களையும் பதின்மூன்று சருக்கங்களையும் 1253 பாடல்களையும் உடையது. இது சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையினையும் நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி யையும் துணையாகக் கொண்டு செய்யப் பெற்ற நூலாகும். இதனுள் நாயனார் அறுபத்து மூவர் வரலாறு கூறப்படுகின்றது, சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகை தொகையாகவும் நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி வகை யாகவும், இந்நூல் அவற்றை விரித்துப் பாடியதாதலின் விரியாகவும் கொள்ளப்படும். திருத்தொண்டத் தொகையில் பதினொரு பாடல்களில் சொல்லப்பட்ட வரலாறுகளை அந்த வரிசையிலேயே 11 சருக்கங்களாக அமைத்துக் கொண்டார். நூல் முகப்பில் திருமலைச சருக்கம் என்ற பகுதியை அமைத்தும்

நூல் இறுதியில் வெள்ளானைச் சருக்கம் என்ற பகுதியைச் சேர்த்தும் 13 சருக்கங்களாக்கினார்.

இது சிறந்த வரலாற்றிலக்கியம் என்று சொல்லத்தகும் சிறப்பினையுடையது. எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னுள்ள நாட்டின் நிலைமையை இந்நூல் நம் கண் முன்னே கொண்டு வந்து காட்டுகிறது. பல வேந்தர் பரம்பரைகள், அவர்கள் பண்புகள், போர்கள், பத்திநிலை முதலியவற்றை விளக்கமாக அறிவிக்கின்றது. பிற சமயங்களையும் வரலாற்றுக் கண்ணோடு பார்க்க உதவி செய்கின்றது.

சமயாசிரியர்களுடைய தல யாத்திரையைப் பற்றிக் குறிப்பிடும் போது தலங்கள் அமைந்துள்ள முறை, இடைப் பட்ட தூரம், அங்குள்ள தல அமைப்பு, நாட்டு இயல்பு, சென்றவழி முதலியவற்றைச் சேக்கிழார் விளக்கிப் பாடுகிறார். சேக்கிழார் தலங்களைக் குறிப்பிடும் போது அவ்வவற்றின் சிறப்பான செய்திகளையும் தொகுத்துச் சொல்கின்றார். இது தமிழ் நாட்டின் நான்கு பிரிவுகளுக்கும் பல்லவ சோழ பாண்டிய சேர நாடுகளுக்கும்-பொது நூலாக விளங்குகிறது. அப்பர் சுவாமிகள் வரலாறு பல்லவர் ஆட்சியில் தொடங்கிச் சோழ நாட்டில் புகலூரில் முடிவு பெறுகின்றது. திருஞானசம்பந்தருடைய தோற்றமும மறைவும் சோழநாட்டில்; ஆனால் அவருடைய பெரிய வெற்றி பாண்டி நாட்டுக்குச் சென்று சமணத்தை அகற்றிப் பாண்டியனைச் சைவனாக்கிச் சைவத்தை நிலை நிறுத்தியதாகும். மேலும் அவர் தொண்டை நாட்டு மயிலைவரை சென்று இறையருளால் அற்புதங்கள் பல நிகழ்த்தியிருக்கிறார். சேரமான் பெருமாள் சேர நாட்டில் தோன்றிச் சோழநாட்டுத் திருவாரூரிலிருந்த சுந்தரரோடு நட்புக் கொண்டார் சோழ நாட்டுச் சுந்தரர் சேரநாட்டில் முத்திபெற்றார். கயிலையில் இருந்த திருமூலர் திருவாடுதுறைக்கு வந்தார். அப்பர் கயிலைக்குச் செல்ல முயன்று திருவையாற்றில் கயிலாயக் காட்சியைக் கண்டார். சுந்தரரும் சேரரும் கயிலாயத்திற்குச் சென்று பாடல பாடினார்கள். காரைக்காலம்மையாரும் கயிலாயத்திற்குச் சென்றார். ஆதலின் பெரிய புராணத்தைத்

தமிழ் நாட்டுக்கு மட்டுமன்றி இந்தியா முழுமைக்கும் உரிய பொதுக் காப்பியம் என்று சொல்லலாம்.

**சேகனுப்புலவர்** (19-நூ)

வே. பெ: செய் அப்துல் காதர் நயினார் லெப்பை, சேகனு லெப்பை.

ஊர்: காயல்பட்டினம்.

தந்தை: சுப்பு முகம்மது லெப்பை.

*கீழக்கரையில்* இருந்த தைக்கா சாயபு என்பவரிடம் கல்வி கற்றார். குணங்குடி மஸ்தான் சாயபு இவருடைய ஒருசாலை மாணாக்கர் ஆவார். இவர் தமிழ், வடமொழி, அராபி, பார்ஸி மொழிகளைக் கற்றவர். புலமையாளரான இவர் மரபு வழியான இரத்தின வணிகத்தையும் தொடர்ந்து செய்தார். வாக்குப் பலிதம் உள்ளவராகக் கருதப்பட்டார். சோடசாவதானியாகத் திகழ்ந்த இவர் திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர், அட்டாவதானம் சபாபதி முதலியார் முதலிய புலவர்களுடன் நட்புக் கொண்டிருந்தார்.

நூல்: சாகுல்ஹமீது ஆண்டகை புராணம், குத்பு நாயகம், திருமணிமாலை, கோத்திரமாலை, சொர்க்கநீதி, நாகூர் அந்தாதி, மக்காக் கலம்பகம், புத்ஹூஷ்ஷாம், திருக்காரணப்புராணம்.

உமறுப்புலவர் எழுதிய *சீறுப்புராணத்தை* செப்பஞ் செய்து திருந்திய பதிப்பாக வெளியிட்டுள்ளார்.

**சேகாதி நயினுப்புலவர்** ( )

நூல்: *திருமணக்காட்சி.*

இந்நூல் 978 செய்யுட்களைக் கொண்டது. முகம்மது நபி சல்லல்லாகு அலைகிவசல்லமவர்கள், சுவர்க்கலோகத்தில் வெள்ளை யானை மேற் பவனி வந்து ஆசியா, மறியம் என்னும் இரண்டு கன்னிகைப் பெண்களையும் திருமணம் புரிந்த செய்தியைக் கூறும்; 31 படலங்களையுடையது.

**சேகுத்தம்பிப் புலவர் ( )**

ஊர்: யாழ்ப்பாணம்.

நூல்: *சீரு* நாடகமென்று வழங்காநின்ற காரணமாலை (1878).

இந்நூல் 268 செய்யுட்களைக் கொண்டுள்ளதாய் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்லமவர்களுடைய இயற்கையும் செயற்கையுமாகிய *சீருச்சரிதத்தை* இசைத் தமிழால் தருவது. *சீருச்சரிதத்தை* இசைத்தமிழால் பாடிய காரணமாலை என்றும் நூலினுள் பெயர் காண்கிறது. காரணமாலையின் பொருள் அட்டவணைப் பாடல் அகராதி முதலியன நூல் முகப்பில் அமைந்துள்ளன.

**சேகுமதாறு சாயபு புலவர் (19-நூ)**

ஊர்: இலங்கையில் மட்டக்களப்புக்குத் தென்பாலுள்ள அக்கரைப் பற்றைச் சேர்ந்த கருங்கொட்டித் தீவு.

தந்தை: மீரான்குட்டி.

இவர் வாழ்க்கையின் பிற்பகுதியில் கண் பார்வையினை இழந்தார். நாகூர் ஆண்டவரை வணங்கி வேண்ட அவரருளால் பார்வையைத் திரும்பப் பெற்றார்; கவிபாடும் ஆற்றலும் கிடைத்தது.

நூல்: பல பாமாலை, நாகூர் சாகுல்ஹமீது ஆண்டகை பேரில் ஒருபா வொரு பஃது, புசற்காவியம், பிள்ளைக் காவியம்.

**சேகு முகம்மது ( )**

ஊர்: திருநறையூர்.

நூல்: இரத்தினவிலாசம், நசீகத்துவிலாசம் (1884), கியாயத்துல் அறும் (1888), துற்றத்துல் அறும் (1889), ஜவாஹிருல் இசுலாம் (1889). இவற்றுள் முதலாவது அரபு மொழியில் இருந்து மொழிபெயர்க்கப்பட்டது; நபியின் உரை, இமான் உரை முதலியன அடங்கியுள்ளன; 152 பக்கங்களுடன் கூடிய உரைநடை நூல்கள்.

அடுத்தது 64 பக்கங்களைக் கொண்ட உரைநடை நூல்; இசுலாம் பற்றிய சில செய்திகளைக் கூறுவது.

மூன்ருவது 16 பக்கங்களிலமைந்த உரைநடை நூல். நான்காவது 16 பக்கங்களுடன் கூடிய உரைநடை நூல்.

**சேக சபைக் குருக்கள் (        )**

நூல்: தேவஸ்தோத்திரம் கீர்த்தனைகள் (1893). இது 93 செய்யுட்களையுடையது. 100 கீர்த்தனங்கள் உள. கிறித்துவர் கோயில்களிலும் வீடுகளிலும் பாடுவதற்குப் பயன்படுபவை.

**சேதியப்ப நாயகர் (        )**

ஊர்: சேலம். ஈசூர் சச்சிதாநந்த அடிகளிடம் வேதாந்த நூல்களைக் கற்றுப் புலமை பெற்றவர்.

நூல்: அறிவறியாமை ஆதார விளக்கம் என்னும் நூலுக்கு வழகிய சிறப்புப் பாயிரம்.

**சேதிராயர் (11-நூ)**

இவருடைய பெயரைக் கொண்டு இவர் திருவாரூர் பக்கத்திலுள்ள மெய்ப்பொருள் நாயனரது சேதிநாட்டு மன்னர் மரபினர் என்ருே, சேதிநாட்டில் உள்ளவர்களில் சிறந்தவர் என்ருே எண்ணப்படுகிறது.

நூல்: தில்லைக்கூத்தப்பிரான்மீது பதிகம் ஒன்று.

இப் பதிகம் ஒன்பதாம் திருமுறையில் சேர்ககப்பட்டுள்ளது

**சேதுப்பிள்ளை ரா. பி. (20-நூ)**

சி. பெ: சொல்லின் செல்வர்.

ஊர்: திருநெல்வேலி மாவட்டம், இராசவல்லிபுரம்.

தந்தை: பிறவிப்பெருமாள்பிள்ளை, தாய்; சொர்ணத்தம்மை.

வாழ்ந்த காலம்: 2-3-1896--24-1-1961

சொல்லின் செல்வர் என்ற சிறப்புப் பெயரினைப் பெற்ற தமிழறிஞர் சேதுப்பிள்ளை பாளையங்கோட்டை அர்ச் சேவியர் உயர்நிலைப்பள்ளியில் கல்வி பெற்ற பிறகு, திருநெல்வேலியிற் பயின்று அதன் பின்னர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பி ஏ. வகுப்பில் தேர்வு பெற்றார். ஆங்கிலப் பாடத்துக்குரிய பரிசும் இவருக்குக் கிடைத்தது. பின்னர் பி. எல். பட்டம் பெற்றார். 1916ஆம் ஆண்டில் தமிழ்ச் சங்கப் பேச்சுப் போட்டியில் முதற்பரிசு பெற்றார். அது சமயம் தமிழறிஞர் செல்வகேசவராய முதலியாரின் நட்பு இவருக்குக கிடைத்தது. தமது 23ஆம் வயதில் சானகி அம்மையார் என்பவரை மணந்தார். முத்தைய முதலியார் என்பவரிடம் வழக்கறிஞராகப் பயிற்சி பெற்றார். எட்டாண்டுகள் வழக்கறிஞராகத் தொழில் நடத்தினார். நெல்லைநகர மன்றத்தின் துணைத்தலைவராகவும் மாவட்டக் கல்விக் கழக உறுப்பினராகவும் சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக்குழு உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டு பொதுப் பணிகள் பல செய்தார். பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆறாண்டுகள் விரிவுரையாளராகத் தொண்டு செய்தார். 1935ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேராசிரியராகப் பதவி ஏற்றார். பேச்சாற்றலில் சிறந்து விளங்கிய இவரது நாவன்மையைப் பாராட்டித் தருமபுரம் ஆதீனத்தார் 'சொல்லின் செல்வர்' என்ற பட்டத்தை வழங்கினர். சென்னைப் பல்கலைக் கழகம் இவருக்கு 'டாக்டர்' பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

பல்கலைக் கழகப் பேராசிரியராக விளங்கிய இவர் சென்னை ஒய். எம். சி. ஏ. கட்டிடத்தில் மூன்றாண்டுகள் கம்ப இராமாயண வகுப்புகள் நடத்தினார். கோகலே மன்றத்தில தொடர்ந்து சிலப்பதிகார வகுப்புகளும் நடத்தினார். முன்னேற்றக் கழகத்தின் ஆதரவில் திருக்குறள் வகுப்புகள் நடத்தினார். யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற ஆரிய திராவிட சங்க ஆண்டு விழா, கொழும்புத் தமிழ்ச் சங்க விழா ஆகியவற்றில் தலைமை தாங்கிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். திருவனந்தபுரம், காசி, நாகபுரி முதலிய இடங்களில் நடைபெற்ற அகில இந்திய கலை மாநாடுகளில் சிறப்புச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்; சென்னையில் நடைபெற்ற புறநானூற்று மாநாடு, கம்பர் மாநாடு,

திருவள்ளுவர் மாநாடு, தமிழாசிரியர் மாநாடு முதலியவை கட்குத் தலைமை தாங்கி அம்மாநாடுகளைச் சிறப்பாக நடத்தினார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், சென்னைப் பல்கலைக் கழகத்திலும் தம் அருமைத் தாயார் சொர்ணத்தம்மாள் பெயரால் ஆண்டு தோறும் ஆய்வுச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவதற்கு ஒவ்வொரு கழகத்துக்கும் வைப்பு நிதியாக ரூ. 25,000 வழங்கியுள்ளார்.

இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் பல நூல்கள் எழுதியுள்ளார். இந்நூல்களுள் தமிழின்பம் என்ற நூல் 1957இல் சாகித்ய அகாதமி பரிசினைப் பெற்றுள்ளது. ஊரும் பேரும் என்ற நூல் தமிழக ஊர்ப்பெயர்களைக் குறித்த விரிவான ஆராய்ச்சி நூல்.

நூல்: திருவள்ளுவர் நூல் நயம், சிலப்பதிகார விளக்கம், சிலப்பதிகாரக் கதை, தமிழ் நாட்டு நவமணிகள், தமிழர் வீரம், கந்தபுராணத் திரட்டு, ஆனந்தக்குமரன், தமிழின்பம், ஊரும் பேரும், வழிவழி வள்ளுவர், வள்ளுவர் உள்ளம், வீரமாநகர், ஆற்றங்கரையினிலே, வேலும் வில்லும், வீரமா முனிவர், கால்டுவெல் ஐயர் சரித்திரம், பன்னிரு கட்டுரைகள், திருக்காவலூர்க் கோவில் கிறித்துவத் தமிழ்த் தொண்டர்.

ஆங்கில நூல்: Words and their significance, Elws Commentary on Kural.

## சேதுராம பாரதியார் ஆ (20-நூ)

ஊர்: திருச்சி மாவட்டம் லால்குடி.

இவர் சிவாநந்தசாகர யோகீசுரர் என்பவரிடம் தமிழ் நூல்களைக் கற்றார். சென்னை திருச்சி ஆகிய நகரங்களில் தமிழாசிரியராகப் பணியாற்றி உள்ளார்.

நூல்: பழநியாண்டவர் பதிகம். சங்கரலிங்கம் பிள்ளை என்பவர் இயற்றிய 'திருவல்லிக்கேணி கலம்பகம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சேதுராமையர், நா. (20-நூ)

ஊர்: தஞ்சை மாவட்டம், விஷ்ணம்பேட்டை.

தந்தை: நாராயண ஐயர்.

இவர் கும்பகோணம் நேட்டிவ் உயர்நிலைப்பள்ளித் தமிழ்ப் புலவர் ம. வீ. இராமாநுசாச்சாரியார் என்பவரிடம் கல்வி கற்றார்.

நூல்: முத்து ஐயர் என்பவரியற்றிய பகவத் கீதை வெண்பா என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சேந்தங் கண்ணனார் (சங்க காலம்)

இ. பெ: கண்ணனார்.

வே. பெ: சேந்தன் கண்ணனார்.

ஆர் என்னும் சிறப்பு விகுதி பெற்றுக் கண்ணனார் எனப் பட்டார். சேந்தன் என்பவர் இவரது தந்தையாராக இருக்கலாம். சேந்தன் என்னும் பெயரின் அன் விகுதிகெட்டு அம்முச்சாரியை புணர்ந்து சேந்தங்கண்ணனார் என்றாயிற்று.

நூல்: அகம் 350, நற்றிணை 54.

## சேந்தங் கீரனார் (சங்க காலம்)

இ. பெ: கீரன்.

இவரைச் சேந்தன்மகனாகிய கீரன் என்றோ, சேந்தனாகிய கீரன் என்றோ கொள்ளலாம். ஆர் என்பது சிறப்புக்குரிய அடைமொழியாகும். அல்லங் கீரனார், புல்லங் கீரனார், மூலங் கீரனார் என்பன போல கீரனார் என்ற பெயர்கள் தந்தையார் பெயர்கள் தம் பெயருக்கு அடைமொழியாக அமையப் பெற்றமை போலவே சேந்தங் கீரனாரும் சேந்தன் மகனாகிய கீரனார் என்று பொருள் கொள்வதே சிறப்பாகும்.

நூல். குறுந். 311.

## சேந்தம்பூதனுர் (சங்க காலம்)

வே. பெ: சேகம்பூதனுர், மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதனுர், சேந்தம்பூதன், சேந்தன்பூதனுர், மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதன்

இவர் மதுரைக் கடைச்சங்கத்து ஏடெழுதுவோரா யிருந்தவர்.

நூல்: அகம் 84, 207. குறுந் 90, 226, 247. நற்றிணை 69, 261.

## சேந்தன் (8-நூ)

ஊர்: அம்பர்.

இவன் காவிரி நாட்டு அம்பர் என்னும் ஊரில் வளர்ந்து அருவந்தை என்னும் ஊரில் ஆட்சி புரிந்தவன்; வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லவன்: கவிபாடும் ஆற்றல் வாய்ந்தவன். இறைவன் இடப்பாகததமர்ந்த அம்மையின் மீது அந்தாதி பாடியவனென்றும், இராமன்வில், அருச்சுனன் காண்டீபம், தாருகனைக் கொன்ற காளியின் மூவிலே வேல் ஆகிய இவற்றைப் புகழ்ந்து கவிபுனைந்தவன் என்றும் சிறப்பிக்கப்படுகின்ருன்.

இவன் திவாகரரைக் கொண்டு திவாகாரம் என்னும் நிகண்டினைச் செய்வித்தான்.

நூல்: தேவியின் மீது அந்தாதி மாலே.

இந்நூல் இப்போது கிடைக்கப்பெறவில்லே; மறைந்து போன நூல்களுள் ஒன்ருக இருக்கிறது.

## சேந்தனுர் (10-நூ)

ஊர்: காவிரிப்பூம்பட்டினம்.

இவர் நாள்தோறும் விறகு வெட்டி விற்று அதிற்கிடைப் பதைக் கொண்டு பிற தானியங்களைப் பெற்றுக் கூழ் சமைத்துக் களியாக்கி உண்டுவந்தார். நாடோறும் சிவனடி

யாரை உண்பிப்பதை விரதமாகக் கொண்டிருந்தார். இவருடைய அன்பின் திறத்தை உலகத்தாருக்கு அறிவுறுத்த எண்ணிய நடராசப் பெருமான் சிவனடியார் வேடந்தாங்கி இவர் இல்லத்திற்குச் சென்ருர். அப்பொழுது சேந்தனர் அடியவரை உபசரித்துக் களியமுது ஊட்டினர். சிவனடியார் களியை உண்டு, எஞ்சிய பகுதியைக் கந்தை ஒன்றில் முடிந்து எடுத்துச் சென்ருர்.

சோழநாட்டில் ஆட்சிபுரிந்த மன்னன், தான் நாள்தோறும் செய்து வந்த சிவபூசையில் பூசையினைச் சிவபெருமான் ஏற்றதற்கு அறிகுறியாகச் சிலம்பொலி கேட்பதை நியமமாகக் கொண்டிருந்தான். ஒருநாள் இரவு முழுதும் காத்திருந்தும் சிலம்பொலி கேட்கவில்லை. வருத்தத்தோடு துயின்ற மன்னனது கனவில் சிவபெருமான் தோன்றி, அரசே! சேந்தனது களியமுதை யாம் உண்ணச் சென்றமையால் உனது வழிபாட்டிற்கு வரவில்லை என்று கூறினர். மறுநாள் நடராசப் பெருமானை வழிபடச் சென்றபோது அங்கே அவர் உண்ட களியமுது சிந்திக் கிடக்க, அனைவரும் கண்டு வியப்புற்றுச் சேந்தனரைக காணப் பெருவிருப்புற்றனர்; ஆனல் தெரியவில்லை.

மார்கழித் திருவாதிரை நாளன்று தேர் நிலையைவிட்டுக் கிளம்பவில்லை. அரசனும் பரிவாரங்களும் முயன்றும் பயனில்லை. அப்போது ஓர் அசரீரி, சேந்தா! நீ பல்லாண்டு பாடினல் தேர் ஓடும் என்றெழுந்தது. அப்பொழுது சேந்தனர் 'மன்னுக தில்லை வளர்க நம் பக்தர்கள்' என்று சொல்லித் திருபல்லாண்டு பாடினர். தேர் அசைந்து வீதியெல்லாம் ஓடி நிலைக்கு வந்தது. அரசனும் மக்களும் சேந்தனருடைய அன்பின் சிறப்பை எண்ணிப் போற்றினர்கள்.

நூல்: திருவிசைப்பா, திருப்பல்லாண்டு.

திருவிசைப்பா: இது திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக் கழி ஆகிய தலங்களில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் மீது பாடப்பெற்றது.

திருப்பல்லாண்டு: இது தில்லைக்கென்றே பாடப் பெற்றது; பாடல் தொகை 13; மன்னுக 'தில்லை' என்ற தல வாழ்த்தோடு தொடங்குகிறது.

**சேந்தலாலா (         )**

**ஊர்:** சேலம்.

நூல்: பாஷிய ஒக்கபிலேரி (1882), இது 91 பக்கங்களைக் கொண்டது. தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், இந்துஸ்தானி தமிழ் லிபியில் தரப் பெற்றுள்ளன. தமிழிலுள்ள ஒரு சொல் ஏனைய மூன்று மொழிகளிலும் எவ்வாறு வழங்குகின்றது என்பதைக் காட்டுகின்றது பழம், பூ, தானியம் முதலியவற்றின் பெயர்கள் தொகுக்கப்பட்டுள்ளன. தமிழ் மொழி வாயிலாகத் தெலுங்கு, ஆங்கிலம், இந்துஸ்தானி கற்பவர்களுக்கு மிகவும் பயன்படும். அன்றாடம பயன்படுத்துவதற்குரிய சொற்கள் இதில் இடம் பெற்றுள்ளன.

**சேரமான் இளங்குட்டுவன் (சங்க காலம்)**

இ. பெ: இளங்குட்டுவன்

சேரமன்னர் மரபைச் சேர்ந்தவன்.

நூல். அகம் 153

**சேரமான் எந்தை (சங்க காலம்)**

வே. பெ: சேரமானந்தையார்.

இவர் சேரமன்னர் மரபைச் சேர்ந்தவர்.

நூல்: குறுந். 22.

**சேரமான் கணைக்கால் இரும்பொறை (சங்க காலம்);**

இ. பெ: இரும்பொறை.

இவன் சிறந்த தமிழ்ப் புலமையுடையவன். சோழன் செங்கண்ணனுடன் போர் செய்து தோற்று அவனால் குட-வாயிற் கோட்டத்திலே சிறையுற்றான். ஒரு நாள் மிகுந்த நீர்வேட்கையால் சிறைக் காவலனை நீர் தா என்று கேட்க அவன் காலம் தாழ்த்துக் கொண்டு வந்தமையால், பகைவன்

சிறையில் காலம் தாழ்த்து வந்த நீரைக் குடிப்பது மானக் குறைவு என்று கருதி அந்நீரை உண்ணுமலே தனது இழி நிலையை ஒரு செய்யுளில் எழுதி வைத்துவிட்டு உயிரை விட்டான். அச் செய்யுளின் கருத்து உள்ளத்தை உருக்கக் கூடியது. சேரமானுடைய வீரமானத்தைக் காட்டுவது.

நூல்: புறம் 74.

**சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை (சங்ககாலம்).**

இ. பெ: மாக்கோதை. கோதை என்பது சேரர் குடிப்பெயராகவும் கொள்ளலாம்.

இவன் கோட்டம்பலம் என்னும் ஊரிலே இறந்தவன் என்று இப்பெயர் அறிவிக்கின்றது கோட்டம்பலம் என்பது இப்போது அம்பலப்புழை என வழங்குகின்றது இவன் தன் மனைவி இறந்தபோது பாடிய கையறுநிலை அவலச் சுவை மிக்கது. இவனும் ஊரொடு தொடர்ந்த பெயர்கொண்ட புலவர் வரிசையிற் சேர்க்கப்பட்டவன்.

நூல்: புறம் 245.

**சேரமான் பெருமாள் நாயனார் (        )**

நூல்: ஆதிஉலா என்கின்ற திருக்கைலாய ஞான உலா (1869). திருவாரூர் மும்மணிக்கோவை (1869), பொன்வண்ணத் தந்தாதி (1868).

இவற்றுள், முதல் நூலில் ஏழு பருவ மங்கையர் பற்றிய செய்திகளைக் காட்ட இடையிடையே குறிப்புத்தரப்பெற்றுள்ளது இது பதினோராந் திருமுறையில் எட்டாம் நூல்.

அடுத்தது பதினோராந் திருமுறைப் பிரபந்தங்கள் என்ற நூலில் இணைந்துள்ளது.

அடுத்ததும் பதினோராந் திருமுறையுள் ஒன்று. இது கலித்துறை அந்தாதி. பொன் வண்ணம் எவ்வண்ணம் என்று முதற் பாடல் தொடங்குவதால் பொன்வண்ணத்தந்தாதி என்ற

பெயர்த்தாயிற்று. இப் பதிப்பு திருத்தணிகை சரவணப் பெருமாளையர் படிக்கு இணங்கப் பரிசோதித்து வெளியிடப் பெற்றது; 100 செய்யுட்களையுடையது.

**சேவியர் ஹென்றி லீ   (          )**

பார்க்க: சவியேர் ஹென்றி லியோன்.

**சேறைக்கவிராசபிள்ளை**  (16-நூ)

வே. பெ: சேறை ஆசுகவிராசர்.

ஊர்: சோழநாட்டிலுள்ள சேறை; கணக்கர் மரபினர்.

நூல்: காளத்திநாதருலா, அண்ணாமலையார் வண்ணம், சேயூர் முருகன் உலா, வாட்போக்கி நாதர் உலா, திருக்காளத்தி நாதர் கட்டளைக் கலித்துறை.

**சேனாதிராய முதலியார்**  (19-நூ)

ஊர்: ஈழநாட்டில் தென்கோவையில் இருபாலை,

தந்தை: நெல்லைநாத முதலியார். வாழ்ந்த காலம் 1750-1840.

இவர் தம் தந்தையாரிடத்தும், கூழங்கைத்தம்பிரான், மாதகல் சிற்றம்பலப்புலவர் ஆகியோரிடத்தும் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றூர். ஆங்கில மொழியிலும் போர்த்துக் கீசியமொழியிலும் பயிற்சி பெற்றிருந்த இவர், நீதிமன்ற நடுவராகவும், மொழிபெயர்ப்பாளராகவும், கோட்ட ஆட்சித் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். ஆறுமுக நகவலர் நல்லூர் சரவணமுத்துப்புலவர் ஆகியோர் இவரிடம் தமிழ் பயின்றவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இவர் நல்லூர்க் கந்தசாமி கோயிலில் முதன் முதல் புராண விரிவுரையினைத் தொடங்கினர். இவருக்குப் பின்பு இவருடைய மாணவர்கள் அப் பணியினைத் தொடர்ந்து பின்பற்றி வந்தனர். மானிப்பாயில் தமிழ் அகராதி தொகுக்கப்பட்டபோது இவரே முதல்வராயிருந்து தொகுத்துள்ளார்.

நூல்; நல்லைவெண்பா, நல்லைவந்தாதி, நல்லைக்குறவஞ்சி, நீராவிப் பிள்ளையார்மீது கலிவெண்பா, மாவிட்டபுரம் சுப்பிரமணியக் கடவுள்மீது ஊஞ்சல் பதிகம்.

**சேனவரையர்** (13-நூ).

ஊர்: தென்பாண்டி நாட்டில் ஆற்றூர்

தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு உரை கண்ட புலவர் பெருமக்களுள் தலையாயவர். இவரது பெயரைச் சேனை அரையர் எனப்பிரித்துப் படைத்தலைவர் என்று பொருள் கொள்ளலாம். நன்னூலின் உரையாசிரியராகிய மயிலைநாதர், சிறப்பால் பெறும் பெயருக்கு ஆசிரியன், படைத்தலைவன், சேனவரையன் என்பனவற்றை எடுத்துக் காட்டாகக் காட்டி யுள்ளார். ஆனால் சேனவரையர் என்ற பெயர் இயற்பெயராக விளங்கியுள்ளதைக் கல்வெட்டுக்களால் அறிகிறோம். ஆதலால் இவரது பெயரை இயற்பெயராகவே கொள்ளலாம். இவரது முன்னோர்கள் படைத்தலைவர்களாக இருந்திருக்கக் கூடும். இக் காரணம் பற்றி இவருக்குச் சேனவரையர் என்ற பெயர் வழங்கி இருக்க வேண்டும்.

இவர் தென்பாண்டி நாட்டவர் என்பதற்கு இவரது உரையில் சில சான்றுகள் உள்ளன. திசைச் சொற்களை விளக்குமிடத்துத் தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை, என்பவற்றைப் பெற்றம் என்றும், தம்மாமீ என்பதனைத் தந்துவை என்றும் வழங்குவன எனக் காட்டுகின்றார். ஏனைய நாட்டு வழக்கிற்கு எடுத்துக்காட்டு எதுவும் தரவில்லை. பெண்மையடுத்த மகன் என் கிளவி என்பதற்குப் பெண்மகன் என்று உரை கூறியபின், புறத்துப் போய் விளையாடும் பேதைப்பருவத்துப் பெண்மகளை மாறோக்கத்தார் இக் காலத்தும் பெண்மகன் என்று வழங்குப என அச்சொல் வழங்குமிடத்தைத் தெளிவாகக் குறிப்பிடுகின்றார்; ஏனைய உரையாசிரியர்கள் இவ்வாறு இடஞ்சுட்டி விளக்கவில்லை. இவர் குறிப்பிடும் மாறோக்கம் என்பது தென்பாண்டி நாட்டில் கொற்கையைச் சூழ்ந்த பகுதிக்கு முற்காலத்தில் வழங்கிய

பெயராகும் என்பது ஆறுமுகநாவலர் குறிப்பால் தெரிய வருகிறது. மாறேக்கத்தில் எவ்வூரில் வாழ்ந்தார் என்பதை அறிந்து கொள்ளத் திருநெல்வேலி மாவட்டம் ஆற்றூர்க் கோவில் கல்வெட்டு ஒன்று துணை செய்கின்றது. இக்கல் வெட்டு ஆற்றூர்ச் சேனாவரையர் ஆசிரிய மாணாக்கர் முறையில் தம் முன்னோரிடமிருந்து தமக்குக் கிடைத்த நிலம், மனை, ஆகியவற்றைத் தம் ஊரில் உள்ள சோமநாதக்கடவுளுக்கு வழங்கிய செய்தியைக் கூறுகின்றது. இக்கல்வெட்டால் கூறப் படும் சேனாவரையர், தொல்காப்பிய உரையாசிரியராகிய சேனாவரையராக இருக்கக் கூடும் என அறிஞர்கள் கருது கின்றனர். இவ்வூரில் உள்ள மேலும் இரண்டு கல்வெட்டுக் கள், இவரது முன்னோர்கள் படைத்தலைவர்களின் வழித் தோன்றல்கள் என்றும், செல்வர்கள் என்றும், புலமையினர் என்றும் குறிப்பிடுகின்றன.

இவரது உரையைக் கொண்டு இவரது சமயத்தை அறிய இயலவில்லை. அரையர் என்ற பெயர் திருவரங்கப் பெருமாள் கோயிலின்கண் திருவாய்மொழியை அபிநயம் பிடித்துப் பாடுவோர்க்கு வழங்குவதால், சேனாவரையர் திருமாலின் அடியவராய் இருக்கலாம் எனக் கருதுகின்றனர். ஆனால் இவரது உரை நூலின் தொடக்கத்தில் விநாயகர், மாதொரு பாகன், கலைமகள், அகத்தியர், முதலியோரை வாழ்த்தி வணங்குகிறார். இப்பாடல்களில் முதற்பாடலை இளம்பூரணரும் சாட்டுகிறார். எனவே ஏனைய பாடல்களை இயற்யறிவர் சேனா வரையரே என்பதில் கருத்து வேற்றுமையில்லை. இப்பாடல் கள் சேனாவரையர் சிவநெறிச் செல்வர் என்பதற்குத் தக்க சான்றுகளாகின்றன.

ஆற்றூர்ச்சேனாவரையர் தம் சொத்துக்களைச் சிவன்கோயிலுக்கு வழங்கிய காலம் மாறவர்மன் குலசேகர பாண்டியனது ஏழாம் ஆட்சியாண்டாகிய 1275 ஆகும். இப்பாண்டியனை எம் மண்டலமும் கொண்டருளிய மாறவர்மன் குலசேகரன் (1268-1311) என்று வரலாற்று ஆசிரியர் குறிப்பிடுவர். எனவே சேனாவரையர் 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என்பது மு. இராகவஐயங்கார் கருத்தாகும். இக்கருத்து அறிஞர்கள் ஏற்றுக் கொள்ளத்தக்கதேயாகும்.

இவர் ஆசிரியராகத் தொண்டாற்றிய செய்தி இவரது உரையாலும் கல்வெட்டாலும் அறியப்படுகிறது. இவர் தொல்காப்பியத்தில் சொல்லதிகாரத்திற்கு மட்டுமே உரை எழுதியுள்ளார். இவரது உரை திட்பமும், நுட்பமும் வாய்ந்தது; செறிவும் சுருங்கச் சொல்லி உய்த்துணரவைக்கும் இயல்பும் உடையது; தருக்க நூலறிவோடு பிற உரை ஆசிரியர்களை மறுக்கும் திறனும் ஆழ்ந்த வடமொழிப் புலமையும் இவரது உரையில் காணப்படுகின்றது.

நூல்: தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-உரை.

**சேனாவரையன்** (19-நூ)

ஊர்: மகாபலிபுரம்.

நூல்: திருமூர்த்தி நயினார் என்பவர் இயற்றிய நாலுமந்திரி கதை நாடகம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சேஷ ஐயங்கார் டி. ஆர்.** (        )

இவர் சென்னை கிருத்துவக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

நூல்: டிரவிடியன் இந்தியா (Dravidian India)

**சேஷ ஐயர்** (20-நூ)

ஊர்: திருவானைக்கா கொண்டயம் பேட்டை

இவர் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம்பிள்ளையின் மாணவர். தியாகராசச் செட்டியாரிடம் தமிழ் நூல்களைக் கற்றார்.

நூல்: திருக்குருகூர்ச் சித்தர் நூலுக்குப் பாடிய சிறப்புப் பாயிரம்.

**சேஷ ஐயர் கே. ஜி.** (20-நூ)

ஊர்: திருவிதாங்கூர்.

நூல்; சேராகிங்க்ஸ் ஆப் சங்கம் பீரியட் (Chera Kings of Sankam period).

பல தமிழாராய்ச்சிக் கட்டுரைகள்.

**சேஷ கவி ( )**

இவர் சீரங்கம் கந்தாடை அண்ணன் என்பவரின் மாணவர்.

நூல்: பராங்குச நாடகம்.

**சேஷகிரி ஐயர் கா. சு. ( )**

ஊர்: சென்னை.

இவர் வாணியம்பாடியில் ஆசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்: பாரத வசனம், ஆநந்தவிசயரங்கர், எல்லாம் நானே, இகபர சுகம். இவையெல்லாம் உரைநடை நூல்கள்.

**சேஷகிரி சாத்திரியார் ( )**

நூல்: திராவிட தத்வம்-பாகம் I வினையியல் (1899).

இந்நூல் வினையியல் பற்றிய செய்திகள் பலவற்றையும் விரித்து உரைப்பது.

**ஷேசகிரி சாத்திரியார் ஏ. ( )**

இவர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் வடமொழிப் பேராசிரியராகப் பணியாற்றியவர்.

நூல்; திராவிட சப்த தத்வம்.

இந்நூலில் வடமொழி தென்மொழி இலக்கண மாறுபாடுகள் விளக்கப்பட்டுள்ளன.

**சேஷகிரி ராயர்** (19-நூ)

**ஊர்:** இராமநாதபுரம்.

**நூல்:** தனிப்பாடல்கள். சமுத்திர வருணனைகள் பற்றிப் பல செய்யுட்கள் பாடியுள்ளார்.

**சேஷ சாத்திரியார்** (    )

**ஊர்:** சிதம்பரம்.

**நூல்:** இராமர் ஜாதகம் (1870)

இது 44 பக்கங்களைக் கொண்ட செய்யுள், உரைநடை விரவியுள்ள நூலாகும். மேடமா மதி திதி என்ற பாடலின் விளக்கமாகும். இதற்கு ஆசிரியர் ஐந்து வியாக்கியான உரை செய்து பல நூல்களில் இருந்து மேற்கோள்கள் காட்டி விளக்கியுள்ளார்.

**சேஷம்மாள்** (    )

**ஊர்:** கும்பகோணம்.

**நூல்:** துருவசரித்திரக் கீர்த்தனை, (1897)

இது 51 செய்யுட்களைக் கொண்டது. கீர்த்தனை, விருத்தம் ஆகிய கவிதைக்ளில் துருவன் வரலாறுஉரைப்பது; கதை சொல்வோர்க்கும் இசைவல்லுநர்க்கும் பயனுள்ளது.

**சேஷயோகி** (    )

**நூல்:** ஞானயேத்தம்.

இது அக்ஸ்தியர் உயர்ஞானம் முதலிய பல நூல்கள் அடங்கிய் தொகுதியான ஞானக்கோவை என்ற நூலுடன் இணைத்து அச்சிடப் பெற்றதாகும். 547 செய்யுட்களைக் கொண்ட நூல்.

## சேஷாச்சல ஐயர் (20-நூ)

ஊர்: சென்னை புரசைவாக்கம்.

வாழ்ந்த காலம்: 1891-1938.

இவர் பி. ஏ., பி. எல். பட்டம் பெற்றவர். வழக்கறிஞராக வாழ்க்கையைத் தொடங்கினார். ஆனால் அவ்வேலை மகிழ்ச்சி அளிக்காததால் இவர் அவ்வேலையை விடுத்துக்கல்வி கற்பிக்கும் பணியைத் தொடங்கினார். 1913ஆம் ஆண்டில் புரசைவாக்கத்தில் இராப் பள்ளிக்கூடம் ஒன்றினைத் தொடங்கினார். ஏழைகள் பலர் இப்பள்ளியில் கல்வி கற்றனர். இப்பள்ளி நாளடைவில் வளர்ச்சி பெற்றுத் தமிழ் இலக்கண இலக்கியங்கள் கற்பிக்கப்பட்டன பின்னர்ப் பல இடங்களிலும் பள்ளிகளைத் தொடங்கித் தக்கவர்களைக் கொண்டு நடத்தினார்.

1928ஆம் ஆண்டில் கலா நிலையம் என்னும் இலக்கியக் கிழமை வெளியீட்டைத் தொடங்கினார். இளர் நடிகராகவும் பேச்சாளராகவும் விளங்கினார்.

நூல்: ஏமாங்கதத்திளவரசன், கம்பராமாயண உரை, சூளாமணி உரை, நளவெண்பாஉரை,.

## சேஷாச்சல நாயுடு (          )

நூல்: சிவகிரி மயில்வாகனக் கடவுள் பேரில் விருத்தங்கள் (1885), பன்னிரண்டு ஆந்திர இராஜர்கள் கதை (1897).

இவற்றுள் முன்னையது, சிவகிரியில் எழுந்தருளிய மயில் வாகனக் கடவுள் விருத்தங்கள் என்றும் குறிக்கப்பெறும். 10 செய்யுட்களாலாயது.

அடுத்தது ஸ்ரீகிருஷ்ணபோதாம்ருதம் எனும் பன்னிரண்டு ராஜர்கள் கதை என்றும் வழங்கப்படும். ஆந்திர மொழியில் இருந்து மொழிபெயர்த்தது. கிருட்டிணனும் அருச்சுனனும் இளவேனிற் பருவத்தில் யமுனைக் கரையில் உலாவிக் கொண்டிருந்தார்கள் என்றும், அவர்களுக்கு உரையாடலாய் விளைத்தனவே இக் கதைகள் என்றும் கற்பித்து, வேதாந்த

ரகசியங்களை யாவரும் அறியுமாறு எளிய நடையில் கூறுவது.

**சேஷாச்சல நாயுடு, வே** (20-நூ)

ஊர்: கோயம்புத்தூர் மாவட்டம், காங்கயம்.

நூல்: சங்கீதசந்திரிகை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சேஷாச்சலம்பிள்ளை ப.** ( )

நூல்: அத்யாத்ம ராமாயணம்-அதாவது ஞானராமாயணம் (1900). இது 14 பக்கங்களிலமைந்த செய்யுள் நூல்; இராமாயண சரிதையிலமைந்த தத்துவங்களை விளக்குவது.

**சேஷாத்திரி** ( )

ஊர்: வேதாரணியம்.

நூல்: ஆத்மபோத உரை.

**சேஷாத்திரி ஐயங்கார்** ( )

நூல்: சிங்காரக் கும்மிப் பாடல் (1884).

**சேஷாத்திரி ஐயங்கார் நா.** (19-நூ)

ஊர்; தொண்டைநாட்டைச் சேர்ந்த செங்காடு.

தந்தை: நாராயண ஐயங்கார்; அந்தணர்.

நூல்: குசேலவிலாசம், ரங்கநாதர் சிந்து.

**சேஷாத்திரிசாமிகள்** (20-நூ)

ஊர்: மகேந்திரவாடி.

நூல்: இராமாநந்தசாமிகள் நிச்சல என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சேஷாத்திரி சிவனர் (  )

நூல்: சாதனசதுஷ்டயப் பிரகரணம், நாநாஜீவவாதக் கட்டளை, ராகத்துவேஷப் பிரகரணம்.

## சேஷையங்கார்–1. (  )

ஊர்: ஆதியூர் அவதானி சரித்திரம் (1875).

இந்நூல் புதுமையாக இயற்றிய கட்டுக்கதை. இந்துக்களுள் காணப்படும் நல்ல, தீய பண்புகளையும் நடைமுறைகளையும் வருணிப்பது; அம்மானைப்பாடல் நடையில் அமைந்த கதைப்பாடல்.

## சேஷையங்கார்–2 (  )

ஊர்: தூசில் வீரவல்லி.

நூல்: குணாகரம்-கலைமயக்காண்டம் (1870).

இது, குணாகரன் என்பவனது வரலாறு பற்றியது. நவீன காப்பியம்; 766 செய்யுட்களையுடையது. காப்பிய அமைப்பு முறையில் ஆற்றுப்படலம், நாட்டுப்படலம் முதலியவற்றை முதலிற்கொண்ட 18 படலங்கள் இக் காண்டத்தில் உள்ளன. திருத்தணிகை விசாகப் பெருமாளையர் முதலிய மூவர் பாடிய சிறப்புப் பாயிரப் பாடல்கள் முதலில் உள்ளன.

## சேஷையங்கார்–3 (19-நூ)

இவர் தேவராச பாரதிகள் என்பவரின் மாணவர்.

நூல்: தமது ஆசிரியர் இயற்றிய சடகோபதிவ்விய சரித்திரம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சேஷையர் (  )

ஊர்: திருவானைக்கா-கொண்டயம்பேட்டை.

நூல்: புவனம்பிகையாகக் கும்மி.

இது திருவானைக்காவல் ஞானசித்தசாமிகள் நடாத்திய யாகம் பற்றிய வரலாறு உரைப்பது; 103 செய்யுட்களைக் கொண்டது.

**சைகு முகம்மது ( )**

நூல்; ஹிதாயத்துல் முசிலிமீன் (1888) இது 90 பக்கங்களைக் கொண்ட உரை நடைநூல். தொழுகையின் மேன்மை. தொழாமையால் வரும் கேடு இவற்றைக் கூறுவது.

**சைகுமுகம்மது மதீனுசாயபு** (20-நூ)

ஊர்; கோட்டாறு.

நூல்: மெய்ஞ்ஞான வினாவிடை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சைகு யூசுபு ( )**

நூல்; ரியாலுண்ணி சுவான் என்ற மொழிபெயர்ப்பு நூல் (1879) 192 பக்கங்களைக் கொண்ட உரைநடை நூல். இசுலாமியர் ஒழுகலாறுகளும் பல்வேறு காலங்களில் தொழும் தொழுகை விவரங்களும் உரைப்பது. இந்தி மொழியிலுள்ள தொகுதியைப் பின்பற்றி தமிழாக்கம் செய்யப்பெற்றது. மேலும், அரபுத் தமிழில் தறுசுமாச் செய்ததைப் பார்வையிட்டும் அரபு இத்தாபுகளைக் கொண்டு சரிபார்த்தும் செம்மையாக்கப் பெற்றது.

**சைதன்னியாநந்த அடிகள்** (18-நூ)

இவர் தாயுமான அடிகளிடம் தமிழ் நூல்களைக் கற்றார்.

நூல்: தாயுமான அடிகள் இறந்தபோது பாடிய இரங்கற்பா.

**சைமன் காசிச்செட்டி** (19-நூ)

ஊர்: யாழ்ப்பாணம், கிறித்தவர்.

இவர் மாவட்ட நடுவராகப் பணியாற்றியவர். வரலாற்று ஆராய்ச்சியாளர்.

நூல்: டமில் புளுட்டார் (Tamil plutarch)

இந்து கிறிஸ்துவத் தமிழ்ப் புலவர்களின் வரலாற்றை அகரவரிசைப்படுத்திக் கூறும் இவ்வாங்கில நூல் கி. பி. 1859 இல் வெளியிடப்பெற்றது.

**ஸையது அலாவுதீன் ராவுத்தர் ( )**

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் இளையாங்குடி.

நூல்; ஐயாச்சாமி ஐயர் நா. என்பார் திருத்தி வெளியிட்ட திருவெமனேச்சுவரத் தலபுராணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்

**ஸையது உமர் நாவலர் ( )**

ஊர்: கோயம்புத்தூர் மாவட்டம், சூலூர்.

நூல்: பராசக்தி அகவல் (1885)

இது 60 பக்கங்களைக் கொண்டது; செய்யுள் நடையால் அமைந்தது.

**ஸையது முகம்மது அண்ணாவியார் ( )**

ஊர்: மதுரை.

தந்தை: செய்கு மீரான்.

இவர் மதுக்கூரில் திருக்குர் ஆனைப் பயின்றவர்; மூத்தாக்-குறிச்சியில் வாணிபச் செட்டியார் ஒருவரிடம் தமிழ் கற்றவர், நாகூரில் செய்கு அப்துல் வகாபுத்தீன் சாயபுவினுடைய நட்பால் அவரிடம் தீட்சை பெற்றவர்; சவ்வாதுப் புலவர் இவருடைய மாணவர்; ஐயம்பேட்டையிலும் செல்லா நகர் எனப்படும் அதிவீரராம பட்டினத்திலும் முஸ்லீம் மக்களுக்குக் கல்வி கற்பித்தார். கதிர்வேலு உபாத்தியாயர் என்பவரைத் தம் புலமைத் திறத்தால் வென்றவர்.

நூல்: சுப்பிரமணியர் பிரசன்னப் பதிகம், அலிநாமா, நூறு நாமா, மகாபாரத அம்மானை.

## செய்து முகம்மது ஆலிம் புலவர் (20-நூ)

வே. பெ: ஹாஜியார் ஆலீம்புலவர், ஆலீம் பாவலர்.

ஊர்: சேதுநாட்டில் கீழக்கரை

தந்தை: ஹாபிலு முகம்மது தம்பி மரக்காயர்

இவர் யூசுபு நபி காவியத்தைப் பாடிய கறுத்த சதக்குத் தம்பிப் பாவலரின் பெண்வழிப் பேரராவர். சீருப்புராணம் பாடிய உமறுப்புலவரின் வழித் தோன்றல். அட்டாவதானம் அபூ பக்கர் நயினுப் புலவரிடம் சிறிது காலம் மாணவராய் இருந்து தமிழ் கற்றார். இவர் தமது 13ஆம் வயதிலேயே திருக்குர்ஆன் முழுமையும் மனப்பாடம் செய்து ஒப்புவிக்கும் வன்மை பெற்றிருந்தார். பின்னர் மாப்பிள்ளை ஆலிம் புலவர் நடத்திய பள்ளியிலும் பயின்று அரபு மொழித் தேர்வு பெற்றார். பின்னர்த் தொழிலில் ஈடுபட்டிருந்த காலத்தில் தமிழ் பயில வேண்டும் என்ற ஆர்வத்தினால் தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சி பெற்றார். இலங்கைக்கு முத்துவணிகத் தொடர்பாகச் சென்றிருந்த போது கத்தோலிக்கப் பள்ளித் தலைமை ஆசிரியர் ஒருவரிடம் நன்னூல் பாடங்கேட்டார். அட்டாவதானம் அபூபக்கர் நயினுப் புலவரும் இவர் தம் தமிழ்ப் பயிற்சியை ஊக்குவித்தார். அவர் மூலம் இராகவையங்கார், பாண்டித்துரைத் தேவர் முதலானோரின் தொடர்பும் இவருக்கு ஏற்பட்டது. மதுரைத் தமிழ் சங்க வித்துவான் தகுதியும் பெற்றார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தால் முதுபெரும் உறுப்பினர்களுள் ஒருவாக இருந்து தமிழ் மக்களோடு தொடர்பு கொண்டார்.

1909ஆம் ஆண்டில் சென்னைஅரபுக் கல்லூரியில் சேர்ந்து அரபு பயின்றார். அக்கல்லூரியின் தலைவர் இவர் திறமையைப் பெரிதும் மதித்துப் போற்றினார். அங்கிருந்த போது இமாம் துறவியாரின் கருத்துக்களிலும் நெறியிலும் ஆழ்ந்த பற்றுக் கொண்டார். அவர் தம் நூலை விளக்கமாகவும் அழகாகவும் பெயர்க்க இப்பயிற்சி பெரிதும் உதவிற்று.

கொழும்பு சைய்து ஆலிம் சாயபும் அவரைச் சேர்ந்தோரும் இவர் தம் புலமையிலும் சமயப் பற்றிலும் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தனர் பாண்டித்துரைத் தேவர், வழக்கப்படி புலவர்களுக்குச் செய்யும் மரியாதையோடு பரிசளிப்பும் இவருக்குச் செய்ய விழைந்த போதெல்லாம் இவர் தம் செல்வ நிலை கருதி மறுத்து விட்டார். வாணிபத்தில் நிறைந்த செல்வம் ஈட்டிய இவர் ஆன்மீக நாட்டத்திலும் தம் திறமைகளைச் செலவிட்டார்.

நூல்: ஏகதெய்வதோத்திரமாலை, பிதாயத்துல் ஹிதாயா (நேர்வழி) குத்புநாயக மான்மியம், தனிப்பாடல்கள்.

ஏகதெய்வ தோத்திரமாலை அரபு, தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் எழுதப்பட்டது.

பிதாயத்துல் ஹிதாயா (நேர்வழி) என்னும் நூல் இமாம் துறவியால் எழுதப்பெற்ற அரபி மூலத்தின் மொழிப் பெயர்ப்பு, குத்புநாயகமான்மியம், செய்யுளும் உரைநடையாய் விளக்கமும் அமைந்தது.

## செய்து முகியித்தீன் கவிராயர் (          )

ஊர்: கோட்டாறு.

தந்தை: முகம்மது உசைன் புலவர்.

இவர் கஃபுப் புலவரின் வழியினர்; அரபு, மலையாள மொழிகளையும் கற்றவர்; சேர நாட்டு மன்னனிடம் அவைக்களப் புலவராக விளங்கிப் பின்னர் இருவருக்கும் பகைமை ஏற்பட்டு அந்நாட்டை விட்டுத் திருநெல்வேலிக்கு வந்தார், பாளையங்கோட்டையில் வழக்கு ஒன்றில் சிக்கி பின்னர் அரசன் மீது செய்யுள் ஒன்று பாடி விடுதலையும், திங்கள் ஒன்றுக்குப் பதினைந்து வெண்பொற்காசுகளும் பெறும் சிறப்பினைப் பெற்றவர். மேலப்பாளையம் பெரிய குத்பா பள்ளியில் அடக்கம் செய்யப் பட்டுள்ளார்.

நூல்: முகியித்தீன் ஆண்டவர் திருப்புகழ், மாணிக்கமாலை.

**சைவப்பிரகாச சமாசியர் ( )**

நூல்: சைவ தூஷண பரிகாரம் (1890).

இது 72 பக்கங்களையுடையது; பதிப்பிரகரணம் முதல் தவப்பிரகரணம் ஈருக 22 பிரகரணங்களையுடையது.

**சைன மாமுனிவர் ( )**

வே. பெ: உபேந்திராசிரியர்.

நூல்: சிநேந்திரமாலை.

**சொக்கசீயர் (13-நூ)**

இவர் சோணுட்டைக் கைப்பற்றிச் சோழ அரசனைச் சிறைப்படுத்தி 1243இல் முடிசூட்டிக் கொண்டவனுகிய கோப்பெருஞ் சிங்கனுடைய வெற்றித் திறங்களைப் பாடியுள்ளார்.

**சொக்கநாதக் கவிராயர் ( )**

ஊர்: முல்லையூர்.

நூல்: நல்லாப்பிள்ளை மகாபாரதம் பொழிப்புரை.

**சொக்கநாதப் புலவர் (18-நூ)**

வே. பெ: சொக்கநாதக் கவிராயர்.

ஊர்: மதுரை.

தந்தை: சொக்கலிங்கம்பிள்ளை.

இவர் இராமநாதபுரத்தில் விசயரகுநாத சேதுபதி ஆட்சி செலுத்திய காலத்தில் (1711- 1725) இருந்தவரென்று தெரிவதால் 18ஆம் நூற்றுண்டினர் ஆவர்.

இவருடைய மரபினர் மதுரை மன்னரிடம் பல பட்டடைக் கணக்கு அலுவல் பார்த்தமையால் பல பட்டடைச் சொக்க

நாதப்புலவர் என்று அழைக்கப் பெற்றார். இவர் மதுரைச் சொக்கநாதர் அங்கயற்கண்ணம்மை ஆகியோர்பால் பேரன்பு கொண்டு பல தனிப்பாடல்கள் பாடியுள்ளார்.

நூல்: மதுரை மும்மணிக்கோவை, மதுரை யமகவந்தாதி, தேவையுலா, பத்மகிரிநாதர் தென்றல் விடு தூது, அழகர் கிள்ளை விடு தூது, நரசிங்கநாயகர் மேல்வளமடல்.

மதுரை மும்மணிக்கோவை, சொக்கநாதப் பெருமானைத் தலைவராகக் கொண்டு பாடப் பெற்றது; சொல்லணி பொருளணி நிரம்பியது.

தேவையுலா, இராமேசுவரம் இறைவன்மீது பாடப் பெற்றது; இந்நூலில் இக்கோயிலுக்குத் திருப்பணி செய்தவர்கள் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது.

பத்மகிரிநாதர் தென்றல் விடு தூது; பத்மகிரியாகிய திண்டுக்கல்லில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் மீது பாடப்பெற்றது. இந்நூலில் தென்றல் தமிழுடன் தொடர்பு படுத்தி அழகாக வருணிக்கப்பட்டுள்ளது.

அழகர் கிள்ளை விடு தூது; திருமாலிருஞ்சோலைத் திருமால் மீது பாடப்பெற்றது. இந்நூலில் தூது விடப்படும் கிளியின் பெருமையும் அழகர் சிறப்பும் அழகாக்க் கூறப்பட்டுள்ளது·

## சொக்கநாதப்புலவர்-2 (17-நூ)

ஊர்: தொண்டைநாடு.

மதுரையில் அரங்க கிருட்டிணப்ப நாயக்கரின் அமைச்சராக இருந்த திருவேங்கடநாதையர் காலத்தவர்.

நூல்: திருவேரகத்தில் முருகனை வழிபடச் சென்றபோது ‘வெங்காயஞ் சுக்கானால் வெந்தயத்தால் ஆவதென்ன’ என்று பாடிய வெண்பா.

முருகனுக்குச் செட்டி என்ற பெயரொன்றுண்டு என்பதைக் கருத்தில் கொள்ளும் செட்டியார்கள் பலசரக்கு வாணிபம்

செய்பவர்கள் என்பதைக் கருத்தில் கொண்டு இப்பாடல் பாடப் பெற்றுள்ளது.

**சொக்கநாதர் ( )**

நூல்: சொக்கநாதர் சூத்திரம்.

**சொக்கப்பநாவலர்-1** (18-நூ)

வே. பெ: சொக்கநாதம்.

ஊர்: தொண்டைநாட்டில் குன்றத்தூர்.

தந்தை; சர்க்கரை; கூடல்கிழார் மரபினர்.

நூல்: தஞ்சைவாணன் கோவையுரை, திருவெள்ளூர்ப்புராணம்.

தஞ்சைவாணன் கோவை பொய்யாமொழிப்புலவரால் இயற்றப் பெற்றது. இந்நூலுக்குச் சொக்கப்ப நாவலர் இயற்றிய உரையில் களவியல் நிகழ்ச்சிகளுக்கு நாட்களுக்கு வரையறை செய்து கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

**சொக்கப்பநாவலர்-2** (20-நூ)

ஊர்: பொள்ளாச்சி.

நூல்: சேலம் தலபுராணம்.

**சொக்கப்பப் புலவர்** (18-நூ)

ஊர்: தொண்டை நாட்டு அரசூர்.

நூல்: கும்பகோணப்புராணம்.

இப்புராணம் அகோர முனிவர் இயற்றிய புராணத்தி-னின்றும் வேறுனது; செய்யுள் நடை சிறந்து காணப்படுகின்றது; இப்புராணம் அச்சிடப்படவில்லை.

**சொக்கலிங்க அடிகள் ச. (20-நூ)**

ஊர்: திருநெல்வேலி மாவட்டம் சங்கரநயினார் கோயில்.

நூல்: சண்முகாநந்த சாமிகள் என்பவர் இயற்றிய திருமுருகன் அருட்பாமாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சொக்கலிங்க ஆசாரியார் கா (20-நூ)**

நூல்: சுந்தராச்சாரியார் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சொக்கலிங்கக் கவிராயர் ( )**

ஊர்: திருவாரூர்.

நூல்: 'மாதஞ்சித் திரை கடலை வைதனனியன்பு' என்று தொடங்கும் தனிப்பாடல்; தமிழ் மாதங்கள் பன்னிரண்டும் அமைந்துள்ளன.

**சொக்கலிங்க சாமிகள் (19-நூ)**

இவர் குமாரதேவ சாமிகள் ஆதீனத்தைச் சேர்ந்தவர்.

நூல்: சண்முக சாமிகள் சி. என்பவர் இயற்றிய தத்துவஞான தீபிகை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சொக்கலிங்க சிவப்பிரகாசம் (19-நூ)**

வே. பெ: சொக்கலிங்கம்.

ஊர்: தில்லை; வீரசைவர்.

இவர் இளமையிலேயே துறவு பூண்டு விருத்தாசலத்தை அடைந்து குமாரதேவர் வழி முறையில் வந்த முத்தைய அடிகள் என்னும் பெரியாரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தார்; தீட்சையும் பெற்றார். பின்னர்த் திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருத்துறையூர் வீரசைவாதீனத்தின் இருபதாவது தலைவராகப் பட்டம் பெற்றுச் சொக்கலிங்கச் சிவப்பிரகாசப் பண்டார சந்நிதிகள் என்று பெயர் பெற்றார்.

நூல்: பெரியநாயகியம்மன் பிள்ளைத் தமிழ், குமாரதேவ சாமிகள் மும்மணிக்கோவை, குமாரதேவர் அபிடேகமாலை, திரிபதார்த்த உண்மை, உபதேசவிளக்கம், குமாரதேவர் இயற்றிய சுத்த சாதக உரை.

**சொக்கலிங்க சுந்தரமூர்த்தி சாமிகள் (20-நூ)**

ஊர்: பாண்டிய நாட்டில் கடாரிப்பட்டி; சைவ வேளாளர். இவர் இளம் பருவத்திலேயே துறவு பூண்டார்.

நூல்: சொக்கலிங்க சுந்தரமூர்த்தி சாமிகள் அருளிச் செய்த திருப்பாடற்றிரட்டு. இந்நூலில் உள்ள செய்யுட்கள் சாமிகளால் அவ்வப்போது பாடப்பெற்று ஒன்றாகத் தொகுக்கப் பட்டுள்ளன.

**சொக்கலிங்கச் செட்டியார் ராம. (19-நூ)**

வே. பெ: சொக்கலிங்க ஐயா,

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் காரைக்குடி.

தந்தை: இராமநாதச் செட்டியார்; தாய்: முத்துக்கருப்பி ஆச்சி.

இவர் சில நாட்கள் திண்ணைப் பள்ளியிற் பயின்று பின்னர் தாமே தமிழிலக்கண இலக்கியங்களைக் கற்று உணர்ந்தார் தம் பதினேழாவது வயதில் யாழ்ப்பாணம் சென்று தொழில் காரணமாகத் தங்கியிருந்தபோது ஆறுமுக நாவலரின் உறவு ஏற்பட்டது. அவரிடமும் அவர் மருகர் பொன்னம்பலம்பிள்ளையிடமும் சில பாடங்களைக் கேட்டுத் தெளிவடைந்தார். ஊருக்குத் திரும்பியதும் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையின் மாணவர் தேவகோட்டை வன்றொண்டச் செட்டியாரிடம் மேலும் சில சைவ சமய நூல்களைக் கேட்டறிந்தார். இவர் சைவ சமயத்தில் அழுத்தமான பற்றும், கற்றுத் தெளிந்த உண்மைக்கு ஏற்ப வாழ்வு அமைய வேண்டும் என்ற கொள்கையும் உடையவர். சிதம்பரத்தில் மெய்கண்ட வித்தியாசாலை என்ற நிறுவனம் ஒன்றை ஏற்படுத்திப் பல மாணவர்கள் தமிழ் கற்க வழி

செய்தார். பல ஆசிரியர்களைக் கொண்டும் அவ்வப்போது தாமும் மாணவர்கட்குப் பாடம் கற்பித்தார்.

பயில்வார்க்கும், சைவ சமயத்தை அறியவிரும்புவார்க்கும் துணையாகச் செய்யுள் மூல நூல்களை உரைநடைப் படுத்தி வெளியிட்டார். சைவ சமயத்தின் தத்துவங்களையும் பக்திப் பாசுரங்களையும் சைவத் திருப்பதிகளின் பெருமைகளையும் அடியார்களின் வாழ்க்கையையும் சிறப்பையும் எடுத்தோதிச் சிறு நூல்கள் பல வெளியிட்டுள்ளார். இவர் சித்தாந்தி-யாயினும் வேதாந்தத்தையும் கற்றுத் தெளிந்தார். சைவ குரவர் நால்வர் திறம் போற்றித் தனித்தனியே நான்கு நூல் கள் பாடினார். பலசைவத் திருத்தலங்களுக்குப் புராணங்களும் திரிபு, யமக அந்தாதி, சிலேடை வெண்பா, திருவூசல், நவ மணிமாலை, இரட்டைமணி மாலை, பதிற்றுப்பத்தந்ததாதி, போற்றிக் கலிவெண்பா, சந்தவிருத்தம், விண்ணப்பமாலை முதலிய பல சிற்றிலக்கியங்களையும் செய்துள்ளார். தமது ஆசிரியர்கள் மீது இரண்டு துதி நூல்களும் ஆக்கியுள்ளார். இந்நூல்கள் அனைத்தும் பத்தொன்பதாம் நூற்றாண்டு இறுதி யிலும் இருபதாம் நூற்றாண்டு முற்பகுதியிலும் பதிப்பிக்கப் பெற்றவை.

நூல்: திருத்தொண்டர் புராண வசனம், திருவாதவூரடிகள் புராண வசனம், தொண்டர் புராணசார விளக்கம், சிவஞான போதார்த்த லகு வசனம்.

## சொக்கலிங்க தேசிகர் 1 (        )

நூல்: குன்றக்குடி சண்முகநாதர் குன்றையந்தாதி (1879).

இந்நூல் 102 செய்யுட்களைக் கொண்டது; கலித்துறை யாப்பில் அந்தாதித் தொடையில் அமைந்தது.

## சொக்கலிங்க தேசிகர் 2 (19-நூ)

ஊர்: சோழநாட்டில் திருக்கொள்ளம்புதூர்.

இவர் பள்ளி ஒன்றில் ஆசிரியராகப் பணியாற்றிவர்.

நூல்: திருமயிலையைச் சேர்ந்த முத்துச் சாமி என்பவர் இயற்றிய தருமைச் சொக்கநாதமாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சொக்கலிங்க தேசிகர் 3 (        )**

நூல்: பழநியாண்டவர் பதிகம்.

**சொக்கலிங்க தேசிகர் ம. (19-நூ)**

ஊர்: திருவிடைமருதூர்.

தந்தை: மருதப்ப தேசிகர்,

நூல்: திருத்தணிகாசல; யமகவந்தாதி; இவ்வந்தாதி திருத் தணிகை முருகன்மீது பாடப்பெற்றது,

**சொக்கலிங்கப் பண்டாரம் (19-நூ)**

நூல்: வள்ளிநாயகம்பிள்ளை இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சொக்கலிங்கப் புலவர் (        )**

ஊர்: சேலம். கொங்கு நாட்டிலுள்ள குன்றத்தூர் எனத் தமிழ்ப் புலவர் அகராதி கூறும்; வேளாளர்.

வடமொழிப் புலமையும் அட்டாவதானம் செய்வதில் வல்லமையும் உடையவர்.

நூல்: சேலம் என வழங்கும் பாவநாசத் தலபுராணம், திரு வள்ளுவர் புராணம்.

சேலம் என வழங்கும் பாவநாசத்தலபுராணத்தில் இறுதியில் புராண சாரப் போற்றித்திருவகவல் என்னும் பகுதியும் அமைந்துள்ளது.

**சோக்கலிங்கப் பெத்தண்ண பூபதி (19-நூ)**

இவர் ஆற்றங்கரைச் சமத்தானம் என்னும் ஊரின் தலைவராக இருந்தவர்.

நூல்: இரு சொல்லலங்காரம், விடுகதைச் செய்யுள்.

**சொக்கலிங்கம் டி. எஸ்.** (20-நூ)

வாழ்விடம்: திருநெல்வேலி மாவட்டம்.

வாழ்ந்த காலம்: 3—5—1899——1958

இவர் தினமணி நாளிதழில் ஆசிரியராக நெடுங்காலம் பணியாற்றியவர். நாட்டு விடுதலைக்கு உழைத்தவர்களைப் பற்றியும் அரசியல் நடவடிக்கைகளைப் பற்றியும் அவ்வப்போது கட்டுரைகள் எழுதியுள்ளார். 1940ஆம் ஆண்டு முதல் நிலவிய இந்தியாவின் உணவு நெருக்கடி பற்றி ஆராய்ந்து நூல் ஒன்றும் வெளியிட்டுள்ளார்.

நூல்: ஜவஹர்லால் நேரு (1936), சுபாஷ்போஸ் (1938), அன்ன விசாரம் (1943).

**சொக்கலிங்கம் பிள்ளை–1** (20-நூ)

ஊர்: கோயம்புத்தூர்.

நூல்: துரைசாமி நாயகர் இயற்றிய சிலைஎழுபது உரை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சொக்கலிங்கம் பிள்ளை–2** ( )

நூல்: திருநெய்த்தானம் இளங்கோவையம்மன் பதிகம், திருநெய்த்தானம் இளங்கோவையம்மன் மாலை.

**சொக்கலிங்கம் பிள்ளை–3** (20-நூ)

நூல்: அருணசலக் கவிராயர் வ. மு. என்பவர் இயற்றிய திருப்பேரூர் உலா என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சொக்கலிங்கம் பிள்ளை அ.** (20-நூ)

ஊர்: சேலம், செவ்வாய்ப்பேட்டை.

நூல்: சு. அர்த்தநாரீச நாயகர் என்பவர் இயற்றிய கரபுர நாதர் புராணப் பொழிப்புரையைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சொக்கலிங்கம் பிள்ளை கு. ( )**

ஊர்: மகாதேவ மங்கலம்.

தந்தை: குமரப்பிள்ளை; தாய்: வேலம்மையார். சீர் கருணிகர் குலம்.

இவர் சோணாத்திரி ஆசிரியர், மகாராட்டிர வழி முறையினரான முனிசாமிராவ் ஆகியோர்பால் வடமொழியையும் தென்மொழியையும் கற்றார். ஊர்க்கணக்கு வேலையை மேற்கொண்டதோடு மாணவர் பலருக்குப் பாடம் சொல்லும் பணியினையும் ஏற்றார்.

நூல்: இமாசலபுராணம் (மொழியாக்கம்).

இந்நூல் வடமொழியில் சன்னு முனிவர் என்பவரால் இயற்றப் பெற்றது.

**சொக்கலிங்கம் பிள்ளை மு ( )**

ஊர்: சிவகங்கையைச் சேர்ந்த பதினெட்டாம் கோட்டை,

தந்தை: முத்துக் கருப்பபிள்ளை.

நூல்; குன்றக்குடி முருகர் இரட்டை மணி மாலை.

**சொக்கலிங்கம் பிள்ளை வா (19-நூ)**

வே. பெ; சிவக்கியானி.

ஊர்: சென்னை இராயபுரம்.

நூல்: வே. கி. நாராயணசாமிப்பிள்ளை மீது புகழ் மாலை, பழநி முருகர் கீர்த்தனம்.

இந்நூல்களுள் இரண்டாவது நூல் ஐம்பத்தாறு கீர்த்தனங்களைக் கொண்டது: தில்லை நடராசரைக் குறித்த 5 கீர்த்தனங்கள் நூலின் இறுதியில் உள்ளன.

**சொர்ணம் ஐயர் ( )**

நூல்: கோவல் என்ற ஊரைச் சேர்ந்த ஐயாச்சாமி ஐயர் என்பவர் திருத்தி வெளியிட்ட திருவெமனேச்சுரத்தலபுராணத்தைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சொரூபானந்த மணி சாமி (20-நூ)**

ஊர்: காஞ்சீபுரம்.

இவர் நிச்சலராமாநந்த அடிகள் என்னும் பெரியசாரிடத்தில் வேதாந்த நூல்களைக் கற்றார்.

நூல்: நிச்சலராமாநந்த அடிகள் தோத்திரப் பாமாலை.

**சொரூபானந்தர் ( )**

நூல்; சொரூபசாரம்.

இந்நூல் 100 வெண்பாக்களாலாயது; சிற்சொரூபம் பற்றிய விளக்கம் அமைந்தது; ஈழுர் சச்சிதாநந்த அடிகளால் விரிவுரை எழுதப்பெற்றது.

**சொரூபானுபவ சாமிகள் ( )**

நூல்: சொரூபவுந்தியார்.

இந்நூல் கொலைமறுத்தல் மூலம் நூலுடன் சேர்த்து அச்சிடப்பட்டுள்ளது; 23 செய்யுட்களைக் கொண்டது.

**சோணச்சல பாரதியார் (20-நூ)**

சி. பெ; குமரகோட்டப் புலவர்,

ஊர்: காஞ்சிபுரம்.

காஞ்சிபுரம் குமரகோட்டத்தில் தொண்டு புரிந்து வந்தமையால் மக்கள் வழங்கிய பெயர்.

குமரகோட்டத்து முருகப் பெருமானிடம் மிக்க பக்தி கொண்டு அக்கோயிலுக்கு ஒரு சிற்றூர் வாங்கிக் கொடுக்க எண்ணினார். எனவே, பர்மா சென்று நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடம் பொருள் உதவி வேண்டினார்.

நூல்: கம்பர் சந்நிதிமுறை, திருக்கச்சி யேகாம்பர திரிபந்தாதி கச்சிக் கம்பர் வெண்பா, கம்பைச் சந்நிதிமுறை.

இவர் பர்மா சென்றிருந்தபொழுது அந்நாட்டு மக்கள் வேண்டிக் கொண்டதற்கேற்ப இவர் பாடிய கம்பை பிள்ளைத் தமிழ், கம்பை யலங்காரம் முதலியன அடங்கியதே கம்பர் சந்நிதி முறை என்ற நூலாகும்.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர், காமாட்சியம்மன், முருகப் பெருமான், திருவண்ணாமலை அருணாசலலேசுரர் ஆகியோர் மீதும் பல பாடல்கள் பாடியுள்ளார்.

**சோணாச்சலம்பிள்ளை கா.** (19-நூ)

ஊர்: திருநெல்வேலி.

தந்தை: காந்திமதிநர்தபிள்ளை.

நூல்: தனிப்பாடல்கள்.

இப்பாடல்கள் இராமநாதபுரம் பொன்னுசாமித் தேவர்க்குச் சேதுபுராணம், திருக்கோவையார் உரை, தனிப் பாடற்றிரட்டு முதலிய நூல்களை அனுப்பிவைக்கும் படி கேட்டு எழுதிய செய்யுட்களாகும்.

**சோணாச்சலத் தேவர்** (     )

இவர் திருப்போரூர் சந்நிதிமுறை என்ற நூலினை இயற்றிய சிதம்பர சாமிகளிடம் அருளுரை பெற்றவர்.

நூல்: "எடுத்த சனனங்கடொறுமீன்றெடுத்த தாய்மார்" என்று தொடங்கும் வெண்பா.

இவ் வெண்பாவில் தம்மைப் பிறவிப் பிணியில் இருந்து விடுவிக்கும்படி தம்முடைய குருவாகிய சிதம்பர சாமிகளைக் கேட்டுக் கொள்கிறார்.

**சோணுச்சல முதலியார் ( )**

வே. பெ: சோணுசலபாரதி.

ஊர்; திருவண்ணுமலை.

நூல்: உண்ணுமலையம்மை பிள்ளைத் தமிழ், திருவண்ணுமலைக் கார்த்திகைத் தீபவெண்பா, சோணுசல வெண்பா, சோணுசல பதிகம், திருவண்ணுமலைக் கலிவெண்பா.

**சோணுட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியா (சங்க காலம்)**

ஊர்: சோழநாட்டில் உள்ள முகையலூர்.

முகையலூர் என்பது இடைக்காலத்தே மொகலார் என வழங்குகின்றது. தும்பியின் சிறிய வடிவத்தையும் கரிய நிறத்தினையும் சிறப்பித்துக் பாடிச் சிறுகருந்தும்பியார் எனப் பெயர் பெற்றார். இவர் பெயர் சோணுடு என்ற அடை மொழியின்றியும் முகையலூர்ச் சிறு கருந்தும்பியார் எனவும் வழங்கப்படுகின்றது.

நூல்: புறம் 181, 265.

**சோதிட சாத்திரியார் (19-நூ)**

ஊர்: வீராப்புலி சமுத்திரம்.

நூல்; செய்யப்ப முதலியார், த. இயற்றிய மும்மணிமாலை யென்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோதிப் பிரகாசர் ( )**

இவர் தத்துவராயரின் மாணவர்.

நூல்: அஞ்ஞவதைப் பரணி, மோகவதைப்பரணி, சசிவண்ண போதம்.

இந் நூல்களைத் தத்துவராயரே பாடினர் என்று தான் கருதப் படுகிறது.

**சோமசுந்தர அடியவர் ( )**

இவர் காமகோடிபீடம் சங்கராச்சாரியாரிடத்தில் பக்தி பூண்டவர்.

நூல்: அச்சுதானந்த சுவாமிகள் வரலாறு (1868). இந்நூல் தியானுநுபூதி என்னும் நூலுடன் சேர்த்து அச்சிடப் பெற்றது.

**சோமசுந்தர உபாத்தியாயர் (19-நூ)**

தந்தை: நல்லதம்பி உபாத்தியாயர்.

நூல்: மதுரை வீராச்சாமி பதிகம், இசைப்பாடல்கள்.

**சோமசுந்தர உபாத்தியாயர், கு. ( )**

நூல்: திரிசிரபுரம் இராமசாமிப்பிள்ளை கா. இயற்றிய சோதிட சிகாமணி யென்னும் நூலைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோமசுந்தர உபாத்தியாயர் செ. (19-நூ)**

ஊர்; சென்னை.

தந்தை: நல்லதம்பி உபாத்தியாயர் செ.

நூல்: மதுரை வீராச்சாமி பதிகம், இசைப்பாடல்கள்.

**சோமசுந்தர ஐயர் சு. (20-நூ)**

ஊர்: நெப்புக் கோயில்

இவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையின் மாணவர்.

நூல்: அப்பாவையர் இயற்றிய திருவதிகைப் புராணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோமசுந்தரக் கவிராயர் (18-நூ)**

வே. பெ: சோமசுந்தரம்பிள்ளை, சோமசுந்தரக்குரு.

ஊர்: இராமநாதபுரம்.

தந்தை: நெல்லையப்பர்.

இவர் சிவஞான முனிவரிடம் கல்வி கற்றார். அட்டாவதானம் சரவணப் பெருமாள் கவிராயரின் ஆசிரியர்.

நூல்: திருக்கழுக்குன்றக்கோவை.

**சோமசுந்தர சாமிகள் சு. ( )**

நூல்: சுப்பிரமணியக் கவிராய மூர்த்திகள் இயற்றிய திருக்கடவூர் உலா என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோமசுந்தரஞ் செட்டியார் ( )**

நூல்: *சிவநாமாத்துவித கீர்த்தனை* (1886)

*சிவநாமாத்துவிதக் கீர்த்தனை* 101ம் *அத்வைதக் கீர்த்தனை* 37ம் ஆக 138 *கீர்த்தனைகள்* அடங்கியுள்ளன.

**சோமசுந்தரஞ் செட்டியார் அ (19-நூ)**

பிறப்பு: 1883.

நூல்: சுந்தரர் தேவாரம் குறிப்புரை.

## சோமசுந்தரஞ் செட்டியார் ச. (19-நூ)

ஊர்: புதுச்சேரி.

தந்தை: சபாபதிச் செட்டியார்.

இவர் திருவாரூர் தெட்சண மூர்த்தி சாமிகள் மடத்தில் இருந்த அருணாசல சாமிகளிடம் தமிழ் நூல்களையும் சமய நூல்களைரிம் கற்றார்.

நூல்; சிவநாமாத்துவிதக் கீர்த்தனை.

இந்நூல் இசை நூல். 38 இசைப்பாடல்களையும் வேறு பல விருத்தப் பாக்களையும் கொண்டது. இப்பாடல்களுக்கு இவரோடு உடன்பிறந்த சொக்கலிங்கஞ் செட்டியார் என்பவர் இராகங்களையும், தியாகையர் தாளங்களையும் அமைத்தனர்.

## சோமசுந்தரஞ் செட்டியார் சி. (19-நூ)

நூல்: வள்ளிநாயகம்பிள்ளை இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சோமசுந்தரஞ் செட்டியார் வி. (20-நூ)

ஊர்: திருப்பாதிரிப்புலியூர்.

இவர் திருக்கோவிலூர் ஆதீனம் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகளிடம் பாடம் கேட்டவர். புகையிலை வாணிபத்தினை மேற்கொண்டிருந்தார்.

நூல்: புதுச்சேரிப் பெரிய சாமிப் புலவர் இயற்றிய கலம்பகத்துக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சோமசுந்தர தேசிகர் (20-நூ)

ஊர்: வைத்தீசுவரனகோயில்.

நூல்: தியாகராச தேசிகர் க. இயற்றிய பெற்ருன் சாம்பான் சரித்திரக் கீர்த்தனை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சோமசுந்தர தேசிகர் கு (2( -நா)

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம்.

தந்தை: குருசாமி தேசிகர். தாய்: செல்லத்தம்மாள்.

இவர் இலக்கண விளக்க ஆசிரியர் திருவாரூர் வைத்திய நாத நாவலர் மரபில் வந்தவர்.

பி. ஓ. எல். பட்டம் பெற்ற இவர் வடமொழியும் கற்றவர்; முசிறியிலும் திருவையாற்றிலும் தமிழாசிரியராகப் பணி புரிந்தவர்; சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதிக் குழுப்புலவர்களுள் ஒருவராக விளங்கியவர்; கல்வெட்டு ஆராய்ச்சி மாணவருமாவார்.

நூல்: 'தமிழ்ப் புலவர் வரலாறு', 'கமலைஞானப் பிரகாசர்' நரவாகனதத்த சரிதம்', பெரிபுளுஸ். தமிழைக் குறித்த பழைய குறிப்புக்கள், அவிபாகம் (தமிழாக்கம்), பிரபுலிங்கலீலை (குறிப்புரை).

பதிப்பித்த நூல்கள்: சோழமண்டல சதகம், தசகாரியம் குறுந்தொகைமூலம், திருவாரூர்ப்பள்ளு, சோடச கலாபிரசாத யோகம், இலக்கண விளக்கம் பொருளதிகாரம், பஞ்சாக்கர மாலை, அன்பர் போற்றிக் கலிவெண்பா.

## சோமசுந்தர தேசிகர் ச. ( )

நூல்: திருவாரூர் தியாகராச சுவாமி இருபா இருபஃது (1882), தியாகராச சுவாமி பதிகம்.

திருவாரூர் தியாகராச சுவாமி இருபா இருபஃது என்னும் நூல் 20 செய்யுட்களைக் கொண்டது; வெண்பா, ஆசிரியப்பா ஆகிய பாக்கள் மாறி மாறி வரச் செய்யப்பட்டது.

## சோமசுந்தர தேசிகர் ப. (19-நூ)

தந்தை: பழநியப்ப தேசிகர்.

இவர் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் வழிமுறையினர்.

நூல்: சிவாலயமான்மியக்கோவை. இந்நூல் தேவாரம் பெற்றுள்ள திருப்பதிகள் ஒவ்வொன்றிலும் எழுந்தருளியுள்ள சாமியின் பெயர், அம்பாளின் பெயர், வேண்டுகோள் ஆகியவைகளை அமைத்துப் பதிக்கு ஒரு பாடலாக 274 பாடல்களில் அமையப் பெற்றது.

## சோமசுந்தர நாயகர் (19-நூ)

வே. பே: அரங்கசாமி.

ஊர்: சென்னை சூளை.

வாழ்ந்த காலம்: 6—8—1846——22—2—1901.

இவர் வைணவக் குடும்பத்திற் பிறந்தார். இவருடைய உறவினர் ஏகாம்பர சிவயோகி என்பவரால் வளர்க்கப் பெற்றுச் சைவரானார். தமிழ், தெலுங்கு, வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பயிற்சியுடையவர்; சைவ சித்தாந்தப் பயிற்சி மிக்கவர்; சிறந்த சொற்பொழிவாளராகவும் நூலாசிரியராகவும் விளங்கினார். சேதுபதி அரசர் இவருக்கு வைதீக சைவசித்தாந்த சண்டமாருதம் என்ற பட்டத்தை வழங்கினார். திருவாவடுதுறை ஆதீனத்தலைவர் 'பரசமய கோளரி' எனப்பட்டம் வழங்கிச் சிறப்பித்தார்.

சைவ சித்தாந்தக் கருத்துக்களை முதன்முதலில் தமிழில் உரை நடையாக எழுதி வெளியிட்டவர் இவரே யாவர். தம்மையடுத்துப் பாடம் கேட்க விரும்பிய மாணவர்கள் சிலருக்கு இவர் தமிழ் நூல்களைக் கற்பித்தார். இவ்வாறு கற்றவர்களுள் மறைமலையடிகள் குறிப்பிடத்தக்கவர்.

நூல்: அர்ச்சாதீபம், ஆதிசைலப்பிரயாவம், ஆபாச ஞான நிரோதம், இராமதத்துவ தீபிகையின் ஆபாச விளக்கம்,

இராமாநுசமத சபேடிகை, உத்தம வாத தூல வாதூலம், கங்காதரணபிரக்யரம், கீதார்த்த தீபிகம் பாச நிரசனம், குதர்க்க வாத விபஞ்சினி, கூரேச விஜயபங்கம், சமரச ஞானதீபம், சன்மார்க்க போதவெண்பா, சித்தாந்த சேகரம், சித்தாந்த ரத்நாகரம், பூஷணம் சித்தாந்த ஞானபோதம், சிவகிரி பதிற்றுப்பத்தந்தாதி, சிவதத்துவ சிந்தாமணி. சிவநாமாவளி, சிவாதிக்யரத்நாவளி, சைவசூளாமணி, ஞானசதுஷ்டய தர்ப்பணம், ஞானசம்பந்தர், பரத்வ நிருபணம், ஞானபேதத்துணிவு, ஞானபேதத் தெளிவு, ஞானபேத விளக்கம், ஞானபேத விளக்க நியாயாரதரட்சமாணி, பாரத தத்துவப் பிரகாசிகை, பாரதாத்பரிய சங்கிரகம், வேத சிவாகமப் பிரமாணியம், பிரற்மதத்துவ நிருபணம, பிரமாநுபூதி, மூர்க்க வாதவிரஞ்சினி.

**சோமசுந்தரப் புலவர்** (20-நூ)

ஊர்: சோழநாட்டில் திருமலைராயன் பட்டினம்.

இவர் நாகபட்டினம், தரங்கம்பாடி ஆகிய ஊர்களில் பள்ளியாசிரியராக இருந்தவர்.

நூல்: பல நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோமசுந்தர பாரதியார் ச.** (20-நூ)

வே. பெ; சத்தியாநந்த சோமசுந்தரம்.

ஊர்: எட்டயபுரம்.

தந்தை: எட்டப்ப பிள்ளையென்னும் சுப்பிரமணிய நாயகர்; தாய் மூத்தம்மாள்.

எட்டயபுரம் சிற்றரசர் முத்துச்சாமி எட்டப்பரின் வளர்ப்புப் பெண் இவர்தம் தாயார். ஆதலால் இளமையில் அரண்மனை யில் வளர்ந்தார். தாயாரின் மறைவுக்குப் பின் அரண்மனையை விட்டு வெளியேறினர்.

இளமையில் எட்டயபுரத்தில் தெய்வசிகாமணி ஐயங்கார் நடத்திய திண்ணைப் பள்ளியில் பயின்று பின்னர் திருநெல்

வேலியில் இடைநிலைவகுப்பு வரை கற்றுத் தேர்ந்து, சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் பி. ஏ. வகுப்பை முடித்துப் பட்டம் பெற்றார். சட்டப்படிப்புப் படிப்பதற்கு முன் சிறிது காலம் சென்னை அரசினர் வருவாய்த்துறையில் எழுத்தாக அலுவல் பார்த்தார். சட்டம் பயின்று பட்டம் பெற்றபின் 1905 முதல் 1920 வரை தூத்துக்குடியில் வழக்கறிஞராகப் பணியாற்றினார். பின்னர் மதுரைக்குத் தொழில் காரணமாக வந்து குடியேறினார். அப்போது விடுதலை இயக்கம் தீவிரமாக இருந்தது. அஹிம்சையில பற்றுடைய காந்தியடிகளோடு பலவாறு தொடர்பு கொண்டார். அவரைப் பலமுறை சந்தித்துத் தென்னாட்டிற்கு வருகைபுரிந்த போதெல்லாம் கலந்து உறவாடினார்.

திருநெல்வேலியில் யாழ்ப்பாணத்துப் புலவர் பெருமக்களோடு நடந்த தமிழ்க்கூட்டம் ஒன்றில் வெண்பாப் போட்டி நடைபெற்றது. அப்போட்டியில் தகுதியுடையவராக அறிவிக்கப் பெற்ற இருவரில் ஒருவர் சுப்பிரமணிய பாரதியார் மற்றொருவர் இவர். அந்த அவையில்தான் இவருக்குப் பாரதியார் என்ற சிறப்புப் பட்டம் வழங்கப்பட்டது. சுப்பிரமணிய பாரதியாரும் இவரும் ஒருவரையொருவர் விரும்பி உறவு கொண்டனர். அக்காலத்திலேயே சுப்பிரமணிய பாரதியாரின் கவிதைத் திறம் பற்றி ஆங்கிலத்தில் நீண்டதொரு கட்டுரை எழுதிப் பாராட்டிப் பெருமைப்படுத்தினார்.

1937ஆம் ஆண்டில் காங்கிரஸ் சட்டசபையில் புகுந்து அரசாளும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட போது, தன் நண்பரான இராசகோபாலாச்சாரியாரைத் தமிழ் நாட்டில் இந்தியைத் திணிக்கப் பார்க்கிறார் என்று குற்றம் சாட்டி இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் தீவிரமாகக் கலந்து கொண்டு எதிர்த்தார்.

வழக்கறிஞராகத் தொழில் செய்த காலத்தே தமிழை முதற் பாடமாகவும், மலையாளத்தைத் துணைப்பாடமாகவும கொண்டு எம். ஏ. பட்டம் பெற்றார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராக இருக்குமாறு இவர் அழைக்கப்பட்டார். 5 ஆண்டு

காலம் தமிழ்த்துறைத்தலைவராகப் பணியாற்றி இவர் ஓய்வு பெற்றார். 1955இல் இப்பல்கலைக் கழகத்தின் வெள்ளி விழா நடைபெற்றபோது இவர் தம் தமிழ்ப் பணியைச் சிறப்பிக்கும் வகையில் டாக்டர் பட்டம் கொடுத்துப் பாராட்டினர். தமிழ் நாட்டின் புலவர் குழுவுக்குத் தலைவராகப் பொறுப்பேற்றுச் சிலகாலம் தொண்டு செய்தார். 1957இல் தமிழ் எழுத்தாளர் சங்கம் கேடயம் கொடுத்துச் சிறப்பித்தது. இவர்தம் 80ஆம் நிறைவு விழாவை மதுரைத் தமிழ்ச் சங்கம் கொண்டாடியது

நூல்: தசரதன் குறையும் கைகேயி நிறையும், சேரர்பேரூர், திருவள்ளுவர், மாரிவாயில், மங்கலக்குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி, தொல்காப்பியர் பொருட்படலம் அகத்திணையியல் உரை, புறத்திணையியல் உரை, மெய்ப்பாட்டியல் உரை.

மற்றும் தொல்காப்பியர் காலம் பற்றியும் ஆராய்ச்சித் தொடர்போடு அவ்வப்போது ஆங்கிலத்திலும் தமிழிலும் சில கட்டுரைகள் வெளியிட்டுள்ளார்.

## சோமசுந்தரம் பிள்ளை–1 ( )

இவர் சேதுபதியின் அமைச்சர்.

நூல்: திருப்போரூர்க்கோவை.

இந்நூல் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள திருப்போரூர் முருகப்பெருமான்மீது இயற்றப் பெற்றது; நூல் முற்றுப் பெற்றுள்ளது; ஆனால் அச்சிடப்பெறவில்லை.

## சோமசுந்தரம் பிள்ளை–2 (20-நூ)

ஊர்: குற்றாலம்.

நூல்: தியாகராச தேசிகர் க. என்பவர் இயற்றிய பெற்றான் சாம்பான் சரித்திரக் கீர்த்தனை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## சோமசுந்தரம் பிள்ளை–3 (19-நூ)

ஊர்: திருவாவடுதுறை.

இவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் பாடம் கேட்டவர்.

நூல்: யாகமாலிகை.

இது ஞானசித்த சாமிகள் நடத்திய ஸ்ரீபுவனாம்பிகை யாகத்தினைப் பற்றிக் கூறுவது.

**சோமசுந்தரம் பிள்ளை-4** (19-நூ)

ஊர்: புதுச்சேரி.

நூல்: கோவிந்தராஜ பாகவதர் ப. என்பவர் இயற்றிய பகவத்யான கீர்த்தனம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோமசுந்தரம் பிள்ளை-5.** (19-நூ)

ஊர்: வீராச்சிமங்கலம்.

நூல்: இளையான்கவிராயர் என்பவர் இயற்றிய அப்பரமேசர் தல புராணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோமசுந்தரம் பிள்ளை க.** (20-நூ)

ஊர்: இலங்கை மாணிப்பாயைச் சேர்ந்த நவாலியூர்.

தந்தை: கதிர்காமர்; தாய்: இலக்குமி அம்மையரர்.

பிறந்தநாள்: 26—5—1880.

இவர் இராமலிங்கப் புலவர் என்பவரிடம் தமிழும் ஆங்கிலமும் கற்றார். வடமொழியிலும் பயிற்சி உடையவர். 1927ஆம் ஆண்டில் புலவர் பட்டம் பெற்றார். சைவ சித்தாந்தம், மருத்துவம், காலக்கணிதம் ஆகியவற்றில் பயிற்சி மிக்கவர். வட்டுக்கோட்டை இந்துக் கல்லூரியில் 1898ஆம் ஆண்டு முதல் 1938ஆம் ஆண்டு வரை தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றி யுள்ளார். சைவக் கோயில்களில் உயிர்ப்பலியிடும் வழக்கத்தை

எதிர்த்து வெற்றி கண்டவர். பண்டித வகுப்பு, புலவர் வகுப்பு சித்தாந்தப் பண்டித வகுப்பு நடத்திப் பலருக்குத் தமிழ்க் கல்வி கற்பித்துள்ளார். சைவ சமயக் கருத்துக்களை நாடெங்கிலும் பரப்பியுள்ளார். தமிழைத் தூய்மை யாகவும் இலக்கண வரம்புடனும் எழுதும் மரபை வளர்த்து வந்துள்ளார். செய்யுள் இயற்றும் மரபைப் பரப்பிப் பல, நூறு கவிஞர்களை உருவாக்கியுள்ளார்.

நூல்: உயிரிளங்குமரன் நாடகம், சாவித்திரி கதை, சிறுவர் செந்தமிழ், நாமகள் புகழ்மாலை, கிளிக் கண்ணிகள், கந்தபுராண உண்மை நூற்பொருள், தந்தையார் பதிற்றுப்பத்து, கதிரைச் சிலேடைவெண்பா, கந்தவரைக் கடவை நான்மணிமாலை, கதிர்காம வேலவர் பதிகம், மூத்தபிள்ளையார் பிரபந்தத் திரட்டு, மருதடி விநாயகர் பாமாலை, சுகாதாரக் கும்மி, இலங்கை வளம், தாலவிலாசம், தனிப்பாடல்கள்-1000, மருதமஞ்ஞோட்டம், அட்டகிரிக் கலம்பகம்.

## சோமசுந்தரம் பிள்ளை சு (20-நூ)

ஊர்: திரிசிரபுரம், வரகநேரி.

தந்தை: குழந்தைவேற்பிள்ளை.

இவர் தம் தந்தையாரிடம் தமிழ் நூல்களைக் கற்றார்,

நூல்: ஆசாரவிளக்கம்

இந்நூல் அகவற்பாவால் அமைந்தது. மக்கட்குரிய பல ஒழுகலாறுகள் இந்நூலிற் கூறப்பட்டுள்ளன.

## சோமசுந்தரம் பிள்ளை ப. மு. (20-நூ)

ஊர்: பெங்களூர்

நூல்: தம்பியப்ப செட்டியார், நா. என்பவர் இயற்றிய 'திருவிடைக்கழி முருகக் கடவுள் அந்தாதி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோமசுந்தரம் பிள்ளை ம. நா. (20-நூ)**

ஊர்: தஞ்சாவூர் மாவட்டம் மன்னார்குடி.

தந்தை: நாராயணசாமிப் பிள்ளை.

வாழ்ந்தகாலம்: 1869-1939.

இவரது தந்தையார் அந்நாளில் மன்னார்குடியில் இருந்த கிறித்தவக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தார். இவர் தம் தந்தையாரிடமே கல்வி கற்கத் தொடங்கினர், தமது பதினாருவது வயதில் சென்னைப் பல்கலைக் கழக மெட்ரிக் தேர்வில் வெற்றி பெற்றார். சங்க நூல் பயிற்சியிலும் சிறந்தவர். எட்டுத்தொகை நூல்கள் வெளிவருவதற்கு முன்பே இவர் அத்தொகை நூல்களில் பலவற்றைத் தம்கையால் எழுதிப் படித்துணர்ந்தார். பன்னிரு திருமுறைகளையும் நன்கு பயின்றவர். புராண இலக்கியங்களையும் நன்கு கற்றுத் தேறியவர். புராணச் சொற்பொழிவாளராகவும் திகழ்ந்தார். இளைஞர்களைக் கூட்டித் திருமுறைகளைப் பாடுவதைத் தமது பொழுது போக்காகக் கொண்டிருந்தார். நாகப்பட்டினம் வீரப்ப செட்டியார் என்பவரிடம் சைவசித்தாந்த நூல்களைக் கற்றுத் தெளிந்தார். தமிழ் இலக்கணத்தோடு ஆங்கில வட மொழி இலக்கணங்களிலும் வல்லவராக விளங்கினார்

இவர் மன்னார்குடிக் கிறித்தவக் கல்லூரியில் தம் தந்தையாரைத் தொடர்ந்து தமிழாசிரியராகப் பணியாற்றினார். கல்லூரியை மூட வேண்டிய நிலை ஏற்பட்டதால் இவர் அவ் வேலையைத் தொடர்ந்து செய்ய இயலவில்லை. பின்னர் ஊர் காவல் துறையில் துணைக் கண்காணியாக அலுவல் புரிந்தார். இவ்வேலையில் இவர் 36 ஆண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றார். ஓய்வு பெற்ற பிறகும் நூலாராய்ச்சி செய்தல், தமிழ் கற்பித்தல் போன்ற பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்.

இவருடைய இலக்கணப் புலமை, பவானந்தம் பிள்ளை, நமச்சிவாய முதலியார் ஆகியோர் தமிழ் நூல்களைப் பதிப்பித்த போது பயன்பட்டது. உ. வே. சாமிநாதையர், ந. மு. வேங்கடசாமி நாட்டார், மா. வே. மாணிக்கநாயகர் போன்ற

அறிஞர் பெருமக்கள் இவருடைய இலக்கணப் புலமையைப் பாராட்டியுள்ளனர்.

தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் புலவர் ஒருவர் எழுதிய ஆராய்ச்சிக் குறிப்புகளில் தவறுகள் பலவற்றைக் கண்டு 'தமிழ்ப்பொழில்' என்ற இதழில் அதற்கு மறுப்புரை எழுதி வந்துள்ளார். இதன் பெருமையை உணர்ந்த சாமிநாதையர் தொல்காப்பிய உரையினை இவர் எழுத விரும்பினர். அரசியல் அலுவலில் ஈடுபட்டிருந்த இவரால் ஐயரவர்களின் வேண்டுகோளை நிறைவேற்ற இயலவில்லை.

**சோமசுந்தரம் பிள்ளை வு. சா. (20-நூ)**

ஊர்: தஞ்சாவூர்.

நூல்: அருணசிந்தாமணி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோமசுந்தர முதலியார்-1 (19-நூ)**

ஊர்: திரிசிரபுரம்.

நூல்: நாகமுத்துப்புலவர் இயற்றிய தாயுமானவர் பதிற்றுப் பத்தந்தாதி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்,

**சோமசுந்தர முதலியார்-2 (19-நூ)**

ஊர்: புதுச்சேரி.

நூல்: பரதத்துவ சுதாநிதி.

வீராசாமி நாயகர் என்பவர் தெலுங்குமொழியில் இயற்றியதைத் தமிழாக்கம் செய்துள்ளார், விருத்தங்களும் கீர்த்தனங்களும் அடங்கிய செய்யுள் நூல்.

**சோமசுந்தர முதலியார் சி. ( )**

நூல்: சடாரண்ய தோத்திரப் பாமாலை (1881).

சடாரண்யம் என்பது ஆர்க்காட்டைக் குறிப்பது; 44 செய்யுட்களைக்கொண்டது; இப்பதியில் உரையும் விசுவநாதர் பேரில் சில பதிகங்களும், விநாயகர், சுப்பிரமணியர் ஆகியோரைக் குறித்த பஞ்சரத்தினங்களும், நடராசர், தட்சண மூர்த்தி முதலியோரைக் குறித்த தோத்திரங்களும் உள்ளன.

**சோமதேவ சர்மா வெ.** (19-நூ)

**சி. பெ:** ஸாஹித்ய வாங்முக பூஷணம், புராண ஸாகரம், கீதாவாசஸ்பதி.

**ஊர்:** தென்னாற்காடு மாவட்டம் வெங்கந்தூர்.

**தந்தை:** கணபதி சாத்திரி.

குருகுல முறையில் வேதம், சாத்திரம், வடமொழி, தமிழ் மொழிகளைக் கற்றவர்; புராணக் கருத்துக்களைச் சொற் பொழிவுகள் வழி எடுத்துரைப்பவர்; சென்னை முத்தியால் பேட்டை உயர்நிலைப் பள்ளியில் 30 ஆண்டுகள் வடமொழி ஆசிரியராகப் பணியாற்றியவர்; பதினெண் புராணங் குறித்து ஆராய்ச்சி செய்துள்ளார். வைதிக தர்ம வர்த்தினி என்ற திங்கள் இதழின் ஆசிரியராக இருந்துள்ளார்.

**நூல்:** பதினெண் புராணச் சுருக்கம், தேவிபாகவதம், (தமிழ்) சந்த்யாவந்தனம்,

துல, கல்கி, விநாயக புராணங்கள் ஆகிய துணைப் புராணங்களையும் தமிழில் வெளியிட்டுள்ளார்.

**சோமநாத பாரதி** (        )

**வே. பெ:** சிவதாசர்.

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் இராமேச நல்லூர் என்னும் அறுகண் கூவிளம்.

**தந்தை:** இராமலிங்க பாகவதர்.

**நூல்:** தேவி மான்மியம்.

இந்நூல் இசைப்பாடல்களும் விருத்தப்பாடல்களும் அமையப் பெற்றது; புதுபிக்கப் பெற்ற நூல்களில் எழுத்துப் பிழைகளும் சொற்பிழைகளும் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**சோமயாசி (20-நூ)**

ஊர்: தில்லையம்பூர்.

நூல்: இராமாநந்த சாமிகள்-நிச்சல என்பவர் இயற்றிய நூல்களுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியவர்.

**சோமலிங்கையர் (19-நூ)**

ஊர்: சங்கீதமங்கலம்

நூல்: வீரட்டேசுரர் பாமாலை நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோமாஸ்கந்த பண்டிதர் (20-நூ)**

ஊர்: யாழ்ப்பாணத்தில் தாவடி.

பொன்னம்பலம்பிள்ளையிடம் கல்வி கற்றவர்.

நூல்: மகாவித்துவான் கணேசையர் இயற்றிய இரகு வமிச உரைக்கு வழங்கிய சிறப்புக்கவி.

**சோமாஸ்கந்த பட்டாரகர், மா (19-நூ)**

ஊர்: திருமறைக்காடு.

தந்தை: மாணிக்கதேசிகர்.

நூல்: இருபா இருபஃது.

அகத்தியன் பள்ளியில் எழுந்தருளிய வரதவிநாயகர் மீது பாடியது.

**சோலைமலை ஐயங்கார் (20-நூ)**

ஊர்: ஆழ்மாநகர்

நூல்: செண்பகக் குமாரு பிள்ளை மா. அ. என்பவர் இயற்றிய சற்குருநாத சரித்திரம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம.

**சோலைமலைப் பிள்ளை ( )**

நூல்: திரிசிரபுரம் இராமசாமிப்பிள்ளை கா. என்பவர் இயற்றிய சோதிடசிகாமணி என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**சோலைமுத்துப் பிள்ளை, சிவ. (20-நூ)**

ஊர்: கருந்திட்டைக் குடி என்னும் கரந்தை.

தந்தை: சிவராமப்பிள்ளை.

நூல்: திருவையாற்றுப் புராணம்-உரைநடை.

**சோலைய அடிகள் ( )**

ஊர்: திருநெல்வேலி மாவட்டத்தில் பொதியமலைக்கு அண்மையில் உள்ள சிற்றூர்.

திருநெல்வேலியில் ஆட்சி நடத்திய வடமலையப்பு பிள்ளையன் காலத்தவர்; ஆசிரியராகப் பணியாற்றிய இவர் இளமையிலேயே துறவு பூண்டவர்; பல அற்புதச் செயல்களை நிகழ்த்தியவர். என்பது இவருடைய வரலாற்றால் தெரிகிறது.

நூல்: சச்சிதானந்த மாலை.

**சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் (சங்க காலம்)**

இ. பெ. கிள்ளி.

வளவன் என்பது சோழர்குடிக்குரிய சிறப்புப் பெயராகும். இவனை ஆலத்தூர் கிழார் ஐயூர் முடவனார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார், ஆடுதுறை மாசாத்தனார், ஆவூர் மூலங் கிழார் இடைக் காடனார், கோவூர்க்கிழார், நல்லிறையனார், மாறோக்கத்து நப்பசலையார், வெள்ளைக்குடி நாகனார் ஆகிய பத்துப் பேர் புகழ்ந்து பாடியுள்ளனர். இவனுடைய நாட்டுவளம் பகைவர் அஞ்சும் பேராண்மை, மாரியனைய கைவண்மை, செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடைமை ஆகியவற்றைச் சிறப்பித்து இப்புலவர்கள் பாடியுள்ளனர். இவன் தனது நண்பனான சிறுகுடி கிழான் பண்ணன் என்பவனுடைய கொடையைப் பாராட்டி 'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய' என வாழ்த்திப் பாடியதினால் இவனுடைய புலமையும் நட்புரிமையும் விளங்கும். இவன் ஊரொடு தொடர்ந்த பெயர் கொண்ட புலவர் வரிசையில் சேர்க்கப்பட்டவன். இவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு சோழநாட்டை யாண்டவன்; குளமுற்றம் என்ற இடத்தில் இறந்ததனால் இப்பெயர் பெற்றவன். அதியமானைக் காப்பாற்றச் சென்ற தனது படை தோல்வி அடைந்தமையால் மலையமானின் மக்களைக் கொன்று பழிவாங்க நினைத்தான். ஆனால் புலவர் கோவூர்க்கிழார் அவனை இடித்துக் கூறி அப்பழிச் செயலைச் செய்யாதவாறு தடுத்தார்.

நூல்; புறம். 173.

## சோழன் நல்லுருத்திரன் (சங்க காலம்)

இ. பெ: உருத்திரன்.

வே. பெ: நல்லுருத்திரன்.

அந்துவன் என்னும் பெயர் நல் என்னும் அடைமொழி சேர்க்கப்பட்டு நல்லந்துவன் என்று வந்தாற்போல உருத்திரன் என்னும் பெயரும் நல் என்னும் அடைமொழி சேர்க்கப்பட்டு

நல்லுருத்திரன் எனப் பெயர் பெற்றுள்ளான். இவன் தெய்வத்தாற் பெயர் பெற்ற புலவர் வரிசையைச் சேர்ந்தவன். முல்லைக்கலி பாடிய நல்லுருத்திரனும் இவனும் ஒருவனே என்பது நச்சினார்க்கினியர் கருத்து. ஆனால் முல்லைக்கலியில் சோழன் என்ற பெயர் காணப்படவில்லை. நல்லுருத்திரனார் என்றே உள்ளது.

நூல்; புறம் 190.

இப்பாடலில் முயற்சி இல்லாதவரை இகழ்ந்தும், முயற்சியுடையோரைப் புகழ்ந்தும் இவன் பாடியுள்ளான்.

## சோழன் நலங்கிள்ளி (சங்க காலம்)

வே. பெ. தேர்வண்கிள்ளி, சேட் சென்னி, புட்பகை.

இவன் ஆலத்தூர்கிழார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், கோவூர்கிழார் என்பவர்களால் பாடப்பெற்றவன். பாண்டிய நாட்டில் இருந்த ஏழு அரண்களை அழித்துக் கைக்கொண்டவன். தன் தாயத்தாருடன் பகைத்து ஆவூரையும் உறையூரையும் முற்றுகையிட்டான். நெடுங்கிள்ளிக்குப் பகைவனாக இருந்தவன். போரிலேயே நாட்டமுடையவனாக இருந்த இவன் உறையூர் முதுகண்ணன் சாத்தனாரின் அறவுரையால அறம் செய்தலை மேற்கொண்டான்.

நூல்: புறம் 73, 75,

## சௌந்தரராச உடையார் (19-நூ)

நூல்: துரோபதையம்மை சந்நிதி முறை விளக்கம் (1883).

துரோபதையம்மன் திருமந்திரம், தியானச்லோகம் முதலிய சிறு சிறு நூல்களின் தொகுதி இந்நூல்.

**சௌந்தரராச உடையார் வே.** (19-நூ)

*ஊர்:* சோழநாட்டில் சண்பகக் கொல்லே.

*தந்தை:* வேங்கடாசல உடையார்.

**நூல்;** தெய்வீக புராணமென்னும் திருக்கோவிலூர்ப் புராணம்.

இந்நூலினை விரித்துப்பாடி அச்சிட்டு வெளியிட்டவர்.

**சௌந்தரராச ஐயங்கார் வீ** (19-நூ)

**நூல்:** தமிழ் இலக்கணம், (1896), பாலபோத இலக்கணம் (1898). தமிழ் இலக்கணம், நன்னூல் முறையில் இயற்றப் பெற்றது.

பாலபோத இலக்கணம்-தொடக்கப்பள்ளிகளுக்கு ஏற்ற தமிழ் இலக்கண நூல்.

**சௌந்தர நாயகம் பிள்ளை** ( )

ஊர்: யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த வட்டுக்கோட்டை.

*தந்தை:* பழைய வட்டுக்கோட்டை சாத்திர சாலையில் ஆசிரியராக இருந்த கபிரியேல் திசரா.

தாய்: ஒந்தாச்சியார்.

இவர் சென்னையில் பி. ஏ., பி. எல். பட்டம் பெற்றவர்; அங்கு நியாயதுரந்தரராகப் பணியாற்றியவர்; ஆங்கில இதழ் ஒன்றின் ஆசிரியராகவும் பணியாற்றியவர்.

**நூல்:** நன்னூற் சுருக்கம், தெலுங்கு இலக்கணம், மெய்ஞ்ஞானக் கீர்த்தனை.

**சௌந்தர பாரதி (19-நூ)**

ஊர்: இராமநாதபுரம் மாவட்டம் சிவகங்கைப் பகுதி வேம்பத்தூர்.

தந்தை: சாமாவையர்; அந்தணர்.

திருவாவடுதுறை ஆதீனத்தில் கல்வி கற்றவர்.

நூல்: பதிக மஞ்சரி, நிரோட்டக யமகவந்தாதி, திருப்பரங்கிரிக் குமரன் தகாரவண்ணம்.

**சௌரிப் பெருமாள் தாசர் ( )**

நூல்: பார்த்தசாரதி மாலை (1907).

